

டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம் : ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

''எல்லைக் கமிஷனின் முயற்சியால் பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் இடையே உருவாகக்கூடிய எல்லைகளால் உடனடியாகப் பயனடையக் கூடியவர்களின் நோக்கில் அவை பெரிதும் வரவேற்கக் கூடியவையாக இருந்தாலும் இந்தியாவின் கண்ணோட்டத்தில் அவை மிகவும் திருப்திகரமற்றவையாக இருப்பதால் அபாயம் உள்ளது.

எனது அச்சங்கள் உண்மையாகும் பட்சத்தில், கமிஷன் வகுத்துத்தரும் எல்லை இயற்கையான ஒன்றாக இல்லையெனில் அதனைப் பராமரிப்பதற்கு இந்திய அரசாங்கத்திற்கு ஏற்படக் கூடிய செலவு மிக அதிகமாக இருக்கும்; இந்திய மக்களின் பாதுகாப்பையும் பந்தோபஸ்தையும் இது மிகுந்த அபாயத்திற்கு உள்ளாக்கும். எனவே காலம் கடப்பதற்குள் பாதுகாப்பு இலாகா உண்மையைப் புரிந்து கொண்டு தனது கடமையைச் செய்ய வேண்டும்.

- டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்

This Volume XXXVI in Tamil forms English Edition Volume 17 Part II of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

# Dr. BABASAHEB AMBEDKAR SPEECHES AND WRITINGS



Year : August, 2005

Language : Tamil

Volume No. : 36

Price : Paperback - **Rs. 40/-**
Cloth bound - **Rs.** 135

Publishers : **Dr. AMBEDKAR FOUNDATION,**
Ministry of Social Justice and Empowerment,
Govt. of India,
15, Janpath, New Delhi - 110 001.

Distributors : **NEW CENTURY BOOK HOUSE (P) LTD.,**
41-B, SIDCO Industrial Estate,
Ambattur, Chennai - 600 098.

Printers : **PAVAI PRINTERS (P) LTD.,**
142, Jani Jan Khan Road,
Royapettah, Chennai - 600 014.
Ph: 28482441, 28482973.

This Volume XXXVI in Tamil forms English Edition Volume 17 Part II of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

*முதற் பதிப்பு : ஆகஸ்டு, 2005*
*பார்த்திப ஆண்டு, ஆடி-ஆவணி*



**விலை : ரூ. 40/-**

***நூலகப் பதிப்பு : ரூ. 100/-***

*வெளியீட்டாளர்:*
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

*விற்பனை நிலையம்:*
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை -98.

*அச்சிட்டோர்:*
**பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,**
142, ஜானி ஜான் கான் சாலை,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 28482441, 28482973

# ஆலோசனைக் குழு

**மாண்புமிகு திருமதி மீராகுமார்**
சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,
இந்திய அரசு

**திரு. எஸ்.கே. தாஸ்**
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி

***நிர்வாக ஆசிரியர் (தமிழ்):***
***ரா. ரங்கசாமி (மாஜினி)***
சென்னை, தமிழ்நாடு

ஆங்கில நூல் வெளியீடு:

*கல்வித்துறை,*
*மகாராஷ்டிர மாநில அரசு, **1992***

ஆங்கில நூல் தொகுப்பாளர்:

**திரு. வஸந்த் மூன்**
*மும்பை*

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்:

***திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)***

மொழிபெயர்ப்பாளர்கள்:

***திரு. வி. ராதாகிருஷ்ணன்***
***திரு. ஏ.எஸ். மணி***
***திரு. கே. நீலகண்டன்***
***திரு. வி. சண்முகசுந்தரம்***
***திரு. ஆர். பெரியசாமி***

ஒப்புநோக்கியோர்:

***திரு. வி. ராதாகிருஷ்ணன்***

பிழைதிருத்த உதவி:

***திரு. ஆர். பெரியசாமி***

## அணிந்துரை

டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கரின் பேச்சும் எழுத்தும் கொண்ட ஆங்கில நூலின் பதினேழாவது தொகுதியின் இரண்டாவது பாகத்தை தமிழில் 36-வது தொகுதியாக வெளியிடுவதில் மிகுந்த பெருமிதமும் மகிழ்ச்சியும் அடைகிறோம். சௌதார் குளம் சம்பந்தப்பட்ட கிளர்ச்சி, கலாராம் கோவில் பிரவேசசத்தியாக்கிரகம், லண்டனில் நடைபெற்ற வட்டமேசை மாநாட்டில் டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய பங்கு, புனா ஒப்பந்தம் சம்பந்தப்பட்ட ஆவணங்கள் முதலியவை இந்தத் தொகுதியில் இடம்பெற்றிருக்கின்றன.

பாலகங்காதர திலகர் தாழ்த்தப்பட்ட இனத்தவராகப் பிறந்திருந்தால் ''சுயராஜ்யம் எனது பிறப்புரிமை'' என்று கூறியிருக்க மாட்டார். அதற்குப் பதில் தீண்டாமையை ஒழிப்பதே தனது முழு முதல் கடமை என்று பிரகடனம் செய்திருப்பார். அதேபோல் லெனின் பாரதத் திருநாட்டில் பிறந்திருந்தால் தீண்டாமையை ஒழிப்பதற்கே அவர் முதலில் போராடியிருப்பார்; அதன் பின்னரே புரட்சி செய்யும் திட்டத்தை மேற்கொண்டிருப்பார். தீண்டாமையை ஒழிக்கும் இத்தகைய அரிய பணியை டாக்டர் அம்பேத்கர் தமது தலையாயக் கடமையாக ஏற்றுக் கொண்டது வரலாற்றுச் சிறப்புமிக்க ஒரு செய்தியாகும். இத்தகைய நேரிய, சீரிய இலட்சியத்தை எய்துவதற்கு ஒரு தனி அரசியல் கட்சி உருவாவது அவசர அவசியம் என்பதை டாக்டர் அம்பேத்கர் உணர்ந்தார். இதன் விளைவாகவே 1936 ஆகஸ்டு 15ஆம் தேதி சுதந்திரத் தொழிற் கட்சியை நிறுவினார். இக்கட்சி பற்றிய விவரங்களை இத்தொகுதியில் காணலாம். ''மனிதனை விட நாடு பெரியது'' என்பதை இந்திய மக்கள் உணர வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். சமூக ஒற்றுமை எய்தப்படவில்லை என்றால் ஜனநாயகம் ஆடிக்காற்றில் அடித்துச் செல்லப்படும் என்று அவர் எச்சரித்தார். தமிழ் வாசகர்கள் இத் தொகுதியை மிகவும் பயனுள்ள ஒன்றாக ஏற்றுப் பயனடைவர் என்று நம்புகிறோம்.

(ஒப்பம்) **திருமதி மீராகுமார்**
இந்திய அரசு சமூக நீதி மற்றும்
உரிமையளிப்புத்துறை அமைச்சர்.

புதுடில்லி

## பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் தமிழ் உட்பட ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சேர்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகிறது. இந்தப் பணி மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்பதாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் 36வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம். உயர்ந்ததொரு லட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களைத் தமிழ் உட்பட இந்திய மொழி களில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் நிர்வாக ஆசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என்று நம்புகின்றோம்.

**எஸ்.கே. தாஸ்**

புதுடில்லி.

**இயக்குநர்**

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

## தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர் உரை

டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கரின் பேச்சும் எழுத்தும் கொண்ட ஆங்கில தொகுதி 17 பாகம் II தமிழில் 36வது தொகுதி யாக வெளியிடப்படுகிறது. டாக்டர் அம்பேத்கருக்கும் மகாத்மா காந்திக்கும் இடையே ஏற்பட்ட சந்திப்பு பற்றிய பரபரப்பூட்டும் பல தகவல்களை இத்தொகுதிகளில் காண்கிறோம். லட்சோப லட்சக்கணக்கான தீண்டப்படாத மக்களை இந்தியாவின் அரசியல் வானுக்குக் கொண்டு வந்த மிகவும் சுவையான விவரங்களை உள்ளத்தைக் கொள்ளைக் கொள்ளும் வகையில் இத்தொகுதி எடுத்துரைக்கிறது. மேலும் இந்த அரிய சாதனையின் மூலம் அவர் இந்திய ஜனநாயகத்துக்கு எவ்வாறு அடித்தளமிட்டார் என்ற விவரத்தையும் இத்தொகுதி மிகவும் சுவைபட விவரிக்கிறது.

அவர் தலைமை தாங்கி நடத்திய கலாராம் கோயில் பிரவேச சத்தியாக்கிரகம் வரலாற்றில் ஒரு பொன்னேடு அத்தியாய மாகும். இதுபற்றிய விவரங்கள் உள்ளத்தைப் பிணைத்து ஈர்க்கும் வகையில் இத்தொகுதியில் தரப்பட்டுள்ளன. சாதி அமைப்பு முறை ஒரு பெரிய சாபக்கேடு என்பதை எவரும் ஏற்றுக் கொள்ளும் முறையில் தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்டி யுள்ளார். தீண்டப்படாத மக்களை ஓரணியில் ஒன்றுதிரட்ட அவர் மேற்கொண்ட அரும்பெரும் முயற்சிகளையும் இத்தொகுதி களில் காண்கிறோம். புத்த மதத்தின் அருமை பெருமையை அனைவரும் சிந்திக்கத் தூண்டும் வகையில் அவர் எடுத்துரைத் திருப்பதையும் பார்க்கிறோம். இந்தியாவில் புத்த மதத்தை நிலைநாட்ட நானும் என் மக்களும் சர்வ பரித்தியாகம் செய்வோம் என்று அகில உலகமும் செவிமெடுக்கும் வகையில் சூளுரைத் திருப்பதையும் இத்தொகுதியில் காண்கிறோம். சுருக்கமாகச் சொன்னால் ஆங்கிலத் தொகுதி 17ன் இரண்டாம் பாகம் பல அரிய கருத்துக்களைக் கொண்ட கருத்துக் களஞ்சியம் என்று கூறினால் அது மிகையல்ல. ஆகவே, இதுவரை வெளிவந்துள்ள தொகுதிகளுக்குப் பேராதரவு அளித்து வந்துள்ளதைப் போன்றே இந்தத் தொகுதியும் வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

**தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்**

# பொருளடக்கம்

# 1

# மதமும் புரோகிதரும் முறையான கட்டுப்பாட்டின்கீழ் கொண்டு வரப்பட வேண்டும்

*- டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், எம்.ஏ.,பி.எச்.டி.,டி.எஸ்சி., பார்-அட்-லா., எம்.எல்.சி.*

ஓர் அமைப்பைத் தோற்றுவிப்பதற்காக பம்பாயிலுள்ள சில பார்ஸிகள் ஓர் இயக்கத்தைத் தொடங்கியருப்பதாக, பெல்காமி லிருக்கும்போது நான் கேள்விப்பட்டேன். ஒரு சாதி என்ற வகையில் புரோகித முறையை ரத்து செய்வதே அதனுடைய பிரதான நோக்கமாக இருக்க வேண்டும். இந்தியாவின் கல்வியறிவு பெற்ற இளம் மக்களின் மிகப் பெரும்பான்மையோர் ஊக்கத்துடன் ஏற்றுக் கொள்வதற்கு அத்தகைய அமைப்பின் குறிக்கோள் அறிவிக்கப்பட வேண்டும். பார்ஸி பிரமுகர்களின் வழிமுறைகளைப்பற்றி விவா திப்பது அவசியமென்று நான் கருதவில்லை. ஆனால் இந்து புரோகித வர்க்கங்கள் எவ்வகையிலும் சராசரி பார்ஸி புரோகிதர்களுக்கு அறநெறி ரீதியிலோ, கல்வி ரீதியிலோ அல்லது வேறு வகையிலோ மேலானவர்களல்ல என்பதை என் பார்ஸி நண்பர்களுக்கு உறுதி கூற விரும்புகிறேன்.

## சக்கரத்தில் ஒரு முட்டுக்கட்டை

பரம்பரையான இந்து புரோகிதர்களுக்கு எதிரான குற்றச் சாட்டுகள் எண்ணற்றவை, மற்றும் அவை திகைப்பூட்டுவதாயிருக் கின்றன. நமது நாகரிகத்தின் சக்கரத்தில் அவர் (புரோகிதர்) ஒரு முட்டுக்கட்டையாகும். மனிதன் பிறக்கிறான், அவன் திருமணம் செய்து கொள்கிறான், ஒரு குடும்பத்தின் தந்தையாகிறான், பின்னர் காலப்போக்கில் மரணமடைகிறான். இந்த வாழ்க்கை நெடுகிலும் புரோகிதர் ஒரு தீய நுண்ணறிவாளன் போன்று மனிதனை நிழல் போல் தொடர்கிறார். சாஸ்திரங்கள் மற்றும் ஸ்மிருதிகளுக்கு ஏற்ப அவர் கூறும் கொடூரமான விதிகளிலிருந்து விலகிச் செல்வதானது

பயங்கர தண்டனைக் குள்ளாக்கப்படுகிறது. 99 சதவீத மக்கள் இதைத் தாக்குப்பிடிக்க முடியாதவர்களாக உள்ளனர். மனிதனை சமுதாயத்திலிருந்து விலக்கி வைப்பது அல்லது வெளியேற்றுவது புரோகிதரே சாத்தானாக இருந்து உருவாக்கிய ஆயுதமேயாகும். இதைப் புரோகிதர் ஈவிரக்கமின்றி, இடைவிடாது, மூர்க்கமான உறுதியுடன் கையாள்கிறார். உத்தியோகத் தோரணையில் செயல்படும் பிராமணர் ஒரு வழியாக மனித சமுதாயத்தின் ஒரு பரிதாபமான தனி நபராக காட்சியளிக்கிறார் என்பதை நான் ஒப்புக் கொள்ள வேண்டும். நாம் அறிவதைப் போலவே அவருக்கும் இது தெரியும். காணப்பட முடியாத சக்திகளுக்கும், திக்கற்ற மனிதனுக்கும் இடையில் ஒரு தரகனாக இருக்கும் அவமானத்தை அவர் கடைப் பிடித்து, அதன் மூலம் வாழ்க்கையை ஓட்டுகிறார். இது மனதில் வர்க்க நெறிகெட்ட தன்மையல்லவா என்று தத்துவ ஞானிகள் கேட்கக்கூடும். ஆனால் இந்தக் கேள்விக்கு விடை எதுவாக இருந்த போதிலும், சமுதாயத்தின் ஜீவாதாரங்களைத் தனது சுயநலத் திற்குப் பயன்படுத்திக் கொண்டு, அவற்றை அரித்துவரும் புல்லுருவி களை எவ்விதத் தடையும் கட்டுப்பாடும் இன்றி செயல்படுவதற்கு இந்தப் புல்லுருவியை இனி ஒருபோதும் அனுமதிக்கக் கூடாது. இந்தியாவிலுள்ள நாம் ஆங்கிலேய மறுமலர்ச்சியிலிருந்து ஒரு படிப்பினையைக் கற்றுக்கொண்டு, மதத்தையும் புரோகிதரையும் முறையான கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து, அதனுடைய பிற்போக்கான மற்றும் கட்டற்ற வளர்ச்சியைத் தடுக்க வேண்டும்.

## ஒரு வீரம் செறிந்த கடமை

வெகுஜனங்களிடையில் இருந்துவரும் மூடநம்பிக்கை யான நடைமுறைகளுக்கு எதிராகப் பயனுறுதியான சட்டமியற்று வதற்கு ஒரு பெரும் தேவை இருக்கிறது. புரோகிதர் மூட நம்பிக்கை களுக்கு ஆதரவாக இருந்து வருகிறார். கடவுள்களுக்கும் பெண் தெய்வங்களுக்கும் வீண்விரயமான படையல்கள், மரணத்தின் போது நீண்டகாலத் துக்கச் சடங்குகள் அனுசரிப்பது, பிறப்பு மற்றும் திருமணங்களின் போதும் மிகுதியான சடங்குகள், அறிவற்ற சாதி ரீதியிலான விருந்துகள் போன்ற சில நடைமுறைகள் புரோகிதர் மகிழ்ச்சியுடன் கடைப்பிடிக்கும் உணர்வற்ற, சில அர்த்தமற்ற நடைமுறைகளாகும். திருமணத்தைப் போன்ற மகிழ்ச்சிகரமான சந்தர்ப்பமாகட்டும், அல்லது மரணம் போன்ற துயரகரமான நிகழ்ச்சி யாகட்டும் புரோகிதர்கள் அவற்றை சமநோக்கில் எதிர்கொள் கிறார்கள். அவர்களில் பலர், பார்ஸி நிருபர்களில் ஒருவர் சிறந்த

முறையில் எடுத்துக் காட்டியதுபோல், தங்களுக்கு இரையாகின்ற வர்களைப் பயன்படுத்திக் கொள்வதற்காகப் பிரார்த்தனை செய் கிறார்கள். புரோகிதத்துவத்தின் தீமைகளின் பட்டியல் மெய்யாகவே திகைக்க வைக்கிறது. இறுதியாக அதனை ஒழித்துக்கட்டுவதை ஒரு லட்சியமாகத்தான் நமது பார்வையில் வைத்துக் கொள்ள முடியும். ஆனால் நமது நேர்மையான (தூய) இயக்கத்தைத் தொடங்குவதை நாம் ஒத்திப்போட முடியாது. சில முன்னணி பார்சிகள் ஒன்று பட்டுத் தொடங்கியுள்ள நடவடிக்கைகளை நான் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன். பார்ஸி சமூகத்தில் எந்த அளவுக்குப் புரோகிதர் களின் தாக்கம் ஏற்பட்டிருக்கிறது என்பது மெய்யாகவே வியப் பூட்டுவதாக இருக்கிறது. ஒரு பார்ஸி மரணமடைந்ததற்குப் பின்னர் ஓராண்டு காலத்திற்கு, அந்த ஏழைக் குடும்பத்திற்கு, அவர் உயிருடன் இருந்த பொழுதைக் காட்டிலும் பொருளாதார ரீதியில் கூடுதல் சுமையாகிறார் என்று சில பார்ஸி நண்பர்கள் மதிப்பிட் டுள்ளனர். ஒரு பார்ஸி பத்திரிகை அண்மையில், உயிருடன் வாழ்ந்து கொண்டிருந்த பொழுது ஓர் அலுமினிய டம்ளர் வாங்க முடியாத அளவுக்கு ஏழையாயிருந்த ஒரு நபரை உதாரணமாகக் குறிப்பிட் டிருந்தது. ஆனால் அந்த நபர் இறந்துபோனபோது அவருடைய இறுதிச் சடங்குகளில் ஒரு வெள்ளிக் கிண்ணம் பயன்படுத்தப்பட வேண்டுமென்று புரோகிதர் வற்புறுத்தினாராம். தங்களுடைய கூர்மையான நடைமுறை விவேகத்தின் பயனாக, பார்ஸிகள் இந்தியா வில் புரோகிதத்துவம் என்னும் தீமையை ஒழித்துக் கட்டுவதற்கான நடவடிக்கைகளைத் தொடங்குவதற்கு மிகவும் பொருத்தமாகவே முன்முயற்சி மேற்கொண்டிருப்பதைக் காட்டுவதற்காகவே இதை நான் மேற்கோள் காட்டுகிறேன். மேலும், புரோகிதத்துவத்தைத் துடைத்தெறியும் இந்த வீரமான மற்றும் உன்னதமான பணியில் அனைத்து அறிவொளி படைத்த இந்துக்களும் முகமதியர்களும் கிறிஸ்துவர்களும் சேர்ந்து நிற்பார்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை. ஏனெனில், புரோகித தத்துவத்தின் சுமைமைத் தாங்குவதற்குத் தமது பார்ஸி சகோதரர்களைக் காட்டிலும் அவர்கள் நிச்சயமாக மிக மிக இயலாத நிலையில் இருக்கின்றனர்.''[1]

• • •

1. பம்பாய் கிரானிக்கில், நவம்பர் 8, 1929.

# 2

# பம்பாய் மாகாணத்தில் சட்டக்கல்வி சீர்திருத்தம் பற்றிய சிந்தனைகள்

- டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், எம்.ஏ., பி.எச்.டி., டி.எஸ்.சி, பார்-அட்-லா, முதல்வர், அரசு சட்டக் கல்லூரி, பம்பாய்

பம்பாய் மாகாணத்தில் சட்டத்துறையில் வெவ்வேறான கூறுகள் உள்ளன. தகுதிகளிலும், பயிற்சிகளிலும் வேறுபாடுகள் உண்டு. மாகாணத்தில் ஆறு வெவ்வேறான சட்டத் துறையினர் (வழக்கறிஞர்கள்) உள்ளனர். அவர்களாவன : 1. பாரிஸ்டர் - அட்-லா, 2. அட்வொகேட்டுகள் (ஓ.எஸ்), 3. பம்பாய் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த அட்வொகேட்கள் (ஏ.எஸ்), 4. பார் கவுன்சிலைச் சேர்ந்த அட்வொகேட்டுகள் (ஏ.எஸ்), 5. சொலிஸிட்டர்கள் மற்றும் 6. முக்தியார்கள். பம்பாய் மாகாணம் முழுவதிலுமுள்ள நீதிமன்றங்களில் வழக்காடுவதற்கு இவர்களுக்கு உரிமையுண்டு. இந்த ஆறு வகைப்பட்ட வழக்கறிஞர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படும் சட்டப் பயிற்சி பெருமளவு வேறுபடுகிறது. பாரிஸ்டர்களுக்குத் தேவைப் படும் சட்டப் பயிற்சி மூன்றாண்டு காலம், மற்றும் சேம்பரில் ஓராண்டுக் காலம் , பம்பாய் பல்கலைக் கழகத்தின் அட்வொகேட் (ஏ.எஸ்) பம்பாய் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றவர், இவர் ஓர் அங்கீகரிக்கப்பட்ட கல்வி நிலையத்தில் இரண்டாண்டுகளுக்கு மேல் கட்டாயமாக சட்டப் பயிற்சி பெற்றிருக்க வேண்டும். இவ்வாறு, மொத்தத்தில் அவர் மெட்ரிகுலேஷன் முடித்த பின்னர், தொழில் புரிவதற்கானத் தகுதி பெறுவதற்கு ஆறாண்டு கடக்க வேண்டும். பார் கவுன்சிலின் அட்வொகேட் (ஏ.எஸ்), பம்பாய் பல்கலைக்கழக

---

**கல்லூரிக் குறிப்புகள்**

எனினும் திரு. பைஸீ பொறுப்பை டாக்டர் அம்பேத்கரிடம் ஒப்படைத்துவிட்டார் என்பதைத் திருப்தியுடன் குறிப்பிடுகிறோம். புகழ்பெற்ற வழக்குரைஞரான இவர் பொருளாதார நிபுணர், அரசியல் சாசன சட்டத்தில் வல்லுநர், இந்தியாவிலும் இதர நாடுகளிலும் நன்கு பரிச்சயமானவர். அவரைப் பற்றி மேலும் எழுதுவது தேவையற்றது. எங்கள் கல்லூரி முதல்வரிடமிருந்து அதிகம் எதிர்பார்த்து அவருக்கு சங்கடம் தரலாகாது. பொறுத்திருந்து பார்ப்போம்.

அட்வொகேட் (ஏ.எஸ்) போலன்றி, எந்த அங்கீகரிக்கப்பட்ட கல்வி நிலையத்திலும் கட்டாயமாக சட்டப் பயிற்சி பெறத் தேவையில்லை. அவர் தேர்ச்சி பெறுவதற்கு எந்த இடைக்காலமும் இல்லாமல், பார் கவுன்சில் தேர்வில் பங்குகொள்வதற்குத் தகுதி உடையவர். அட்வொகேட் (ஓ.எஸ்.) என்பவர் அட்வொகேட் (ஏ.எஸ்) போன்றே எல்.எல்.பி. ஆவார். அவர் மொத்தம் ஐந்தாண்டுகள் சட்டப் பயிற்சி பெறுகிறார். எல்எல்.பி. பட்டம் பெற்றபின், இரண்டாண்டுகள் இடைவெளிக்குப்பின் அவர் அட்வொகேட் (ஓ.எஸ்) தேர்வில் பங்கு கொள்கிறார். அப்பொழுதும்கூட அவர் தொழில்புரியத் தகுதி பெறுவதில்லை. அதற்கு முன்னால் அவர், ஒரு முதுநிலை வழக்கறிஞரின் சேம்பரில் படிப்பதில் ஓராண்டு ஈடுபட்டிருக்க வேண்டும். இவ்வாறு அவர் தன் மெட்ரிகுலேஷன் தேர்வுக்குப் பின்னர் மொத்தத்தில் ஒன்பது ஆண்டுகள் கடந்திருக்க வேண்டும். ஒரு சொலிசிட்டர், ஒரு சொலிசிட்டர்களின் நிறுவனத்தில் ஒப்பந்தங் களில் கையெழுத்திடுவதற்கு முன்னர், ஒரு பி.ஏ. பட்டதாரியாகவோ அல்லது ஒரு எல்எல்பி ஆகவோ இருக்க வேண்டும். அவர் தனது ஒப்பந்தங்களில் கையெழுத்திட்ட பின்னர், மூன்றாண்டுகள் கழித்து அவருடைய தேர்வு நடைபெறுகிறது. எனவே, அவருடைய முந்தைய பயிற்சி, ஒரு பி.ஏ. பட்டதாரியாக ஒரு நிறுவனத்தில் இணைந்தால் ஏழு ஆண்டுகள், அல்லது ஒரு எல்எல்பி யாக இணைந்தால் ஒன்பது ஆண்டுகளும் பெற்றிருக்க வேண்டும். ஏணியின் கடைசிப் படியில் முக்தியார் இருக்கிறார். இவருக்கு சட்டத்தில் பயிற்சி தேவையில்லை, அது போன்றே, அவர் தகுதிபெறுவதற்கான எந்தத் தேர்விலும் தேர்வுபெற அவசியமில்லை. வேறு இரண்டு சூழ்நிலைமை களினால் நிலைமை மேலும் சிக்கலாக்கப்படுகிறது. முதலாவதாக, சட்டத் தேர்வுகளில் கலந்து கொள்ளும் மாணவர்களை ஆய்வு செய்யும் உரிமை பெற்றுள்ள பல வெவ்வேறு அதிகார அமைப்புகள் இருப்பதாகும். அட்வொகேட்டுகள் (ஏ.எஸ்) இரண்டு பிரிவினரைப் பொறுத்தமட்டிலும் அவர்களை ஆய்வு செய்வதற்கு உரிமையுடைய இரு வெவ்வேறு அமைப்புகள் உள்ளன. ஒரு பிரிவனரை பம்பாய்ப் பல்கலைக்கழகமும், மற்றொரு பிரிவினரை பார்கவுன்சிலும் ஆய்வு செய்கின்றன. அட்வொகேட் (ஓ.எஸ்.) மற்றும் சொலிசிட்டர்களைப் பொறுத்தமட்டிலும் இவர்களைப் பரிசோதிக்கும் அமைப்பு உயர்நீதி மன்றமாகும். இந்தப் பரிசோதிக்கும் அமைப்புகள் எதுவும், தாங்கள் பரிசோதிக்கும் மாணவர்களுக்கு போதிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ளவை அல்ல என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். நிலைமையின் சிக்கல் தன்மையைக் கூடுதலாக்கும் இரண்டாவது சூழ்நிலை என்னவெனில், மாகாணத்தில் உள்ள வழக்கறிஞர்களிடையில்

உள்ள தகுதி வேறுபாடு ஆகும். அட்வொகேட்டுகளுக்கும் (ஓ.எஸ்), பாரிஸ்டர்களுக்கும் செயல்படுவதற்கான களம் முழுவதும் அவர்கள் முன்னே விரிந்து கிடக்கிறது. அவர்கள் எந்த நீதிமன்றத்திலும் மற்றும் உயர்நீதிமன்றத்தின் இருதரப்பிலும் பங்கேற்கலாம். ஆனால் அவர்கள் வாதாட மட்டுமே செய்யலாம். முடிவுசெய்ய (தீர்ப்பளிக்க) முடியாது. அட்வொகேட் (ஏ.எஸ்.)ஸைப் பொறுத்த மட்டிலும் உயர்நீதிமன்றத்தைப் பொறுத்தமட்டிலும் அப்பீல் தரப்பில் மட்டுமே அவர் செயல்படலாம். ஆனால் அவர் வாதாடவும் முடியும், முடிவு கூறவும் முடியும். ஆனால், சொலிசிட்டர் எங்கு வேண்டுமானாலும் வழக்கறிஞர் தொழில் புரியலாம்; உயர்நீதிமன்றத்தைப் பொறுத்த மட்டிலும், ஒரிஜினல் தரப்பில் அவர் செயல்பட மட்டுமே முடியும், அப்பீல் தரப்பில் அவர் செயல்படவும் வாதாடவும் முடியும்.

ஆனால், ஒரே தொழில்புரிவோரிடையில் தகுநிலை, தேர்வுகள், தகுதிச்சான்றுகள் போன்றவற்றில் இவ்வளவு வேறுபாடு மிகவும் துரதிருஷ்டமான எதார்த்தமாகும். இவையாவும் மிகவும் திருப்தியற்றதாகவும், கண்டனத்திற்குரியதாகவும்கூட உள்ளதென்று ஒத்துக்கொள்ளும் அதே பொழுதில், இவை எல்லாம் ஒரு பிரச்சினை யாக அமைந்துள்ளது என்று வாதாட முடியாது என்று நான் நினைக்கிறேன். ஏனெனில் இந்த அமைப்பு சிக்கலானதாகவும் தர்க்க ரீதியற்றதாகவும் இருப்பதாக நான் கருதவில்லை. அது எத்தகைய பாதகமான விளைவுகளையும் ஏற்படுத்துவதில்லை. நிலைமையில் முரண்பாடுகள் இருக்கின்றன என்பதில் ஐயமேது மில்லை. கல்வியின் பிற துறைகளிலும் முரண்பாடுகள் இருக்கவே செய்கின்றன. மருத்துவத் துறையிலிருந்தும் பொறியியல் தொழிலி லிருந்தும் இரு உதாரணங்களை மட்டும் பார்ப்போம். பம்பாய்ப் பல்கலைக்கழகம் மருத்துவப் படிப்பு முறை ஒன்றை ஏற்படுத்தி யுள்ளது. அதில் தேர்வு பெறும் ஒரு நபர் எம்.பி.பி.எஸ் பட்டம் பெறுவதற்குத் தகுதி உடையவராகிறார். அதற்கு இணையாக, மற்றும் அதனுடன் கூடவே, அரசு நடத்தும் எல்.சி.பி.எஸ் படிப்பும் இருக் கிறது. அதை முடித்தபின் ஒரு நபர் டிப்ளமோ பெறுவதற்குத் தகுதி யுடையவராகிறார். பம்பாய் பல்கலைக்கழகம் ஒரு பொறியியல் படிப்பைத் தொடங்கியுள்ளது. அதன் முடிவில் தேர்வுபெறும் மாணவர்களுக்கு பி.இ.பட்டம் வழங்கப்படுகிறது. விக்டோரியா ஜுபிலி தொழில்நுட்பக் கழகமும் ஒரு பொறியியல் படிப்பை நடத்துகிறது. அதன் முடிவில் மாணவர் டிப்ளோமா பெறுகிறார். பல்கலைக் கழகப் பட்டம் பெறும் மாணவரும், மருத்துவம் அல்லது பொறியியலில் டிப்ளமோ பெறும் மாணவரும் தொழிலை

நடத்தி, அரசின் கீழும், அரசுக்கு வெளியிலும் வேலை வாய்ப்பைப் பெறகிறார். இது பற்றி யாரும் புகார் கூறுவதில்லை. ஏனெனில் ஒவ்வொரு பிரிவும் தனது பயிற்சிக்குப் பொருத்தமான இடத்தைப் பெறுகிறது. சட்டத் தொழிலில் - அது செயல்படும் முறையை ஒருவர் புரிந்துகொண்டால் - இவ்வாறுதான் ஏற்படுகிறது. முக்தியார்கள் கீழ்நிலை கிரிமினல் நீதிமன்றங்களில் செயல்பட்டு சிறுவழக்குகளை நடத்துகிறார்கள். பல வழக்கறிஞர்களுக்குக் கண்களை உறுத்தும் பார்கவுன்சிலின் அட்வொகேட் (ஏ.எஸ்) தாலுகாவில் துணை நீதிபதிகள் மற்றும் சப்-டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட்டுகளின் புறநகர் நீதிமன்றங்களில் பங்கேற்கிறார்கள். அட்வொகேட் (ஏ.எஸ்)ஸும், அட்வொகேட் (ஓ.எஸ்)ஸும் மட்டுமே மாவட்ட நீதிமன்றங்களிலும் உயர்நீதிமன்றத்திலும் தொழில் நடத்துகிறார்கள். நடைமுறையில் இத்தொழில் எவ்வாறு நடைபெறுகிறது என்பதை கவனிக்கும் போது, சட்டக் கல்வி முறையில் கடுமையான தவறு ஒன்றும் இருப்பதாகக் கூற முடியாது. இந்த முறை சிக்கலானதாகவும் சமன்பாடற்றதாகவும் இருக்கிறது என்பது மெய்யே. ஆனால் சிக்கலான தன்மையும் சமன்பாடு இல்லாமையும் ஒரு பிரச்சினை யாகக் கருதப்பட முடியாது; குறிப்பாக, ஈர்ப்பு சக்தி பற்றிய வசதி யினால் ஒவ்வொரு நபரும் ஒரு நிலையில் நிலைத்து விடுகிறார்கள், அவர்களுடைய பணியும் அவர்களுடைய பயிற்சிக்கு இசைவாக அமைந்து விடும்போது, அதை ஒரு பிரச்சினையாகக் கருத முடியாதுதான்.

ஒரு பிரச்சினை இருக்கிறது என்று வைத்துக் கொண்டாலும், பிரச்சினை சம்பந்தமான குழப்பத்தைத் தவிர்ப்பதற்கு சில பாகுபாடுகள் செய்வது அவசியமாகும். சட்டத்தொழிலில் அளவுக் கதிகமானவர்கள் இருக்கிறார்கள் என்ற பிரச்சினையை சட்டக் கல்விப் பிரச்சினைகளிலிருந்து தனியாகப் பிரித்துப் பார்க்க வேண்டும். கல்விக் கண்ணோட்டத்திலிருந்தும் சமூக நீதிக் கண் ணோட்டத்திலிருந்தும், சட்டத் தொழிலை ஒரு சிலரின் ஏகபோக மாக்கும் அடிப்படையில் சட்டக் கல்வி முறையை வகுப்பது ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல. ஒரு திறமையான வழக்கறிஞரைத் தோற்றுவிப்பதற்கு எத்தகைய சட்டக் கல்வி வழங்கப்பட வேண்டு மென்பது முற்றிலும் ஒரு கல்விப் பிரச்சினையேயாகும்; அதற்குக் கல்வியாளராலேயே தீர்வு காணப்பட வேண்டும்; அதே பொழுதில், ஒரு தொழிலாக சட்டத்துறையை மேற்கொள்பவர்களின் எண் ணிக்கை மிகவும் அதிகமாக இருந்து, அளவுக்கு மீறிப்போனால், அதனால் பாதிக்கப்படக்கூடாது. நான் மற்றொரு வேறுபாட்டையும்

கூறியாக வேண்டும். சட்டக் கல்விப் பிரச்சினையானது சட்டக் கல்வியைப் பயிற்றுவிக்கும் நிறுவனங்கள் முழுநேர நிலையங்களாக இருக்க வேண்டுமா அல்லது பகுதி-நேர நிலையங்களாக இருக்க வேண்டுமா என்ற பிரச்சினையுடன் உள்ளார்ந்த இணைப்புக் கொண்டுள்ள பிரச்சினையல்ல என்பதாகும். பகுதிநேரம் பணியாற்றும் ஒரு சட்டப் பள்ளி அல்லது சட்டக் கல்லூரியின் வாயிலாக ஓரளவு நல்ல, எளிதில் செயல்படத்தக்க சட்டக் கல்வி முறை வழங்கப்படுவது சாத்தியமே.

இந்தப் பூர்வாங்கக் கருத்துக்களோடு, சட்டக் கல்வியை சீர்திருத்தும் பிரச்சினை பற்றி இப்பொழுது நான் எடுத்துக் கொள்கிறேன். பரிசீலனைக்குரிய நான்கு விஷயங்கள் உள்ளன.

1. ஒரு மாணவன் தனது கல்வியின் எந்தக் கட்டத்தில் சட்டங்களைப் பயில்வதைத் தொடங்குவதற்கு அனுமதிக்கப்பட வேண்டும்?
2. சட்டக் கல்வியின் ஒரு முழுப் பாடத் திட்டத்திற்கு எவ்வளவு காலம் தேவைப்படும்?
3. சட்டக் கல்வியின் ஒரு முழுப் பாடத் திட்டத்திற்கு என்னென்ன விஷயங்கள் (பாடப் பொருள்கள்) சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்?
4. வரையறுக்கப்பட்ட பாடத்திட்டம் மிகவும் திறமையான முறையில் போதிக்கப்படுவதற்கு சட்டக் கல்லூரி எவ்வாறு ஏற்பாடு செய்யப்பட வேண்டும்?

மூன்றாவது கேள்விதான் கேந்திரமானதாக எனக்குத் தோன்றுகிறது. இந்தக் கேள்விக்கான சரியான பதில் மீதுதான் எஞ்சியுள்ள மூன்று கேள்விகளுக்கான தீர்வு சார்ந்துள்ளது. இந்த விஷயத்திற்கான சிறந்த அணுகுமுறை, எல்எல்.பி தேர்வுக்கு பம்பாய் பல்கலைக் கழகத்தினால் நியமிக்கப்பட்டுள்ள தேர்வாளர்கள் அவ்வப் பொழுது வழங்கியுள்ள அறிக்கைகளில் காணக் கிடைக்கின்றது. தேர்வுக்கு அமரும் மாணவர்களின் பணி குறித்த அவர்களின் (எண்ணப்) பதிவுகள் அவற்றில் அடங்கியுள்ளன. தேர்வுக்கு அமரும் மாணவர்களின் பணியில் கீழ்வரும் குறைபாடுகளைத் தேர்வாளர்கள் வலியுறுத்தியுள்ளதை அந்த அறிக்கைகள் காட்டுகின்றன.

1. ஒரு மாணவன் பயில்வதற்கு வரையறுக்கப்பட்டுள்ள அஸ்திவாரமாக உள்ள அடிப்படையான கோட்பாடுகளை சரியாகப் புரிந்து கொண்டதற்குரிய எந்த அடையாளமும் காணப்படவில்லை.

2. பொது அறிவில் எந்தத் தேர்ச்சியும் இல்லாமை.

3. குறிப்பிட்ட பொருளை முறையாக முன் வைக்கப் படுத்துதல் இல்லாமை.

4. கேட்கப்பட்ட கேள்விக்குப் பொருத்தமான பதில் இல்லாமை

5. விவரங்கள், வாதங்கள் மற்றும் அபிப்பிராயங்களை முன்வைக்கும்போது துல்லியமான தன்மை இல்லாமை

6. மாணவர் தனது மனதில் இருப்பதைத் தெளிவான முறையில் (மொழியில்) வெளிப்படுவதற்கு இயலாமை.

இவை ஒரு சட்டப் பயிற்சி மாணவனிடத்தில் மிகவும் கடுமையான குறைபாடுகளாகும் என்பதில் ஐயமில்லை. இவற்றை அகற்றுவதற்கு ஏதாவது செய்தாக வேண்டும். இந்தக் குறைபாடு களை எவ்வாறு அகற்றுவது? இந்தக் குறைபாடுகள் எதனால் ஏற்படுகின்றன என்பதை முதலில் நாம் புரிந்துகொள்ள வேண்டும். இந்தக் குறைபாடுகள் இரண்டு விஷயங்களால் ஏற்படுகின்றன என்று நான் கருதுகிறேன். அதாவது, ஒரு பிழையான பாடத் திட்டத்தினாலும், ஒரு பிழையான போதனை முறையினாலும் இவை ஏற்படுகின்றன.

கல்வியாளரின் கண்ணோட்டத்தில், சட்டத்தைப் பயில் வதற்கு வேறுசில துணைப்பாடப் பொருட்களைக் கற்பதும் தேவை யாயிருக்கிறது. அவையில்லாமல், சட்டத்தைப் பயில்வது மட்டும், இந்தத் தொழிலை நடத்துவதற்குப் பூரணமான படிப்பாகாது. ஒரு வழக்கறிஞருக்கு சட்ட உள்ளம் இருக்க வேண்டுமென்பதை நினைவில் கொண்டால் இந்தத் துணைப் பாடங்கள் யாவை என்பதைப் பட்டியலிடுவது சிரமமாயிருக்காது. ஒரு கூர்மையான பார்வையாளரின் கருத்தின்படி - அகஸ்டைன் பிர்ரெல் தனது ஔபைட்டர் டிக்டாவில் (தீர்ப்பின் இடையே சாதாரணமாகக் குறிப் பிடுவது) அங்கீகரித்து மேற்கோள் காட்டுவதன்படி ஒரு சட்ட உள்ளமானது பிரதானமாக, ஒரு தெளிவான விஷயத்தை விளக்கிக் கூறுவதில், வெட்ட வெளிச்சமான விஷயத்தை விளக்கிக் கூறுவதில்,

சாதாரணமான விஷயத்தை விரிவாக எடுத்தியம்புவதில் பிரதி பலிக்கிறது. இந்தக் கருத்தில் பொதிந்துள்ள கிண்டலான வாசகத்தை ஒரு கணம் ஒதுக்கி வைத்து விட்டுப் பார்த்தால், இதில் ஒரு முக்கிய மான உண்மை அடங்கியுள்ளது என்று நான் கருதுகிறேன். ஏனெனில் ஒரு வழக்கறிஞர் உண்மையில் செய்ய வேண்டியது என்ன என்பதை இது எடுத்தியம்புகிறது. இந்தக் கண்ணோட்டத்தின்படி, ஒரு வழக் கறிஞரின் வேலை வாதிடுவதாகும். ஒரு வழக்கறிஞரின் தொழிலில் வாதம் மிகவும் முக்கிய பங்காற்றுவதால் வாதம்தான் ஒரு வழக் கறிஞரின் வாழ்வில் சாராம்சமான அம்சமாகும் (உச்சக் குறிக்கோள்) என்று கூறுவதற்கு நான் தயாராயிருக்கிறேன். விவாதத் திறமையின் வளர்ச்சிக்கு பின்வருவன அத்தியாவசியமான தேவைகளாகும்.

அ. தனிநபர் பற்றியும் சமூகத்தில் அவர் எவ்வாறு செயல்படு கிறார் என்பது பற்றிய ஞானம்.

ஆ. மனித மனத்தின் செயல்பாடு குறித்த அறிவு.

இ. தர்க்க ரீதியான முடிவுகளுக்கு வருவதற்குப் பயிற்சி பெற்ற மனது.

வாதம் புரியும் திறமையின் அடிப்படையான தேவை களோடுகூட, முற்றிலும் அலங்காரமான பிற தேவைகளும் உள்ளன. இருந்த போதிலும் அவை, மொழியின் அழகுக்கும் ஒழுங்காக முன்வைப்பதற்கும் அவசியமாகும். ஸ்தூலமான சொற்களில் கூறுவதெனில், ஒரு வழக்கறிஞரின் பயிற்சியானது, சட்டத்தைப் பயில்வதோடுகூட, பின்வரும் பாடங்களின் ஆய்வையும் உட் கொண்டிருக்க வேண்டும். (1) சமூகவியல், (2) உளவியல், (3) தர்க்க வியல், (4) பேச்சுத் திறன் மற்றும் கூட்டத்தில் பேசும் கலை, (5) மொழித் திறமை. இந்தப் பாடங்களில் எதுவும் தற்போதைய சட்டப்படிப்புப் பாடத்திட்டத்தின் ஒரு பாகமாக இல்லை. எனவே, பாடத்திட்டத்தை சீர்திருத்துவதும், இந்தப் பாடங்கள் அதில் சேர்த்துக் கொள்ளப்படுவதும் மேற்கொள்ளவேண்டிய முதலாவது நடவடிக்கையாகும்.

ஆலோசனை கூறப்பட்டுள்ள முறையில் பாடத்திட்டம் விரிவுபடுத்தப்பட்டால், இரண்டாவது கேள்விக்கு, அதாவது, சட்டக் கல்வியின் முழுப்பாடத் திட்டத்திற்குத் தேவையான கால அளவு என்னவாயிருக்க வேண்டும் என்பதற்கு ஒரே விடை, தற்போதிருப்

பதைப்போன்று, அது இரண்டு ஆண்டுப் பாடத்திட்டமாக இருக்க முடியாது. அது இரண்டாண்டுகளுக்கு அதிகமானதாக இருக்க வேண்டும். கால அளவு திட்டவட்டமாக எவ்வளவாக இருக்க வேண்டுமென்பதில் கருத்து வேறுபாடு இருக்கக்கூடும். இந்தக் கால அளவு நான்கு ஆண்டுகளாக இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன். இந்த நான்காண்டுக்காலப் பாடத்திட்டத்தை இரண்டு ஆண்டுகள் கொண்ட இரு காலகட்டங்களாக நான் பிரிக்கிறேன். முதல் இரண்டாண்டுகளின் முடிவில், பல்கலைக்கழகத்தினாலோ, அல்லது நியமிக்கப்படும் வேறு எந்த அமைப்பினாலோ ஒரு தேர்வு நடத்தப்பட வேண்டும்; இந்தத் தேர்வு முதலாவது எல்எல்.பி. தேர்வு என்று அழைக்கப்படும். இரண்டாவது இரண்டாடுக் கால கட்டத்தின் முடிவில், அதே அமைப்பினால் மற்றொரு தேர்வு நடத்தப்படும், இதற்கு இரண்டாவது எல்எல்.பி. தேர்வு என்று பெயர்.

என்னுடைய திட்டத்தின்கீழ், பாடத்திட்டத்தை முதலாவது எல்எல்பிக்கும் இரண்டாவது எல்எல்பி.க்கும் இடையில் பிரித்துக் கொள்ளும் பிரச்சினை பற்றி அடுத்து நான் விளக்க விருக்கிறேன். முதலாவது எல்எல்பியின் பாடத் திட்டத்தில் கீழ்வரும் பாடப் பொருள்கள் அடங்கியிருக்க வேண்டும்.

1. சமூகவியலும் உளவியலும், 2. தர்க்கமும் சொற்பொழிவும், 3. ஆங்கிலம், 4. ஒப்பந்தங்கள் பற்றிய சட்டம், 5. சட்ட தத்துவ ஞானமும், சட்டம் பற்றிய மூதுரைகளும், 6. அரசியல் சாஸன சட்டம், 7. இந்திய அரசு சட்டங்கள், 8. குற்றங்கள் மற்றும் குற்ற நடைமுறை பற்றி சட்டம்.

இரண்டாவது எல்எல்பிக்கான பாடத்திட்டத்தில் தற்போது முதலாவது மற்றும் இரண்டாவது எல்எல்.பி. பயிற்சிக்கு வரையறுத்துள்ள பாடங்கள் உள்ளடங்கியிருக்கும். அதே பொழுதில் என்னுடைய திட்டத்தின் கீழ் உள்ள அரசியல் சாஸன சட்டம், இந்திய அரசு சட்டங்கள், குற்றங்கள் மற்றும் குற்ற நடைமுறைச் சட்டம் மற்றும் ஒப்பந்தம் முதலியவை இராது. இவை முதலாவது எல்எல்பி.க்கு மாற்றப்படுகின்றன. ஆயினும், இரண்டாவது எல்எல்பி.க்கான பாடத்திட்டத்தில் கீழ்வரும் சட்டங்களை சேர்த்துக் கொள்வதற்கு நான் விரும்புகிறேன்:-

(1) மாகாண மற்றும் ராஜதானி ஸ்மால்காஸ் கோர்ட் சட்டங்கள், மற்றும்,

(2) பம்பாய் சிவில் கோர்ட்டுகள் சட்டம்

சில வட்டாரங்களில் கூறியது போன்று கல்லூரிப் படிப்புப் பாடத்திட்டத்திலிருந்து சிவில் மற்றும் கிரிமினல் நடைமுறைகளை ஆய்வு செய்வதை நீக்குவது எனக்கு உடன்பாடல்ல. குறிப்பாக, என்னுடைய திட்டத்தின் கீழ் அவற்றைப் பயில்வதற்குப் போதிய அவகாசம் இருக்கும்.

பயிற்சிப் பாடங்கள் மற்றும் படிப்பின் கால அவகாசம் பற்றிய என்னுடைய கருத்துக்களைக் கூறிய பின்னர், முதலாவது பிரச்சினையை - அதாவது, ஒரு மாணவன் தனது சட்டப் படிப்பைத் தொடங்குவதற்கு, அவனுடைய படிப்பின் எந்தக் கட்டத்தில் அனுமதிக்கப்படலாம் என்பதை நான் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்கிறேன். அவன் தனது மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேர்வு ஆனவுடனேயே அதைத் தொடங்க வேண்டும் என்று கூறுவதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. கீழ்வரும் இரு கேள்விகளுக்குத் திருப்திகரமாகப் பதிலளிப்பதற்கு என்னுடைய இயலாமையின் காரணமாகவே நான் இந்த முடிவுக்கு வந்துள்ளேன்.

(1) சட்டப்படிப்பு, பட்ட மேற்படிப்பு என்று ஏன் கருதப்பட வேண்டும்?

(2) ஒரு கலைக் கல்லூரியில் ஒரு மாணவனின் பட்டப் படிப்பிற்கு முந்திய பாடப் பயிற்சி, ஒரு திறமையான வழக்கறிஞராவதற்குத் தேவையான ஒரு பூர்வாங்கப் பயிற்சியைக் கொடுக்கிறதா? இது இல்லாதது தேர்வாளர்கள் இடையறாது புகார் கூறுவதற்கான விஷயமாகியுள்ளது.

முதலாவது கேள்வியைப் பொறுத்தமட்டிலும், பம்பாய்ப் பல்கலைக் கழகத்தில், பொறியியல், மருத்துவம், இரசாயனம், பௌதிகம் போன்ற எந்த விஞ்ஞானப் பாடத்தில் எந்தப் பட்டமும், பட்ட மேற்படிப்பில் அனுமதிக்கப்படுவதற்கு பி.ஏ. தேர்வு பெறுவதை தேவையான ஒரு நிபந்தனையாக ஏற்றுக்கொள்வதில்லை என்பதை சுட்டிக்காட்டியாக வேண்டும். சட்டப் படிப்பு

மட்டும் இதற்கு விதிவிலக்கு என்று ஏன் கருதப்பட வேண்டும்? இதை நியாயப்படுத்துவதற்கு எந்த சரியான காரணத்தையும் என்னால் காண முடியவில்லை. இரண்டாவதாக, ஒரு கலைக் கல்லூரியில், பி.ஏ.பட்டம் பெறுவதற்குத் தனது நான்கு ஆண்டு களின்போது அந்த மாணவன் படிக்கின்ற படிப்பு - எக்ஸ் - ஹைபோதிசிஸ் - சட்டத்தைப் பயில்வதில் அவனுக்கு எத்தகைய பயனும் விளைவிப்பதில்லை என்று கண்டறியப்பட்டுள்ளது. இந்தக் கண்ணோட்டத்திலிருந்து விஷயத்தைப் பரிசீலனை செய்ததுதான், நான் ஏற்கனவே கூறியது போன்று, சட்டப் படிப்பை பட்டப் பிற்காலப் படிப்பு என்று கருதப்படக் கூடாது, மாறாக, மெட்ரி குலேஷன் முடித்தவுடனேயே தொடங்கும் பட்டத்திற்கான படிப்பு என்று கருத வேண்டும் என்று என்னைக் கருதச் செய்தது. பம்பாய்ப் பல்கலைக் கழகத்தின் தற்கால பட்டப்படிப்பானது அவ்வளவு நன்றாக இல்லை. ஒரு நல்ல வழக்கறிஞராவதற்கு அது உதவலாம் என்று கூற முடியும். சட்டத்தைப் பயிலத் தொடங்குவதற்கு அது ஒரு தேவையான முன் தேவையாயிருக்க வேண்டும் என்று கருத நம்மை கட்டாயப்படுத்துகிறது. பாரிஸ்டரின் படிப்பு ஒரு பட்ட மேற்படிப்பு அல்ல என்று நான் கூற முடியும்.

இண்டர் மீடியட் படிப்புக்குப் பிறகு ஒரு மாணவன் சட்டப் படிப்பை மேற்கொள்வதற்கு அனுமதிக்கப்படலாம் என்ற ஒரு கருத்தும் இருக்கிறது. இந்த ஆலோசனை ஒரு நல்ல ஆலோசனை யாகும். ஏனெனில் இது சட்டப் படிப்பு, பட்ட மேற்படிப்பு என்று கருதப்படாத காலத்திற்குத் திரும்பிச் செல்வதாக இது பொருள் படுகிறது. இருந்தபோதிலும் என்னுடைய கருத்துப்படி, இந்த ஆலோசனையை ஏற்றுக் கொள்வது ஒரு தவறாகும். இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. பி.ஏ.படிப்பு போதுமானதல்ல என்று அனுபவம் காட்டியுள்ளது. இந்த அனுபவத்தின் அடிப்படை யில் இண்டர் மீடியட் என்ற கீழ்நிலைக்கு நாம் இறங்குவோமே யானால், தற்பொழுது மேல்நிலை பி.ஏ. பட்டதாரிகளிடை யிலிருந்து நமக்குக் கிடைப்பதைக் காட்டிலும் சட்டக் கல்லூரி யிலிருந்து கூடுதல் திறமையான வழக்கறிஞர்கள் நமக்குக் கிடைக்கப்பட முடியும் என்று நினைப்பது எனக்கு ஓரளவு விசித்திர மானதாகத் தோன்றுகிறது. பி.ஏ. படிப்பு போதுமானதாக இல்லை யென்றால், இண்டர் மீடியட் மேம்பட்டதாக இருக்கும் என்று நிலைநாட்டுவது எவ்வாறு சாத்தியமாக இருக்கும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இரண்டாவதாக, சட்டப்

படிப்புக்குத் தேவையான பூர்வாங்கப் பயிற்சியைக் கொடுக்காத கலைக்கல்லூரியில் அந்த மாணவனை எதற்காக இரண்டாண்டு கள் விட்டுவைக்க வேண்டும்? தனது பூர்வாங்கப் பயிற்சியில் அந்த மாணவன் குறைபாடு உள்ளவனாக இருந்தால், அவனை ஆரம் பத்திலிருந்தே சட்டக் கல்லூரியில் சேர்த்து ஏன் பயிற்சியளிக்கக் கூடாது? ஓர் வழக்கறிஞர் என்ற இறுதி ஆதாயத்தை நோக்கமாகக் கொண்ட பாடப்பயிற்சியைத் தருவதாக சொல்லிக் கொள்ளாத ஓர் கலைக் கல்லூரியில் இரண்டு ஆண்டுகள் செலவழிக்க ஏன் அனுப்ப வேண்டும்?

மெட்ரிகுலேஷன் படிப்பு முடிந்தவுடனேயே சட்டப் படிப்புத் தொடங்குவதற்கு ஒரு மாணவனை அனுமதிக்கும் என் னுடைய பிரேரணையில் மூன்று தெளிவான அனுகூலங்கள் இருப்பதை நான் காண்கிறேன்.

1. நான் மிக அதிகமான மதிப்பு அளிக்கின்ற முதலாவது அனுகூலம் இதுதான்: தற்பொழுது, சட்டப் படிப்பில் சேரும் ஒரு மாணவன், வழக்கறிஞர் தொழிலுக்குத் தன்னைத் தகுதிப்படுத்திக் கொள்ளும் நோக்கத்திற்காகப் பயில்வது என்ற நிலையான குறிக்கோளைக் கொண் டிருக்கவில்லை. தனது தகுதிக்கு மேலும் ஒரு சிறப்பைச் சேர்த்துக்கொள்ளும் நோக்கத்திற்காக மட்டுமே அவர் அங்கு வருகிறார். அது அவருடைய கடைசிப் புகலிடமாகும். அங்கு அவர் அடைக்கலத்திற்குப் போகக் கூடும், அல்லது அதற்கு அல்லாமல் இருக்கக் கூடும். ஒருவேளை, அவர் வேலையில்லாதவராக இருப்பதனால் சட்டக் கல்லூரிக்கு வரக்கூடும், அந்தச் சமயத்தில் என்ன செய்வதென்று தெரியாதவராக இருக்கக்கூடும். இவ்வாறு நோக்கம் தெளிவாக இல்லாததினால், சட்டப் படிப்பு மாணவனிடம் ஆழமான நோக்கு இல்லை. அதனால்தான் அவனுடைய சட்டப்படிப்பு மிகவும் ஏனோதானோவென்று இருக் கிறது. எனவே, அதைக் கடைப்பிடித்துப் பயில வேண்டும் என்று அவனைக் கட்டாயப்படுத்துவது அவசியமாகும். ஒரு பி.ஏ. பட்டதாரி மாணவனுக்கு இந்த நிலையான நோக்கம் இருக்க முடியாது. ஏனெனில், ஒரு பி.ஏ.பட்டதாரி என்ற முறையில் அவருக்கு வாழ்க்கையில் வேறு வாய்ப்புக் கள் திறந்துள்ளன. என்னுடைய திட்டம், அந்த மாணவன்

மிகவும் தொடக்கக் கட்டத்திலேயே தனது பாதையைத் தேர்வு செய்துகொள்ளும்படிக் கட்டாயப்படுத்துகிறது. அந்தக் கட்டத்தில் இந்த நாட்டில் ஒவ்வொருவரும் தனது வாழ்க்கைப் பாதையைத் தேர்வு செய்து கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

2. என்னுடைய ஆலோசனையின் இரண்டாவது அனுகூலம், சிக்கனத்தையும் திறமையையும் அது ஒன்றிணைப்பதில் அடங்கியுள்ளது. ஒரு மாணவன் தனது சட்டப் படிப்பை நான்காண்டுகளில் முடித்துவிட முடியும். இது தற்போதுள்ள முறைக்கு மாறாக இரண்டு ஆண்டுகளை மீதமாக்குகிறது. மாற்று ஆலோசனைக்கு ஆறு ஆண்டுகள் தேவைப் படுகிறது. மிகவும் ஏழையாகவுள்ள மாணவர்களின் கண்ணோட்டத்தில், தற்போதுள்ள முறையைக் காட்டிலும் இதில் கூடுதலான அனுகூலம் எதுவுமில்லை. பயிற்சிக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது தற்போதுள்ள முறையும், மற்றும் கமிட்டி ஆலோசனை கூறியுள்ள மாற்று முறையும், என்னுடைய முறையோடு ஒப்பிடும் பொழுது குறைபாடுள்ளவையேயாகும். தற்போதுள்ள முறை, படிப்புக்கு 2 ஆண்டுகளை மட்டுமே அனுமதிக் கிறது. இது மிகவும் பற்றாக்குறையானது என்பதில் ஐயமில்லை. மாற்றுத் திட்டம் மூன்றாண்டுகளை அனு மதிக்கிறது. ஆனால் என்னுடைய திட்டம் முழு நான்கு ஆண்டுகளுக்கு வகை செய்கிறது, எனவே திறமையின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, இது மேற்படி இரு திட்டங்களைக் காட்டிலும் மேலானதாகும்.

3. மூன்றாவது அனுகூலமானது, அது ஒரு தேர்வு நிகழ்வுப் போக்கை ஏற்படுத்துகிறது. (வழக்கறிஞர்) தொழிலில் ஈடுபடும் திட்டவட்டமான குறிக்கோள் இல்லாதவர் கள் அகற்றப்பட்டு விடுவார்கள். திட்டவட்டமான குறிக்கோள் இருப்பவர்கள் மட்டுமே சேர்வார்கள். எனவே, இவ்வாறு தொழிலில் நெரிசல் ஏற்படுவது தவிர்க்கப்படுகிறது.

இதைப் பற்றி நான் விவாதித்தவர்களில் சிலரிடமிருந்து, இதற்கு எதிராக ஒரே ஒரு ஆட்சேபணை மட்டுமே கூறப்படக் கூடும். அதாவது, ஒரு மெட்ரிகுலேஷன் மாணவனால் சட்டம் சம்பந்தமான விரிவுரைகளை (சொற்பொழிவுகளை)ப் புரிந்து கொள்ள முடியாமல் போகும் என்பதுதான். இதற்கு எனது பதில் இரண்டு அம்சங்களைக் கொண்டதாகும். பம்பாய் உயர் நீதிமன்றத்தில் அட்வொகேட்டாக இருக்கும் எனது நண்பர் திரு.எஸ்.சி.ஜோஷி, எம்.ஏ., எல்எல்.பி., இந்த ஆட்சேபணையில் பொருளில்லை என்று எனக்கு உறுதி அளிக்கிறார். பார் கவுன்சில் தேர்வுக்கான வகுப்புகளைக் கடந்த பல ஆண்டுகளாக அவர் மிகுந்த மதிப்புடன் நடத்தி வருகிறார். தேர்வுகளின் முடிவுகள் இதைக் காட்டுகின்றன. மெட்ரிகுலேஷன் மாணவர்களுக்கு சட்டம் போதிப்பதில் அவருக்கு நேரடியான அனுபவம் இருந்து வந்துள்ளது. இது சம்பந்தமாக அவருடைய அபிப்பிராயத்திற்கு நான் மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறேன். என்னுடைய இரண்டாவது பதில் என்னவெனில், என்னுடைய திட்டத்தின் கீழ் எல்எல்.பிக்கான படிப்பு இரண்டு ஆண்டுகளைக் கொண்டது, மற்றும் சட்டப் படிப்பு முதல் ஆண்டிலிருந்தே தொடங்க வேண்டியதில்லை. அது இரண்டாவது ஆண்டில் தொடங்கப்படலாம்.

சட்டக் கல்லூரிகளை மறுசீரமைக்கும் கடைசிக் கேள்வியைப் பொறுத்தமட்டிலும், 1898ல் அமைக்கப்பட்ட ஒரு கமிட்டியாலும், 1915ல் அமைக்கப்பட்ட சந்தவர்க்கர் கமிட்டியாலும் இந்தப் பிரச்சினை ஆய்வு செய்யப்பட்டது; இக்கமிட்டிகள் இந்த ஆலோசனையை நிராகரித்துவிட்டன. சட்டக் கல்லூரியை முழு நேரமாக்கும் பிரேரணைக்கு எதிராக எனக்கு ஓர் ஆட்சேபணை இருக்கிறது என்பதை நான் ஒத்துக் கொள்கிறேன். தற்போது சட்டம் பயிலும் பல மாணவர்களும் தமது வாழ்க்கைக்காகப் பகலில் வேலை செய்து பொருளீட்டுகிறார்கள் என்பது உண்மை. உண்மையில் நான் படிக்கும்போதே வாழ்க்கைக்கான ஏதாவது தொழில் செய்து ஊதியம் பெறாவிட்டால், பல மாணவர்களுக்கு சட்டப் படிப்பு சாத்தியமாகியிருக்கிறது. இன்றுள்ளதைப்போல முழு சட்டப் படிப்பும் ஆறாண்டுகாலம் நீட்டிக்கப்படுமேயானால், அப்பொழுதும் கூட முழுநேரக் கல்லூரிப் படிப்பு என்ற பிரேரணையை நான் எதிர்ப்பேன். தேர்வுகளில் தோல்வியில்லை என்று வைத்துக் கொண்டாலும்கூட, ஆறாண்டுக் காலத்திற்கு மாணவனைப் பராமரிக்கும் சுமை பெற்றோர்களுக்கு ஏற்படும் வகையான கல்வித் திட்டத்தை

வகுப்பதை எந்தக் கல்வியாளரும் நியாயப்படுத்த முடியாது என்று நான் கருதுகிறேன். ஆனால் என்னுடைய திட்டப்படி முழுப் படிப்புக் கான காலம் நான்கு ஆண்டுகள் மட்டுமே என்றுள்ள நிலையில், மேலும் மாணவன் ஓரளவு முதிர்ச்சியடையாத நிலையில் இருப்பான் என்பதாலும், முழுநேரக் கல்லூரி என்ற பிரேரணைக்கு, முற்றிலும் அவசியத்தை முன்னிட்டு ஆதரவளிப்பது என்ற நிலைக்கு நான் வந்துள்ளேன்.

கல்லூரியின் அலுவலர்களைப் பொறுத்தமட்டிலும் நான் ஆசிரியர்கள் (ட்யூட்டர்கள்), பேராசிரியர்கள் என்று இரண்டு பிரிவு களாக நான் அமைத்துக் கொள்வேன். சட்டத்தை போதிப்பதானது தொழிலில் நடைமுறையில் ஈடுபட்டிருக்கும் நபர்களால் நடத்தப் பட வேண்டும் என்று நான் ஆவலாக இருக்கிறேன். தொழிலில் நடைமுறையில் ஈடுபட்டிருக்கும் நபர்களுடன் தொடர்பில்லாத நிலையில், சட்டக் கல்லூரியிலுள்ள எந்த மாணவனும் ஏட்டுப் படிப்போடு இருந்துவிடும் நிலைமை ஏற்படும். நடைமுறைப் பயிற்சிக்கு ஆதரவான மனோபாவத்தை அவனிடம் ஏற்படுத்த வேண்டும். தொழிலில் ஈடுபட்டுள்ள உறுப்பினர்களுடனான தொடர்பு மட்டுமே, அவனுடைய பயிற்சிக்கு ஒரு நடைமுறைச் சார்பைக் கொடுக்க முடியும். எனவே, பேராசிரியர்கள், கல்லூரியில் நிரந்தர அலுவலர்களாக இருக்கத் தேவையில்லை. பிரின்ஸ்பாலும் ஆசிரியர்களும் மட்டுமே நிரந்தர அலுவலர்களாக இருக்க வேண்டும். ஆசிரியர்களின் பணி மாணவர்களுக்குப் பயிற்சி அளித்து அவர்களைத் தயார்படுத்த வேண்டும். அதே பொழுதில் பேராசரியர் களும், பிரின்ஸ்பாலும் விரிவுரைகள் நிகழ்த்துவார்கள்.

ஆசிரியர்களை இரண்டு பிரிவுகளாகப் பிரிப்பதன் நோக்கம் முக்கியமாக போதனை முறையில் உள்ள குறைபாடுகளை அகற்று வதற்கேயாகும். தற்போது அமலிலுள்ள போதனை முறையி லுள்ள பிழைகள், சட்டக் கல்லூரியில் போதிக்கும் அனுபவமுள்ள யாருக்கும் தெளிவாகத் தெரியும். தற்போதுள்ள முறையின்கீழ் தனது சொந்த சட்டப் படிப்பில் மாணவன் எடுத்துக் கொள்ளும் பங்கு, பேராசிரியர்கள் நிகழ்த்தும் சொற்பொழிவுகளின் குறிப்புகளை எழுதிக் கொள்வது மட்டுமேயாகும். இந்த வழிமுறை, அதிகபட்ச மாக, பல்வேறு சட்டங்களின் விதிகளை மாணவர்கள் பரிச்சயம் செய்து கொள்வதேயாகும். ஆனால் வெறும் சொற்பொழிவுகள் நிகழ்த்தும் முறை மட்டுமே, நடைமுறையில் எழுகின்ற சிக்கலான

பல விவரங்களுக்கு சட்டக் கோட்பாடுகளைப் பிரயோகப் படுத்தும் அளவிற்குப் போதிய பயிற்சியை வழங்குகின்றனவா என்பது ஐயத்திற்குரியதாகும். மேலும் சொற்பொழிவுகளைக் கேட்பதைத் தொடர்ந்து, வரையறை செய்யப்பட்டுள்ள பாடப் புத்தகங்களைப் படிக்கும் தொடர் நடவடிக்கையை மேற்கொள் வதற்கு மாணவனைக் கட்டாயப்படுத்தும் எதுவும் தற்போதைய அமைப்பில் இல்லை. இதன் விளைவாக, பரீட்சைக்கு ஒரு சில நாட்கள் முன்பு வரைக்கும் மாணவன் எதுவும் படிப்பதில்லை. எனவே நிறையப் படிக்க வேண்டியிருப்பதை சரி செய்வதற்கு கடைசி நேரத்தில் குறிப்புகளைப் (Notes) படிப்பதிலும் உருப்போடு வதிலும் ஈடுபடுகிறான்.

சட்டப் போதனை அளிக்கும் சரியான வழிமுறை குறித்து வெவ்வேறான கருத்துக்கள் உள்ளன. சிலர் வழக்கு முறையைக் கையாளுகின்றனர்; இதரர்கள் பாடப்புத்தக முறையை விரும்பு கின்றனர். இதற்குத் துணையாக சொற்பொழிவுகள் நிகழ்த்து கின்றனர். இவ்வாண்டில் எது சரியான முறை என்று யாரும் அறுதி யிட்டுக் கூற முடியாது. போதனை முறைகளை பொதுவாக, தனிப்பட்ட ஆசிரியர்களின் விடுப்புரிமைக்கு விட்டுவிட வேண்டியது தான். ஆனால், தற்போதைய வழிமுறை பிழையுள்ளதாக இருக் கிறது, அதில் ஓரளவு மாற்றம் கொண்டு வருவது அவசியம் என்பதை ஆசிரியர்களின் கவனத்திற்குக் கொண்டு வருவதற்கு ஓரளவு ஆக்கபூர்வமான வழிகாட்டுதல் (திசைவழி) தேவை என்று நான் கருதுகிறேன். இதற்கு மாணவனிடமிருந்து பெருமளவு அறிவுத் துறை முயற்சி அவசியம், அது அவனுக்கு போதனை அளிப்ப தோடு, அவனுக்குப் பயிற்சியும் அளிக்கும். வெறும் சொற்பொழிவு களுக்கு பதிலாக, சொற்பொழிவுப் பணியோடு, போதனைப் பணியும் இணைந்து நடத்தப்பட வேண்டும் என்று நான் கருது கிறேன்; சொற்பொழிவு முறையோடு போதனை முறையும் பயன் படுத்தப் பட்டாலொழிய, புதிய கல்லூரியானது ஒரு புதிய மற்றும் மேம்பட்ட பிரிவு வழக்கறிஞர்களைத் தோற்றுவிக்கும் என்று அதிக நம்பிக்கை கொள்ள முடியாது.

சட்டப் படிப்பு முறையில் சீர்திருத்தம் செய்வதோடுகூட, வேறு மூன்று திசைகளிலும் சீர்திருத்தம் தேவை என்பது என் னுடைய கருத்தாகும்.

(1) சட்டப்படிப்பில் தற்போதுள்ள வெவ்வேறு பரீட்சைகளை ரத்து செய்துவிட்டு, எல்லா வழக்கறிஞர்களுக்கும் பொதுவான ஒரு தேர்வு ஏற்படுத்த வேண்டும். மேலும் அட்வோகேட் (ஏ.எஸ்) சுக்கும் அட்வொகேட் (ஓ.எஸ்) சுக்கும் பரீட்சை முறையிலுள்ள வேறுபாட்டை அகற்ற வேண்டும். வேறுபாடு நீடித்திருக்க வேண்டுமென்றால், வழக்கறிஞரின் தேர்வுக்கு அது விடப்பட வேண்டும். சன்னது (பட்டம்) பெறுவதற்கு மாணவன் மனுச் செய்யும் போது, அவர் அட்வொகேட் (ஏ.எஸ்) அல்லது அட்வொகேட் (ஓ.எஸ்), அல்லது ஒரு சொலிஸிட்டராகத் தொழில் நடத்த விரும்புகிறாரா என்று முடிவு செய்யும்படிக் கோரப்பட வேண்டும்.

(2) ஒரே ஒரு பொதுவான தேர்வாளர் குழு இருக்க வேண்டும். இந்த மறுசீரமைப்புத் திட்டத்தின் ஒரு பகுதியாக, சட்டப் படிப்பை மேற்பார்வையிடுவதற்கும், சட்டத் தேர்வு நடத்துவதற்கும் ஒரு சட்டக் கல்விக் கவுன்சில் நிறுவப்பட வேண்டும் என்று நான் கருதுகிறேன். அந்தக் குழுவில் கீழ்வருபவர்கள் அங்கம் வகிக்க வேண்டும்.

(i) பல்கலைக் கழகத்தின் பிரதிநிதிகள்.

(ii) உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகளின் பிரதிநிதிகள்

(iii) 'பார்' - வழக்கறிஞர்களின் பிரதிநிதிகள்

(iv) சட்டக் கல்லூரிகளின் பேராசிரியர்களின் பிரதிநிதிகள்

(v) பொதுமக்களின் பிரதிநிதிகள்.

பரீட்சை நடத்துவதை 'பார்' கவுன்சிலுக்குக் கைமாற்றிக் கொடுப்பதற்கு நான் தயாராயில்லை. கவுன்சில், தொழிற்சங்க மனோபாவத்தை வளர்த்துக் கொள்ளக்கூடிய அபாயம் இருக்கிறது. தேர்வு நடத்துவதில் அத்தகைய மனோபாவம் செயல்படும் சக்தியாகுமேயானால், சட்டக் கல்வி அமைப்பு முழுமைக்குமே அது பேராபத்தாகும். ஏற்கனவே தேர்வு முறையானது, சட்டத்தைப் பயில்வதில் அனைத்து ஆர்வத்தையும் கொள்வதில் போய் முடிந்துள்ளது. இந்த துரதிருஷ்டமான விளைவு மேலும் தீவிரமடையாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும்.

(3) சன்னது (சான்றிதழ்) வழங்குவதானது பரீட்சையில் தேர்ச்சி பெறுவதை மட்டும் அடிப்படையாகக் கொண்டிருக்கக் கூடாது. அது, மூன்று நிபந்தனைகளில் தேர்வு பெறுவதை சார்ந்திருக்க வேண்டும்.

(அ) சட்டத்தில் பட்டம் பெறுவது.

(ஆ) ஒரு முதுநிலை வழக்கறிஞரிடம் சேம்பரில் ஓராண்டு உதவியாளராக இருக்க வேண்டும், பின்னர் வாதம் புரியும் சட்டப்பரீட்சையிலும் மற்றும் தொழிலின் நெறிகளிலும் தேர்வு பெற வேண்டும். அதோடுகூட,

(இ) (i) அட்வொகேட் (ஓ.எஸ்) சன்னதைப் பெற விருகின்ற நபர், உயர் நீதிமன்ற விதிகளிலான (ஒரிஜினல் தரப்பு) பரீட்சையில் தேர்வு பெற வேண்டும்.

(ii) அட்வொகேட் (ஓ.எஸ்.) சன்னத்தைப் பெற விரும்பும் நபர், உயர்நீதிமன்றத்தின் அப்பீல் (மேல்முறையீடு) தரப்பு விதிகள் பற்றிய பரீட்சையில் தேர்வு பெற வேண்டும்.

(iii) சொலிஸிட்டர் சன்னது பெற விரும்பும் நபர், (அ) உயர்நீதிமன்ற விதிகளிலும் (ஒரிஜினல் மற்றும் அப்பீல் தரப்பு), மற்றும் (ஆ) கன்வேயன்சிங்கிலும் பரீட்சையில் தேர்ச்சி பெற வேண்டும்.

(ஈ) ஒரு நல்ல ஒழுக்கப் பண்புடையவர் என்ற சான்றிதழைக் கொடுக்க வேண்டும்.

கல்விமுறை எல்லோருக்கும் பொதுவாக்கப்பட்டு, எந்தப் பிரிவு வழக்கறிஞர்களுக்கும் விரிவுபடுத்தப்படும்பொழுது, வேறுபாடுகளுக்கும் முரண்பாடுகளுக்கும் எவ்வித நியாயமும் இல்லை.

ஒரு மூத்த வழக்கறிஞரின் சேம்பரில் நடைமுறைப் பயிற்சி பெறும் பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும் பரிசீலனை கீழ்வரும் அம்சங்களைக் குறிப்பிட வேண்டியது அவசியமாகும்.

(1) பயிற்சிக்கு வசதிகள் இருக்கின்றனவா?

(2) எந்த ஒரு மூத்த வழக்கறிஞரும் ஒரு சட்டம் பயிலும் மாணவனைப் பயிற்சிக்காகத் தனது சேம்பரில் அனுமதிப் பதற்குத் தயாராயில்லாத பட்சத்தில், அல்லது அனுமதிப் பதற்குத் தயாராயிருப்பவர்கள் மிக அதிகமான கட்டணம் கேட்டால் என்ன ஏற்படும்?

பயிற்சியின் பரிசோதனை நடைமுறை ரீதியானதாக இருக்க வேண்டுமெனில், இந்தப் பிரச்சினைகளுக்கெல்லாம் தீர்வு கண்டாக வேண்டும். எண் 1 அம்சத்தைப் பொறுத்த மட்டிலும் நான் நிச்சய மாகக் கூற முடியாது. ஆனால், நடைமுறைப் பயிற்சிக்கான வசதிகளை வழங்குவதற்கு பம்பாயிலும் மாவட்ட நகரங்களிலும் போதிய எண்ணிக்கையிலான மூத்த வழக்கறிஞர்களைக் காண்பது சாத்தியம் என்று நான் நினைக்கிறேன். இரண்டாவது அம்சத்தைப் பொறுத்த மட்டிலும், ஒரு மாணவனைத் தனது சேம்பரில் அனுமதிப் பதற்கு ஒரு மூத்த வழக்கறிஞரைக் கட்டாயப்படுத்தபடுத்துவதற்கு உயர் நீதிமன்றம் தயாராகியிருந்தாலொழிய, இந்த அமைப்பு தோல்வியுறும் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். தொழிலின் தந்திரங்களை உத்தேச எதிராளிக்குக் காட்டாதிருக்கும் வழக்கமும் பயிற்சிபெற்று வரும் மாணவர், பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கும் போது, வாடிக்கையாளர்களுடன் (கட்சிக்காரர்களுடன்) தொடர்பு கொண்டு, அவர்களில் சிலருடன் ஓடிவிடுவார்கள் என்ற பயமும் மூத்த வழக்கறிஞர்களின் மனதில் மிகவும் ஆழமாகப் பதிந்துள் ளதால், அவர்கள் மாணவனைத் தமது சேம்பரில் சேர்த்துக் கொள் வதற்கு - அவ்வாறு செய்யும்படி கட்டாயப்படுத்தப்பட்டாலொழிய - ஒருபோதும் சம்மதிக்கமாட்டார்கள் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். மூன்றாவது அம்சம் சம்பந்தமாக சேம்பர்களில் பயிற்சி கொடுப்பதற்கான கட்டணங்களை உயர்நீதிமன்றம் நிர்ண யிக்கவேண்டும் என்று நான் கருதுகிறேன். இல்லாவிட்டால், இந்தக் கட்டணம் மிகமிக அதிகமானதாகும் சாத்தியப்பாடு இருக்கிறது; இது வழக்கறிஞர் தொழிலைப் பணக்காரர்களின் தனி ஏகபோக மாக்கும் விளைவை ஏற்படுத்திவிடும்.[1]

● ● ●

1. அரசு சட்டக் கல்லூரி இதழ் : தொகுதி VII, இதழ் 1, ஜனவரி 1936.

# 3

# சர். எஸ். இராதாகிருஷ்ணனுக்கு டாக்டர் அம்பேத்கரின் பதில்

## உயிர்பிழைத்திடும் தத்துவம்

''இந்துக்களின் பெருமையை நிரூபிப்பதற்கு ஒரு வாதம் இருக்கிறது. காலத்தின் அதிர்ச்சிகளைத் தாங்கி அது உயிர் பிழைத்திருக்கிறது; அது இன்னும் இருந்துவருகிறது. அதேபொழுதில் பிற பண்டைய வழிபாட்டு மரபுகளும் நம்பிக்கைகளும் நீண்ட காலத்திற்கு முன்பே மாண்டுபோய்விட்டன'' என்று பேராசிரியர் இராதாகிருஷ்ணன் ஒருசமயம் கூறினார்.

இந்த வாதத்திற்கு பதில் அளிக்கும் முறையில் டாக்டர் அம்பேத்கர் இவ்வாறு கூறினார்.

''இந்தக் கூற்று ஒரு தீங்கான வாதத்திற்கு - உயிர் பிழைத்திருப்பதானது, பிழைத்திருப்பதற்குத் தகுதியுடையது என்று நிரூபணமாகிறது என்பதன் அடிப்படையாகிவிடுமோ என்று நான் அஞ்சுகிறேன். ஒரு சமூகம் வாழ்ந்துகொண்டிருக்கிறதா அல்லது இறந்துவிட்டதா என்பதல்ல பிரச்சினை என்று எனக்குத் தோன்றுகிறது. அது எந்த அடிப்படையில் (கோணத்தில்) வாழ்கிறது என்பதே பிரச்சினையாகும். உயிர் பிழைத்திருப்பதற்கான வெவ்வேறு வழிகள் உள்ளன. ஆனால் அவை எல்லாமே சம அளவில் கௌரவமானவையல்ல. ஒரு தனிநபருக்கும், அதுபோன்றே ஒரு சமுதாயத்திற்கும், வெறுமனே வாழ்வதற்கும் தகுதியான முறையில் வாழ்வதற்கும் இடையில் ஓர் இடைவெளி இருக்கிறது. ஒரு போரில் ஈடுபட்டு, புகழுடன் வாழ்வது ஒரு வழி. பின்வாங்கிச் சென்று சரணடைந்து, ஓர் அடிமையைப் போல் வாழ்வதும் உயிர் பிழைத்திருப்பதற்கான ஒரு வழியாகும். தானும் தனது மக்களும் உயிர்-பிழைத்திருக்கிறோம் என்ற உண்மையில் ஒரு இந்து பெருமை கொள்வது பயனற்றதாகும். அந்த உயிர் பிழைப்பின் தன்மை (தரம்) என்ன என்பதையே டாக்டர் ராதாகிருஷ்ணன் சிந்தித்துப் பார்க்க

வேண்டும். அவர் அதைச் செய்தால், உயிர் பிழைத்திருப்பதை மட்டுமே கொண்டு அவர் பெருமை கொள்ளமாட்டார் என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். இந்துக்கள் தொடர்ந்து தோல்வி வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்; அவர்களுக்கு நிரந்தர மாக உயிர் பிழைத்திருப்பதாகத் தோன்றுவது, நிரந்தரமாக வாழ்ந்து கொண்டிருப்பதல்ல. அது உயிர் பிழைத்திருக்கும் ஒரு வழியே யாகும். உண்மையை ஒத்துக் கொள்வதற்கு பயப்படாத ஒவ்வொரு நியாய புத்தியுடைய இந்துவும் இது குறித்து அவமானமடைவார்''[1]

● ● ●

1. 'விளக்கு' (லேம்ப்) என்ற 1936 ஜூன் 25ம் தேதிய இதழில் வெளியானது. 'கைர்மோடு', தொகுதி 6, பக்கம் 266.

# 4

# பிரபு இவ்வாறு கூறினார்

## பிரிவி கவுன்சிலின் பிரபுக்களின் முன்னால் வாதிக்கப்பட்ட, மற்றும் முடிவு செய்யப்பட்ட வழக்குகள் (1829-31) பற்றிய அறிக்கைகள்

**- ஜெரோம் விம். நாப், பார்-அட்-லா, தொகுதி 1.**

**(டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் வழங்கிய ஒரு குறிப்பு)**

உச்ச நீதிமன்றத்தில் ஒரு வழக்கு சம்பந்தமான முடிவு (தீர்ப்பு) 1829, மே 14ல் வழங்கப்பட்டது. அது கீழே மறுபிரசுரம் செய்யப் படுகிறது. ஆயினும் இது 107 ஆண்டுகள் பழமையானதால், தொல் பொருள் ஆராய்ச்சிக்குரியது மட்டுமே என்று கருதுவது தவறாகும். வரலாற்றுத்துறை மாணவர்களுக்கு ஆர்வமூட்டுவதாக இருக்கும் என்பது மட்டுமன்றி, சட்டத்துறை மாணவர்களுக்கும் பொது மக்க ளுக்கும்கூட ஆர்வமூட்டுவதாக இருக்கும். சிப்பாய்க் கலகத்திற்கு முன்னதாக இரட்டை ஆட்சி நடைபெற்ற காலகட்டத்தில் கிழக் கிந்தியக் கம்பெனி அதிகாரிகளுக்கும், (பிரிட்டிஷ்) அரசு அதிகாரி களுக்கும் இடையில் பொறாமையும், பகைமையும் இருந்து வந்ததை வரலாற்றுத் துறை மாணவர்கள் அறிவார்கள். கிழக்கிந்தியக் கம்பெனி நியமித்த ஓர் ஆளுநர், மன்னரால் நியமிக்கப்பட்ட உச்ச நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியுடன் எவ்வாறு ஒரு மோதலை உருவாக்கிக் கொண்டார் என்பதை சர்.எட்வர்டு வெஸ்டின் நினைவுக் குறிப்புகளைப் படித்தவர் நினைவு கூரமுடியும். வரலாற்று மாணவ ருக்கு இந்த வழக்கு ஆர்வமூட்டுவதாகும்; ஏனெனில், இது கம்பெனி யின் அதிகாரிகளுக்கும், மன்னரின் அதிகாரிகளுக்கும் இடையில் எந்தப் பொறாமையும் பகைமையும் அந்தப் பழங்காலத்தில் எந்த அளவுக்குச் சென்றது என்பதை எடுத்துக்காட்டுகிறது. சட்டத்துறை மாணவருக்கு-இந்த வழக்கு பழமையானதாக இருந்தபோதிலும் - மகத்தான மற்றும் தற்கால முக்கியத்துவம் உடையதாகும். இந்த வழக்கில் எழுப்பப்பட்ட பிரச்சினை, பம்பாயில் நிறுவப்பட்ட உச்சநீதிமன்றம், அதனுடைய ஒரிஜினல் ஸ்தல அதிகார வரம்பினுள்

வசிக்காத ஒரு நபருக்கு எதிராக ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணையை வழங்குவதற்கு உரிமை உண்டா என்பதேயாகும். இது பற்றிய முடிவு உச்சநீதிமன்றத்தின் அதிகாரங்கள் தொடர்புடையதாகும் என்பது அது இப்பொழுது இல்லை என்றபோதிலும் தற்கால சட்ட மாணவருக்கு அந்த வழக்கின் முக்கியத்துவத்தைக் குறைத்து விடுவதில்லை. ஏனெனில், உச்சநீதிமன்றம் தனது ஒரிஜினல் ஸ்தல அதிகார எல்லைக்கு வெளியில் ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணை வெளியிடுவதற்கான அதிகாரம் கொண்டுள்ளதா என்ற கேள்விக்கு முன்பு உச்ச நீதிமன்றத்தைச் சேர்ந்திருந்த அதிகாரங்கள் சம்பந்தமாக ஆய்வு செய்வதன் மூலமாக மட்டுமே பதிலளிக்க முடியும். இது இவ்வாறிருப்பதற்குக் காரணமென்னவெனில், லெட்டர்ஸ் பேடன்ட்டின் படி, ஒரு காலத்தில் உச்சநீதிமன்றத்திற்கு இருந்துவந்த அதிகாரங்களை மட்டுமே உயர்நீதிமன்றம் கொண்டிருக்கிறது. உயர்நீதிமன்றத்தின் அதிகாரங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு, உச்சநீதிமன்றத்தின் அதிகாரங்களைப் பற்றி ஒருவர் தெரிந்து கொள்ள வேண்டும். உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி சர். ஜான் கிராண்ட், பிரிவி கவுன்சிலுக்கு மனுச்செய்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு உள்ளானார். அது, உச்ச நீதிமன்றம் முடிவு செய்வதற்கான பருப்பொருளாயிற்று, ஏனெனில் பம்பாய் அரசு, அவருடைய ரிட் ஆணைகளை அமல்படுத்துவதற்கு மறுத்துவிட்டது. நீதித்துறையின் ஆணைகளை நிறைவேற்றுவதற்கு நிர்வாகம் கடமைப்பட்டுள்ளது என்று சட்டத்தின் மூலம் வகை செய்ய வேண்டுமா என்பது நேரடியாக தாவாவிலுள்ள ஒரு பிரசச்சினையாக இல்லாவிட்டாலும் பொதுமக்களின் கண்ணோட்டத்தில் இதைக் காட்டிலும் கூடுதல் முக்கியத்துவம் வாய்ந்த வேறு பிரச்சினை இருக்க முடியாது. எந்த அரசியல் சாசனத்திலும், சட்டப்பேரவையுடனும், அரசு நிர்வாகத்துடனும் ஒப்பிடும்போது நீதித்துறைதான் மிகவும் பலவீனமான அங்கமாகும். அது, தான் கொண்டுள்ள அதிகாரங்களுக்கு சட்டப்பேரவையின் மீதும், தனது ஆணைகள் நிறைவேற்றப்படுவதற்கு அரசு நிர்வாகத்தின் மீதும் சார்ந்துள்ளது. நிர்வாகம், பொதுவாக நீதித்துறையின் ஆணைகளை மதித்து, ஒரு 'ரிட்' ஆணையை வெளியிடுவதற்கு நீதித்துறை அதிகாரம் பெற்றிருக்கவில்லை என்பது மெய்யே. எனவே, நிர்வாகம், அதை நிறைவேற்றுவதற்கு மறுத்தது நியாயமானதேயாகும். ஆனால் நிர்வாகம், வன்மத்தின் காரணமாகவும், அடங்காத் தன்மையின் காரணமாகவும், நீதித்துறையின் 'ரிட்' ஆணையை நிறைவேற்று

வதற்கு மறுக்கும் ஒரு சந்தர்ப்பம் நேரலாம். அவ்வாறு ஏற்பட்டால் நீதி பாதிக்கப்படலாம், அப்பொழுது ஒவ்வொரு பிரஜையின் உயிருக்கும், (வாழ்க்கைக்கும்) சுதந்திரத்திற்கும் உடைமைக்கும் ஆபத்து ஏற்படுவது சம்பந்தப்பட்ட ஒரு கடுமையான பொதுவாழ்வுப் பிரச்சினை தோன்றக் கூடும். இந்தக் கருத்துக்களெல்லாம், சமஷ்டி நீதிமன்றத்தின் அல்லது உயர் நீதிமன்றத்தின் 'ரிட்' ஆணைகளை நிறைவேற்றுவதற்கு நிர்வாகத்திற்கு உள்ள கடப்பாடு சம்பந்தமாக 1935ம் வருடத்திய புதிய இந்திய அரசு சட்டத்திலுள்ள விதிகளுக்கும், அமெரிக்கா மற்றும் சமீபகாலம் வரையில் இருந்துவந்த ஜெர்மன் குடியரசின் அரசியல் சாசனத்தில் உள்ள அவற்றையொத்த விதிகளுக்கும் இடையிலுள்ள வேறுபாட்டின் பின்னணியில் கூறப்பட்டுள்ளன. சமீப காலம் வரையில் இருந்துவந்த ஜெர்மன் குடியரசின் அரசியல் சாசனம் கெய்சரின் வீழ்ச்சிக்கும், ஹிட்லர் எழுச்சியுறுவதற்கும் இடையில் ஓர் இடைக்கால அரசாகச் செயல்பட்டது. இந்த விஷயத்தைத் தொடர்ந்து ஆராய்வது நிச்சயமாகப் பயனுள்ளதாக இருக்கும். ஆர்வம் மிக்கவர்கள் இயற்கையாகவே இதைச் செய்வார்கள்.

**(மேலே குறிப்பிடப்பட்ட தீர்ப்பைக் கீழே பார்க்கவும்)**

## பம்பாயிலிருந்து அனுப்பப்பட்ட விண்ணப்பம்

*உச்சநீதிமன்றத்தின் நீதிபதிகள் முன்னால் (மே 14, 1829)*

*ஓர் ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணையை வழங்குவதற்கு பம்பாய் உச்சநீதிமன்றத்திற்கு அதிகாரமில்லை. ஆனால், ஒரு பொது அதிகாரவரம்புள்ள, ஸ்தல எல்லைகளுக்குள் வசிக்கும் நபருக்கு வழங்கப்பட வேண்டியிருந்தால் அதற்கு மட்டும் 'ரிட்' ஆணை வழங்குவதற்கு உரிமையுண்டு. அதே போல் அந்த எல்லைகளுக்கு அப்பால் உள்ள ஒரு நபருக்கு - அவர் தனிப்பட்ட முறையில் அதனுடைய நீதிமன்ற அதிகார வரம்புக்கு உட்பட்டுள்ள நிலைமையில், அவருக்கும் ஹேபியஸ் கார்பஸ் 'ரிட்' ஆணை வழங்கப்பட முடியும் (1, க்நாப்,58)*

*ஒரு ஜெயிலருக்கு அல்லது சுதேசி நீதிமன்றத்தின் அதிகாரிக்கு ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணை வழங்குவதற்கு உச்ச நீதிமன்றத்திற்கு அதிகாரமில்லை. அத்தகைய அதிகாரிக்கு, ஒரு சுதேசி நீதிமன்றத்தின் உத்திரவின்பேரில் சிறையில் அடைக்கப்பட்டுள்ள நபர்களை விடுவிப்பதற்கு அதிகார மில்லை (1க்னாப், 58)*

*ஹேபியஸ்கார்ப்பஸ் 'ரிட்' ஆணைக்கான பதிலில் குறிப்பாக வரையறுத்துக் கூறப்படாத நிலையில், ஒரு சுதேசி நீதி மன்றத்தின் அதிகார வரம்பை உச்சநீதிமன்றம் கண்டறியக் கடமைப்பட்டுள்ளது. (1க்னாப், 59)*

பம்பாய் உச்சநீதிமன்றத்தின் உயிர் வாழும் ஒரே நீதிபதி சர். ஜான் பீட்டர் கிரான்ட்டின் மனுவின் பேரில் இந்த வழக்கு தோன்றியது. டிசம்பர் 8ன்* லெட்டர்ஸ் பேடண்டின் படி, பம்பாயின் நிர்வாக எல்லைக்குள் ஓர் ஆவண நீதிமன்றம் இருக்க வேண்டு மென்று மேன்மை தங்கிய சக்ரவர்த்தி மகிழ்ச்சியுடன் உத்தரவிடு கிறார், வழிகாட்டுகிறார், ஆணையிடுகிறார், மற்றும் நியமனம் செய்கிறார். அதில் ஒரு பிரதான நீதிபதி இருப்பார், அவர் பம்பாய் உச்சநீதிமன்றத்தின் பிரதம நீதிபதி என்று அழைக்கப்படுவார்; மேலும் இரு நீதிபதிகள் இருப்பார்கள்; அவர்கள் பம்பாய் உச்ச நீதிமன்றத்தின் கீழ்நிலை நீதிபதிகள் என்று அழைக்கப்படுவார்கள்.

மேலே கூறப்பட்ட பிரதம நீதிபதியும், துணை நீதிபதிகளும் தனித்தனியாகவும், முறைப்படியும் நீதிபதிகளாகவும் (ஜஸ்டிஸ்கள்) அமைதியைக் காப்பவர்களாகவும், நியமிக்கப்படுகின்றனர். அவர்கள் பம்பாய் நகரம் மற்றும் தீவிலும், அவற்றின் எல்லைகளுக்கு உட் பட்டும் அதற்கு உட்பட்ட தொழிற்சாலைகளிலும் பிரதேசங்களிலும் அதிகாரம் செலுத்துவார்கள். அது பம்பாய் அரசின் மீது சார்ந்திருக் கும் மேன்மை தங்கிய மன்னரின் நீதிமன்றத்தின் நீதிபதிகளின்

---

★ *1823 சாஸனத்தின் வாசகம் மோர்லியின் டிக். தொகுதி ஐஐ 638ம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. பம்பாய் உயர்நீதிமன்றத்தின் அமைப்பு, மற்றும் அதிகாரங்கள் 1865, டிசம்பர் 28ம் தேதிய லெட்டர்ஸ் பேடண்டில் வரை யறுத்துக் கூறப்பட்டுள்ளது (அரசு ஆர்.அண்ட்.ஓ.ரெவ், தொகுதி IV பக்கம் 108). 1861ம் வருட இந்திய உயர்நீதிமன்றங்களின் சட்டத்தின்படி இயற்றப் பட்டது. (21, 25 வியத்.104)*

எல்லை வரம்பையும் அதிகாரத்தையும் போன்று கொண்டிருப் பார்கள். இங்கிலாந்து என்றழைக்கப்படும் கிரேட் பிரிட்டனின் அந்தப் பகுதிக்குள் - சூழ்நிலைமைகள் அனுமதிக்கின்ற வரையில் - சட்டப்பூர்வமாக அந்த அதிகாரத்தை செயல்படுத்தக்கூடும்.

பம்பாயிலுள்ள மேற்படி உச்ச நீதிமன்றம், சந்தர்ப்பம் தேவைப்படுத்துகின்றபடி, மேன்மைதங்கிய மன்னரின் சின்னங் களின் ஒரு பதிவைக் கொண்ட முத்திரையை வைத்துக் கொண் டிருக்க வேண்டும். பயன்படுத்த வேண்டும். மற்றும் பம்பாய் உச்ச நீதிமன்றம் அனைத்து அதிகாரங்களையும், கட்டமையாணை களையும் கோட்பாடுகளையும் விதிகளையும் உபயோகப்படுத்த வேண்டும். மேன்மை தங்கிய மன்னரின் பெயரால் நடத்தப்பட வேண்டும், மேற்படி உச்ச நீதிமன்றத்தின் முத்திரையால் அவை முத்திரையிடப்பட வேண்டும்.

மன்னர், மேற்படி லெட்டர்ஸ் பேடண்டு மூலம், அப்போதைய பம்பாய் பதிவாளரான (ரிக்கார்டர்) சர். எட்வர்டு வெஸ்ட் என்பவரை முதலாவது பிரதம நீதிபதியாக நியமித்தார்; பிரின்ஸ் ஆப் வேல்ஸ் தீவின் அப்போதைய ரிக்கார்டர் சர்.ரால்ஃப் ரைஸையும், சர். சார்லஸ் ஹர்கோர்ட் சேம்பர்ஸையும் பம்பாய் உச்சநீதிமன்றத் தின் முதலாவது துணை நீதிபதிகளாக நியமித்தார்.

மேலே கூறிய அரசாங்கத்தின் அதிகார வரம்புக்குட்பட்ட அல்லது அதனைச் சார்ந்துள்ள பிரதேசங்களில் எழும் வழக்குகளை விசாரிக்கும் மற்றும் முடிவு செய்யும் குறிப்பிட்ட அதிகாரத்தை உச்சநீதிமன்றத்துக்கு வழங்க வேண்டுமென்று மன்னர் மேலும் உத்தரவிட்டார்; பாதுகாப்பு உரிமை வழங்கும் ஆவணங்களில் கூறப்பட்டுள்ள குறிப்பிட்ட சில விதிமுறைகளுக்கும், விதிவிலக்கு களுக்கும் பிரகடனங்களுக்கும் உட்பட்டு இதனைச் செய்ய வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார்; இத்தகைய சிவில் வழக்குகளையும் நடவடிக்கைகளையும் மேற்கொள்வதற்கும், அவற்றை விசாரித்து முடிவு செய்வதற்கும், அந்த வழக்குகளில் அறிவிக்கப்படும் தீர்ப்பு களை நிறைவேற்ற உத்தர விடுவதற்குமான குறிப்பிட்ட சட்ட அதிகாரம் உச்சநீதிமன்றத்துக்கு வழங்கப்பட வேண்டும் என்றும் அவர் கூறினார்.

அந்த உச்சநீதிமன்றம் நேர்மையின் பிறப்பிடமாக இருக்க வேண்டும், பாதுகாப்பு உரிமை பெற்றவர்கள் மீது தயவு தாட்சண்ய மின்றி அது நடவடிக்கை எடுக்க வேண்டும், நகரத்திலும் பம்பாய் தீவிலும் அது தூய நீதிவழங்கும் அமைப்பாக இருக்க வேண்டும். மேலும் இந்த உச்சநீதிமன்றத்தின் அதிகார எல்லைக்குள் தொழிற் சாலைகள் முதலியனவும் அடங்கும்.

மேற்படி சர்.ஆர்.ரைஸ், 1827 ஆகஸ்ட் 30ல் பம்பாய் உச்ச நீதிமன்றத்தின் மூத்த துணை நீதிபதி பதவியை ராஜினாமா செய்தார். அதைத் தொடர்ந்து, சர்.சி.எச்.சேம்பர்ஸ், மூத்த துணை நீதிபதியானார்; மேற்படி சர்.ஆர்.ரைஸ், தனது பதவியை ராஜினாமா செய்ததைத் தொடர்ந்து, 1827 ஆகஸ்டு 30ம் தேதிய லெட்டர்ஸ் பேடண்டின்படி, மனுதாரர், மேற்படி உச்சநீதிமன்றத்தின் துணை நீதிபதிகளில் ஒருவராக நியமிக்கப்பட்டார்; அதன்படி அவர், 1828 பிப்ரவரி 9ம் நாளில் பம்பாயில் அந்தப் பதவியை ஏற்றுக் கொண்டார்.

மேற்படி பிரதம நீதிபதி சர்.எட்வர்டு வெஸ்ட், 1828 ஆகஸ்ட் 18ல் காலமானார்; அந்த ஆண்டு, அக்டோபர் 3ம் நாளன்று ஒரு கடிதம் அனுப்பப்பட்டது.

> ''உச்ச நீதிமன்றத்தின் துணை நீதிபதியாகிய மனுதாரர் சர். சி.எச்.சேம்பர்ஸுக்கு 1828 அக்டோபர் 3ம் நாள் (பம்பாய் கோட்டை) அனுப்பபடும் இக்கடிதத்தில் கீழ்வருபவர்கள் கையெழுத்திட்டுள்ளனர். ஜான்மால்காம், ஆளுநர், டி.பிராட் போர்ட், லெப்டினென்ட் ஜெனரல், படைத் தளபதி, ஜே.ஜே. ஸ்பேரோ, ஜான் ரோமர், கவுன்சிலின் இரண்டாவது, மற்றும் மூன்றாவது உறுப்பினர்கள்''

அந்தக் கடிதத்தின் வாசகம் பின்வருமாறு;

''பெருமதிப்புக்குரிய கனவான்களே,

உங்களுக்கு இந்தக் கடிதத்தை எழுதுவதில் மாமூலான வடிவங்களை நாங்கள் மீறிச் செயல்பட்டுள்ளோம் என்பதை நாங்கள் நன்கு அறிவோம்; ஆனால் நாங்கள் இருந்துவரும் சூழ்நிலை,

வழக்கமான முறையிலிருந்து இவ்வாறு விலகிச் சென்றதை நியாயப்படுத்தும் என்று நாங்கள் நம்புகிறோம். உங்களுடைய தனிப்பட்ட மற்றும் பொதுப் பண்புகள் பற்றிய எங்களுடைய ஞானம் எந்த உணர்வில் அது எழுதப்படுகிறதோ அதே உணர்வில் வர வேற்கப்படும் என்று நாங்கள் நம்புவதற்கு இட்டுச் செல்கிறது; பிரிட்டிஷ் நீதிபதிகள் என்ற முறையில் உங்களுடைய உயர்வான மற்றும் புனிதமான கடமையின் ஒவ்வொரு பாகத்தையும் நிறை வேற்றுவதற்கு உங்களுடைய கறாரான கடப்பாடுகள் இருந்த போதிலும், இந்த அசாதாரணமான நிலைமையில் நீங்கள் தலைமை தாங்குன்ற நீதிமன்றத்தின் விதிகளைப் போன்றே, குறிக்கோள் களையும், பரிசீலனை செய்வதற்கு சுதந்திரமிருக்கிறது என்று கருது வீர்கள்; மற்றும், இந்த ராஜதானியை நிர்வாகம் செய்ய வேண்டிய கடமைப்பொறுப்புடைய அரசுக்கு உதவியும் ஆதரவும் அளிக்க வேண்டிய நிலையில், சட்டப்பேரவையின் நோக்கத்தை கவனத்தில் கொண்டு பார்க்கும்போது, நீங்கள் ஒரு குறுகிய காலக்கட்டத்திற்கு, எங்களுடைய விண்ணப்பங்களின்பேரில், நாங்கள், எங்களுடைய பொறுப்பிலுள்ள நலன்களுக்கு அத்தியாவசியமானதென்று, நாங்கள் மேற்கொள்ள வேண்டிய நிர்பந்தத்திற்குள்ளாகும் நட வடிக்கைகளுக்கு எதிராக, எங்களுடைய அதிகாரத்திற்கும் உங்க ளுடைய அதிகாரத்திற்கும் இடையில் வெளிப்படையான மோதலை ஏற்படுத்தும் விளைவுள்ள எந்த நடவடிக்கைகளையும் (அவை எவ்வளவு சட்டப் பூர்வமானவை என்று நீங்கள் கருதியபோதிலும்) மேற்கொள்ளாதிருக்கும்படி கேட்டுக் கொள்கிறோம். நீங்கள் அவ்வாறு செய்வதானது, இந்த நாட்டின் சுதேசி மக்களிடையில் நம் இரு தரப்பினரும் மிகவும் அத்தியாவசியமாகப் பராமரிக்க வேண்டிய மதிப்பைக் குறைக்கும் என்பது மட்டுமன்றி, நமது உள்நாட்டு ஆட்சியில் பிளவு ஏற்பட்டால், நமது சுதேசிக் குடிமக்களின் மனதில் 'சமாதானம்', கபீட்சம், மற்றும் இந்திய சாம்ராஜ்யத்தின் நிலையான தன்மைக்கு அத்தியாவசியமான நல்லெண்ணங்களைக் கடுமையாக பலவீனப்படுத்தவும் செய்யும். இந்த முடிவு பலவகைப் பட்ட சூழ்நிலைமைகளுளைக் குறிப்பிடுகிறது. அதை நாங்கள் இப்பொழுது விளக்க வேண்டியதில்லை. அத்தகைய விளக்கத்தை கவனிக்கும் நிலையில் நீங்கள் இல்லை என்பது போலவே. ஆனால் நாங்கள் அறுதியிட்டுக் கூறிய உண்மையில் நாங்கள் நம்பிக்கை கொண்டுள்ளோம் என்பதைக் கூறுவது அவசியம் என்று நாங்கள் கருதுகிறோம். இதை ஓரளவு நீங்கள் மதிப்பீர்கள் என்று நாங்கள் எதிர்

பார்க்கிறோம். ஏனெனில் இது, அரசில் அந்த வலுவை (பலத்தை) பாதுகாப்பதுடன் சம்பந்தப்பட்டதாகும். அது, நமது அனைத்துப் பிராந்தியங்களிலும், குறிப்பாக நாம் அண்மையில் இணைத்துக் கொண்டவற்றில் - அந்தப் பொது அமைதியை பராமரிப்பதற்கு நமக்குள்ள பிரதான, ஒரே அதிகாரமாகும். அதைத் தொடர்ந்து நீடிப்பதன் மீதுதான் நல்லாட்சியின் சாதனமும், எந்த வடிவத்திலும் சட்டத்தை நிர்வகிப்பதும் எப்போதும் சார்ந்திருக்க வேண்டும்.

''2. மாரோ ரகுநாத் (1 க்னாப், 8) மற்றும் பாப்பு குன்னஸ் (1 கினாப்,11) வழக்குகளில், உச்சநீதிமன்றத்தில் அண்மையில் நடைபெற்ற விசாரணைகளின் விளைவாக, மாரோ ரகுநாத் வழக்கில் மேற்கொண்டு எந்த சட்ட நடவடிக்கைகளும் அனுமதிக்கப்படக் கூடாது என்று வழிகாட்ட வேண்டுமென்று கூறுவதற்கு நாங்கள் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளோம். இதற்கான காரணங்களை எங்களுடைய மேலதிகாரிகளிடம் நாங்கள் பூரணமாகத் தெரிவித்துள்ளோம்; மற்றும், மாகாண நீதிமன்றங்களின் எந்த அதிகாரிகளுக்கும் மற்றும் பம்பாய்த் தீவில் குடியிருக்காத நமது சுதேசிப் பிரஜைகள் யாருக்காவது அண்மையில் வழங்கப்பட்டதைப் போன்ற தன்மையுடைய எந்த ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' மனுக்களுக்கும் பதில் அனுப்பப்படக்கூடாது.

''3. இந்த நடவடிக்கைகளினால் எங்களுக்கு ஏற்படும் ஆழ்ந்த பொறுப்பு குறித்து நாங்கள் நன்குணர்ந்துள்ளோம். ஆனால் எங்களுடைய நிலைமையின் அவசியத்தின் விளைவாக இதனுடைய நியாயத் தன்மையைக் காணவேண்டும். நாம் எந்த ஆதாரங்களின் மீது செயல்படுகிறோமோ, அவை சிவில் அரசு மற்றும் அரசாங்கக் கொள்கை ஆகியவை சம்பந்தமான குறிப்புகளின் அடிப்படையில் தான்; ஆனால் நாம் யாருக்குக் கீழ்ப்படிபவர்களாக இருக்கிறோமோ அந்த உயர் அதிகாரிகளிடமிருந்து உத்தரவுகள் வருகின்ற வரையில் நம்முடைய தீர்மானத்தை மாற்றப்பட்ட முடியாததாகையால், அவற்றைப் பற்றி உங்களுக்குக் கூறுகிறோம்; எனவே, நாங்கள் முன்பு கூறிய நோக்கங்கள், குறிப்பிடப்பட்ட வழக்குகளில், உங்களுடைய கடமை என்று நீங்கள் கருதும் பட்சத்தில், எங்களுடைய நடத்தைக்கு எதிரான அந்தக் கண்டனங்கள் மற்றும் மேல் முறையீடுகளோடு உங்களைக் கட்டுப்படுத்திக்கொள்வீர்கள் என்று நம்புகிறோம். ஏனெனில், வேறு எவ்வித நடவடிக்கையும் -

ஏற்கனவே கூறப்பட்ட காரணங்களினால், பொது நலனுக்கு ஆழமான தீங்கு விளைவிக்கும்; மேலும், அரசினால் எடுக்கப்பட்ட முடிவு மற்றும் உறுதிப்பாட்டின்படி, நீங்கள் உரிமை கொண்டாடிய நீட்டிக்கப்பட்ட அதிகார வரம்புக்கு உடனடியாகவோ அல்லது வருங்காலத்தில் நிறுவப்படுவதற்கோ சாதகமாக எந்தப் பயனையும் அளிக்காது. இந்த விஷயம் சம்பந்தமாக நாங்கள் மேற்கொண்ட முழுமையான மற்றும் அவசரக் குறிப்புக்கு பதில் கிடைப்பதற்கு முன்னால் ஒரு மிகவும் குறுகிய காலம் கடந்து செல்லும். நாங்கள் செயல்பட வேண்டியுள்ள கடப்பாடுகளும் கூட, நீங்கள் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டிக் கட்டாயப் படுத்துவன அல்ல. இவற்றை எதிர்ப்பதென்று முடிவு செய்திருப் பதாக அரசு வெளிப்படையாகக் கூறியுள்ளது.

''நாங்கள் இதை கௌரவத்துடன் சமர்ப்பிக்கிறோம், இத்தியாதி''.

பின்னர் மேற்படி மனுவானது மேலும், அக்டோபர் 6ம் நாள் திங்களன்று, தனது நீதித்துறை நடவடிக்கைக்காக உச்சநீதிமன்றம் கூடியபோது, சர்.சி.எச்.சேம்பர்ஸ், அரசாங்க கிளார்க்கை, இந்தக் கடிதத்தை நீதிமன்றத்திற்கு வாசித்துக் காட்டும்படிக் கேட்டுக் கொண்டதாகவும் அதன் பின்னர், மனுதாரர், இந்தக் கடிதத்தின் வடிவம் மற்றும் சாராம்சம் சம்பந்தமாக சர்.சி.எச்.சேம்பர்ஸின் கருத்துடன் ஒத்துப்போனார் என்றும் அதன் பின்னர், நீதிமன்றம், மேற்படி கடிதம் பெறப்பட்டதென்றும், அது சம்பந்தமாக நீதிபதிகள் கவனம் செலுத்த முடியவில்லையென்றும் அரசு குமாஸ்தா, ராஜதானியின் அரசுத் தலைமைச் செயலாளருக்குக் கடிதம் மூலம் தெரிவிக்க வேண்டுமென்றும் ஆணையிடப்பட்டது என்று தெரி வித்தது.

மேற்படி சர்.சி.எச்.சேம்பர்ஸூம், மனுதாரரும், மன்னர் பிரானின் முன்னால் இந்தத் தாழ்மையான மனுவை சமர்ப்பித்த தற்கான சூழ்நிலைமைகள் அதிலேயே விளக்கப்பட்டுள்ளன. ராஜதானியின் சிவில் மற்றும் ராணுவ -முழு அதிகாரங்களைக் கொண்டுள்ளவர்கள் உச்ச நீதிமன்றத்தை அணுகுவதற்கு ஒரு மிகவும் அரசியல்சாசனத்திற்குப் புறம்பான முறையிலும் மற்றும்

குற்றகரமான முறையிலும் முயற்சி செய்வதற்கு எதிராக மன்னர் பிரானின் பாதுகாப்பை மிகவும் கடமை பூர்வமாகவும், மிகவும் கீழ்ப்படிதலுடனும் அவர்கள் கோரியதாகவும் அந்த மனு குறிப்பிட்டுள்ளது அவர்கள் தாழ்மையான விண்ணப்பம் மூலமாக தாங்களாகவோ, அல்லது தமது வழக்கறிஞர்கள் மூலமாக, பகிரங்க நீதிமன்றத்தில் அணுகவில்லை. மன்னர் பிரானின் நீதிபதிகளை சட்டப்படி, விவேகமான நோக்கங்களுக்காக இவ்வாறு மட்டுமே அணுக முடியும். ஆனால் அவர்கள், மறைமுகமாக மற்றும் தனிப்பட்ட கடிதம் மூலமாக இதைச் செய்கிறார்கள். இது, காலகாலமான விவேகத்தின்படி, கறாராகத் தடை செய்யப்பட்ட வடிவங்களில் செய்யப்படுகிறது. கடவுளுக்கும், மன்னருக்கும், தங்களுக்கே கூடவும் மிகவும் புனிதமான கடப்பாடுகள் ஒருபுறமிருக்க, அதற்குப் புறம்பாக, சட்டத்தின்படி நீதி வழங்குவதற்கு மறுக்கும்படி அவர்கள் தகாத முறையில் நீதிபதிளைத் தூண்டுகிறார்கள். அவர்கள் அவ்வப்பொழுது அரசின் கொள்கை என்பதன் பேரால் இவ்வாறு செய்யச் செய்கிறார்கள் என்றும் மனுவில் அவர்கள் தெரிவித்துள்ளனர்.

மேற்கண்டவாறு ஒரு மனு (விண்ணப்பம்) இங்கிலாந்துக்கு அனுப்பப்படுவதற்குத் தயாரிக்கப்பட்டு வரும்பொழுது, அப்பொழுது உச்ச நீதிமன்றத்தின் தற்காலிகத் தலைமை நீதிபதியாகச் செயல்பட்டுவந்த சர்.சார்லஸ் ஹர்கோர்ட் சேம்பர்ஸ், 1828 அக்டோபர் 13ல் திடீரென்று மரணமடைந்தார்.

பின்னர், அந்த மனு, இந்த விசாரணைகளின்போது மனுதாரர் மீதும், அவருடைய சகாவின் மீதும், ஆளுநர் மற்றும் கவுன்சிலின் நடத்தையைத் தாக்குவதற்கு செல்வாக்குச் செலுத்திய நோக்கங்களை விலாவாரியாக விளக்கம் செய்தது. அவர்கள் கோரியபடி ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணை வெளியிடுவதற்கு உச்சநீதி மன்றத்திற்கு அதிகாரம் இருக்கிறது என்று காட்டுவதற்கு முனைந்துள்ளது. எனவே, மேன்மை தங்கிய மன்னர்பிரான், பம்பாயிலுள்ள மேன்மைதங்கிய மன்னர் பிரானின் உச்ச நீதிமன்றத்தின் கண்ணியத்தையும், சட்டப்பூர்வமான அதிகாரத்தையும் உரிய முறையில் நிலை நிறுத்துவதற்கும் பாதுகாப்பதற்கும் தேவையான ஆணைகளை மனமுவந்து வெளியிடுமாறு மேன்மைதங்கிய மன்னர் பிரானை வணங்கிக் கேட்டுக் கொள்வதாகவும் அந்த மனு கேட்டுக் கொண்டுள்ளது.

மேற்படி மனுவில் குறிப்பிட்டுள்ள மாரோ ரகுநாத் (1 கனாப் 5) அவர்களின் வழக்கை சுருக்கமாக இங்கே குறிப்பிடப்படுகிறது. 1828 ஆகஸ்டு 25ம் நாளன்று, பாண்டுரங் ராம்சந்தர் என்பவருக்கு அவருடைய பாதுகாப்பில் உள்ள மரோ ரகுநாத் கைக் கொண்டுவந்து ஒப்புவிக்கும்படி, திரு.ஜஸ்டிஸ் கிராண்ட் நீதிபதியின் முன்னால், அவரது சேம்பரில், மனுதாரரால் தினகர் கோபால் தியூ என்பவரின் பிரமாணப் பத்திரத்தின் பேரில் ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' மனு தாக்கல் செய்யப்பட்டது. அந்த மனுவில், மரோ ரகுநாத் சுமார் ஓராண்டாக, அவருடைய விருப்பதற்திற்கு மாறாக பாண்டுரங் ராம்சந்தரால் சிறை வைக்கப்பட்டிருப்பதாகவும், இதனால் அவருக்கு மிகுந்த துன்பமும் கொடுமையும் ஏற்பட்டிருப்பதாகவும் கூறப் பட்டிருந்தது, அட்வொகேட் - ஜெனரல் இந்த மனுவை எதிர்த்தார். அதற்கு அவர் கூறிய காரணம், பாண்டுரங் ராம்சந்தரும் மரோ ரகுநாத்தும் புனாவில் வசிக்கும் உள்ளூர்வாசிகள் என்றும், எனவே உச்ச நீதிமன்றத்தின் அதிகார வரம்புக்குள் வரமாட்டார்கள் என்றும் கூறப்பட்டது. பல்வேறு காரணங்களுக்காக, 'ரிட்' ஆணை வழங்கப் படுவது ஆகஸ்டு 30 வரையில் ஒத்திப்போடப்பட்டது. இந்தக் கால அவகாசத்தில் கூடுதல் பிரமாணப் பத்திரங்கள் சமர்ப்பிக்கப்பட்டன; இவற்றில், மரோ ரகுநாத், பாண்டுரங் ராம்சந்தரிடமிருந்து ஜூலை 12ம் நாள் தப்பிச் சென்று விட்டாரென்றும் பிறகு அவர் மீண்டும் கைப்பற்றப்பட்டு, புனாவிலுள்ள ஒரு மாகாண நீதிபதியும், பிரிட்டிஷ் பிரஜையுமான ஜான் ஆண்ட்ரூ டன்லப்பின் ஆணை மற்றும் உத்தரவுகளின்பேரில் மீண்டும் பாண்டுரங் ராம்சந்தரின் பாதுகாப்பில் (காவலில்) ஒப்படைக்கப்பட்டார். பெருமளவு விவாதத் திற்குப் பின் 'ரிட்' ஆணை வெளியிடப்பட்டு, அடுத்த செப்படம்பர் 15ம் தேதிக்குள் நீதிமன்றத்திற்கு பதிலளிக்குமாறு உத்தரவிடப் பட்டது. நீதிமன்றத்தின் ஆணையின் பேரில் இது மராத்தி மொழியில் மொழிபெயர்க்கப்பட்டு, பாண்டுரங் ராம்சந்தருக்கு உரிய முறையில் தாக்கல் செய்யப்பட்டது. இந்த 'ரிட்' ஆணைக்குக் கீழ்வரும் பதில் சமர்ப்பிக்கப்பட்டது:-

''பாண்டுரங் ராம்சந்தர் தம்துர்ரோ ஆகிய நான் பேஷ்வாவின் உறவினரும் நண்பனுமாவேன். என் வாழ்க்கையில் ஒரு போதும் நான், ஆங்கிலேய அரசுக்கோ அல்லது ஆங்கிலேயர்களுக்கோ சேவகனாக (வேலையாளாக) இருந்ததில்லை. கம்பெனி அரசு இந்த நாட்டை வென்றபோது நான் அச்சமின்றியும், தொந்தரவுக்கு உட்படுத்தப்படாமலும் வாழலாம் என்று எனக்கு உறுதிமொழி

அளித்தார்கள். அதை நம்பி, நான் பூனாவில் இருந்து வந்தேன். என்னுடைய பேரன் மரோ ரகுநாத்தைப் பொறுத்தமட்டிலும் நான் அவனுடைய தாத்தா அவன் என்னுடைய பராமரிப்பில் ஒப்படைக்கப் பட்டான். வழக்கமான மரபுப்படி நான் அவனைப் பாதுகாக்க வேண்டும். அந்தப் பையன் பதினான்கு வயதுள்ள சிறுவன். அந்தக் காரணத்தினால் இந்துக்களின் சாஸ்திரங்களின்படி, சுய ஞானம் இல்லாதவன். யாருடைய பராமரிப்பில் அவன் வாழ்கிறானோ, அந்த நபருடைய ஆணைகளுக்கு இணக்கமாக அவன் நிச்சயமாக நடந்து கொள்வான்; மேலும், அந்தப் பையனின் சொத்தையும் செல்வத்தையும் பாதுகாக்க வேண்டியது அவசியமாகும். இதற்கு மேலாக, வேறு ஒன்றுமில்லை, அவனுக்கு என்னால் இதற்கு மேலாக, யாருடைய பாதுகாப்பில் ஒரு பையன் ஒப்படைக்கப் படுகிறானோ, அவர்கள் அவனுக்கு என்ன செய்கிறார்களோ, அதைக் காட்டிலும் மேலாக, அவனுக்கு என்னால் செய்யக்கூடியது வேறு ஒன்றுமில்லை. அல்லது, ஓர் இந்துக் குடும்பத்தில் வழக்கமான சீனியாரிட்டி முறைமையில் செய்யப்படுவதுதான். எந்த வகையி லாவது நான் அதிகமாகவோ, கூடுதலாகவோ செய்தால், புனாவி லுள்ள குடும்ப நீதிபதிக்கு இது தெரியப்படுத்தப்பட்டால், அது உடனடியாக நிறுத்தப்பட்டுவிடும். மரோ ரகுநாத்தின் பாட்டி இறந்ததற்குப் பின்னர், விதியின்படி, அவன் என் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டான். என்னுடைய பேரனின் சொத்து பாழாய்ப் போய்விடக் கூடாது என்பதன் நிமித்தம், அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்கு நான் சம்மதித்தேன். யாருடைய அதிகாரத் தின்பேரில், அந்தப் பொறுப்பை என் தலைமீது நான் ஏற்றுக் கொண்டேனோ, அவர்களின் அனுமதியின்றி, நான் அதைக் கைவிட முடியாது. 1828, செப்டம்பர் 10, 1750, பத்ராபாத் சூத்ஷலாபர் 1. அந்த ஆண்டின் பெயர் சுரோதீர்.''

அந்தப் பதில் இரண்டு காரணங்களின்பேரில் ஆட்சேயபிக்கப் பட்டது; முதலாவதாக, அதில் எந்த பதிலும் இல்லை; ''பராதும் ஹெபியோ கார்ப்பஸ்''; இரண்டாவதாக, கீழ்ப்படியாமைக்கு சமாதானம் கூறுவதற்கு சாக்குப் போக்கு கூறுவதற்கு எந்தக் காரணமும் கூறப்படவில்லை; ஆனால் அந்த 'ரிட்' ஆணை வெளி யிடப்பட்டிருக்கக் கூடாது. அதை நீதிமன்றம் பெறக்கூடாது என்ப தற்கு அது ஒரு காரணமாகும். மற்றும் பாண்டுரங் ராம்சந்தருக்கு எதிராக ஒரு கொணர்வுக்கான உத்தரவு வெளியிடப்பட வேண்டு மென்று கோரப்பட்டது. இப்பிரச்சினை மீது விவாதிப்பதற்கு

நீதிபதிகள் கால அவகாசம் எடுத்துக்கொண்டனர். செப்டம்பர் 29ம் தேதியன்று அவர்கள் தங்கள் தீர்ப்பை வெளியிட்டனர். மாற்று ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' உத்தரவு வெளியிடப்பட வேண்டு மென்றும், அடுத்த அக்டோபர் 10ம் தேதிக்குள் அதற்கு பதிலளிக்க வேண்டுமென்றும் கூறப்பட்டது.

பாப்பூ குன்னஸ் ( 1 கனாப் 6 ) வழக்கு தான்னாவிலுள்ள சிறையின் தலைமை ஜெயிலருக்கு ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணை வழங்கக்கோரியும், அப்பொழுது அவரது பாதுகாப்பில் (சிறையில்) இருந்த பாப்பூ குன்னஸைக் கொணரும்படியும் உச்ச நீதிமன்றத்தின் விசாரணைக்கு வந்தது. பாபூல் ராஞ்சீ என்பவரின் பிரமாணப் பத்திரத்தின் (அஃபிடவிட்) பேரில், 'ரிட்' ஆணை வழங்கப்பட்டது. பாப்பூ குன்னஸ் சிறையில் வைக்கப்பட்டிருப்பது சம்பந்தமான 'வாரண்ட்'டின் ஒரு பிரதி வழங்கும்படி ஜெயிலரிடம் மனு கொடுத்ததாகவும், ஆனால் அது தனக்கு மறுக்கப்பட்டிருப்ப தாகவும் அதில் கூறப்பட்டிருந்தது. 1828 செப்டம்பர் 10ம் நாளன்று அந்த 'ரிட்' ஆணை வழங்கப்பட்டு, செப்டம்பர் 19க்குள் அதற்கு பதில் கூறுமாறு கோரப்பட்டிருந்தது. வடக்கு கொங்கனின் அதாலத் நீதிமன்றத்தின் நசீரும், 'ரிட்' ஆணை வழங்கப்பட்டிருந்த ஜெயிலரும் இவ்வாறு அதற்கு பதிலளித்திருந்தனர். 'ரிட்' ஆணை வருவதற்கு முன்னால், பாப்பூகுன்னஸ், வடக்கு கொங்கன் மாவட்டத்தின் அதாலத் நீதிமன்றத்தின் மராத்தி மொழியிலான ஓர் உத்தரவின் பேரில் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். பாப்பூ குன்னஸ் நிதி மோசடி செய்த குற்றம் புரிந்ததாகக் கண்டறியப் பட்டு, இரண்டு ஆண்டு சிறை தண்டனையும் ரூ.350 அபராதமும் விதிக்கப்பட்டார்; அபராதம் செலுத்தத் தவறினால், மேற்கொண்டு ஓராண்டு சிறை தண்டனையும் 19ம் தேதியன்று, மேற்படி கைதி கொணரப்படாததால், மேற்படி ஜெயிலருக்கு எதிராக ஓர் 'அட்டாச் மெண்ட்' (பறிமுதல்) ஆணையை நீதிபதிகள் வெளியிட்டனர். 26ம் தேதியன்று, அட்வொகேட்-ஜெனரலின் முயற்சியின் பேரில், வழக்கின் செலவுகள் செலுத்தப்பட்டதன் பேரில் பறிமுதல் ஆணை விலக்கிக் கொள்ளப்பட்டது, பாப்பூ குன்னஸும் நீதிமன்றத் திற்குக் கொணரப்பட்டார். ஜெயிலரின் பதில் படிக்கப்பட்டு, அது போதுமானதாக இல்லை என்று கருதப்பட்டது, ஏனெனில் அதாலத் கோர்ட்டின் அதிகாரம் அதில் கூறப்படவில்லை. அதைத் திருத்துவதற்கு நான்கு நாள் அவகாசம் தரப்பட்டது. இதற்கிடையில் மேற்படி கைதி பம்பாய் சிறையில் காவலில் வைக்கப்பட்டார். அந்தக்

கால அவகாசத்திற்குள் அந்த பதில் திருத்தப்படவில்லை. மாகாண நீதிமன்றங்களின் அதிகாரத்தைக் கேள்வி கேட்பதற்கு அரசுக்கு அதிகாரமில்லையென்று கூறப்பட்டது; எனவே, பாப்பூகுன்னஸ் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்.

மனுதாரருக்கு டென்மான் (பொது சார்ஜெண்ட்) மற்றும் ஆல்டர்சன் ஆஜராயினர்; மன்னரின் குடிமக்கள் யாராவது கைது செய்யப்பட்டு சிறை வைக்கப்பட்டிருந்தால், அவரைக் கொணர்ந்து ஆஜர்படுத்தும்படி, பம்பாயின் பிராந்தியங்களினுள் வசிக்கும் மன்னரின் பிரஜைகள் அனைவருக்கும் 'ஹேபியஸ் கார்ப்பஸ்' 'ரிட்' ஆணை வழங்குவதற்கு உச்ச நீதிமன்றத்திற்கு அதிகாரம் உண்டு என்பது தெள்ளத் தெளிவானதாகும். தற்போதைய மன்னரின் 4வது சட்டத்தின்படி உருவாக்கப்பட்ட சாசனத்திலிருந்து பம்பாய் உச்ச நீதிமன்றம் தனது பல அதிகாரங்களைப் பெறுகிறது. (1823, டிசம்பர் 8, மோர்லியின் சட்டக் களஞ்சியம், தொகுதி II, பக்கம் 638 பார்க்கவும்) அடக்குமுறை பற்றிய புகார்கள், மற்றும் அதிகாரத்திலுள்ள நபர்கள் சம்பந்தமான தகராறுகள் பற்றிய கடந்த மன்னராட்சியின்போது பல்வேறு சமயங்களில் கம்பெனி மற்றும் இந்த நாட்டின் பாராளுமன்றத்தின் முன்னால் கொண்டு வரப்பட்டன. அதன் விளைவாக, நமது கிழக்கிந்தியப் பிரதேசங்களிலுள்ள நீதிமன்றங்களுக்கு அந்த அதிகாரங்களை வழங்கும் பூர்வாங்க அவசியம் ஏற்பட்டது.

1773, மே 10ம் நாள், உடமையாளர்களின் நீதிமன்றத்தில், இந்த முக்கியமான விஷயம் சம்பந்தமாக நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானம் இவ்வாறு கூறுகிறது; ''நீதித்துறை சம்பந்தமாக ஒரு புதிய சாசனத்திற்கு விண்ணப்பம் செய்து கொள்ள வேண்டும். மூன்று ராஜதானிகளின் மேயர்களின் நீதிமன்றங்களிலும், கவர்னர்களின் நீதிமன்றங்களிலும் கவுன்சில்கள் என்ற முறையில் ஓயர், டொமினர்களிலும் பதிவாளராகச் செயல்படுவதற்கு ஒரு பாரிஸ்டரை நியமிப்பதற்கும், மேயர்களின் நீதிமன்றங்களின் அதிகாரத்தை விரிவுபடுத்துவதற்கும் இது கம்பெனிக்கு வகை செய்யும் தீர்மானங்களின் கூடுதல் சொற்கள் தற்போதைய சந்தர்ப்பத்தில் மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். ''குறிப்பாக ஹேபியஸ் கார்ப்பஸ் சலுகையை இந்தியாவில் அறிமுகப்படுத்துவது'' என்பதே அந்தக் கூடுதல் சொற்கள். அதே ஆண்டில் பிரபுக்கள் சபைக்குக் கிழக்கு இந்தியக் கம்பெனியினால் சமர்ப்பிக்கப்பட்ட ஒரு முனுவில் இவ்வாறு கூறப்பட்டிருந்தது.

''ஒடுக்கு முறையைத் தடுப்பதற்கு, கம்பெனியினால் பரிந்துரை செய்யப்பட்ட மிகவும் பயனுறுதியான ஷரத்து, அதாவது, ஹேபியஸ் கார்ப்பஸ் ஷரத்தின் மூலம், குற்றம் சாட்டப்பட்டவர்கள், எந்தக் குற்றம் புரிந்ததாகத் தங்கள் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது, யாரால் சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்வதற்கான ஷரத்து விடப்பட்டிருந்தது.''

1774 அக்டோபர் 22ம் நாள் கல்கத்தாவில் உச்சநீதிமன்றம் திறந்து வைக்கப்பட்டது. அந்தக் காலத்திலிருந்து நீண்ட பல ஆண்டுக் காலகட்டத்திற்கு ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணைகள் முறையாக வழங்கப்பட்டன. அவைகளில் பெரும்பாலானவை சுதேசிப் பிரஜைகளுக்கு வழங்கப்பட்டன. அந்தப் பிரதேசங்களில் வாழ்ந்து வந்த பிரிட்டிஷ் பிரஜைகள் என்று அழைக்கப்பட்டவர்களுக்கு வழங்கப்படவில்லை. அதைத் தொடர்ந்து ஆண்டின் ஜனவரி 16ம் நாளன்று திவானி கச்சேரியின் சிறையின் பொறுப்பிலிருந்த நபருக்கு, அங்கு சிறை வைக்கப்பட்டிருந்த ஒரு நபரை ஆஜர் படுத்துமாறு ஒர ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணை வழங்கப்பட வேண்டுமென்று ஒரு பிரேரணை சமர்ப்பிக்கப்பட்டது. அதன்படி 'ரிட்' ஆணை வழங்க உத்தரவிடப்பட்டது. 13வது ஜியோ IIIc.63 (1773ம் வருடத்திய முறைப்படுத்தும் சட்டம்) படி, கல்கத்தாவில் சுதேசிகள் அல்லது மற்றவர்கள் மீது மன்னரின் நீதிமன்றத்திற்கு ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றம் என்ற வகையில் தவிர ராஜ தானிக்குள் இங்கிலாந்து மன்னரின் டொமினியன்களின் வேறு எந்தப் பகுதியில் இருப்பதை விடவும் கூடுதல் அதிகார எல்லை இல்லை. கம்பெனியின் ஜமீந்தாரி நீதிமன்றங்கள் தற்போதைய ஜமீந்தாரி நீதிமன்றங்கள் செய்வதைப் போன்றே கல்கத்தாவிலுள்ள சுதேசிகள் மீது தொடர்ந்து அதிகார வரம்பைச் செலுத்தி வந்தன. அந்த நீதிமன்றங்கள், கம்பெனியில் வேலையில் அல்லது சேவை யில் இல்லாத சுதேசிகளுக்கு, அல்லது ஒரு பிரிட்டிஷ் பிரஜைக்கு எதிரான புகார்கள் தாவாக்கள் மற்றும் நடவடிக்கைகள் சம்பந்த மாக - ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றத்தின் முன் வராதவை, முற்றும் ஜெயில் விடுதலை சம்பந்தமாகத் தனித்தன்மை வாய்ந் தவையாக இருந்தன. ஜனவரி 17ம் நாளன்று ஒரு ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணைக்கு பதில் வழங்கப்பட்டது. குலாம் ஹைதர் என்ற பெயருள்ள ஒரு நபருக்கு அது வழங்கப்பட்டது. அதில் சும்ஜு என்ற ஒரு பதினொரு வயதுடைய ஒரு சிறு பெண்ணை ஆஜர்படுத்தப்படும்படி கோரப்பட்டிருந்தது, அந்த மனுவில் அவர்,

அந்தச் சிறுமி தனது சுய விருப்பப் பூர்வமாகத் தனது பாதுகாப்பின் கீழ் இருந்துவருவதாகவும், நிர்பந்தத்தின்கீழ் அல்ல என்றும் தெரி விக்கப்பட்டிருந்தது. அதே ஆண்டு ஜனவரி 19ம் நாளன்று, கல்கத்தா வில் திவானி அதாலத் சிறையின் பொறுப்பாளரான ஜான்மல்லிக் என்பவருக்கு ஒரு 'ரிட்' ஆணை வழங்கப்பட்டது. அதில் பஞ்சுராம் ராய் என்பவரை ஆஜர்படுத்தும்படி கோரப்பட்டிருந்தது. அந்த 'ரிட்' ஆணையை வழக்கறிஞர் ஜனவரி 21,சனியன்று ஆட்சே பித்தார். அதில் அவர், அது, சட்ட விதி ll-ன் படி வழங்கப்பட்ட தென்றும், 'பெர்ஸ்டாட்டம்' என்று குறிப்பிடப்படவில்லை என்றும் கூறியிருந்தார். பிரதம நீதிபதி அந்த ஆட்சேபத்திற்கு பதிலளித்து, அந்த ரிட் ஆணையைப் பொதுச் சட்டமாகக் கருதப்பட வேண்டும் என்று கூறினார். அதன் பின்னர், மேற்படி 'ரிட்' டை ரத்து செய்ய வேண்டுமென்று ஒரு பிரேரணை சமர்ப்பிக்கப்பட்டது. ஏனெனில், இங்கிலாந்தின் பொதுச் சட்டம், இந்தியாவுக்கு நீட்டிக்கப்பட வில்லை யென்றும், குறைந்தபட்சம் பிரிட்டிஷ் பிரஜையைத் தவிர வேறு யாருக்கும் அந்த சட்டம் செல்லுபடியாகாது என்று கூறப் பட்டது. ஆனால் நீதிமன்றத்தினால் இந்தப் பிரேரணை நிராகரிக் கப்பட்டது. ஏனெனில், ஜனவரி 31ல் 'ரிட்'டுக்கு ஒரு பதிலளிக்கப் பட்டது. இது சம்பந்தமான கோட்பாடு சந்தர்ப்ப சூழ்நிலையால் மறுக்கப்பட்டது. ஆனால் அதே ஆண்டு மார்ச் 2ல், அந்த பதில் மீண்டும் வாசிக்கப்பட்டது, அதில், திவானி அதாலத் நீதிமன்றத் தின் உத்தரவின் பேரில், கடன் செலுத்தப்படாததற்காக ஒரு சிவில் வழக்கில் சிறையில் அடைக்கப்படுவதாகக் கூறப்பட்டது. அந்த நீதிமன்றம், பல வழக்குகளில் ஐயத்திற்கிடமின்றி தகுதிவாய்ந்த அதிகார எல்லையைக் கொண்டிருந்போதிலும், அப்பொழுது விவாதத்திலிருந்த பொருத்தமான அதிகார வரம்பைக் கொண் டிருக்கிறதா என்று கல்கத்தாவிலுள்ள உச்ச நீதிமன்றம் விசாரணை செய்யத் தொடங்கியது. இதில் வாதி ஒரு பிரிட்டிஷ் பிரஜை; பிரதிவாதி அவருடைய குமாஸ்தா; எனவே அவர் பிரிட்டிஷ் பிரஜையின்கீழ் வேலைக்கமர்த்தப்பட்டவர். இரு தரப்பாரும் உச்ச நீதிமன்றத்தின் அதிகார வரம்புக்கு இணக்கமாயிருந்தனர்; அவர்களில் யாரும் திவானி அதாலத்தின் அதிகார வரம்பினுள் இல்லை. சிறையின் பொறுப்பாளர் தன் பதிலைக் கூறுவதற்கு நீதிமன்றத்திற்கு வந்திருந்த நிலையில் கைதி விடுதலை செய்யப்பட்டார். சிறை அதிகாரி அளித்த பதிலில், அந்தக் கைதி கீழ்நிலை நீதிமன்றத்தின் அதிகார வரம் பினுள் வரவில்லை என்பதை நிர்ணயிப்பதில் உச்ச நீதிமன்றம் இவ்வாறு தன் அதிகாரத்தைப் பிரயோகித்தது.

மீண்டும், 1775 மார்ச் 28ல் ஃபௌஸ்தரி அதாலத்தைச் சேர்ந்த சிறை அதிகாரி ஜோனா மல்லிக், அங்கு சிறை வைக்கப் பட்டிருந்த செரிமனி என்பவரை ஒப்படைக்க வேண்டும் என்பதற் கான ஹேபியஸ் கார்ப்பஸ் மனுவிற்கு பதிலளித்தார். அதே ஆண்டு டிசம்பர் 23ல், கவர்னர் - ஜெனரல் வாரன் ஹேஸ்டிங்சுக்கு வழங்கப் பட்ட ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணையில் ஜோசப் வெஸ்ஸி என்பவரை ஆஜர்படுத்தும்படி கோரப்பட்டிருந்தது. அதற்கு கவர்னர்-ஜெனரலே பதிலளித்தார். எத்தகைய ஆட்சேபணையும் இன்றி அவர் (பவேஸ்ஸி) ஆஜர்படுத்தப்பட்டார். மேற்படி பவேஸ்ஸி விடுதலை செய்யப்பட்டார். கவர்னர்-ஜெனரல், திருத்தப்பட்ட தனது பதிலில், அந்த வாசகத்தில் இருந்த ஒரு தேவையான விவ ரத்தை உண்மையென்று கூறுவதற்கு மறுத்துவிட்டார். பவேஸ்ஸி, ஒரு பிரிட்டிஷ் பிரஜையாக இல்லாத நிலையில், சட்டத்திற்கு முரணான முறையில் இந்தியாவை விட்டு வெளியேற்றப்படு வதற்குக் கொணரப்பட்டார். * எனவே, அந்த ஆரம்பக் காலகட் டத்தில், இந்திய அரசுகளை சீர்திருத்தம் செய்வதும், குடியேற்ற நாட்டின்மீது ஆங்கிலேய சட்டத்தின் மேலாண்மையும் ஒன்று போன்றதாகக் கருதப்பட்டது. கம்பெனியாலேயே எதிர்நோக்கப் பட்ட ஒரு மாபெரும் நோக்கமானது ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' அறிமுகப்படுத்தப்பட்டதாகும். அதன்படி, தனது தனி மனித சுதந்திரம் பறிக்கப்பட்ட எந்த நபரும் தன்னை சிறைப்படுத்திய தரப்பார், சட்டத்தின் படியே தான் அவ்வாறு செய்ததாகக் காட்டும் படி கட்டாயப்படுத்துவதற்கு அதிகாரமளிக்கிறது.

கல்கத்தாவில், இந்த வகைப்பட்ட பல்வேறு உதாரணங் களைக் காட்ட முடியும். சென்னையிலும் இது போன்று ஏற்பட் டுள்ளன. ஹேபியஸ்கார்ப்பஸ் ரிட் மனுவின் ஆணையின் முக்கியத் துவம் வலுவாகவும், நியாயமாகவும் உணரப்பட்டது. எந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டாலும், எந்த சாசனம் வழங்கப்பட்டாலும் - எந்த அதிகார வரம்புக்குட்பட்டிருந்தாலும் - அந்த 'ரிட்' ஆணைக்கு

★ இதுவும், முந்திய வழக்குகளும் பம்பாயில் 1828ல் வெளியிடப்பட்டிருந்த பிரசுரத்திலிருந்து மேற்கோள் காட்டப்பட்டதாகத் தோன்றுகிறது. ''மன்னர் பிரானின் உச்ச நீதிமன்றத்தில் பம்பாயில், கவர்னர் மற்றும் கவுன்சிலின் நடவடிக்கைகள் என்று அதற்குத் தலைப்பிடப்பட்டிருந்தது. கல்கத்தாவில் உச்ச நீதிமன்றம் முதல் முதலில் நிறுவப்பட்டபோது நியமிக்கப்பட்ட நீதிபதி களில் ஒருவரின் குறிப்புகளிலிருந்து எடுத்தாளப்பட்டது என்று அங்கு குறிப்பிடப்பட்டது.

விதிவிலக்குக் கிடையாது. மேலும் எந்தச் சட்டங்கள் அல்லது சாசனங்கள் சம்பந்தமாகவும் அதனுடைய செயல்பாட்டுக்கு வரம்பு கி

டையாது.

ஆனால் ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் உரிமை கல்கத்தா உச்ச நீதிமன்றத்திற்கு 13வது ஜியோ IIIன் லெட்டர்ஸ் பேடண்டினால் வழங்கப்பட்டது.** அவை, அந்த நீதிமன்றத்திற்கு, ''சூழ்நிலைகள் அனுமதிக்கின்ற வரையில், இங்கிலாந்து என்றழைக்கப்படும் கிரேட் பிரிட்டனின் அந்தப் பகுதியினுள் மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் நீதிபதிகள் சட்டப் பூர்வமாக செலுத்தப்படுகிற அத்தகைய அதிகார வரம்பும் அதிகாரமும்'' வழங்கின. அந்த அதிகாரத்தின் கீழ் வழங்கப்பட்ட ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணைகள், அவற்றின் அதிகாரம் சம்பந்தமாக எந்த வகையிலும் ஐயம் எழுப்பப்படக் கூடிய கேள்வி எதுவும் கேட்கப்படவில்லை. கல்கத்தா உச்சநீதி மன்றத்திற்குக் கொடுக்கப்பட்ட பம்பாயில் உச்ச நீதிமன்றம் நிறுவப் பட்டது. உண்மையில் 4வது ஜியோ IV (C.71) மன்னர் பிரானுக்கு ''பம்பாயில் ஓர் உச்ச நீதிமன்றத்தைக் கட்டியமைக்கவும் நிறுவவும்'' சாசனம் அல்லது லெட்டர்ஸ் பேடண்டினால் அதிகாரமளிக்கப் படுகிறது. ''அதற்கு சுதேசி மக்கள் மற்றும் பிரிட்டிஷ் பிரஜைகள் மீது சிவில், கிரிமினல், கடற்படை மற்றும் மதம் சார்ந்த அதிகார வரம்பைச் செயல்படுத்துவதற்கு முழு அதிகாரமளிக்கிறது. அவற்றை நல்ல முறையில் நிர்வாகம் செய்வதற்குரிய அதிகாரங்களும், உரிமைகளும், காப்புரிமைகளும் வழங்கப்படும். வங்காளத்தில் வில்லியம்ஸ் கோட்டையிலுள்ள உச்சநீதிமன்றத்தின் விஷயத்தில் போன்றே பம்பாய் அரசுக்குட்பட்ட அல்லது அதைச் சார்ந்துளள பம்பாய் நகரத்திலும் தீவிலும், அவற்றுக்குக் கீழ்ப்பட்ட பிரதேசங் களிலும் அதே வரம்புகளுக்கும் தடைக்கட்டுகளுக்கும் உட்பட் டிருக்கும். அப்பொழுது நடைமுறையிலுள்ள மற்றும் ரத்து செய்யப் படாத எந்த சட்டத்தின் பயனாகவும் இது செயல்படும். நிறுவப்படும் உச்ச நீதிமன்றத்தின் அதிகாரத்திலிருந்து வில்லியம்ஸ் கோட்டை

** சாஸனத்தின் வாசகம் மோர்லியின் களஞ்சியம் தொகுதி II, பக்கம் 549ல் கொடுக்கப்பட்டுள்ளது. கல்கத்தா உச்ச நீதிமன்றத்தின் விதிமுறைகளும் அதிகாரங்களும், தற்பொழுது 1865, டிசம்பர் 28ந் தேதிய லெட்டர்ஸ் பேடண்டில் விளக்கப்பட்டுள்ளது (ஸ்டாட் ஆர்.அண்ட் ஓ.ரெவி, தொகுதி (iv), பக்.82). 1861 ஆம் ஆண்டின் இந்திய உயர்நீதிமன்ற சட்டத்திற்கு ஏற்ப, வழங்கப்பட்டது.

யிலுள்ள கவர்னர்-ஜெனரலும், கவுன்சிலும் அனுபவிக்கும் அதே விதிவிலக்கை பம்பாயிலுள்ள கவர்னரும், கவுன்சிலும் அனுபவிப் பார்கள்.'' பம்பாயிலுள்ள கவர்னருக்கும், கவுன்சிலுக்குமான விதி விலக்குக்கு அது மட்டுமே ஒரே காப்பு வாசகமாகும். ஆனால், வில்லியம்ஸ் கோட்டையிலுள்ள கவர்னர்-ஜெனரலும் கவுன்சிலும் நீதிமன்றத்தின் அதிகார வரம்பிலிருந்து விலக்களிக்கப்படுகிறார் கள் என்பது மட்டுமன்றி, * 21வது ஜியோ III ன் படி, தங்களை அணுகும் மற்றவர்களையும் அதனுடைய அதிகார வரம்பிலிருந்து எழுத்து மூலமான உத்தரவின் மூலம் விலக்களிப்பதற்கான அதிகாரத்தையும் பெற்றுள்ளனர்.

4வது ஜியோ IV (C.71) சட்டத்தின்படி, மன்னர்பிரான், தனது லெட்டர்ஸ் பேடண்டின்படி (மோர்லியின் களஞ்சியம், தொகுதி II, பக்.638) பம்பாயில் உச்சநீதிமன்றத்தைத் தோற்றுவித்தார். இங்கிலாந்து ராஜ்யத்தில் தனது சாதாரண 'ரிட்'களின் மூலம் செலுத்தப்படுகிற பல்வேறு அதிகாரங்களையும், உயர் மேலாண்மை களையும் இந்தக் கடிதங்கள் மூலம் அவர் அதற்கு வழங்கினார். அதே பொழுதில், அதனுடைய சிவில் அதிகார வரம்பையும் மதம் சம்பந்தமான அதிகார எல்லையையும் ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றம் என்ற வகையிலான அதன் அதிகார எல்லையையும் வரம்புக்குட்படுத்துவது முறையானது என்று அவர் கருதினார். ஆனால், பிரதேசம் சம்பந்தப்பட்ட வகையில், நீதிமன்றம் கொண் டிருக்க வேண்டிய அதிகாரங்களில் இந்த அளவில் மட்டுமே அவர் எல்லை வரம்பிட்டார். சிவில் அதிகார வரம்பை வரையறை செய்யும் ஷரத்து இவ்வாறு கூறுகிறது. (ஷரத்து 28): ''பம்பாயிலுள்ள உச்ச நீதிமன்றத்தின் அதிகார எல்லை வரம்பும், அதிகாரங்களும் பம்பாய்க்கான நீதி சாசனங்களில் இது வரையிலும் பிரிட்டிஷ்

★ கவர்னர் ஜெனரலும் கவுன்சிலும் பிறப்பித்த உத்தரவுப்படி மேற்கொள்ளப் பட்ட எந்த ஒரு செயல் அல்லது செயல்களுக்காக உச்சநீதிமன்றத்தில் எவர் மீதும் அல்லது எவர்கள் மீதும் சிவில் அல்லது கிரிமினல் நடவடிக்கை எடுக்கப் பட்டிருந்தால் அவர் அல்லது அவர்கள் எழுத்துப்பூர்வமாக இதற்குப் பதிலளித்து, தமக்கு வழங்கப்பட்ட உத்தரவின் நகலைச் சமர்ப்பிக்கலாம்; இது அவரது நடவடிக்கைகள் நியாயமானவை என்பதற்கு முற்றிலும் ஆதாரமாக அமைந்து, அந்த நீதிமன்றத்தில் அவர் மீது தொடுக்கப்பட்ட சிவில் அல்லது கிரிமினல் வழக்குகளிலிருந்து அவர் விடுதலையடையலாம்.''

கவர்னர் ஜெனரல் மற்றும் கவுன்சிலின் இத்தகைய உத்தரவு எந்த ஒரு பிரிட்டிஷ் பிரஜைக்கோ அல்லது பிரஜைகளுக்கோ விஸ்தரிக்கப்படுமானால் இந்த சட்டமே பிறப்பிக்கப்படவில்லை என்ற நிலையை மேற்கொள்ள இந்த சட்டத்தின் மூன்றாவது பிரிவின்படி நீதிமன்றத்துக்கு முழு உரிமை உண்டு.

பிரஜைகள் என்ற வகையில் வர்ணிக்கப்பட்டு, சிறப்புப் பெற்றுள்ள அனைத்து நபர்களுக்கும் - பம்பாய் அரசுக்கு உட்பட்ட அல்லது சார்ந்துள்ள எந்தத் தொழிற் சாலையிலும் வசிக்கின்றவர்களுக்கு நீட்டிக்கப்பட வேண்டும் என்று நாங்கள் மேலும் ஆணையிடு கிறோம்.'' இவ்வாறு அது, பம்பாய் உச்ச நீதிமன்றத்தின் அனைத்து எல்லை வரம்பும், அதிகாரங்களும் அந்த நபர்களுக்கும் நீட்டிக்கப் படும் என்று கூறுகிறது; ஆனால் நீதிமன்றத்தின் பொதுவான அதிகார எல்லை வரம்பு வேறு யாருக்கும் நீட்டிக்கப்படுவதில்லை என்று பொருள்படாது. ஆனால் அந்த விதி முழுவதும் இவ்வாறு பொருட்படுத்தப்பட்டால், ''பம்பாய் உச்ச நீதிமன்றத்தின் அதிகார எல்லை வரம்பும் அதிகாரங்களும் (இந்த நீதிமன்றம் தகுதி யுடையதாகவும் பயனுறுதியாகவும் இருக்க வேண்டும்; அது எல்லா வழக்குகளையும் நடவடிக்கைகளையும் விசாரிக்கவும் நிர்ணயிக் கவும் முழு அதிகாரம் பெற்றிருக்கும்) நம்முடைய பிரஜைகள் அனைவருக்கும் நீட்டிக்கப்பட வேண்டும்''. அப்பொழுது அது சிவில் வழக்குகளுக்கு மட்டும் - வழக்குகளுக்கும் சர்ச்சைகளுக்கும் பொருந்தும். நீதிமன்றத்தின் பிற எல்லை வரம்பின் எத்தகைய எல்லை வரம்புக்கும் இது சம்பந்தப்பட்டதல்ல. இதுபோன்றே, ஈகுவிடி நீதிமன்றமும், சிவில் வழக்குகளை உடைய அனைத்து அதே நபர்களுக்கும் நீட்டிக்கப்படும். எனவே, மீண்டும், கிரிமினல் அதிகார எல்லை வரம்பைப் பற்றிப் பேசும்போது, சாசனம் (ஷரத்து 44), ''பம்பாய் அரசுக்கு உட்பட்ட, அல்லது அதை சார்ந் துள்ள எந்த ஒரு பிரதேசத்திலுள்ள மன்னரின் பிரஜைகள் எவராலும் புரியப்பட்ட அனைத்து ராஜதுரோகங்கள், கொலைகள், கொடுங் குற்றங்கள், சிறு தவறுகள் முதலியவற்றை ஆராயவும், விசாரணை செய்யவும், நிர்ணயம் செய்யவும் உச்ச நீதிமன்றத்திற்கு அதிகார மளிக்கிறது. இப்பொழுது தொழிற்சாலைகளினுள் வகிக்கின்ற பிரஜைகள் சம்பந்தமாக, சிவில் அதிகார எல்லையை வழங்கிய சாசனத்தின் ஷரத்தினால் அனைத்து முன்பு வரையறைக்குட்படுத்தி யிருந்த நிலையில், இந்த ஷரத்து, அதனுடன் முரணானதாக இருக்கும். எனவே, அதனுடைய எல்லா அதிகாரங்களுக்கும் வரம்பு நீட்டிக்கப்படக் கூடாது. மாறாக அதனுடைய சிவில் அதிகார வரம்புக்கு மட்டுமே நீட்டிக்கப்பட வேண்டும். அப்பொழுது, இதன் விளைவாக, முதலாவதாக, மன்னர் பெஞ்சின் நீதிமன்றத்தின் அனைத்துப் பொதுவான அதிகாரங்களும் பிரச்சினையிலுள்ள இடங்களான புனா மற்றும் தானா உள்ளிட்ட ஒரு மாவட்டம் முழு வதிலும், உச்ச நீதிமன்றத்திற்குக் கொடுக்கப்படுகின்றன; பின்னர்,

ஒரு சிவில் அதிகாரம், - ஒரு சிறிய மாவட்டத்திற்கு மட்டும் - வழங்கப் படுகிறது; பின்னர், அதே முறையில் கட்டுப்படுத்தப்பட்டு, அதற்குப் பிற அதிகார எல்லை வரம்பு அளிக்கப்படுகின்றன.

இவ்வாறு, இந்த சாசனத்தின் மொழி (வாசகம்), அது சார்ந்து நிற்கிற கோட்பாட்டைப் போன்று, அதே அளவு தெளிவானதாக எளிதில் புரியக் கூடியதாக இருக்கிறது. ஒரு சுதேசிப் பிரஜையின் காண்ட்ராக்ட், ஓர் அந்நிய நாட்டு சட்டத்தினால் வியாக்கியானப் படுத்தப்படக் கூடாது; ஆனால், அதே அளவில் அது அவருக்கு ஒரு விஷயத்தைச் சுட்டிக் காட்டுகிறது; அது என்னவெனில், தனி நபர் சுதந்திரம் இல்லாமல் அவர் எந்த வகையான நீதியையும் பெற முடியாது; அந்தச் சுதந்திரத்தை காப்பாற்றிக் கொள்வதற்கு அவர் மற்றொரு சுதேசிப் பிரஜையுடன் மோதிக் கொண்டிருக்கிறாரா அல்லது பிரிட்டனில் பிறந்த பிரஜையுடன் மோதிக் கொண்டிருக் கிறாரா என்பதுதான். சிவில் மற்றும் கிரிமினல் நீதியில் சாதாரணப் பிரஜைகளிடையிலான வேறுபாடு - தெளிவாகத் தெரிகிறது. தனது எல்லாப் பிரஜைகளையும் உடனடியாகப் பாதுகாப்பதற்கு மன்ன ரிடத்தில் உயர் சிறப்புரிமைகள் அடங்கியுள்ளன. தனது அரச பதவியின் காரணமாக, மன்னர் பிரானிடம் அடங்கியுள்ள அதிகாரங் கள், மன்னர் பெஞ்ச் நீதிமன்றத்திலுள்ள அவரது நீதிபதிகள் வாயிலாக செயல்படுத்தப்படுகின்றன. அவை வெல்லப்பட்ட நாடு களிலும், அவர் மன்னராகப் பதவியேற்றுக் கொண்டபோது அவரது ஆட்சியின் கீழ் இருந்த நாடுகளிலும் இருந்து வருகின்றன. அவற்றை அவரிடமிருந்து அகற்ற முடியாது. ஆனால் அவருடைய சொந்த சம்மதத்தின் பேரில் சட்டப் பேரவையின் இதர இரண்டு பிரிவு களின் சம்மதத்தோடுகூட, அகற்றப்படலாம். இது அவர்பால் ஒரு மாபெரும் தியாகமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

இந்த லெட்டர்ஸ் பேடண்டுகளில் கீழ்வரும் காப்பு வாசகமும் (ஷரத்து 45) உள்ளது. ''கவர்னர் - ஜெனரலுக்கு குறிப்பிடப்படும் மற்றவர்களுக்கு எதிராவும் எந்தக் குற்றச் சாட்டையோ அல்லது தகவலையோ விசாரணை செய்வதற்கு குறிப்பிட்ட வழக்குகளில் அல்லாது உச்சநீதிமன்றம் தகுதியடையதல்ல ''இப்பொழுது, ஒரு கிரிமினல் தகவலை வழங்கும் அதிகாரம் நடவடிக்கைகளையும் குற்றச்சாட்டுகளையும் விசாரணை செய்வதில் அடங்கியிருக்க வில்லை; ஆயினும், உள்ள சூழ்நிலைமைகளில், அதனின்று விலக்கப் பட்ட எல்லா வழக்குகளிலும், ஒரு கிரிமினல் தகவலுக்கான ஒரு பிரேரணையை உச்சநீதிமன்றம் விசாரிக்க முடியும்.

1827 ஆம் ஆண்டில்தான் (ஆர்.வி.ரைட், 1827, மார்லியின் களஞ்சியம், தொகுதி 1, பக்கம் 120), சர்.சார்லஸ் கிரே அளித்த ஒரு தீர்ப்பு இந்த விஷயம் சம்பந்தமாக கற்றறிந்த பிரதம நீதிபதியின் கருத்தை நிரூபணம் செய்கிறது. நீதிமன்றத்தின் தீர்ப்பை செயல் படுத்துவதினின்றும் ஷெரிப்பின் அதிகாரி இடைஞ்சல் செய்த பல நபர்களுக்கு எதிராக ஒரு கிரிமினல் தகவலுக்காக ஒரு பிரேரணை தாக்கல் செய்யப்பட்டது. புகார் செய்த சிலதரப்புகள் - சுதேசிப் பிரஜைகள் - சாதாரண எல்லை வரம்பினுள் இவர்கள் வர மாட் டார்கள். அவர்களுக்கு எதிராக, எந்தக் குற்றச்சாட்டையும் தொடுத் திருக்க முடியாது. ஆனால் மற்றவர்கள் பிரிட்டிஷ் பிரஜைகள், அல்லது பிரிட்டிஷ் பிரஜைகளால் வேலைக்கு வைத்துக் கொள்ளப் பட்டவர்கள். அவர்கள் விலக்கினுள் வரமாட்டார்கள் என்பது தெளிவு. நாம் எடுத்துக்காட்டிய வேறுபாட்டை சர்.சார்லஸ் கிரே, வெளிப்படையாக அங்கீகரிக்கிறார். ''மெண்டி அலிகானுக்கு எதிராக, ஒரு கிரிமினல் தகவலை வழங்குவதற்கு நீதிமன்றத்திற்கு அதிகார மிருக்கிறதா என்று ஒரு கேள்வி எழுப்பப்பட்டுள்ளது. அவர் இங்கு வசிக்காததால், இந்த அதிகார வரம்பிற்கு உட்பட்டவர் அல்ல என்று கூறப்பட்டது. ஆயினும் தனது சொந்தக் கருத்தின்படி (வங்காளத்தின் பிரதம நீதிபதியின் கருத்தில்) நீதிமன்றத்தின் எல்லை வரம்பு எழுப்பப்படக்கூடாது. நீதிமன்றத்தில் இருவேறு பட்ட அதிகார எல்லை வரம்புகள் ஓயெர், டெர்மினர் மற்றும் மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் அதிகார வரம்புகள் அடங்கி யிருந்தன. முந்தியது வரம்புக்குட்பட்டது; ஆனால் பிந்தியது அவ்வா றில்லை, அது, இந்த அரசின் கீழுள்ள எல்லா மாகாணங்களுக்கும் விரிவுபடுத்தப்பட்டுள்ளது. கம்பெனியின் பிரதேசங்களில் எந்த இடத்திலும் தகவலை வழங்குவதற்கு உச்ச நீதிமன்றத்திற்கு அதிகாரம் உண்டு என்பது அவரது கருத்து இங்கிலாந்தில் எந்த நடவடிக்கைக்கும் உரிமையுடையதைப் போன்று மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தைப் போன்று, அதே முறையில், நீதிமன்றத்தின் நட வடிக்கையின்பால் அவதூறு செய்தல், அல்லது வன்முறை மூலமாகத் தடை செய்யும் எந்த சுதேசி, அன்னியர் அல்லது வேறு நபர் யாராக இருந்தாலும் தண்டிப்பதற்கு நீதிமன்றத்திற்கு முழு அதிகாரம் உண்டு. அவ்வாறு தண்டிப்பதற்கு அதிகாரம் இல்லை யென்று கூறுவது முரண்பாடானதாகும். யாருக்கு எதிராகவும் கிரிமினல் தகவல் அளிக்கும் காரியத்தில் நீதிமன்றம் இறங்க முடியும் என்பது அவருக்குத் தெரியவில்லை. ஆயினும் இந்த அதிகாரத்தை எப்போதாவதும், மற்றும் எச்சரிக்கையுடனும் அதிகாரத்தை

எப்போதாவதும், மற்றும் எச்சரிக்கையுடனும் பயன்படுத்த வேண்டும் என்றும் அவர் கூற வேண்டும் ''குற்றம் சாட்டப்படுவ தற்கு உட்படாத நபர்களும், குற்றம் சாட்டப்படுவதற்கு உள்ளாகும் நபர்களும் குற்றம் புரிந்த தரப்பினர் அல்ல என்பதினால், அவர் ஒரு கிரிமினல் தகவல் அளிப்பதை அனுமதிக்கமாட்டார், ஆனால், மொத்தத்தில் குற்றம் சாட்டப்படுவதற்கு விட்டுவிடுவது நல்லது என்று அவர் நினைத்தார்.

இந்தப் பகுதியில் குற்றச்சாட்டுகளை விசாரணை செய் வதற்கான அதிகாரம் தெளிவாக பிரிக்கப்பட்டிருந்தது. அவமதிப்புக் காகப் பறிமுதல் ஆணையிடும் உரிமையிலிருந்தும், கிரிமினல் தகவல்களை வழங்குவதினின்றும் இது பிரிக்கப்பட்டிருந்தது. ஒரு ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றம் என்ற தன்மையில்தான் உச்ச நீதிமன்றத்தினால் குற்றச்சாட்டு விசாரிக்கப்பட முடியும். அவர்களை விசாரிபதற்கான அதனுடைய அதிகாரம் விதிவிலக்கு என்ற நிபந் தனைகளினால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், அவமதிப் புக்கு தண்டனை வழங்கும் அதிகாரம் எல்லா நீதிமன்றங்களிலும் உள்ளார்ந்து இருக்கிறது. கிரிமினல் தகவலின்பேரில் நடவடிக்கை எடுக்கும் அதிகாரம், மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தில் உள்ளார்ந்து இருக்கிறது. மற்றும் அது, நபர்கள் சம்பந்தமாக எல்லை வரம்பின்றி, சாசனத்தின் விதிகளின்படி உச்சநீதிமன்றத்திற்கு மாற்றப்படு கிறது.

அதிகார மேலாண்மை தேவைப்படுகிறதெனில், புத்தகங் களிலிருந்து எண்ணற்ற உதாரணங்களை (வழக்குகளை) எடுத்துக் காட்ட முடியும். விவரிக்கப்பட்ட முறையில் அதிகாரம் இருக்கவே செய்கிறது. போர்ன்ஸ் குரோ.ஜேம்ஸ் வழக்கில், (பக்கம் 543) ''பிரதம நீதிபதி மாண்டே குபேகம் பொழுது, சின்கு துறைமுகங் களின் உரிமை - மன்னரின் ஆணை செல்லுபடியாவதில்லை - தரப்புகளுக்கு இடையிலானதாகும்; மன்னருக்கு எதிராக தனிச் சலுகையும் இருக்க முடியாது. மற்றும், இந்த 'ரிட்' (ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட்) ஆணையானது ஒரு சிறப்புரிமை ரிட் அதிகார மாகும். இது தமது குடிமகனுக்கு மன்னரின் நீதி வழங்கப்படுவது சம்பந்தப்பட்டதாகும்; தமது குடிமக்களில் எவரும் ஏன் சிறை யிலடைக்கப்படுகிறார்கள் என்பதை மன்னர் தெரிந்து கொண்டாக வேண்டும்; இது எல்லா நபர்கள் மற்றும் இடங்கள் சம்பந்தமாகவும்

பொருத்தமானதே. எந்த பதிலும் இதைத் திருப்தி செய்ய முடியாது... இந்த 'ரிட்' ஆணை இந்த நீதிமன்றத்திலிருந்து கலே மற்றும் ராஜ்யத்திலுள்ள இதர எல்லா இடங்களுக்கும் வழங்கப்பட்டுள்ளது. இதற்கு எதிர்ப்புத் தெரிவிப்பதானது, அதனுடைய அதிகார எல்லை வரம்பை எதிர்ப்பதாகாது. மன்னர் மற்றும் அவரது நீதிமன்றத்தின் அதிகாரத்தை யாரும் மறுக்க முடியாது - இந்த அபிப்பிராயம் பிற நீதிபதிகள் அனைவரின் அபிப்பிராயமுமாகும்.'' மாண்புமிகு பிரதம நீதிபதி மாண்டேகுவின் கோட்பாடு கலே மற்றும் இங்கிலாந்து மன்னராட்சியின் டொமினியனுக்குள் பிற இடங்களுக்கும் வழங்கப்பட்டுள்ள முன்னுதாரணங்களினால் வலுப்படுத்தப்பட்டுள்ளது. மற்றும் அப்பொழுதைக்கும் இந்த சமயத்திற்கும் இடையில் பல்வேறான் வழக்குகளில் நீதிமன்றங்களினால் பூரணமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது. கௌலி, 2 பர்ரோவின் அறிக்கைகளில் (பக்கம் 834) லார்ட் மான்ஸ் பீல்டு, மன்னரின் 'ரிட்' அதிகாரம் அவருடைய டொமினியன்கள் முழுமையிலும் எல்லா இடங்களிலும் செல்லத்தக்கது என்று கூறப்படவேண்டும் என்று வரையறுத்திருந்தார். ஆனால் எல்லா 'ரிட்' ஆணைகள் விஷயத்திலும் இது உண்மையல்ல. எனவே, அந்த வழக்கில் விதியை வரையறுத்துக் கூறுவதற்கு (அவர்) வந்தபோது, அந்த நீதிபதி 'வெனீரிஃபேசியர்ஸ் ரிட்கள் பெர்விக் நகரத்தில் செல்லுபடியாவதில்லை என்று பதிவு செய்யும்படி ஆணையிட்டார்; அதே சமயம், வேறொரு ஆதாரத்திலிருந்து எழும் உயர் தனியுரிமை வாய்ந்த 'ரிட்'கள் கூடுதல் விரிவான செயல்பாட்டைக் கொண்டுள்ளன என்றும் முடிவு செய் தார். இந்த உயர் தனியுரிமையானது, குடிமகன் இயல்பாகவே மன்னருடன் கொண்டுள்ள பிணைப்பிலிருந்து எழுகிறது. அந்தப் பிணைப்பானது குடிமகனின்பால் மன்னரது பாதுகாப்பைத் தேவைப்படுத்துகிறது. 7வது அறிக்கையில் (1) கால்வினின் வழக்கில் கூறப்பட்டுள்ள கோட்பாடு இதுதான், அதாவது, விசுவாசம் காட்டுவது குடிமகனின் கடமை பாதுகாப்பளிப்பது மன்னரின் கடமை. எனவே குடிமகன் எப்பொழுதெல்லாம் விசுவாசம் காட்டுகிறாரோ, அப்பொழுதெல்லாம் மன்னர் பாதுகாப்பு அளிக்கிறார். இனி படையெடுத்துப் பிடித்துக்கொள்ப்பட்டு மன்னர் பிரானின் டொமினியன்களுடன் சேர்த்துக்கொள்ளப்பட்ட எந்த ஒரு அன்னிய நாட்டில் வசிக்கும் மக்கள் அவருக்கு விசுவாசம் காட்டமாட்டார்கள் என்று கொள்ளலாமா? அப்படி அவர்கள் விசுவாசம் செலுத்தினால், மன்னர் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்றாகிறது. அந்தப் பாதுகாப்பு தற்போதைய உதாரணத்தில் போலவே அவருடைய

ஹேபியஸ்கார்ப்பஸ் ரிட் ஆணை வழங்குவதற்குள்ள தனி உரிமையின் பயனாக, இது செய்யப்படவேண்டும். அவர்கள் சட்டப்படி சிறையிலடைக்கப்பட்டுள்ளார்களா, அல்லவா என்பதை அவர் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். (ரிட்ஆப் செர்டியரோரி) அல்லது அவர்களுக்கு எதிராக ஏதாவது நடவடிக்கைகள் தொடங்கப்பட்டிருந்தால் அவை சட்டபூர்வமானவைதானா என்பதைத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். தனது டொமினியன்கள் முழுமையிலும் உள்ள சம்பந்தப்பட்ட நீதிமன்றங்கள் அவற்றின் கடமைகளை உரிய முறையில் நிறைவேற்றும்படி செய்ய வேண்டும் (ரிட் ஆப் மேண்டமஸ்); நபர்கள் அவர்கள் கட்டாயம் நிறைவேற்ற வேண்டிய செயல்களை நிறைவேற்றச் செய்யவேண்டும். எனவே மன்னர், பாராளுமன்றத்தின் ஒரு சட்டத்தின் அதிகாரத்தின் பயனாக, ஒரு குறிப்பிட்ட நீதிமன்றத்திற்கு, அவருடைய தனி உரிமைகளிலிருந்து எழும் இந்த அதிகாரங்களை வழங்கும்போது, அந்த நீதிமன்றம் முழு அளவிற்கு அவற்றைப் பெற்றிருக்கும் - பிரதேசத்தின் அளவு சம்பந்தமாக, அல்லது வேறு எந்த வகையிலாவது அவர் மட்டுமே அதைக் கட்டுப்படுத்த முடியும். இங்கு மன்னர், இங்கிலாந்தில் மன்னரின் பெஞ்ச் செலுத்துகின்ற அதே அதிகாரங்களை வழங்கியுள்ளார். இவற்றை பம்பாய் உச்ச நீதிமன்றம், இந்தி 'ரிட்' மனுக்கள் அனுப்பப்பட்டுள்ள இடங்கள் உள்ளிட்ட பிரதேசம் முழுவதிலும் செலுத்தலாம். தனிப்பட்ட விஷயங்களில் ஏற்படும் தகராறுக்காக இந்தியாவின் சுதேசிகள் ஒருவர் மற்றொருவருக்கு எதிராக வழக்குத் தொடுப்பது உச்சநீதிமன்றத்தின் அதிகார வரம்புக்குள் வராது என்பது மெய்யாக இருக்கலாம்; நமது சட்டத்திற்குத் தெரிந்த சில 'ரிட்'கள் ஒரு தரப்புக்கும் இன்னொரு தரப்புக்கும் இடையில் போடமுடியாது; இருந்தபோதிலும் மன்னரின் தனியுரிமையான 'ரிட்'கள், சாசனத்திலுள்ள எந்த ஷரத்தினாலும் கட்டுப்படுத்த முடியாது; அதே போன்று, பாராளுமன்றத்தின் ஒரு சட்டத்தின் நேரடி சொற்களாலும் பறிக்கப்பட முடியாது. அந்த நோக்கத்திற்குப் போதுமான முழு அதிகாரம் மன்னரிடத்திலேயே இருக்கும். அது நீதிமன்றத்தினால் செலுத்தப்படும் அரசியல் சாசனம் அதற்கு மிகவும் உயர்வான மற்றும் மதிப்பிட முடியாத அதிகாரத்தை அளித்துள்ளது.

பம்பாய் நீதிமன்றத்தில், தனது திறமையான வாதத்தின் முற்பகுதியில் பம்பாய் அட்வொகேட் ஜெனரல், 1777-ஆம் ஆண்டில் சர். யெலிஜா இம்பேயில் நடைபெற்ற புகழ்பெற்ற பாட்னா

வழக்கைக் குறிப்பிட்டார்; அவருடைய கூற்றுக்களிலிருந்து, தற்போதையப் போன்ற ஒரு வழக்கில் (பாட்னா, பின்குறிப்பு, எண். 17, நாடாரா பீகம் எதிர் பெஹதெர் பெக் வழக்கில் சர்.இ. இம்பியின் தீர்ப்பு) சுதேசிகளின் மீது நீதிமன்றத்திற்கு அதிகார வரம்பு இல்லை என்று கூறுவதற்கு முயன்றார். ''இந்த நாட்டில் மக்கள் மொத்தமாக மன்னரின் சட்டங்களுக்கு ஆட்பட்டவர்களோ, அல்லது இந்த நீதிமன்றத்தின் அதிகார வரம்புக்கு உட்பட்டவர் களோ அல்ல! (குறிப்பிட்ட வரையறைகளுக்கு உட்பட்டவர்களே மன்னரின் சட்டங்களுக்கு உட்பட்டவர்களும் அல்லது இந்த நீதிமன்றத்தின் அதிகாரவரம்புக்கு உட்பட்டவர்களுமாவார்கள்). சுதேசிகளின் பெரும்பான்மையோர் ஏற்றுக் கொள்ளத்தக்க பிற சட்டங்களும் பிறநீதிமன்றங்களும் இருப்பதனாலும், எங்களுடைய அதிகார எல்லைவரம்பை நீட்டிக்க நாங்கள் ஆவராயில்லாதத னாலும், நாங்கள் இந்த வேண்டுகோள்களை, வேறு எந்த வேண்டு கோள்களையும் போலவே சுதந்திரமாகத் தீர்ப்புக் கூறப்படுவ தற்கு சமர்ப்பிக்கிறோம்'' இந்தக் கோட்பாட்டின் மீது திரு.தீவார் மிகுந்த அழுத்தம் கொடுத்தார். ஆனால் சர்.எலிஜா இம்பீயி னுடைய அதிகாரம், உச்சநீதிமன்றத்தின் அதிகார எல்லை வரம்பி லிருந்து சுதேசிகள் விலக்களிக்கப்பட்டிருக்கிறார்கள் என்ற உண்மைக்கு ஆதரவாகத் தேவைப்படவில்லை. இன்னும் பதிலளிக்க வேண்டிய கேள்வி என்னவெனில், எந்த அதிகார எல்லைவரம்பு இங்கு சிந்திக்கப்படுகிறது? சாதகமான சட்டமியற்றப்படுவ தன்னியில் ரத்து செய்யப்பட முடியாத உயர் தனியுரிமை உள்ள 'ரிட்'களை வெளியிடுவதற்குள்ள அதிகாரவரம்பா? அல்லது, வழக்குகள், நடவடிக்கைகள் என்று சட்டம் வரையறுத்துக் கூறுகின்ற, தரப்புக்கும் தரப்புக்கும் இடையிலான சர்ச்சைகளில் முடிவு செய்வவதற்குள்ள அதிகார வரம்பா? முறையீடுகளை தங்கு தடையின்றி முறையிடுவதற்கு அதிகார எல்லை வரம்புடைய தற்குள் முறையிடுவதற்கு அவர் அனுமதித்த வழக்கில், பின்னால் கூறப்பட்டதை சர்.யெலிஜா குறிப்பிட்டிருக்கக்கூடும்.

21வது ஜி.ஓ.3, கேப்.70,ன் இந்த சட்டம், ''கவர்னர் - ஜெனரலும், கவுன்சிலும் வழக்கமான வேலை ஸ்தலத்தன் பெயர், விவரம் மற்றும் இடத்தையும், கிழக்கிந்தியக் கம்பெனியின் சேவையில் பணியில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருந்த அனைத்து சுதேசிகளைப் பற்றியும் அங்கு குறிப்பிடப்பட்டுள்ள அலுவலகங் களில் ஒரு புத்தகத்தில் அல்லது புத்தகங்களில், அகரவரிசை ரீதியில்

பதியப்பட வேண்டுமென்று வாதிடப்பட்டது. எல்லா சுதேசிகளும் விதிவிலக்கின்றி இந்த அதிகார வரம்புக்கு உட்படுத்தப்பட வேண்டுமெனில் எந்த சுதேசிகள் இதற்கு உட்படுத்தப்பட வேண்டு மென்பதை நிர்ணயம் செய்வதற்கு அந்த முன்னெச்சரிக்கைகள் அரிதாகவே மேற்கொள்ளப்பட்டன. ஆனால், அந்த சொல்லின் ஒரு வரையறைக்குட்பட்ட பொருளில், சிலவர்க்கங்கள் மட்டுமே அந்த அதிகார எல்லை வரம்புக்குள் இருக்கிறார்கள் என்று ஒத்துக் கொள் வதற்கு எங்களுக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை. இந்த நோக்கத்திற்காக கூடுதல் தாராளமான பொருளில் அனைவரையும் உட்கொண்டிருக்க வேண்டும் என்பதற்காதரவான எங்களுடைய வாதம் சரியானதாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், வர்ணிக்கப் பட்ட எல்லா நபர்களும் பதிவு செய்து கொள்ளப்பட வேண்டும் என்பது அதே அளவு விரும்பத்தக்கதே.

உயர் தனியுரிமையுள்ள 'ரிட்'களைப் பற்றிப் பொதுவாகக் கூறியபின், குறிப்பாக, ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' பற்றி இப் பொழுது பேசுவோம். 1818-ஆம் ஆண்டில், அந்த 'ரிட்' பற்றிய கோட்பாடுகளை லார்டு எல்டன், குரோவ்லியின் வழக்கில், (2வது ஸ்வான்ஸ்டன், பக்.1) ஆய்வு செய்தார். திருப்திகரமாக பதிலளிக்கவில்லை என்பதற்காக ஒரு நபர் மீது கடன் தீர்க்க வகை யில்லாதவர்கள் (ஓட்டாண்டி) சம்மந்தமான கமிஷனர்கள் வழக்குத் தொடுத்தனர். நீதிமன்றம் விடுமுறையில் இருந்தபோது, ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணைக்காக ஒரு பிரேரணை செய்யப்பட்டது. அத்தகைய அதிகாரம் தனக்கு இருக்கிறதா என்னும் பிரச்சினை அவரால் மிகவும் கவனமாக விவாதிக்கப்பட்டது. லார்டு சேன்ஸலர் நாட்டிங்ஹாம் (ஜெங்கெஸ் வழக்கு, 1676, 6 ஹௌதெரு, டிஆர், 1189) செய்த முடிவில் அவருக்கு ஓர் அம்சம் கிடைத்தது. ஆனால், அது இங்கிலாந்து சட்டத்தின் கோட்பாடுகளுடன் முரண்பட்டதாக இருந்ததால், அந்த முடிவை அவர் உறுதியாக நிராகரித்தார். அதை அறிமுகமான சட்டம் என்று அவர்கூறி, தடை கட்டுப்படுத்துவதற் கான காரணம் பற்றி உடனடியாக முடிவு கூறுவதற்கு அதிகாரமுள்ள உச்ச சட்ட அதிகாரமில்லாமல் எந்த மனிதருடைய சுதந்திரமும் பறிக்கப்படக் கூடாது என்று அவர் கூறினார். மன்னரின் இந்தத் தனி உரிமையை எந்த சமயத்திலும் செயல்படுத்துவதற்குக் கோரப் படலாம். இது, ஒரு சட்டத்தில் பொதுவான சொற்களால் பாதிக்கப் பட முடியாது.

மாரோ ரகுநாத்தின் வழக்கு (1, க்னாப், 8) கவர்னரும், பம்பாய் கவுன்சிலும் அசாதாரணமான முறையில் தலையிடுவதை ஏற் படுத்தியது. அந்த வழக்கில் ஹேபியஸ்கார்ப்பஸ் 'ரிட்' ஆணை வழங்கப்பட்ட போதிலும், அந்த நபர் நீதிமன்றத்தினுள் கொண்டு வரப்படவில்லை. மற்றும் அந்த 'ரிட்' ஆணைக்கு எவ்வித பதிலும் தரப்படவில்லை. ஆனால் 'ரிட்' ஆணை அனுப்பப்பட்ட அந்த நபரிடமிருந்து ஒரு விநோதமான, முரண்பாடான, கேள்விக்குரிய ஆவணம் சமர்ப்பிக்கப்பட்டது. அந்த ஆவணத்தில் கூறப்பட்டிருந்த விவரம் உண்மையெனில், நீதிமன்றத்திற்குத் திருப்பி அனுப்பப் பட்டிருக்கும். அதில் கூறப்பட்டிருந்த காரணம் போதுமானதாக இருந்திருந்தால், நீதிமன்றத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும் 'ரிட்' ஆணை யாருக்கு வழங்கப்பட்டதோ, எந்த நபர் மாரோ ரகுநாத்தைக் காவலில் வைப்பதற்கு உலகின் அந்தப் பகுதியின் சமாதான நீதிபதியான திரு.டன்லப் அவர்களின் அதிகாரத்தைப் பெற்றி ருந்தால், அவர் திரு.டன்லப்பினால் வேலைக்கமர்த்தப்பட்டுள்ள ஏஜெண்ட் என்று கருதப்பட்டிருப்பார் என்று நாங்கள் ஐயுறுகிறோம். இவ்வாறு அதிகார எல்லை வரம்புக்குட்பட்டவர்கள் சுருக்கமாக வர்ணிக்கப்பட்டிருப்பார்கள்.

பொதுவான முறையீடுகள் நீதிமன்றத்தின் முன்னால், ஹேபியஸ்கார்ப்பஸ் ஆணையின் மூலம் ஆஜர்படுத்தப்படும் எந்த நபரும் சலுகை படைத்த நபர் என்பது சட்டத்திலுள்ள கற்பனையைக் காட்டிலும் மிகவும் குறைவான துணிகரமான அனுமானமாகும்; எனவே, எல்டன் பிரபுவும் திரு. ஜஸ்டிஸ் பிளாக்ஸ்டோனும், கைது செய்யப்பட்ட தரப்பினர் தமது தனிச் சலுகையைப் பெறுவார்கள் என்று அனுமானிப்பதற்கான பொதுவான முறையீடுகளை ஆதரிக் கின்றனர். ஆனால், அவர் அதைப் பெறவில்லை என்பதை அவர்கள் அறிந்திருந்தனர்; ஏனெனில், அநியாயமான முறையில் கைது செய்யப்பட்ட ஒரு நபர் திரும்ப வரமுடியும் என்பதை சட்டம் தாங்கிக் கொள்ளாது.

இந்தியப் பிரதேசத்திலுள்ள ஒரு நபர், ஆங்கிலேயப் பிரஜை களின் தலையீடு இல்லாமல் கைது செய்யப்படுவது ஒருபோதும் உண்மையில் ஏற்படுவது அரிதாகும்.

சிறை அதிகாரி (ஜெயிலர்) அனேகமாக, ஒவ்வொரு சந்தர்ப் பத்திலும் ஒரு சுதேசியாகவே இருக்கிறார்; சுதேசி நீதிமன்றங்களின்

அதிகாரிகள் அனைவரும் சுதேசிகளே. ஆனால் சுதேசி நீதிமன்றங்களின் அதிகாரம் அனேகமாக எப்போதும் ஆங்கிலேயப் பிரஜைகளின் கட்டுப்பாட்டின் கீழேயே இருந்து வருகிறது. கிழக்கிந்தியக் கம்பெனியின் சேவகர்கள் அவற்றின் அதிகார எல்லை வரம்புகளுக்குத் தலைமைதாங்குகின்றனர். மற்றொரு நபரைக் கைது செய்யும் எந்த ஒரு நபரும், பிரிட்டிஷ் பிரஜைகளின் கீழ் வேலைக் கமர்ந்துள்ள நிலையில் செயல்படாமலிருப்பதற்கு பெருமளவு புத்திக் கூர்மை தேவைப்படும், அது சூழ்நிலைமைகளின் ஒரு மிகவும் குறிப்பிடத்தக்க ஒருங்கிணைவாக இருக்கும்.

பம்பாய் தீவினுள் வசிக்கின்றவர்களல்லாத, அல்லது பிரிட்டிஷ் அதிகாரிகளால் வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ளவர்கள் அல்லாத மற்ற அனைவர் சம்பந்தமாகவும் மன்னரால் வழங்கப் பட்ட லெட்டர்ஸ்-பேடண்டை (பாதுகாப்பு உரிமைச் சீட்டை) ரத்து செய்வதற்கு உச்ச நீதிமன்றத்திற்கு அனுப்பப்பட்ட கடிதம் (1 கினாப், 4) அதிகாரத்தை மேற்கொள்கிறது. மாகாண நீதிமன்றங் களின் எந்த அதிகாரிக்கும் அனுப்பப்பட்ட 'ரிட்' ஆணைகளை செயல்படுத்துவதற்கு மறுப்பதற்கு அது உரிமை கொண்டாடுகிறது. அரசு இந்த அதிகாரத்தை மேற்கொள்வதற்கு இசைவாக அமைந் துள்ளது பப்பூகுன்னெஸ் வழக்கில் (1 கினாப்,6) அதனுடைய நட வடிக்கைகள்.

பின்னர், வழக்கறிஞர் (ஆலோசகர்) மற்றும் நீதிபதிகளுக்கு கவர்னர் மற்றும் கவுன்சில் அனுப்பிய கடிதத்தின் நிபந்தனைகள் மீது கருத்துக் கூறத் தொடங்கினார்.

லார்டு சான்ஸலர் (லிண்டர்ஸ்ட் பிரபு) இவ்வாறு கூறினார். ''நாம் இங்கு கூடியிருப்பது பம்பாய் உச்ச நீதிமன்றத்தின் அதிகார எல்லை வரம்பைக் கண்டறிந்து உறுதி செய்வதற்காகவே அதனுடைய அதிகாரம் பற்றி விவாதிப்பதே நோக்கமாகும்''.

ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணைகளை வெளியிடு வதற்கான தனி உரிமை மன்னரிடத்தில் உள்ளார்ந்து இருக்கிறது. வெளிப்படையான சொற்களின் மூலமே அதை ரத்து செய்ய முடியும். ஆனால், அத்தகையது எதுவும் சாசனத்தில் இல்லை. அத்தகைய 'ரிட்' ஆணைகள், மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்திலிருந்து, இங்கி லாந்தின் சட்டப்படி வெளியிடப்படத்தக்கவையாகும். அவை,

ஆங்கிலேய மன்னரின் ஆட்சியின் கீழுள்ள எந்த டொமினியனிலும் செல்லத்தக்கதாகும். அத்தகைய 'ரிட்'கள் ஆங்கிலேய உச்ச நீதிமன்றங்களிலிருந்து, பல இந்திய ராஜதானிகளுக்கு அடிக்கடி வழங்கப்பட்டுள்ளன. அவற்றுக்கு ஆங்கிலேய மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் அனைத்து அதிகாரங்களும் - பாராளுமன்றத்தின் சட்டத்தின் மூலம் பெறப்பட்டவை உண்டு. உச்சநீதிமன்றத்தின் அதிகார எல்லை வரம்பு மீது - அதன் கீழுள்ள நபர்கள் சம்பந்தமாக - சில வரையறைகள் விதிக்கப்பட்டுள்ளன. ஆனால் அவை, நியாயமான காரணத்தின் பேரில், ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றம் என்ற வகையிலும் சிறையிலிருந்து விடுதலை செய்வது சம்பந்தமாகவுமான அதனுடைய சாதாரண செயல்பாடுகளுக்குப் பிரயோகப்படுத்த வேண்டும். உயர் தனி உரிமை 'ரிட்' ஆணைகளை வெளியிடும் அதிகாரத்திற்கு இது நீட்டிக்கப்படுவதில்லை. உடனடியான மற்றும் தீர்மானகரமான முடிவு அவசரமாகத் தேவைப்படும்போது மன்னரின் அனைத்து ஆண்டையாள்களின் பாதுகாப்புக்கு அவை அத்தியாவசியமானதாக இருக்கும். ஆனால், முற்றிலும் சுதேசிகளாக உள்ள பிரஜைகளே கூட, ஒரு சக-பிரஜை சிறையில் அடைக்கப்பட்டது குறித்து கேள்வி கேட்கப்பட முடியாவிட்டாலும்கூட, பிரிட்டிஷ் நீதிபதிகளின் கீழ் செயல்படும் அந்த நீதிமன்றங்களின் முகவர்கள் போலியான விதிவிலக்கினின்று வெளிப்படையாக விலக்கப்படுகிறார்கள்.

ஹேபியஸ் கார்ப்பஸ் என்ற புகழ்பெற்ற சட்டம் (31 கார், II C2) ''குடிமகனின் சுதந்திரத்தை மேம்பட்ட முறையில் பெறுவதற்கான மற்றும் கடல்களுக்கப்பால் கைது செய்து சிறையில் அடைக்கப்படுவதைத் தடுப்பதற்குமான சட்டம்'' என்று உட்-பெயரிடப்பட்டுள்ளது. மற்றும், மன்னர் எதிர் கௌலி (ஆர்.வி. கௌலி, 1759, 2வது பர்.835) என்ற வழக்கில் இங்கிலாந்தில் மன்னரின் பெஞ்சின் அதிகாரம், காலனிகளிலுள்ள நபர்களுக்கு இந்த வகைப்பட்ட 'ரிட்' ஆணைகள் வழங்கப்படுவதற்கு நீட்டிக்கப்படுகிறது என்று கூறப்பட்டுள்ளது (ஆனால் அப்பொழுது வரை, அவற்றை வழங்குவதற்கான அவசியம் ஏற்படவில்லை). நீதிமன்றத்திற்கு அத்தகைய அதிகாரம் உள்ளது என்பது லார்ட் மான்ஸ்ஃபீல்டின் அதிகாரத்திலிருந்தும் மன்னர் எதிர் கௌலி, 2வது பர்ரோஸ் (835)), மற்றும் இந்த வகைப்பட்ட 'ரிட்' கள், இங்கிலாந்து மன்னரின் எல்லா டொமினியன்களிலும் வழங்கப்பட்டுள்ளன என்ற விவரத்திலிருந்தும் தெரிகிறது. எனவே, அவை இங்குள்ள

நீதிமன்றத்தின் சாதாரண சிவில் அதிகார எல்லை வரம்புகளுக்கு அப்பாலும் நீடிக்கப்படக்கூடும். நீட்டிக்கப்படுகின்றன; எனவே இந்தியாவில் உச்சநீதிமன்றம், அடிமைப்படுத்தப்பட்டுள்ள அனைத்துப் பிரதேசங்களிலும் இந்த அதிகார எல்லை வரம்பைக் கொண்டுள்ளது. (ஆனால் அதனுடைய சிவில் அதிகாரம் பம்பாய்க்கு மட்டுமே என்று வரையறை செய்யப்பட்டுள்ளது). இத்தகைய வழக்குகளில் இங்கிலாந்திலுள்ள மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் அதிகாரம் பற்றிய தனது வர்ணனையில் கோக் பிரபு (கோ. இன்ஸ்டிட். பாயிண்ட் 4, கேப் 7) மிகவும் சரியாக இவ்வாறு கூறியுள்ளார் : ''கடவுளின் திருப்திக்காகவும், நமது பிரஜைகளின் அமைதியான வாழ்க்கைக்காகவும், நமது மனச்சாட்சியைக் காப்பாற்றவும், நமது உறுதி மொழியின்படி நடக்கவும் மாபெரும் தலைவர்கள் மற்றும் நமது கவுன்சிலின் பிற உறுப்பினர்களின் சம்மதத்தின் பேரிலும், நமது நீதிபதிகளுக்கு நாம் இவ்வாறு உத்தரவிடுகிறோம்: அவர்கள் இனிமேல் நமது பிரஜைகள் அனைவருக் ்ம், ஏழையென்றும் பணக்காரன் என்றும் பார்க்காமல், எங்களிடமிருந்தோ அல்லது வேறு எந்த நபரிடமிருந்தோ வரும் எந்தக் கடிதம் அல்லது ஆணையைப் பொருட்படுத்தாமல், வேறு எந்த லட்சியத்திற்காகவும் பார்க்காமல், சட்டத்தையும் உரிமைகளை செயல்படுத்துவதிலும் சமநிலையைப் பராமரிக்க வேண்டும்''. இங்கிலாந்தில் மன்னரின் பெஞ்ச் நீதிமன்றம், இங்கிலாந்தின் மன்னர் அவர்களுக்கு அனுப்பும் எந்தக் கடிதங்களுக்காகவும் சரியான பாதையை மேற்கொள்வதைப் புறக்கணிக்காமல் இருந்தால், பம்பாய் உச்சநீதிமன்றத்தின் நீதிபதிகள், எதிர்ப்புத் தெரிவிக்காமல் ஆளுநரிடமிருந்தும், அந்தப் பகுதியின் கவுன்சிலிடமிருந்தும் அவர்களது நீதித்துறை செயல்பாடுகளை நேர்மையுடனும் மனசாட்சிபூர்வமாகவும் நிறைவேற்றுவதில் குறுக்கிடும் (தலையிடும்) ஒரு கடிதத்தை அல்லது ஆணையை பெற்றுக் கொள்வார்கள் என்று எவ்வாறு எதிர்பார்க்க முடியும்?

கிழக்கிந்தியக் கம்பெனியின் சார் ஜெண்டுகள் பொசாங்கே மற்றும் ஸ்பாங்கி:- தற்போதைய மேன்மை தங்கிய 4வது மன்னர் பிரானின் சட்டத்தின் சொற்களிலிருந்து, பம்பாயிலுள்ள உச்சநீதிமன்றத்திற்கு, பம்பாயிக்கு உட்பட்ட பிராந்தியங்களுக்குள், வில்லியம்ஸ் கோட்டை ராஜதானியினுள் உச்சநீதிமன்றம் செலுத்துவதற்கு அப்பாற்பட்ட எந்த அதிகார எல்லையையும் வழங்கக்கூடாது என்பது நோக்கமாகும். ஓர் அம்சத்தில், அந்த சட்டத்தின் குறிக்கோள்களை

செயல்படுத்துவதில் சாசனத்தினால் வழங்கப்பட்டுள்ள அதிகார எல்லை குறைவாகும் என்பது காணப்படும்.

ஆனால் தற்போதைக்கு, வழங்கப்பட்டுள்ள அதிகாரம் முழு அளவிற்கு, வில்லியம்ஸ் கோட்டையின் உச்சநீதிமன்றத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள அதே அதிகாரம்தான் என்று நாம் கொள்வோமாக. ஜிஇஓIII.13-னால் இந்தியாவில் நிறுவப்பட்ட புதிய நீதிமன்றங்களின் அதிகார எல்லை சம்பந்தமான மகத்தான கோட்பாடானது (மார்லியின் களஞ்சியம், தொகுதி II, பக்கம் 549) இதுதான் - கல்கத்தா நகரத்தில் இடப்பரப்பு சம்பந்தப்பட்ட மட்டிலும், அங்கு வசிக்கும் எல்லாப் பிரஜைகளின் மீதும் தங்கு தடையற்ற பிராந்திய அதிகார எல்லை வழங்கப்பட்டுள்ளது. மற்றொரு சட்ட அதிகாரம் உள்ளது. அது, ராஜதானியைப் பொறுத்து டொமினியன்கள் அனைத்திற்கும் பொருந்தும் என்ற போதிலும், வரையறுக்கப்பட்ட பிரிவுகளைச் சார்ந்த நபர்களுக்கு மட்டுமே பொருந்தும். இரண்டு விஷயங்கள் மிகவும் திட்டவட்டமாகத் தனித்தன்மை கொண்டவையாகும்; இங்கிலாந்திலுள்ள மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் தனிச் சலுகைகள் மற்றும் அதிகாரங்களைப் பொறுத்த மட்டிலும் அவை கல்கத்தா அல்லது பம்பாய் ஸ்தலங்களுக்கு அல்லது வரையறுக்கப்பட்ட பிரிவினர்களுக்குப் பொருந்தும், அதிகார எல்லைகள் வழங்கப்படலாம். ஆனால், இதனால், தங்களுடைய பிரதேசத்திற்குள், வரையறுக்கப்பட்ட வர்க்கத்தைச் சாராத தனிநபர்களின் சொத்துக்களைப் பறிமுதல் செய்யவோ, அல்லது ஒரு தனி அதிகாரம் படைத்த பிற நீதிமன்றங்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தவோ சட்ட அதிகாரம் உண்டு என்று அர்த்தமாகாது. இந்த வேறுபாடு விவேகமாகவும் கருணையுடனும் சட்டப் பேரவையினால் நிறைவேற்றப்பட்டுள்ளதாகத் தோன்றுகிறது. வில்லியம்ஸ் கோட்டையில், சென்னையில், பம்பாயில், குறைந்தபட்சம் ஒரு நூற்றாண்டுக் காலமாவது ஆங்கிலேய சட்டம் நிலவி வந்துள்ளது. எல்லா சந்தர்ப்பங்களிலும் - ஜியோ சாஸனத்திலிருந்து அது இருந்துவந்துள்ளது (1726 : 13 ஜியோ 1). அது அங்கு இருந்துவரும் சட்டமாக - 1774ம் ஆண்டு வரையிலும் பொருந்தும் என்று அறியப்பட்டது. கல்கத்தாவின் ஸ்தல அதிகார எல்லையின் கீழ் ஆங்கிலேயத் தகுதியினால் புரியப்பட்ட மோசடி மற்றும் பிற குற்றங்களுக்காகவும் நபர்கள் விசாரணை செய்யப்பட்டு தண்டிக்கப்பட்டனர்.

ஒரு வகைப்பட்ட ஆங்கிலேயர் காலனிகளாக இருந்த அந்த நகரங்களுக்கு வந்தவர்கள் ஆங்கிலேய சட்டத்திற்கு வந்தார்கள். இங்கிலாந்துக்கு வருகிறவர்கள், அவர்கள் தங்களுக்குப் பின்னால் விட்டுச் சென்றுவரும் சட்டத்தின்படி விசாரணை செய்யப்படுவதற் குள்ள உரிமை இருப்பதைப் போன்று, அவர்கள் சட்ட அதிகார எல்லையை ஒருபோதும் தட்டிக் கழிக்க முடியாத இடத்திற்கு வந்தனர். மற்றையப் பிரிவினர், தமது சொந்த நடவடிக்கைகளால் அடிமையாயினர், கம்பெனியின் வேலையாட்கள் அல்லது பிரிட்டிஷ் பிரஜைகள் முதலியவர்கள்; இவர்கள், விருப்பப்பூர்வமாகவே அந்த சேவைகளில் இறங்கியவர்கள், மன்னரின் நீதிமன்றங்களின் அதிகார எல்லைக்குத் தங்களை உட்படுத்திக் கொண்டார்கள். அந்த நபர்களை ஸ்தல எல்லைகளுக்கும் மற்றும் வரையறுக்கப்பட்ட வர்க்கங்களுக்கும் வெளியில் விட்டுவிடுவதும் சட்டத்தின் கொள்கை யாகும். சட்ட அதிகார எல்லை அம்சத்தில், அவர்களின் சொந்த சட்டத்தினாலேயே ஆளப்படுகின்றவர்கள், மற்றும் விதிவிலக்கு ஒரு விதிவிலக்கேயாகும். அதற்கு அவர்கள் உட்பட்டனர். காமன்ஸ் சபையில் சர்.யெலிஜா இம்பே, தனது உரையில் இந்த விஷயம் சம்பந்தமாக இதுவே அவருடைய கருத்தாக இருந்தது. (நாடாளு மன்ற வரலாறு, தொகுதி 26 (1341-14160).

சுதேசி அல்லது மாகாண நீதிமன்றம் அனுபவித்த அதிகார மானது, இந்தியாவை பிரிட்டிஷ்காரர்கள் பிடித்துக் கொண்டதற்கு நீண்ட காலத்திற்கு முன்பிருந்தே அவற்றின் வசமிருந்த அதிகார மாகும். சட்டமன்ற அதிகாரத்தினால் அது எங்கு மாற்றப்பட்டதோ அங்கு நீங்கலாக அந்த அதிகாரம் இருந்து வருகிறது. பிரிட்டிஷ் பாராளுமன்றம் இதை நேரடியாக செலுத்துவதில்லை, ஆனால் அது, இதை கவுன்சிலின் தலைவரான கவர்னர் ஜெனரலிடம் ஒப் படைத்துள்ளது. இவ்வாறு, மன்னரின் நீதிமன்றங்களுக்கு உட் படாத அனைத்து நபர்களும், தங்களுடைய சொந்த சட்டங்களின் கீழேயே பிரிட்டிஷ் சட்டப் பேரவையின் அதிகாரத்தின் கீழ் வாழ் கிறார்கள்; இவர்கள் பலகாரியங்களுக்கு ஒரு வேறு அரசின் கீழான ஒரு தனித் தேசமாகக் கருதப்படலாம். மன்னரின் பெஞ்சின் நீதிமன் றத்தின் அதிகாரம் என்ன என்று கூறப்படலாம். முன்பு மன்னரே தனது இறையாண்மை அதிகாரத்தை செலுத்தி வந்தார்; இப்பொழுது அவர் இதை நீதிமன்றத்தின் மூலம் செலுத்துகிறார், அது இன்னும் நமது ஆண்டையாகிய மன்னரின் நீதிமன்றம் என்றழைக்கப்படு கிறது. அரசு நிர்வாகம் முழுவதும் பண்டைய 'அவுலாரெஜிஸ்' என்று

அழைக்கப்படுவதிலிருந்து பெறுகிறது, இது நீதித்துறை அதிகாரம் முழுவதன் மையமாகும்; மேலும் மன்னரின் நீதிமன்றங்கள் யாவும், விதிவிலக்கோ அல்லது வேறுபாடோ இன்றி மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாகும். ஆனால் இங்கிலாந்தின் சட்டங்கள் இந்தியாவின் சட்டங்களல்ல. ஒரு சட்டத் தொகுதி, தனது நாடாளுமன்றத்தின் சம்மதத்துடன் தொடர்ந்து நீடிக்க வேண்டும் அல்லது சட்டமாக்க வேண்டும் என்று மன்னர் கருதினார். அவை, இங்கிலாந்தின் சட்டங்களைப் போன்று அதே அர்த்தத்தில் மன்னரின் சட்டங்களல்ல. எனவே, இந்த சூழ்நிலை மைகளில் ஒப்புமை இல்லை. இங்கிலாந்திலுள்ள நீதிமன்றங்கள் யாவும் ஒரே ஆதாரத்திலிருந்து ஏற்பட்டவையேயாகும், அவை யாவும் ஒரே பாதையில் செயல்படுகின்றன, அவையாவும் ஒரே வகைப்பட்ட நபர்களுக்குப் பொருந்துகின்றன. ஆனால் இந்தியாவில் உள்ள சட்டங்கள் ஒருவேறு ஆதாரத்திலிருந்து பெறப்படுகின்றன. வெவ்வேறு பிரிவு மக்களுக்கு அவை பொருந்துகின்றன. அவற்றுக்கும் இங்கிலாந்தின் சட்டங்களுக்கும் பொதுவான அம்சம் ஏதுமில்லை. கல்கத்தாவிலோ, பம்பாயிலோ இருந்து வந்த ஆங்கிலேய நீதிமன்றங்களுக்கு சுதேசி நீதிமன்றங்களின் மீது ஒரு கட்டுப்பாட்டை அமுல்நடத்துவதற்கு அதிகாரம் வழங்குவது ஒரு முரண்பாடான நீதிநிர்வாகமாகும். இதற்கு பிரிட்டிஷ் சட்டமன்றம் ஒருபோதும் அனுமதி அளிக்காது என்று நாம் நம்புகிறோம்.

1773ல் உச்சநீதிமன்றம் நிறுவப்படுவதற்கு முன்னர், கல்கத்தா, சென்னை மற்றும் பம்பாயில் மேயர்களின் நீதிமன்றங்கள் இருந்தன. 13வது ஜியிஓ III (C.63) சட்டமானது. கல்கத்தாவில் மட்டுமே உச்சநீதிமன்றத்தை நிறுவுவதற்கு அதிகாரமளித்தது. அந்த சட்டத்தின் வாசகமும், அதனடிப்படையிலான சாசனமும் பல்வேறு விவாதங்களுக்கு இடமளித்தது, சில சூழ்நிலைமைகள், மறுபக்கத்தில் முன்னுதாரணங்கள் என்று கருதப்பட்டவை 21வது ஜியிஓ. III (C.70)க்கு முன்னால் ஏற்பட்டவையாகும். ஆனால் நமக்குக்கிடைத்த சரியான தகவலின்படி, மூன்று ராஜதானிகளில் எந்த ஒன்றிலும் நீதிமன்றத்தினால் தற்பொழுது கூறப்படும் வகையிலான ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணை வழங்கப்படுவதற்கு 1781ல் 21வது ஜியிஓ.III (C.70) நிறைவேற்றப்பட்டதிலிருந்து, ஒரு முயற்சி செய்யப்பட்டதாக நமக்குத் தெரிந்த வகையில் எந்த உதாரணமும் இல்லை.

*1773ல் நிறைவேற்றப்பட்ட, 13வது ஜியிஒ.III (கேப்.63) சட்டமானது (செக்ஷன் 13) வில்லியம்ஸ் கோட்டையில் ஓர் உச்ச நீதிமன்றத்தை நிறுவுவதற்கு மன்னர் பிரானுக்கு அதிகாரம் உண்டு என்று வகை செய்கிறது; இது சம்பந்தமாக ஒரு காப்பு வாசகம் சேர்க்கப்பட்டது (செக்ஷன் 14). ''கூறப்பட்ட புதிய சாசனமும் அதன் அதிகார எல்லைகளும், அதிகாரங்களும், அதன்படி நிறுவப்படும் அதிகாரிகளும் வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா மாகாணங்களிலோ அல்லது அவற்றில் ஏதாவது ஒன்றிலோ, மேற்படி யுனைடெட் கம்பெனியின் பாதுகாப்பின்கீழ் வசிக்கும் எல்லா பிரிட்டிஷ் பிரஜைகளுக்கும் நீட்டிக்கப்பட மாட்டாது; அதே சாஸனம் தகுதியுடையதாகவும் பயனுறுதியுடையதாகவும் இருக்க வேண்டும், அதன்படி நிறுவப்படும் உச்சநீதிமன்றம் மன்னர் பிரானின் எந்தப் பிரஜைக்கு எதிராகவும் எந்தக் குற்றங்கள், தவறான நடத்தை அல்லது ஒடுக்குமுறைகள் புரியப்பட்டது அல்லது புரியப்படவிருப்பது சம்பந்தமான எல்லாப் புகார்களையும் விசாரணை செய்வதற்கும், நிர்ணயம் செய்தவதற்கும் முழு அதிகாரமும் அதிகாரத் தகுதியும் உடையதாயிருக்கும், மேலும், வங்காளம், பீஹார் மற்றும் ஒரிசாவில் மன்னர் பிரானின் பிரஜைகளில் எவருக்கு எதிராகவுமான எந்தப் புகாரையும் அல்லது நடவடிக்கைகளையும் வழக்கையும், மற்றும் எந்த நபருக்கு எதிராக எந்த வழக்கு, நடவடிக்கை அல்லது புகார் செய்யப்பட்டிருக்கிறதோ அந்த நபர், மேலே கூறப்பட்ட யுனைடெட் கம்பெனியில் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ சேவையில் இருந்தாலும், அவர்கள் சம்பந்தமான புகார்களை விசாரணை செய்யவும் நிர்ணயிக்கவும் அந்த உச்சநீதிமன்றத்திற்கு முழு அதிகாரம் உண்டு''.*

*இந்த சாசனத்தின் அல்லது பாராளுமன்றத்தின் எந்தக் குறிப்பிட்ட ஷரத்து அல்லது வாசகங்களில் எத்தகைய தெளிவின்மை அல்லது ஐயப்பாடான தன்மை காணப்பட்டாலும், நிறுவப்பட்ட நீதிமன்றமானது, எல்லா மாகாணங்களிலும் பொதுவான அதிகார எல்லை உடைய - மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் தன்மையில் - (சில விதிவிலக்குகளுடன்) நீதிமன்றமல்ல; மாறாக ஸ்தல மற்றும் வரம்புக்குட்பட்ட அதிகார எல்லை உடைய நீதிமன்றம் என்று நாங்கள் கருதுகிறோம்; சில விஷயங்கள், சில குறிப்ட்ட வகைப்பட்ட நபர்கள் சம்பந்தமாக, அதற்கு விரிவுபடுத்தப்பட்ட அதிகார எல்லை இருக்கும். இது, கோட்பாடு ரீதியில் மிகவும் கணிசமான வேறுபாடு உடையது என்பதில் ஐயமில்லை. இவை வரம்புக்குட்பட்ட மற்றும்*

ஸ்தல நீதிமன்றங்கள் - பிரிட்டிஷ் பிரஜைகளின் மீது மட்டுமன்றி அனைத்து சுதேசிப் பிரஜைகள் - முகமதியர்கள், இந்துக்கள், கிறிஸ்தவர்கள் மீதும் அதிகார எல்லை உடையவை என்று எல்லோராலும் புரிந்துகொள்ளப்பட்டுள்ளது; ஆனால் ஒரே ஒரு காப்பு வாசகம் என்னவெனில் சில விஷயங்களில் வெவ்வேறு மதங்களைச் சார்ந்த நபர்கள் முறையே அவரவர்களது மதங்களுக்கு ஏற்பத் தீர்மானிக்க வேண்டும்; மேலும் இந்த எல்லை வரம்புகளுக்கு அப்பால், பிரிட்டிஷ் பிரஜைகள் என்று வர்ணிக்கப்படும் சில நபர்கள், மற்றும் கிழக்கிந்தியக் கம்பெனியின் சேவையில் உள்ளவர்கள், அல்லது பிற பிரிட்டிஷ் பிரஜைகள் மீது நீதிமன்றங்களுக்கு ஒரு குறிப்பிட்ட அதிகார எல்லை இருக்கும்.

அடுத்த ஆதாரமான காப்பு வாசகம் (செக்ஷன்.16) என்னவெனில், வங்காளம், பீஹார் ஆகியவற்றில், அல்லது அவற்றில் ஏதாவது ஒரு மாகாணத்தில் வசிக்கும் எந்த இந்தியக் குடிமகனுக்கு எதிராகவும் எந்த காண்ட்ராக்ட் அல்லது ஒப்பந்தம் சம்பந்தமாக, நடப்பு மதிப்பில் 500 ரூபாய்களுக்கு மேற்பட்ட மதிப்புடையதாக இருந்தால் அவர்கள் சம்பந்தமான எந்த வழக்குகள் அல்லது நடவடிக்கைகளை விசாரணை செய்யவும், நிர்ணயிக்கவும் உச்ச நீதிமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. மேலும், மேலே குறிப்பிட்ட குடிமகன், மேலே குறிப்பிட்ட ஒப்பந்தத்தில், தகராறு ஏற்படும் பட்சத்தில், இந்த விஷயம் உச்ச நீதிமன்றத்தினால் விசாரணை செய்யப்பட்டு, நிர்ணயிக்கப்படலாம் என்று ஒத்துக்கொண்டிருந்தாலும், அவ்வாறு செய்யலாம். இது நிச்சயமாக ஒரு பொதுவான அதிகார எல்லை உடைய ஒரு நீதிமன்றத்தை நிறுவுவதற்கான ஒரு சட்டத்தில் புகுத்தப்படும் ஒரு மிகவும் அசாதாரணமான ஷரத்து ஆகும்.

*13 வது ஜிஇஓ. III (C.63) சட்டமும், அதனடிப்படையில் உருவாக்கப்பட்ட சாஸனமும், பிறவற்றோடு, ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணை வழங்கப்பட்டதிலிருந்து தோன்றிய பல்வேறு தகராறுகள் எழுவதற்குக் காரணமாயின; இதன் விளைவாக,

★ இந்தத் தகராறுகள் சம்பந்தமான சுருக்கமான, சுவையான (ஒருவேளை பாரபட்சமற்றதாக இல்லாவிட்டாலும்) விவரங்களுக்கு ''பிரிட்டிஷ் இந்திய வரலாறு'' பற்றிய மில்ஸ் என்பவர் எழுதிய புத்தகத்தைப் பார்க்கவும். (புத்தகம் 5, அத்தியாயம் 6).

உச்சநீதிமன்றத்தின் அதிகார எல்லை வரம்புக்குட்பட்ட நபர்கள் சம்பந்தமான ஐயங்களைப் போக்கும் நோக்கத்துடன் 21 ஜிஇஓ. III கேப்.70 சட்டம் இயற்றப்பட்டது. நிலத்தின் உடமையாளர்களுக்கு ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணை வழங்கப்பட்டது. நிலத்தைத் தம் வசம் கொண்டு, தீர்வை செலுத்தி வருகிற, ஆனால் கிழக்கிந்தியக் கம்பெனியுடன் அவரை இணைக்கும் வேறு எந்த வேலையிலும் இல்லாத எந்த நபரும் கிழக்கிந்தியக் கம்பெனியின் சேவையில் இருப்பதாகக் கருதப்பட வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது; அந்த வகையில் அவர் நீதிமன்றத்தின் பொது அதிகார எல்லை வட்டத்தினுள் இருப்பவராவார். ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணை வழங்குவதற்குரிய அதிகாரத்தை அளிக்கும் வகையில் சட்டத்தில் வகை செய்யப்பட வேண்டும் என்று கிழக்கிந்தியக் கம்பெனி சார்பில் விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டுள்ளதாகக் கூறப்பட்டது. எவ்வகைப்பட்ட நபர்களுக்கு இத்தகைய ரிட் ஆணைகள் வழங்கப் படலாம் என்பது பற்றிக் கூறப்படவில்லை. ஆனால் இந்த விஷயம் அரசின் பரிசீலனைக்கும் கொண்டுவரப்பட்டால் ஆயினும் 21வது ஜியிஓ (C.70) சட்டத்தில் எந்தக் குறிப்பான ஷரத்தும் சேர்க்கப்படாத நிலையில், எதிர்க்கப்பட்ட அதிகாரத்தை வழங்கு வதற்கு சட்டப் பேரவைக்கு குறிப்பான எண்ணம் இருந்தது என்று கருதுவதற்கு இடமில்லை. நிச்சயமாக அது வெளிப்படையாகக் கொடுக்கப்படவில்லை. ஆனால் யாருக்கு எதிராக ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணை வழங்கப்படவிருப்பதாகக் கூறப்பட்டதோ, சட்டத்தின் 9வது, 10வது பிரிவுகளில் நீதிமன்றத்தின் அதிகார எல்லையிலிருந்து வெளிப்படையாக விலக்களிக்கப்பட்டுள்ளன. அது, பொதுவாக, அந்த சூழ்நிலைமைகளில் அதில் குறிப்பிடப் பட்டுள்ள சுதேசிகள், அந்த சூழ்நிலைமைகளின் காரணமாக, நீதிமன்றத்தின் அதிகார எல்லைக்குள் உட்படுத்தப்பட மாட்டார்கள்; இதன்படி, சுதேசிகள் என்ற வகையில் அந்த சூழ்நிலைமைகளால், நீதிமன்றத்தின் அதிகார எல்லைக்கு உட்படுத்தப்படமாட்டார்கள் என்று தெளிவாக அனுமானிக்கப்படுகிறது. பின்னர் பின்வரும் ஷரத்து சேர்க்கப்பட்டுளளது: ''உச்சநீதிமன்றத்தின் அதிகார எல்லைக் குள் வரவிருக்கின்ற சுதேசிகளை மிகவும் துல்லியமாகக் கண்டறி வதற்காக, கவர்னர் ஜெனரலும் கவுன்சிலும் கிழக்கிந்தியக் கம்பெனி யின் சேவையில் பணிக்கு சேர்க்கப்பட்டுள்ள அனைத்து சுதேசி களின் - வழக்கமான சில விதிவிலக்குகளுடன் - வசிப்பிடத்தின் பெயர், விவரம் மற்றும் இடத்தைத் தெரிவிக்க வேண்டும். இவை ஒரு குறிப்பேட் டில் அல்லது குறிப்பேடுகளில் அகர வரிசைப்படி பதிவு செய்யப்பட வேண்டும்''.

பின்னர், 21வது ஜியோ III (C.70) சட்டம் நிறைவேற்றப் பட்ட பின்னர் இந்த விஷயம் எவ்வாறு புரிந்துகொள்ளப்பட்டது? 1773-1781 ஆண்டுகளுக்கு இடையில் நடைபெற்ற நடவடிக்கைகள் பற்றி இதரர்களோடு, சில உயர் பதவிகளை வகிக்கும் தனிநபர் களுக்கு எதிராகப் பல குற்றச்சாட்டுகள் எழுந்தன. இதரர்களோடு உச்சநீதிமன்றத்தின் பிரதம நீதிபதி சர்.யெலிஜா இம்பேக்கு எதிராக வும் ஒரு குற்றச்சாட்டுக் கூறப்பட்டது. காமன்ஸ் சபையில் அவர் தன்னைத் தற்காத்துப் பேசினார். பின்னர் அவரது உரை ஒரு தனிப் பிரசுரமாக அச்சிட்டு வெளியிடப்பட்டது. இது பாராளுமன்ற வரலாற்றின 26வது தொகுதியில் (1341-1416) சரியாக வெளியிடப் பட்டுள்ளது. அந்த நூலின் 1358வது பக்கத்தில் சர் யெலிஜா இம்பே இவ்வாறு கூறுகிறார்: ''சாஸனமானது, மாகாண எல்லைகளை மீறி ஒரு கிரிமினல் அதிகார எல்லையை வழங்கியுள்ளது. அது ஸ்தலத் தையும், பிராந்தியத்தையும் மீறிச் செல்கிறது. அதே பொழுதில் வசிக்கும் மக்களின் பகுதியினர் மீது தனிநபர் ரீதியாக அதிகார எல்லையைக் கொண்டுள்ளது. ஆனால் கல்கத்தாவாசிகளின் மீதான அதிகார எல்லை அனைவரையும் தழுவியதாகும். கல்கத்தா நகரம் முழுவதன் மீதும் பிராந்திய அதிகார எல்லையைக் கொண்டுள்ளது''. இந்த சந்தர்ப்பத்தில் கற்றறிந்த நீதிபதியின் குறிக்கோள், இப்பொழுது பரிசீலனைக்குரிய பொருளினின்றும் வேறுபட்டதாகும்; ஏனெனில், கல்கத்தாவிலுள்ள அதிகார எல்லை ஒரு பொதுவான அதிகார எல்லையாகும்; அதே பொழுதில் மாகாணங்களில் உள்ள அதிகார எல்லை பொதுவான அதிகார எல்லையல்ல. ''மாகாணங்களைப் பொறுத்தமட்டிலும் முதலாவது புதிதாகும், அந்த சாஸனத்தினால் அறிமுகப்படுத்தப்பட்டதாகும், அந்த சாஸனத்தினால் நிறுவப் பட்ட இங்கிலாந்தின் அனைத்து சட்டங்களும் புதியவை என்று நான் ஒப்புக் கொள்கிறேன்; அந்த சாஸனத்தின் அதிகார வலு வினால்தான் அவை ஆதரிக்கப்பட வேண்டும். ஆனால் கல்கத்தா நகரத்தைப் பொறுத்த மட்டிலும், சட்டத்தின் செயல்பாடு வேறு பட்டதாகும். 1774ல் உச்சநீதிமன்றம் துவக்கப்படுவதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே, கல்கத்தாவில் ஓயெர், டெர்மினர், கவோல் டெலிவரி என்ற வகைப்பட்ட நீதிமன்றங்கள் இருந்து வந்துள்ளன. அவை, கல்கத்தாவின் மீது பிராந்திய அதிகார எல்லையுடன் கூடிய இங்கிலாந்தின் கிரிமினல் சட்டங்களைப் பிரயோகப்படுத்தி வந்தன. 13வது ஜியோ ஓ III (C.63) சட்டம் இந்த நீதிமன்றங்களை ரத்து செய்து விட்டு, உச்சநீதிமன்றத்தை ஏற்படுத்தியது. அது உச்ச நீதிமன்றத்திற்கு,

பழைய நீதிமன்றத்துடன் இணையான பிரதேச அதிகார எல்லையுடன் அதே குற்றங்களை விசாரணை செய்வதற்குள்ள அதிகாரத்தை வழங்கியது''.

தற்பொழுது விவாதிக்கப்படக்கூடிய அதிகார எல்லை சென்னையில் அமலாக்கப்பட்டது என்று கூறப்பட்டது. இத்தகைய அதிகார எல்லை, 1802ல் சென்னைப் பிரதம நீதிபதி சர்.தாமஸ் ஸ்ட்ரேஞ்ச் கூறியகோட்பாடுடன் வேறுபடுகிறது. அவர் தனது அறிக்கைகளின் முதல் தொகுதியில் (சென்னையிலான வழக்குகளைப் பற்றிய குறிப்புகள்), பக்கம் 135ல் நாகப்ப செட்டி எதிர் ரச்சும்மாவும் மற்றொருவரும் என்ற வழக்கில் கூறப்பட்டுள்ளது. அங்கு அவர் இவ்வாறு கூறுகிறார்: ''இந்த நீதிமன்றத்தில் தாய்நாட்டின் நீதிமன்றங்களில் அதிகார எல்லையுடைய, ஒன்று போன்ற எந்த வழக்குகளிலிருந்தும் இந்த நீதிமன்றத்தில் வாதாடுவது சாத்தியமல்ல என்று மெய்யாகவே கூறப்பட்டது. அந்த நீதிமன்றங்கள், அவற்றின் அமைப்பு விதிகளின்படி, முறையே அவற்றின் வழிமுறைகள் மற்றும் நடைமுறைகளின் நோக்கங்களுக்கு, ஏற்ப, ஆட்சியின் உலகு தழுவிய நீதியின் மகத்தான களஞ்சியங்கள் - அதன்படி, ஒரு வழக்கை விசாரணைக்கு எடுத்துக் கொள்வதினின்றும் வாபஸ் பெறுவதற்கு அது முயன்ற ஒவ்வொரு உதாரணத்திலும், பார்வையிலுள்ள நோக்கத்திற்குப் போதுமான அதிகார எல்லை வேறிடத்தில் இருக்கிறது என்பதை தெளிவாகவும், திட்டவட்டமாகவும் பார்க்க முடியும். அது நீதிமன்றத்திற்குத் தோன்றும்படி கூறப்படாவிட்டால், அதிகார எல்லைக்கான வேண்டுகோள் தோல்வியடைகிறது, அதிகார எல்லை அப்படியே நிற்கிறது. ஆனால் இங்கு அது வேறு விதமாக இருக்கிறது. ஏனெனில், அதனுடைய அதிகார எல்லையைப் பொறுத்தமட்டிலும் அந்த நீதிமன்றங்களுடன் அது ஒருங்கிணைந்து செயல்படும் தன்மை உடையதாக இருப்பினும், இந்த நீதிமன்றத்தின் அதிகார எல்லை பிரிட்டிஷ் பிரஜைகள் அல்லாத நபர்கள் சம்பந்தமாக வரம்புக்குட்பட்டதாகும்''. இந்த வாசகம், இங்கு பரிசீலனையிலுள்ள விஷயத்தின் மீது தாக்கம் ஏற்படுத்துகிறது என்று நாம் கருதுகிறோம். இந்த, சாசனத்தில் நீதிமன்றத்திற்கு மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் அதிகாரத்தைக் கொடுக்கும் சொற்கள் இருந்தபோதிலும், அதிகாரத்தின் தன்மை தான் இங்கு விவரிக்கப்படுகிறதேயன்றி அதிகார எல்லை வரம்பைப் பற்றி அல்ல. அதிகார எல்லை பிற ஷரத்துக்களால் வரம்புக்குட்படுத்தப்படுகிறது. ஆனால், நீதிபதிகள் அவர்களுக்கு அதிகார

எல்லை இருக்கும் இடங்களில் செலுத்தக்கூடிய அதிகாரத்தின் தன்மை, பொதுவாக வசிப்பவர்கள் சம்பந்தமாக, ஸ்தல எல்லைகளுக் குள்ளோ அல்லது, பிரிட்டிஷ் பிரஜைகள் சம்பந்தமாக ஸ்தல எல்லைகளுக்கு அப்பாலோ - ஆங்கிலேய நோக்கங்கங்களுக்காக வும், ஆங்கிலேய சட்டத்தை நிர்வாகம் செய்வதற்காகவும் - அது, இங்கிலாந்தின் மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தினால் செலுத்தப் படும் அதிகாரத்தின் தன்மையை உடையதாகும். சர்.தாமஸ் ஸ்ட்ரேஞ்ச் மேலும் இவ்வாறு கூறுகிறார் (பக்கம் 136) : ''பொதுவாகப் பேசுமிடத்து, அது சுதேசிகளுக்கு (விவேகமாகவோ, அல்லவோ, நாம் இதைப் பரிசீலனை செய்யத் தேவையில்லை), சென்னையில் வசிப்பவர்களுக்கு கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. எனவே வேண்டு கோள், மிகவும் சரியாக, இந்த விவரங்கள் சம்பந்தமாக மட்டும் (என்று) கட்டுப்படுத்திக் கொள்கிறது. இதன் பேரில், நீதிமன்றம், பிரதிவாதிகள், சுதேசிகளாக இருக்கும் நிலைமையில், தற்போதைய மசோதா சம்பந்தமாக, நமது அதிகார எல்லைக்கு உட்பட்டவர் களாக இருக்கும் நோக்கத்திற்காக சென்னைவாசிகள் என்று கருதப் படலாமா என்பதற்கு பதில் கூறும்படி நீதிமன்றம் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளது. ஒரு நோக்கமும் அதிகார எல்லையும் இருக்கும்போது, சூழ்நிலைமைகள் அனுமதிக்கிற வரையில் - எல்லாத் தரப்புகளின் நலன்களையும் தழுவி நிற்கும் வகையிலும் பொதுவுண்மையின் வேறு எந்தப் பொருளிலும் வழக்கின் எல்லா அம்சங்களுடனும் - ஒரு விரிவுபடுத்தப்பட்ட நீதியை வழங்குவது, உண்மையில் ஒரு நீதிபதியின் பங்காகும். ஒவ்வொரு அதிகார எல்லையின் பலமானது பிரதானமாக, யார் மீது அது சார்ந்துள் ளதோ, அவர்களால் மிதமான அளவீட்டில் அடங்கியுள்ளது; அது கடமையாக இருப்பதற்கு மாறாக, நீதிபதிகள் அதிகாரத்திலுள்ள மற்றவர்களுக்கு ஒரு வேறுபட்ட உதாரணத்தை செயல்படுத்திக் காட்ட வேண்டியதாகிறது. ஆனால் அதற்கு பதிலாக, வலிந்து செய்யப்படும் அனுமானங்களின் மூலமும் விபரீதமான கற்பனை களின் பேரிலும் அவர்களின் கமிஷனால் இந்த நீதிமன்றம், வேண்டுகோளை ஏற்று நீதி வழங்குவதற்கு இணங்காவிட்டாலும் நீதி வழங்கப்படமாட்டாது என்றும் நாம் அனுமானிக்கக்கூடாது.

வெவ்வேறு சட்டங்களில், காணப்படும் பல்வேறு வாசகங் களில் இந்தியாவின் சுதேசிகளை உச்ச நீதிமன்றத்தின் அதிகார எல்லையிலிருந்து முற்றிலும் விலக்குவதை வலுவாகக் காட்ட வில்லை. ஆனால், உச்சநீதிமன்றத்தின் அதிகாரம் அவர்களைத்

தழுவுவதை ஒருபோதும் நோக்கமாகக் கொண்டிருக்கவில்லை; மற்றும், பிரிட்டிஷ் பிரஜைகள் சம்பந்தமாக உச்சநீதிமன்றத் திற்குக் கொடுக்கப்பட்டிருந்த விரிவான அதிகாரத்தினுள் அவர்கள் ஒருபோதும் வைத்து எண்ணப்படவில்லை.

53வது ஜியோ III, கேப், 155ல் பல்வேறு ஷரத்துகளில் உரு வாக்கப்பட்டுள்ள குற்றங்களின் ஒரு நீண்ட பட்டியலை மேன்மை தங்கிய நீங்கள் காண முடியும்; அவை யாவும், நீதிமன்றத்தின் ஸ்தல மற்றும் நபர் சார்ந்த அதிகார எல்லைகளுக்கு இடையிலான வேறு பாட்டைத் தெளிவான முறையில் விளக்கும் சொற்களைக் கொண் டுள்ளன. 114வது பிரிவில், ''கிழக்கிந்தியத் தீவுகளினுள் பணம் செலுத்துவதற்காகப் பங்குப் பத்திரங்களைத் திருடுவதைப் பெரும் குற்றமாக்குவது ஏற்புடையதாகும்'', இத்தியாதி, என்று கூறியபின், எந்த நபர் அல்லது நபர்கள் ''வில்லியம்ஸ் கோட்டை, செயின்ட் ஜார்ஜ் கோட்டை, பம்பாய் அல்லது வேல்ஸ் இளவரசர் தீவிலுள்ள மேன்மைதங்கிய மன்னர் பிரானின் நீதிமன்றங்கள் எதனுடைய வாவதின் கிரிமினல் வழக்குகளின் அதிகார எல்லையின் ஸ்தல எல்லைகளுக்குள், கிழக்கிந்தியத் தீவுகளில் எந்த இடத்திலாவது உள்ள மேற்படி நீதிமன்றங்களின் எதனுடையவாவது அதிகார எல்லைக்கு உட்பட்டுள்ள நிலையில், நீதிமன்றத்தின் ஸ்தல அதிகார எல்லைக்கும், நீதிமன்றத்தின் நபர் சார்ந்த அதிகார எல்லைக்கும் இடையிலான வேறுபாடு மிகவும் தெளிவாக அங்கீகரிக்கப் படுகிறது; மேலும் அதிகார எல்லையின் ஸ்தல எல்லைகளுக்குள் இருக்கும் நபர்கள், தனிப்பட்ட முறையில் உட்படாதவர்கள், ஸ்தல மற்றும் தனிநபர் சார்ந்த அதிகார எல்லைகளுக்கு இடையிலான வேறுபாட்டை அங்கீகரிக்கலாம்.

இந்நிலையில் ஒரு கேள்வி எழலாம்: ஒரு மாகாண நீதி மன்றத்தின் ஓர் அதிகாரியாக உள்ள, உதாரணமாக ஒரு ஜெயில ராக உள்ள ஒரு சுதேசி, கிழக்கு இந்தியக் கம்பெனியின் சேவை யிலுள்ள ஒரு நபராகக் கருதப்படுபவர், ஜெயிலர் என்ற தன்மை யில் அவருடைய வசத்திலுள்ள ஒரு சுதேசி கைதியை பம்பாயிலுள்ள உச்சநீதிமன்றத்தின் முன் ஆஜர்படுத்தும்படி அவருக்கு எதிராக ஹேபியஸ் கார்ப்பஸ் ஆணை வழங்கப்படுவதற்கு மாகாண நீதி மன்றங்களின் நடவடிக்கைகளின் மீது ஒரு கட்டுப்பாட்டை உச்ச நீதிமன்றத்திற்கு வழங்கும் எந்த எண்ணமும் ஒருபோதும் இருந்த தில்லை என்று நாம் கருதுவது சரியென்றால், மாகாண நீதிமன்றங் களிலிருந்து மிக உயர்ந்த மேல்முறையீடு டிரிப்யூனல் வரையிலும் முறையாக மேல் முறையீடு செய்வது நிறுவப்பட்டால், மற்றும்

போதிய பரிமாணம் உள்ள வழக்குகளில், இந்த போர்டில் மேன்மை தங்கிய உங்களுக்கு முன்னால் நியாயப்படுத்துவதற்கு, உச்சநீதி மன்றத்தின் வழிசென்று, உச்சநீதிமன்றத்தினின்றும் முற்றிலும் வேறுபட்ட ஒரு நீதிமன்றத்தின் மூலமாகச் செல்லும்போது, அந்த நடைமுறைகளின் பாதை - 1773 க்கும் 1781க்கும் இடையில் செயல் பட்டதைப் போன்று, முற்றிலும் தவிர்க்கப்பட வேண்டுமா என்பது ஒரு மிகவும் முக்கியமான கேள்வியாகும். அந்தச் சமயத்தில் சில சுதேசிகள், அவர்களிடம் நிலம் இருந்ததினால், அல்லது சில பேரங் களில் அவர்கள் ஈடுபடுத்தப்பட்டிருந்ததினால், அவர்கள் பாராளு மன்றத்தின் சட்டம் மற்றும் சாசனத்தின் மொழியினுள் வருகின்ற வர்கள் என்று கருதப்பட்டது. அது, கிழக்கிந்தியக் கம்பெனியின் சேவையில் உள்ள நபர்களை, உச்சநீதிமன்றத்தின் அதிகார எல்லைக்கு உட்படுத்தியது. ஒரு மாகாண நீதிமன்றத்தின் ஜெயிலர், கம்பெனியின் சேவையில் உள்ள ஒரு நபரின் தன்மையில் நிற்கிறார் என்று வாதத்திற்காக வைத்துக் கொள்வோம்; அந்த வகையில் அவர், ஒரு தனி நபர் என்ற வகையில் எந்த நபரையாவது கைது செய்து தன் வசத்தில் வைத்துக் கொண்டிருந்தால், அவருக்கு எதிராக ஓர் ஹேபியஸ் கார்ப்பஸ் ஆணை வெளியிடப்படுவதற்கு அவர் உட்பட்டவராவார். எனவே, அதனால், கம்பெனியின் ஓர் ஊழியர் என்ற முறையில் அவரது தன்மை, அந்த நபருக்கு ஓர் ஹேபியஸ் கார்ப்பஸ் ஆணை விடுத்து, அவரது வசத்திலுள்ள ஒரு நபரை ஸ்தல நீதிமன்றத்தின் ஒரு கைதி என்ற வகையில் அந்த நபரை ஆஜர் படுத்தும்படி உத்தரவிடுவதற்கு நீதிமன்றத்திற்கு உரிமை அளிக் கிறதா? அது, உச்சநீதிமன்றத்திற்கு, நீதிமன்றத்தின் அமைப்பு விதி களினுள் பரிசீலனை செய்வதற்கும் (ஏனெனில் இது வலியுறுத்தப் பட்டுள்ளது), அதனுடைய விசாரணையை மறுஆய்வு செய்வதற் கும் உரிமை அளிக்கிறதா? மாகாண நீதிமன்றம் அமைக்கப்பட்டது சம்பந்தமான எல்லா விதிமுறைகளும் சட்டங்களும் நீதிமன்றத் தின் முன்னால் சமர்ப்பிக்கப்பட வேண்டும் என்று கூறப்படுகிறது : அத்தகைய நீதிமன்றம் மொகல் அரசினால் முதலில் நிறுவப் பட்ட இன்னும் மாற்றப்படாத ஒரு பாகமாக இருக்கக்கூடும். அல்லது அது, விதிமுறைகளை உருவாக்குவதற்கு அரசுக்கு பாராளுமன்றத் தினால் அளிக்கப்பட்ட அதிகாரத்தின்கீழ் நிறுவப்பட்ட ஒரு புதிய நீதிமன்றமாக இருக்கக்கூடும். இவை எல்லாம் அறிவிக்கப்பட்ட கோட்பாட்டின்படி நீதிமன்றத்திற்கு முன்னால் கொண்டுவரப்பட வேண்டும். ஏனெனில் உச்ச நீதிமன்றம், முதலில் மாகாண நீதி மன்றம் சட்டப்படி அமைக்கப்பட்டதா என்றும், அதனுடைய நட வடிக்கைகள் முறையாக நடத்தப்பட்டுள்ளதா என்றும் மதிப்பிட

வேண்டும். பாராளுமன்றத்தின் சட்டங்கள் மற்றும் சாஸனத்தின் போக்கு முழுவதிலுமிருந்தும், அத்தகைய அதிகார எல்லை வழங்கப் படும் எண்ணமே இல்லை என்பது தெளிவாகத் தெரிகிறது என்று நாங்கள் பணிவுடன் உணருகிறோம். 21வது ஜார்ஜ் III (C.70) முறைப் படுத்தும் சட்டத்தின் 23வது பிரிவில் ''மாகாண நீதிமன்றங்களுக் கும், கவுன்சில்களுக்கும் அவ்வப்பொழுது ஒழுங்கு முறைகளை வகுத்தளிப்பதற்கான அதிகாரமும் உரிமையும் கவர்னர்-ஜெனர லுக்கும் கவுன்சிலுக்கும் உண்டு'' என்று வரையறுத்துக் கூறப்பட் டுள்ளது. இங்கு, இந்த மாகாண நீதிமன்றங்களுக்குத் தெளிவான சட்ட ரீதியான அங்கீகாரம் காணப்படுகிறது. இதுபோன்ற ஒரு அதிகாரம் சென்னை மற்றும் பம்பாய் அரசுகளுக்குத் தமது ராஜ தானிகளின் மாகாண நீதிமன்றங்களின் நடவடிக்கைகளை முறைப் படுத்துவதற்கு வழங்கப்பட்டுள்ளது. மேலும், அந்த ஒழுங்கு முறைகள் யாவும் கவுன்சிலுடன் கூடிய மேன்மை தங்கி மன்னர் பிரானால் திருத்தப்படுவதற்கு உட்பட்டதாகும். அவை யாவும் ராஜாங்க மந்திரிக்கு (Secretary of State) தெரிவிக்கப்பட வேண்டும் என்று ஆணையிடப்பட்டுள்ளது. அவை மாற்றப்படாத பட்சத்தில் மாகாணங்களின் சட்டமாகின்றன; நீதிமன்றங்கள் அதன்படி செயல் படுபவையாகும். எனவே, இந்த நீதிமன்றங்களின் இருப்பையும், அவை முறைப்படுத்தப்படுவதற்கான முறையையும், அவை ஆளுமை செய்யப்படுவதற்குரிய சட்டத்தையும் சட்டமன்றம் தெளிவாக அங்கீகரித்துள்ளது. மாகாணங்களின் அரசுகளுக்கான ஒருங்கு (விதி) முறைகளுக்கு உச்சநீதிமன்றத்தில் பதிவு தேவை யில்லை; அதே பொழுதில் கல்கத்தா, சென்னை, பம்பாய் ஆகிய மாநகரங்களில் வசிப்போரையும் அனைத்து பிரிட்டிஷ் பிரஜை களையும் கட்டுப்படுத்தும் விதிமுறைகள் இந்த நீதிமன்றங்களில் பதிவு செய்யப்பட்டு ஒப்புதல் அளிக்கப்பட வேண்டும்.

இனி, இந்தப் பிரிவுக்கு (பிரிவு 24) நாம் வருவோம்: ''எந்த ஒரு நபருக்கும் எதிராக தீங்கு இழைக்கப்பட்டதற்கு அல்லது காயப்படுத்தியதற்காக, நாட்டுப்புற நீதிமன்றங்கள் ஒரு நீதித்துறைப் பதவியின் காரணமாக எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள முடியாது. எந்த ஒரு தீர்ப்புக்காக, ஆணைக்காக, அல்லது உத்தரவுக் காகவும், அல்லது, மேற்படி நீதிமன்றத்தின் உத்தரவின்பேரில், எந்த நபரின் மீதும் எந்தச் செயல்புரிந்தமைக்காகவும் எந்த நட வடிக்கையும் எடுத்துக் கொள்ளப்பட முடியாது''. எனவே ஒரு சுதேசி, ஒரு நீதிமன்றத்தின் ஓர் அதிகாரி என்ற வகையில் கிழக்கிந்தியக் கம்பெனியின் சேவையில் இருக்க வேண்டும் என்ற போதிலும், ஒரு பிரிட்டிஷ் பிரஜைதான் அத்தகைய நீதிமன்றத்தின் நீதிபதியாக

இருக்க வேண்டுமென்ற போதிலும், அத்தகைய நீதிமன்றத்தில் புரியப்பட்ட செயல்களுக்காக, அந்த நபரின் மீது எந்த நடவடிக்கை யும் எடுத்துக்கொள்ளப்பட முடியாது. இதே வாசகத்தையே சாஸனங் களிலும் காணலாம். ஒரு சட்டம் சட்டப்பூர்வமானதா அல்லவா என்பது குறித்து உச்சநீதிமன்றத்தில் விசாரணை நடத்துவதற்கு எந்த நடவடிக்கையும் அனுமதிக்கப்படவில்லை என்றபோதிலும், நட வடிக்கைகளின் சட்டப்பூர்வமான தன்மையை ஒரு ஹேபியஸ் கார்ப்பஸ் மனுவின் மூலமாக ஆய்வு செய்யப்படலாம் என்று கருதப்படுகிறது. இது ஓர் அசாதாரணமான வாதமாகத் தோன்று கிறது; எந்தச் சட்டங்களிலும் அது சம்பந்தமாக எந்த ஷரத்தும் இல்லாத நிலையில், 'ரிட்' ஆணை வழங்கப்படுவதற்கு எந்தக் காரணமும் இல்லையென்று சமர்ப்பிப்பதற்கு நாங்கள் துணிவு கொள்கிறோம்.

அண்மையில் பம்பாய் நகரத்திற்கு வழங்கப்பட்ட சாஸனத்தை இப்பொழுது பரிசீலனை செய்வோம். (மோர்லேயின் களஞ்சியம், தொகுதி II, பக்கம் 638). இந்த சாஸனத்தில் உள்ள ஷரத்தின் மீது பிரச்சினை முழுவதும் சார்ந்துள்ளது, அது இல்லாமலிருந்தால், வாதத்திற்கே இடமில்லாமல் போயிருக்கும். அந்த ஷரத்து (10வது ஷரத்து) இவ்வாறு கூறுகிறது: ''மேலே கூறப்பட்ட பிரதம நீதிபதி யும், துணை நீதிபதிகளும், தனித் தனியாகவோ, முறைப்படியோ, அவர்கள் அனைவரும் நீதிபதிகளாகவும், சமாதானத்தைப் பாது காப்பவர்களாகவும், பின் ஆய்வாளர்களாகவும், பம்பாய் நகரம், பம்பாய் பிரதேசம் முழுமைக்கும் பம்பாய் தீவுக்கும் நியமிக்கப் படுகிறார்கள். அவற்றின் எல்லைகளுக்குள்ளும், அவற்றுக்கு உட்பட்ட ஆலைகளுக்கும், தற்பொழுதுள்ள பிறகும் ஏற்படக்கூடிய பிரதேசங்கள் முழுமைக்கும் நியமிக்கப்படுகிறார்கள். இவர்கள் மேலே கூறப்பட்ட பம்பாய் அரசுக்கு உட்பட்டவர்கள், அல்லது அதைச் சார்ந்திருப்பவர்கள்; நமது மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் நமது நீதிபதிகளைப் போன்றே, அத்தகைய அதிகார எல்லையை யும், அதிகாரத்தையும் பெற்றிருப்பார்கள். மற்றும் சட்டப்படி, இங்கிலாந்து என்றழைக்கப்படும் கிரேட் பிரிட்டனின் அந்த பாகத் தினுள் - சூழ்நிலைமைகள் அனுமதிக்கின்றவரை - அதிகாரத்தை செலுத்துவார்கள்''. இப்பொழுது இந்தப் பகுதி கூறுகின்றபடி, பம்பாய் ராஜதானி முழுமைக்கும் அவர்கள் நீதிபதிகளாகவும் சமாதானத்தைப் பாதுகாப்பவர்களாகவும் இருப்பார்களென்றும் அவர்கள் மன்னர்பிரானின் பெஞ்ச் நீதிபதிகளைப் போன்ற நீதிபதி

களாக, சமாதானத்தைப் பாதுகாப்பவர்களாக இருப்பார்களென்றும், சூழ்நிலைமைகள் அனுமதிக்கிற வரையில் இங்கிலாந்து ராஜ்யம் முழுவதற்குமாக அதிகாரத்தை செலுத்துபவர்களாக இருக்கிறார்கள் என்று கருத முடியுமா? கேள்விக்கிடமின்றி, உச்சநீதிமன்றத்தின் நீதிபதிகள் அனைத்து பிரிட்டிஷ் பிரஜைகளைப் போன்றே மாகாணங்கள் முழுவதிலும் அதிகார எல்லை உடையவர்கள், அந்த வகையில் மன்னர்பிரானின் பெஞ்ச் நீதிபதிகள் கொண்டுள்ள அதே அதிகார எல்லை உடையவர்களாகவும் இருப்பார்கள்.

ஆயினும், இந்த ஷரத்தின்படி, இங்கிலாந்திலுள்ள மன்னர் பிரானின் பெஞ்ச் நீதிமன்றத்திற்குள்ள அனைத்து அதிகாரங் களும், பம்பாயிலுள்ள உச்ச நீதிமன்றத்திற்கு வழங்கப்பட்டுள்ளது; இது பம்பாய் பிரதேசம் முழுமைக்கு மட்டுமன்றி, பம்பாய் ராஜ தானிக்கு உட்பட்ட பிரதேசங்கள் முழுமைக்குமாகும். நபர்கள் சம்பந்தமாக எந்த வகையிலும் இது எல்லை வரம்பற்றதாகும்; மற்றும், மன்னர் பிரானின் பெஞ்ச் நீதிமன்றத்திற்கு, இந்தியாவின் வெவ்வேறு ராஜதானிகளுக்கு உட்பட்ட மாகாணங்களின் எந்தப் பகுதிக்கும் 'ரிட்' ஆணை வழங்குவதற்குள்ள அதிகாரம் படைத் துள்ளது. இந்த நிலை குறித்து விரிவாக ஆராய வேண்டிய அவசிய மில்லை; ஆனால் இது, மான்ஸ்ஃபீல்ட் பிரபு தீர்ப்புகளில் ஒன்றில் காணப்படும் ஒரு பதப்பிரயோகத்தின் மீது சார்ந்துள்ளது என்று நாங்கள் கருதுகிறோம். (கௌலீஸ் வழக்கு, 2வது பர்ரோஸ், பக்கம் 856). அதில் அவர் ''குடியேற்றங்களை''ப் பற்றிக் கூறுகிறார். ஆயினும் அதே தீர்ப்பில், மேன்மை தங்கிய நீதிபதி, இத்தகைய டொமினி யன்களுக்கு ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணை வழங்கப்பட்ட உதாரணம் எதுவும் தனக்கு நினைவில்லையென்றும், அல்லது தெரியாதென்றும் கூறுகிறார். இது விஷயம் சம்பந்தமாக இந்த போர்டுக்கு விண்ணப்பங்கள் செய்து கொள்ளப்பட்டுள்ளன என்று அவர் கூறுகிறார். இந்த போர்டுக்கு காலனிகள் மீது சட்டப் பிரச்சினை யில் ஒரு பொதுவான மேலாண்மை இருக்கிறது என்பதை நாம் அனைவரும் அறிவோம். எனவே, நீதிமன்றத்தின் முன்னால் ஒரு பிரமாணப் பத்திரம் தாக்கல் செய்யப்பட்டு, அதில் யாரோ ஒரு நபர், துணிச்சலுடன், அதற்கு அடிப்படையான அதிகார எல்லை வழங்கும் சூழ்நிலைகள் இருப்பதாக பிரமாணம் செய்து கூறினால், வாதத்திற் குரிய கோட்பாட்டின்படி, இமாலய மலையின் அடிவாரத்தில் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டுள்ள ஒரு நபர், அங்கிருந்து, வெஸ்ட் மினிஸ்டரிலுள்ள மன்னர் பிரானின் பெஞ்ச் நீதிமன்றத்

திற்குக் கட்டாயம் கொண்டுவரப்பட்டாக வேண்டும், அனால் அதே பொழுதில், மன்னர்பிரானின் பெஞ்ச் நீதிமன்றம் ஒரு 'ரிட்' ஆணை வழங்கவதற்குத் தகுதியுடையது என்று நினைக்க வேண்டும். நீதிமன்றத்திற்கு இந்த அதிகாரம் உண்டு என்றும் கலே நகரம் இந்த நாட்டின் வசத்தில் இருந்தபோது இது செலுத்தப் பட்டது என்றும் கூறப்படுகிறது. அது பற்றி ஐயப்பாடு இல்லை. கலே நகரம் பாராளுமன்றத்திற்கு உறுப்பினர்களை அனுப்பியது; ஒரு காலகட்டத்தில் இங்கிலாந்தின் சட்டம் அங்கு செல்லுபடி யாயிற்று, ஆயினும் இந்தப் பிரச்சினை பற்றி விவாதிப்பது அவசிய மில்லை.

லார்ட் ஹேலின் கோட்பாடுகளின் அடிப்படையில், கீழே உள்ள நீதிமன்றத்தில் ஒரு கற்றறிந்த ஆய்வறிக்கை சமர்ப்பிக்கப் பட்டதென்று நாங்கள் அறிகிறோம். (இங்கிலாந்து சட்டத்தின் சிவில் பகுதி (6வது பிரிவு) பற்றிய ஹேலின் பகுப்பாய்வு). உச்ச நீதிமன்றத்திற்கு அந்த சொல்லின் சாதாரண அர்த்தத்தில் - அதிகார எல்லை இல்லை என்ற போதிலும், அது, சுதேசிகளின் மீதான சிவில் அதிகார எல்லை அல்ல என்று வாதிக்கப்பட்டது. அதாவது, அதற்கு கிரிமினல் அதிகார எல்லை இல்லை. அதற்கு சமத்துவ அதிகார எல்லை இல்லை. அதற்குக் கப்பற்படை சம்பந்தமான அதிகார எல்லை இல்லை. இருந்த போதிலும் மன்னர் பிரானின் அனைத்துப் பிரஜைகள் மீதும் செலுத்தக்கூடிய ஓர் அதிகார எல்லை இருக்கிறது.* தற்போது பரிசீலனையிலுள்ள சாஸனத்தின்

---

★ hura summi imperii-க்கும் jura misti imperii-க்குமிடையே உள்ள வேற்றுமை ஹேலே பிரபுவால் தெரிவிக்கப்பட்டிருந்தது; அதனை கீழ் நீதிமன்றத்தில் சர் பீடர் கிரான்ட், தனது தீர்ப்பில் குறிப்பிட்டார்; பின்னர் அவர், மன்னர் பிரான் நீதிமன்றத்தில் கோகே பிரபுவின் சித்தரிப்பை அறிவிப்பதற்கு தொடர்ந்தார். (4-வது இன்ஸ்டிட் கேப். 7) அவர் மேலும், இந்த நீதிமன்றத்தின் அதிகாரம் பற்றிய மூன்றாவது சித்தரிப்பு உயர் அமைச்சரவைக்கு அதிகாரம் இந்த நீதிமன்றத்திடம் அளிக்கப்பட் டுள்ளது என்றும் அவர் குறிப்பிட்டார்; இந்த அதிகாரம், இந்நீதி மன்றத்தின் அதிகார எல்லையிலிருந்து அல்லது இது வழக்குகளை விசாரிப்பதற்கு மேற்கொள்ளும் அதிகாரத்திலிருந்து ஒட்டுமொத்தமாக தனியாகவும் தெளிவாக வரையறுக்கப்பட்டதாகவும் உள்ளது. இது குறித்து, கோகே பிரபு மிகத் துல்லியமாக விளக்கியதுபோல், சட்ட சம்பந்தமான தவறுகளையும் தவறான நடத்தைகளையும் சரி செய் வதற்கான அதிகாரம் என்றும் சர்பீடர் கிரான்ட் கூறினார்.

அனேகமாக ஒவ்வொரு பாகத்திலும், ''அதிகாரம், அதிகார எல்லை, அதிகார உரிமை'' என்ற சொற்கள் காணப்படுகின்றன; ஆனால் இந்தக் குறிப்பிட்ட ஷரத்தில் ''அதிகாரம்'' என்ற சொல் காணப்படவில்லை. அதிகார எல்லை என்பதுடன் வேறுபட்ட முறையில் அதிகாரம் என்ற சொல் மிகவும் முக்கியமானதாகக் கருதப்பட்டு வரும் நிலைமையில், அதிகாரத்தைக் குறிப்பிடும் சொல் காணப்படாதது மிகவும் விந்தையானதாகும். ஆனால், அதிகாரத்தினின்றும் வேறுபட்ட முறையில் அதிகார எல்லை என்பது என்ன? செலுத்தப்படுவதற்கென்று பொருள்படும் இந்த அதிகார எல்லையின் தன்மை பூரணமாக விவாதிக்கப்படுகிறது. கருத்துரை கூறுபவர்களில் ஒருவர் அதற்கான விளக்கத்தை ஒரே ஒரு வரியில் கூறியுள்ளார்.*

உச்ச நீதிமன்றங்கள் மன்னர் பிரானின் பெஞ்ச் நீதிமன்றங்கள், அவற்றுக்கு மன்னர் பிரானின் பெஞ்ச் நீதிமன்றத்திற்குள்ள எல்லா அதிகார உரிமையும் உண்டு என்று கூறப்பட்டது. வேல்ஸில், கிரேட் செஷன்ஸ் நீதிமன்றத்தின் அதிகார எல்லை, ஹென்றி III, C. 28ன் 34வது, 35வது ஷரத்துகளில் அனேகமாக ஒன்று போன்ற சொற்களில் கொடுக்கப்பட்டுள்ளது. மேன்மை தங்கிய மன்னர் பிரானின் அனேகமாக எல்லாக் காலனிகளின் நீதிமன்றங்களின் சாசனங்களிலும்கூட இந்த சொற்கள் கூறப்பட்டுள்ளன. உண்மையில் அவை ஒரு பொதுவான சூத்திரமாகும்.

வில்லியம் கோட்டையிலுள்ள உச்சநீதிமன்றத்திற்குக் கொடுக்கப்பட்ட சாஸனத்திலும், இது போன்ற வர்ணனையுள்ள ஒரு ஷரத்து (பிரிவு 4) காணப்படுவதை கவனிப்பது அவசியமாகும். (மோர்லியின் களஞ்சியம், ii, பக்.551). இந்த ஷரத்து, கம்பெனியின் சாஸனங்களின் 26வது ஜியிஓ. II பக்கம் 446ல் உள்ள சாஸனத்திலுள்ள ஒரு ஷரத்திலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளது. அது, ''வங்காளத்தில் கவர்னர், அல்லது வில்லியம்ஸ் கோட்டையின் தலைவரும் கவுன்சிலும், தற்போதைக்கு சமாதான நீதிபதிகளாக இருப்பார்கள். சமாதான நீதிபதிகளாக செயல்படுவதற்கு அதிகாரம் உடையவர்களாக இருப்பார்கள், மற்றும் ஓயெர் அண்ட் டெர்மினர் மற்றும் பொது ஜெயில் விடுதலை கமிஷனர்களாகவும், இருப்பார்கள்

* cujacil paratitla in Pandecta, lib. ii, tit. 1: jurisdictionis proprie notio est quae jure magistratus competit, quae enim mandata a magistrateu, aut a lege specialiter magistratui delegata est, non jure suo competit; officio quidem magistratrus continetur sed jurisdictione non continetur.

என்றும் ஆணையிடுகிறது, நிறுவுகிறது, நியமிக்கிறது; மேலும் அவர்கள், அல்லது அந்த மூவரில் யாராவது ஒருவர் அல்லது தலைவர் அல்லது அவர் இல்லாத சமயத்தில், அப்பொழுது வில்லியம் கோட்டையிலுள்ள கவுன்சிலின் மூத்தவர்) முறையே சமாதான நீதிமன்றத்தின், ஓயெர் அண்ட் டெர்மினரின் மற்றும் ஜெயில் விடுதலை அமர்வுகளை நடத்தக்கூடும். இது கல்கத்தா நகரத்திற்கு, வங்காளத்தில் வில்லியம் கோட்டையிலுள்ள கல்கத்தா தொழிற்சாலைக்கு, அதற்குக் கீழுள்ள இதர தொழிற்சாலை களுக்குப் பொருந்தும். அவர்கள் சமாதான நீதிபதிகள் மற்றும் ஓயெர் அண்ட் டெர்மினர் மற்றும் ஜெயில் விடுதலைக் கமிஷனர் களாக இதர எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்வார்கள். இவர்கள் மதராஸ் பட்டணம் நகரத்தின் சமாதான நீதிபதிகள், ஓயெர் அண்ட்டெர்மினர் மற்றும் ஜெயில் விடுதலைக கமிஷனர் களுக்குள்ள அதே அதிகாரங்கள், அதிகார எல்லைகள், முதலிய வற்றைப் பெற்றிருப்பார்கள். ''மதராஸ் சம்பந்தமான ஷரத்து 430ம் பக்கத்தில் காணப்படுகிறது. அது இவ்வாறு கூறுகிறது.'' மேற்படி கம்பெனிக்கும், அவர்களுக்குப் பின் பதவிக்கு வருபவர் களுக்கு செயின்ட் ஜார்ஜ் கோட்டையின் ஆளுநர், அல்லது தலைவர் மற்றும் கவுன்சில் சமாதான நீதிபதிகள் இருப்பார்கள், மற்றும் மதராஸ் பட்டணத்திற்கும், செயின்ட் ஜார்ஜ் கோட்டைக்கும், விசாகப் பட்டணம் செயின்ட் டேவிட் கோடடைக்கும், சுமத்ரா கரையிலுள்ள தொழிற்சலைகளுக்கும், செயின்ட் ஜார்ஜ் கோட்டைக்குக்கீழ் உள்ள இதர அனைத்துத் தொழிற்சாலைகளுக்கும் சமாதான நீதிபதிகளாக செயல்படுவதற்கு அதிகாரம் பெற்றிருப்பார்கள். ஒரு உச்ச நீதிமன்றம் அமைக்கப்பட்டு, அந்த நீதிமன்றத்தின் நீதிபதிகளும் சமாதான நீதிபதிகளாகவும், சமாதானத்தைப் பாதுகாப்பவர்களாகவும் செயல்படுவார்கள் என்பது சரியானதே. அவர்களுக்கு மன்னர் பிரான் பெஞ்ச் நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்கு இருக்கின்ற தன்மை வாய்ந்ததைப் போன்று சமாதான நீதிபதிகள் மற்றும் சமாதானப் பாதுகாவலர்களின் அதிகாரம் இருக்க வேண்டும். இந்தப் பிரிவின் வெளிப்படையான நோக்கம் இதுதான் என்று தோன்றுகிறது.

மறுபுறத்தில், உச்சநீதிமன்றத்திற்கு, பம்பாய் ராஜதானிக்கு உட்பட்ட பிரதேசங்களில் உள்ள எல்லா நீதிமன்றங்களுக்கும் மன்னர் பிரானின் (அரசாங்கத்தின்) அனைத்து 'ரிட்' ஆணைகளையும் வழங்குவதற்கு அதிகாரமிருக்கிறது என்றும் வாதிக்கப்பட்டுள்ளது. முந்தைய பொது ஷரத்தின்கீழ் அந்த அதிகாரம் இருக்கிறதெனில்,

சாஸனமானது ரிக்வெஸ்ட் நீதிமன்றங்கள் மற்றும் குவார்ட்டர் செஷன்ஸ் ஆகியவற்றை நிறுவிய பின்னர் ''அனைத்து மேலே கூறப் பட்ட நீதிமன்றங்களும், நீதிபதிகளும் பிற மாஜிஸ்ட்ரேட்டுகளும் பம்பாய் நகரம் மற்றும் பம்பாய்த் தீவுக்கும், அவற்றுக்குக் கீழ் உள்ள தொழிற்சாலைகளுக்கும் நியமிக்கப்படும் இவர்கள்- உச்ச நீதிமன்றத்தின் உத்தரவு மற்றும் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவர்கள் என்று ஏன் கூற வேண்டும்? ராஜதானிக்கு உட்பட்ட பிரதேசங் களின் எல்லைகளுக்குள் நிறுவப்பட்ட ஒவ்வொரு நீதிமன்றத்தின் மீதும் அதற்கு ஒரு பொதுவான அதிகார எல்லை இருக்கும்பட்சத் தில், பம்பாயின் ஸ்தல எல்லைகளுக்குள் நிறுவப்படும் சில நீதிமன்றங்கள் சம்பந்தமாக, நீதிமன்றத்திற்கு இந்த அதிகார எல்லையை வழங்கும் இந்த ஷரத்தின் உபயோகம் எங்கே? இந்த நீதிமன்றத்திற்கு உண்மையில் ஓர் ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றத்தின் தன்மையில் மேற்கொண்டும் ஓர் அதிகார எல்லை உள்ளது.

34 ஜியோ III, அத்தியாயம் 52, சட்டத்தில் - கடைசிக்கு முந்திய சாஸன சட்டமாகிய இதில், மன்னர் பிரானின் பெயரில் சமாதானக் கமிஷன்களை வெளியிடுவதற்கும், பம்பாய் மாகாணத் திற்கும், ராஜதானிக்கும், நகரத்திற்கும் மற்றும் தொழிற்சாலைக் கும், அதற்கு உட்பட்ட அல்லது அதைச் சேர்ந்த இடங்களுக்கும் சமாதான நீதிபதிகளை நியமிப்பதற்கும் வங்காளத்தின் கவர்னர் ஜெனரலுக்கு ஓர் அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. மற்றும் ஒரு ஷரத்து சேர்க்கப்பட்டுள்ளது (பிரிவு 153), அது இவ்வாறு கூறுகிறது. ''இந்தியாவில் பிரிட்டிஷ் குடியேற்றப் பகுதிகள் அல்லது பிரதேசங் கள் எதிலாவது எந்த சமாதான நீதிபதி அல்லது நீதிபதிகள் வழங்கிய அனைத்து தண்டனைகள், தீர்ப்புகள், உத்தரவுகள், அல்லது அவர் களுக்கு முன்பு நடைபெற்ற மற்றும் பிற விசாரணைகள், ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றங்களுக்கு வெளியில் நடைபெற்றவை, அதே ராஜதானியில் ஓயெர் மற்றும் டெர்மினர் மற்றும் ஜெயில் விடுதலை நீதிமன்றத்தில் 'செர்டியரோரி' ரிட் ஆணையால், பாதிக்கப்பட்ட எந்த தரப்பின் விண்ணப்பத்தின் பேரில் அகற்றப் படும், அகற்றப்படக்கூடும்''.

ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டுகளின் முன்னால், தண்டனைகள் சம்பந்தமாகவும் இது போன்ற ஒரு ஷரத்து, காலஞ்சென்ற மன்னர் பிரானின் 53வது, இன்கேப் 155, 105 பிரிவினால் வழங்கப்பட்

டுள்ளது. இதன்படி, செட்டியோராரி ரிட் ஆணையினால், அகற்றும் அதிகாரம் ராஜதானியின் ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றத்தில் வழங்கப்பட்டுள்ளது. இப்பொழுது, செர்டியோராரி ரிட் ஆணை வழங்கும் அதிகாரம் வெளிப்படையாகத் திருப்பி எடுத்துக் கொள்ளப்படாத இடத்தில், மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தில் பொதுவான சட்டத்தின் வாயிலாக அது இருந்து வருகிறது; அவர்களின் அதிகார எல்லையை நீக்குவதற்கு அது வெளிப்படையாக அகற்றப்பட வேண்டும். ஆனால் இங்கு, அதைத் திருப்பி எடுத்துக் கொள்ளும் பிரச்சினையல்ல, மாறாக, அதை வெளிப்படையாக வழங்கும் பிரச்சினையாகும். மேலும் அவ்வாறு கொடுக்கப்பட்டிருந்தால் ஒழிய, அது இருந்திருக்கிறதா என்பதே பிரச்சினையாகும். பம்பாயிலுள்ள ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றத்தின் நீதிபதிகள் உச்ச நீதிமன்றத்தின் நீதிபதிகளாவர்; ஆனால் ஜில்லா நீதிமன்றங்கள் மற்றும் உச்ச நீதிமன்றத்தின் மீது அவர்கள் இந்த கண்காணிக்கும் (மேற்பார்வையிடும்) அதிகார உரிமையை எடுத்துக் கொள்வதில்லை; ஆனால் அந்த நோக்கத்திற்காக, ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றத்திலிருந்து ஒரு செர்டியோராரி ரிட் ஆணை வழங்குவதற்கு அவற்றுக்கு (அவர்களுக்கு) ஒரு சிறப்பு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. இது, உச்சநீதிமன்றம், தானாக, வாதத்திற்குரிய அதிகாரத்தைத் தானாகக் கொண்டிருக்கவில்லை என்பதைக் காட்டுவதற்கு இது வலுவாக முனைகிறது.

லார்டு டெர்டெர்டென்: ''சமாதான நீதிபதிகள் வழங்கும் தண்டனை ராஜதானியின் உச்ச நீதிமன்றத்தினால் செர்டியோராரி ரிட் ஆணையின் மூலம் அகற்றப்பட முடியும்.''

ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றத்தில், அந்த நீதிமன்றம், அதே நபர்களைக் கொண்டு அமைக்கப்படுகிறது. ஆனால் அவர்களுக்கு, உச்சநீதிமன்றத்தின் நீதிபதி என்ற அதிகாரம் வழங்கப்படவில்லை, மாறாக, ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிபதிகள் என்ற அளவில் அதிகாரம் வழங்கப்படுகிறது.

அது ஓர் உலகளாவிய கிரிமினல் அதிகார எல்லை வழங்குவதாக பம்பாய் சாஸனம் கூறவில்லை, ஏனெனில் அது, நீதிமன்றக் கிரிமினல் அதிகார எல்லையை செயல்படுத்த வகை செய்வதற்கு ஒரு ஓயெர் மற்றும் ஜெயில் விடுதலை நீதிமன்றமாகத்தான்

அமைக்கப்பட்டுள்ளது. சிவில் அதிகார எல்லையின் அதிகாரம் திட்டவட்டமாகக் கொடுக்கப்பட்டுள்ளது:- அந்த அதிகார எல்லைக்கு உட்படும் நபர்கள் திட்டவட்டமாக சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. மாகாணங்களின் மீதான ஒரு பொதுவான அதிகார எல்லை மன்னர் பெஞ்ச் நீதிமன்றத்தின் தனி உரிமைகளும் சலுகைகளும் வரைமுறையின்றி ஒருபோதும் கொடுக்கப்பட மாட்டாது. உச்சநீதிமன்றம் ஒரு சிவில் நீதிமன்றமும், ஒரு நடுநிலைதவறா நீதிமன்றமுமாகும். எதிர்ப்பக்கத்தில் கடைப்பிடிக்கப்படும் அமைப்பு விதிகளின்படி, நீங்கள் அனைத்தும் வழங்குகிறீர்கள், பின்னர் நீங்கள் ஒரு பகுதியைக் கொடுக்கிறீர்கள்; நீங்கள் எல்லா அதிகார எல்லையையும் தருகிறீர்கள்; அது முழு எஸ்டேட் என்ற வகையில் தருகிறீர்கள்; பின்னர் நீங்கள் இந்த சிறிய அனுகூலமான பாரம்பரியங்களை கொஞ்சங்கொஞ்சமாக அளிக்கிறீர்கள். ஏற்கனவே முழுமையாகப் பெற்றவர்கள், இந்த அமைப்பு விதியின்படி, முழுமையைக் காட்டிலும் ஓரளவு குறைவாகப் பெறுகிறார்கள்.

ஆயினும் ரகுநாத் (1 க்னாப், 8) சம்பந்தமாக, அவருடைய வழக்கில் செலுத்தப்படுவதற்கு முயன்றதுபோல், பம்பாய் உச்ச நீதிமன்றத்திற்கு அத்தகைய ஓர் அதிகாரம் வழங்கப்பட்டிருக்க முடியும் என்று வாதிடுவது அசாத்தியமாகும். அவர் பூனாவில் வசித்து வந்தார். எனவே, ஒரு வழக்கு விவகாரத்தை பம்பாய் நீதிமன்றத்திற்கு மாற்றுவதற்கு விரும்பப்பட்டது. ஒரு பிராமணப் பத்திரத்தின் பேரில் ஒரு ஹேபியஸ் கார்ப்பஸ் ஆணை வழங்கப்பட்டது. ஓர் உயர் பதவியிலுள்ள ஒரு நபர், சான்றுரைத்த குடும்பத்திற்கு அனேகமாக உறவு முறையானவர், தான் இயல்பான கார்டியனாக இருந்த ஒரு பையனை ஆஜர்படுத்தும்படி கோரப்பட்டார். அவர் அப்பொழுது சட்ட விரோதமாக அந்தப் பையனை தனது வசம் அடைத்து வைத்திருந்தார். அவர் இந்த அதிகார எல்லைக்கு எப்படி உட்படுவார் என்று உடனேயே கேள்வி எழுந்தது. அவர் அதை எதிர்த்திருந்தால், ஒரு மோதல் ஏற்பட்டிருந்தால், ரிட் ஆணைக்குக் கீழ்படியாதவர்களுக்கு எதிராக ஓர் அட்டாச்மெண்ட் உத்தரவு எவ்வாறு வெளியிடப்பட முடியும்? ஓர் அட்டாச்மெண்ட் உத்தரவை வெளியிடும் இந்த அதிகாரத்தினால், நீங்கள் ஒரு ஸ்தல அதிகார எல்லையை வழங்குகிறீர்கள். இது சாஸனத்தின் முறையான, வரையறுக்கப்பட்ட ஷரத்துகளின்படி இருந்திருக்கவில்லை. கீழ்ப்படிய மறுக்கும் தரப்பு உச்ச நீதிமன்றத்தின் அதிகார எல்லைக்குட்பட்ட

வரையறுக்கப்பட்ட வகையைச் சேர்ந்தவராக இருந்தால், அவர் பதிவு செய்யப்பட வேண்டும்; இந்த நபர் பதிவு செய்யப்பட வில்லை எனவே, அந்த ரிட் ஆணையை வழங்குவதற்கு அந்த நீதிமன்றத்திற்கு அதிகார எல்லையே இல்லையென்று தோன்றியது. எனவே, அதற்குக் கீழ்ப்படியாததற்கு, நீதிமன்ற அவமதிப்பு செய்ததாக, அவர் மீது ஒருபோதும் குற்றம் சாட்டமுடியாது. ஒரு நீதிபதி தனது பிரதேச அதிகார எல்லையை மீறிச் செல்லும்போது, சம்பந்தப்பட்ட நபர்கள் கீழ்ப்படியவேண்டிய கட்டாயமில்லை என்று ரோமானிய சக்கரவர்த்தி கூடத் தனது பிரஜைகளுக்குக் கூறுகிறார்.

பாப்புகுன்னஸ் வழக்கைப் பொறுத்தமட்டிலும் ( 1 க்னாப், 11) மாகாண நீதிமன்றத்தின் ஜெயிலருக்கு ஒரு ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணை வழங்கப்பட்டது. அந்த ரிட் ஆணை வழங்கப்படு வதற்கு இத்தகைய அதிகார எல்லை அனுமதிக்கப்படுமேயானால் அத்தகைய ரிட் ஆணையைப் பெறுகின்ற ஒவ்வொரு நபரும், நீதிமன்றத்தின் அதிகார உரிமையின் கீழ் செயல்படும் அந்த நபர், தன் வசமுள்ள நபரை ராஜதானியில் ஆஜர்படுத்த வேண்டும், அல்லது அவரைக் காவலில் வைத்திருப்பதற்கான காரணங் களை விவரமாகக் கூற வேண்டும். அத்தகைய அதிகாரிகள், ஆட்சேபனையை அகற்றுவதற்கு எவ்வாறு சூழ்நிலைகளை அவ்வளவு துல்லியமாகக் கூறமுடியும்? டில்லியிலோ, புனாவி லிருந்தோ வெளியிடப்பட்ட ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணைக் கான பதில், நம்முடைய முறைகளின்படி மிகமிகக் குறைபாடுள் ளதாக இருக்கும். இந்த சட்டங்களை இயற்றியவர்கள், அந்த சிந்தனையை (எண்ணத்தை) ஒருபோதும் கண்டுணராமல் இருந் திருக்க முடியாது. அத்தகைய நிலைமை ஏற்படுவதை அவர்கள் ஒருபோதும் எண்ணியிருக்கவில்லை என்பது தெளிவு.

மேன்மை தங்கிய உங்களுடைய கவனத்திற்கு இந்த சூழ்நிலை மையைக் கொண்டுவருவது முக்கியமானதாக இருக்கக் கூடும். மேல்முறையீட்டுத் தகுதியுடன் கூடிய மாகாண நீதிமன்றங்களை நிறுவுவதற்கும் முறைப்படுத்துவதற்கும் பல்வேறு சட்டங்களில் வகைசெய்யப்பட்டுள்ளது. 37வது ஜியிஓ III கேப்.142, பிரிவுகளின் படி, சுதேசிகளை பாதிக்கின்ற கவர்னர் ஜெனரலின் விதிமுறைகள், ஒரு சட்டத் தொகுப்பாக உருவாக்கப்பட்டு, எல்லா சுதேசி மொழி

களிலும் வெளியிடப்பட வேண்டும். சுதேசிகள் தாங்கள் எதிர் நோக்க வேண்டிய சட்டம் என்ன என்பதைத் தெரிந்திருக்க வேண்டும். இந்தி விதிமுறை முதலில், காலஞ்சென்ற மார்க்குவிஸ் கார்ன்வாலிஸினால் இயற்றப்பட்டது, மிகவும் அனுகூலமானதாகக் காணப்பட்டது, எனவே அது சட்டப் பேரவையினால் ஏற்கப்பட்டு, நாட்டின் சட்டத்தின் ஒரு பாகமாக்கப்பட்டது.

மாகாண நீதிமன்றங்கள் முறையாக நிறுவப்பட்டுள்ளன, மிகக் கீழ்நிலை நீதிமன்றத்திலிருந்து, மிக உயர்ந்த மேல் முறையீடு அதிகார எல்லையுடைய நீதிமன்றத்திற்குத் தொடர்ந்து மேல் முறையீடுகள் செய்ய முடியும். பல ராஜதானிகளில் நிறுவப் பட்டுள்ள இந்த நீதிமன்றங்களில் கிரிமினல் மற்றும் சிவில் விவகாரங்களில் மேல் முறையீடு செய்ய முடியும். சுத்துர் திவானி அதாலத் என்பதுதான் இந்தியாவில் சிவில் விவகாரங்களின் மிக உயர்ந்த மேல் முறையீடு நீதிமன்றமாகும். சுத்துர் நிஜாமத் அதா லத்தான் கிரிமினல் வழக்குகளுக்கு மிக உயர்ந்த மேல்முறையீடு நீதிமன்றமாகும். இந்த இரண்டு நீதிமன்றங்களும் 53வது ஜியிஓ. III (C.155) யினால் அங்கீகரிக்கப்பட்டுள்ளன. உச்ச நீதிமன்றத் தினால் அனுப்பப்பட்டு, இந்தியாவில் மேல்முறையீட்டு நீதிமன்றத் திலிருந்து 5000 பவுன்களுக்கு அதிகமான மதிப்புடைய வழக்கு களில் மேன்மைதங்கிய மன்னர்பிரானின் கவுன்சிலுக்கு மேல் முறையீடு செய்வதற்கான ஒரு ஷரத்தும் உருவாக்கப்பட்டுள்ளது. பம்பாயில் ஜஸ்டிஸ் நீதிமன்றங்கள் சம்பந்தமாக எண்ணற்ற விதி முறைகள் மிகுந்த உழைப்பின் பேரிலும் கவனத்துடனும் சமீபத்தில் பரிசீலனை செய்யப்பட்டு, ஒரு சட்டத் தொகுப்பாக உருவாக்கப் பட்டுள்ளது. இந்த சட்டத் தொகுப்பு 1827ல் வெளியிடப்பட்டது. மாகாண நீதிமன்றங்கள் அல்லது மாஜிஸ்ட்ரேட்டுகள் நீதிமன்றங் களிலிருந்து, - பம்பாய் பிரதேசங்களில் மேன்மைதங்கிய மன்னர் பிரானின் டொமினியன்களின் எந்தப் பகுதியிலிருந்து போலவே, ஒருவர் பெறுகின்ற எந்தப் பாதிப்பிலிருந்தும நிவாரணம் பெறு வதற்கு அந்த நபருக்கு வகை செய்வதற்கு, அந்தப் பிரஜையின் பாதுகாப்புக்குப் பெருமளவு கவனம் மேற்கொள்ளப்பட்டுள்ளது என்பதை இது தெளிவாகக் காட்டுகிறது. முறையற்ற வகையில் காவலில் வைக்கப்பட்டவர்கள் சம்பந்தமாக, குறிப்பான விதிமுறை கள் இருக்கின்றன. இவற்றையெல்லாம் மாஜிஸ்ட்ரேட்டுகள், செயலில் நிறைவேற்றுவதற்கு, அவர்கள் எடுத்துக் கொண்டுள்ள

பதவிப் பிரமாணத்தினால் கட்டுப்பட்டுள்ளனர்; அவர்கள் ஊழலான முறையில் செயல்பட்டால், உச்சநீதிமன்றத்தில் அவர்களுக்கு எதிராக நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுவதற்கு உட்பட்டுள்ளார்கள். அதற்கு சட்டத்தில் ஒரு சிறப்பு விதி இருக்கிறது. விதிமுறை XIIல், முதுநிலை மாஜிஸ்ட்ரேட்டுகள், கீழ்நிலை அதிகாரிகள் அனைவரையும் கண்காணிக்க வேண்டிய முறைபற்றி சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. XIII வது விதிமுறையின்படி, நீதிபதி அனைத்து சிறைகளையும் சென்று பார்வையிடுவதற்குக் கட்டுப்பட்டுள்ளார்; நபர்கள் சட்ட விரோதமான முறையில் அங்கு காவலில் வைக்கப்பட்டுள்ளனரா என்பதைக் கண்டறிவதே இதன் நோக்கமாகும்; அவர் கிரிமினல் மற்றும் சிவில் சிறைகளையும் சென்று பார்த்து, சம்பந்தப்பட்ட அதிகாரிக்கு பிழையான தீர்ப்புகளை சுட்டிக்காட்டி, தேவைப்பட்டால், அது சம்பந்தமான சம்பங்களை, திருத்துவதற்கு முடிவு செய்வதற்கு சுத்தூர் ஃபௌஜ்தாரி அதாலத்துக்கு முன் கொண்டு செல்ல வேண்டும்.

ஒரு மாகாண நீதிமன்றத்தின் ஓர் அதிகாரியாகக் கம்பெனியின் சேவையிலுள்ள ஒரு நபர், அதன் காரணமாக, ஒரு தனிநபராக அவர் செயல்படும் விவகாரங்களில், உச்ச நீதிமன்றங்களின் அதிகார எல்லை வரம்பிலிருந்து அவருக்கு விதிவிலக்களிக்கப்படுகிறது; ஆனால், அவர் மாகாண நீதிமன்றத்தின் உத்தரவுகளின் பேரில் எந்த நபரையாவது காவலில் வைத்தால், அத்தகைய செயலுக்காக அவர் எந்த நடவடிக்கைக்கும் ஆட்படமாட்டார், அது போன்றே நீதிபதியும் எந்த நடவடிக்கைக்கும் ஆட்படமாட்டார். ஊழல் சம்பந்தமான விஷயத்தில் மட்டும் தகவலின் பேரில், உச்ச நீதிமன்றத்தில் அவர் நடவடிக்கைக்கு ஆட்படுவார். மாகாணங்களில் ஒரு நபர் நீதிமன்றங்களின் உத்தரவுகளின் பேரில் சிறையிலடைக்கப்பட்டால், அத்தகைய நபரை, அவருடைய வழக்கைப் புலன் விசாரணை செய்வதற்காக ஆஜர்படுத்தும்படி உச்ச நீதிமன்றம் உத்தரவிட முடியாது. மாகாணங்களில் அந்த நீதிமன்றங்களின் மீது அந்த நீதிமன்றத்திற்கு அத்தகைய கண்காணிப்பு அதிகார எல்லை கிடையாது. இது சம்பந்தமாக லார்ட் கோக், தனது நான்காவது இன்ஸ்டிடியூட்டில், மன்னரின் பெஞ்ச் நீதிமன்றம், நாட்டின் அனைத்து கீழ்நிலை அதிகார எல்லைகளைக் கண்காணிக்கவும், அளவுக்கு மீறியவற்றைக் கட்டுப்படுத்தவும் அதிகாரம் கொண்டுள்ளது என்று கூறுகிறார். இத்தகைய அதிகார உரிமை உச்சநீதி

மன்றத்திற்குக் கொடுக்கப்படவில்லை, எனவே அதன் விளைவாக, விண்ணப்பத்தில் கூறப்பட்டுள்ள வழக்குகளில் ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணைகள் வெளியிடப்படுவது சட்ட விரோதமான செயல் களாகும்.

திரு.டென்மன், தனது பதிலில் இவ்வாறு கூறினார்: பம்பாயி லுள்ள உச்ச நீதிமன்றம் ஓயெர் மற்றும் டெர்மினர் நீதிமன்றமாக் கப்பட்டுள்ளது, அதற்கு இங்கிலாந்திலுள்ள மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் அதிகார எல்லையும் இருக்கிறது. அந்த நீதிமன்றத் திற்கு, தற்போதைய அதிகாரம் வற்புறுத்தப்பட்டது என்பது ஒரு சம்பவமாக உள்ளது.

இந்த நீதிமன்றமானது வேண்டுகோள் நீதிமன்றம், காலாண்டு அமர்வு நீதிமன்றம் ஆகியவற்றின் மீது தனிவகையான அதிகாரங் களைக் கொண்டுள்ளது. (ஷரத்து 59, மோர்லேயினுடைய இடித்துரை பக்கம் 677) எனவே இந்நீதிமன்றம், அந்நீதிமன்றங்களுக்கு ரிட் ஆணைகள் பிறப்பிக்கவும் அபராதம், சிறைத்தண்டனை விதித்து தண்டிக்கவும் முடியும். பொதுவான மானியத்தில் இவை ஏற் கெனவே சேர்க்கப்பட்டிருந்தால் சாசனம் இந்த விவரங்களை யெல்லாம் ஏன் கொடுக்க வேண்டும் என்று இப்பொழுது வினா எழுப்பப்படுகிறது. அப்படியெனில், நாடாளுமன்றத்தின் ஆங்கிலேய கூட்டங்களின் பட்டியல்களில் ஓர் அவசியமற்ற அதிகாரம் உருவாக்கப்பட்டிருப்பதாகக் காட்டப்படுவது இதுதான் முதல் தடவையாக அல்லது வெளிப்படையான சொற்கள் உபயோகப்படுத்தப்பட்டிருப்பதும் அல்லது மீண்டும் மீண்டும் கூறப்படும் உருவகத்தைக் கண்டுபிடிக்க முடியும் என்பது இதுதான் முதல் தடவையா? தெளிவாகக் கூறுவதெனில் இதனால் எத்தகைய பயனுமில்லை என்றும், நாடாளுமன்றத்தின் ஒவ்வொரு கூட்டத் தொடரின் அனுபவமும் எடுத்துக்காட்டுவது போல் அந்த வாதம் உந்தித் தள்ளப்பட முடியுமா?

ஆனால் இந்தப் பிரிவு எதையாவது நிரூபணம் செய்கிறதெனில், அது பெருமளவு மிகையாக நிரூபணம் செய்கிறது. **மாண்டமஸ், செர்டியோரி, புரோசீடெண்டோ** ஆகிய ரிட் மனுக்கள் மட்டுமே இதில் கூறப்பட்டுள்ளன. இது தவறாகும். இந்த சாஸனத்தில் ஹேபியஸ் கார்ப்பஸ் பற்றிக் கூறப்படவில்லை. ஆயினும்

ஹேபியஸ் கார்ப்பஸ் என்ற ரிட் மனு மட்டுமே இடைவிடாது வழங்கப் பட்டு வந்துள்ளது என்று கூறப்பட்டுள்ளது. மேலும், தணடனைகள் மற்றும் மாஜிஸ்டிரேட்டுகளின் உத்தரவுகளை அகற்றுவதற்கு செர்டியோரி மனுக்கள் மீதான உத்தரவுகள் வழங்கப்பட்டுள்ளன. இவ்வாறு கூறுவதனால் சிறிதும் பயனில்லை. ஒரு மனிதன் சிறை யிலேயே இருக்க வேண்டியிருக்கும்போது ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் அவனைப் பாதுகாக்க முடியாது என்ற நிலைமை இருக்கும் போது, அந்த மனிதனுக்கு எதிரான தண்டனையை ஏன் தள்ளுபடி செய்ய வேண்டும்?

வங்காளத்தில் வில்லியம் கோட்டைக்குள், கல்கத்தாவின் உச்ச நீதிமன்றம் ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் உத்தரவுகளை வெளி யிடுவதற்கு அதிகாரமளிக்கப்பட்டுள்ளது என்று ஒத்துக்கொள்ளப் பட்டுள்ளது; எனவே, பம்பாய் பிராந்தியங்களுக்குள், தற்போதைய மாட்சிமை தங்கிய மன்னரின் உத்தரவில் வர்ணித்துள்ளபடி (4 GEO, iv.C.71) அதே அதிகாரம் இந்த உச்சநீதிமன்றத்திற்கும் நிச்சயம் இருக்க வேண்டும்.

இது, ''பம்பாய் நகரம் மற்றும் தீவு, அவற்றின் எல்லைகள், அதற்குட்பட்ட தொழிற்சாலைகள் ஆகிய அனைத்திற்குமான நீதிமன்றமாக இருக்கும். மற்றும் தற்போதுள்ள, அல்லது, இனிமேல் ஏற்படப் போகின்ற தொழிற்சாலைகளுக்குள்ளும் அது அமலாகும். ''மேலே கூறப்பட்ட வங்காளத்திலுள்ள வில்லியம் கோட்டைக்கு அளிக்கப்பட்டிருக்கின்றதைப் போன்ற அதிகாரங்கள், இங்குள்ள அரசுக்கு உட்பட்ட, அல்லது அதன் மீது சார்ந்துள்ள எல்லா இடங் களுக்கும் பொருந்தும்.'' (பிரிவு 10, மோர்லியின் டைஜஸ்ட், ii, பக்.645).

இவ்வாறு ஏற்படுத்தப்பட்ட அவை ஓர் உச்ச நீதிமன்றமாக அமையும். அதற்கு நமது மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத்தின் நமது நீதிபதிகளைப் போன்ற அதிகார எல்லையும், அதிகாரமும் இருக்கும். இங்கிலாந்து எனப்படும் கிரேட் பிரிட்டனின் அந்தப் பகுதிக்குள் சட்டப்படி செலுத்தப்படும் அதிகாரம் - சூழ்நிலைமைகள் அனுமதிக் கின்ற வரையில் அ்மலாகும்'' (பிரிவு 10). மன்னரின் பெஞ்ச் நீதிமன்றம் கொண்டுள்ள அனைத்து அதிகாரங்களும் இந்த மாநாட் டில் இந்த நீதிமன்றத்திற்கு உண்டு. இந்த நிலைமையில், எந்த

ஒரு குறிப்பிட்ட வழக்கிலும் அமல்படுத்துவதினின்றும் அதனுடைய அதிகார எல்லையைத் தடுப்பதற்கான விதிவிலக்கு எங்கே உள்ளது? இது நடவடிக்கைகள், வழக்குகள் மற்றும் குற்றச்சாட்டுகளை பாதிக்கும் என்று நாங்கள் காண்கிறோம். கிரிமினல் தகவல்கள் ஹேபியஸ்கார்ப்பஸ்ரிட்கள் மற்றும் பிற உயர் தனி அதிகாரமுள்ள 'ரிட்'கள் அனைத்தையும் பாதிக்கும் - அத்தகையது எதுவும் இங்கு காணப்படவில்லை.

சர்.தாமஸ் ஸ்ட்ரேஞ்சின் (நாகப்பசெட்டி எதிர் ராச்சம்மா வழக்கு) தனி ஒரு முடிவு நமது பிரச்சினைக்கு எத்தகைய சம்பந்தமும் உடையதல்ல. சென்னை நீதிமன்றத்தின் அதிகார எல்லைக்குள் வராத ஒரு நபர், சட்டத்தை மோசடியாகப் பயன்படுத்தியதன் மூலம், நடைமுறையில் அதற்குள் கொண்டு வரப்பட்டிருக்கிறார்.

பிரதம நீதிபதி அங்கு இவ்வாறு முடிவு செய்தார்: (I. ஸ்ட்ரேஞ்ச் சின், சென்னை வழக்குகள், பக்கம் 135) : ''ஒரு சுதேசி, அவருடைய விருப்பதற்திற்கு மாறாக, ஏதாவது காரணத்திற்காக, அரசாங்கத் தினால் சென்னைக்குக் கொண்டுவரப்பட்டுள்ள நிலையில், ஒரு மூன்றாவது நபர், அவரை இங்கு கொண்டு வருவது பற்றி அக்கறை யில்லாதவர், இந்த எல்லைகளுக்குள் அவர் இருப்பதைப் பயன் படுத்திக் கொண்டு, இந்த அதிகார எல்லைக்குள் அவரை வைத்துக் கொண்டிருப்பதை அனுமதிக்க முடியாது என்று ஒத்துக் கொண் டிருப்பதாகத் தெரிகிறது. குறிப்பாக, ஒரு வழக்கில் அவர்கள் இங்கு கொண்டுவரப்பட்டிருக்கும்போது நிச்சயமாக அவ்வாறு அனுமதிக்க முடியாது. வாதியின் காயப்படுத்தும் நடவடிக்கைக்கு எதிராக, அவர்கள் தங்களது அவசியமான தற்காப்பின் பேரில், எந்த நபரும் தனது சொந்தத் தவறைப் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது என்ற மூதுரைக்கு மாறாக, அவர்களை நிலைப்படுத்துவதற்கு இப்பொழுது பயன்படுத்திக் கொள்ளும்போது, அதன் விளைவுகளை சந்தித்தாக வேண்டும்.''

அப்படியெனில், இங்கு கூறப்பட்டுள்ள ஒரே விஷயத்தின் விளைவு இதுதான். அதாவது தனிநபர்களுக்கு இடையிலான ஒரு சிவில் வழக்கில் பிரதிவாதி, அதிகார எல்லை வரம்புக்குள் இல்லை. வாதியின் மோசடியான நடவடிக்கை அவரை அதனுள் கொண்டு வந்தாலன்றி - அத்தகைய நடவடிக்கை தவறு செய்பவருக்கு அனுகூலம்

அளிப்பதாகவும், பாதிப்புக்கு உள்ளானவருக்கு பாதகம் விளை விப்பதாகவும் இருக்கக்கூடாது.

கட்டாயமாக 'ரிட்' உத்தரவுகளை வெளியிடும் அதிகாரத்தை எந்த ஷரத்தும் திட்டவட்டமாகக் கொடுக்கவில்லை என்று உண்மை யாகவே கூறப்பட்டுள்ளது. ஆனால் அந்த அதிகாரம் இருந்து வருவது கேள்விக்கிடமற்றதாக இருப்பதால் - அது எப்போதும் செலுத்தப் பட்டு வந்துள்ளதால் - அதற்கு ஆரம்பம் எது என்று கூறப்பட முடியாத நிலையில் - ஆங்கிலேய மன்னரின் பெஞ்ச் நீதிமன்றத் தின் அனைத்து செயல்பாடுகளுடனும் உச்சநீதிமன்றம் துவக்கப் பட்டபோது, இங்கு நமக்கு மற்றொரு சான்று கிடைத்தது; அதை ஏற்படுத்தும்போது கூறப்பட்ட சொற்கள் வெறும் சூத்திரம் மட்டு மல்ல. அவற்றின் முழுப் பயனும் அதில் அடங்கியுள்ளது. 21வது Geo.III (c.70) கூட்டம், எளிதில் கண்டறிய முடியாத ஒரு வேறுபாட்டை செய்துள்ளதாகக் கூறப்பட்டது, ஏனெனில், அதனுடைய நோக்கம் மெய்யாகவே, 13வது Geo.III (C.63) இவ்வளவு விரிவாக செயல் படுவதனின்றும் தடுப்பதாக இருந்தால், இந்த மாற்றம் ஒரு தெளிவான சட்டத்தினால் கொண்டு வரப்பட்டிருக்கும்.

இந்த வழக்கில் எந்தத் தீர்ப்பு கூறப்படவில்லை, பிரிவி கவுன்சிலின் அறிக்கை மட்டுமே உள்ளது. இதை மாட்சிமை தங்கிய மன்னர் ஊர்ஜிதம் செய்துள்ளார். அது கூறுவதாவது :

''மேற்படி மனுவில் கூறப்பட்டுள்ள இரண்டு வழக்குகளில் ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணைகள் முறையற்ற வகையில் வழங்கப்பட்டன.

''ஒரு ஹேபியஸ் கார்ப்பஸ் ரிட் ஆணை வெளியிடுவதற்கு உச்சநீதிமன்றத்திற்கு அதிகாரம் எதுவுமில்லை. - அந்த ஸ்தல எல்லைகளுக்குள் வசிக்கும் ஒரு நபருக்கு, அத்தகைய நீதிமன்றத் திற்கு ஒரு பொதுவான அதிகார எல்லை இருக்கும் போது வழங்க லாம், அல்லது அந்த ஸ்தல எல்லைகளுக்கு வெளியில் உள்ள ஒரு நபருக்கு உச்ச நீதிமன்றத்தின் சிவில் மற்றுமு கிரிமினல் அதிகார எல்லை வரம்புகளுக்கு தனிப்பட்ட முறையில் உட்பட்டவராக இருக்கும்பட்சத்தில் அத்தகைய 'ரிட்' ஆணை வழங்கப்படலாம்.

''ஒரு சுதேசி நீதிமன்றத்தின் அதிகாரி, அல்லது ஒரு ஜெயில் அதிகாரிக்கு ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணையை வெளியிடு வதற்கு உச்ச நீதிமன்றத்திற்கு அதிகாரமோ, அதிகார வரம்போ கிடையாது; ஏனெனில், ஒரு சுதேசி நீதிமன்றத்தின் ஆணையின் பேரில் சிறையிலடைக்கப்பட்ட நபர்களை விடுதலை செய்வதற்கு உச்சநீதிமன்றத்திற்கு அதிகாரம் இல்லை.

ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணை வெளியிடுவது சம்பந்த மாகக் குறிப்பாகக் கூறப்படவில்லையென்றாலும் கூட சுதேசி நீதிமன்றத்தின் அதிகார எல்லை வரம்பை உச்ச நீதிமன்றம் நிச்சய மாக கவனத்தில் எடுத்துக் கொள்வதற்குக் கடமைப்பட்டுள்ளது.''

குறிப்பு : இந்த முடிவு அறிவிக்கப்படுவதற்கு முன்னால், பம்பாயிலுள்ள உச்ச நீதிமன்றம், கீழ்வரும் சூழ்நிலைமைகளில் மூடப்பட்டுவிட்டது. 1828 அக்டோபர் 10ம் தேதியன்று, பாண்டுரங் ராம்சந்தருக்கு அனுப்பப்பட்ட ஹேபியஸ் கார்ப்பஸ் 'ரிட்' ஆணைக்கு எந்த பதிலும் அனுப்பப்படாததால், ஒரு புளூரிஸ் ஹேபியஸ்கார்ப்பஸ் அனுப்பப்படுவதற்கு உத்தரவிடப்பட்டு, இதற்கு உடனடியாக பதில் அனுப்பப்பட வேண்டுமென்று கோரப் பட்டது. பதில் வராவிட்டால் ரூ.10,000 அபராதம் கட்ட வேண்டும் என்று விதிக்கப்பட்டது. இந்த 'ரிட்' ஆணைக்கும் எவ்வித பதிலும் வரவில்லை. இந்நிலையில், 1829 பிப்ரவரி 23ம் தேயன்று திரு. ஜஸ்டிஸ் கிரான்ட், பாண்டு ரங்குக்கு எதிராக, ஒரு ஜப்திவாரண்ட் அனுப்பும்படி உத்தரவிட்டார். இது கவர்னருக்கும், கவுன்சிலுக்கும் அனுப்பப்பட வேண்டுமென்றும், அவர்கள் அதை, அதற்காக நியமிக்கும் நபர் அல்லது நபர்கள் வாயிலாகச் செயல்படுத்தக் கூடும் என்று கூறப்பட்டது. அதே சமயத்தில் அரசு செயலாளருக்கு ஒரு கடிதம் அனுப்பப்பட வேண்டுமென்றும், இவ்வாறு நீதிமன்றம் செயல்படுவதற்கான காரணங்கள் விளக்கப்பட வேண்டும் என்றும் விதிக்கப்பட்டது. இத்துடன் பிரமாணப் பத்திரங்களின் பிரதிகளும் வழக்கு விசாரணை விவரங்களும் அனுப்பப்பட வேண்டும் என்றும் உத்தரவிடப்பட்டது. இந்தக் கடிதமும் 'ரிட்' ஆணையும் கிடைக்கப் பெற்றபின், அரசு செயலாளர் அளித்த பதிலில், 1829 அக்டோபர் 3ம் தேதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்த நடத்தை முறையை இங்கிலாந் திலிருந்து தங்களுடைய மேலதிகாரிகளிடமிருந்து உத்தரவுகள் வரும் வரையிலும் தொடர்ந்து கடைப்பிடிப்பது அரசின் நோக்கமாகும்

என்று கூறப்பட்டிருந்தது. இந்தப் பதில் கிடைத்ததற்குப் பின்னர், திரு. ஜஸ்டிஸ்கிராண்ட், 1829 ஏப்ரல் முதல் தேதியன்று, நீதிமன்றம் தனது செயல்பாடுகளையெல்லாம் நிறுத்திக் கொண்டுவிட்டதென்றும், நீதிமன்றத்தின் அதிகாரம் மதிக்கப்படும் என்றும் அதனுடைய ஆணைகளுக்குக் கீழ்ப்படிவார்கள் என்றும் அவற்றை ராஜதானியின் அரசு அமலாக்கும் என்றும் ஒரு வாக்குறுதி கிடைக்கப் பெறும் வரையில் ஒரு நீதிபதியின் செயல்பாடுகள் எதையும் தாம் ஆற்ற முடியாதென்றும் அறிவித்தார். ஏஷியாடிக் ரிஜிஸ்டர், தொகுதி 28, பக்கம் 351.

(இந்தியாவில் இருந்து வரும் உயர் நீதிமன்றங்கள் அமைக்கப்படுவது சம்பந்தமான உத்தரவு (letter patent), இவை 1861ம் வருட இந்திய உயர் நீதிமன்றங்கள் சட்டத்தின் கீழ் வெளியிடப்பட்டன (24, 25 Viet, e.104) அவற்றின் தேதிகள் பின் வருமாறு : கல்கத்தா, டிசம்பர் 28, 1865; சென்னை, டிசம்பர் 28, 1865; பம்பாய், டிசம்பர் 28, 1865, வடமேற்கு மாகாணங்கள், மார்ச் 17, 1866. உரிமை முத்திரைக் கடிதங்கள் (letter patent) Stat. R அண்ட் O, தொகுதி iv, பக்கங்கள் 82 - 131ல் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. உயர்நீதிமன்றங்களின் அதிகார எல்லை வரம்பு சம்பந்தமாக, கில்பெர்ட், இந்திய அரசு, பக்.241-255 பார்க்கவும். இதே விவரங்களை பக். 387-405 லும் பார்க்கவும் (இந்திய சுதேசிகளுக்கு ஆங்கிலேய சட்டம் பிரயோகம்); பக். 406-463 (சுதேச சமஸ்தானங்களில் பிரிட்டிஷ் அதிகார எல்லை).

● ● ●

# 5

# பம்பாய் மாநகரின் தீண்டப்படாத தொழிலாளிகள்

- ஜி.ஆர். பிரதான், பிஹெச்.டி.

## டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் முன்னுரையுடன்

## முன்னுரை

கலைகளில் தத்துவஞான டாக்டர் பட்டம் பெறுவதற்காக பம்பாய் பல்கலைக் கழகத்தினால் விதிக்கப்பட்ட தேவைகளைப் பூர்த்தி செய்யும் முகத்தான் நூலாசிரியர் எழுதியுள்ள ஆய்வுக் கட்டுரையாகும் இது. மேற்படி பல்கலைக் கழகத்தினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட இந்த ஆய்வுக் கட்டுரை, அதனுடைய தகுதிகளின் அடிப்படையில் போதிய பரிந்துரையாக அமைய வேண்டுமே தவிர இதற்கு என்னிடத்திலிருந்து முன்னுரை எதுவும் அவசியமில்லை. அப்படியிருக்க என்னுடைய ஒரு முன்னுரை அவசியம் என்று நூலாசிரியர் ஏன் கருதுகிறார் என்று எனக்குத் தெரியவில்லை. நான் இந்த ஆய்வுப் பொருள் சார்ந்துள்ள வாழ்க்கையின் சமூகத்தைச் சேர்ந்தவன் என்பது ஒருவேளை இதற்குக் காரணமாக இருக்கக் கூடும். எனவே அவருடைய அழைப்பை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டேன்.

பம்பாய் மாநகரத்தில் உள்ள தீண்டப்படாதவர்களின் வாழ்க்கையை, பல்வேறு தலைப்புகளில் ஆராய்ந்து, எந்த அளவுக்கு நெரிசலான முறையில் அவர்கள் வாழ்கிறார்கள், அவர்களது ஊதியங்கள், வேலைவாய்ப்பு, கடன்கள் முதலியன அம்மக்களிடையே எந்த அளவுக்கு இருந்து வருகின்றன என்பது பற்றிய ஓர் ஆக்கபூர்வமான கருத்தை அவர் நமக்கு வழங்குகிறார். அவர் சேகரித்துள்ள புள்ளி விவரங்கள் நிச்சயமாக மதிப்புமிக்கவையாகும். எந்தப் புள்ளிவிவர ரீதியிலான ஆய்விலும், ஆராயப்பட்ட சம்பவங்கள் பிறர் பின்பற்றத்தக்க வகையானவையா அல்லவா என்ற கேள்வி எழுகிறது. சராசரியானது மாமூலானதாக இருக்க வேண்டும். ஆய்வு செய்யப்பட்ட சம்பவங்கள் முன்மாதிரியானவையாக இருக்க

வேண்டும். அவர் தொகுத்துள்ள சம்பவங்கள் - அவரது கூற்றுக்கள் மாதிரியானவையல்ல என்று கூறுவதற்கு எவ்விதக் காரணமும் இல்லை. எனவே, அவர் கொடுத்துள்ள தீண்டப்படாதவர்களின் வாழ்க்கை பற்றிய சித்திரம் ஓர் உண்மையான (மெய்யான) சித்திரம் என்று எடுத்துக் கொள்ளப்படலாம்.

இந்த ஆய்வானது, தீண்டப்படாதவர்களின் சமூக நிலைமையை சாதி இந்துக்களின் சமூக நிலைமையிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் ஓர் ஒப்பீட்டு ஆய்வாக இருந்திருக்குமே யானால் இந்த ஆய்வு கூடுதல் மதிப்புடையதாக இருந்திருக்கும். ஆனால் இது அவ்வாறு இல்லை, ஆனால், ஒரு தீண்டப்படாதவர் அவரது தீண்டப்படாத தன்மையினால் பாதிப்படையவில்லை என்று நிரூபிக்கப்படுமேயானால், இந்துக்களிடம் இது சம்பந்தமாக இருக்கும் அபிப்பிராயத்தை முன்னிட்டு, அத்தகைய ஆய்வு மிகவும் அவசியமாகும். ஆனால் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, தீண்டப் படாதவர் தனது வருமானம், வேலைவாய்ப்பு, மற்றும் இதர அம்சங் களிலும் ஒரு போட்டிகரமான சமுதாயத்தில் சாதி இந்துவுடன் ஒப்பிடும்பொழுது பாதிப்படைகிறார் என்று கண்டறிப்படுமே யானால், இந்த அனுகூலமற்ற நிலைமையானது, தீண்டாமையைத் தவிர வேறு எந்தக் காரணத்தினாலும் அல்ல என்று அறியப் பட்டால், மத மாற்றத்திற்கான ஆதாரம் வலுவாக உள்ளது என்பதை ஒத்துக் கொண்டாக வேண்டும். ஆனால் இவை யாவும் ஒப்பீட்டு ஆய்வுக்குக் காத்திருக்க வேண்டும். என்றாவது ஒரு நாள் இத்தகைய ஓர் ஆய்வை இந்த நூலாசிரியரோ அல்லது வேறு எவரோ செய்தாக வேண்டும். அப்பொழுதுதான் இந்த நூலாசிரியர் கணித்துள்ள முடிவு களை நன்கு புரிந்து கொள்வதற்கு தற்போதைய ஆய்வு பயனுள்ள வழிகாட்டியாக இருக்கும். மற்றும் தீண்டப்படுபவர்கள், தீண்டப் படாதவர்கள் ஆகியோரின் நிலைமைகளில் வேறுபாடுகள் ஏதேனும் இருந்தால், அவை தீண்டாமையைப் போன்ற வேறு எந்த சமூக நிலைமையினால் ஏற்படுகிறதா என்பதையும் புரிந்து கொள்ள முடியும். அத்தகைய ஒரு முயற்சியின் ஆரம்ப நிகழ்வுப்போக்காக இந்த நூல் வரவேற்கப்பட வேண்டியதாகும்.

ராஜ்கிருகம், தாதர், பி.ஆர். அம்பேத்கர்[1]
*10.2.1938*



1. கர்நாடக வெளியீட்டகம், பம்பாய், 1938

# 6

# காந்தி ஒரு மகாத்மாவா?

காந்தி ஒரு மகாத்மாவா? இந்தக் கேள்வி குறித்து நான் மிகவும் மனவருத்தமடைகிறேன். இந்தக் கேள்வி எனக்கு எரிச்ச லூட்டுகிறது என்பதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. முதலாவ தாக, நான் எல்லா மகாத்மாக்களையும் வெறுக்கிறேன், அவர்கள் ஒழித்துக் கட்டப்பட வேண்டும் என்று உறுதியாக நம்புகிறேன். அவர்கள் இருந்து வருவது அவர்கள் பிறந்த நாட்டுக்கு ஒரு சாபத்தீடு என்று கருதுகிறேன்.

நான் ஏன் இவ்வாறு கூறுகிறேன் என்றால், அவர்கள் அறிவுக் கும் பகுத்தறிவுக்கும் பதிலாக, குருட்டுத் தனமான நம்பிக்கையை நிலைநிறுத்துவதற்கு முயல்கின்றனர்.

இரண்டாவதாக, மகாத்மா என்ற சொல்லினால் மக்கள் திட்டவட்டமாக என்ன புரிந்து கொள்கிறார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை.

அப்படியிருந்தபோதிலும், என்னிடமிருந்து ஒரு பதிலைப் பெறுவதில் 'சித்ரா' இதழின் ஆசிரியர் மிகவும் பிடிவாதமாக இருப்பதாகத் தோன்றுவதால் இந்தக் கேள்விக்கு பதில் கூறுவதற்கு மனப்பூர்வமான முயற்சிகள் செய்வதென்று நான் முடிவு செய்து விட்டேன். பொதுவாகக் கூறுவதெனில், ஒரு சாதாரண இந்துவின் கருத்துப்படி, மகாத்மா என்ற ஒரு தகுதியைப் பெறுவதற்கு ஒரு நபர் மூன்று விஷயங்களைப் பெற்றிருக்க வேண்டும். அதாவது, அவ ருடைய நீண்ட மேலங்கி (robe), அவருடைய குணநலன் (Character) மற்றும் அவருடைய சித்தாந்தம் (doctrine). ஒருவரை மகாத்மா என்று மதிப்பிடுவதற்கு இந்தத் தன்மைகள் ஓர் அளவு கோலாக எடுத்துக் கொள்ளப்படுவதென்றால், அறியாமையிலும் கல்வி யறிவும் இல்லாதவர்களின் பார்வையில், ஜென்ம விமோசனத் திற்கு மற்றவர்களை எதிர்நோக்கும் இவர்களின் பார்வையில் - மோகன்தாஸ் கரம்சந்த் காந்தியை ஒரு மகாத்மா என்று அழைக்க லாம். தனது உடையை மாற்றுவது மூலமாக மட்டுமே இந்தியா வில் யாரும் மிக எளிதில் ஒரு மகாத்மா ஆகிவிடலாம். நீங்கள் ஒரு

சாதாரண வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தால், நீங்கள் மிகவும் அசாதாரணமான உன்னதமான செயல்களைச் செய்த போதிலும், யாரும் உங்களை கவனிக்க மாட்டார்கள். ஆனால் மாமூலான முறையில் நடக்காத ஒருவர், சில விநோதமான போக்குகளைக் காட்டினால், தனது பண்பாட்டில், இயற்கைக்கு மாறான குணங் களைக் கொண்டிருந்தால் அவர் ஒரு மகான் அல்லது ஒரு மகாத்மா ஆகிவிடுகிறார். நீங்கள் வழக்கமான, ஒரு சாதாரண உடையணிந்து கொண்டு ஏதாவது செய்திருந்தால், மக்கள் உங்களைப் பார்க்கவும் கூட விரும்பமாட்டார்கள். ஆனால் அதே நபர், தனது ஆடை களைக் களைந்தெறிந்துவிட்டு, நிர்வாணமாக ஓடினால், நீண்ட முடிவளர்த்துக் கொண்டு, மக்களைக் கேவலமாகப் பேசி, சாக்கடை யிலிருந்து அசுத்தமான தண்ணீரைக் குடித்துக் காட்சியளித்தால், மக்கள் அவருடைய காலில் விழுந்து, அவரை வழிபடுவதற்குத் தொடங்குவார்கள். இந்தச் சூழ்நிலையில், இந்தியாவில் காந்தி, மகாத்மாவானால் இதில் வியப்படைவதற்கு ஏதுமில்லை. வேறு எந்த நாகரிகமான நாட்டிலாவது இவைகள் கடைப்பிடிக்கப்பட் டால் மக்கள் அவரை ஏளனம் செய்து சிரிப்பார்கள். ஒரு சாதாரணப் பார்வையாளருக்கு காந்தியின் போதனைகள் மிகவும் இனிமை யாகவும், மனதைக் கவர்வதாகவும் தோன்றுகின்றன. உண்மையும் அகிம்சையும் மிகவும் உன்னதமான கோட்பாடுகள், சத்தியத்தை யும் (உண்மை) அகிம்சையையும் .(வன்முறையற்றது) காந்தி போதித்ததாக உரிமை கொண்டாடப்படுகிறது. மக்கள் இதை மிகவும் விரும்பினார்கள், எனவே ஆயிரக்கணக்கில் அவர்கள் காந்தி சென்றவிடமெல்லாம் அவரைச் சூழ்ந்தார்கள். அவர்கள் ஏன் அவ்வாறு செய்தார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால், மகான் புத்தர் உண்மை, அகிம்சை என்ற போதனையை உலகுக்கு அளித்தார். இந்த விஷயத்தில் காந்திதான் இதனுடைய மூலகர்த்தா என்று ஓர் அறிவற்ற முட்டாளையும், இயல்பாகவே அறிவிலியாக வும் உள்ளவரைத் தவிர, வேறு யாரும் அவருக்கு மதிப்புக் கொடுக்க மாட்டார்கள். மனித நாகரிகத்தைப் பேணிப் பாதுகாப்பதற்கு மெய்மை யும் அகிம்சையும் அத்தியாவசியமானவை என்று பிரகடனம் செய்வதில் புதிது ஏதுமில்லை. இந்த மூதுரைக்கு காந்தி மதிப்பு சேர்த்ததில் புதிது ஏதுமில்லை. நான் ஏற்கனவே கூறியது போன்று ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் மகான் புத்தர் இந்தக் கோட்பாடுகளை போதித்தார். 'மெய்மை, அகிம்சை' மீதான பரிசோதனையிலிருந்து எழும் சிக்கலான பிரச்சினைகளின் மீது காந்தி கொஞ்சம் வெளிச்சம் போட்டு காட்டயிருந்தாரேயானால்

அவருடைய மகாத்மா தன்மைக்கு அது ஒளியைக் கூட்டியிருக்கும், உலகம் என்றென்றும் அவருக்கு இதற்காக நன்றி செலுத்தி யிருக்கும். இரண்டு புதிர்களுக்கு, அதாவது, 'உண்மை' என்று உன்னதமான கோட்பாட்டை எவ்வாறு கடைப்பிடிப்பது, எந்த சூழ்நிலைகளில் 'வன்முறை' ஒரு சரியான செயலாகக் கருதப் படுவது என்பவற்றுக்கான தீர்வை உலகம் ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறது. 'உண்மை' மற்றும் 'அகிம்சை'யின் பாலான கண்ணோட்டம் நடைமுறைசார்ந்ததாக இருக்க வேண்டும் என்று மகான் புத்தர் போதித்தார். இந்தக் கேள்விக்கு இயேசு கிறிஸ்து என்ன பதிலைக் கொடுத்திருப்பார்? துரதிருஷ்டவசமாக இதைத் தெரிந்து கொள்வதற்கு நமக்கு எந்த சாதனமும் இல்லை. ஒரு வேளை, இந்தக் கேள்விக்கு பதிலளிப்பதற்குப் பிலேத்து அவருக்குப் போதிய அவகாசமளிக்காதிருந்திருக்கக்கூடும். காந்தி இக்கேள்விக்கு பதில் அளித்திருக்கிறாரா? நான் எங்கும் இதைக் காணவில்லை. அவருடைய போதனைகளையும் உபதேசங்களை யும் நாம் ஆய்வு செய்தால், அவர் மற்றவர்களின் மூலதனத்தின் மீது விளையாடி வருகிறார் என்பதைக் காண்கிறோம். 'உண்மையும்' 'அகிம்சை'யும் அவருடைய மூலக் கண்டுபடிப்புகள் அல்ல. காந்தியின் குணாம்சத்தை நான் ஆழ்ந்து ஆராயும்போது, அவருடைய குணாம் சத்தில் ஆழ்ந்த தன்மையையோ அல்லது நேர்மையையோ காட்டிலும் தந்திரம்தான் கூடுதல் தெளிவாகத் தெரிகிறது என்பதை நான் மிகவும் தெளிவாக உணர்கிறேன். அவருடைய செயல்களை ஒரு மோசமான நாணயத்திற்கு ஒப்பிடலாம். அவருடைய பிறருக்குப் பரிவு காட்டும் தன்மையானது 'டேவிட்காப்பர்ஃபீல்ட்' என்று புகழ்பெற்ற ஆங்கில நவீனத்தில் வருகின்ற கதாபாத்திரங்களின் 'யூரியா ஹீப்' பின் பண்பாட்டுத் தன்மையைப் போன்றதாகும். தந்திரத்தினாலும், அவரிடம் உள்ளார்ந்துள்ள புத்திக் கூர்மையினாலும் எப்போதும் அவர் தன்னை முன்னணியில் இருக்கும்படி செய்து கொண்டு விடுவார். தனது ஆற்றலிலும், குணாம்சத்திலும் நம்பிக்கை உடைய ஒரு நபர் வாழ்க்கையின் எதார்த்தங்களை துணிச்சலுடனும் ஆண்மையுடனும் எதிர்கொள்வார். அவர் தனது இடுப்பில் ஒரு குத்தீட்டியை சொருகிக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. நெப்போலியன் எப்போதும் முன்புறமிருந்தே தாக்குவார். வஞ்சகத் தில் அவருக்கு நம்பிக்கையில்லை, ஒருபோதும் பின்னாலிருந்து தாக்கியதில்லை. நய வஞ்சகமும் துரோகமும் பலவீனமானவர் களின் ஆயுதங்களாகும். காந்தி எப்போதும் இந்த ஆயுதங்களையே பயன்படுத்தி வந்துள்ளார். தன்னை கோகலேயின் ஓர் அடக்கமான சீடர் என்று பல ஆண்டுகளாக அவர் அறிவித்து வந்துள்ளார். அதற்குப்

பின்னர் பல ஆண்டுகள் அவர் திலகரைப் பாராட்டி வந்துள்ளார். பின்னர் அவர் திலகரையும் வெறுத்தார். எல்லோரும் இதை அறி வார்கள். நிதி திரட்டுவதற்கு அவர் திலகரின் பெயரைப் பயன்படுத்தி யிராவிட்டால் சுயராஜ்ய நிதிக்கு ரூ.1கோடியை அவரால் திரட்டி யிருக்க முடியாது என்பதை எல்லோரும் அறிவார்கள். தனிப்பட்ட முறையிலான தனது உறவை மறந்தும், பிற விஷயங்களை ஒருபுறம் ஒதுக்கி வைத்தும், ஒரு புத்திக் கூர்மையுள்ளள அரசியல்வாதி என்ற முறையில், அவர் அந்த நிதிக்குத் திலகரின் பெயரை சேர்த்துக் கொண்டார்.

காந்தி கிறிஸ்துவ மதத்தின் உறுதியான எதிராளியாவார். மேலைய உலகத்தை மகிழ்விப்பதற்காக, நெருக்கடியான சமயங் களில் அவர் அடிக்கடி விவிலியத்திலிருந்து அவர் மேற்கோள் காட்டுவார். அவருடைய மனதைப் புரிந்து கொள்வதற்காக, மேலும் இதர இரண்டு உதாரணங்களை நான் மேற்கோள் காட்டுவதற்கு விரும்புகிறேன்.

வட்டமேஜை மாநாட்டின் போது அவர் மக்களிடம் ''தாழ்த்தப் பட்ட வர்க்கங்களின் பிரதிநிதிகள் முன்வைக்கும் கோரிக்கைகளுக்கு எதிராக நான் எந்த ஆட்சேபணையையும் எழுப்ப மாட்டேன்'' என்று கூறினார். ஆனால் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பிரதிநிதிகள் தங்களுடைய கோரிக்கைகளை சமர்ப்பித்தவுடனேயே காந்தி, தான் அளித்த உறுதிமொழிகளையெல்லாம் ஓசைப்படாமல் மறந்து விட்டார். இதைத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் மக்களுக்கு அவர் செய்த துரோகம் என்று நான் கருதுகிறேன். அவர் முஸ்லீம்களிடம் சென்று, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பிரதிநிதிகள் முன்வைக்கும் கோரிக்கைகளை அவர்கள் எதிர்த்தால், அவர்களுடைய முஸ்லீம் களின் 14 கோரிக்கைகளைத் தான் ஆதரிப்பதாகக் கூறினார். ஒரு கயவன்கூட இதை செய்திருக்கமாட்டார். இது காந்தியின் துரோகத் திற்கு ஓர் உதாரணம் மட்டுமேயாகும்.

நேரு கமிட்டியின் அறிக்கை காங்கிரசின் பொதுமாநாட்டில் விவாதத்திற்காக சமர்ப்பிக்கப்பட்டது. அந்த அறிக்கையில் சில திருத்தங்கள் செய்யப்பட வேண்டியிருந்தன. அது குறித்து நீங்கள் எல்லோரும் தெரிந்து கொண்டிருந்திருப்பீர்கள். இந்தத் திருத்தங் களை எதிர்ப்பதற்கு திரு.ஜெயகரை திரு.காந்தி அமர்த்தினார். திரு. ஜெயகரும் அவருடைய ஆதரவாளர்களும் இந்தத் திருத்தங்களைக் கடுமையாக எதிர்த்தனர். இது பலருக்கும் தெரியும். ஆனால் அந்தத்

திருத்தங்கள் யாவை? அவை ஏன் வன்மையாக எதிர்க்கப்பட்டன? இந்தத் திருத்தங்களின் பின்னணி பலருக்குத் தெரியாது. ஜெயகர் இவற்றை எதிர்த்ததைப் பற்றி இந்தத் திருத்தங்களை எதிர்த்தவர்களிடமிருந்து நான் தெரிந்து கொண்டேன். இது உண்மை, இந்த உண்மையைக் கேள்வி கேட்பதற்கு எனக்கு எந்தக் காரணமும் இல்லை. பண்டிட் மோதிலால் நேருவும், திரு. காந்தியினால் துரோகம் செய்யப்பட்ட திரு. ஜின்னாவும் இவற்றை வெளிப்படுத்தினர். நேரு கமிட்டியின் அறிக்கையில் செய்யப்பட வேண்டுமென்று பிரேரேரிக்கட்டிடவிருந்த திருத்தங்கள், தமது சமூகத்தின் நன்மைக்காக திரு.ஜின்னாவினால் ஆலோசனை கூறப்பட்டிருந்தது. ஆனால் காந்திக்கு இது தெரியவந்தவுடன், முன்னதாகத் தான் வழங்க விரும்பியதைக் காட்டிலும் மிகவும் கூடுதலான சலுகைகளை பண்டிட் மோதிலால் நேரு முஸ்லீம்களுக்கு வழங்கியுள்ளார் என்று அவர் நினைத்தார். பண்டிட் மோதிலால் நேருவை சிறுமைப் படுத்துவதற்காக, அவர் இந்தப் பிரேரணைகளைக் கடுமையாக எதிர்த்தார். காந்திஜியின் ஏமாற்றுத் தன்மை வாய்ந்த செயலின் விளைவாகவே இந்து-முஸ்லீம் பகைமை ஏற்பட்டது.

தீண்டப்படாதவர்கள் மற்றும் முஸ்லீம்களின் நண்பர் என்று கருதப்பட்ட மனிதர், யாருடைய நலனுக்காகத் தான் பாடுபட்டதாகக் கூறிக் கொண்டாரோ, அதே மக்களின் நலனுக்கே அவர் துரோகம் செய்துவிட்டார். இது பெருமளவு என்னை வேதனைப் படுத்தியது. ஒரு பழைய மூதுரை இந்த சந்தர்ப்பத்திற்கு மிகவும் பொருத்தமானதாகும். (பாகல் மெய்ன் சுர்ரீ முன்ஹ் மெய்ன் ராம்). அதாவது, கடவுள் பெயரை உச்சரித்துக் கொண்டு, அதே பொழுதில் கத்தியைக் கையில் மறைவாக வைத்துக் கொள்வதாகும். (''படிப்பது இராமாயணம், இடிப்பது பெருமாள் கோயில்'' என்று தமிழ் நாட்டில் வழக்கிலுள்ளது. மொர்). இத்தகைய ஒரு நபரை மகாத்மா என்று அழைக்க முடியுமானால், காந்தியை ஒரு மகாத்மா என்று தாராளமாக அழையுங்கள். என்னைப் பொறுத்தமட்டிலும், அவர் ஒரு சாதாரண மோகன்தாஸ் கரம்சந்த் காந்தியைத் தவிர வேறொன்றுமல்ல.

'சித்ரா' ஆசிரியர் கேட்டதைக் காட்டிலும் அதிகமாக நான் கூறிவிட்டேன். 'சித்ரா'வின் வாசகர்கள் ஜீரணிக்க முடிவதைக் காட்டிலும் அதிகமாக நான் நிறையக் கூறிவிட்டேன் என்று நான் நினைக்கிறேன்.

இங்கே மேற்கோள் காட்டப்பட்ட சம்பவங்களைத் தவிர, மேலும் இரண்டு விஷயங்களைக் கூறி நான் முடித்துக் கொள்கிறேன். ரானடே, கோகலே, அகர்கர், திலகர் ஆகியோரின் காலமும், அவர்களால் தொடங்கப்பட்ட இயக்கங்களும் காந்தி காலத்தினின்றும் வேறுபட்டவையாகும். அவர்களின் காலம் அறிவின் காலமாகும். அது குறித்து முற்றிலும் எவ்வித ஐயமும் இல்லை. காந்தியின் காலத்தை இந்தியாவின் 'தமோ யுகம்' என்று அழைக்கலாம். அகர்கர் மற்றும் திலகரின் அரசியல் நாணயத்தையும் உண்மையையும் அது அடிப்படையாகக் கொண்டிருந்தது. அது பொருளற்றதாகவோ, ஆரவாரமானதாகவோ இருக்கவில்லை. ஆனால் காந்தியின் அரசியல் பொருளற்றதும் ஆரவாரமானதுமாகும். இந்திய ஆட்சி அரசியலின் வரலாற்றில் அது மிகவும் நேர்மையற்ற அரசியலாகும். அரசியலிலிருந்து ஒழுக்கம் அகற்றப்படுவதற்கான பொறுப்பு காந்தி என்ற மனிதரையே சாரும். அதற்கு பதிலாக இந்திய அரசியலில் வர்த்தகத் தன்மையைக் கொண்டு வந்தார். அரசியலிலிருந்து அதனுடைய நற்பண்பு அகற்றப்பட்டுவிட்டது. 'உப்பே' அதனுடைய தன்மையை இழந்துவிட்ட பிறகு, எதைக் கொண்டு நீ அதன் உப்புத் தன்மையை மீட்க முடியும்?' என்று இயேசு கிறிஸ்து தனது சீடர்களிடம் கேட்டார். இந்தியப் பொதுவாழ்விலிருந்து காந்திஜியின் தீங்கான மகான் தன்மையுடன் கூடிய கோமாளித்தனங்களை எவ்வாறு போக்குவது என்பது இரண்டாவது மற்றும் மிகவும் முக்கியமான பிரச்சினையாகும். இந்து இந்தியா இதை இன்று உணராவிட்டால், அது தனது பாதையைத் திருத்திக் கொள்வதற்கு நீண்ட காலம் பிடிக்கும். பெரும்பான்மையான இந்திய மக்கள் தற்குறிகளாகவும் அறியாமையில் உழல்பவர்களாகவும், நாகரிக மற்றவர்களாகவும் இருக்கின்றனர். இது மக்களின் தவறாக இல்லாமலிருக்கலாம். சமூகத்தின் வசதி படைத்த சிலர் வெகுஜனங்களைத் திட்டமிட்டு அறிவற்றவர்களாகவும் தற்குறிகளாகவும் வைத்துள்ளனர். உண்மையில், தர்க்க நியாயம் மற்றும் பகுத்தறிவின் (rationalism) வலுவினால் மட்டுமே மகாத்மாவை எதிர்த்துப் போராட முடியாது. இது அற்புதங்கள் மற்றும் கோமாளித்தனங்களுக்கு எதிராக அறிவார்ந்த தன்மையின் போராட்டமாகும். மகாத்மிய அற்புதங்களின் வசியப்படுத்தும் விளைவை பகுத்திறிவினால் மட்டும் போக்கிவிட முடியாது. இந்த சூழ்நிலைகளில், நான் சில ஆலோசனைகளைக் கூறுவதற்கு விரும்புகிறேன். மகாத்மாவின் நடவடிக்கைகளுக்கு முற்றுப்புள்ளி வைப்பதற்கு இதர மகாத்மாக்கள் இந்தியப் பொது வாழ்வில் செயலூக்கமான பங்கெடுத்துக் கொள்வதற்கு முன்வரவேண்டும். மற்றும் தங்களுடைய சொந்த அரசியல் பிரிவு ஒன்றை ஏற்படுத்த வேண்டும்.

இந்தியாவில் மகாத்மாக்களுக்குப் பஞ்சமில்லை. உபசானி புவா, தாதா மகராஜ், மேஹர் பாபா, நாராயண் புவா கெட்கோங்கர் முதலியவர்கள் சில பிரபலமானவர்களாவர். எண்ணற்ற மகான் களும் 'மகாத்மாக்களும்' இந்தியாவில் உள்ளனர். அப்பாவிகளான மக்களை ஏமாற்றி, வசியப்படுத்தும் கலையை அவர்கள் அறிவார்கள். அவர்களைப் பின்பற்றுபவர்களின் எண்ணிக்கை காந்திஜியைப் பின்பற்றுபவர்களின் எண்ணிக்கையைவிட மிக மிகக் குறைவு என்பது மெய்யே, ஆனால் அவர்களின் ஆற்றலின்மையோ அல்லது திறமை யின்மையோ மட்டும் அதற்குக் காரணமாக இருக்க முடியாது. இந்து மக்கள் திரளுக்கு கதிமோட்சம் கிடைக்கச் செய்வதோடு கூடவே, சுதந்திரம் பெறுவதற்குள்ள திறமையும் வலிமையும் அவர்களுக்கு உண்டு. அவர்கள் இதைத் தெரிந்து கொள்ள முடியாமலிருப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. தனது இரட்டைக் கொள்கை மற்றும் குணத்தின் காரணமாக காந்திஜி, எல்லோருக்கும் ஆன்மிக மற்றும் அரசியல் விடுதலையையும் பெற்றுத் தருவதாக வாக்குறுதி அளித்தின் மூலம் தன்னைப் பின்பற்றுபவர்களை உருவாக்கிக் கொள்வதில் காந்திஜியினால் வெற்றியடைய முடிந்துள்ளது. உஸ்பானி புவா, நாராயண மகராஜ் முதலியவர்களும் காந்திஜியின் வழி முறையைக் கடைப்பிடிப்பார்களேயானால், காந்தியைக் கண்மூடித் தனமாகப் பின்பற்றுபவர்களைப் பயனுறுதியாக எதிர்கொள்ளும் ஓர் அணியை அவர்களாலும் நிறுவப்பட முடியும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். இதில்தான் இந்தியாவின் கதி மோட்சம் அடங்கியுள்ளது. இந்த நாட்டில் பல கட்சிகளிருப்பது குறைந்தபட்சம் தற்போதைக்காவது இந்த நாட்டுக்கு அனுகூலமானதாகும். இந்த நோக்கங்களையும் குறிக்கோள்களையும் கொண்ட ஓர் அமைப்பு நிறுவப்படுமேயானால், புராணங்களில் வருகின்ற அப்சரஸ்கள் ஆற்றிய அதே சேவையை இதனாலும் புரியப்பட முடியும் - அதாவது அவர்களின் எதிரிகளை ஒழித்துக்கட்ட முடியும். இது ஏற்படாமற் போனால், இந்த அமைப்பு பிற்போக்கானதாக இருந்து விடுமே யானால், அப்பொழுதும்கூட அது இருப்பது பயனுள்ளதாக இருக் கும். இந்த வழியில் எல்லாப் பக்கங்களிலும் தனது கொடுங்கரங் களைப் பரப்பிவரும் பாசிஸம் என்ற தீய போக்கைத் தடுத்து நிறுத்த முடியும். ஒரு மகாத்மா வந்து, தனது கொள்கை அறிக்கையை முன்வைத்து, தன்னால் விடுதலை பெற்றுத் தரமுடியும் என்று நேர்முகமாகக் கூறினால், ஒரு வேளை இந்தியா அறிவுத்துறை விடுதலையைப் பெற முடியும் என்று நான் நம்புகிறேன். இது தமாஷ் அல்ல, இது யாரையும் இழிவுபடுத்துவதோ அல்லது குற்ற விமர்சனம் செய்வதோ அல்ல. இதை நான் மிகவும் ஆழ்ந்த சிந்தனையுடன் எழுதுகிறேன்.

*தாதா மகராஜ், மேஹர் பாபா, அல்லது நாராயண புவா போன்ற மகாத்மாக்களின் மனங்களை மாற்றுவதன் மூலம் இந்துக்கள் இந்தியாவுக்கு சேவை புரிவதற்கு முயல்வார்களா?*

*இந்தக் கட்டுரை முதல்முதலில் சித்ரா (மராத்தி)வின், 1938 தீபாவளி சிறப்பு மலரில் வெளியிடப்பட்டது.*



# 7

# மராத்தி அறிஞருக்கு நிதி வழங்குவதற்கான வேண்டுகோள்

பிரபல மராத்தி அறிஞர் திரு.ஜே.ஆர்.அஜ்கோங்கருக்கு, அவருடைய 60வது பிறந்த நாளை முன்னிட்டு அவருடைய நண்பர் களாலும், பாராட்டுகின்றவர்களாலும் ஒரு பண முடிப்பு வழங்குவ தென்று முடிவு செய்யப்பட்டுள்ளது என்று டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார்.

தமது வாழ்க்கை இலட்சியமாக திரு.அஜ்கோங்கர் மேற் கொண்டுள்ள, பழங்கால இலக்கியங்களை ஆராயும் பணியிலிருந்து அவருக்குப் பெரிய ஊதியம் ஒன்றும் கிடைக்கவில்லை என்று டாக்டர் அம்பேத்கர் மேலும் கூறுகிறார்.

மராத்தி இலக்கியத்தை செழுமைப்படுத்துவதற்கான அவ ருடைய வெற்றிகரமான முயற்சிகளில், இந்த முதிய அறிஞர் தமது 61ம் வயது தொடங்கவிருக்கும் தருணத்தில் ஏழையாகவும் உதவி யற்றவருமாகவே காணப்படுகிறார். ஒரு சில காலத்திற்கு முன்னர் மிகவும் வருந்தத்தக்க குடும்ப சோக நிகழ்ச்சி இந்தப் பழம்பெரும் அறிஞருக்கு ஆதரவாக நிற்பதையும் அவருடைய நெருக்கடியான காலத்தில் உதவுவதையும் மராத்தி இலக்கியத்தின் பிரேமிகளுக்கு மிக மிக அவசியமாக்கியுள்ளது.

இந்தப் பணமுடிக்கான தமது பங்களிகப்புகளை சாத்தியமான வரையில் விரைவாக அனுப்பிவைக்கும்படி டாக்டர் அம்பேத்கர் பொதுமக்களை வேண்டிக் கொண்டுள்ளார்.

ஒம்/- பி.ஆர். அம்பேத்கர்

● ● ●

---

1. பம்பாய் கிரானிகில், ஜுலை 14, 1939,
   தேதி குறிப்பிடப்படவில்லை - ஆசிரியர்கள்.

# 8

# வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஞானமே சக்தியாகும்

## முதலாவது மராத்தா ஆண்டு இதழுக்கு அனுப்பப்பட்ட வாழ்த்துச் செய்தி

*(**"மராத்தா"** சிறப்பு இதழ்)*

*அம்பேத்கர் அரசியல் பள்ளி, புனா,*

*நிறுவனம் : ஜூலை 30, 1944*

*''ஆராய்தல், சேவை, தியாகம்''*

## செய்தி

*வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஞானமே சக்தி (அதிகாரம்) என்று நான் எப்போதும் கருதி வந்துள்ளேன். எல்லா ஞானத்தையும் அவர்கள் ஆழமாகக் கற்றறியும் வரையிலும் ஷெட்யூல்டு சாதியினர் சுதந்திரம், விடுதலை என்ற தமது இலக்கினை அடையமாட்டார்கள். 'புனாவிலுள்ள அம்பேத்கர் அரசியல்பள்ளி' இந்தத் திசையில் ஒரு நேர்மையான முயற்சி செய்யும் என்று நான் நம்புகிறேன். முதலாவது மராத்தா ஆண்டு இதழ் கொண்டு வருவது ஒரு நல்ல முயற்சியாகும். அவர்களுக்கு எல்லா நன்மையும் விளைய நான் ஆசி கூறுகிறேன்.*

*ஒப்பம்/- பி.ஆர். அம்பேத்கர்.*

● ● ●

● ● ●

---

இது வெளியான தேதி தெரியவில்லை - ஆசியர்கள்.

# 9

# தீண்டப்படாதாரை ஓரங்கட்டுவதற்குக் காங்கிரஸ் முயல்கிறது

இந்திய அரசியலின் வரலாற்றில் மிகவும் முக்கியமான நாட்களில் ஒன்று, 1930 நவம்பர் 12ம் தேதியாகும். அன்று, காலஞ் சென்ற மேன்மை தங்கிய ஐந்தாம் ஜார்ஜ் மன்னர், இந்திய வட்ட மேஜை மாநாட்டை முறைப்படி துவக்கி வைத்தார். இந்தியர்களின் கண்ணோட்டத்தில் அது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். முதல் தடவை யாக அது, தங்களது நாட்டின் அரசியல் சாஸனத்தை வகுப்பதில் ஆலோசிக்கப்படுவதற்கு இந்தியர்களுக்கு உள்ள உரிமையை அங்கீ கரித்தது. தீண்டப்படாதாருக்கு அவர்களது வரலாற்றில் அது ஒரு மைல் கல்லாகும் (landmark). அவர்களும், முதல் தடவையாக, தனியாக இரண்டு பிரதிநிதிகளால் - காலஞ்சென்ற திரு. ஆர். சீனிவாசன் மற்றும் தாழ்மையான நானும் - பிரதிநிதித்துவப்படுத்து வதற்கு அங்கீகரிக்கப்பட்டோம். அந்த மாநாட்டில் கலந்து கொள்ளாத ஒரே அமைப்பு இந்திய தேசியக் காங்கிரஸ் மட்டுமே. இந்த மாநாட்டின் பணி ஒன்பது கமிட்டிகளிடம் பிரித்துக் கொடுக்கப் பட்டது, அவற்றில் ஒன்று சிறுபான்மையோர் கமிட்டியாகும்.

தாழ்த்தப்பட்ட வர்க்கங்களது பாதுகாப்பின் அரசியத்தை வலி யுறுத்திய 1919ம் வருடத்திய சட்டம் நடைமுறையில் ஒன்றும் செய்ய வில்லை. அது கொள்கை ரீதியான ஒரு வலியுறுத்தல் மட்டுமே யாகும். எனவே, நான் ஒரு கோரிக்கை மனுவை (memorandum) சமர்ப்பித்தேன். அதில் கீழ்வருவனவற்றிற்காக நான் வாதாடி யிருந்தேன்.

(1) தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு சம பிரஜா உரிமை.

(2) சம உரிமையை சுதந்திரமாக அனுபவித்தல்.

(3) பாகுபாடு செய்யப்படுவதற்கு எதிராகப் பாதுகாப்பு.

(4) தமது நலவுரிமையைப் பெறுவதற்காக சட்ட மற்றும் நிர்வாகச் செயல்பாட்டின் மீது செல்வாக்குச் செலுத்து வதற்கு போதிய அரசியல் அதிகாரம்; அதில் பின்வருவன அடங்கியிருக்கும் :

(அ) சட்டப் பேரவையில் போதிய பிரதிநிதித்துவத்திற்கான உரிமை;

(ஆ) தங்களுடைய சொந்த நபர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை,

(i) வயதுவந்தோர் ஓட்டுரிமையின் மூலம், மற்றும்
(ii) முதல் பத்தாண்டுகளுக்குத் தனித் தொகுதி; அதன் பின்னர், ஒதுக்கப்பட்ட (ரிசர்வ்) இடங்களுடன் கூடிய கூட்டுத் தொகுதிகள்.

(5) சேவைகளில் போதுமான பிரதிநிதித்துவம். எல்லா மாகாணங்களிலும் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் நிறுவப்பட வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது. அதனுடைய பணிகள் பின்வருமாறு இருக்கும் :

(அ) அனைத்து சமூகங்களுக்கும் உரிய மற்றும் போதிய பிரதி நிதித்துவம் கிடைக்கத்தக்க வகையில் சேவைத்துறையில் ஆட்களை சேர்க்க வேண்டும், மற்றும்,

(ஆ) சம்பந்தப்பட்ட எந்த ஒரு சேவையிலும் பல்வேறு சமூகங் களுக்கு தற்போது இருந்து வரும் பிரதிநிதித்துவத்தின் அளவுக்கு ஏற்ப வேலைவாய்ப்பினை, அப்போதைக்கப் போது முறைப்படுத்த வேண்டும்.

(6) பாதிப்பு ஏற்படுத்தும் செயல் அல்லது நலன் புறக் கணிப்புக்கு எதிராக நிவாரணமளித்தல்.

(7) சிறப்பு இலாகா ரீதியான பாதுகாப்பு, மற்றும்

(8) மக்கட் தொகைக்கு ஏற்ப, அமைச்சரவையில் அவர்களுக்கு நியாயமான பிரதிநிதித்துவம்.

தீண்டப்படாதாரின் இந்தக் கோரிக்கைகள் என்னவாயின என்று இப்பொழுது நாம் கேட்கலாம். வட்டமேஜை மாநாட்டுக்கு சிறுபான்மையோர் கமிட்டி சமர்ப்பித்த அறிக்கையை இப்பொழுது நாம் பார்ப்போம். தங்களுக்குத் தனித் தொகுதிகளைப் பெறுவதில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் உறுதியான கருத்துக் கொண்டுள்ளதை 16 மற்றும் 18-வது அயிட்டங்கள் நமக்கு எடுத்தியம்புகின்றன. சுருங்கக் கூறின், இந்தியாவின் அரசியல் வாழ்வில் தீண்டப்படாதார் ஒரு தனிக்கூறு என்று கருதப்படுவதற்கு உரிமையுள்ளவர்கள் என்று ஒருமனதாக ஒப்புக் கொள்ளப்பட்டது. தீண்டப்படாதாரைத் தனியாக

அங்கீகரிக்க வேண்டும் என்ற அம்சத்தின் மீதான ஒருமனதான உடன்பாடு இந்திய தேசியக் காங்கிரஸ் கலந்து கொள்ளாத நிலைமையில்தான் சாத்தியமாயிற்று என்பதை இங்கு நாம் மறந்து விடக்கூடாது.

இரண்டாவது வட்டமேஜை மாநாட்டைப் பார்த்தோமானால், அதில் காங்கிரஸ் தனது முழுப் பிரதிநிதித்துவத்துடன் கலந்து கொண்டதைக் காண்கிறோம். மாநாடு வெற்றி பெறுவதற்கு வழிகாட்ட ஒவ்வொருவரும் காங்கிரசைத்தான் எதிர்நோக்கிக் கொண்டிருந்தார்கள். துரதிருஷ்டவசமாக திரு.காந்தி, இந்திய தேசியக் காங்கிரசைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்குத் தெரிந்தெடுக்கப் பட்டிருந்தார். இந்தியாவின் வருங்காலத்திற்கு வழிகாட்டுவதற்கு இதைவிட ஒரு மோசமான நபரைக் கண்டு பிடித்திருக்க முடியாது. அவர் மனிதனின் ஒரு வினோதமான சித்திரத்தைக் காண்பித்தார். அவர் பல பிரச்சினைகளில் மாநாட்டை பயமுறுத்தி, தனது கோட்பாட்டுக்குக் கீழானது என்று அவர் கருதிய எந்த சமரசத்தையும் எல்லா வழிகளிலும் எதிர்க்கும்படிச் செய்தார். அதை முற்றிலும் ஒரு துவேஷத்துடன் கூடியதாக மற்றவர்கள் கருதினர். இதர பிரச்சினைகளில் ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்த அம்சங்கள் சம்பந்தமாக அவர் மௌனம் சாதித்தார். இதை மற்றவர்கள் கோட்பாடுகள் சம்பந்தப்பட்ட விஷயமென்று கருதினர். 1931 செப்டம்பர் 15ல், திரு.காந்தி, தமது முதலாவது உரையை நிகழ்த்தினார், அதில் அவர், தீண்டப்படாதார் பிரச்சினை ஒரு பொருட்டே அல்ல என்று கூறினார். சமூக மாநாட்டின் நடவடிக்கைகளைப் பற்றி அவர் குறிப்பிட்டார். இந்த அமைப்பு தனது வருடாந்திர மாநாட்டை காங்கிரசின் பந்தலிலேயே நடத்துவதற்குக் காங்கிரஸ் அனுமதிக்கவில்லை என்பதை நாமறிவோம், ஏனெனில், சமூக மாநாட்டுக் கட்சி அதைப் பயன்படுத்திக் கொள்வதற்கு அனுமதிக்கப்பட்டால், பந்தலை எரித்து விடுவதாகத் திரு.திலகர் பயமுறுத்தியதற்காக, இவ்வாறு அனுமதி மறுக்கப்பட்டது. 1931 செப்டம்பர் 17ல், சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டியில் திரு.காந்தி கீழ்வருமாறு உரத்த குரலில் ஆவேசமாகப் பேசினார்:

''தீண்டப்படாதாரின் நலன்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதில், காங்கிரஸ், அம்பேத்கருடன் கௌரவத்தைப் பகிர்ந்து கொள்ளும் என்பதில் ஐயமில்லை. இந்தியா முழுவதிலும் வேறு எந்த அமைப்பு அல்லது வேறு எந்தத் தனிநபரின் நலன்களைப் போன்றே அந்த அளவு அவர்கள் காங்கிரசின் நேசத்திற்கு உரியவர்கள் என்பதில் ஐயமில்லை. எனவே, மேற்கொண்டு எந்த சிறப்புப்

பிரதிநிதித்துவம் கொடுக்கப்படுவதையும் நான் மிகவும் வலுவாக எதிர்க்கிறேன்.''

உண்மையில், இது தீண்டப்படாதாருக்கு எதிராகத் திரு. காந்தியும் காங்கிரசும் போர்ப் பிரகடனம் செய்வதைத் தவிர வேறல்ல. தீண்டப்படாதாரை ஓரங்கட்டுவதற்கும், இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் சீக்கியர்களுக்கும் இடையில் ஓர் உடன்பாட்டை ஏற்படுத்துவதன் மூலம் பிரச்சினைக்கு முற்றுப் புள்ளி வைப்பதற்கும் அவர் திட்டம் தீட்டிக் கொண்டிருந்தார். இது மிகவும் ரகசியமாக செய்யப்பட்டு வந்தது. இது ஒரு விஷமத்தனமான முயற்சி என்பதை அறிந்து, நான் எழுந்து, இவ்வாறு கூறினேன்: ''எங்களுடைய கோரிக்கையை நான் ஏற்கனவே, கடந்த தடவை சிறுபான்மையோர் துறைக் கமிட்டியிடம் சமர்ப்பித்திருந்தேன். ஆனால், யார் உரிமை கொண்டாடினாலும் என்னுடைய பங்கிலிருந்து அவர் அதைக் கொடுக்க முடியாது என்று மிகவும் அழுத்தமாக நான் கூறுவதற்கு விரும்புகிறேன். இதை நான் மிகவும் திட்டவட்டமாகக் கூறுவதற்கு விரும்புகிறேன்''. இது சம்பந்தமாக திரு.காந்தி மௌனம் சாதித்தார், அதே பொழுதில் இந்துக்களுக்கும், முஸ்லீம்களுக்கும், சீக்கியர்களுக்கும் இடையில் ஏற்படவிருக்கும் ஒப்பந்தம் பற்றி சொல்லிக் கொண்டேயிருந்தார். இந்த ஒப்பந்தத்தில் திரு. காந்தியினால் வெற்றியடைய முடியவில்லை. இதில் வெற்றியடைய முடியாமற் போனதற்கு, பிரதிநிதிகளின் பிரதிநிதித்துவம் குறைபாடுள்ளதாக இருந்ததே காரணமாகும் என்றும், ஏனெனில் எல்லாப் பிரதிநிதிகளும் அரசினால் நியமிக்கப்பட்டவர்களாக இருந்தனர் என்றும் கூறியபோது அவர் பரிதாபகரமாகக் காட்சியளித்தார். இது தீண்டப்படாதவர்களின் பிரதிநிதிகளாக என்னால் தேர்வு செய்யப்பட்டிருந்த பிரதிநிதித்துவத்தின் நம்பகத் தன்மைக்கு ஒரு மறைமுகமான சவாலாகும். தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் ஒரே ஆதரவாளன் தான் மட்டுமே என்று திரு.காந்தி வலியுறுத்தினார். திரு.காந்தியின் சவாலுக்கு பதில் கூறும் முகத்தான் நான் இவ்வாறு கூறினேன்: ''இந்த மாநாட்டுக்குத் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் ஒரு வாய்ப்பு இந்தியாவின் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்குக் கொடுக்கப்பட்டாலும்கூட, இதில் நிச்சயமாக எனக்கு ஓர் இடம் கிடைக்கும். எனவே, நான் ஒரு பிரதிநிதியாக நியமிக்கப்பட்டாலும், அல்லது நியமிக்கப்படாத போதிலும் நான் என்னுடைய சமூகத்தின் கோரிக்கைகளைப் பூரணமாகப் பிரதிநிதித்துவப்படுத்துகிறேன்''. என்னுடைய உரையின்போது, அப்போது எனக்கு வந்த ஒரு தந்தியையும் நான் அவர்களுக்குக் காட்டினேன்.

நான் ஒருபோதும் சந்திக்காத ஒரு நபரிடமிருந்து அந்தத் தந்தி வந்திருந்தது. நான் ஒருபோதும் போகாத ஓர் இடத்திலிருந்தும் அது வந்திருந்தது. இது மட்டுமின்றி, எனக்கு ஆதரவு தெரிவித்து மேலும் மேலும் அதிகமான தந்திகள் மாநாட்டில் வந்து குவிந்தன. இது திரு. காந்திக்கு ஒரு தோல்வியாகும். இப்பொழுது அவர் அமைதியாக இருக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டார். அவருடைய கோரிக்கைக்கு இது ஓர் இகழார்ந்த தோல்வியாகும்.

வகுப்புவாதப் பிரச்சினைக்கு ஒரு தீர்வை ஏற்படுத்துவதற்காக, சிறுபான்மையோர் கமிட்டியின் அனைத்து முயற்சிகளும் முடிவுற்றதன் பழைய கதை இதுதான். வட்டமேஜை மாநாட்டுக்குத் திரு.காந்தி சென்றதன் முக்கியமான நோக்கம் தீண்டப்படாதாரின் நியாயமான கோரிக்கைகளை எதிர்ப்பதற்குத்தான் என்று கூறினால் மிகையாகாது. முஸ்லீம்கள் அல்லது சீக்கியர்களின் தனித்தொகுதி பற்றி திரு.காந்தி கவலைப்படவில்லை. ஆனால் தீண்டப்படாதார் ஒரு தனி இனமாக இங்கீகரிக்கப்பட வேண்டும் என்று கேட்பதற்கு அவர்கள் துணிவு கொண்ட போது, அவர்களது கோரிக்கைகளை அவர் மிகக் கடுமையாக எதிர்த்தார். திரு.காந்திக்குத் தர்க்க நியாயம் ஏதுமில்லை. அவருக்குக் கோட்பாடுகள் ஏதுமில்லை. 'அவருடைய ஆத்மாவின் வேதனை' மட்டுமே அவருக்கு. அது, தீண்டப்படாதாருக்கு எதிராக அந்த பக்திபூர்வமான வாக்கியங்களைக் கூறுவதற்கு தார்மீக ரீதியில் அவரை நிர்ப்பந்தப்படுத்தியது. முஸ்லீம்களை அதே தூஷணையான மொழியில் எதிர்ப்பதற்கு அவர் ஒருபோதும் துணியவில்லை. எவ்வாறு அவர் அதைச் செய்ய முடியும்? தீண்டப்படாதாரின் கோரிக்கைகளை எதிர்க்க அவர் துணிந்ததற்குக் காரணம், சாதி இந்துக்களின் சம்பளமற்ற அடிமைகளாயிருந்த தீண்டப்படாதார் அடிமைத்தனத்தின் பாசத்திலிருந்து வெளியில் இழுத்து விடப்பட்டு வந்தனர், வேறு சொற்களில் கூறுவதெனில், இதன் பொருள் சாதி இந்துக்களுக்கு அறியப்படாத காலத்திலிருந்து அவர்களது கண்ணியத்திற்கு மதிப்பைச் சேர்த்த கௌரவமான பண்ணையடிமை இல்லாமற் போய்விடுவார் என்று அவர் எதிர்பார்த்தார்.

தனது மிகவும் பிரதிநிதித்துவம் வாய்ந்த தன்மையை காங்கிரஸ் டமாரம் அடித்து வந்தபோதிலும், காங்கிரஸானது சாதி இந்துக்களின் மற்றொரு பெயரேயாகும், அதைத் தவிர வேறல்ல என்பதை இந்த சம்பவம் தெளிவாகக் காட்டியது. அதனால்தான் காங்கிரஸ், தீண்டப்படாதாரை சாதி இந்துக்களின் இதர பகுதி

யிலிருந்து தனித்து ஒதுக்கி வைக்கும் பிரச்சினையில் கூடுதல் உஷாராக இருப்பதை நாம் காண்கிறோம். இந்த ஆட்சேபனை வேறு எந்த ஒரு அமைப்பினால் எழுப்பப்பட்டிருந்தால் அது நியாயமான தென்று கருதப்பட்டிருக்கும். ஆனால் தீண்டப்படாதாரின் சார்பில் காங்கிரஸ் பேசும்போது, என்ன குறிக்கோளுடன் அது இவ்வாறு செய்கிறது? காங்கிரஸ் ஒரு இந்து ஸ்தாபனம் என்று இதிலிருந்து பொருள்படவில்லையா? தீண்டப்படாதார் பிரச்சினையானது சாதி இந்துக்களின் பிரச்சினையாகும். காங்கிரஸ் ஓர் இந்து அமைப்பல்ல என்றால், தனது மண்டலத்திற்கு மிகவும் அந்நியமான பிரச்சினை யில் அது ஏன் தனது மூக்கை நுழைக்க வேண்டும்? தீண்டப் படாதாரின் நியாயமான உரிமைகளை அனுமதிக்க மறுப்பதன் மூலம், தீண்டப்படதாவர்களை மேலும் ஓர் ஆயிரம் ஆண்டுகளுக்குத் தூங்கச் செய்வதையே அது விரும்பியது.

காங்கிரஸ் தனது சக்தி முழுவதையும் தீண்டப்படாதாரைப் புறக்கணிப்பதையே மையமாகக் கொண்டிருந்தது. அவர்கள் முஸ்லீம் களைக் கருத்தில் கொண்டு ஒரு திட்டத்தை வகுத்தனர். முஸ்லீம்களின் பதினான்கு அம்சங்களை திரு.காந்தி ஒத்துக் கொண்டார். அதற்கு அவர் விதித்த நிபந்தனை அவர்கள் தீண்டப்படாதாருக்கு ஆதரவு கொடுக்கக் கூடாது என்பதும், அவர்களுக்கான தமது ஆதரவை அவர்கள் விலக்கிக் கொள்ள வேண்டும் என்பதுமாகும். ஆனால் முஸ்லிம்களிடம் இருந்த மனித நேயமென்ற உன்னதமான உணர்வின் பயனாக, அவர்கள் காங்கிரஸ் கொடுக்கவந்த நிபந்தனையுடன் கூடிய ஆதரவை நிராகரித்தனர். அதன் மூலம் தீண்டப்படாதாரைத் தனிமைப்படுத்துவதற்கு அவர்கள் ஒத்துக்கொள்ளவில்லை. வாக் குரிமைக் கமிட்டியில், தீண்டப்படாதாரை ஓரங்கட்டுவதற்குக் காங் கிரஸ் மற்றொரு முயற்சி செய்தது. தீண்டப்படாதாவர்கள் என்று யாருமே இல்லை என்று சில சாட்சிகள் கூறியது விநோதமாகத் தோன்றக்கூடும். காங்கிரஸ் எவ்வாறு தீண்டப்படாதாருக்கு எதிராக - முற்றிலும் சுயநலநோக்கத்துடனும், கடின சித்தத்துடனும், திட்ட மிட்ட முறையிலும் சதி செய்ய முடியும் என்பதையும், நேரடியாக செய்ய முடியாததை மறைமுகமாக செய்ய முடியும் என்பதையும் காட்டுகிறது.[1]



1. ஜெய்பீம் : மார்ச் 12, 1946
மறு அச்சு: கைர்மோட், தொகுதி 8, பக். 48.

# 10

# தோல்வி மனப்பான்மை எனக்கு இல்லை

## செய்தி

தாழ்த்தப்பட்ட சாதியினர் சம்மேளனம் (Scheduled Castes Federation) கடந்த பொதுத் தேர்தலில் தோல்வியிடைந்தது.* அதன் தோல்வியைத் தொடர்ந்து சிலர் அதைவிட்டு வெளியேறினர். சிலர் அதில் நம்பிக்கையிழந்தனர். எனக்கு இந்தத் தோல்வி மனப்பான்மை இல்லை. தேர்தலில் இடங்களை வெல்வது சம்மேளனத்தின் இலட்சியமல்ல. சம்மேளனத்திற்கு இடங்களை வெல்வது ஒரு லட்சியத்தை அடைவதற்கான ஒரு சாதனமேயாகும். லட்சிய மானது, யாருக்காக இந்த அமைப்பு நிறுவப்பட்டதோ, அந்த மக்களுக்கு சேவை செய்வதற்கேயாகும். பிரச்சினை இருக்கின்ற வரையில் சம்மேளனம் ஏதாவது ஒரு வடிவத்தில் தொடர்ந்து இருந்து வரும்.

சம்மேளனத்தின் தோல்வி வரவேற்புக்குரியதே. ஏனெனில் சம்மேளனத்தில் புகுந்த மிகவும் விரும்பத்தகாத கூறை வெளியேற்று வதற்கு அது உதவியுள்ளது. சம்மேளனத்தில் நீடிப்பவர்கள் மீது கூடுதல் பொறுப்பு ஏற்பட்டுள்ளது. தோல்விக்குப் பின்னர் சம்மே ளனம் காலநிலையால் பட்டுப்போன மரமாகத் தோன்றக்கூடும். ஆனால் அதன் வேர்கள் நிச்சயமாகக் காய்ந்துவிடவில்லை.

(ஒப்பம்)
**பி.ஆர். அம்பேத்கர்** [1]

---

★ 1946ல் நடைபெற்றது.

1. ஜெய்பீம், மார்ச் 12, 1946,
   மறு அச்சு: கைர்மோட், தொகுதி 8, பக்கம் 48

# 11

# நமது மாணவன் கற்கவும் தலைமை தாங்கவும் வேண்டும்

## அ.இ. தாழ்த்தப்பட்ட சாதி மாணவர் சம்மேளன மாநாட்டிற்கு டாக்டர் அம்பேத்கர் வாழ்த்துச் செய்தி

**நாகபுரி, டிசம்பர் 25-27, 1946.**

அ.இ. தாழ்த்தப்பட்ட சாதி மாணவர் சம்மேளனத்தின் இரண்டாவது மாநாடு நாகபுரியில் 1946 டிசம்பர் 25-27 தேதிகளில் நடைபெற்றது. சம்மேளனத்திற்கு அமைப்பு விதிகளை உருவாக்குவது இதன் நோக்கமாகும்.* இந்த அமைப்பிற்குமான அடித்தளம் 1945 மே 12ல் பம்பாயில் நடைபெற்ற முதல் மாநாட்டில் இடப்பட்டது. நாகபுரியில் நடைபெறும் இம்மாநாட்டில் கலந்து கொள்வதற்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு விருப்பம் இருந்தது. ஆனால் ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்ட வேலைகளை முன்னிட்டு அவரால் இந்த மாநாட்டில் கலந்துகொள்ள முடியவில்லை. ஆயினும், இந்திய இடைக்கால அரசில் சட்ட அமைச்சராக இருக்கும் திரு. ஜோகேந்திர நாத் மண்டலை, நாகபுரியில் நடைபெறும் இந்த மாணவர் மாநாட்டிற்குத் தலைமை தாங்கும்படி ஆலோசனை கூறினார்.

இந்த மாநாடு வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். மிகவும் குறுகிய காலத்தில் இது ஏற்பாடு செய்யப்பட்டது. 1946 டிசம்பர் 16ல் வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டு மாநாடு 1946 டிசம்பர் 25-27ல் நடைபெற்றது. இந்நக் குறுகிய கால அவகாசத்தைப் பொருட்படுத்தாது, இந்தியா முழுவதிலுமிருந்து சுமார் 3,000 மாணவர்களும் 500 மாணவிகளும் பிரதிநிதிகளாக வந்து கலந்து கொண்டனர். பம்பாய், உ.பி., ம.பி. மற்றும் பேரார், சென்னை, வங்காளம், ஹைதராபாத், டில்லி ஆகியவற்றிலிருந்து வந்த பிரதிநிதிகள் நாகபுரி, புதுக்காலனி சொக்கமேள கன்யாசாலா விடுதியில் தங்க வைக்கப்பட்டனர்.

---

★ பின் இணைப்பு 1 பார்க்கவும்.

*கஸ்தூர்சந்த் பூங்காவில், ஒரு விசாலமான மைதானத்தில் நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்ட பந்தலில் மாநாடு நடைபெற்றது. திரு.ஜோகேந்திரநாத் மண்டல் மாநாட்டுக்குத் தலைமை வகித்தார். ஏறத்தாழ நாற்பதாயிரம் பேர் அடங்கிய மாபெரும் கூட்டம் நாகபுரி ரயில் நிலையத்தில் 1946 டிசம்பர் 25 அன்று மாலை 6.30 மணி அளவில் அவரை வரவேற்றனர். 'சாரம்தா சானிக் தளமும்' மற்றும் 'தேசிய முஸ்லீம் தொண்டர் படையும் அவருக்கு அணிவகுப்பு மரியாதை செலுத்தினர். ஷெட்யூல்டு சாதியினர் சம்மேளனம், முஸ்லிம் லீக் ஆகியவற்றின் தலைவர்களும் அரசு அதிகாரிகளும் அவரை வரவேற்றனர்.*

## வாழ்த்துச் செய்தி

2, வெஸ்டர்ன் கோர்ட்,
புதுடில்லி,
20 - XII - 1946.

அன்பார்ந்த ஜெடம்,*

என்னுடைய பல வேலைகளின் காரணமாக, உங்களுக்கு முன்பே எழுத முடியாமற் போனதற்கு நான் மிகவும் வருந்து கிறேன்.

அகில இந்திய ஷெட்யூல்ட் சாதியினர் மாணவர் சம்மேள னத்தின் ஒரு மாநாட்டை, அகில இந்திய தாழ்த்தப்பட்ட சாதியினர் மாணவர் சம்மேளனத்தின் மாநாட்டிலிருந்து தனியாக நடத்துவ தென்று நீங்கள் முடிவு செய்திருப்பதை அறிந்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். இது ஒரு விவேகமான முடிவு. இதனை முழுமையாக ஆதரிக்கிறேன்.

நான் மாண்புமிகு ஜே.என்.மாண்டலுடன் பேசியுள்ளேன். அவர் உங்களுடைய மாநாட்டிற்குத் தலைமை தாங்குவதற்கு நிச்சய மாக வருகிறார். நானும் வந்து கலந்து கொள்வதற்கு விரும்புகிறேன். ஆனால் துரதிருஷ்டவசமாக இது சாத்தியமென்று தோன்றவில்லை. ஆயினும், மாநாட்டின் வெற்றிக்கு எனது நல்வாழ்த்துக்களை அனுப்புகிறேன். நமது மாணவர்கள் இரு விஷயங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும். முதலாவதாக வாய்ப்புக்கள் கொடுக்கப் பட்டால், அறிவிலும் ஆற்றலிலும் யாருக்கும் இளைத்தவர்கள் அல்ல என்பதை நிரூபிக்க வேண்டும். இரண்டாவதாக அவர்கள் தங்கள் சொந்த வாழ்க்கையில் மகிழ்ச்சிப் பாதையில் செல்வது மட்டுமன்றி, தங்களுடைய சமூகத்தை சுதந்திரம் பெறவும் வலுவான தாக்கவும், மதிக்கப்படுபவர்களாக்கவும் தலைமை தாங்கி அழைத்துச் செல்லவும் தயாராயிருப்பதாக நிரூபிக்கவும் வேண்டும்.

நமது மாணவர்களின் மனதில் இந்த இரு குறிக்கோள்களைப்

பதியவைக்க முடியுமேயானால், இந்தக் குறிக்கோள் அவர்களது வாழ்க்கையில் போதிய அளவு நியாயப்படுத்தியிருக்கும். அது அவ்வாறு செய்யுமென்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

அன்புடன்,

உங்கள் உண்மையுள்ள,
**பி.ஆர்.அம்பேத்கர்''**[1]

● ● ●

## 12

# 'மராத்தா மந்திருக்கு' டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கரின் வாழ்த்துச் செய்தி

மராட்டிய சமூகம் என்ன கோட்பாடுகளையும் குறிக்கோள்களையும் கடைப்பிடிக்க வேண்டும் என்பது குறித்து செய்தி அனுப்புவதற்கு நான் தகுதியானவன் என்று நான் ஒருபோதும் கருதியதில்லை. மராத்திய சமூகம் தனது முன்னேற்றத்திற்கு என்ன செய்தால் சரியானதாக இருக்கும் என்பது குறித்து ஒரு சில வார்த்தைகள் கூறும்படி 'மராத்தா மந்திரின்" அமைப்பாளர்கள் வலியுறுத்தியதால், அவர்களது விருப்பத்தை நிறைவேற்ற ஒப்புக் கொண்டேன்.

மராத்தியர்கள் ஒடுக்குமுறையைத் தவிர்க்க விரும்பினால் அரசியல் துறையிலும் கல்வித் துறையிலும் இரண்டு காரியங்களைச் செய்ய வேண்டும்; இது அனைத்து சமூகங்களுக்கும் பொருந்தும். ஒரு சமூகம் அரசின் மீது கட்டுப்பாட்டு அதிகாரத்தைச் செலுத்த முடியுமானால்தான் அது தனித்து இயங்க முடியும். எனினும் அரசின் மீது கட்டுப்பாட்டு அதிகாரத்தை செலுத்துவதன் மூலம் ஒரு சிறுபான்மை சமூகம், சமுதாயத்தின் மீது தனது மேலாதிக்கத்தைச் செலுத்த முடியும்; இந்தியாவில் பிராமணர்களின் நிலையிலிருந்து இதனைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். அரசின் மீது கட்டுப்பாட்டு அதிகாரம் இருப்பது அவசியம்; இல்லையென்றால் அரசு எத்தகைய கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்கு வழிகாட்டுவது சாத்தியமல்ல; அரசு பின்பற்றும் கொள்கையின் அடிப்படையில்தான் முன்னேற்றம் அமைந்துள்ளது.

இதேபோல் கல்வி விஷயத்திலும் கவனம் செலுத்துவது அவசியம். ஆனால் உயர் அந்தஸ்து பெறுவதற்காக பல்வேறு சமூகத்தினரிடையே நடைபெறும் போராட்டத்தில் முக்கியமானது கல்வியாகும்; இந்தியாவில் பிராமணர்கள் பெற்றுள்ள நிலையை இதற்கு உதாரணமாகக் கூறலாம். அரசின் மீது அதிகாரம் இருப்பது இன்றியமையாதது; ஏனென்றால் அது இல்லாமல் அரசு எத்தகைய

கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்கு வழிகாட்ட முடியாது. முன்னேற்றம் என்பது அரசின் கொள்கையை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

இதேபோல் கல்வித் துறையில் கவனம் செலுத்துவது அவசியம். ஆனால் இங்கு ஒரு விஷயத்தை மறந்துவிடக் கூடாது. அதாவது உயர் அந்தஸ்தைப் பெறுவதற்காகப் பல்வேறு வகுப்பினரிடையே நடைபெறும் போராட்டத்தில் மிக முக்கியமானது கல்வியாகும்; ஆனால் கல்வி என்கிறபோது சாதாரண கல்வியை இங்கு நாம் குறிப்பிடவில்லை; உயர் கல்வியையே குறிப்பிடுகிறோம். இத்தகைய கல்வி இருந்தால்தான் ஒரு மராட்டியன் ஒரு கேந்திரப் பதவிக்கு வரமுடியும்; இத்தகைய பதவியை அவன் பெற்றிருந்தால்தான் அவன் தனது சமூகத்தைச் சார்ந்தவர்களை அநீதியிலிருந்து பாதுகாக்க முடியும். பிராமண சமூகத்தை இவ்வகையில் இதற்கு உதாரணமாகக் கூறலாம். பிராமண சமூகம் இன்று எல்லாவிதமான இடர்ப்பாடுகளையும், எதிர்ப்புகளையும் எதிர்கொண்டு சமாளித்து நிற்க முடிகிறது என்றால், அவர்கள் கேந்திரப் பதவிகளில் அமர்ந்திருப்பதாலேயே இது சாத்தியமாகியுள்ளது.

இதுவே என் கருத்தாக இருப்பதால், 'மராத்தா மந்திர்' ஆரம்பக் கல்வியை அல்லது உயர்நிலைக் கல்வியை பரப்பும் எளிய பணி யில் தனது ஆற்றலைச் செலவிட்டால் அது அந்த சமுதாயத்துக்கு சேவை செய்வதாக இருக்காது. இந்தியாவில் பல மாகாணங்களைச் சேர்ந்த அரசாங்கங்கள் ஆரம்பக் கல்வியைப் பரப்பத் திட்டமிட்டு வருகின்றன; இதனால் இந்திய மக்களில் பலர் திருப்தியடைந்துள்ளனர்; நன்றியுணர்வைக் கூட வெளியிட்டுள்ளனர். ஆரம்பக் கல்வியைப் பரப்பும் இந்த முயற்சி எனக்குப் பிடிக்கவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். இது என்னுள் உற்சாகத்தை ஏற்படுத்துவதற்குப் பதில் இதனை ஒரு மாய்மாலமாகவே கருதினேன்.

உயர்நிலையிலுள்ளவர்களுக்கும் தாழ்ந்த நிலையிலுள்ளவர்களுக்கும் கிடையிலும் பிராமணர்களுக்கும் பிராமணரல்லாதாருக்கும் இடையிலுமான வேறுபாடு பலநூற்றாண்டுகளாக இருந்து வந்துள்ளது. மேலும் பல நூற்றாண்டுகள் இது நீடித்திருக்கும் வாய்ப்பும் உள்ளது. பிராமணர்களுக்கும் பிராமணரல்லாதாருக்கும் இடையிலான கல்வி வேறுபாட்டின் காரணமாகவே இது ஏற்பட்டுள்ளது. ஆரம்பக் கல்வி பரவுவதன் வாயிலாக இந்த வேறுபாடு அகற்றப்பட்டுவிடாது. பிராமணர்கள் தற்போது கொண்டுள்ள கேந்திரமான பதவிகளிலான ஏகபோகத்தை ஒழித்துக் கட்டும் வகையில் சில பிராமணரல்லாதார் மிகவும் உயர்ந்த கல்விகற்கும் ஒரு கல்விக் கொள்கையைக் கடைப்பிடிப்பதன் மூலம் மட்டுமே, சமூக நிலையில் பிராமணர்களுக்கும் பிராமணரல்லாதாருக்கும் இடையிலான தாரதம்மியம் போக்கப்பட முடியும், கேந்திரமான பதவிகளுக்குத் தகுதியுள்ளவரகளாக்குவதற்குத் தேவையான கட்டம் வரையிலும் பிராமணரல்லாதாருக்குக் கல்வி போதிக்கும் இந்தக் கடமை அரசினால் மேற்கொள்ளப்பட வேண்டும். அரசு இதைச் செய்யாவிட்டால் 'மராத்தா மந்திர்' இதைச் செய்ய வேண்டும்.

நான் கூறவிரும்பும் மற்றொரு விஷயமும் உண்டு. மேல்தட்டு வர்க்கத்துடன் ஒப்பிடும் போது நடுத்துர வர்க்கமும் கீழ்நிலையிலுள்ள வர்க்கங்களும் சில குறைகளைக் கொண்டுள்ளனர். இவை உலகம் முழுமையிலும் அந்த வர்க்கத்திற்கு உள்ள குறைபாடுகளேயாகும். கீழ்நிலையிலுள்ள வர்க்கங்களின் முன்னேற்றத்தை சகித்துக் கொள்வதற்கு உயர் வர்க்கங்களுக்கு உள்ள பெருந்தன்மை நடுத்தர வர்க்கத்திற்குக் கிடையாது. கீழ்நிலை வர்க்கங்களின் லட்சிய நோக்கு இவர்களுக்கு இல்லை. இது நடுத்தர வர்க்கத்தை மேற்கண்ட வர்க்கங்களுக்கு விரோதியாக்குகிறது. மேல்நிலை வர்க்கத்தின் உயர்வான அந்தஸ்தை அது வெறுக்கிறது. அது கீழ்நிலை வர்க்கங்களையும் வெறுப்பதற்குக் காரணம் தனது நிலைக்கு சமமாக அவர்கள் உயர்வடைவதை அது விரும்பவில்லை. மராட்டியர்கள் இந்தியாவின் நடுத்தர வர்க்கமாவர்; மேலே குறிப்பிடப்பட்ட நடுத்தர வர்க்கத்தின் குறைபாடுகள் அவர்களுக்கு உண்டு என்பதை அவர்களுடன் சேர்ந்து பணிபுரிந்த யாரும் தெரிந்து கொண்டிருப்பர். மராட்டியர்கள் முன் செல்வதற்கு இரண்டு வழிகளைக் கொண்டுள்ளனர்: ஒன்று, தங்களுடைய மேலதிகாரிகளுடன் சேர்ந்து நின்று, கீழ்வர்க்கங்கள் மேல்மட்டத்திற்கு உயராமல் தடுப்பது;

அல்லது கீழ்வர்க்கங்களுடன் சேர்ந்து நின்று, இரு சாராருக்கும் மேலானவர்களாக இருப்பவர்களை ஒழித்துக் கட்டுவது. அவர்கள் கீழ் வர்க்கங்களுடன் சேர்ந்து நின்ற காலம் ஒன்றிருந்தது. அண்மையில் அவர்கள் உயர் வர்க்கங்களுடன் சேர்ந்து கொண்டார்கள். அவர்கள் கடைப்பிடிப்பதற்கு எது சரியான பாதை என்று கூற வேண்டியது எனது வேலையல்ல. ஆனால், மற்றவர்களின் எதிர்காலம் மட்டு மன்றி, மாராட்டியர்களின் எதிர்காலமும் மேலே கூறப்பட்ட இரண்டு பாதைகளில் எதை அவர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள் என்பதைப் பொறுத்திருக்கும் என்பதில் ஐயமில்லை. அது மராட்டியர்களது தலைவர்களின் விவேகத்திற்கு விட்டுவிடப்பட வேண்டும். அந்த விவேகம் இப்பொழுது மிகவும் பற்றாக்குறையாக இருப்பதாகத் தோன்றுகிறது.

(ஒப்பம்)
**பி.ஆர். அம்பேத்கர்**[1]

1. 'மராட்டா மந்திர்' இதழின் சிறப்பு மலர், மார்ச் 23, 1947

# 13

# தீண்டப்படாதவர்கள் மனித மாண்பைத் திரும்பப் பெறுகின்றவரையில் ஓயமாட்டோம்

## (ஜெய்பீம் வாசகர்களுக்கு டாக்டர் அம்பேத்கரின் செய்தி)

''என்னுடைய 55வது பிறந்த நாளை முன்னிட்டு உங்களுடைய சிறப்பு மலருக்கு ஒரு செய்தி அனுப்புமாறு என்னை நீங்கள் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இந்தியாவில் அரசியல் தலைவர் தீர்க்கதரிசியின் அந்தஸ்தில் வைக்கப்பட்டிருக்கிறார் என்பது துரதிருஷ்டவசமான உண்மையாகும். இந்தியாவுக்கு வெளியில் தமது தீர்க்கதரிசிகளின் பிறந்த நாளை மக்கள் கொண்டாடுகிறார்கள். இந்தியாவில் மட்டுமே தீர்க்கதரிசிகளின் பிறந்த நாட்கள் போன்றே அரசியல் தலைவர்களின் பிறந்த நாட்களும் கொண்டாடப்படுகின்றன. அது இவ்வாறு இருப்பது பரிதாபத்திற்குரியதே. தனிப்பட்ட முறையில், என்னுடைய பிறந்த நாள் கொண்டாடப்படுவதை நான் விரும்பவில்லை. நான் ஓர் அதீத ஜனநாயகவாதியாக இருப்பதால், மனித-வழிபாட்டை நான் விரும்புவதில்லை. இதை ஜனநாயகத்தின் ஒரு வக்கிரம் என்று கருதுகிறேன். ஒரு தலைவரைப் பாராட்டுவது, நேசிப்பது, மரியாதை செய்வது, மதிப்பது ஆகியவை - அவற்றிற்கு அவர் தகுதியுடையவராயிருந்தால் - அனுமதிக்கப்படக் கூடியவையே. தலைவருக்கும் அவரைப் பின்பற்றுபவர்களுக்கும் இது ஏற்புடையதாகும். ஆனால் தலைவரை வழிபடுவது நிச்சயமாக அனுமதிக்கப்பட முடியாதது. அது இருவரையும் மனச்சோர்வடையச் செய்யும். ஆனால் இவையெல்லாம் இப்பொழுது நாம் எடுத்துக் கொண்டுள்ள விஷயத்திற்கு அப்பாற்பட்டதாகும். ஓர் அரசியல் தலைவர், தீர்க்கதரிசியின் அந்தஸ்தில் வைக்கப்பட்டு விடுவாரேயானால், அவர் தீர்க்கதரிசியின் பாத்திரத்தை ஆற்ற வேண்டும், தீர்க்கதரிசி செய்ததைப் போன்றே அவர் தன்னைப் பின்பற்றுவோருக்கு நற்செய்தி வழங்க வேண்டும்.

தீண்டப்படாதாருக்கு நான் என்ன நற்செய்தி கொடுக்க முடியும்? நான் அவர்களுக்கு ஒரு நற்செய்தி கொடுக்க இயலாது. ஆனால் கிரேக்கப் புராணத்திலிருந்து ஒரு கதையை அவர்களுக்கு

நான் சொல்லி, ஒரு நீதியை சுட்டிக்காட்ட முடியும். இந்தக் கதை யானது கிரேக்க தேவதை டெமிடெருக்கு சமர்ப்பிக்கப்பட்ட ஹோமரின் துதிப்பாடலில் அடங்கியிருக்கிறது. இந்த மகத்தான பெண் தெய்வம், தனது மகளைத் தேடி அலைந்தபோது, கெலி யோசின் தர்பாருக்கு எவ்வாறு வந்து சேர்ந்தார் என்பதை டெமி டெருக்கான இந்த துதிப்பாடல் எடுத்துக் கூறுகிறது. ஓர் அடக்க மான செவிலித்தாயின் உருவத்தில் வந்த தேவதையை யாரும் அடையாளம் காணவில்லை.

மெடொனீரா அரசி, தனக்குப் புதிதாகப் பிறந்த குழந்தை டெமேஃபூனை (பின்னர் டிரிபிள்டோலெமஸ் என்று அறிவிக்கப் பட்டவர்) அந்த செவிலித்தாயின் பராமரிப்பில் ஒப்படைத்தாள்.

ஒவ்வொரு மாலையிலும், மூடிய கதவுகளுக்குப் பின்னால் வீட்டிலுள்ள யாவரும் தூங்கிக் கொண்டிருக்கும் போது டெமிடெர் இளம் சிசு டெமேஃபூனை குரூரமான எண்ணத்துடன் அவனுடைய சௌகரியமான தொட்டிலிலிருந்து வெளியே எடுப்பாள். ஆனால் எதார்த்தத்தில், அவனை இறுதியில் கடவுள் தன்மை பெறச் செய்யும் விருப்பத்துடன் அவனிடம் மிகுந்த பாசம் கொண்டிருந் தாள். பிறந்த மேனியுடன் கூடிய அந்தக் குழந்தையைக் கனல் வீசும் நெருப்புக் கங்குகளின்மீது கிடத்துவாள். இந்த டெமோஃபூன் குழந்தை அனல்வீசும் நெருப்புக் கங்குகளின் வெப்பத்தை சமாளித்து, இந்த வேள்வியிலிருந்து புதிய பலம்பெற்றது. அவனிடம் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட சக்தி, வீறார்ந்ததன்மை காணப்பட்டது. அனைத்து நம்பிக்கைக்கும் அப்பால் அதன் புகழ் ஓங்கியது. ஆனால் மெடொனீரா மிகவும் கவலையடைந்தாள், ஒரு நாள் மாலை, அந்தப் பரிசோதனை நடைபெறும் அறைக்குள் திடுப்பிரவேசமாய்ப் புகுந்தாள், தனது தவறான அச்சங்களினால் தூண்டப்பட்ட அவள், பணியாற்றிக் கொண்டிருந்த தேவதையை அப்பால் நெட்டித் தள்ளி குழந்தையை எடுத்துக் கொண்டு நடந்தாள். இதன் விளைவாக, அவள் குழந்தையைக் காப்பாற்றினாள். ஆனால் அதி மனிதனை (சூப்பர்மேன்)யும் இறுதியாகக் கடவுளையும் இழந்தாள்.''

இந்தக் கதை நமக்கு எதை போதிக்கிறது? போராட்டம் மற்றும் தியாகத்தின் மூலமாக மட்டுமே அரிய செயல்களை சாதிக்க முடியும் என்பதை போதிக்கிறது என்று நான் கருதுகிறேன். நெருப் பாற்றில் நீந்தாமல் மனித மாண்போ அல்லது கடவுள் தன்மையோ பெற முடியாது. தீ தூய்மைப்படுத்துகிறது, தீ வலுப்படுத்துகிறது. அது போன்றுதான் போராட்டமும், துன்ப துயரம் அனுபவிப்பதும்.

கீழே அழுந்தப்பட்ட மனிதன் போராட்டத்திற்கும் கஷ்டப்படு வதற்கும் தயாராயிருந்தாலொழிய அவன் மேன்மையை அடைய முடியாது. தனது வருங்காலத்தைக் கட்டியமைப்பதற்கு அவன் வாழ்க்கைச் சௌகரியங்களையும் தற்காலத் தேவைகளையும் கூடத் தியாகம் செய்வதற்குத் தயாராக இருக்க வேண்டும். பைபிளின் (விவிலியத்தின்) மொழியை உபயோகிப்பதெனில், வாழ்க்கையின் ஓட்டத்திற்கு அனைவரும் அழைக்கப்படுகிறார்கள், ஆனால் ஒரு சிலரே தேர்வு செய்யப்படுகிறார்கள். ஏன்? இதற்கான காரணம் தெளிவு. பெரும்பாலான ஒடுக்கப்பட்ட மக்கள் வாழ்க்கையின் இந்த ஓட்டத்தில் பெருமிதம் அடையத் தவறுகிறார்கள், ஏனெனில், அவர்களின் எதிர்காலத் தேவைகளுக்காக, தற்காலத்தின் இன்பங் களைத் தியாகம் செய்வதற்கு உரிய துணிவோ உறுதியோ அவர் களிடத்தில் இல்லை.

இந்தக் கதையில் அடங்கியுள்ளதைக் காட்டிலும் கூடுதல் மேலான மற்றும் மகத்தான செய்தி வேறு இருக்க முடியுமா? நான் ஒன்றைக் குறிப்பிட முடியும். தீண்டப்படாதவர்களுக்கு என்னால் சிந்தித்துப் பார்க்க முடிகின்ற சிறப்பும், பொருத்தமானதுமான செய்தி அதுதான், அவர்களது போராட்டத்தையும் துன்ப துயரங்களை யும் நான் அறிவேன். விடுதலைக்கான தமது போராட்டத்தில், அவர்கள் என்னைக் காட்டிலும் கூடுதல் கஷ்டங்களை அனுபவித் திருக்கிறார்கள் என்பதை நானறிவேன். இவ்வளவிருந்தும், வேறு எந்த நற்செய்தியும் அவர்களுக்கு நான் வழங்க முடியாது. என் னுடைய செய்தி போராட்டம், கூடுதல் போராட்டம், தியாகம், கூடுதல் தியாகம் என்பதேயாகும். தியாகங்களை அல்லது கஷ்ட நஷ்டங்களை எண்ணாமல் போராடுவது மட்டுமே அவர்களுக்கு விடுதலையைக் கொண்டுவரும். வேறு எதுவும் அல்ல.

தீண்டப்படாதவர்கள் எழுச்சியுறுவதற்கும் எதிர்ப்பதற்கும் ஒரு கூட்டு சித்தத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். தமது பணியின் புனிதத் தன்மையில் அவர்கள் நம்பிக்கை வைத்து, தமது லட்சி யத்தை அடைவதற்கு ஆணை பூர்வமான உறுதியை வளர்த்துக் கொள்ள வேண்டும். அவர்களின் கடமை மகத்தானது, நோக்கம் மிகவும் உன்னதமானது. எனவே தீண்டப்படாதவர்கள் ஒன்று திரண்டு பின்வருமாறு பிரார்த்தனை செய்யக் கேட்டுக் கொள்கிறேன்:

''தாங்கள் எந்த மக்களிடையில் பிறந்துள்ளார்களோ அவர்களை உயர்த்தும் கடமையை உணர்ந்துள்ளவர்களே மேன்மை யடைவார்கள். தமது பொன்னான நாட்களை, தமது சக்தியை,

ஆன்மாவையும் உடலையும், தமது பலத்தையும் அடிமைத்தனத்தை எதிர்க்கும் இயக்கத்தை முன்கொண்டு செல்ல அர்ப்பணிப்பதற்கு சபதம் மேற்கொள்பவர்களே மேன்மையடைவார்கள். நல்லது வந்தாலும், கெட்டது வந்தாலும், சூரிய ஒளி வீசினாலும், புயல் வீசினாலும், கௌரவம் வந்தாலும், அவமரியாதை ஏற்பட்டாலும் - தீண்டப்படாதவர்கள் தமது மனித மாண்பை பூரணமாகத் திரும்பப் பெறுகின்ற வரையில் போராட்டத்தை நிறுத்துவதில்லை என்று சபதமேற்பவர்களே மேன்மையடைவார்கள்.''[1]

• • •

1. ஜெய் பீம், சென்னை, டாக்டர் அம்பேத்கர் பிறந்தநாள் சிறப்பு மலர், ஏப்ரல் 13, 1947.

## 14

# ‘பௌத்தத்தின் சாரம்’ என்ற நூலுக்கு முன்னுரை

### (மூன்றாம் பதிப்பு)

இந்த நூலின் ஆசிரியர் பேராசிரியர் பி.லட்சுமி நரசு. அவரது இந்தப் புத்தகத்தைப் பொதுமக்களுக்கு அறிமுகம் செய்து வைப்பதில் நான் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். அதேபொழுதில் இந்த நூலாசிரியரை நான் சந்தித்ததில்லை, அவருடைய சொந்த வாழ்க்கையைப் பற்றியும் அதிகம் தெரியாது என்றும் நான் ஒப்புக் கொள்கிறேன். அவருடைய சொந்த வாழ்க்கை பற்றியும் இலக்கியப் பணிபற்றியும் எவ்வளவு முடியுமோ அவ்வளவு விவரங்கள் சேகரிப் பதற்கு நான் முயன்றுள்ளேன். இந்த நோக்கத்திற்காக டாக்டர் பட்டாபி சீதாராமய்யாவை ஆதாரமாக நான் கண்டறிந்தேன். அவருக்குப் பேராசிரியர் நரசுவை தனிப்பட்ட முறையில் தெரியும். மேலும் அவருடைய நண்பருமாவார். டாக்டர் பட்டாபி என்னிடம் கூறியபடி, பேராசிரியர் நரசுவின் வாழ்க்கையின் முக்கிய விவரங் களை இங்கு நான் வழங்குகிறேன்.

பேராசிரியர் லட்சுமி நரசு பி.ஏ., கடந்த நூற்றாண்டின் ஓர் அருந்திறமுள்ளவர்; சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் பௌதிகத் தில் பட்டம் பெற்றவர். ஓர் ஆசிரியராகவும் பயிற்சியளிப்பவராகவும் இருந்ததிலிருந்து, அவர் 1897ல் துணைப் பேராசிரியர் பதவிக்கு உயர்வடைந்தார். 1898-99ல் பௌதிகத்தில் நிரந்தரப் பேராசிரிய ரான மொஃப்பாத் இல்லாதிருந்த நிலைமையில் அவர் விடுமுறை யில் சென்றிருந்தபோது, பி.ஏ.வகுப்புகளுக்கு பௌதிகம், இரசாயனத் துறைக்கு முழுப் பொறுப்பு வழங்கப்பட்டார். பேராசிரியர் மொஃப்பாத் ஒரு புதிய இளைஞர்; பேராசிரியர் நரசுவை ஒதுக்கி விட்டு இவருக்குப் பேராசிரியர் பதவி வழங்கப்பட்டது. பௌதிகத் தில் - கம்பியல்லாத் தந்தித் துறையில் - ஏற்கனவே தனிச்சிறப்புப் பெற்றிருந்தார். நரசு கடந்த நூற்றாண்டின் 90களில் இந்தத் துறை இன்னும் குழந்தைப் பருவ முன்னேற்றத்தை மட்டுமே அடைந் திருந்தது. 1898, 1899ல் பேராசிரியர் நரசு, - அந்தக் காலத்தில் இப்படித் தான் அவர் அழைக்கப்பட்டார் - பி.ஏ., மற்றும் எம்.ஏ., தேர்வுகளுக்கு

பௌதிகம் மற்றும் ரசாயனத் துறையில் ஏற்கனவே தேர்வாளராக (Examiner) இருந்தார். பேராசிரியர் நரசு இயக்கவியலில் (dynamics) மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தார். இயக்கவியலில் ஒரு பிரச்சினையின் சரியான தன்மை சம்பந்தமாக ஒரு கருத்து மோதல் ஏற்பட்டபோது, பேராசிரியர் வில்சன், ஆணவம் பிடித்த ஓர் ஆங்கிலேயர், சென்னை மாநிலக் கல்லூரியில் இரசாயனத்துறைப் பேராசிரியர், மற்றும் பௌதிகம், இரசாயனத் தேர்வாளர்கள் போர்டின் தலைவர், டைனாமிக்கில் ஒரு பிரச்சினை சம்பந்தமாக பேராசிரியர் நரசு தெரிவித்த கருத்தை மறுத்தார். பேராசிரியர் நரசு உடனே இந்த சவாலை எதிர்கொண்டார். 'எனக்கு நீ போதிக்க விரும்புகிறாயா, மிஸ்டர் நரசு' என்று வில்சன் ஆணவத்துடன் கேட்டார். அதற்கு பதில் அளித்த 'பேராசிரியர் நரசு, அந்தப் பிரச்சினையை விளக்கிக் கூறிவிட்டு, பேராசிரியர் வில்சனுக்கு டைனமிக்ஸில் சிலவற்றை போதிப்பதற்கு நான் மகிழ்ச்சியடைகிறேன்' என்று பதிலடி கொடுத் தார். இந்த சம்பவம் நடந்து ஐம்பதாண்டுகளுக்குப் பிறகு இது நமக்கு ஆர்வ மூட்டுவதாக இருக்கிறது. ஏனெனில் பேராசிரியர் நரசு' உருவச் சிலை வழிபாட்டு எதிப்பாளர் பேராசியர் நரசு ஒர சமூக சீர்திருத்தவாதி. தனது சக்திக் கேற்ற வகையில் அவர் சாதியத்தை எதிர்த்துப் போராடினார். 18ம் நூற்றாண்டின் 90 ஆம் ஆண்டு களிலேயே இந்து மதத்திலுள்ள கொடுங்கோன்மையை எதிர்த்துக் கலகக் கொடி உயர்த்தினார். அவர் பௌத்தத்தை மிகவும் நேசித்தார். வாராவாரம் பௌத்தத்தைப் பற்றி சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். மாணவர்கள் மத்தியில் அவருக்கு நிறைய செல்வாக்கு ஏற்பட்டது. அவர்களுடைய கண்ணோட்டத்தையும் பார்வைகளையும் விரிவு படுத்துவதற்கு அவருடைய தனிப்பட்ட செல்வாக்கு மாயாஜாலம் போல் பயன்பட்டது. தனிப்பட்ட முறையிலும் தேசிய ரீதியிலும் அவருடைய சுயமரியாதை உணர்வு மிகவும் உயர்ந்த தரத்திலிருந்தது; அவரது ஐரோப்பிய சகாக்களின் ஆணவத்திற்கும் சுய-மேலாண்மை உணர்வுக்கும் அவர் சிறிதும் விட்டுக் கொடுக்கவில்லை. அவர் களுடைய அறிவுத் திறனுக்கு உரிய மரியாதை கொடுப்பதற்கு அவர் எப்போதும் தயாராயிருந்தார். ஆனால் அதே பொழுதில் பிறரை அவமானப்படுத்தும் அவர்களுடைய தன்னகங்காரப் போக்கை ஒருபோதும் அவர் சகித்துக் கொண்டதில்லை. ஒரு கல்வியாளர் என்ற முறையில் பேராசிரியர் நரசுக்கு சிறப்பான, பொதுவான மற்றும் பரவலான அங்கீகாரம் கிடைப்பதற்கு நீண்ட காலம் பிடிக்க வில்லை. விரைவிலேயே அவர் பச்சையப்பன் கல்லூரியின் முதல்வராக (பிரின்ஸ்பாலாக)ப் பதவி உயர்வு செய்யப்பட்டார்.

பேராசிரியர் நரசு மிகவும் உயர்வான பொது உணர்வு கொண்ட குடிமகன், 'தேசிய நிதி மற்றும் தொழில்துறைக் கழகம்' என்ற அமைப்பை உருவாக்குவதில் தீவிரப் பங்காற்றினார். அதனுடைய சார்பில் சிறு சிறு நன்கொடைகள் வசூலிக்கப்பட்டன. முன்னேற்ற மான தொழில்நுட்பக் கல்வி பெறுவதற்காக வெளிநாடு செல்ல விரும்பும் மாணவர்களுக்கு அதிலிருந்து உதவி வழங்கப்பட்டது. அக்காலத்திய இளைஞர்களை ஜப்பான் மிகவும் கவர்ந்தது. பல்வேறு சிறுதொழில்கள் மற்றும் பொருளுற்பத்தியின் - குறிப்பாக சோப்புத் தயாரிப்பது, எனாமல் மற்றும் சாயங்கள் தயாரிப்பு முதலிய வற்றுக்கான நுட்பத்தைக் கற்றுக் கொள்வது அவர்களுக்கு பேருவகை யாக இருந்தது. ஆனால் பேராசிரியர் சமூக சீர்திருத்தத்தில் பேரார்வம் கொண்டிருந்தார். பௌத்தத்தில் அவர் மனநிம்மதி பெற்றார். சாதி முறை, இளவயது திருமணங்கள், விதவைத் திருமணத் தடுப்பு ஆகியவற்றின் தீமைகளை வெகுமுன்னதாகவே கண்டறிந்த பலரில் அவரும் ஒருவர். அவர் சகோதரர்களில் ஒருவர் ஒரு நடைமுறை சமூக சீர்திருத்தவாதியாக இருந்ததும், விதவைத் திருமணம் செய்து கொண்டதும் மிகவும் மனத்திருப்தி அளிப்ப தாகும் என்று அப்பொழுது சீர்திருத்த வட்டாரங்களில் கருதப் பட்டது. அச்சமயம் கிறிஸ்துவ மத போதகர்கள் சமூக சீர்திருத்த இயக்கத்திற்கு உடன்பாடு தெரிவித்து வந்தார்கள் என்பது மட்டு மன்றி, அதை மிகவும் உயர்வாகவும் கருதி வந்தார்கள். அதை வைதீக இந்து மதத்திற்கும், கிறிஸ்துவத்திற்கும் மதம் மாறுவதற்கு இடைப்பட்ட கட்டம் என்றும் கருதினர். ஆனால் அவர்கள் தங்கள் கருத்தை மாற்றிக் கொள்வதற்கு நீண்டகாலம் பிடிக்கவில்லை. அத்தகைய முற்போக்கு இயக்கங்களை மதமாற்றத்திற்கு மெய்யான இடையூறாக இருப்பதாகக் கருதலாயினர். ஐரோப்பிய ஆணவத்தை தேச பக்த ஆர்வத்துடன் எதிர்த்துப் போராடிய 19ம் நூற்றாண்டுப் போராளி பேராசிரியர் நரசு, அது போன்ற உருவ வழிபாட்டு வெறி கொண்ட வைதிக இந்து மதத்தையும், தேசியவாதப் பார்வை கொண்ட இறைமைக் கோட்பாடுகளை ஏற்றுக்கொள்ளாத பிராமணர் களையும் உக்கிரமான கிறிஸ்துவ சமயத்தையும் பகுத்தறிவுக் கண் ணோட்டத்துடனும் எதிர்த்தார் - இவை எல்லாவற்றையும் மகத்தான புத்தரின் போதனைகளில் தளராத நம்பிக்கை என்ற ஊக்கமூட்டும் பதாகையின் கீழ் நிகழ்த்தினார்.

சமீப காலத்தில், இந்தியாவின் வெவ்வேறு பாகங்களி லிருந்து பலர், புத்த மதத்தைப் பற்றிய ஒரு நல்ல புத்தகத்தைப் பரிந்துரை செய்யும்படி என்னைக் கேட்டு வருகிறார்கள். அவர்

களுடைய விருப்பதற்கு இசைந்து, பேராசிரியர் நரசுவின் புத்தகத்தை எவ்விதத் தயக்கமுமின்றி நான் பரிந்துரை செய்கிறேன். ஏனெனில், இதுவரை வெளியானவற்றில் அதுதான் சிறந்த புத்தகம் என்று நான் கருதுகிறேன். துரதிருஷ்டவசமாக, நீண்ட காலமாக இந்தப் புத்தகம் கிடைக்கவில்லை, விற்றுத் தீர்ந்து போயுள்ளது. எனவே, அதை மீண்டும் அச்சிடுவதென்று நான் முடிவு செய்தேன். இதன் மூலம் பௌத்தத்தின் போதனைகளில் ஆர்வம் உள்ளவர்களின் விருப்பம் நிறைவேறி, ஒரு முழுமையான மற்றும் தெளிவான விளக்கத்துடன் கூடிய ஒரு புத்தகம் அவர்களின் கைகளில் கிடைக்கும். வரதாச்சாரி அண்ட் கம்பெனி என்ற ஒரு பழைய நிறுவனத்தின் பிரதிநிதிகளுக்கு நான் நன்றி கூறியாக வேண்டும், மூல வெளியீட்டின் காப்புரிமை அவர்களிடம் இருந்தது, அதை மீண்டும் அச்சிட்டு வெளியிடுவதற்கு அவர்கள் எனக்கு அனுமதியளித்தனர்.

இந்த மறுபதிப்பிற்கு இந்த முன்னுரையை எழுதுவதில் புத்தரின் போதனைகளுக்கு எதிராக, கடந்த காலத்திலும் தற்போதும் - அவருடைய எதிரிகளால் முன்வைக்கப்பட்ட சில விமர்சனங்களுக்கு பதில் சொல்லுவதே என்னுடைய நோக்கமாக இருந்தது. ஆனால் இரண்டு காரணங்களுக்காக, அந்த நோக்கத்தை இப்பொழுது நான் கைவிட்டுவிட்டேன். முதலாவதாக, இந்தப் பணியில் ஈடுபடுவதற்கு என்னுடைய உடல்நிலை இப்பொழுது என்னை அனுமதிக்காது. இரண்டாவதாக, நானே, புத்தரின் வாழ்க்கைப் பற்றிய ஒரு நூல் எழுதிக் கொண்டிருக்கிறேன்''. என்னுடைய நூலிலேயே இந்த விஷயம் பற்றி தெளிவுபடுத்த முடியும் என்று நான் நினைக்கிறேன். எனவே, மற்றொருவரின் நூலுக்கு எழுதும் முன்னுரையில் விட, என்னுடைய நூலிலேயே அதை நன்கு செய்ய முடியும். நான் இந்த முடிவு எடுத்ததற்கு குறிப்பாக, பேராசிரியர் நரசுவின் புத்தகத்தைப் படிப்பவர் என்னுடைய முடிவின் காரணமாக எவ்விதத்திலும் பாதிப்படைய மாட்டார் என்று நான் நம்புகிறேன்.

**பி.ஆர். அம்பேத்கர்[1]**

*''ராஜ் கிருஹ''*
*இந்து காலனி, தாதர்,*
*பம்பாய் - 14.*
*மார்ச் 10, 1948*

● ● ●

1. முதல் பதிப்பு 1907, இரண்டாம் பதிப்பு 1912.
2. மூன்றாம் பதிப்பு 1948, தாக்கர் அண்ட் கோ லிமிடெட் ரேம்பார்ட் வரிசை, பம்பாய்.

# 15

# இந்தியாவின் பண்டையக் கடந்த காலம் நம்பிக்கையின்மைக்கு இடமளித்தது

## 'ராஷ்ட்ர ரக்ஷ கி வைதிக் சதன்'
## - சுவாமி வேதாநந்தா தீர்த்தா

### முன்னுரை

சுவாமி வேதானந்த தீர்த்தாவின் புத்தகத்திற்கு ஒரு முன்னுரை எழுதும்படி நான் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறேன். எனக்கு வேலை அதிகமிருப்பதன் காரணமாக, நூலாசிரியரின் வேண்டு கோளை ஏற்பதற்கு நான் இசையவில்லை. ஆனால் நான் ஒரு சில வார்த்தைகள் எழுதும்படி அவர் வற்புறுத்தி வருவதால், நான் எழுத ஒப்புக் கொண்டேன். சுதந்திர இந்தியா வேதங்கள் போதித் துள்ளவற்றைத் தனது மதமாகக் கொள்ள வேண்டும் என்பது ஆசிரியரின் கோரிக்கையாகும். இந்த போதனைகள் வேதங்கள் எல்லா வற்றிலும் சிதறிக் கிடக்கின்றன. அவர் அவை எல்லாவற்றையும் ஓரிடத்தில் இந்தப் புத்தகத்தில் திரட்டியுள்ளார். இந்தப் புத்தகம் புதிய இந்தியாவின் வேதமாகுமா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், பண்டைய ஆரியர்களின் சமயப் புத்தகங்களிலிருந்து திரட்டப்பட்ட கூற்றுகளின் ஓர் அதிசயமான தொகுப்பு இந்தப் புத்தகம் என்பது மட்டுமன்றி, பண்டைக்கால ஆரியர்களிடையில் நிலவிய தீவிர சிரத்தை மற்றும் செயல்களைக் கூர்மையான முறையில் கொண்டு வந்துள்ளது. நவீன கால இந்துக்களிடம் ஆதிக்கம் வகிக்கும் பண்டைக்கால ஆரியர்களிடமிருந்த நம்பிக்கை யின்மை இதில் எதுவுமில்லை என்று இந்தப் புத்தகம் காட்டுகிறது. இந்தியாவின் பண்டையக் கடந்த காலத்தின் ஆக்கப்பூர்வமான தன்மையும் நன்னம்பிக்கையும் மாற்றமடைந்து பிற்காலத்திய நம்பிக்கையின்மைக்கு எவ்வாறு இடமளித்தது என்பதை நூல் ஆசிரியர் விளக்கியிருப்பாரேயானால், இந்த நூல் கூடுதல் மதிப் புடையதாக இருந்திருக்கும். ஒரு பிந்திய கட்டத்தில் நூலாசிரியர் இந்தப் பிரச்சினையை ஆராய்வார் என்று நான் நம்புகிறேன்.

இதற்கிடையில், உலகம் மாயை என்ற தத்துவம் ஒரு புதிய கண்டுபிடிப்பு என்பது நமது அறிவுக்கு ஒரு பெரிய பங்களிப்பு ஆகும். இந்தக் கண்ணோட்டத்திலிருந்துதான் நான் இந்தப் புத்தகத்தைப் பரிந்துரை செய்கிறேன்.

**பி.ஆர். அம்பேத்கர்**[1]

1. *சுவாமி வேதானந்த தீர்த்தா, (1892 - 1956) - ராஷ்டிர ரக்ஷா கி வைதிக் சதன் - 1948.*

# 16

# 'பெற்றுக்கொண்டது' என்ற சொல்லின் பொருள்

*198வது விதியின் (2) ஷரத்தில் காணப்படும் 'பெற்றுக் கொண்டது' என்ற சொல்லுக்குக் கொடுக்கப்பட வேண்டிய பொருள் என்ன என்பதுதான் இப்பொழுது பிரச்சினை. லெஜிஸ்லேடிவ் கவுன்சிலின் செயலகம் பெற்றுக் கொண்டது என்பது இதன் பொருளா, அல்லது லெஜிஸ்டேடிவ் கவுன்சிலினால் பெற்றுக் கொண்டபடி என்பது இதன் பொருளா? இந்த இரண்டுக்கும் இடையிலுள்ள வேறுபாடு முக்கியமானதுதான். ஏனெனில் இது, எல்லை வரம்பு காலகட்டத்தின் துவக்கப் புள்ளியை இது நிர்ண யிக்கிறது - இது நிதி மசோதாவிற்கு பதினான்கு நாட்களாகும். இது இந்திய அரசின் கருத்துக்கு அனுப்பட்டுள்ளது, ஏனெனில், ஆர்.எல்.ஏ.வுக்கும் (ரிஜிஸ்ட்ரார் ஆப் லெஜிஸ்லேடிவ் கவுன்சில்) பீஹாரின் அட்வொகேட் ஜெனரலுக்கும் இடையில் இது சம்பந்த மாகக் கருத்து வேறுபாடு உள்ளது. ஆர்.எல்.ஏ., முன்னர் கூறிய விளக்கத்தையும், அட்வொகேட் ஜெனரல் பின்னர் கூறிய கருத்தை யும் கொண்டுள்ளனர்.*

*ஆர்.எல்.ஏ., மூன்று வாதங்களைச் சார்ந்து நிற்கிறார்:*

*(1) 198வது விதியின் (2) ஷரத்து 'அது பெற்றுக் கொள்ளப்பட்ட தேதியிலிருந்து பதினான்கு நாட்கள்' என்று கூறுகிறது.*

*(2) 197வது விதியின் (2) (ஆ) ஷரத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கிற வாசகத்திற்கும், 198வது விதியின் (2) ஷரத்தில் பயன்படுத்தப் பட்டிருக்கிற வாசகத்திற்கும் இடையில் ஒரு வேறுபாடு உள்ளது.*

*(3) பீஹாரின் அட்வொகேட் ஜெனரலின் வாதம் சரியானது என்று ஏற்றுக் கொள்ளப்பட்டால், ஒரு நிதி மசோதா நிறை வேற்றப்படுவதற்கு ஏற்படக்கூடும் தாமதம்.*

*இந்த வாதங்கள் ஒவ்வொன்றையும் நான் தனித் தனியாக எடுத்துக் கொள்கிறேன்.*

ஆர்.எல்.ஏ.வின் முதலாவது வாதத்தை எடுத்துக் கொண்டால், கீழ்வரும் அம்சங்களை கவனிப்பதற்கு அவர் தவறியதால் அவருடைய வாதம் பலவீனப்பட்டுப் போகிறது :

(1) 198வது விதி (2)வது ஷரத்திலிருந்து 'அது மசோதாவைப் பெற்றுக் கொண்டது' என்ற சொற்களை ஆர்.எல்.ஏ எடுத்துக் கொண்டு, தனது வாதத்தை அமைத்துக் கொள்கிறார். 'அது பெற்றுக் கொள்ளப்பட்ட' என்று சொற்களைப் பயன்படுத்தியதில், மேலவையின் செயலகம் பதிலாகப் (vicarious) பெற்றுக் கொள்வதற்கு வகை செய்வது மட்டுமே அரசியல் சாஸனத்தின் எண்ணமே தவிர, மேலவை நடைமுறையில் பெற்றுக் கொண்ட தேதியல்ல. ஆனால் அது, 'லெஜிஸ்லேடிவ் கவுன்சிலுக்கு அதனுடைய பரிந்துரைகளுக்காக அனுப்பப்பட்டது' என்ற சொற்களைக் கணக்கில் எடுத்துக் கொறவதற்கு முற்றாகத் தவறுகிறது, இந்த சொற்கள் (2)வது ஷரத்திலும் காணப்படுகின்றன. மற்றும் அவை, மேற்படி ஷரத்தின் முக்கியமான சொற்களாகும். 'அது பெற்றுக் கொள்ளப்பட்டதன்' என்ற சொற்கள் மட்டுமே முக்கியமற்றதாகும். அவற்றின் பொருளை 'லெஜிஸ்லேடிவ் கவுன்சிலுக்கு அதனுடைய பரிந்துரைக்காக அனுப்பப்பட்ட' என்ற சொற்களுடன் சேர்த்து வாசிப்பதன் மூலம் அவற்றின் பொருளைப் பெறவேண்டும். அவ்வாறு படித்தால் செயலகத்தினால் பெற்றுக்கொண்ட ஈன்ற பொருளை அவை தராது.

(2) ஆர்.எல்.ஏ., (3) வது (4) வது ஷரத்துகளின் கட்டுப்பாட்டு விதிகள் இருப்பதை கவனத்தில் எடுத்துக் கொள்ளவில்லை. அவர் தான் கூறுவதை நியாயப்படுத்துவதற்கு (5) வது ஷரத்தை சார்ந்து நிற்கிறார். வாசகத்தில் வித்தியாசம் இருக்கிறது என்பது உண்மைதான். ஆனால், 198வது விதியின் (3)வது, (4)வது ஷரத்துக்களில் வகுத்தளிக்கப்பட்டுள்ள நியதிகளை லெஜிஸ்லேடிவ் கவுன்சில் நடைமுறைப்படுத்தியதற்குப் பின்னர்தான் (5)வது ஷரத்து அமலுக்கு வருகிறது என்பதை அவர் மறந்து விடுகிறார். கவுன்சில் கூட்டம் நடப்பதையும், மசோதாவை விவாதிப்பதற்கு வாய்ப்புக் கிடைப்பதையும் (3) வது (4)வது ஷரத்துகள் தேவைப்படுகின்றன.

ஆர்.எல்.ஏ. கடைப்பிடித்த அமைப்பு விதி ஓர் ஆரோக்கியமான அமைப்பு விதி அல்ல. இந்தப் பிரச்சினைக்குப் பொருத்தமான சரியான விதி **'எக்ஸ் விசேரியஸ் ஆக்டஸ்'** என்று அறியப்பட்டுள்ள விதியாகும். கோக் என்ற நிபுணரின் அதிகார வலிமையே அதற்கு இருக்கிறது. கோக் இவ்வாறு கூறுகிறார் : ''நாடாளுமன்றத்தின் சட்டத்தை நன்றாக வியாக்கியானம் செய்பவரின் அலுவலகம் எல்லாப் பாகங்களையும் ஒன்றாக அமைத்துக் கூறவேண்டுமேயன்றி. ஒரு பாகத்தை மட்டும் விளக்குவதல்ல... சட்டத்தை உருவாக்கியவர்கள் அதற்கு வழங்கியுள்ள பொருளை, சட்டத்தின் ஒரு பாகத்தை, அதே சட்டத்தின் மற்றொரு பாகத்தைக் கொண்டு விளக்குவதுதான் சிறந்த முறையில் விளக்குவதாகும் என்பது மிகவும் இயல்பான மற்றும் மெய்யான விளக்கமாகும்.'' (கிரேயின் நூலில் இருந்து மேற்கோள், பக்கம் 95)

ஆர்.எல்.ஏ.வின் மற்றொரு வாதம், 197வது விதியின் (2) (ஆ) ஷரத்தின் வாசகத்திற்கும் 198வது விதியின் (2) வது ஷரத்தின் வாசகத்திற்கும் இடையில் உள்ள வேறுபாடு ஆகும். வாசகத்தில் வேறுபாடு இருப்பது மெய்யே. அக்கறையுள்ள தரப்புகள், இரண்டு வாசகங்களின் நோக்கங்கள் வெவ்வேறானவை என்ற வாதத்திற்கு ஆதரவாக வாசகங்களிலுள்ள வேறுபாட்டை ஆதாரமாகக் காட்டுவார்கள் என்பதும் மெய்யே. ஆர்.எல்.ஏ.வின் வாதத்திற்கு எதிராக, கீழ்வரும் விளக்கங்களை நான் வலியுறுத்துவதற்கு விரும்புகிறேன்.

197வது விதியின் (2) (ஆ) ஷரத்தின் மூலவாசகம் 198வது விதியின் (2) வது ஷரத்தின் வாசகத்தைப் போலவே தான் இருந்தது. 197வது விதியின் மொத்தம் நான்கு முன்வரைவுகள் (Drafts) அரசியல் நிர்ணய சபைக்கு சமர்ப்பிக்கப்பட்டன. முதல் மூன்று முன்வரைவுகளின் வாசகம் 198வது விதியின் வாசகத்தைப் போன்றவையே. அரசியல் நிர்ணய சபையின் பதிவேடுகளில் இருந்து இந்த விபரங்களை நான் ஊர்ஜிதம் செய்து கொண்டேன். இந்த சூழ்நிலைமைகளில் பல்வேறு பிரச்சினைகள் எழுகின்றன. 197வது விதியின் வாசகம் மாற்றப்பட்ட போது, 198வது விதியின் வாசகம் ஏன் மாற்றப்பட

வில்லை? 197 (2) (ஆ) விதியில் அடங்கியிருந்த மூல நோக்கம் மாற்றப்பட்டதினால் அந்த வாசகம் மாற்றப் பட்டதா? அல்லது, நோக்கம் ஒன்றாகயிருந்த போதிலும், புதியவாசகம் அதே பழைய மற்றும் மூல நோக்கத்தை மேம்பட்ட முறையில் வெளிப்படுத்தியது என்பதனாலா? இந்தக் கேள்விகளுக்கு எந்தத் திட்டவட்டமான பதிலை யும் அளிப்பது சிரமமானதா? என்னுடைய நினைவின் படி, 197வது விதியின் வாசகத்தை நாங்கள் மாற்றியது நாங்கள் எங்களுடைய மூல நோக்கத்தை மாற்றிக் கொண்டோம் என்பதினால் அல்ல, மாறாக, மாற்றப் பட்ட வாசகமானது எங்களுடைய மூலநோக்கத்தை மேம்பட்ட முறையில் வெளிப்படுத்தியது என்று உணர்ந் ததனால்தான். இது எப்படியிருந்த போதிலும், வாசகத் தின் வேறுபாட்டை அடிப்படையாகக் கொண்ட வாதம் நிர்ணயகரமானதல்ல.

ஓர் அகந்தையாளருக்கு, வாசகத்தின் வேறுபாட்டை அடிப் படையாகக் கொண்ட வாதம் உடன்பாடானதாக இருக்காமற் போகும் என்று நான் உணருகிறேன். ஏனெனில், 198வது விதியில் உங்களுடைய நோக்கம் 197 (2) (ஆ) விதியில் இருப்பதைப் போன்றதேயென்றால், 197 (2) (ஆ) விதியின் வாசகத்தை மாற்றிய போது, அதன் வாசகத்தையும் மாற்றி, இசைவானதாக்கவில்லை என்று கேட்பது சாத்தியம். இந்த வாதத்திற்கு எனது பதில் மிகவும் எளியையானதே. ஒவ்வொரு விதியின் விஷயத்திலும் வாசகத்தில் மாற்றம் என்றால் நோக்கங்களிலும் மாற்றம் என்று வாதிடுவது தவறாகும். ஏனெனில், வெவ்வேறு சொற்களில் கூறப்பட்டாலும் நோக்கம் ஒன்றாக இருக்கலாம் என்பது நன்கு ஏற்றுக்கொள்ளப் பட்ட ஒரு நிலையாகும். இது தொடர்பாக, கிரேயினுடைய சட்டப் புத்தகத்திலிருந்து கீழே வருவதை மேற்கோள் காட்ட விரும்புகிறேன்.

''ஆனால், மேலே கூறப்பட்டதைப் போன்று, இந்த அனுமானம் பொதுவாகக் கூறப்பட வேண்டிருந்தாலும்'' இது நிச்சயமாக விரும்ப வேண்டியது'' என்றபோதிலும் கேஸ் மெண்ட் எதிர் ஃபுல்டன் வழக்கில் (1) நீதித் துறைக் கமிட்டி கூறியது போன்று, (i) ''சட்டங்களை உரு வாக்குவதில் ஒரே வார்த்தைகள் எப்போதும் அதே பொருளில் பயன்படுத்தப்பட வேண்டும்''; இருந்த போதிலும், சட்டப் பேரவை, ஒரு குறிப்பிட்ட பொருளை எடுத்துக்கூறும் நோக்கத்திற்கு, அந்தப் பொருளினின்றும்

*விலகிச் செல்லும் எண்ணமில்லாமல் முன்பு பயன் படுத்திய வாசகத்திலிருந்து விலகிச் செல்லும் பல உதா ரணங்களைக் காணமுடியும். ஆர்.வி. பட்டில் (கே) வழக்கில் ஜே.பிளாக் பர்ன் இவ்வாறு கூறினார்; ''ஒரு சட்டத்தினுடைய சொற்களை சட்டப் பேரவை மாற்றும் போது, பொருளை மாற்றுவதற்கு ஒரு எண்ணம் இருக்கும் என்று நிச்சயமாகக் கொள்ளலாம்''. ஆயினும் இது, அவ்வாறு இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. ஏனெனில், உண்மையில் ஹாட்லி எதிர் பெர்க்ஸ் (1) வழக்கில் ஜே. பிளாக்பர்ன் ஜே. கூறியது போன்று, ''நாடாளுமன்றத்தின் சட்டங்களை வகுக்கும்போது, சட்டப்பேரவை, சட்டத்தின் பாணியை மேம்படுத்து வதற்கும், அதே வார்த்தைகளை மீண்டும் மீண்டும் பயன் படுத்துவதைத் தவிர்ப்பதற்கும், பொருளை மாற்றும் நோக்கமின்றி சொற்களை இடையறாது மாற்றுகிறது'', இவ்வாறு ரீ ரைட் (எம்) வழக்கில் எல்.ஜே. மெல்லிஷ், 1869, திவால் சட்டத்தில், ரத்து செய்யப்பட்ட 1849ம் வருடத்திய திவால் சட்டத்தில் பயன்படுத்திய வாசகத்தி னின்றும் மாறுபட்டிருந்தது குறித்து இவ்வாறு கூறினார்: ''தற்போதைய சட்டத்துடன் பரிச்சியம் உள்ள ஒவ்வொரு வரும், முன்னாளைய சட்டங்களின் வாசகம் - சட்டத்தில் எத்தகைய மாற்றமும் செய்யும் எண்ணம் இல்லாதிருந்த போதும் - பல உதாரணங்களில் மிகவும் மாற்றப்பட்டன என்பதை அறிவார்கள்.*

அக்கவுண்டண்ட் - ஜெனரல் வி.பிராட்லா (என்) வழக்கில் 1866 நாடாளுமணன்ற பிராமணங்கள் சட்டத்தில் ''செய்யப்பட்டது'' என்ற சொல் பிரயோகத்தில் ''பிரமாணம் செய்யப்பட வேண்டும்'' என்பது ''எடுத்துக் கொள்ளப்பட்டது'' (taken) என்ற சொல்லி னின்றும் வேறுபட்டதாகக் கருதப்பட்டது. ''ஆனால் முகவுரையைப் பார்க்கும் போதும், அந்த சொல் உபயோகப்படுத்தப்பட்டிருந்த முறையிலும், 'செய்யப்பட்டது' என்ற சொல்லுக்கு திட்டவட்டமாக ''எடுத்துக் கொள்ளப்பட்டது'' என்று சொல்லுக்குரிய அதே பொரு ளாகும்.

மாண்டீத் X மெக்கவின் (ஓ) வழக்கில் லார்ட்காட்டன் ஹாம் இவ்வாறு கூறினார்: ''ஒரு குறிப்பிட்ட வழக்கில் நாடாளுமன்றம் ஒரு குறிப்பிட்ட முறையிலான நடைமுறைக்கு வகை செய்யும்போது, மற்றொரு வழக்கில் அத்தகைய நடைமுறை எதுவும் வகுத்துக்

கொடுக்கப்பட்டபோது, பொதுவிதியாக, சட்டத்தைத் தயாரித்தவர்களின் புறக்கணிப்பு அல்லது கவனக் குறைவு என்பதிலிருந்து இது எழுகிறது என்று கருதக் கூடாது.'' ஆனால் நோட்டாஜ் எதிர் ஜேக்ஸன் (பி) வழக்கில் பிரெட் எம்.ஆர்.கூறியது போன்று, ''நாடாளுமன்றத்தின் சட்டங்களை வரைபவர்கள், சில சமயங்களில் வேறு யாரும் உபயோகப்படுத்தாத சொற்றொடர்களை உபயோகிக்கின்றனர்; இதன் விளைவாக, சட்ட வரைவுகளில் சில சமயங்களில் நாம் எதிர்ப்படும் சொற்பிரயோகங்கள், எந்த ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகவும் பயன்படுத்தப்பட்டவையல்ல, மாறாக வரைவாளரின் கவனக் குறைவான போக்கினால் புகுத்தப்பட்டவை என்று நம்பும்படி நிர்ப்பந்தத்திற்குள்ளாகிறோம்.'' இவ்வாறுதான் ஆர் எதிர் பட்டில் (கியூ) வழக்கில் ''(சில) கமிஷனர்களால் கேட்கப்பட்ட எந்தக் கேள்விக்கும் அளிக்கப்படும் பதிலில் எந்த நபரால் கூறப்படும் எந்தக் கூற்றும் - பொய்ச் சான்று கூறியதாகக் குற்றம் சாட்டப்பட்ட வழக்குகளைத் தவிர - எந்த விசாரணையிலும் சாட்சியமாக அனுமதிக்கப்படக் கூடியதல்ல என்று சட்டமியற்றப்பட்டபோது பொய்ச்சான்றுகளுக்கான குற்றச்சாட்டுகள்'' என்ற சொற்றொடர், பொதுவாகப் பொய்ச் சான்றுக்கு, அல்லது கமிஷனர்களின் முன்பு புரியப்பட்ட பொய்ச் சான்றுக்குப் பிரயோகப்படுத்தப்படுகிறது. ஒரு முந்திய ''சட்டத்தில் இதுபோன்ற ஒரு ஷரத்து இருந்ததாகத் தோன்றுகிறது. ஆனால் அந்த சட்டத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்றொடர் ''அத்தகைய பதில்களில் அளிக்கப்பட்ட பொய்ச் சான்றுக்கான குற்றச்சாட்டுக்கள்'' என்பதாகும். அதன் விளைவாக, இந்த சொற்கள் மாற்றத்தினால் பொருளை மாற்றுவதற்கு சட்டப்பேரவை நோக்கங் கொண்டுள்ளது என்று வாதிக்கப்பட்டது. ஆயினும், பிந்திய சட்டத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்றொடரின் மூலம், கருத்தில் கொள்ளப்பட்ட பொருள், பொதுச் சட்டத்தின் மிகவும் முக்கியமான கோட்பாடுகளில் ஒன்றைத் தலைகீழாகப் புரட்டுவதாகும். என்று கருதப்பட்டது. எனவே, முந்திய சட்டத்தில் பயன்படுத்திய வாசகத்தை மாற்றுவதற்கு எந்தக் காரணமுமில்லை என்று கருதப்பட வேண்டும். மற்றும் கெல்லி சி.பி.கூறியது போன்று, ''அந்த சட்டத்தை இயற்றியவர்கள் கவனக் குறைவான முறையில் வரைந்திருக்கிறார்கள்; அதை வரைவதில் மிகவும் கவனக்குறைவாக நடந்து கொண்டிருக்கிறார்கள், என்று காட்டுகிறது.'' மேலும் பழைய சட்டத்தில் மிகையான சொற்கள் இருப்பதாகத் தோன்றினால், அதன்பின்பு இயற்றப்படும் சட்டத்தில், சட்டத்தை மாற்றுவதற்கு சட்டப் பேரவைக்கு எந்த நோக்கமும் இல்லையென்ற வகையில், அந்த சொற்களை அகற்றிவிடலாம், ரீவுட் (ஆர்) வழக்கில் மெல்லிஸ் எல்.ஜே.கூறியது போன்று,

''மாற்றங்கள் செய்வதில் ஒரு நோக்கமிருப்பதாக நிரூபிக்க வேண்டிய அவசியமிலலாத நிலையில், மிகையாகவும், தவறான பொருள் தருவதாகவும் உள்ள சொற்களை அகற்றுவது மேம்பாடாக இருக்கும் என்று இந்த (பிந்திய) சட்டத்தை வகுத்தவர்கள் நினைத்தார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. சட்டத்தை எந்த வகையிலும் மாற்றாமல், அவர்கள் மிகவும் சரியாகவே அந்த சொற்களைக் கைவிட்டு விட்டிருக்கக்கூடும் என்று நான் நினைக்கிறேன்.

அவருடைய மூன்றாவது வாதத்தைப் பொறுத்தமட்டிலும், அதனால் நான் சிறிதும் கவரப்படவில்லை என்று கூறியாக வேண்டும். தாமதத்திற்கான இரண்டு காரணங்களைக் காணமுடியும். கவுன்சிலினால் தாமதம் ஏற்பட்டது. கவுன்சில் அமர்வில் இருந்த போதிலும், மசோதா அதற்குக் கிடைத்திருந்த போதிலும் இவ்வாறு ஏற்பட்டது. மசோதா அனுப்பப்பட்டபோது கவுன்சில் அமர்வில் இல்லை என்பதனாலும் தாமதம் ஏற்பட்டது. கவுன்சிலினால் பதினான்கு நாட்களுக்கு மேல்தாமதம் ஏற்படக்கூடாது. அவ்வாறு ஏற்பட்டாலும் அதனால் அசெம்பிளிக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது. ஏனெனில் அதற்கு ஒரு தண்டனையும் உண்டு. (5) வது ஷரத்தில் அதற்கு வகை செய்யப்பட்டுள்ளது. மசோதா அனுப்பப்பட்டபோது, கவுன்சில் அமர்வில் இல்லாதிருந்தால் ஏற்பட்ட தாமதத்திற்கு, கவுன்சிலின் தவறாக இருக்க முடியாது. கவுன்சிலின் அமர்வை கூட்டும்படி கவர்னருக்கு ஆலோசனை கூறுவதற்குப் பொறுப்புள்ளவர்கள்தான் இத்தகைய தாமதத்திற்குப் பொறுப்பாவார்கள். அவர்கள் (5) வது ஷரத்தின் அனுகூலத்தைப் பெறுவதற்கு விரும்பினால், அவர்கள் உடனே கவுன்சிலின் அமர்வுக்கு அழைப்பு விடுத்து, அதற்குப் பதினான்கு நாட்களைக் கொடுத்து தாமதத்தைத் தவிர்க்க வேண்டும். அது அவர்களின் அதிகாரத்தினுள் இருக்கிறது, ஆனால் இரண்டு வழிகளிலும் அவர்கள் அனுகூலம் பெற முடியாது. கவுன்சிலின் அமர்வைக் கூட்டுவதற்கும் அல்லது கூட்டாமலிருப்பதற்குமான விடுப்புரிமையை அவர்களுக்கு அனுமதித்துவிட்டு, அதே சமயத்தில், (5) வது ஷரத்தின் அனுகூலத்தை எடுத்துக் கொள்வதற்கு அவர்களை அனுமதிப்பதானது சட்டப்பேரவையில் ஓர் அவையை ஏமாற்று வதற்கு அவர்களுக்கு சுதந்திரம் கொடுப்பது மட்டுமின்றி, அரசியல் சாஸனத்தையே மோசடி செய்வதுமாகும். திட்டவட்டமாக இதைத் தான் பீஹார் அரசு செய்துள்ளது. ஒரு நிதி மசோதா மேல்சபைக்கு அனுப்பப்படும்போது, கவுன்சிலின் ஓர் அமர்வைக் கூட்ட வேண்டியது அரசின் கடமையாகும்; இது முற்றிலும் அதன் தனியுரிமையாகும் அதனுடைய அதிகாரத்திற்குட்பட்ட விஷயமாகும்.

அது அவ்வாறு செய்யாவிட்டால், அது, 198 வது விதியின் (5)வது ஷரத்தின் அனுகூலத்தைப் பெற முடியாது.

இந்தக் காரணங்களுக்காக, பீஹாரின் கற்றறிந்த அட்வகேட்-ஜெனரலின் கருத்துடன் நான் உடன்படுகிறேன், கற்றறிந்த ஆர்.எல்.ஏ.வின் கருத்தை நிராகரிக்கிறேன்.

ஆர்.எல்.ஏ.வின் வாதங்களை இவ்வளவு விரிவாக விவாதித்து நான் பதில் சொல்லியதற்கு அவர் மீது எனக்குள்ள மரியாதையே காரணமாகும். இல்லாவிட்டால் ஒரேயடியாக அவற்றை நான் நிராகரித்திருப்பேன். இது அறிவதற்கரிதானதேயல்ல. அரசியல் சாஸனத்தை வகுத்தவர்களின் நோக்கம் என்ன என்பதைப் பகுத்தறிவுள்ள யாரும் புரிந்து கொள்ள முடியும் என்பது மிகத் தெளிவானதாகும். பீஹார் அரசு செய்தது வேண்டுமென்றே, திட்டமிட்டுச் செய்த ஒரு மோசடிச் செயலாகும். அது விஷயம் புரியாமல் செய்ததாகும் என்று நம்புவதற்கு நான் மறுக்கிறேன். பீஹார் அரசு ஒரு சாதாரண மோசடிப் பேர்வழியின் தாழ்ந்த மட்டத்திற்குக் கீழிறங்கியது என்று என்னால் கூறாமலிருக்க முடியாது. இது குறித்து நான் மிகவும் அழுத்தமான கருத்துக் கொண்டிருக்கிறேன். எனவே, இது சம்பந்தமான எண்ணங்களை பீஹார் அரசுக்குத் தெரியப் படுத்துவது குறித்து நான் கவலைப்படவில்லை.

நான் முடிப்பதற்கு முன்னால், முற்றிலும் சட்ட இலாக்காவின் பரிசீலனைக்கு உரிய ஒரு பிரச்சினையை எழுப்புவதற்கு விரும்புகிறேன். அரசியல் சாஸனத்தில் இருந்து எழுகின்ற சர்ச்சைக்குரிய அம்சங்கள் சம்பந்தமாக ஆலோசனை கேட்டு மாநில அரசுகளிடமிருந்து எங்களுக்கு அதிக எண்ணிக்கையிலான குறிப்புகள் வந்து கொண்டிருக்கின்றன. இந்தக் குறிப்புகளை உள்வாங்கி எங்களுடைய ஆலோசனைகளை நாங்கள் வழங்குகிறோம். அந்த ஆலோசனை பின்பற்றப்படுகிறது. அது அரசியல் சாஸனம் சம்பந்தமான நடைமுறை வழக்காறு ஆகிவிடுகிறது. இதைச் செய்வதில் நாம் விவேகமாகச் செயல்படுகிறோமா என்பது குறித்து நான் வியப்புறுகிறேன். தரப்புகள் அவர்கள் நினைப்பதுபோல் செயல்பட அனுமதித்து நீதிமன்றத்தில் தமது வாய்ப்பைக் காணும்படி விட்டு விடுவது மேம்பட்டதாக இருக்காதா? ஏனெனில், கிரேயி சுட்டிக் காட்டியுள்ளபடி, (சட்டப் புத்தக சட்டம், பக்கம் 140) சட்டத்தை வியாக்கியானம் செய்வதில் வழக்காறு ஒரு முக்கிய கூறு ஆகிறது. நம்முடைய ஆலோசனையின் பேரில் ஒரு வழக்காறை நாம்

ஏற்படுத்துகிறோம். அதன்படி ஒரு குறிப்பிட்ட வியாக்கியானத்தை ஆதரிக்கிறோம். அது இல்லாத நிலையில், ஆதரிக்கப்பட முடியாத தாகிறது. நம்முடைய ஆலோசனை தவறாக இருந்தால், ஒரு தவறான வியாக்கியானத்திற்கு நாம் பொறுப்பாகிறோம். ஒரு வேளை இந்த நடைமுறை நீண்ட காலமாக இருந்து வரும் ஒரு நடைமுறை யாகும். எனவே, அதைக் கைவிடுவது சிரமம் என்று நான் உணரு கிறேன். இருந்தபோதிலும், இந்த விவகாரங்களில் நமது பொறுப்பு எந்த அளவுக்குச் செல்கிறது என்பதை நினைவில் கொள்வது நல்லது.

**பி.ஆர். அம்பேத்கர்.**

● ● ●

---

*இந்தக் கட்டுரையைப் பொறுத்தமட்டலும், டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் ஆதாரத் தகவல்கள் வெளியீட்டுக் கமிட்டியின் சிறப்புப் பணியில் அப்போதிருந்த அதிகாரி, 1979ல் மகாராஷ்டிர மாநிலத்தின் அரசு தலைமை நிர்வாகி* (Administrator-General) *யிடமிருந்து பெற்ற பதிவேட்டில் இந்தக் கட்டுரை காணப்பட்டது என்று குறிப்பிடுகிறார். இந்தக் குறிப்பில் டாக்டர் அம்பேத்கர் கையெழுத்திட்டுள்ளார்.*

*- ஆசிரியர்கள்.*

# 17

# புத்தரும் அவருடைய சமயத்தின் எதிர்காலமும்

## I

சமயங்களைத் தோற்றுவித்த பலரில் நால்வர் நிறுவிய மதங்கள் கடந்த காலத்தில் உலகத்தை அசைத்துள்ளன என்பது மட்டுமன்றி, இன்னும் பரந்த மக்கள் திரளின் மீது செல்வாக்குச் செலுத்தி வருகின்றன. அந்த நால்வர் புத்தர், ஜீஸஸ் (இயேசு கிறிஸ்து), முகம்மது நபி மற்றும் கிருஷ்ணர். இந்த நால்வரின் ஆளுமைகளையும், தமது மதங்களைப் பிரசாரம் செய்வதில் அவர்கள் கடைப்பிடித்த நிலைகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால், ஒரு புறத்தில் புத்தருக்கும் மறுபுறத்தில் மற்றவர்களுக்கும் இடையில் சில வேறுபாட்டு அம்சங்கள் இருப்பது வெளியாகிறது. அவை முக்கியத் துவம் இல்லாதவை.

புத்தரை மற்றவர்களிடமிருந்து பிரித்துக் காட்டும் முதலாவது அம்சம், அவருடைய தன்னல மறுப்புக் கொள்கையாகும். பைபிள் முழுவதிலும் இயேசு, தான் கடவுளின் மைந்தன் என்றும், தன்னைக் கடவுளின் மைந்தன் என்று அங்கீகரிக்காவிட்டால், கடவுளின் சாம்ராஜ்யத்தினுள் பிரவேசிக்க விரும்புபவர்கள் தோல்வியடை வார்கள் என்றும் வலியுறுத்துகிறார். முகம்மது நபி மேலும் ஒருபடி மேலே சென்றுள்ளார். இயேசுவைப் போன்றே அவரும் தான், இந்த உலகில் கடவுளின் தூதர் என்று உரிமை கொண்டாடினார். ஆனால் அவர், மேலும் அப்பால் சென்று தான் கடவுளின் கடைசி தூதர் என்று வலியுறுத்தினார். அந்த அடிப்படையில் முக்தி அடைய விரும்புபவர்கள், தன்னைக் கடவுளின் தூதர் என்று ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பது மட்டுமன்றி, தான் கடவுளின் கடைசி தூதர் என்பதையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் பிரகடனம் செய்தார். கிருஷ்ணர், இயேசுவுக்கும் முகம்மது நபிக்கும் மேலும் அப்பால் சென்றார். அவர் கடவுளின் மைந்தன் என்றோ, அல்லது கடவுளின் தூதர் என்றோ இருப்பதோடு திருப்தியடைய மறுத்தார். கடவுளின் கடைசி தூதர் என்பதோடு கூட அவர் திருப்தியடைய வில்லை. தன்னையே கடவுள் என்று கூறிக்கொள்வதோடுகூட

அவர் திருப்தியடையவில்லை. தான் 'பரமேஸ்வரன்' என்றும், அவரைப் பின்பற்றுபவர்கள் அவரைத் தேவாதி தேவர்' என்று அழைப்பது போன்று, தாம் கடவுள்களுக்கெல்லாம் கடவுள் என்றும் உரிமை கொண்டாடினார். ஆனால் புத்தர் ஒருபோதும், அத்தகைய அந்தஸ்து (தகுதி) எதையும் தனக்குத்தானே சுவீகரித்துக் கொள்ளவில்லை (வீம்புரிமை கொண்டாடவில்லை.) அவர் மனிதனின் ஒரு மகனாகப் பிறந்தார்; ஒரு சாதாரண மனிதனாக இருப்பதோடு திருப்தியடைந்தார்; ஒரு சாதாரண மனிதனாகத் தன்னுடைய நன்னெறியைப் போதித்தார். இயற்கைக்கு அப்பாற் பட்ட பிறப்புடையவராகவோ, அல்லது தெய்வீக சக்தி உடையவ ராகவோ அவர் உரிமை கொண்டாடவில்லை அல்லது தனது தெய்வீக சக்தியை நிரூபிப்பதற்கு அற்புதங்கள் எதையும் அவர் செய்யவில்லை. ஒரு மார்க்கதாதாவுக்கும் ஒரு மோட்ச தாதாவுக் கும் இடையில் ஒரு தெளிவான வேறுபாட்டை அவர் எடுத்துக் காட்டினார். இயேசுவும், முகம்மது நபியும் கிருஷ்ணரும் மோட்ச தாதாக்கள் என்று தங்களுக்குத் தாங்களே உரிமை கொண்டாடிக் கொண்டனர். ஆனால் புத்தர் மார்க்க தாதாவின் பாத்திரத்தை ஆற்றுவதோடு திருப்தியடைந்தார்.

இந்த நான்கு சமய போதனையாளர்களிடையில் மற்றொரு வேறுபாடும் உண்டு, இயேசுவும், முகம்மது நபியும் தாங்கள் போதிப்பது கடவுளின் சொல் என்றும், எனவே கடவுளின் சொல் என்ற வகையில் தாங்கள் போதிப்பது பிழையாத் தன்மை உடைய தென்றும், கேள்விக்கு அப்பாற்பட்டதென்றும் உரிமை கொண்டாடி னார். கிருஷ்ணர் தனது சொந்த அனுமானத்தின்படி கடவுள்களுக் கெல்லாம் கடவுள்; எனவே, அவர் போதிப்பது கடவுளின் சொல் என்றும், கடவுளால் அருளப்பட்டது என்ற வகையிலும அவை மூலமானதும் இறுதியானதுமாகும். எனவே பிழையாத் தன்மை என்ற பிரச்சினை எழக்கூட இல்லை. ஆனால் புத்தர், தான் போதிப்பது பிழையாத் தன்மை கொண்டது என்ற எத்தகைய உரிமை யும் கொண்டாடவில்லை. தனது மகா பரிநிர்வாண சத்தா என்ற போதனையில் அவர், ஆனந்தாவிடம், தனது சமயம் பகுத்தறிவை யும் அனுபவத்தையும் அடிப்படையாகக் கொண்டதென்றும், தன்னைப் பின்பற்றுபவர்கள் தனது போதனையை அவற்றைத் தான் கூறியதாலேயே பிழையற்றதென்றும் கட்டுப்படுத்துபவை என்றும் ஏற்றுக்கொள்ளக் கூடாதென்றும் கூறினார். பகுத்தறிவையும் அனுபவத்தையும் அவை அடிப்படையாகக் கொண்டதால் அவை திருத்தப்படுவதற்கு முழு இடமுண்டு. அல்லது தனது போதனைகள்

ஏதாவது, ஒரு குறிப்பிட்ட காலத்திலும் குறிப்பிட்ட சூழ்நிலையிலும் அவை பொருந்தாதவை என்று கண்டறியப்பட்டால் கைவிடப்படு வதற்கும் உரிமையுண்டு. தனது சமயம் கடந்த காலத்தின் காலாவதி யாகிப் போனவற்றினால் கட்டுப்படுத்தப்படக்கூடாது என்று அவர் விழைந்தார். அது என்றும் பசுமையாயிருக்க வேண்டுமென்றும் எல்லாக் காலங்களிலும் பயன்படக் கூடியதாயிருக்க வேண்டு மென்றும் அவர் விரும்பினார். அதனால்தான், அவர் குறிப்பிட்ட நிலைமையின் தேவைகளுக்கு ஏற்பத் தனது சமயம் துண்டாக்கப் படுவதற்கும் வெட்டிக் குறைக்கப்படுவதற்கும் தன்னைப் பின்பற்று வோருக்கு சுதந்திரம் அளித்தார். வேறு எந்த சமய போதனையாளரும் இத்தகைய துணிவைக் காட்டியதில்லை. பழுதுபார்க்கப்படுவதை அனுமதிப்பதற்கு அவர்கள் பயப்பட்டனர். பழுது பார்ப்பதற்கு அளிக்கும் உரிமை, தாங்கள் பேணி வளர்த்த கட்டுமானத்தை அழிப் பதற்குப் பயன்படுத்தப்படலாம் என்று அவர்கள் அஞ்சினர். புத்தருக்கு அத்தகைய அச்சம் ஏதும் இருக்கவில்லை; தனது அடித்தளம் குறித்து அவருக்கு நம்பிக்கையிருந்தது. மிகவும் உக்கிர மான உருவ வழிபாட்டாளராலும் கூட தனது சமயத்தின் அடித் தளத்தை ஒழித்துவிட இயலாது என்று அவர் அறிந்திருந்தார்.

## II

இதுதான் புத்தரின் தன்னிகரற்ற நிலையாகும். அவருடைய மதத்தைப் பற்றி என்ன? அவருடைய போட்டியாளர்கள் (எதிரிகள்) தோற்றுவித்த மதங்களுடன் அதை எவ்வாறு ஒப்பிடுவது?

முதலில் நாம் புத்த மதத்தை இந்து மதத்துடன் ஒப்பிடு வோம். நமக்குள்ள குறுகிய இடைவெளியில் ஒருசில முக்கிய அம்சங்களுடன், உண்மையில் இரண்டு அம்சங்களுடன் நமது ஒப்பீட்டுக்கு வரம்பு கட்டிக் கொள்வோம்.

இந்து மதமானது ஒழுக்கத்தின் பேரில் நிறுவப்பட்ட மத மல்ல. இந்து மதத்தில் என்ன ஒழுக்கம் இருந்தபோதிலும் அது அந்த மதத்தினுடைய ஒருங்கிணைந்த பாகமல்ல. அது மதத்தில் ஆழமாகப் பதிந்ததல்ல. அது ஒரு தனிசக்தி, சமூகத் தேவைகளால் அது நிலைத்து நிற்கச் செய்யப்படுகிறதேயன்றி, இந்து மதத்தின் கட்டளை யின்படி அல்ல. ஆனால் புத்தரின் மதம் ஒழுக்கத்தில் தோய்ந்த தாகும். அது மதத்தில் ஆழப்பதிந்துள்ளது. ஒழுக்க முறைமை இல்லை

யென்றால் புத்த மதம் ஒன்றுமில்லாததாகும். புத்தமதத்தில் கடவுள் இல்லை என்பது மெய்யே. கடவுளுக்கு பதிலாக அங்கு ஒழுக்க முறைமை இருக்கிறது. பிறமதங்களுக்குக் கடவுள் எப்படியோ, அதுபோன்று புத்த மதத்திற்கு ஒழுக்கம் இருந்து வருகிறது.

''தம்மம்'' என்ற சொல்லின் ஒரு புதிய புரட்சிகரமான பொருளை அவர் விளக்கினார் என்பது அரிதாகவே அங்கீகரிக்கப் படுகிறது. ''தர்மம்'' என்ற சொல்லின் வேதங்களின்படியான பொருள், அந்த சொல்லின் எந்த அர்த்தத்திலும் அது ஒழுக்க முறைமையைக் குறிப்பிடுவதில்லை. பிராமணர்களால் விளக்கப் படுகிற வகையிலும், ஜெமினியின் பூர்வமீமாம்சாவால் விளக்கப் பட்டுள்ள வகையிலும் தர்மமானது சில கர்மங்களை செய்வது தவிர, அல்லது ரோமானிய மத செயல்பாடுகளின் சொற்பிரயோ கத்தைப் பயன்படுத்துவது தவிர வேறு எதுவுமல்ல. பிராமணர் களுக்கு தர்மம் என்றால் சடங்குகளை, அதாவது யாகங்களை நடத்து வதும் கடவுள்களுக்கு பலியிடுவதும் தவிர வேறு எதுவுமல்ல. பிராமணியத்தின் அல்லது வேத சமயத்தின் சாராம்சம் இதுவே. ஒழுக்க முறைமைக்கும் அதற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை.

புத்தர் பயன்படுத்திய தம்மம் என்ற சொல்லுக்கும் சடங்குகள் அல்லது மரபுகளுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. யாகங்கள் மதத்தின் சாராம்சம் என்று கூறப்படுவதை அவர் நிராகரித்தார். 'கர்மம்' என்று சொல்லப்படுவதற்கு பதிலாக, ஒழுக்க முறைமையை தம்மத்தின் சாராம்சம் என்று அவர் கூறினார். தம்மம் என்ற சொல்லை பிராமணிய ஆசான்களும் புத்தரும் பயன்படுத்திய போதிலும், இருவரின் கூற்றுக்களின் உள்ளடக்கம் தீவிரமாகவும் அடிப்படை யாகவும் வேறுபட்டதாகும். உண்மையில் ஒழுக்க முறைமையை மதத்தின் சாராம்சம் மற்றும் அடித்தளம் என்று கூறிய உலகின் முத லாவது போதனையாளர் புத்தரே ஆவார். பகவத் கீதையிலிருந்து நாம் காண்கிறபடி, கிருஷ்ணரும்கூட மதம் சட்டங்களுக்கும் மரபு களுக்கும் சமமானது என்ற பழைய கண்ணோட்டத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. நிஷ்காமிய கர்மம் அல்லது அனாசக்தியோகம் என்று பகவத் கீதையில் கிருஷ்ணரால் போதிக்கப்பட்ட கோட்பாட்டினால் பலர் ஈர்க்கப்பட்டதாகத் தோன்று கிறது. காரணம் இயக்க உணர்வில் இதன் பொருள் வெகுமதி எதிர் பாராமல் நல்லது செய்வது என்பதாகும். நிஷ்காமிய கர்மம் என்பதன்

இந்த வியாக்கியானம், மெய்யாக அதன் பொருளினின்றும் முற்றிலும் தவறான கருத்தாகும். நிஷ்காமியகர்மம் என்பதில் கர்மம் என்பதன் பொருள், அந்த சொல்லின் இனம் சார்ந்த பொருளில் 'செயல்' அல்ல. அது, பிராமணர்களாலும், ஜெமினியாலும் அதனுடைய மூல அர்த்தத்தில் உபயோகப்படுத்தப்படுகிறது. மரபுகள் என்ற அம்சத்தில், ஜெமினிக்கும் பகவத் கீதைக்கும் இடையில் ஒரே ஒரு வேறுபாட்டு அம்சம் மட்டுமே உண்டு. பிராமணர்களால் புரியப் பட்ட மரபு இரண்டு வகைப்பட்டதாகும்.

(i) நித்திய கர்மங்கள் மற்றும்
(ii) நைமித்திக கர்மங்கள்

நித்தியகர்மங்கள் எனப்படுபவை, முறையாக அன்றாடம் ஆற்றப்பட வேண்டிய செயல்பாடுகள் ஆகும். இந்தக் காரணங்களினால் அவை நித்திய என்று அழைக்கப்படுகின்றன. மதம் சார்ந்த கடமையாகவும் இவை கருதப்படுகின்றன. இதற்கு எந்த வெகுமதியும் எதிர்பார்க்கப்படக் கூடாது. அந்தக் காரணத்தினாலேயே அவை நிஷ்காமிய கர்மங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. கர்மங்களின் மற்றொரு இனம் நைமிதிகம் என்று அழைக்கப்படுகிறது. அதாவது, சந்தர்ப்பம் ஏற்படும்போது புரியப்படுவதாகும். மற்றும் காம்யகர்மங்கள் என்று அவை அழைக்கப்படுகின்றன. ஏனெனில் அவை புரியப்படுவதின்று சில அனுகூலம் ஏற்படும் என்று எதிர் பார்க்கப்படுகிறது. கிருஷ்ணர், பகவத் கீதையில் காம்யகர்மங் களைக் கண்டனம் செய்தார். நிஷ்காம்ய கர்மங்களை அவர் கண்டனம் செய்யவில்லை. அதற்கு மாறாக அவற்றை அவர் பாராட் டினார். இங்கு மனதில் கொள்ளவேண்டிய அம்சம் என்னவெனில், கிருஷ்ணருக்கும்கூட மதம் ஒழுக்க முறைமையைக் கொண்டதாகப் படவில்லை. அவை நிஷ்காமி கர்மங்கள் வகையைச் சேர்ந்தவை யாக இருந்தபோதிலும் யாகங்களைக் கொண்டிருந்தன.

இந்து மதத்திற்கும் புத்த மதத்திற்கும் இடையில் இது ஒரு வேறுபாட்டு அம்சமாகும். இரண்டாவது வேறுபாட்டு அம்சம் என்ன வெனில், இந்துமதத்தின் அதிகாரபூர்வமான கோட்பாடு அசமத் துவமாகும். சதுர்வர்ணம் (நான்கு இனங்கள்) என்ற தத்துவமானது இந்த அசமத்துவக் கோட்பாட்டின் ஸ்தூலமான உருவகமாகும். ஆனால் மறுபுறத்தில் புத்தர் சமத்துவத்திற்காக நின்றார். அவர்

சதுர்வர்ணத்தின் மிகப்பெரும் எதிரியாக இருந்தார். அதற்கு எதிராக அவர் போதனை செய்தார் என்பது மட்டுமன்றி, அதற்கு எதிராகப் போராடவும் செய்தார். அதோடு மட்டுமன்றி, அதை வேரோடு களைவதற்கு மிகவும் பாடுபட்டார். இந்து மதத்தின் கோட்பாடு களின்படி ஒரு சூத்திரனோ அல்லது ஒரு பெண்ணோ ஒரு மத போதனையாளராக முடியாது. மேலும், அவர்கள் சந்நியாசம் பெறவோ, கடவுளை அடையவோ முடியாது. ஆனால் அதற்கு மாறாக புத்தர், சூத்திரர்களை பிட்சுக்களின் சங்கத்தில் அனுமதித்தார். பெண்களையும் பிட்சுணிகள் ஆவதற்கு அனுமதித்தார். அவர் ஏன் அவ்வாறு செய்தார்? இந்த நடவடிக்கையின் முக்கியத்துவத்தைப் பலரால் புரிந்துகொள்ள முடியவில்லை. இதற்குரிய பதில் என்ன வெனில், அசமத்துவக் கேட்பாட்டை ஒழிப்பதற்கு அவர் உருப்படி யான நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதற்கு விரும்பினார். புத்தர் நடத்திய தாக்குதல்களின் விளைவாக, இந்து மதம் தனது கோட் பாடுகளில் பல மாற்றங்களைச் செய்ய வேண்டியேற்பட்டது அது இம்சையைக் கைவிட்டது வேதங்கள் தவறு செய்யப்படாதவை என்ற கோட்பாட்டைக் கைவிடவும் தயாராயிருந்தது. சதுர்வர்ணங்கள் என்ற கோட்பாட்டிற்குத் தனது எதிர்ப்பை விட்டுக் கொடுப்பதற்கு புத்தர் தயாராயில்லை. அதனால்தான், பிராமணீயமானது ஜைன மதத்திற்குக் காட்டிய எதிர்ப்பைக் காட்டிலும் புத்த மதத்திற்கு எதிராக மிகவும் கூடுதலான வெறுப்பையும் பகைமையையும் காட்டியது. சதுர்வர்ணத்திற்கு எதிரான புத்தரது வாதங்களின் வலுவை இந்து மதம் அங்கீகரிக்க வேண்டியதாயிற்று. ஆனால் அதனுடைய தர்க்க நியாயத்திற்கு இணங்குவதற்கு மாறாக, இந்து மதமானது சதுர் வர்ணத்திற்கு ஒர புதிய தத்துவார்த்த நியாயத்தை அது வளர்த்தது. இந்தப் புதிய தத்துவார்த்த நியாயத்தை பகவத் கீதையில் காணலாம். பகவத் கீதை என்ன போதிக்கிறது என்பதை யாரும் திட்டவட்டமாகச் சொல்ல முடிவதில்லை.

பகவத் கீதை இதை எவ்வாறு நியாயப்படுத்துகிறது? கிருஷ்ணர் கடவுள் என்ற முறையில்தான் (அவர்) சதுர்வர்ண முறையை (அமைப்பை) உருவாக்கியதாகவும், குணம்- கர்மம் என்ற தத்துவத்தின் அடிப்படையில் அதை உருவாக்கியதாகவும் கூறுகிறார். அதாவது ஒருவருடைய உள்ளார்ந்த குணங்களுக்கு (அல்லது பண்பு களுக்கு) ஏற்ப ஒவ்வொருவரின் தகுதியையும், தொழிலையும் அவர் நிர்ணயிக்கிறார் என்பது இதன் பொருள். இதிலிருந்து இரண்டு

விஷயங்கள் தெளிவாகின்றன. ஒன்று, இந்தத் தத்துவம் புதிது. பழைய தத்துவம் வேறாக இருந்தது, பழைய தத்துவத்தின்படி, சதுர்வர்ணத்தின் அஸ்திவாரமானது வேதங்களின் ஆணையின் பேரில் இடப்பட்டதாகும். வேதங்கள் பிழையற்றவையாதலால், அதன் மீது சார்ந்துள்ள சதுர்வர்ண அமைப்பும் பிழையற்றதாகும். வேதங்களின் பிழையற்ற தன்மை என்பதை புத்தர் தாக்கியதோடு, சதுர்வர்ணத்தின் இந்தப் பழைய அடித்தளத்தின் செல்லுபடியாகும் தன்மையையும் ஒழித்துக்கட்டிவிட்டது. இந்து மதம் சதுர்வர்ணத்தைக் கைவிடுவதற்குத் தயாராயில்லை; அதைத் தனது ஆன்மா என்று கருதியது. எனவே அதற்கு ஒரு மேம்பட்ட அடித்தளத்தைக் காண்பதற்கு முயன்றது மிகவும் இயற்கையானதே. இதை செய்வதற்கு பகவத் கீதை முன்வருகிறது. ஆனால் பகவத் கீதையில் கிருஷ்ணர் வழங்கியுள்ள இந்தப் புதிய அடித்தளம் (நியாயம்) எவ்வகையில் நல்லது? பெரும்பாலான இந்துக்களுக்கு இது மிகவும் நம்பிக்கை ஏற்படுத்துவதாகத் தோன்றுகிறது. இது மறுக்கப்பட முடியாதது என்று கருதும் அளவிற்கு நம்பிக்கை ஏற்படுத்துகிறது. இந்துக்களல்லாத பலருக்கும் கூட இது மிகவும் சாத்தியப்பாடு உடையதாகவும், கவர்ந்திழுப்பதாகவும் தோன்றுகிறது. சதுர்வர்ணமானது வேதங்களின் அதிகார ஆணையின் மீது மட்டுமே சார்ந்திருந்திருந்தால், நீண்ட காலத்திற்கு முன்பே அது மறைந்து போயிருக்கும் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். பகவத் கீதையின் விஷமத்தனமான மற்றும் பொய்யான கோட்பாடுதான், சாதி அமைப்பின் பெற்றோராகிய சதுர்வர்ணத்திற்கு நிரந்தரமான, நிலையான வாழ்வை அளித்திருப்பதாகத் தோன்றுகிறது. இந்தப் புதிய கோட்பாட்டின் அடிப்படையான கருத்தமைவு சாங்கியத் தத்துவத்திலிருந்து பெறப்பட்டுளளது. இதில் மூல அம்சம் எதுவும் இல்லை. சதுர்வர்ணத்தை நியாயப்படுத்துவதற்கு அதைப் பயன்படுத்துவதில்தான் கிருஷ்ணருடைய மூலத் தன்மை (originality) அடங்கியுள்ளது. அதனுடைய பிரயோகத்தில் தான் அதனுடைய போலித்தன்மை அடங்கியுள்ளது. சாங்கிய முறையின் மூலவராகிய கபிலர், கடவுள் என்று ஒருவர் கிடையாது என்று கூறினார். பருப்பொருள் (matter) உயிரற்றதாகக் கருதப்பட்டதால் தான் கடவுள் தேவைப்பட்டது; ஆனால், பருப்பொருள் உயிரற்றதல்ல, அது செயலூக்கமாக இருக்கிறது; பருப்பொருள் மூன்று குணங்களைக் கொண்டுள்ளது. ராஜ், தமஸ் மற்றும் சத்வம் என்ற இந்த மூன்று குணங்களும் சரிசமநிலையில் இருப்பதால்தான் பிரகிருதி இறந்துபட்டுள்ளதாகத் தோன்றுகிறது. ஒரு குணம்,

மற்ற இரண்டு குணங்களை விடவும் மேலோங்கும் நிலைமை ஏற்பட்டு சமநிலைமை பாதிக்கப்பட்டால், பிரகிருதி செயலூக்கம் பெறுகிறது. சாங்கியதத்துவத்தின் சாராம்சம் இதுவே. இந்தக் கோட்பாட்டோடு எவ்வித சர்ச்சையும் இருக்க முடியாது. ஒருவேளை இது உண்மையாகவும் இருக்கலாம். எனவே, ஒவ்வொரு தனிநபரும்-பிரகிருதியின் ஒரு வடிவம் என்ற வகையில் மூன்று குணங்களைக் கொண்டவர் என்பதை ஒப்புக்கொள்ளலாம். இந்த மூன்று குணங்களில் ஒன்று மற்றொன்றின் மீது ஆதிக்கம் செலுத்துவதற்குப் போட்டியிருக்கிறது என்பதையும் கூட ஒப்புக்கொள்ளலாம். ஆனால், ஒரு குறிப்பிட்ட நபரிடமுள்ள ஒரு குறிப்பிட்ட - அது ஒரு சமயத்தில் - உதாரணமாக அவருடைய பிறப்பின்போது - அவருடைய இதர குணங்களின்மீது ஆதிக்கம் செலுத்தும் நிலைமையிருந்தால், எல்லாக் காலத்திலும் - அவருடைய மரணம் வரையிலும் அவ்வாறே தொடர்ந்து ஆதிக்கம் செலுத்தி வரும் என்று எவ்வாறு ஒப்புக்கொள்ள முடியும்? சாங்கிய தத்துவத்திலோ அல்லது நடைமுறை அனுபவத்திலோ இந்த அனுமானத்திற்கு ஆதாரமேயில்லை. துரதிருஷ்டவசமாக கிருஷ்ணர் இந்தத் தத்துவத்தை முன்வைத்தபோது ஹிட்லரோ, முசோலினியோ பிறக்கவில்லை. ஒரு விளம்பர போர்டு எழுதும் ஓவியரும் செங்கற்களை அடுக்கி வைத்து வீடு கட்டும் தொழிலாளியும், உலகத்தின் மீது ஆதிக்கம் செலுத்தவல்ல சர்வாதிகாரிகளாக முடிந்தது என்பதை விளக்குவதற்கு கிருஷ்ணர் பெருமளவு சிரமப்பட்டிருப்பார். விஷயம் என்னவெனில், ஒரு தனிநபரின் பிரகிருதி எப்போதும் மாற்றமடைந்து கொண்டுவரும், ஏனெனில் குணங்களின் பரஸ்பர நிலை எப்போதும் மாற்றமடைந்து கொண்டிருக்கிறது. குணங்கள் அவற்றின் பரஸ்பர ஆதிக்க நிலையில் எப்போதும் மாற்றமடைந்து வருகிறதெனில், மக்களை வர்ணங்களில் நிரந்தரமான மற்றும் நிலையான பாகுபாடு செய்யும் முறை இருக்க முடியாது, அதுபோன்றே நிரந்தரமான, நிலையான வேலைகளை ஒதுக்கீடும் இருக்க முடியாது. எனவே, பகவத் கீதையின் தத்துவம் முழுமையும் நொறுங்கி வீழ்கிறது. ஆனால், நான் கூறியது போன்று, இந்துக்கள் அதனுடைய நம்புதற்குரிய தன்மையினாலும் ''நல்ல தோற்றத்தினாலும்'' ஈர்க்கப்பட்டு, அதற்கு அடிமைகளாகி விட்டனர். இதன் விளைவாக இந்து மதம், சமூக அசமத்துவத்தை வேதவாக்காகக் கொண்ட வர்ணப் பாகுபாடு முறையைத் தொடர்ந்து உயர்த்திப் பிடித்து வருகிறது. இவை இந்து மதத்தின் இரண்டு தீமைகளாகும். இந்தத் தீமைகள் புத்த மதத்தில் இல்லை.

## III

புத்தமதக் கோட்பாட்டை ஏற்றுக்கொண்டால் மட்டுமே இந்துக்களைக் காப்பாற்ற முடியும் என்று நம்புகின்ற சிலர், துயரத்தில் ஆழ்ந்துள்ளனர், ஏனெனில், இந்தியாவில் புத்த மதம் திரும்பவும் வந்து சேரும், அல்லது புத்துயிர் பெறும் என்பதில் அவர்களுக்கு அவ்வளவாக நம்பிக்கை இல்லை. இந்த நம்பிக்கையின்மையை நான் பகிர்ந்து கொள்ளவில்லை.

இந்துக்கள், அவர்களது மதம் சம்பந்தமான அவர்களுடைய கண்ணோட்டத்தில், இன்று இரு பிரிவினராக உள்ளனர். ஒரு பிரிவினர், 'எல்லா மதங்களும் - இந்து மதம் உள்ளிட்டு - உண்மையானவையே என்று கருதுகின்றனர். பிற மதங்களின் தலைவர்களும், இந்தக் கோஷத்தில் அவர்களுடன் ஒன்றுபட்டு நிற்பதாகத் தோன்றுகிறது. எல்லா மதங்களும் உண்மையானவை என்று கூறும் ஆய்வுரையை விடக் கூடுதல் பொய்யான ஆய்வுரை இருக்க முடியாது. ஆயினும், இந்த கோஷத்தை எழுப்பியுள்ள இந்துக்களுக்கு பிற மதங்களைக் கடைப்படிப்பவர்களின் ஆதரவும் இருக்கிறது. தமது மதத்தில் ஏதோ கோளாறு இருக்கிறது என்று கருதும் நிலைக்கு சில இந்துக்கள் வந்துள்ளனர். ஆனால் அதை பகிரங்கமாகக் கண்டனம் செய்யும் நிலைக்கு அவர்கள் தயாராக இல்லை. இந்தக் கண்ணோட்டம் புரிந்து கொள்ளத்தக்கதே. மதம் ஒருவருடைய சமூக மரபின் ஒரு பாகமாகும். ஒருவருடைய வாழ்க்கையும் மதிப்பும் பெருமிதமும் அதனுடன் இணைந்துள்ளன. ஒருவர் தனது மதத்தைக் கைவிடுவது எளிதானதல்ல. ''எனது நாடு'' சரியோ, தவறோ - என்பதில் தேசபக்தி வருகிறது. அது போன்றே ''எனது மதம்'' சரியோ தவறோ - என்று கூறப்படுகிறது. அதைக் கைவிடுவதற்கு பதிலாக இந்துக்கள் வேறுவழிகளில் தப்பிக்கும் மார்க்கம் தேடுகின்றனர். எல்லா மதங்களிலும் தவறு உள்ளது; எனவே ஏன் மதத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டும் என்று சிலர் தங்களைத் தாங்களே தேற்றிக் கொள்கின்றனர். அதே தேசபக்தி உணர்வு, அவர்களை வெளிப்படையாக புத்த மதத்தைத் தழுவுவதைத் தடுக்கிறது. இத்தகைய கண்ணோட்டம் ஒரே ஒரு விளைவைத்தான் ஏற்படுத்த முடியும். இந்துமதம் மறைந்து, வாழ்க்கையை முறைப்படுத்தும் ஒரு சக்தியாக இல்லாமற் போய்விடும்; வெற்றிடம் ஏற்படும்; அதன் பலனாக இந்து சமுதாயம் சீரழியும் விளைவை ஏற்படுத்தும். அப்பொழுது இந்துக்கள் ஒரு கூடுதல் ஆக்கப்பூர்வமான கண்ணோட்டத்தை மேற்கொள்ளும்படி நிர்ப்பந்திக்கப்படுவார்கள். அவர்கள் அவ்வாறு செய்யும்போது, புத்த மதத்தைத் தவிற வேறெங்கும் அவர்கள் போக முடியாது.

இது மட்டுமே நம்பிக்கை ஏற்படுத்தும் ஒரு கதிர் அல்ல. பிற வட்டாரங்களிலிருந்தும் நம்பிக்கைகள் வருகின்றன.

ஒவ்வொரு மதமும் பதில் சொல்ல வேண்டிய ஒரு கேள்வி இருக்கிறது. ஒடுக்கப்பட்ட, அடிமட்டத்திலுள்ள மக்களுக்கு என்ன மனரீதியான மற்றும் ஒழுக்க ரீதியான நிவாரணத்தை (நிம்மதியை) அது அளிக்கிறது? அவ்வாறு அளிக்காவிட்டால் அது அழிவது உறுதி. கோடிக்கணக்கான பிற்படுத்தப்பட்ட வர்க்கங்களுக்கும் ஷெட்யூல்டு சாதியினர்களுக்கும் இந்து மதம் ஏதாவது மன ரீதியான மற்றும் ஒழுக்க ரீதியான நிம்மதியைக் கொடுக்கிறதா? அது கொடுப்பதில்லை.

மன மற்றும் ஒழுக்க ரீதியான நிம்மதியைக் கொடுக்கப் போவதாக எந்த வாக்குறுதியும் (நம்பிக்கையும்) அவர்களுக்குக் கொடுக்காத நிலையில் இந்தப் பிற்படுத்தப்பட்ட வர்க்கங்களும் ஷெட்யூல்ட் சாதியினரும் இந்து மதத்தின் கீழ் வாழ வேண்டு மென்று இந்துக்கள் எதிர்பார்க்கிறார்களா? அத்தகைய எதிர்பார்ப்பு முற்றிலும் பயனற்றதாகும். இந்து மதம் ஓர் எரிமலையின் உச்சியில் மிதந்து கொண்டிருக்கிறது. இன்று அது இல்லாதது போல் தோற்ற மளிக்கிறது. ஆனால் அது உண்மையல்ல. இந்த வலிமை மிக்க கோடிக்கணக்கான மக்கள் தங்களுடைய இழிநிலையை உணர்ந்து இது பெரும்பாலும் இந்து மதத்தின் சமூகத் தத்துவவியலின் காரணமாகவே ஏற்படுகிறது என்பதை அறியும்போது அது பொங்கி எழும். ரோம சாம்ராஜ்யத்தில் 'பாகனிசத்தை' (பல தெய்வ வழிபாட்டை) கிறிஸ்துவ மதம் தூக்கியெறிந்தது நினைவுக்கு வருகிறது. பாகனிசம் தங்களுக்கு எவ்வித மனநிம்மதியையும், ஒழுக்க நிம்மதியையும் தர இயலாது என்பதை மக்கள் திரள் உணர்ந்த போது, அவர்கள் அதைக் கைவிட்டு, கிறிஸ்துவ மதத்தைத் தழுவினர். ரோமாபுரியில் ஏற்பட்டது இந்தியாவிலும் ஏற்படுவது நிச்சயம். இந்து மக்கள் திரள், அறிவு ஞானம் பெறும்போது புத்த மதத்தின்பால் நிச்சயம் திரும்புவார்கள்.

## IV

இந்து மதத்திற்கும் புத்த மதத்திற்கும் இடையிலுள்ள வேறு பாட்டைப் பற்றி இதுவரை ஒப்பிட்டுக் கூறினேன். இனி இந்து மதமல்லாத பிற மதங்களுக்கும் புத்த மதத்திற்கும் இடையிலான வேறுபாடு என்ன? இந்து மதமல்லாத இந்த பிற மதங்கள் ஒவ் வொன்றையும் புத்த மதத்தோடு விரிவாக ஒப்பிட்டுக் கூறுவது

அசாத்தியம். என்னுடைய முடிவுகளை ஒரு சுருக்கமான கருத்துரையாக எடுத்துக் கூறுவது மட்டுமே என்னால் செய்ய முடியும். எனவே நான் கூறுவதென்னவெனில்,

(i) சமுதாயம், ஒன்றாக இருப்பதற்கு அதற்கு சட்ட உத்தரவாதம் அல்லது ஒழுக்க நியதியின் உத்தரவாதம் இருக்க வேண்டும். இந்த இரண்டில் எதுவும் இல்லாவிட்டால், சமுதாயம் நிச்சயமாக சிதறுண்டு போகும்.

எல்லா சமுதாயங்களிலும் சட்டம் ஒரு மிகச் சிறிய பங்கையே ஆற்றுகிறது. அது, சிறுபான்மையோரை சமூகக் கட்டுப்பாடு வீச்சினுள் இருத்தி வைத்துக்கொள்வதை நோக்கமாகக் கொண்டதாகும். பெரும்பான்மைப் பகுதியானது தனது சமூக வாழ்க்கையை ஒழுக்க நியதியின் கோட்பாடுகள் மற்றும் அனுமதியினால் நிலை நிறுத்தி வைத்துக் கொள்வதற்கு விட்டுவிடப்படுகிறது; அவ்வாறு விட்டுவிடப்பட வேண்டியுள்ளது. எனவே, மதமானது, ஒழுக்க நியதி என்ற பொருளில் ஒவ்வொரு சமுதாயத்திலும் ஆட்சி செய்யும் கோட்பாடாக இருக்க வேண்டும்.

(ii) முதலாவதாகக் கூறப்பட்டதில் விளக்கப்பட்டபடி மதமானது விஞ்ஞானத்திற்கு இசைவானதாக இருக்க வேண்டும். எனவே மதம், விஞ்ஞானத்திற்கு இசைவானதாக இல்லாவிட்டால், அது நிச்சயம் தனது மரியாதையை இழந்துவிடும், எனவே அது ஏளனத்திற்குரியதாகிவிடும். அதன் மூலம் அது, வாழ்க்கையை நிர்வகிக்கும் ஒரு கோட்பாடு என்ற தனது சக்தியை இழக்கிறது; காலப் போக்கில் அது சீரழிந்து, மறைந்துவிடும். வேறு சொற்களில் கூறுவதெனில், மதம், அது தொடர்ந்து செயல்பட வேண்டுமென்றால், பகுத்தறிவிற்கு இசைவானதாக, அதாவது விஞ்ஞானத்திற்கு இசைவானதாக இருக்க வேண்டும்.

(iii) மதமானது சமூக ஒழுக்கத்தின் ஒரு சட்டமென்ற வகையில் மற்றொரு சோதனையிலும் தேறவேண்டும். மதமானது ஓர் ஒழுக்க சட்டத்தைக் கொண்டிருப்பது மட்டும் போதாது; அதனுடைய ஒழுக்க சட்டமும் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய அடிப்படையான நியதிகளையும் அங்கீகரிக்க வேண்டும். ஒரு மதமானது, சமூக வாழ்க்கையின் இந்த மூன்று அடிப்படையான கோட்பாடுகளை அங்கீகரித்தாலன்றி மதம் அஸ்தமனமாகிவிடும்.

(iv) மதமானது வறுமையை புனிதப்படுத்தவோ அல்லது மேம்படுத்தவோ கூடாது. செல்வம் படைத்தவர்கள் அதைக் கைவிடுவது ஒரு மகிழ்ச்சியடையத்தக்க நிலையாக இருக்கலாம். ஆனால் வறுமை ஒருபோதும் அப்படியிருக்க முடியாது. வறுமையை மகிழ்ச்சியடையத்தக்க ஒரு நிலையாக அறிவிப்பது மதத்தைத் தவறான பாதையில் செல்லச் செய்வதும், தீமையையும், குற்றத்தையும் நீடித்திருக்கச் செய்வதும் பூவுலகத்தை ஒரு வாழும் நரகமாக்குவதற்கு சம்மதிப்பதுமாகும்.

எந்த மதம் இந்தத் தேவைகளையெல்லாம் பூர்த்தி செய்கிறது? இந்தக் கேள்விகளைப் பரிசீலனை செய்யும்போது, மகாத்மாக்களின் காலம் மலையேறிப் போய்விட்டது என்பதையும் உலகத்திற்கு ஒரு புதிய மதம் தேவையில்லை என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். ஏற்கனவே இருப்பவற்றிலிருந்தே அது தேர்வு செய்ய வேண்டும். எனவே இந்தக் கேள்வி தற்போதிலிருந்து வரும் மதங்கள் சம்பந்தப்பட்டதாக மட்டுமே இருக்க வேண்டும்.

ஏற்கனவே இருந்துவரும் மதங்களில் ஒன்று இந்த சோதனைகளில் ஒன்றில் தேறலாம். சில மதங்கள் இரண்டில் தேறலாம். ஆனால், இத்தகைய நல்ல கோட்பாட்டைக் கொண்ட மதம் ஏதாவது இருக்கிறதா? இந்தச் சோதனைகளில் எல்லாம் தேறும் ஒரே மதம் எனக்குத் தெரிந்தவரை புத்த மதம்தான். வேறுவிதமாகக் கூறினால் உலகம் பெற்றிருக்க வேண்டிய ஒரே மதம் புத்த மதம்தான். பழைய உலகிலிருந்து பெரிதும் வேறுபட்ட ஒரு புதிய உலகம் உதயமானால் பழைய உலகைவிட அதற்கு ஒரு மதம் அவசியம் தேவை. அப்போது புத்தரின் மதம்தான் இந்தத் தேவையைப் பூர்த்திச் செய்யக்கூடியது.

இவ்விதம் கூறுவது மிகவும் விந்தையாகத் தோன்றக்கூடும். 'அகிம்சையைப் போதித்ததுதான் புத்தர் செய்த ஒரு காரியம் என்று புத்தரைப் பற்றி எழுதியவர்களில் பெரும்பாலோர் குறிப்பிட்டிருப்பதே இதற்குக் காரணம். இது மிகவும் பெரிய தவறாகும். புத்தர் அகிம்சையைப் போதித்தார் என்பது உண்மை. இதன் முக்கியத்துவத்தைக் குறைத்துக் கூற நான் விரும்பவில்லை. ஏனென்றால் இது ஒரு மாபெரும் சித்தாந்தமாகும். இந்த சித்தாந்தத்தைப்

பின்பற்றினாலொழிய உலகத்தைக் காப்பாற்ற முடியாது. அகிம்சை யைத் தவிர வேறு பல விஷயங்களையும் புத்தர் போதித்தார் என்பதை இங்கு வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். அவர் தமது சமய பிரசாரத்தின் ஒரு பகுதியாக சமூக சுதந்திரம், அறிவுத்துறை சுதந்திரம், அரசியல் சுதந்திரம் முதலியவற்றையும் போதித்தார். அவர் மனிதனுக்கும் மனிதனுக்குமிடையே சமத்துவத்தையும், ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே சமத்துவத்தையும் வலியுறுத்தி னார். புத்தருடன் ஒப்பிடக்கூடிய சமயப் பிரசாரகர் எவரையும் காண முடியாது. அவரது போதனைகள் மக்களது சமூக வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களையும் எடுத்துரைப்பவையாக இருந்தன. அவரது சித்தாந்தங்கள் மிகவும் நவீனமயமானவையாக இருந்தன. மனிதன் இறந்த பிறகு அவனுக்கு சொர்க்கம் கிட்டச் செய்வதாக அவர் உறுதி கூறவில்லை; மாறாக இந்தப் பூவுலக வாழ்க்கையிலேயே அவன் உய்வும் உயர்வும் பெற வழி செய்வதே அவரது போதனையின் அடிப்படை அம்சமாக இருந்தது.

## V

புத்த மதத்தின் இந்த லட்சியத்தை எவ்வாறு நிறைவேற் றுவது? இதற்கு மூன்று நடவடிக்கைகளை மேற்கொள்வது இன்றி யமையாததாகத் தோன்றுகிறது. அவை வருமாறு:

முதலாவது : பௌத்த பைபிள் ஒன்றைத் தயாரிக்க வேண்டும்.

இரண்டாவது : பிக்கு சங்கத்தின் அமைப்பிலும், குறிக்கோள் களிலும் நோக்கங்களிலும் மாற்றங்கள் செய்யப் பட வேண்டும்.

மூன்றாவது : ஓர் உலக பௌத்த அமைப்பைத் தோற்றுவிக்க வேண்டும்.

பௌத்த பைபிளைத் தயாரிப்பது முதலாவதும் இன்றியமை யாததுமான தேவையாகும். பௌத்த இலக்கியம் மிகவும் பரந்த விரிந்துபட்ட இலக்கியமாகும். புத்த மதத்தின் சாராம்சத்தைத் தெரிந்து கொள்ள விரும்பும் ஒருவர் ஒரு மாகடலைக் கடந்து செல்வது போன்ற பிரயாசை எடுத்துக் கொள்ள வேண்டும்; இதனைச் செய்வது சாத்தியமற்றதாகும். புத்த மதத்துக்கு இல்லாத மிகப் பெரிய

அனுகூலம் மற்ற மதங்களுக்கு இருக்கிறது; இந்த மதங்கள் ஒவ்வொன்றுக்கும் தனி நூல் இருக்கிறது; எவரும் இதனைத் தம்முடன் எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் சென்று படிக்கலாம். இத்தகைய ஒரு சமய நூல் இல்லாதது புத்த மதத்தின் மிகப் பெரிய குறைபாடாகும். இந்த பணியைச் செய்யும் என்று எதிர்பார்க்கப்பட்ட இந்திய தம்மபதம் அதனைச் செய்யத் தவறிவிட்டது. ஒவ்வொரு பெரிய மதமும் குறிப்பிட்ட கோட்பாடுகளின் அடிப்படையில் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. ஆனால் வெறும் கோட்பாடுகள், ஸ்தூலமான தத்துவங்களின் அடிப்படையில் ஒரு மத நம்பிக்கை முன்வைக்கப்படுமானால் அதனை ஜீரணித்துக் கொள்ள முடியாது. கற்பனையைத் தூண்டும் விதத்தில் ஒரு கதையைப் போல் அது எடுத்துரைக்கப்பட வேண்டும். இவ்வகையில் தம்மபதம் ஒரு கதையைப் போல் உருவாக்கப்படவில்லை. ஸ்தூலமான சித்தாந்தங்களின் அடிப்படையில் அது வடிவமைக்கப்பட்டுள்ளது.

இந்திய தம்மபதம் (சமயப்பாதை) ஒரு மதத் தத்துவம் எதிர்பார்க்கப்படும் செயல்பாட்டைச் செய்யத் தவறிவிட்டது. ஒவ்வொரு மகத்தான மதமும் நம்பிக்கையின் அடிப்படையில்தான் கட்டியமைக்கப்பட்டுள்ளது. ஆனால் மத நம்பிக்கையானது, மதக் கோட்பாடுகளாக அல்லது கண்டுணர முடியாத வறட்டுக் கொள்கைகளாக முன்வைக்கப்பட்டால் அவற்றை ஏற்றுக் கொள்ள முடியாமல் தன் வயப்படுத்திக் கொள்ள முடியாமல் இருக்கும். கற்பனை செய்து பார்த்தால் பதியக்கூடிய ஏதாவது ஒன்று - ஏதாவது கட்டுக் கதை, வீரகாவியம் அல்லது நற்செய்தி - தேவைப்படுகிறது. பத்திரிகைத் துறையில் இது ஒரு கதை (புனைவு) என்று அழைக்கப்படுகிறது. தம்ம பதமானது ஒரு கதையைச் சுற்றிப் புனையப்பட்டதல்ல. அது கண்டுணர முடியாத வறட்டுக் கோட்பாடுகளின் மீது நம்பிக்கையைக் கட்டியமைப்பதற்கு முயல்கிறது.

புத்த மதத்தின் பிரேரணை செய்யப்பட்ட சித்தாந்தம் பின்வருவனவற்றைக் கொண்டிருக்க வேண்டும் (i) புத்தரின் ஒரு சுருக்கமான வாழ்க்கை வரலாறு, (ii) சீன தம்மபதம், (iii) புத்தரின் சில முக்கிய உரையாடல்கள் மற்றும், (iv) புத்த சடங்குகள், பிறப்பு, தீட்சை கொடுக்கப்படல் மற்றும் மரணம். இத்தகைய ஒரு சித்தாந்தத்தைத் தயாரிக்கும்போது, அதனுடைய மொழிசார்ந்த பகுதி புறக்கணிக்கப்படக் கூடாது. அது உயிரோட்டமான மொழியில் தயாரிக்கப்பட வேண்டும். அது ஒரு மந்திரமாக அமைய வேண்டும் -

ஒரு கதையை வாசிப்பதாகவோ அல்லது நன்னெறிகளை விளக்கப் படுத்துவதாகவோ இருக்கக் கூடாது. அதனுடைய பாணி தெளிவான தாக, நெகிழ்ச்சியடையச் செய்வதாக இருக்க வேண்டும், அது ஒரு வசியப்படுத்தும் விளைவை ஏற்படுத்த வேண்டும்.

ஓர் இந்து சந்நியாசிக்கும் ஒரு பௌத்த பிக்குவுக்கும் இடையில் பெரும் வேறபாடு இருக்கிறது. ஒரு இந்து சந்நியாசி உலகப் பற்றற் றவர். அவர் உலகம் சம்பந்தமாக இறந்து போனவர் ஆவார், ஆனால் ஒரு பிக்குவுக்கு உலகத்தில் செய்ய வேண்டியது நிறைய உள்ளது. இது இவ்வாறிருக்கும்போது, பிக்குகளின் சங்கத்தை எந்த நோக்கத்திற்காக ஏற்படுத்துவதற்கு புத்தர் நினைத்தார். இதில் இவரது என்ற கேள்வி எழுகிறது.பிக்குகளின் ஒரு தனிக் கழகத்தை நிறுவுவதற்கு அவசியம் என்ன? ஒரு நோக்கம் என்னவெனில், புத்த மதத்தின் கோட்பாடு களில் அடங்கியுள்ள புத்த மதக் கருத்திற்கேற்ப செயல்படும் ஒரு கழகத்தை ஏற்படுத்துவதும், அது சாதாரண மக்களுக்கு ஒரு முன் மாதிரியாக அமைய வேண்டும் என்பதுமேயாகும். புத்த மத லட்சி யத்தை நிறைவேற்றுவதற்கு ஒரு சாதாரணம மனிதனால் சாத்திய மல்ல என்பதை புத்தர் அறிந்திருந்தார். ஆனால் அந்த லட்சியம் என்ன என்பதை சாதாரண மனிதன் தெரிந்திருக்க வேண்டும் என்றும், மற்றும் தனது லட்சியங்களை நிச்சயம் நடைமுறைப்படுத்தும் நபர்களைக் கொண்ட ஒரு கழகத்தை சாதாரண மனிதனின் முன்னால் நிறுவிக்காட்ட வேண்டும் என்றும் அவர் விரும்பினார். அதனால்தான், அவர் பிக்குகள் சங்கத்தை நிறுவினார். அதை வினய விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்றும் வகுத்தார். ஆனால் இந்த சங்கத்தை நிறுவுவதற்கு நினைத்தபோது, வேறு நோக்கங்களும் அவருடைய மனதில் இருந்தன. அத்தகைய நோக்கங்களில் ஒன்று, சாதாரண மக்களுக்கு மெய்யான, மற்றும் நடுநிலை தவறாத வழி காட்டுதலை அளிப்பதற்கு அறிவாளிகளின் அமைப்பு ஒன்றை நிறுவ வேண்டும் என்பதாகும். அதனால்தான், பிக்குகள் சொத்துக்களை உடைமையாகக் கொள்ளக் கூடாது என்று அவர் தடை விதித்தார். சுதந்திரமாக சிந்திப்பதற்கும் சுதந்திர சிந்தனையைப் பிரயோகப் படுத்துவதற்கும் மிகப் பெரிய இடையூறுகளில் ஒன்றாக இருப்பது சொத்துடைமையாகும் என்று அவர் கருதினார். பிக்கு சங்கத்தைத் தோற்றுவிப்பதில் புத்தரின் மற்றொரு நோக்கம், மக்களுக்கு சுதந்திர மாக சேவை செய்யக்கூடிய உறுப்பினர்களைக் கொண்ட ஒரு கழகத்தை நிறுவுவதாகும். அதனால்தான் பிக்குகள் திருமணம் செய்து கொள்வதை அவர் விரும்பவில்லை.

## V

இன்றைய பிக்கு சங்கம் இந்த லட்சியங்களுக்கு செயல்படு கிறதா?

இதற்கு பதில், உறுதியாக, இல்லையென்பதுதான், அது மக்களுக்கு வழிகாட்டுவதுமில்லை, மக்களுக்கு சேவை செய்வது மில்லை.

எனவே, பிக்கு சங்கம், அதனுடைய இன்றைய நிலைமையில், புத்த சமயத்தைப் பரப்புவதற்கு எவ்விதப் பயனுமில்லை. முதலாவ தாக, அளவிற்கு அதிகமான பிக்குகள் இருக்கின்றனர். இவர்களில் ஒரு மிகப் பெரும்பான்மையோர் வெறும் சாதுக்களும் சந்நியாசி களுமே ஆவர். இவர்கள் தியானத்திலோ அல்லது சோம்பேறித்தன மாகவோ தமது காலத்தைக் கழிக்கின்றனர். அவர்கள் கற்பதுமில்லை, சேவை புரிவதுமில்லை. கஷ்டப்படும் மனித சமுதாயத்திற்கு சேவை புரியும் எண்ணம் மனதில் தோன்றும்போது, ஒவ்வொருவரும் ராமகிருஷ்ணா சேவை மையத்தைப் பற்றித் தான் நினைக்கின்றனர். புத்த சங்கத்தைப் பற்றி யாரும் நினைப்பதில்லை. சேவையைத் தமது புனிதமான கடமை என்று யார் கருத வேண்டும்? சங்கமா அல்லது சேவை மையமா? இதற்கான பதிலைப் பற்றி எவ்வித ஐயப்பாடும் இருக்க முடியாது. ஆயினும் சங்கம் சோம்பேறிகளின் ஒரு பெரிய படையாக இருக்கிறது. குறைவான எண்ணிக்கை பிக்குகளையே நாம் விரும்புகிறோம், பிக்குகள் உயர் கல்வி கற்றவர்களாக இருக்க வேண்டும், பிக்குகளின் சங்கமானது, கிறிஸ்துவப் பாதிரிமார்களின், குறிப்பாக ஜேசுவிஸ்டுகளின் சில இயல்புகளைச் சுவீகரித்துக் கொள்ள வேண்டும். கிறிஸ்துவ சமயமானது சேவையின் வாயிலாகத் தான், கல்வி மற்றும் மருத்துவ சேவையின் வாயிலாகத்தான் ஆசியா வில் பரவியுள்ளது. இது சாத்தியமானதற்குக் காரணம், கிறிஸ்துவப் பாதிரியார் சமயம் சம்பந்தமான வழிவழியான அறிவைப் பெற்றுள்ளார் என்பது மட்டுமன்றி, கலைகள், விஞ்ஞானம் ஆகியவற்றிலும் அவர் தேர்ச்சி பெற்றுள்ளார். இது மெய்யாகவே, பழங்கால பிக்குகளின் லட்சியமாக இருந்தது. நாளந்தா, தட்சசீல பல்கலைக் கழகங்கள் பிக்குகளினால் நடத்தப்பட்டு, நிர்வகிக்கப்பட்டு வந்தன என்பது நன்கு அறியப்பட்டதே. அவரகள் நன்கு கல்வி கற்ற அறிஞர்களாக இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. தமது சமயத்தைப் பிரச்சாரம் செய்வதற்கு சமூக சேவை அத்தியாவசியமானது என்பதை அவர்கள்

அறிந்திருந்தார்கள். இன்றைய பிக்குகள் பழைய இலட்சியத்திற்குத் திரும்ப வேண்டும். சங்கம் இன்றுள்ள நிலைமையில் சாதாரண மக்களுக்கு இந்த சேவையை செய்ய முடியாது, எனவே அவர்களால் மக்களைத் தம் பக்கம் ஈர்க்கவும் முடியாது.

சேவை மனப்பான்மையின்றி புத்த சமயம் பரவுவது அரிது. கல்வி போதிக்கப்பட வேண்டியிருப்பதைப் போன்றே சமயமும் பிரச்சாரம் செய்யப்பட வேண்டும். ஆட்களும் பணமும் இல்லாமல் பிரச்சாரத்தை மேற்கொள்ள முடியாது. யார் இவற்றை வழங்க முடியும்? புத்த மதம் ஓர் உயிரோட்டமுள்ள சமயமாக இருக்கும் நாடுகள் மட்டுமே இவற்றை வழங்க முடியும்? என்பது தெளிவு. இந்த நாடுகள்தான், குறைந்தபட்சம் ஆரம்பக் கட்டத்திலாவது ஆட்களையும், பணத்தையும் வழங்க வேண்டும். இந்த நாடுகள் இவற்றை வழங்குமா? இந்த நாடுகளில் பௌத்த சமயத்தைப் பரப்புவதற்கு அவ்வளவு உற்சாகம் இருப்பதாகத் தெரியவில்லை.

மறுபுறத்தில், பௌத்த சமயத்தைப் பரப்புவதற்கு காலம் மிகவும் பக்குவமாக (ஏற்றதாக) இருப்பதாகத் தோன்றுகிறது. மதமானது ஒருவருடைய பாரம்பரியத்தின் பாகமாக இருந்த காலம் ஒன்றுண்டு. ஒரு காலத்தில், ஒரு பையனோ அல்லது பெண்ணோ தனது பெற்றோரின் சொத்துடன் கூடவே பெற்றோரின் சமயத்தையும் வாரிசுரிமையாகப் பெற்று வந்தனர். மதத்தின் தகுதி (மதிப்பு) மற்றும் நற்பண்புகளை ஆய்வு செய்வதென்ற பேச்சுக்கே இடமில்லை. சில சமயங்களில் வாரிசு, பெற்றோர்களால் விட்டுச் செல்லப்பட்ட சொத்தை எடுத்துக் கொள்வதற்குத் தகுதியுள்ளதா (பயனுள்ளதா) என்று கேள்வி கேட்டதுமுண்டு. ஆனால், தவது பெற்றோர்களின் சமயத்தை மேற்கொள்வது பயனுடையதுதானா என்று எந்த வாரிசும் கேள்விகேட்டதில்லை. ஆனால் காலம் மாறி விட்டதாகத் தோன்றுகிறது. பல நபர்கள் உலகம் முழுவதிலும், தமது சமயத்தைப் பிதுரார்ஜிதமாகப் பெறுவது சம்பந்தமாக முன்னென்றும் காணாத துணிவை வெளிப்படுத்தியுள்ளனர். பலர், விஞ்ஞான ரீதியான விசாரணையின் செல்வாக்கின் பயனாக, மதம் தவறானது என்றும், அது கைவிடப்பட வேண்டும் என்றும், முடிவுக்கு வந்துள்ளனர், வேறு பலர், மார்க்சிய போதனையின் பயனாக, மதம் என்பது அபினி என்றும், அது ஏழை மக்களை பணக்காரர்களின் ஆதிக்கத்திற்குக் கட்டுப்படும்படித் தூண்டுகிறது

என்றும், எனவே அது கைவிடப்பட வேண்டுமென்றும் முடிவுக்கு வந்துள்ளனர். காரணங்கள் எவையாக இருந்த போதிலும், மதம் சம்பந்தமாக, விசாரணை செய்யும் மனதை மக்கள் வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது மெய்யாகும். இந்த விஷயம் பற்றி சிந்திக்கும் துணிவு பெற்றுள்ளவர்களின் மனதில், மதம் அவசியம் தானா, அப்படியெனில் எந்த மதத்தைக் கடைப்பிடிப்பது நல்லது என்ற கேள்விகள் மேலோங்கியிருக்கின்றன. திட சித்தம் தேவைப் படும் காலம் வந்துவிட்டது. புத்த சமயத்தைத் தழுவியுள்ள நாடுகள், புத்த சமயத்தைப் பரப்புவதற்கான மன உறுதியை வளர்த்துக் கொள்வார்களானால் புத்த சமயத்தைப் பரப்பும் பணி கடினமாக இருக்காது. ஒரு பௌத்தரின் கடமை ஒரு நல்ல பௌத்தராக இருப்பது மட்டுமன்றி, பௌத்தத்தைப் பரப்புவதும் அவரது கடமை யாகும். பௌத்தத்தைப் பரப்புவது மனித குலத்திற்கு சேவை செய் வதாகும் என்பதை அவர்கள் உணர வேண்டும்.[1]



1. 'மகா போதி' என்ற சஞ்சிகை. மகாபோதி கழகத்தின் இதழ், கல்கத்தா; வைசாக இதழ், தொகுதி 58, மே, 1950.

# 18

# இந்துப் பெண்ணின் எழுச்சியும் வீழ்ச்சியும்: இதற்கு யார் பொறுப்பு?

''மகாபோதி'' சஞ்சிகையின் 1950 மார்ச் இதழில் ''இந்து சமயத்திலும் பௌத்தத்திலும் பெண்களின் நிலைமை'' என்ற தலைப்பில் லாமா கோவிந்தா* என்பவர் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அவருடைய கட்டுரை, 1950, ஜனவரி 21ல் ''ஈவ்ஸ் வீக்லி'' என்ற இதழில் வெளியான ஒரு கட்டுரைக்கு பதிலேயாகும். மேலே குறிப்பிட்ட கட்டுரையில் புத்தரின் போதனைகள் இந்தியாவில் பெண்களின் வீழ்ச்சிக்கு முக்கியக் காரணமாகும் என்று குற்றம் சாட்டப்பட்டிருந்தது. இந்தக் குற்றச்சாட்டை மறுப்பதற்கு ஒவ்வொரு பௌத்தரும் முன்வர வேண்டியது போன்றே, லாமா கோவிந்தா தனது கடமையைச் செய்தார். ஆனால் விஷயம் இத்துடன் முடிந்து விட்டதாகக் கருதப்படக் கூடாது. புத்தருக்கு எதிராக இத்தகைய ஒரு குற்றச்சாட்டுக் கூறுவது இது முதல் தடவையல்ல. அவருடைய மேதகைமையைப் பொறுத்துக் கொள்ள முடியாத, அக்கறையுள்ள தரப்புகளால் ''ஈவ்ஸ் வீக்லி''யில் எழுதிய எழுத்தாளரைக் காட்டிலும் கூடுதல் அதிகாரத்துவம் படைத்தவர்களால் இவ்வாறு அடிக்கடி குற்றஞ்சாட்டப்படுகிறது. எனவே இந்தப் பிரச்சினையின் அடிவேருக்குச் சென்று, மீண்டும் மீண்டும் கூறப்படும் இந்தக் குற்றச்சாட்டின் அடித்தளத்தையே ஆய்வு செய்ய வேண்டியது அவசியமாகும். இந்தக் குற்றச்சாட்டு மிகவும் கடுமையானதாகவும் வஞ்சகமானதாகவும் இருப்பதால், இதை மேற்கொண்டு ஆய்வு செய்வதை ''மகா போதி'' வாசகர்கள் வரவேற்பார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன்.

புத்தருக்கு எதிரான இத்தகைய குற்றச்சாட்டு இரண்டு நிலைகளின் மீது மட்டுமே ஆதாரப்பட முடியும்.

சாத்தியமான முதலாவது காரணம், ஆனந்தா என்பவரால் கேட்கப்பட்ட கேள்விக்கு புத்தர் அளித்ததாகக் கூறப்படும் பதிலாக இருக்கக் கூடும். (அத்தியாயம் V ல் மஹாபரிநிர்வாண சூத்தா). அது கீழ்வருமாறு:

---

★ இணைப்பு II பார்க்கவும்.

''9. பெண்கள் சமூகம் சம்பந்தமாக நாங்கள் எவ்வாறு நடந்து கொள்வது? (என்று ஆனந்தா கேட்டார்). ஆனந்தா, அவர்களைப் பார்க்கதாவர்களாக இருந்துவிட வேண்டும். ஆனால், நாங்கள் அவர்களைப் பார்க்க வேண்டியேற் பட்டால் நாங்கள் என்ன செய்வது? ஆனால் அவர்கள் எங்களிடம் பேச நேரிட்டால், பிரபுவே, நாங்கள் என்ன செய்வது? ஆனந்தா, விழிப்புடன் இருக்கவும்.''

பிரச்சினையிலுள்ள இந்த வாசகம் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகம் அச்சகத்தால் வெளியிடப்பட்ட மஹாபரினிபான சுத்தாவில் காணப்படுகிறது என்பதை மறுக்க முடியாது. ஆயினும் விஷயம் என்னவெனில், அந்த வாசகம் இருக்கிறதா, இல்லையா என்பதல்ல. இந்த வாசகத்தின் அடிப்படையில் எந்த வாதமானது கூறப்பட வேண்டுமெனில், அந்த வாசகம் மூலமானது, மெய்யானது என்றும், பிக்குகளால் பிற்காலத்தில் இடைச் செருகல் செய்யப்பட்டது அல்ல என்றும் நிரூபிக்க வேண்டியது அவசியமல்லவா? இதுவே முக்கிய விஷயமாகும்.

புத்தரின் மையமான போதனைகளை அறிந்துள்ள யாரும் சுத்த பிடகாவைப் படித்த பின்னர் மிகவும் வியப்படைவார். ஏனெனில் அது இப்பொழுது கற்பனையான திரைச்சீலையால் மூடப்பட்டு, முற்றிலும் பிராமணீய கருத்துக்களின் சேர்க்கையால் உருச்சிதைக்கப் பட்டுக் காணப்படுகிறது. அந்தக் கருத்துக்கள் மூல பௌத்த சிந்தனைக்கு முற்றிலும் அந்நியமானவையாகும், துறவுசார் லட்சி யங்களைக் கட்டாயமாக அமல் நடத்துவதற்காக, துறவுசார் கருத் துக்களால் அளிக்கப்பெற்றுள்ள திருகல்கள் மற்றும் திருப்பங் களால் உருச்சிதைக்கப்பட்டுள்ளன. எனவே இதனால் ஒருவர் வியப் படைந்து திருமதி ரைஸ் டேவிட்சுடன்[1] சேர்ந்து பின்வருமாறு கேட்கத் தோன்றுகிறது :

''(சுத்தபிடகா)வின் இந்தப் பக்கங்களில் கௌதமர் எங்கே இருக்கிறார்? அவற்றில் எந்த அளவு, எவ்வளவு சொற்பம், மூலவாசகத்துடன் தெளிவாகவோ அல்லது குழப்பமாகவோ கலப்படம் செய்யப்பட்டு மறு பிரசுரம் செய்யப்பட்டுள்ளது? காலகாலமாகத் தொடர்ச்சியாக, கதை கூறுபவர்களால், போதகர்களின் கற்பனைத் திட்டங்களால் இட்டு நிறப்பப்பட் டுள்ளது? மக்களின் போதகர்களால் அல்ல, வாய்மொழியாகக் கற்றுக் கொள்ளும் மாணவர்களால்? அந்த முயற்சிகள் அடிக்கடி

---

★ இணைப்பு II பார்க்கவும்.

*அவருப்பான முறையில், நீண்டகாலமாக கூடுதல் சரளமாகக் கூறப்பட்டவற்றை ஆசிரியர்கள் எழுத்து வடிவத்தில் கூறியிருக் கிறார்கள். அவர்கள் யாவரும் - வர்ணனையாளர்கள் போதனை யாளர்கள் ஆசிரியர்கள். தேர்வு செய்த[1] வாழ்க்கையின் லட்சி யங்கள் உலகின் மற்றவர்கள் தேர்வு செய்தவற்றோடு மாறு படுகின்றன; அவர்கள் எந்த அளவுக்கு உலகியல் சார்ந்ததாக இல்லாமல் இருந்தார்களோ அந்த அளவுக்கு அவை வேறு பட்டன. இந்த உருச்சிதைந்த ஊடகத்தின் வழியாக ஒருவர் படித்து,.......?*

*''எனவே, இந்த வாசகம் பிற்காலத்திங்ல் பிக்குகளால் செய்யப் பட்ட இடைச் செருகல் என்று கூறுவதில் மிகவும் மட்டுமீறியது எதுவும் கிடையாது. முதலாவதாக, சுத்த பிடாகா, புத்தர் இறந்து 400 ஆண்டுகள் கழியும் வரையிலும் எழுதப்படவில்லை. இரண்டாவ தாக, அவற்றை தொகுத்து பதிப்பித்த ஆசிரியர்கள் துறவிகளாவர், அந்தத் துறவி ஆசிரியர்கள் துறவிக்காகத் தொகுத்து எழுதினர். புத்தர் கூறியதாகக் கூறப்பட்ட கூற்று ஒரு துறவிக்கு மதிப்புடையதாகும், தனது திருமணம் செய்து கொள்ளாத வாழ்க்கையை நிலைநிறுத்திக் கொள்வதற்கு இது அவருக்கு அவசியமாகும். எனவே துறவி ஆசிரியர் அத்தகைய ஒரு விதியை இடைச் செருகல் செய்வது அசாத்தியமானதல்ல.''*

*இந்த வாசகம் பிற்காலத்தில் செய்யப்பட்ட இடைச்செருகல் என்று கூறப்படும் கருத்துக்கு ஆதரவாக வேறு இரண்டு பதிவுகளும் உள்ளன.*

*(1) முதலாவதாக, இந்த சுத்தாவுக்கான முன்னுரையில் கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையிலிருந்து (டேவிட்ஸின் எஸ்.பி.பி.வரிசையின் IIம் பாகத்தில் திகா நிகயாவின் 72ம் பக்கத்தில் இதைக் காணலாம்) இந்த சுத்தாவில் காணப்படும் மிகப்பல வாசகங்கள் பிற சுத்தாக்களிலும் வந்துள்ளன என்பதைக் காணமுடியும். பிற சுத்தாக்களில் இந்த சுத்தாவிலிருந் தான பல இதர வாசகங்கள் காணப்பட்டாலும்கூட, இந்த வாசகம் வேறு எந்த சுத்தாவிலும் காணப்படவில்லை.*

*(2) இரண்டாவதாக, இந்த சுத்தாவுக்கான முன்னுரையின் 38ம் பக்கத்தில் (டேவிட்ஸின் எஸ்.பி.இ.நூலின் 11வது*

1. *உறவு சார்ந்த பழமொழிகளுக்கு முன்னுரை (xiii) தொகுதி II*

தொகுதியில் இது வெளியிடப்பட்டுள்ளது). இந்த சுத்தாவின் ஒரு சீன மொழி வாசகம் இருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் இந்த சீன வாசகத்திலும் இந்தக் குறிப்பிட்ட வாசகம் காணப் படவில்லை.

நாம் மேற்கொண்டு முன்சென்று, சாத்தியக்கூறு என்ற சோதனையைப் பிரயோகப்படுத்திப் பார்ப்போம். இத்தகைய ஒரு கேள்வியை ஆனந்தா ஏன் கேட்டிருக்க வேண்டும் என்பதற்கு ஏதாவது காரணமிருக்கிறதா? பெண்களுடன் புத்தர் எத்தகைய உறவுகளைக் கொண்டிருந்தார் என்று தெரிந்துள்ளதற்கு இது இசைவானதுதானா? இத்தகைய ஒரு கேள்வியை ஆனந்தா கேட்டிருக்க முடியாது என்று காட்டுவதற்கு சான்று இருக்கிறது. ஆனால் இத்தகைய ஒரு கேள்வி கேட்கப்பட்டிருக்குமேயானால், புத்தர் அத்தகைய ஒரு பதிலை அளித்திருக்க மாட்டார். பிடகாக்களில் கூறப்பட்டிருப்பது போன்று, பெண்களின் பாலான ஆனந்தா மற்றும் புத்தரின் நடத்தையானது, அத்தகைய ஒரு கேள்வி கேட்கப்பட்டிருக்கும் சாத்தியப்பாட்டுக் கும், அத்தகைய ஒரு பதில் அளிக்கப்பட்டிருப்பதற்கும் மிகவும் முரணாக இருக்கிறது.

ஆனந்தா அத்தகைய ஒரு கேள்வி கேட்பதற்கான அவசியம் ஏதாவது இருந்ததா என்ற விஷயம் சம்பந்தமாக, மகா பரிநிபாண சுத்தாவின் அதே அத்தியாயத்தில், மேலே மேற்கோள் காட்டப்பட்ட திலிருந்து ஒரு சில கதாஸ்கள் மட்டுமே அகற்றப்பட்டுள்ளன என்பதை கவனிப்பது பொருத்தமாக இருக்கும், ஆனந்தா எவ்வளவு இனிமையானவராக இருந்தார் என்றும், அவர் எவ்வாறு எல்லோ ராலும் நேசிக்கப்பட்டார் என்றும் புத்தர் வர்ணிக்கிறார். அவற்றி லிருந்து கீழ்வரும் இரண்டு கதாஸ்களை நான் மேற்கோள் காட்டு கிறேன்:-

''16. சகோதரர்களே, இந்த நான்கு உன்னதமான மற்றும் வியக்கத்தக்க பண்புகள் ஆனந்தாவிடம் இருக்கின்றன.

சகோதரர்களே, நமது சமயத்தைச் சேர்ந்த ஏராளமான சோதரர்கள் ஆனந்தாவை சந்திப்பதற்கு வருவார்களேயானால், அவரைக் கண்டதும் அவர்கள் எல்லையற்ற மகிழ்ச்சியடை கிறார்கள். பின்னர் ஆனந்தா அவர்களுக்கு உண்மையைப் போதிப்பாரேயானால், அந்த சொற்பொழிவைக் கேட்டு அவர்கள் நிரம்ப மகிழ்ச்சியடைகிறார்கள். ஆனந்தா மௌன மாயிருக்கும்போது சோதரர்கள் கூட்டம் மனக்கிலேசம் அடை கிறார்கள்.

*சகோதரர்களே, சமயத்தைச் சேர்ந்த சகோதரிகளில் பலர்..... அல்லது விசுவாசமுள்ள ஆண்கள்....... அல்லது விசுவாச முள்ள பெண்கள் அவருக்கு ஆதரவளித்தால்; பின்னர் ஆனந்தா அவர்களுக்கு உண்மையை போதித்தால், அந்த போதனை கேட்டு அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். ஆனால் அதே பொழுதில் ஆனந்தா மௌனமாக இருக்கும்போது சகோ தரிகள் குழு மனக்கிலேசமடைகிறது.*

ஆனந்தா பெண்களைச் சந்திப்பதும், சகோதரிகள் மட்டுமன்றி, சமயக் குழுவின் உறுப்பினர்கள் அல்லாத, ஆனால் விசுவாசமான பெண்களை சந்திப்பதும் வழக்கமானதுதான் என்று இதிலிருந்து தெளிவாகிறது. அவர் அவர்களைப் பார்ப்பதும், சந்திப்பதும், அவர் களுடன் பேசுவதும் வழக்கம். அப்படியெனில் ஆனந்தா ஏன் அத்தகைய ஒரு கேள்வியைக் கேட்டிருக்க வேண்டும்? பெண்கள் ஆனந்தாவை சந்திப்பது வழக்கம் என்பதை புத்தர் அறிவார். முன்பு இது குறித்து அவர் எந்த ஆட்சேபனையையும் எழுப்பியதில்லை. எனவே, அவர் ஏன் பெண்களுடன் எவ்விதத் தொடர்பும் கூடா தென்று கூறவும், தடை விதிக்கவும் சிந்திக்க வேண்டும்? இந்த வாசகம் முழுவதும் மிகவும் இயற்கைக்கு மாறானதாக இருக்கிறது, எனவே, பிற்காலத்தில் துறவிகளினால் செய்யப்பட்ட இடைச்செருகல் என்றுதான் இதைக் கருத வேண்டும்.

ஆனந்தாவின் வாழ்க்கையில் மற்றொரு உதாரணம் - மகா பரிநிப்பான சுத்தாவிலுள்ள வாசகத்துடன் முற்றிலும் வேறுபடு கிறது. முதலாவது சங்கிதியால் ஆனந்தாவுக்கு எதிராக ஐந்து புகார்கள் கூறப்பட்டன என்பது நன்கு தெரிந்ததே. அவையாவன:

(1) வினயாவின் எந்தப் பகுதிகள் குறையுள்ள பகுதிகள் என புத்தர் கருதினார் என்று கேட்பதற்கு அவர் தவறிவிட்டார் அந்தப் பகுதிகளை மாற்றவும், திருத்தவும் புத்தர் சங்கத் திற்கு அதிகாரம் வழங்கியிருந்தார்.

(2) பின்வாங்கிச் செல்லும்போது, புத்தரின் மேலங்கியைத் தைக்கும்போது அவர் அதன் மீது காலை வைத்தார்;

(3) அமராகிவிட்ட புத்தரின் உடலுக்குப் பெண்களை முதலில் அஞ்சலி செலுத்துவதற்கு அனுமதித்தார்; இதனால், அவர் களின் கண்ணீரால் (புத்தரின்) சடலம் தூய்மை கெட்டது;

(4) அவர் புத்தரை ஒரு முழுவாழ்வு வாழக் கேட்டுக் கொள்ள வில்லை, மற்றும்

(5) சங்கத்தில் பெண்களை அனுமதிப்பதற்கு அவர் பிரதான காரணமாக இருந்தார்.

இந்தக் குற்றங்களையெல்லாம் தான் புரிந்ததாக ஆனந்தா ஒப்புக்கொண்டார். அவர் குற்றவாளி என்று ஒப்புக் கொண்டிருக்க வேண்டுமா, அல்லவா என்பது வேறு விஷயம். மூன்றாவது குற்றச் சாட்டுத்தான் ஆர்வமூட்டுவதாகும். ஏனெனில் விவாதத்திலுள்ள பிரச்சினைக்கு அது மிகவும் சம்பந்தமுடையதாகும். மகா பரிநிப்பான சுத்தத்தில் குறிப்பிட்டுள்ளபடி, புத்தர் வழங்கியுள்ள போதனை (புத்திமதி) உண்மையெனில், அவருடைய உடலைத் தொடுவதற்குப் பெண்களை ஆனந்தா ஏன் அனுமதித்தார்? ஒரு சில நிமிடங்களுக்கு முன்னர்தான் புத்தர் அருளிய அறிவுரையை அவர் (ஆனந்தா) ஏன் இவ்வளவு அப்பட்டமாகவும், தெரிந்துள்ள நிலையிலும் மீறினார்?'' இதற்குப் பதில் எதிர்மறையானதே. இந்த எதிர்மறை பதிலிலிருந்து என்ன தொடருகிறது? இதிலிருந்து தொடருவது என்னவெனில், ஆனந்தாவுக்கு எதிராகக் கூறப்பட்டதுபோல், புத்தர் அவருக்கு அத்தகைய அறிவுரை எதுவும் கூறவில்லை. ஏனெனில், அவர் அத்தகைய ஒரு அறிவுரையைக் கூறியிருந்தாரேயானால், ஆனந்தா அதற்கு முரணாகச் செயல்பட்டிருக்க முடியாது. எனவே, அத்தகைய அறிவுரை எதுவும் புத்தரால் வழங்கப்படவில்லை என்பது பகுத்தறிவுக்கு இசைவானதாகும்.

இனி, இந்தப் பிரச்சினையை புத்தரின் பக்கத்திலிருந்து பரிசீலனை செய்வோம். அத்தகைய ஒரு பதிலை அளிப்பது புத்தருக்கு இயற்கையானதாக இருந்திருக்குமா? இந்தக் கேள்விக்கான பதில் பெண்களின்பாலான புத்தரின் நடத்தைப் போக்கின் மீது சார்ந்திருக்க வேண்டும். ஆனந்தாவுக்கு அவர் வழங்கியதாகக் கூறப்பட்டுள்ளதன் படி, புத்தர் பெண்களை சந்திப்பதைத் தவிர்த்திருக்கிறாரா? இது சம்பந்தமான விவரங்கள் (உண்மைகள்) என்ன?

இரு உதாரணங்கள் உடனே நம் மனதில் படுகின்றன. ஒன்று விசாகம் பற்றியது. அந்த அம்மையார் புத்தரின் எண்பது பிரதம சீடர்களில் ஒருவர். 'தானம் வழங்கும் தலைவி' என்பது அவருக்கு இடப்பட்ட பெயர். புத்தர் போதிப்பதைக் கேட்பதற்கு ஒரு தடவை விசாகம் செல்லவில்லையா? அவருடைய மடத்தினுள் அந்த அம்மையார் பிரவேசிக்கவில்லையா? பெண்களின்பால் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று ஆனந்தாவுக்கு ஆணையிட்டது போன்று விசாகத்தின்பால் புத்தர் நடந்து கொண்டாரா? அந்த சந்திப்பின்போது பிரசன்னமாயிருந்த பிக்குகள் என்ன செய்தார்கள்? அவர்கள் கூட்டத்தை விட்டு வெளியேறினார்களா?

நமது மனதில் படுகிற இரண்டாவது உதாரணம் என்னவெனில், வைசாலியைச் சேர்ந்த அமரபாலி சம்பந்தப்பட்டதாகும். இந்த அம்மையார் புத்தரைக் காணச் சென்று, அவருக்கும் அவருடனிருந்த துறவிகளுக்கும், தனது வீட்டில் வந்து உணவருந்துவதற்கு அழைப்பு நல்கினார். அவர் ஆடலணங்கு வைசாலியின் மிகவும் எழில்வாய்ந்த நங்கை. புத்தரும் பிக்குகளும் அவரை (காண்பதினின்றும்) தவிர்த்தார்களா? அதற்குமாறாக, அவர்கள் அவருடைய அழைப்பை ஏற்றுக் கொண்டார்கள் (லிச்சாவிசினுடைய அழைப்பை நிராகரித்தார்கள், அதனால் அவர் தான் மிகவும் அவமானப்படுத்தப் பட்டதாகக் கருதினார்); அந்த அம்மையாரின் இல்லம் சென்று விருந்துண்டார்கள்.

வேறுபல உதாரணங்களும் உண்டு. நந்தகோவாட சுத்தா[1] இவ்வாறு கூறுகிறது: மகா பிரஜாபதி கௌதமி, ஸ்ரவஸ்தி என்னுமிடத்தில் தங்கியிருந்த புத்தரிடம் தானம் வழங்கும் ஐநூறு பெண்களை அழைத்துச் சென்றார்.

அவர்களுக்குக் கோட்பாடு மற்றும் கட்டுப்பாடு பற்றி போதனை அளிக்க வேண்டுமென்று புத்தரை வேண்டினார். அவர்களிடமிருந்து புத்தர் நழுவி ஓடிவிட்டாரா?

சம்யுக்த நிக்கயா[2] இவ்வாறு கூறுகிறது : பஜ்ஜுயாவின் மகள் கோகனடா, இரவு அதிக நேரமாயிருந்தபொழுது, மகாவனம் முழுமையையும் தனது பேரழகால் பிரசாசிக்கச் செய்தவர், வைசாலியில் தங்கியிருந்த புத்தரைக் காணவந்தார்.

பசெனாஜித் மன்னரின் மனைவி, ராணி மல்லிகா, மத போதனைகளுக்காக அடிக்கடி புத்தரைப் போய்ப் பார்த்த செய்திகள் பிடகாக்களில் நிறைய வந்துள்ளன.

இந்த உதாரணங்களிலிருந்து, புத்தர் பெண்களை வெறுத்து ஒதுக்கவில்லை என்பதும் புத்தரைச் சென்று காண்பதற்கு பெண்கள் அச்சங் கொள்ளவில்லை என்பதும் தெளிவாகிறது.

---

1. மஜ்ஜி மா நிக்கயா II, பக்கம் 309.
2. தொகுதி 1, பக்கம் 40

சாதாரண சீடர்களின் குடும்பங்களுக்கு விஜயம் செய்யும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டாம் என்று புத்தர் பிக்குகளுக்கு அறிவுரை[3] கூறினார் என்பது மெய்யே.

ஏனெனில், பெண்களுடன் அடிக்கடி தொடர்பு கொள்வதால் மானிட பலவீனத்திற்கு இரையாகக் கூடுமென்று புத்தர் அச்சங் கொண்டார். ஆனால் அத்தகைய விஜயங்களை அவர் தடை செய்ய வில்லை, மேலும் பெண்களின்பால் எத்தகைய வெறுப்புணர்ச்சியை யும் அவர் வெளிப்படுத்தவில்லை.

பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிப்பதில் புத்தர் கறாராக இருந்தார் என்பதும் மெய்யே. அவருடைய சொற்களையே பயன் படுத்துவதெனில்[4] ''பிரம்மச்சரிய வாழ்க்கையைப் பெண்கள் கறைப் படுத்துகிறார்கள்'' என்ற உண்மையை வேதனையுடன் அவர் உணர்ந் திருந்தார். ஆனால் அவர் என்ன அறிவுரை கூறினார்? பெண்களுடன் எல்லாத் தொடர்புகளையும் தவிர்க்க வேண்டும் என்று அவர் பிக்கு களுக்கு அறிவுரை கூறினாரா? இல்லவே இல்லை. அவர் ஒருபோதும் அத்தகைய எந்தத் தடையையும் விதிக்கவில்லை. அத்தகையது எதுவும் செய்வதற்கு மாறாக, பிக்குகள் பெண்களை சந்திக்கும் போதெல்லாம், அவர்கள் தாயார், சகோதரி அல்லது மகள்[5] என்ற வகையில் அவர்களுடன் பழக வேண்டும் என்று அவர்களுக்கு அறிவுரை பகன்றார்.

அதாவது, ஒரு பெண்ணை, உங்களுடைய சொந்தத் தாயார், சகோதரி அல்லது மகளாகக் கருத வேண்டும் என்று புத்தர் கூறினார்.

புத்தரை எதிர்ப்பவர், குற்றச்சாட்டுக்கு ஆதரவாக சார்ந்து நிற்கக் கூடிய இரண்டாவது உத்தேச ஆதாரம், பெண்கள் சங்கத்தில் சேருவதை புத்தர் எதிர்த்தார் என்றும் பிக்குணி சங்கத்தை (இறுதி யில் பெண்கள் சேருவதற்கு அனுமதித்தபோது) பிக்கு சங்கத்திற்குக் கீழ்ப்பட்டதாக இருக்க வேண்டுமென்று கூறினார் என்ற வாதமு மாகும். இது சம்பந்தமாகவும் நிலைமையை மேலும் ஆய்வு செய்ய வேண்டியது அவசியம். பரிவர்ஜா (தீட்சை) பெறுவதற்கான மஷாபிரஜாதிபதியின் கோரிக்கையை புத்தர் ஏன் எதிர்த்தார்?

---

3. அங்குட்டாரா நிகயா, III, பக்கம் 190.
4. சம்யுத்தா நிகயா, I, பக்கம் 53.
5. நேச மொழிகள் IV, பக்கம் 68.

பெண்கள் தாழ்ந்த வகுப்பினரென்றும், அவர்களை அனுமதித்தால் பொதுமக்களின் பார்வையில் (மதிப்பில்) சங்கத்தின் தகுதியைத் தாழ்த்தி விடும் என்றும் புத்தர் கருதியதனாலா அவர் அதை எதிர்த்தார்? அல்லது, அறிவு ரீதியிலும் ஒழுக்க (தார்மிக) ரீதியிலும் தனது கொள்கை, தனது கட்டுப்பாடு ஆகிய தனது லட்சியத்தை எய்துவதற்குப் பெண்கள் வல்லவர்கள் அல்ல என்று கருதியதால் புத்தர் அதை எதிர்த்தாரா? இவற்றில் இரண்டாவது கேள்வியை ஆனந்தா நிச்சயமாக புத்தரைக் கேட்டார். விவாதத்தின்போது புத்தர், ஓரளவு பிடிவாதமாக இருப்பதாக ஆனந்தா அறிந்தபோது அவர் புத்தரிடம் இந்தக் கேள்வியைக் கேட்டார். ஐயப்பாட்டுக்கோ அல்லது தகராறுக்கோ சிறிதும் இடமளிக்காமல் புத்தர் திட்டவட்டமாக பதிலளித்தார். தனது கொள்கையையும் தனது கட்டுப்பாட்டையும் நிறைவேற்றுவதற்குப் பெண்கள் பூரணமாகத் தகுதியுடையவர்கள் என்றும், பரிவர்ஜாவை (தீட்சை) எடுத்துக் கொள்வதற்கான அவர்களுடைய கோரிக்கையைத் தான் மறுத்ததற்கு அது காரணமல்லவென்றும் அவர் கூறினார். எனவே, அறிவு சம்பந்தமாகவோ அல்லது பண்பாடு சம்பந்தமாகவோ பெண் ஆணுக்கத் தாழ்ந்தவர் என்று புத்தர் கருதவில்லை என்று இதிலிருந்து தெளிவாகிறது. அவர் பெண்களை அனுமதிப்பதற்கு மறுத்ததற்குக் காரணம், அவர்களைத் தாழ்ந்தவர்களாகப் புத்தர் கருதினாரென்றும் அவர்களால் சங்கத்தின் மதிப்பு குறைந்து விடக் கூடுமென்று அவர் பயப்பட்டார் என்றும் கூறும் வாதம் குறிப்பிடப்படுவதற்கு அருகதை உள்ளதே அல்ல. ஏனெனில் அதுதான் அவருடைய உணர்வு எனில், அவர் அவர்களை அனுமதித்திருக்கவே மாட்டார்.

பிக்குணி சங்கத்தை பிக்கு சங்கத்திற்குக் கீழ்ப்பட்டதாக அவர் ஆக்கினார் என்ற வாதம் தவறானதாகும். அவரது நோக்கில் இவற்றில் எதுவும் கருதப்படவே இல்லை. இந்த ஏற்பாட்டின் பின்னே உள்ள காரணம் முற்றிலும் நடைமுறைத் தன்மை வாய்ந்ததேயாகும். பரிவர்ஜிகாக்களாக (பெண் துறவிகள்) பெண்களை அனுமதிப்பதில் புத்தர் இரண்டு கேள்விகளை சந்திக்க வேண்டியிருந்தது. ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஒரே சங்கமாக வைத்துக் கொள்வதா? அவர் இரண்டு தனித்தனி சங்கங்களை வைத்துக் கொள்வதென்று முடிவு செய்தார். ஆண்களையும் பெண்களையும் ஒரே பரிவர்ஜிகாக்களாக சேர்த்து வைத்துக் கொண்டால் பிரம்மச்சரியம் என்ற விதி பூரணமாகத் தொலைந்து போய்விடும் என்று அவர் பயப்பட்டார். எனவே, பெண்களை அனுமதிக்கும்போது, - அவருடைய சொந்த சொற்களையே உபயோகப்படுத்துவதெனில் - இரு தனித்தனி

அமைப்புகளை ஏற்படுத்துவதன் வாயிலாக அவர்களுக்கு இடையில் ஓர் தடுப்பை ஏற்படுத்துவது அவசியம் என்று அவர் நினைத்தார். இரு தனித்தனி அமைப்புகளை உருவாக்குவதென்று முடிவு செய்து விட்டதன் பின்னர், மற்றொரு கேள்வி அவரை எதிரிட்டது. ஆண் களுக்கென்றும், பெண்களுக்கென்றும் இரு தனித்தனி சங்கங்கள் இருக்க வேண்டுமெனில், அவை முற்றிலும் சுதந்திரமான தனி அமைப்புகளாக இருப்பதா, அல்லது அவற்றுக்கு இடையில் ஏதாவது ஒருவகை உறவு (தொடர்பு) இருக்க வேண்டுமா?

முதலாவது பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், பெண் களின் சங்கம் ஆண்களின் சங்கத்திலிருந்து தனியாக இருக்க வேண்டும் என்பதைத் தவிர வேறு எந்த முடிவும் சாத்தியமல்ல. இரு தரப்பினரையும் கட்டுப்படுத்தும் பிரம்மச்சரிய விதியிலிருந்து எழுகின்ற இது தவிர்க்க முடியாத விளைவாகும். இது ஆண் மற்றும் பெண்ணின் வாழ்க்கையில் பாலியல் உணர்வு எவ்வளவு வலுவான சக்தியுடையது என்பதை புத்தர் அறிந்திருந்தார். புத்தரின் சொந்த சொற்களிலேயே கூறுவதெனில், இந்த உணர்வுதான் ஓர் ஆணைப் பெண்ணின் பிணைப்புக்குள்ளும், ஒரு பெண்ணை ஆணின் பிணைப் புக்குள்ளும் செல்வதற்கு உந்தித் தள்ளுகிறது. இது தன் முழு சக்தியையும் பிரயோகப்படுத்துவதற்கு ஒரு வாய்ப்புக் கொடுக்கப் பட்டால், பிரம்மச்சரிய விதி ஒரு நிமிடம் கூட நிலைத்திருக்க முடியாது. பிரம்மச்சரிய விதியைப் பாதுகாப்பதற்கு, அவர் இரு தனித்தனி சங்கங்களை ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது.

இரண்டாவது பிரச்சினையை எடுத்துக் கொண்டால்: புத்தர் மேற்கொண்ட முடிவைத் தவிர வேறு எந்த முடிவும் சாத்தியமா? அவருடைய சமயத்தில் சேர்ந்த பெண்கள் (பயிற்சி பெறாத) கன்னிப் பெண்களாவர். அதிலும் அவருடைய தத்துவத்தில் அவர்களுக்குப் பயிற்சி கொடுக்க வேண்டியிருந்தது. அவருடைய கட்டுப்பாட்டு விதிகளின்கீழ் அவர்களுக்குப் பயிற்சியளிக்க வேண்டியிருந்தது. யார் இந்தப் பணியை மேற்கொள்ள முடியும்? இந்தப் பணியை வேறு யாரிடத்தில் அவரால் ஒப்படைத்திருக்க முடியும்? அவருடைய சமயத்தைச் சேர்ந்த ஆண் பிக்குகளைத் தவிர வேறு யாரிடமும் ஒப் படைத்திருக்க முடியாது. ஏனெனில் அவர்கள் ஏற்கனவே அவ ருடைய தத்துவத்தில் பயிற்சி பெற்றிருந்தனர், அவருடைய ஒழுங்குக் கட்டுப்பாட்டிலும் பயிற்சி பெற்றிருந்தனர். எனவே இதைத் தான் அவர் செய்தார். முன்னவர்களுக்கு பயிற்சியளிக்கும் பணியைப் பின்னவர்களிடம் ஒப்படைத்ததன் மூலம் பிக்குகளுக்கும் பிக்குணி

களுக்கும் இடையில் எத்தகைய உறவு ஏற்படுத்தப்பட்டது? இது எழுப்பப்பட வேண்டிய ஓர் அவசியமான கேள்வியே. இது இல்லாமல், பிக்குகள் சங்கத்தினிடம் பிக்குணி சங்கம் பணிந்து போகாதது பற்றிய விளக்கம் தெளிவாகவில்லை. இந்தக் கேள்விக்கான வெளிப்படையான பதில், பிக்குணிகளைப் பயிற்றுவிக்கும் பணியை பிக்குகளிடம் ஒப்படைத்ததன் மூலம் அவர்களிடையிலான உறவு ஆசிரியருக்கும் மாணவர்களுக்கும் இடையிலான உறவாயிற்று. இப்பொழுது, ஆசிரியருக்கும் மாணவர்களுக்கும் இடையிலான உறவு, மாணவரின் மீது ஆசிரியருக்கு ஒரு வகை அதிகாரம் கொண்டதாகவும், மாணவர்கள் ஆசிரியருக்குப் பணிந்து போக வேண்டும் அல்லது அடங்கிப்போக வேண்டும் என்பதைக் கொண்டதாக இல்லையா? புத்தர் வேறு என்ன செய்தார்?

இது சம்பந்தமாக, கிறிஸ்துவ சமயத்தில் துறவியர் மடங்களுக்கும் பெண்துறவிகள் மடத்திற்கும் உள்ள உறவு முறையை ஒப்பிட்டுப் பார்ப்பது பயனுள்ளதாக இருக்கும். பெண் துறவிகள் (கன்னிகாஸ்திரிகள்) மடம் ஆண் துறவிகள் மடத்திற்குக் கீழ்ப் பட்டதல்லவா? ஆம், அவை அவ்வாறுதான்[1] எனவே, இதிலிருந்து, கிறிஸ்துவ சமயம் பெண்களை ஆண்களுக்குக் கீழ்ப்பட்டவர்களாகக் கருதுகிறது என்று யாராவது கூறு முடியுமா? அப்படியெனில், பிக்குகளுக்கும் பிக்குணிகளுக்கும் இடையிலான உறவுகளை முறைப் படுத்துவதற்கு புத்தபிரான் செய்த ஏற்பாடு சம்பந்தமாக எவ்வாறு வேறு வியாக்கியானம் செய்ய முடியும்? சுத்த பிடாகத்தைப் பொறுத்த மட்டிலும், பெண்களுக்கு எதிராக புத்தர் தப்பெண்ணம் (துவேஷம்) கொண்டிருந்தார் என்றும், மற்றும் பெண்களைப் பற்றி எச்சரிக்கையாக (உஷாராக) இருக்கும்படி ஆண்களை எப்போதும் உஷார்படுத்தி வந்தார் என்றும் கூறக்கூடிய குற்றச்சாட்டுக்கு எவ்வித ஆதாரமும் இல்லை.

## II

குறிப்பிட்ட உதாரணங்கள் ஒரு புறமிருக்க, பெண்களைப் பற்றி புத்தரின் பொதுவான கண்ணோட்டம் என்னவாக இருந்தது என்பதை இப்பொழுது நாம் பார்ப்போம். புத்தர் பெண்களைத் தாழ்வாக மதித்தாரா? பௌத்தர்களின் புனித இலக்கியங்களைப்

1. கத்தோலிக்கக் கலைக் களஞ்சியத்தில் ''கன்னிகாஸ்திரீகள்'' என்ற கட்டுரையைப் பார்க்கவும். தொகுதி XI, பக்கம் 164.

படிப்பவர்கள் பெண்களைப் பற்றி புத்தர் குறிப்பிடும் இடங்களில் எல்லாம், பெண்களை இழிவுபடுத்துவதாகக் கருதப்படுவது எதையும் கூறுவதற்கு மாறாக, பெண்ணை புத்தர் எப்பொழுதும் பெருமைப்படுத்துவதற்கும் உயர்த்திக் கூறுவதற்குமே முயன்றுள் ளார் என்பதை நன்கு உணர்ந்து தெளிவு பெறுவார்கள் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். இந்தக் கருத்துக்கு ஆதரவாக நான் ஒரு சில உதாரணங்களைக் கூறுவதற்கு விரும்புகிறேன்.

பண்டைக் காலத்திலிருந்து, இந்திய மக்கள் பொதுவாக, பெண் குழந்தை பிறப்பதை ஒரு துரதிருஷ்டமாகக் கருதி வந்துள் ளனர். இந்த மனோபாவம் புத்தருக்கு இருந்ததா? இந்தப் பிரச்சினை சம்பந்தமான புத்தரின் கண்ணோட்டம் மரபான கண்ணோட்டத் திற்கு முற்றிலும் எதிரானதாகும். பிரசேனாஜித் மன்னருக்கு அவர் அளித்த அறிவுரையை இதற்கு உதாரணமாகக் கூறலாம். ஒருசமயம் மன்னர் பிரசேனாஜித், ஸ்ராவஸ்தியில் ஜேடாவின் தோட்டத்தில் புத்தரைக் காணச் சென்றிருந்தார். அந்த சமயத்தில் அரண்மனை யிலிருந்து ஒரு தூதர் அவருடைய மனைவி அரசி மல்லிகாவுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்திருப்பதாக வந்து தகவல் தெரிவித்தார். இந்த சேதி கேட்டதும் மன்னருடைய முகம் மாற்றமடைந்து, அவர் சோகமாகவும் விரக்தியடைந்தவராகவும் காணப்பட்டார். அவருடைய முகத்தில் இந்த மாற்றத்தைக் கண்ட புத்தர், அதற்கான காரணத்தை வினவினார். இதற்கான காரணம் கூறப்பட்டதும் புத்தர்[1] ''ஏன் வருத்தப்படுகிறீர்கள்? ஒரு பெண் குழந்தை, ஓர் ஆண் குழந்தை யைக் காட்டிலும் மேம்பட்டதாகவும் இருக்கக் கூடும். ஏனெனில் அவள் விவேகமும் ஒழுக்கமும் நிறைந்தவளாக வளர்வாள். அவள் பெற்றெடுக்கும் மகன் மகத்தான செயல்களைப் புரிந்து பெரும் ராஜ்ஜியங்களை ஆட்சிபுரியக்கூடும்....'' என்று கூறினார்.

சில குடும்பங்கள் ஏன் உயர்வடைகின்றன, சில குடும்பங்கள் ஏன் சீரழிகின்றன என்ற கேள்விக்கு பதிலளிக்கையில், புத்தர், பிக்குகளுக்கு இவ்வாறு கூறியதாகத் தெரிகிறது:[2]

> ''எத்தகைய குடும்பங்கள், துறவிகள், பெரும் செல்வங்களை அடைந்த போதிலும் அவை நீண்ட காலம் இருப்பதில்லை. ஏனெனில் இழந்தவற்றைத் திரும்பப் பெறுவதற்கு அவர்கள்

1. சம்யுத்த நிக்கயா : தொகுதி I, பக்கம் 110
2. அங்குட்டர நிக்கயா : தொகுதி II, பக்கம் 254-255

முயற்சிப்பதில்லை, சீரழிந்தவற்றை மேம்படுத்துவதற்கு அவர்கள் முயற்சிப்பதில்லை. அவர்கள் மிகையாக உண்கிறார்கள், குடிக்கிறார்கள், ஒழுக்கங்கெட்ட ஒரு பெண்ணையோ அல்லது ஓர் ஆணையோ அவர்கள் அதிகாரத்தில் அமர்த்துகிறார்கள். எத்தகைய குடும்பங்களாயினும் அவையெல்லாம் நீடித்திருக்க முடியாமல் போவதற்கு இந்த நான்கே காரணங்களாகும், அல்லது இவற்றில் ஏதாவது ஒரு காரணத்தினால் ஆகும்.

''பல குடும்பங்கள், துறவிகள் நீண்டகாலம் நீடித்திருப்பதற்குக் காரணம், அவர்கள் இழந்ததைத் திரும்பப் பெறுவதற்கு முயல்கின்றனர், சீரழிந்ததை மேம்படுத்துவதற்கு முயல்கின்றனர், மிதமாக உண்கின்றனர், குடிக்கின்றனர்; மற்றும் நற்பண்புள்ள ஒரு பெண்ணையோ அல்லது ஆணையோ அதிகாரத்தில் அமர்த்துகின்றனர். எத்தகைய குடும்பங்களாயினும்.... அவை நீண்ட காலம் நீடித்திருப்பதற்கு இந்த நால்வகைக் காரணங்களாகும், அல்லது இவற்றில் ஏதாவது ஒரு காரணத்தினாலாகும்.''

ஒரு மன்னர், சக்கரத்தைச் சுழற்றுபவர், அதாவது ஒரு சக்கரவர்த்தி (மாமன்னர்) ஆக விரும்புபவர் இந்த உலகில் தோன்றும் போது என்ன ஏற்படுகிறது என்று பிக்குகளுக்கு விவரித்துக் கூறுகையில், புத்தர் அவர்களிடம் இவ்வாறு கூறியதாகத் தெரிகிறது:[1] ''அத்தகைய ஒரு மன்னர் தோன்றும் போது ஏழு செல்வங்களும் தோன்றுகின்றன. சக்கரம், யானை, குதிரை, அணிகலன், பெண், வீட்டின் - தந்தை மற்றும் வாரிசு என்ற செல்வமும் தோன்றுகின்றனர்.''

மற்றொரு சந்தர்ப்பத்தில் புத்தர், பெண்ணின் மதிப்பைப் பற்றி உலகிற்குக் கூறுகையில் இவ்வாறு குறிப்பிட்டார்:[2]

''பெண் மிக உயர்வான பொருளாகும்; அவள் இன்றியமையாத உபயோகமுடையவள்; அல்லது, ஏனெனில், அவள் மூலமாகவே போதி சத்வர்கள் மற்றும் உலக ஆட்சியாளர்கள் (மன்னர்கள்) பிறக்கின்றனர்.''

---

1. சம்யுத்த நிக்கயா : தொகுதி V, பக்கம் 83
2. அங்குட்டர நிக்கயா : தொகுதி I, பக்கம் 62.

ஒரு பெண் குழந்தை பிறப்பதானது துயரமடைவதற்கான சந்தர்ப்பமல்ல, மகிழ்ச்சியடைவதற்கான ஒரு சந்தர்ப்பம் என்று கருதியவரை, தங்களுடைய விவகாரங்களுக்கு ஒரு பெண்ணை அதிகாரத்தில் அமர்த்திய குடும்பங்கள் வீழ்ச்சியடைவதனின்றும் காப்பாற்றப்பட்டன என்று எண்ணியவரை, பெண்ணை ஏழு செல்வங்களில் ஒருவர் என்று தயக்கமின்றி வர்ணித்தவரை, பெண் ஆக உயர்ந்த மதிப்புடைய பொருள் என்று கூறியவரை, பெண்களை வெறுப்பவர் என்றும் ஏளனமாகக் கருதுபவர் என்றும் எவ்வாறு கூற முடியும்? இந்தக் கூற்றுக்கள் பெண் வர்க்கத்தின்பால் புத்தர் கொண்டிருந்த பொதுவான மனோபாவங்களின் மாதிரிகளாகும். அவை பெண்ணை ஏளனம் செய்வதையும் இழிவுபடுத்துவதையும் நோக்கமாகக் கொண்டு கூறப்பட்டவை என்று யாராவது கூற முடியுமா?

## III

பிக்குணிகளை பிக்குகளின் அதிகாரத்தின்கீழ் வைத்ததை ஒரு சமூகத் தவறு (கெடுதல்) என்று கருதுபவர்கள், பெண்களை சந்நியாசம் அல்லது பரிவர்ஜா (துறவியாதல்) ஏற்றுக் கொள்வதற்கு புத்தர் அனுமதித்ததானது எத்துறை புரட்சிகரமான நடவடிக்கை என்பதை உணர்வதில்லை. பிராமணீயத் தத்துவத்தின்கீழ், பெண்கள் ஞானம் (அறிவு) பெறும் உரிமை ஏற்கனவே மறுக்கப்பட்டுவிட்டது. சந்நியாசம் ஏற்கும் பிரச்சினை வந்தபோது, அவர்கள் இந்தியப் பெண்களுக்கு மற்றொரு அநீதியை இழைத்தனர். வரலாற்று ரீதியாகப் பார்க்கும்போது, வேதங்களைத் தொழும் பிராமணர்களுக்கு சந்நியாசம் ஒரு இலட்சியமல்ல; அவர்கள் உபநிடதங்களைப் புனித இலக்கியம் என்று அங்கீகரிப்பதற்கு நீண்டகாலமாக மறுத்து வந்தனர். சந்நியாசம் கொள்வது உபநிடதங்களின் லட்சியமாகும். சந்நியாசத்தின் முடிவு ஆத்மா பிரம்மமாகும் என்ற உபநிடதத் தத்துவத்தை எய்துவதாகும். பிராமணர்கள் சந்நியாச வாழ்க்கையைக் கடுமையாக எதிர்த்தனர். இறுதியாக, அவர்கள் சில நிபந்தனை களின் பேரில் இறங்கி வந்தனர். அந்த நிபந்தனைகளில் ஒன்று, பெண்களும் (சூத்திரர்களும்) சந்நியாசத்திற்குத் தகுதியுள்ளவர்கள் அல்ல என்பதாகும்.

பெண்கள் சந்நியாசம் மேற்கொள்வதை பிராமணர்கள் ஏன் தடைசெய்தார்கள் என்பதன் காரணத்தைப் புரிந்துகொள்வது முக்கிய மாகும்; ஏனெனில் அது பெண்களின்பாலான பிராமணர்களின் கண்ணோட்டத்தைப் புரிந்து கொள்வதற்கு உதவுகிறது; இது புத்தரின்

கண்ணோட்டத்திற்கு நேர் எதிரானதாகும். இதற்கான காரணத்தை மனு இவ்வாறு கூறுகிறார்:

> IX. 18. வேதங்களைப் படிப்பதற்குப் பெண்களுக்கு உரிமையில்லை. அதனால்தான் அவர்களின் சம்ஸ்காரங்கள் (சடங்குகள்) வேதமந்திரங்கள் இல்லாமல் நடத்தப்படுகின்றன.
>
> மதத்தைப் பற்றிப் பெண்களுக்கு எந்த ஞானமும் கிடையாது, ஏனெனில் வேதங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு அவர்களுக்கு உரிமையில்லை. பாவத்தைப் போக்குவதற்கு வேத மந்திரங்களை உச்சரிப்பது பயனுள்ளதாகும். பெண்களால் வேத மந்திரங்களை உச்சரிக்க முடியாததாகையால் அவர்கள் பொய்யைப் போன்றவர்கள்.

மனு, புத்தருக்குப் பின்னர் தோன்றியவராக இருந்தபோதிலும், அவர் பழைய தர்ம சூத்திரங்களில் கூறப்பட்டுள்ள பழைய கருத்தை விளம்பியுள்ளார். பெண்களைப் பற்றிய இந்தக் கருத்து இந்தியப் பெண்களை அவமானப்படுத்துவதாகும். ஏனெனில், ஒவ்வொரு மானிடப் பிறவியின் பிறப்புரிமையான அறிவு பெறும் உரிமை, எவ்வித நியாயமுமின்றிப் பெண்களுக்கு மறுக்கப்படுகிறது. அது ஓர் அவமானமாகும். ஏனெனில், அறிவு பெறுவதற்கான உரிமை அவர்களுக்கு மறுக்கப்பட்ட பின்னர், அறிவு இல்லாத காரணத்தால் ஒரு பெண் பொய்யைப் போன்று அசுத்தமானவள் என்று பிரகடனம் செய்யப்பட்டு எனவே, பிரம்மத்தை அடைவதற்கான ஒரு பாதையாகக் கருதப்பட்ட சந்நியாசத்தை ஏற்பதற்கு அவள் அனுமதிக்கப்படக் கூடாது என்று தடை விதிக்கப்பட்டது. அவள் தனது ஆன்மீக உள்ளாற்றலை எய்துவதற்குள்ள உரிமை அவளுக்கு மறுக்கப்பட்டது மட்டுமன்றி, அவள் எத்தகைய ஆன்மீக உள்ளாற்றலும் அற்றவள் என்று பிராமணர்களால் பிரகடனம் செய்யப்பட்டது.

இது பெண்களுக்கு இழைக்கப்பட்ட ஒரு குரூரமான அநீதியாகும். இதற்கு ஈடிணையே கிடையாது. பேராசிரியர் மாக்ஸ் முல்லர்''[1] கூறியது போன்று, ''மனிதப் பிறவி தெய்வத் தன்மையிலிருந்து எவ்வளவு தொலைவிலிருந்த போதிலும், இந்த உலகில் மனிதனைவிட வேறு எதுவும் கடவுளுக்கு சமீபமாக இல்லை.

1. சமயம் பற்றி ஹிப்பர்ட்டின் சொற்பொழிவுகள், பக்கம் 379.

உலகில் மனிதனைத் தவிர வேறு எதுவும் கூடுதல் தெய்வத்தன்மை வாய்ந்ததாக இல்லை''. இது மனிதன் (ஆண்) விஷயத்தில் உண்மை யெனில், பெண் சம்பந்தமாக இது ஏன் உண்மையாக இருக்கக் கூடாது? இதற்கு பிராமணர்களிடமிருந்து பதில் இல்லை.

பரிவர்ஜிகா வாழ்க்கையில் பெண்களை அனுமதித்ததன் மூலம் புத்தர், ஒரே அடியில் இந்த இரு அநீதிகளையும் அகற்றினார். அவர் பெண்களுக்கு அறிவு பெறும் உரிமையை வழங்கியதோடு, ஆண்களோடு கூடவே ஆன்மீக உள்ளாற்றல்களை எய்துவதற்கான உரிமையையும் பெண்களுக்கு அளித்தார்.

இது இந்தியாவில் ஒரு புரட்சியும் பெண்களின் விடுதலையு மாகும். இது குறித்து பேராசிரியர் மாக்ஸ் முல்லர் இவ்வாறு கூறுகிறார்:

''பழைய பிராமணீய சட்டத்தின் சிறுமைப்படுத்தும் விலங்கு கள் கடைசியாக உடைக்கப்பட்டன என்று இந்தியாவின் வரலாறு நமக்கு போதிக்கிறது, ஏனெனில், புத்த சமயத்தில் தனிநபர் சுதந் திரம், குறிப்பாக, சமுதாயத்தின் தடைகளை உடைத்துக் கொண்டு எழும் உரிமை, விரும்பும்போது காட்டுக்குள் சென்று ஒரு செம்மை யான ஆன்மீக சுதந்திர வாழ்க்கையை வாழ்வது ஆகிய உரிமைகள் அறுதியிட்டுக் கூறப்பட்டிருப்பதை நாம் உணர வேண்டும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை''.

இந்திய மாதர்களுக்கு புத்தர் வழங்கிய இந்த சுதந்திரம் மிக மிக மகத்தான முக்கியத்துவம் வாய்ந்த உண்மையாகும்; மற்றும் இது பிக்குணிகள் பிக்கு சங்கத்திற்குக் கீழ்படிந்து இருக்க வேண்டும் என்று கூறியதில் எத்தகைய களங்கம் ஏற்பட்டதாகக் கூறப்படுவதைத் தாழ்த்தி, மேலோங்கி நிற்கிறது. இது ஒரு பொருளற்ற சுதந்திரமல்ல, இது, அவர்கள் ஆர்வத்துடன் அனுபவித்த, பாடி மகிழ்ந்த சுதந்திர மாகும். ''ஓ, உண்மையிலேயே விடுதலை பெற்றேன், ஓ, நான் புகழார்ந்த சுதந்திரமடைந்துள்ளேன்...'' என்று மூட்டா[1] என்ற ஒரு பிக்குணி, ஒரு பிராமணப் பெண் பாடினாள், மெட்டிகா என்ற மற்றொரு பிக்குணி, அவளும் ஒரு பிராமணப் பெண்தான். ''... நான்

1. அருள் சகோதரிகளின் பாசுரங்கள் எண். XI

இங்கு ஒரு பாறையின் மீது உட்காருகிறேன். என்னுடைய ஆன்மாவின் மீது சுதந்திரக் காற்று வீசுகிறது''[1] என்று பாடினாள்.

திருமதி ரைஸ் டேவிட்ஸ் இவ்வாறு கூறுகிறார்:[2]

''தனது நடமாட்ட சுதந்திரத்தைப் பெறுவதற்கு... அவர்கள், தமது பிந்திய கிறிஸ்துவ அருள் சகோதரிகளைப் போன்றே, அனைத்து சமூக அந்தஸ்தையும், அனைத்து குடும்ப வெற்றிகளையும் விட்டுக் கொடுத்தனர், அவர்கள் தங்களுடைய உலகை இழந்தனர். ஆனால் அதற்கு மாற்றாக அவர்கள், ஒட்டுணியாக இருப்பதற்கு பதிலாக, ஒரு தனிநபர் என்ற தகுதியை வென்றனர். ஒட்டுணியாக இருப்பது எவ்வளவு பாராட்டப்பட்டாலும், பேணிவளர்க்கப்பட்டாலும், பாதுகாப்பளிக்கப்பட்டாலும் ஒரு தனிநபர் தகுதி மேம்பட்டதே. 'மழிக்கப்பட்ட தலை, மேலங்கியால் போர்த்தப்பட்டு, தனியாகப் பிரித்துப் பார்க்கப்பட முடியாத உடை, தளர் வெளியாடை, ஆண் மதகுருவின் துணிகளால் இறுகக் கட்டப்பட்ட ஆடையுடன் கூடிய - சகோதரி சுதந்திரமாக வந்து போகலாம், வனத்தினூடே தனியாகப் பயணம் செய்யலாம் அல்லது மலைமுகட்டில் ஏறலாம்.''

பெண்களை பிக்குணிகளாவதற்கு அனுமதித்ததன் மூலம் புத்தர் அவர்களுக்கு சுதந்திரத்திற்கான பாதையைத் திறந்துவிட்டது மன்றி இன வேறுபாடின்றி அவர்கள்பால் கண்ணியத்தை, உயர்வைப் பெறவும் அனுமதித்தார். அவள் விடுதலை பெற்றதை திருமதி ரைஸ் டேவிட்ஸ் இவ்வாறு கூறுகிறார் :

''பாலினக் கருதல் இன்றி, ஒரு அறிவார்ந்த பிறவியாக, குறைந்தபட்சம் அவளுடைய சகோதரர் அரஹான்ட்ஸினால் அங்கீகரிக்கப்பட்டதால் அவள் மகிழ்ச்சியடைந்தாள். அந்த அளவில் அவள் ஆன்மீகச் சூழலை சுவாசித்தாள், பிடகாசில் ஆரியர்கள் என்று அழைக்கப்பட்ட மத மேட்டுக் குடியினருடன் அறிவுத் துறை ஒன்றிணைப்பை அவள் பகிர்ந்து கொண்டாள். அவர்களுடன் அவள், எல்லாவற்றையும் அவை மெய்யாக இருக்கும் வகையிலேயே காணும் சக்தியைப் பெற்றாள். இதை பௌத்தர்கள் விழிப்புடன் இருத்தல் என்றழைக்கின்றனர்.

1. அதே நூல், எண் XXIV
2. தெங்கதாவுக்கு முன்னுரை.

'பெண்ணின் இயல்பு ஆரியர்களாகிய நம்மை எவ்வாறு பாதிக்கிறது - இது குறித்து சோமா என்ற ஒரு பிக்குணி[1] இவ்வாறு கூறுகிறார்:

''ஊடுருவி அறியும் சக்தி நியதியை மெய்யாகவே புரிந்து கொள்வது எதைக் குறிப்பிடுகிறது? ஒருவரிடம் பின்வரும் கேள்வி நிச்சயமாக எழுகிறது: 'அத்தகைய விஷயங்களில் நான் ஒரு பெண்ணா அல்லது நான் ஓர் ஆணா? அப்படியெனில் நான் எதுவாக இல்லை? அத்தகைய ஒருவருடம் பேசுவதற்கு மாராதான் பொருத்தமானவர்!''

இத்துடன் முடிந்துவிடவில்லை. பெண்களை பிக்குணி களாவதற்கு அனுமதித்ததன் மூலம் புத்தர் ஆண்களுடன் சமத்துவத் திற்கான வழியை அவர்களுக்கு அவர் திறந்துவைத்தார். திருமதி ரைஸ் டேவிட்ஸ்[2] குறிப்பிட்டபடி ''பிக்குணிகள் பிக்குகளுக்கு நிரந்தரமாக தொழில்நுட்பரீதியில் ஜூனியர்களாக நியமிக்கப்பட் டனர் என்பது மெய்யே. அறிவு ரீதியிலும் கூடுதல் மேம்பட்ட தன்மை யிலும் ஒரு தேரி, மிக உயர்வான சகோதரத்துவத்துடன் சமத்து வத்தைக் கோரக்கூடும் என்பதும் அதே அளவு தெளிவானதாகும். இறைவணக்கப் பாடல்களில் ஓர் உதாரணம் வருகிறது, XXX, VIIல் இதில் பத்தா, மூலவருக்கே வாரிசும் (வழித்தோன்றல்) சமயத்தின் தலைவருமான மகத்தான கஸ்ஸப்பாவின் ஆன்மீக சாதனை யுடன் தன்னை இணைத்துக் கொள்கிறார். இது சம்பந்தமாக, புத்தர் கன்னித் தன்மைக்கு சிறப்பு ஊக்கம் எதுவும் தரவில்லையென்பது கவனிக்கத்தக்கது. அனைத்துப் பிரிவுப் பெண்களுக்கும் - திருமண மானவர்கள், திருமணமாகாதவர்கள், விதவைகள், விபசாரிகளுக் கும்கூட - தனது பாதையைத் திறந்து வைத்தார். அனைவரும் ஆண் களோடு சட்டத் தகுதி, சுதந்திரம், உயர்வு மற்றும் சமத்துவத்தை யும் பெறமுடியும்.''

## IV

இந்தியாவில் பெண்களின் நிலை - ஒரு காலத்தில் இருந்ததி லிருந்து பெரும் வீழ்ச்சியடைந்துள்ளது என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. பண்டைக் காலத்தில் ஆட்சி நிர்வாகக் கலையில் அவர்கள் ஆற்றிய பாத்திரம் குறித்து அதிகம் கூறமுடியாது. ஆனால் நாட்டின்

1. தோத்திரப் பாடல்கள், எண் XVI
2. தெரிகதாவுக்கான முன்னுரை, பி.பி. XVI - XXVII

அறிவுத்துறை மற்றும் சமூக வாழ்க்கையில் அவர்கள் ஒரு மிகவும் உயர்நிலையை வகிக்கவே செய்தார்கள் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

ஒரு காலத்தில் ஒரு பெண் உபநயனம் செய்து கொள்வதற்குத் தகுதியுடையவளாயிருந்தாள் என்பது அதர்வ வேதத்திலிருந்து தெளிவாகிறது. அதில், ஒரு பெண், தனது பிரம்மச்சரியத்தை முடித்த பின்னர் திருமணத்திற்குத் தகுதியுடையவராகிறார் என்று கூறப் பட்டுள்ளது. பெண்கள் வேத மந்திரங்களைத் திருப்பிக் கூற முடியும் என்பதும் வேதங்களைப் படிப்பதற்கும் பெண்கள் கற்றுக் கொடுக் கப்பட்டார்கள் என்பதும் ஷ்ரௌத்த சூத்திரங்களிலிருந்து தெளி வாகிறது. பெண்கள் குருகுலத்தில் (கல்லூரியில்) பங்கேற்றார்கள், வேதங்களின் பல்வேறு ஹாகாக்களை (பிரிவுகளை) கற்றார்கள், மற்றும் மீமாம்சாவில் நிபுணர்களாயினர் என்ற உண்மைக்கு பாணினி யின் அஷ்டாத்யாய் சான்று கூறுகிறது. பெண்கள் ஆசிரியர்களாக இருந்தார்கள், மாணவிகளுக்கு வேதங்களைக் கற்றுக் கொடுத் தார்கள் என்று பதஞ்சலியின் மகாபாஷ்யம் காட்டுகிறது. மதம், தத்துவம், உண்மை பற்றி ஆயும் கோட்பாட்டுத்துறை முதலிய மிகவும் மறைபொருளான விஷயங்கள் பற்றியும்கூட ஆண்களுடன் பெண்கள் பொது விவாதங்களில் ஈடுபடுவது பற்றிய பல சம்பவங் கள் உள்ளன. ஜனகருக்கும் சுலபாவுக்கும் இடையிலும், யக்ஞவல்கிய ருக்கும் கார்கிக்கும் இடையிலும், யக்ஞவல்கியருக்கும் மைத்ரே யிக்கும் இடையிலும், சங்கராச்சாரியருக்கும் வித்யாதாரிக்கும் இடை யிலுமான பகிரங்க விவாதங்கள் (மோதல்கள்) மனுவுக்க முந்திய காலத்தில் இந்தியப் பெண்கள் கற்பதிலும் கல்வியிலும் மிக உயர்ந்த சிகரத்திற்கு எட்ட முடியும் என்பதைக் காட்டுகிறது.

ஒரு காலத்தில் பெண்கள் உயர்வாக மதிக்கப்பட்டு வந்தார்கள் என்பதை மறுக்க முடியாது. பண்டைக் கால இந்தியாவில் மன்னரின் முடிசூட்டுவிழாவில் மிகவும் முக்கிய பங்காற்றிய ராணிகளில் அரசியாவார். இந்த சமயத்தில் மன்னர் மற்றவர்களுக்கு செய்தது போலவே அரசிக்கும் ஒரு பரிசு அளிக்கிறார் [1]. மன்னராக நியமிக்கப் பட்டவர் அரசிக்கு பெரும் மரியாதை செலுத்தியதோடு, கீழ்ச் சாதிகளைச்[2] சேர்ந்த தனது இதர மனைவிகளுக்கும் வணக்கம் தெரிவித்தார்.

1. ஜெய்ஸ்வால் - இந்திய ஆட்சிமுறை, பாகம் ii, பக்கம் 16.
2. அதே நூல், பக்கம் 17.

இதே முறையில், முடிசூட்டுவிழா முடிந்த பின்னர், மன்னர், கில்டுகளின் (பொது அமைப்புகளின்)[1] பெண் தலைவிகளுக்கும் வணக்கம் தெரிவிக்கிறார்.

இது உலகின் எந்தப் பகுதியிலும் பெண்களுக்கான ஒரு மிகவும் உயர்வான நிலையாகும். அவர்களின் வீழ்ச்சிக்கு யார் காரணம்? இந்துக்களுக்கு சட்டம் வழங்கியவரான மனுதான் இதற்குக் காரணம். இதற்கு வேறு எந்தப் பதிலும் இருக்க முடியாது. ஐயப்பாட்டுக்கு எத்தகைய இடமும் அளிக்காத வகையில், பெண்கள் சம்பந்தமாக மனு இயற்றிய, மற்றும் மனுஸ்மிருதியில் காணப் படுகிற சில விதிகளை (சட்டங்களை) நான் மேற்கோள் காட்டுகிறேன்.

I. 213 இந்த உலகில் ஆண்களை மயக்கி தவறான வழியில் செல்லத் தூண்டுவது பெண்களின் இயல்பாகும். அந்தக் காரணத்திற்காகவே, விவேகமுள்ளவர்கள் பெண் களுடன் சகவாசம் செய்யும்போது உஷாராயில்லாமல் ஒரு போதும் இருக்க மாட்டார்கள்.

II. 213 ஏனெனில், இந்த உலகில் பெண்கள் ஒரு முட்டாளை மட்டுமன்றி, ஒரு கல்விமானையும் பாதை தவறிச் செல்லச் செய்வதற்கும் மற்றும் தமது விருப்பத்திற்கும் கோபத்திற்கும் அடிமையாக்குவதற்கும் வல்லமை உள்ளவர்கள்.

II. 215 ஒருவர் தனது தாயாருடனோ, சகோதரியுடனோ அல்லது மகளுடனோ ஒரு தனிமையான இடத்தில் உட்கார்ந் திருக்கக்கூடாது; ஏனெனில் உணர்வுகள் சக்தி வாய்ந் தவை, ஒரு கல்விமானைக்கூட அடிமைப்படுத்திவிடும்.

IX. 14 பெண்கள் அழகை எதிர்பார்ப்பதில்லை, அது போன்றே வயதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை. அவன் ஓர் ஆணாக இருந்தால் போதும் என்று நினைக்கிறார் கள். அவர்கள், அழகுடைய ஓர் ஆணுக்கு மட்டுமன்றி, அழகற்றவருக்கும் தங்களை விட்டுக் கொடுக்கிறார்கள்.

IX. 15 ஆண்களின்பாலான தங்களுடைய வெறி ஆர்வத்தின் வாயிலாக, தங்களுடைய மாறத்தக்க மனோநிலையின் வாயிலாக, இயல்பான ஈவிரக்கமற்ற இயல்பின் வாயிலாக அவர்கள் - இந்த உலகில் எவ்வளவு கவனமாக பாதுகாப்புடன் வைக்கப்பட்டிருந்தாலும் தங்கள்

1. பக்கம், 82.

கணவன்மார்களிடம் விசுவாசமற்றவர்களாகி விடுகிறார்கள்.

IX. 16. உலகத்தைப் படைத்தவர் பெண்களை எவ்வாறு படைத்திருக்கிறார் என்பதைத் தெரிந்து கொண்டுள்ள நிலைமையில், ஒவ்வொரு ஆணும், அவர்களைக் காவல்காப்பதற்கு மிகவும் உறுதியாகத் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும்.

IX. 17. (அவர்களை உருவாக்கும்போது) கடவுள் பெண்களுக்கு அவர்களின் பதவி, நகைகள், ஆகியவற்றின் மீது அவர்களுக்குப் பிரேமையையும், மற்றும் தூய்மையற்ற விருப்பங்கள், ஆங்காரம், நேர்மையற்ற தன்மை, தீங்கான கெட்ட நடத்தை ஆகியவற்றை உடையவர்களாகவும் படைத்தார்.

மனு, பெண்களைப் பற்றி எவ்வளவு மோசமான எண்ணத்தைக் கொண்டிருந்தார் என்பதை காட்டுகின்றன. பெண்களுக்கு எதிரான மனுவின் சட்டங்கள் இந்தக் கருத்துடன் ஒத்தவையாகும்.

எந்த சூழ்நிலையிலும் பெண்கள் சுதந்திரமாக இருக்கக்கூடாது. மனுவின் கருத்தின்படி,

IX. 2. பகலிலும், இரவிலும் பெண்கள், ஆண்களையும், அவர்களின் குடும்பங்களுக்கும் சார்ந்திருப்பவர்களாகவே வைக்கப்பட்டிருக்க வேண்டும். அவர்கள் உணர்வுரீதியான களியாட்டங்களில் ஈடுபடும்போதும், அவர்கள் ஒருவருடைய கட்டுப்பாட்டின்கீழ் இருக்க வேண்டும்.

IX. 3. குழந்தைப் பருவத்தில் அவளுடைய தந்தை (அவளை) பாதுகாக்கிறார். இளமையில் அவளுடைய கணவன் (அவளை) பாதுகாக்கிறார்; முதிய வயதில் அவளுடைய மகன்கள் (அவளை) பாதுகாக்கிறார்கள்; ஒரு பெண் ஒருபோதும் சுதந்திரமாக இருப்பவளல்ல.

IX. 5. தீய மன இசைவுகளுக்கு எதிராக - அவை எவ்வளவு அற்பமாகத் தோன்றியபோதிலும் - பெண்கள் கண்காணிக்கப்பட வேண்டும்; அவற்றுக்கெதிராகத் தற்காப்பு செய்து கொள்ளப்படவில்லையெனில், அவை இரண்டு குடும்பங்களுக்குத் துயரத்தை ஏற்படுத்தும்.

IX 6. எல்லா சாதிகளின் உயர் கடமையை கவனத்தில் எடுத்துக் கொள்ளும்போது, பலவீனமான கணவர்களும்கூட தமது மனைவிகளைப் பாதுகாப்பதற்கு முயல வேண்டும்.

V 147. ஒரு சிறுபெண்ணோ, ஓர் இளம் பெண்ணோ, அல்லது வயதான பெண்ணும்கூட - தனது சொந்த வீட்டிலும் கூட - எதையும் சுதந்திரமாகச் செய்யக்கூடாது.

V 148. குழந்தைப் பருவத்தில் ஒரு பெண், தனது தகப்பனாருக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும், இளமைப் பருவத்தில் தனது கணவருக்கும், கணவர் இறந்ததற்குப் பின்னர், தனது மகன்களுக்கும் கட்டுப்பட்டு நடக்க வேண்டும், ஒரு பெண் ஒருபோதும் சுதந்திரமாக இருக்கக்கூடாது.

V 149. அவள் தனது தந்தை, கணவர் அல்லது மகன்களிடமிருந்து பிரிந்து செல்வதற்கு முயலக்கூடாது; அவர்களை விட்டுப் பிரிந்து செல்வதன் மூலம் அவள் இரு (தனது சொந்த மற்றும் தனது கணவனின்) குடும்பங்களையும் இகழ்ச்சிக்குள்ளாக்குவாள்.

பெண்ணுக்கு விவாகரத்து செய்து கொள்வதற்கு உரிமை இருக்கக்கூடாது.

IX 45. கணவன், மனைவியுடன் ஒன்றிணைவதாக பிரகடனம் செய்யப்பட்டுள்ளது. இதன் பொருள், ஒரு பெண் திருமணம் செய்து கொள்ளப்பட்டுவிட்டால் அதற்குப் பிறகு பிரிந்து செல்ல முடியாது என்பதே.

பல இந்துக்கள், மனுவின் விவாகரத்து சம்பந்தமான மனுவின் சட்டம் சம்பந்தமாக இதுதான் முழுக்கதையுமாகும் என்று இத்துடன் நின்று விடுகிறார்கள், திருமணத்தை ஒரு புனிதச் சடங்காக மனு கருதினார், அதனால் விவாகரத்தை அனுமதிக்கவில்லை என்ற சிந்தனையுடன் தமது மனச்சாட்சியைத் திருப்திப்படுத்திக் கொள்வதோடு இதைத் தொடர்ந்து வழிபட்டு வருகின்றனர். இது உண்மைக்குப் புறம்பானது என்று கூறத் தேவையில்லை. விவாகரத்துக்கு எதிரான அவருடைய சட்டம் ஒரு மிகவும் வேறுபட்ட உள்நோக்கத்தைக் கொண்டிருந்தது. இது ஒரு ஆணை ஒரு பெண்ணுடன் பிணைத்து விடுவதற்கல்ல. ஆனால் இது, பெண்ணை ஓர் ஆணுடன் பிணைத்துவைப்பதற்கும், ஆணை சுதந்திரமாக விடுவிப்பதற்குமாகும்.

ஏனெனில், மனு, ஓர் ஆணைத் தனது மனைவியைக் கைவிடுவதைத் தடுப்பததில்லை. உண்மையில் தனது மனைவியைக் கைவிடுவதற்கு அவர் அவனை அனுமதிப்பதோடு மட்டுமன்றி, அவன் அவளை விற்பதற்கும் அனுமதிக்கிறார். ஆனால், அவன் செய்வது என்னவெனில், மனைவி சுதந்திரமடைவதைத் தடுக்கிறார். இதுகுறித்து மனு கூறுவதைப் பாருங்கள்:

IX. 46. விற்பனையோ அல்லது நிராகரிக்கப்படுவதன் மூலமாகவோ ஒரு மனைவி தனது கணவனிடமிருந்து விடுதலையாவதில்லை.

இதன் பொருள் தனது கணவனால் விற்கப்பட்ட அல்லது நிராகரிக்கப்பட்ட ஒரு மனைவி, அவளை விலைக்கு வாங்கிய, அல்லது நிராகரிக்கப்பட்டபின் அவளைத் தன் வசப்படுத்திக் கொண்ட மற்றொருவருக்கு ஒரு போதும் சட்டப்பூர்வமான மனைவியாக முடியாது என்பதேயாகும். இது அட்டூழியமானதல்ல என்றால், வேறு எதுவும் அட்டூழியமானதாக இருக்க முடியாது. ஆனால் தனது சட்டத்தை உருவாக்குகையில், நீதி அல்லது அநீதி என்ற கருத்தோட்டங்களைப் பற்றி மனு கவலைப்படவில்லை. பௌத்த சமய ஆட்சியின்கீழ் பெண்களுக்கு இருந்த சுதந்திரத்தைப் பறிப்பதற்கு அவர் விரும்பினார். சுதந்திரத்தைக் கண்டு மனு ஆத்திரமடைந்து, அதற்கு முற்றுப்புள்ளி வைப்பதற்காக அவர் அவளுடைய சுதந்திரத்தைப் பறித்தார்.

சொத்து சம்பந்தப்பட்ட வரையிலும் ஒரு மனைவியை ஓர் அடிமையின் நிலைக்கு மனு தாழ்த்திவிட்டார்.

IX. 416. ஒரு மனைவி, ஓர் மகன், ஓர் அடிமை - இந்த மூவருக்கும் சொத்தில்லை என்று அறிவிக்கப்பட்டது. அவர்கள் சம்பாதிக்கும் செல்வம், அது யாருக்கு சொந்தமானதோ அவருக்காகப் பெறப்படுகிறது.

ஒரு மனைவி விதவையாகும்போது, அவளுக்கு பராமரிப்புச் செலவை ஜீவனாம்சத்தை மனு அனுமதிக்கிறார். அவள் அவளுடைய குடும்பத்திலிருந்து தனித்திருந்தாளேயானால், அவளுடைய கணவனின் சொத்தில் அது விதவையின் பாதுகாப்புக்குரிய சொத்தாகிறது. ஆனால் சொத்தின் மீது அவளுக்கு எந்த ஆதிக்கத்தையும் மனு ஒருபோதும் அனுமதிப்பதில்லை.

மனுவின் சட்டங்களின்கீழ் ஒரு பெண் கொடிய உடலுக்கு ஊறுவிளைவிக்கும் தண்டனைக்குரியவளாகிறாள். தனது மனைவியை அடித்துத் தன்புறுத்துவதற்கு அவளுடைய கணவனை மனு அனுமதிக்கிறார்.

VIII. 299. தவறுகள் செய்த ஒரு மனைவி, ஒரு மகன், ஓர் அடிமை, ஒரு மாணவர், ரத்த சம்பந்தமுடைய ஒரு இளைய சகோதரர் ஆகியோர் ஒரு கயிற்றினாலோ, அல்லது ஒரு மூங்கில் கழியினாலோ அடிக்கப் படலாம்.

மனுவின் விதிப்படி ஞானம் (அறிவு) பெறுவதற்கு ஒரு பெண்ணுக்கு உரிமை இல்லை. வேதம் படிப்பதற்கு அவளுக்கு உரிமை இல்லை என்று மனு தடை செய்கிறார்.

II. 66. ஒரு பெண்ணுக்கும்கூட சமஸ்காரங்களை நிறை வேற்றுவது அவசியமாகும், ஆனால் அவள் வேத மந்திரங்களைக் கூறாமல் அவற்றை நிறைவேற்ற வேண்டும்.

பலியிடுவது மதத்தின் உள்ளார்ந்த ஆத்மாவாகும் என்று பிராமணீயம் கூறுகிறது. ஆனால் பலியிடும் ரைவேத்தியத்தைப் பெண்கள் செய்யக் கூடாது என்று மனு தடை செய்கிறார். மனு இவ்வாறு விதிக்கிறார்:

XI. 36-37 வேதங்களில் விதிக்கப்பட்டுள்ள அன்றாட நைவேத் தியங்களை ஒரு பெண் செய்யக்கூடாது. அவள் அதைச் செய்தால் நரகத்திற்குப் போவாள்.

அத்தகைய நைவேத்தியங்களைச் செய்வதை அவளுக்கு இயலாமல் செய்வதற்கு, அவள் ஒரு பிராமணப் புரோகிதரின் உதவி யையும் சேவைகளையும் பெற முடியாமல் மனு தடை செய்கிறார்.

IV. 205-206. பெண்கள் செய்யும் நைவேத்தியத்தின்போது வழங்கப்படும் உணவை ஒரு பிராமணன் ஒருபோதும் சாப்பிடக்கூடாது,. கடவுளுக்கு ஏற் புடையதல்ல. எனவே, அவை தவிர்க்கப்பட வேண்டும்.

இறுதியாக ஒரு பெண்ணின் முன் மனு வைப்பதற்கு முயன்ற வாழ்க்கை லட்சியத்தைப் பற்றி ஒரு வார்த்தை. அவருடைய சொற்களிலேயே அதைப் பார்க்கலாம்:-

V 151. அவளுடைய தந்தை அவளை அல்லது அவளுடைய சகோதரர், தந்தையின் அனுமதியின்பேரில் அவளை யாருக்குத்தாரை வார்த்துக் கொடுக்கிறாரோ அவர் உயிருடனிருக்கும் வரையில் அவள் அவருக்குக் கீழ்ப் படிந்து நடக்க வேண்டும்; அவர் மரணமடைந்தால், அவருடைய நினைவுக்கு அவள் அவமரியாதை செய்யக் கூடாது.

V 154. நல்ல பண்புகள் இல்லாத போதிலும், அல்லது கணவன் வேறிடங்களில் இன்பம் தேடினாலும் சிறந்த குணங் கள் இல்லாதவனாக இருந்த போதிலும் ஒரு விசுவாச மான மனைவி கணவனைக் கடவுளைப் போன்று இடைவிடாது வழிபட்டு வரவேண்டும்.

V 155. பெண்கள், தங்களுடைய கணவர்களையல்லாது எந்தப் படையல் வைப்பதோ, எந்த சபதம் மேற்கொள்வதோ, எந்த உபவாசம் மேற்கொள்வதோ செய்யக்கூடாது. ஒரு மனைவி தனது கணவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்தால், அந்தக் காரணத்திற்காகவே அவள் சுவர்க்கத் தில் போற்றப்படுவாள்.

பின்னர் மிகவும் பொருக்குமணியான வாசகங்கள் வருகின்றன. பெண்களுக்கு மனு வரையறுத்துக் கூறுகிற இந்த லட்சியத்தின் சாராம்சம் இதுதான்:

V 153. புனிதமான மந்திரங்கள் உச்சாடனத்தோடு அவளைத் திருமணம் செய்துகொண்ட கணவன் எப்போதும், இந்த உலகிலும், மறுஉலகத்திலும் அவனுடைய மனைவிக்கு மகிழ்ச்சியின் மூலாதாரமாக இருக்கிறான்.

V 150. அவள் எப்போதும் மகிழ்ச்சியுடனிருக்க வேண்டும், தனது வீட்டு விவகாரங்களை நிர்வகிப்பதில் சாமர்த் தியமாக இருக்க வேண்டும், தனது பாத்திரங்களை சுத்தம் செய்வதில் கவனமாக இருக்க வேண்டும், செலவு செய்வதில் சிக்கனமாக இருக்கவேண்டும்.

இதை ஒரு பெண்ணுக்கு மிகவும் உன்னதமான லட்சியம் என்று இந்துக்கள் கருதுகின்றனர்!!!

பெண்களின் இயலாமைகள் என்ற அவருடைய கம்பீரமான நினைவுச் சின்னத்தின் மீது ஓர் அடையாளக் கல்லை வைப்பது போன்று மனு, ஒரு பெண்ணைக் கொல்வதானது ஓர் உபபாதகம் மட்டுமே, அதாவது ஓர் அற்பமான குற்றமேயாகும் என்ற ஒரு புதிய விதியை பிரகடனம் செய்தார்.

XI. 67. மது (அருந்துதல்), பெண்கள், சூத்திரர்கள், வைசியர்கள் அல்லது க்ஷத்திரியர்கள் மற்றும் கடவுள் நம்பிக்கை யில்லாதவர்களைக் கொல்வது ஆகிய யாவும் சிறிய குற்றங்களேயாகும்.

ஒரு சூத்திரன், வைசியன் அல்லது ஒரு க்ஷத்திரியனைக் கொல்வது ஒரு உபபாதகம் மட்டுமே என்று ஏன் மனு கூறினார் என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும். ஒரு பிராமணன் இவர்கள் அனைவருக்கும் மேலானவன் என்றும், ஒரு பிராமணனைக் கொல்வதுதான் மகா பாதகம் என்றும் நிலைநிறுத்தவதற்கு அவர் முயன்று கொண்டிருந்தார். ஆனால் அதே விதியைப் பெண்களுக்கு ஏன் அவர் பிரயோகப்படுத்தவில்லை? ஏனெனில் மனுவின் பார்வை யில் ஒரு பெண் ஒரு மதிப்பும் இல்லாத ஒரு பொருள் என்பதே இதற்குக் காரணமாகும்.

இந்த மேற்கோள்களை முன்னிட்டு, இந்தியாவில், பெண்கள் இழிவுபடுத்தப்பட்டிருப்பதற்கு மனுவே காரணமாகும் என்பதை யாராவது சந்தேகப்பட முடியுமா? பெரும்பாலான மக்கள் இதை ஒரு வேளை அறிந்திருக்கக்கூடும். ஆனால் அவர்களுக்கு இரண்டு விஷயங்கள் தெரியாது என்று தோன்றுகிறது. மனுவிடம் விநோத மானது என்ன இருக்கிறது என்பது அவர்களுக்குத் தெரியாது. பெண் களைப் பற்றிய மனுவின் சட்டங்களில் புதியவையோ அதிர்ச்சி யளிக்கத் தக்கவையோ ஒன்றுமில்லை. இந்தியாவில் பிராமணீயம் தோன்றியது முதல் பிராமணர்களின் கருத்துக்கள் இவையேயாகும். மனுவுக்கு முன்னால் அவை சமூகத்தத்துவம் என்ற ரீதியில் மட்டுமே இருந்தன. ஒரு சமூகத் தத்துவமாக இருந்ததை அரசின் சட்டமாக மாற்றியதுதான் மனு செய்த வேலையாகும். பெண்களின் மீது இந்த இயலாமைகளை மனு சுமத்துவதற்கு இட்டுச் சென்ற காரணத்தை அவர்கள் அறியாதது இரண்டாவது விஷயமாகும். புத்தரின் சமயத்தில்

வந்து சேர்ந்து அதன் மூலம் பிராமணீய மதத்தின் அஸ்திவாரத்தையே தகர்ப்பதற்குப் பெரும் கும்பலாக வந்த ஆரிய சமுதாயத்தின் இரு முக்கிய பகுதிகள் சூத்திரர்களும் பெண்களுமாவர். புத்த சமயத்தின் திசையில் பெரும் எண்ணிக்கையில் வந்து கொண்டிருந்த பெண்களின் பிரவாகத்தைத் தடுத்து நிறுத்தவதற்கு மனு விரும்பினார்.

இதற்காகத்தான் மனு இந்த இயலாமைகளைப் பெண்களின் மீது சுமத்தி, அவர்களை நிரந்தரமாக முடமாக்கினார். இதை சந்தேகிப்பவர்கள் மனு ஸ்மிருதியில் அடங்கியுள்ள கீழ்வரும் ஆணைகளை கவனித்துப் பார்க்கட்டும்:-

V. 88. ஒரு நபர் இறந்தபோது செய்யப்படும் ஈமச் சடங்குகளும் இறுதிக் காரியங்களும் - அவர் கலப்பு மணத்தின் பேரில் பிறந்தவராக இருந்தாலோ, துறவு வாழ்க்கையில் ஈடுபட்டவராக இருந்தாலோ, தற்கொலை புரிந்து தமது வாழ்க்கையை முடித்துக் கொண்டவராக இருந்தாலோ - அந்த ஈமக் கடன்கள் வாபஸ் பெறப்படும்.

V. 89. மதப் பற்றில்லதவர்களின் குழுவில் சேர்ந்த பெண்கள், குழந்தை தாயின் கருவிலிருக்கும்போதே அதற்குக் காயம் ஏற்படுத்திய பெண்கள் அல்லது தமது கணவன்மார்களுக்குக் காயம் ஏற்படுத்திய பெண்கள், கூடுதல் சுதந்திரமாகத் திரிந்தவர்கள் மற்றும் ஒயின் குடிக்கிறவர்கள் ஆகிய பெண்களுக்கும் ஈமச்சடங்குகள் ரத்து செய்யப்படும்.

இந்த ஆணை, மற்றவர்களோடு, அதாவது (1) துறவு மனப்பான்மை உடையவர்கள் (2) மதப் பற்றில்லாதவர் குழுவினரோடு சேர்ந்த பெண்களுக்கு எதிராகக் குறிவைத்துள்ளதாகும். இந்த ஆணையில் துறவு மனப்பான்மையானது பரிவர்ஜகர்களைக் குறிப்பிடுகிறது- அதாவது, தமது இல்லங்களை விட்டு வெளியேறி சந்நியாசத்தை மேற்கொண்டவர்கள், மற்றும், மதப் பற்றில்லாதவர் குழுவைப் பற்றிக் குறிப்பிட்டது, புத்த சமயம் தான் மனுவின் மனதிலிருந்தது என்பதில் சிறிதும் ஐயமில்லை. எனவே ஒரு துறவிக்கு, அல்லது மதப்பற்றில்லாத குழுவில் சேர்ந்து கொண்ட ஒரு பெண்ணுக்கு ஈமச் சடங்குகள் நடத்தப்படக் கூடாதென்று மனு அறிவிக்கும்போது, புத்தரின் சமயத்தில் சேர்ந்து கொண்ட ஒரு குடும்பத்தின் நபருக்கு - ஆணாக இருந்தாலும் அல்லது பெண்ணாக இருந்தாலும் -

ஈமச் சடங்குகள் செய்யப்படுவதைத் தடை செய்வதையே மனு செய்துள்ளார். வேறு சொற்களில் கூறுவதெனில் அவர்கள் கட்டவிழ்த்து விடப்பட்டவர்கள், இனி ஒரு போதும் குடும்பத்துடன் சேர்ந்தவர்களல்ல என்றே கருதப்பட வேண்டும் என்று அவர் விரும்பு கிறார். மனுதான் புத்த சமயத்திற்கு மிகப் பெரிய எதிர்ப்பாளர் பெண்களுக்கு எதிராகப் பல அநீதிகளை அவர் சுமத்தியதன் ரகசியம் இதுவேயாகும். ஏனெனில், புத்த சமயத்தின் படையெடுப்பிலிருந்து குடும்பம் பாதுகாக்கப்பட வேண்டுமெனில், பெண்ணைத்தான் கட்டுப்பாட்டுக்குள் அடக்கி வைக்க வேண்டும் என்பதை அவர் அறிந்திருந்தார். அதை அவர் செய்தார். எனவே, இந்தியாவில் பெண்ணின் வீழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்குமான எல்லாப் பொறுப்பும் மனுவின் மீதுதான் சுமத்தப்பட வேண்டுமேயன்றி, புத்தரின் மீது அல்ல.

ஒரு சில பக்கங்களின் எல்லைக்குள், இந்துப் பெண்ணின் எழுச்சி மற்றும் வீழ்ச்சியின் வரலாற்றை எடுத்துக் காட்டுவதற்கு நான் முயன்றுள்ளேன் அவர்களின் வீழ்ச்சிக்கு யார் காரணம், அவர் ஏன் அதை ஏற்படுத்தினார் என்பது சம்பந்தமான விளக்கத்தைத் தருவதற்கும் நான் முயன்றுள்ளேன். தப்பெண்ணம் (துவேஷம்) இல்லாத மற்றும் பார்பட்சமில்லாத ஒவ்வொருவரும் பெண்கள் சம்பந்தமான சோகத்திற்குப் பொறுப்பானவர் புத்தர் அல்ல என்பதை உணர்வார்கள் என்று நான் நம்புகிறேன். ஆனால், உண்மை யில் பெண்ணை உன்னதமானவளாக்குவதற்கு புத்தர் முயன்றார் என்றால், அது அவளை ஆணின் மட்டத்திற்கு உயர்த்துவதற்குத்தான்.[1]

● ● ●

1. 'மகாபோதி' சஞ்சிகை, 1951 மே-ஜூன், தொகுதி 59, பக். 137 - 151.

# 19

# மகான்களின் இலக்கியம் மனிதனின் ஆன்மீக மேம்பாட்டுக்கு உதவ முடியும்

*அவுரங்கபாதில் ஏகநாத் ஆராய்ச்சிக் கழகம் ஏற்படுத்தப் பட்டிருப்பதை அறிய நான் மகிழ்ச்சியடைகிறேன். என்னுடைய இளமைப் பிராயத்தில், மகாராஷ்டிர மகான்களின் இலக்கியப் படைப்புகளால் நான் மிகவும் கவரப்பட்டேன். இந்த இலக்கியத்தைப் படிப்பதன் மூலம் மனிதனின் ஆன்மீக மேம்பாட்டுக்கு எவ்வளவு மகத்தான பங்களிப்பு செய்யப்படுகிறது என்பதை நான் கூற முடியும். இந்தக் கழகம் எல்லா வெற்றிகளும் பெறுவதற்கு நான் ஆசி கூறுகிறேன். மேலும், மக்கள் கல்விக் கழகத்திலிருந்து அனைத்து உதவிகளையும் நான் வாக்குறுதியளிக்கிறேன்.*

*அவுரங்கபாத்*
*2-9-1951* *(ஒப்பம்)* ***பி.ஆர். அம்பேத்கர்.***

*(ஏகநாத் தர்ஷன் (மராத்தி) தொகுதி 1, திரு.ஏகநாத், சன்ஷோதின் மந்திர், 128, மராத்வாடா, சுல்தான் பஜார், ஹைதராபாத், 1952)*[1]

● ● ●

---

1. *மறுபதிப்பு : கைர்மோட், தொகுதி 10, பக்.14*

# 20

## சுருக்கம்

# ஒதுக்கப்பட்ட மக்கள்

**பி.ஆர். அம்பேத்கர்,**
*எம்.ஏ., பிஎச்.டி., டி.எஸ்சி.*
*பார்-அட்-லா.*

*சாதி ஒழிப்பு நூலாசிரியர்*

---

*''ராஜ்கிருஹா''*
*தாதர்,*
*பம்பாய் - 14.*

# ஒதுக்கப்பட்ட மக்கள்

## பொருளடக்கம்

# பொருட் சுருக்கம்

## அத்தியாயம் 1

## பழிகேடான ஒரு நாகரிகம்

I மற்றொரு குறுக்கு - வெட்டுப் பார்வை

II நலிவுற்ற வர்க்கங்கள் - (அ) தொல்கால பழங்குடிகள், (ஆ) குற்ற பரம்பரையினர் (இ) தீண்டப்படாதவர்கள்

III இந்து நாகரிகத்தினால் பாதிக்கப்பட்ட அவர்களது நிலை

IV இந்த வர்க்கங்களின் பிரச்சினைகளிலான வேறுபாடு

## அத்தியாயம் 2

## ஏற்ற, இறக்க சமூக அமைப்பின் கொடுமை

I இந்து சமூக ஒழுங்கமைப்பு

II ஏற்ற இறக்கமும் அசமத்துவமும்

III அதனுடைய எதார்த்தம்.

IV அதனுடைய அநீதி (முறைகேடு)

## அத்தியாயம் 3

I தீண்டப்படாதாரின் மக்கட் தொகை - அறியாத அம்சம்

II 1911ம் ஆண்டின் மக்கட் தொகை கணக்கெடுப்பும், தனியாகக் கணக்கெடுப்படுவதன் முதல் முயற்சியும்.

III 1911 மக்கட் தொகை விவரங்களின் ஊர்ஜிதம்

IV லோதியன் கமிட்டியும் ''தீண்டப்படாதார் வேண்டாம்'' என்ற இந்துக்களின் கூக்குரலும்

V கூக்குரலுக்கான காரணங்கள்

VI பிற்படுத்தப்பட்ட வர்க்கங்கள் மற்றும் முஸ்லீம்களின் மனப்போக்கும்

## அத்தியாயம் 4

## ஒரு 'விசா'வுக்காகக் காத்திருத்தல்

I தூய்மையற்றதும் தீய அறிகுறியும்

II தீண்டாமையும் இந்துக்களும்

III தீண்டாமையும் பார்சிகளும்

IV தீண்டாமையும் முஸல்மான்களும்

V உற்றார் உறவினராக இருந்தும் மனிதனோ சகோதரனோ அல்ல.

## அத்தியாயம் 5

## தீண்டப்படாதாரின் எழுச்சி

I நீண்டகாலத் துன்ப துயரம்

II சாலைகளைப் பயன்படுத்துவதற்குள்ள உரிமைக்கான போராட்டம்

III தண்ணீர் எடுப்பதற்கு உள்ள உரிமைக்கான போராட்டம்

IV கோயில்களில் வழிபடுவதற்குள்ள உரிமைக்கான போராட்டம்

V ஒரு தூய்மையான வாழ்க்கைக்கான போராட்டம்.

## அத்தியாயம் 6

## ஒதுக்கப்பட்ட நிலையில்

I தீண்டப்படாதாரின் எழுச்சி குறித்து இந்துக்களின் பிரதிபலிப்பு

II சட்டமீறலுக்குக் கொடிய அடக்குமுறை

III தீண்டப்படாதார் - ஒரு பலவீனமான சக்தி

IV வெட்கமின்றி ஒருதலைபட்சமாக செயல்படும் அதிகாரிகள்.

V பீரங்கிகளின் வாயடைத்தல்

VI ஒரு புதிய வகைப்பட்ட தண்டனை

## அத்தியாயம் 7

## சட்ட மீறல் ஏன் சட்டபூர்வமானது?

I தர்மத்திற்காக அதர்மம்

II மனுவும் தர்மமும்

**அத்தியாயம் 8**

**நேரிணை வர்க்கங்கள்**



**அத்தியாயம் 9**

**அடிமைகளும் தீண்டாமையும்**



**அத்தியாயம் 10**

**ஒரு நிரந்தரமான மெய்ம்மை**



**அத்தியாயம் 11**

**தீண்டப்படாதாரும் பிரிட்டிஷ் ஆட்சியும்**

## அத்தியாயம் 12

## இந்து சீர்திருத்தவாதிகள் செயலில்



## அத்தியாயம் 13

## தீண்டப்படாதவர்கள் கிறிஸ்தவர்களாதல்



## அத்தியாயம் 15

## தீண்டப்படாதாரும் அவர்களின் தொடக்கமும்

# அத்தியாயம் 16

## தீண்டப்படாதாரும் அவர்களின் எதிர்காலமும்

I உள்ளுக்குள் அல்லது வெளியில்

II ஓர் ஆன்மீக இல்லம் என்ற வகையில் இந்துமதம்

III கீதையும் தீண்டப்படாதோரின் நம்பிக்கையும்



# 21

# மகர்கள் : அவர்கள் யார், எவ்வாறு அவர்கள் தீண்டப்படாதார் ஆயினர்?

இந்த ஆவணத்தில், இந்தக் கேள்விகளை எழுப்புவதற்கு நான் உத்தேசித்துள்ளேன். மற்றும், அவற்றுக்கு பதிலளிப்பதற்கும் முயல்கிறேன். என்னுடைய மதிப்பீட்டில் அவை மிகவும் பொருத்தமான விடைகள் என்றும் கருதுகிறேன். அந்தக் கேள்விகள் இவையே (1) மகர்கள் யார்? (2) அவர்கள் ஏன் கிராமத்திற்கு வெளியில் வசிக்கிறார்கள்? மற்றும் (3) அவர்கள் ஏன் தீண்டப் படாதவர்கள் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளனர்?

★ ★ ★

## I

**மகர்கள் என்பர்கள் யார்?**

'மகாராஷ்டிரர்' என்ற சொல்லை 'மகர்' என்று சொல்லிலிருந்து திரு.வில்சன் உருவாக்கினார்; மேலும் மகாராஷ்டிரா என்றால் மகர்களுக்குச் சொந்தமான நாடு என்று பொருள் கூறினார். மகர்கள் என்ற சொல்லானது ''குஜராஷ்டிரா'' - குஜர்களின் நாடு, மற்றும் 'சௌராஷ்டிரர்' - சௌரஜ்களின் நாடு - என்பதைப் போன்று பெறப்படுகிறது. மகர் என்ற இந்த சொல்லைப் பெறுவதற்கு இரு வெவ்வேறு காரணங்களினால் ஆட்சேபனை தெரிவிக்கப்படுகிறது. ஒரு ஆட்சேபனையானது, மகாராஷ்டிரா என்ற சொல்லானது மகர்களின் நாடு என்று பொருட்படுவதில்லை என்றும் மற்றும் மகத்தான நாடு என்பதே அதன் பொருள் என்ற கருத்தை ஆதாரமாகக் கொள்கிறது. இந்த சொல் பெறப்படுவதற்கு இரண்டாவது ஆட்சேபணை, மகர்கள் தற்பொழுது சமூக அந்தஸ்தில் மிகவும் கீழான நிலையில் இருக்கிறார்கள்; அவர்கள் வரலாற்றின் போக்கில் எந்த சமயத்திலாவது, நாட்டின் ஆட்சியாளர்கள் என்ற உயர்ந்த நிலையில் இருந்தார்கள் என்று கொள்ள முடியாது

(குறிப்பு: கீழே குறிப்பிடப்படும் அட்டவணை கைப் பிரதியில் காணப்படவில்லை - ஆசிரியர்கள்)

என்ற வாதத்தை ஆதாரமாகக் கொள்கிறது. திரு.வில்சன் முன் வைத்திருக்கிற, இந்த சொல் பெயர்ப்பு இரண்டு வெவ்வேறு காரணங்களுக்காக ஆதரிக்கக் கூடியதாக இல்லை என்பது என்னுடைய கருத்தாகும். வில்சன் கூறியுள்ள இந்த சொல் பெயர்ப்பை நிராகரிப்பதற்கு எனக்கு ஆதாரமாயுள்ள முதலாவது காரணம் கீழ் வருமாறு : மகாராஷ்டிரா என்றால் மகர்களின் நாடு என்ற பொருளாகும் என்றால், நாட்டின் பிற மக்களினின்று வேறுபட்ட சமூகமாக உள்ள மகர்கள் மிகவும் பண்டைக் காலத்திலிருந்து இருந்திருக்க வேண்டும். வரலாற்றில் அந்தப் பெயரால் அறியப்பட்டிருந்திருக்க வேண்டும். ஆனால், மகர்கள் வரலாற்றில் மகர்கள் என்ற பெயரால் அறியப்பட்ட சமூகமாக இருந்திருக்கிறார்கள் என்பதற்கு ஏதாவது சான்று இருக்கிறதா? பம்பமாய் மாகாணத்தை வைத்து மட்டும் பார்க்கும்போது, தீண்டப்படாத வர்க்கங்களைச் சேர்ந்த மூன்று பிரதான சமூகங்கள் (1) மகர்கள், (2) சம்பாக்கள், மற்றும் (3) மாங்குகள். இவர்களில் மகர்கள்தான் மிகப்பெரிய பகுதியினர். மாங்குகளும் சம்பார்களும் இருந்துவரும் சமூகங்களாக வரலாற்றில் அறியப்பட்டுள்ளபோது, எந்த இடத்திலும் மகர்கள் என்ற சமூகம் பற்றிக் குறிப்பிடவேயில்லை என்பது அசாதாரணமாகும். மனுவை மீண்டும் திருப்பிப் பார்க்கும்போது, அவரது காலத்தில் தீண்டப்படாத சமூகங்கள் என்று உணரப்பட்ட சில வர்க்கங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அவர்களில் சம்பாக்கள் தீண்டப்படாத சமூகம் என்று திட்டவட்டமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மாங்குகளைப் பற்றி மனு குறிப்பிடவில்லை. ஏனெனில் மனுஸ்மிருதியின் நூலாசிரியருக்குத் தெரிந்துள்ள பிரதேசத்தில் ஒரு வேளை மாங்குகள் இல்லாமலிருந்திருக்கலாம். ஆனால் புத்த சமய இலக்கியத்தில் மாங்குகள் மதங்கர்கள் என்ற பெயரில் ஒரு தனி சமூகம் இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது அனைவருக்கும் நன்கு தெரிந்துள்ளது. ஆனால் மனுஸ்மிருதியிலோ அல்லது பௌத்த இலக்கியத்திலோ மகர்கள் என்ற ஒரு சமூகம் இருந்ததாக யாதொன்றும் குறிப்பிடப்படவில்லை. இந்தப் பண்டைய வரலாற்றில் (இலக்கியத்தில்) மகர்கள் பற்றிக் குறிப்பிடப்படவில்லை என்பது மட்டுமன்றி, மிகவும் நவீன காலத்தன் பிந்திய ஸ்மிருதிகளிலும் ஒரு சமூகம் என்ற வகையில் மகர்கள் பற்றிக் குறிப்பிடப்படவில்லை. உண்மையில், முஸ்லீம்கள் இந்தியாவிற்குள் வருகின்ற வரையிலும், மகர் என்ற சொல்லை யாரும் எங்கும் காணவில்லை. தியானேஸ்வரியில் தான் ஒரே ஒரு தடவை அந்த சொல் கூறப்பட்டுள்ளது. அது கி.பி.100ல் அவருக்கு முன்பாக, மகர் என்ற சொல் இல்லவே இல்லை. இதிலிருந்து நாம் என்ன முடிவுக்கு வருவது? பண்டைக் காலத்தில்

தியானேஷ்வரிக்கு முன்னால், மகர் என்ற சமூகமே இருக்கவில்லையா? அல்லது, அப்பொழுது ஒரு சமூகம் இருந்தது, அதற்கு வேறு பெயர் இருந்தது என்று நாம் கொள்ளலாமா? எப்படியிருந்த போதிலும், மகர் என்ற பெயர் இல்லாதிருந்ததானது திரு.வில்சனின் கருத்துக்கு எதிராக வலுவான ஆதாரத்தைக் கொண்டுள்ளது. மகர் என்ற சொல் அறியப்படாமலிருந்ததெனில், நாட்டுக்குக் கொடுத்த பெயருக்கும் அது அடிப்படையாக இருந்திருக்க முடியாது.

திரு.வில்சனின் கருத்தை நிராகரிப்பதற்கு என்னை இட்டுச் செல்கிற இரண்டாவது காரணம், மகர் சமூகத்தில் ஒருவர் காண்கிற இன மரவுச் சின்னங்களிலிருந்து (விலங்கு அல்லது வேறு இயற்கைப் பொருள்) எழுகின்ற எண்ணங்களை அடிப்படையாகக் கொண்டதாகும். திரு.நெல்சனின் தற்காலிக ஆதாரத்தை சரியானதென்று ஒருவர் எடுத்துக் கொள்வதெனில், மகர்கள் ஒரு பூர்வீக இனம், ஆரியர்கள் இந்த நாட்டுக்குள் வருவதற்கு முன்னால், தற்பொழுது மகாராஷ்டிரம் என்று அறியப்படும் நாட்டில் வசித்து வந்தார்கள் என்ற முடிவுக்குத்தான் அவசியமாகவே வர வேண்டிய தேற்படும். அத்தகைய ஒரு முடிவு சரியானதல்ல (ஆதாரமற்றது) என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன்; இதற்கான காரணங்களை மகர்கள் இந்த மாகாணத்தின் பூர்வீக வர்க்கங்களைச் சேர்ந்தவர்கள் என்று கூறுகின்றவர்களால் பூரணமாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. அறிவார்ந்த வாதச் சங்கிலியின் முதற்படியாக, என்னுடைய கருத்துக்கு ஆதரவாக நான் பின்வருவதை சார்ந்து நிற்கிறேன்:

ஒரு முக்கியமான விவரத்தை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன் - மகர்கள் இல்லாத இடத்தில் மராட்டியர்களும் இல்லை, மற்றும் எங்கெங்கு மகர்கள் இருக்கிறார்களோ அங்கு மாராட்டியர்களும் உள்ளனர். இந்த இணைப்பு வெறும் தற்செயலாக ஏற்பட்டதல்ல, இந்த இணைப்பு ஒருங்கிணைந்ததாகும். இதற்கு மற்றொரு சான்றும் ஆதாரமாக இருக்கிறது. இதையும் வழக்கமாக மனிதயியல் மாணவர்கள் காணாமல் விட்டுவிடுகிறார்கள். மராட்டியர்கள் ஒரு குல அமைப்பைக் கொண்டிருந்தனர் என்பது தற்பொழுது நன்கு அறியப்பட்டுள்ளது. அவர்கள் தங்களுடைய குலங்கள் என்றழைக்கப்படுவதைக் கொண்டுள்ளனர். ஒரு குலமரபுச் சின்னம் என்று அழைக்கப்படுவதையும் அவர்கள் கொண்டுள்ளனர். குலம் மற்றும் குல மரவுச் சின்னத்தின் முக்கியத்துவம் மனிதயியல் ஆராய்ச்சி மாணவர் ஒவ்வொருவருக்கும் நன்றாகத் தெரியும். ஒரு பொதுவான குலமும் ஒரு பொதுவான குல மரபுச் சின்னமும்

குருதித் தொடர்பை (குடும்ப உறவை) சுட்டிக் காட்டுவதாகும். இதை மனதிற் கொண்டு, மகர்கள் மற்றும் மராட்டியர்கள் இடையில் குலங்களின் ஒப்பீடு ஒரு மிகவும் குறிப்பிடத்தக்க பயனை அளிக்கிறது.

அந்த அட்டவணையை ஒரு கணம் பார்த்தால், மராட்டியர் களிடம் இல்லாத குலம் மகர்களிடம் காணப்படாத குலம் மராட்டி யர்களிடம் இல்லை என்பதையும் காணலாம். பொதுவான குலம், குருதித் தொடர்பை சுட்டிக்காட்டுவதாகும் என்ற முன்மொழி உரைக்கு ஆதரவாக மனித இன ஆய்வை சார்ந்து நிற்க முடியு மென்றால் அப்பொழுது மகர்களும் மராட்டியர்களும் குருதித் தொடர்புடைய ஒரு சமூகமாகும், மகர்கள் ஒரு பூர்வீக சமூகம் என்று ஒதுக்கித் தள்ளிவிட முடியாது; மராத்தியர்களும் ஒரு பூர்வீக சமூகமாகும் என்று சொல்லும் அளவிற்கு நாம் தயாராயிருந்தால் தான் அவ்வாறு கூறமுடியும்.

மராத்தியர்கள் ஓர் ஆரிய சமூகமா அல்லது ஆரியரல்லாத சமூகமா என்பது குறித்து ஒருமித்த கருத்து இல்லை. மராத்தியர்கள் ஆரியர்கள் அல்ல என்று ரிஸ்லே கருத்துக் கொண்டிருந்தார். அவர் பெரும்பாலும் மனிதர்களின் உடல், கை, கால் அளவுகளின் அடிப்படையில் தமது முடிவைச் செய்திருந்தார். மற்றவர்கள் இந்தக் கருத்தை மறுத்து, மராத்தியர்கள் ஆரியர்கள்தான் என்ற முடிவுக்கு வந்தனர். அவர்கள், இரண்டு தடவைகள் ஆரியப் படையெடுப்புக் கள் நடந்ததென்றும் மராத்தியர்கள் இரண்டாவது படையெடுப்பைச் சேர்ந்தவர்கள் என்ற வாதத்தின் மூலம் ரிஸ்லியின் மனித அங்க அளவுகள் சார்ந்த ஆட்சேபணைகளை மடக்கினர். அதனால்தான் அவர்களுடைய மனித அங்க அளவுகள் ரிஸ்லியின் அளவுகளுடன் ஒத்துப்போகவில்லை. இரண்டாவது தற்காலிகக் கருத்து, பண்டைக் காலத்தில் ஆரியர்கள் மிக அதிக எண்ணிக்கையிலான மக்கட் பகுதியாக இருந்ததால், 'ஆரியாகே' என்று மகாராஷ்டிரம் அழைக்கப் பட்டதென்ற விவரத்தை ஆதராரமாகக் கொண்டது. மேலும், கர்நாடகத்தில் மராத்தியர்கள் இன்னும் 'அரேர்மாடெட்' (ஆரிய மனிதன்) என்று அழைக்கப்படுகின்றனர் என்றும் கூறினர். அது எப்படியாவது இருக்கட்டும், மகர்கள் பூர்வீக மக்களல்ல என்ற கேள்விக்கே இடமில்லை. இந்தக் கருத்துரைக்கு ஆதரவாகக் கூறப்பட்டதோடுகூட, இந்தக் கருத்துக்கு ஆதரவாக பிற வழிகாட்டும் அடையாளங்களும் தொடர்ந்து வாழ்ந்து வருபவர்களும் உள்ளனர். நாம் கவனிக்க வேண்டிய முதலாவது அம்சம், ஒரு ராஜபுத்ரரின் அந்தஸ்தை சுட்டுகின்றன. பெரும் எண்ணிக்கையிலான குலங்கள்,

மஹர்களிடையிலும் இருந்து வருகின்றன. பிராமணர்களுக்கும் மராத்தியர்களுக்கும் இடையில், மராத்தியர்கள் க்ஷத்திரியர்கள் தானா அல்லவா என்ற பிரச்சினையில் ஏற்பட்ட சண்டைகளில், உரிமை கோருகிறவரின் குலம், ராஜபுத்ரர்களைச் சேர்ந்த 96 குலங்களில் ஒன்றுதானா என்ற சோதனை கடைப்பிடிக்கப்பட்டது. ராஜபுத்ரர்கள் க்ஷத்திரியர்கள் என்ற அந்தஸ்து கேள்விக்கு அப்பாற்பட்டதாக இருந்தது. இந்த சோதனை மகர்களுக்கும் கடைப்படிக்கப்பட் டால், மகர்கள் ஆரம்பத்தில் ராஜபுத்ரர்களுடன், அதாவது க்ஷத்திரிய வர்க்கத்தைச் சேர்ந்தவர்களே என்பதும் கேள்விக்கே இடமில்லை. மகர்கள், மிகவும் சமீப காலமாக, தமது சமூக அந்தஸ்தை உயர்த்திக் கொள்வதற்காக, ராஜபுத்ரர்களின் குலங்களைத் தங்களுடைய தாக்கிக் கொண்டு வருகிறார்கள் என்று கூறப்படுகிறது. அது தவறானது என்பது தெளிவு. தாங்கள் 'சோமவனஸ்' என்று அழைக்கப்படு பவர்களைச் சேர்ந்தவர்கள் என்று மகர்களிடையில் ஒரு நீண்ட காலப் பாரம்பரியம் இருந்து வருகிறது - சோமவன்ஸ் என்பது க்ஷத்திரியர்களின் இரண்டு பிரிவுகளில் ஒன்றாகும். மகர்கள் நீண்ட காலமாகவே இந்த 'கோத்ரங்களைக் கொண்டுள்ளனர். சமீப காலத்தில் அவற்றைப் பெற்றவர்களல்ல; சதாராவின் கடைசி மராத்தா அரசராகிய பிரதாப் சிங்கின் தகுதி பற்றி பிராமணர்கள் நடத்திய ஒரு விசாரணை மன்றத்திலேயே இது தெளிவாகியது. (பிரதாப் சிங்கை ஒரு க்ஷத்திரியர் என்று அங்கீகரிப்பதற்கு பிராம ணர்கள் மறுத்து வந்தனர்) பிரதாப் சிங்குக்கு ஆதரவளித்த பிராமணர் களின் ஒரு தரப்பினர், பான்ஸ்லே குலம் ராஜபுத்ரர்களின் 96 குலங் களில் ஒன்றாகையாலும், ராஜபுத்ரர்கள் க்ஷத்திரியர்கள் என்று அங்கீகரிக்கப்பட்டுள்ளதாலும், பிரதாப்சிங்கை ஒரு க்ஷத்திரியர் என்றே கருத வேண்டும் என்று கூறினர். இந்த வாதத்திற்கு பதிலளிக் கும் முறையில் மற்றையத் தரப்பு ஒரு புதிரைப் போட்டனர். அந்த வாதம் சரியானதென்றால், மகர்கள் எல்லோரும் க்ஷத்திரியர்கள் என்று அழைக்கப்பட வேண்டும் என்று அது கூறியது. ஏனெனில் ராஜபுத்ரர்கள் போன்று அவர்களுக்கும் குலங்கள் இருந்தன. குலங் களின் பொருந்தும் தன்மை ஒரு சோதனை என்பது தவிர, மகர்கள் சுவீகரித்துக் கொண்ட குலங்கள் ஒரு புதிய இயல்நிகழ்வு அல்ல என்பது உண்மையாகும். மகர்கள் பூர்வ குடிகள் அல்ல என்ற கருத்துக்கு ஆதரவாக இது ஒரு ஆதாரமாகும்.

இந்தக் கருத்துக்கு ஆதரவாக இரண்டாவது ஆதாரம் என்ன வெனில், மகர்களுக்குப் பிரத்தயேகமான வணக்கவுரைச் சொல் லாகும். மகர்கள் பயன்படுத்தும் வணக்கவுரைச் சொல் ஜோஹர்

என்பதாகும். இந்த சொல்லானது 'யோத்தார்' என்ற சமஸ்கிருதச் சொல்லின் ஒரு கொச்சையான வடிவம் என்பதில் ஐயமில்லை. பண்டைய வேதகாலத்தில் பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் வெவ்வேறு வணக்கவுரைச் சொற்களைப் பயன்படுத்தினார்கள் என்பது நன்கு தெரிந்ததே, பிராமணர்கள் 'நமஸ்காரம்' என்றும் க்ஷத்திரியர்கள் 'யோத்தார்' என்றும் கூறினார்கள். மகர்கள் கீழான வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் என்றிருந்திருந்தால் அல்லது அவர்கள் பூர்வ குடிகளாயிருந்திருந்தால் யோத்தார் என்ற வணக்கவுரைச் சொல்லைப் பயன்படுத்துவதற்கு அவர்கள் அனுமதிக்கப்பட்டிருப்பார்களா என்பது எண்ணிப்பார்ப்பது கடினம்; ஏனெனில், சமார்களிடையிலும் மாங்குகள் இடையிலும் வணக்கவுரைச் சொல்லானது ஒரு மிகவும் மாறுபட்ட சொல்லாகும்; க்ஷத்திரியர்களின் அந்தஸ்துக்கும் அதற்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. மாங்குகள், 'ஃபர்மான்' என்ற சொல்லை உபயோகித்தனர், அது 'ஃபார்மான்' என்ற சொல்லின் ஒரு பாகமாகத் தோன்றுகிறது, அதன் பொருள் 'ஆணை' என்பதாகும். சமார்கள் 'டுஃப்பாரோ' என்ற சொல்லை உபயோகித்தனர். எதிலிருந்து இந்த சொல் பெறப்பட்டது என்பதை என்னால் கூற இயலவில்லை. ஆனால், மகர் சமூகம் மட்டுமே 'ஜோஹர்' என்ற சொல்லைத் தனது வணக்கவுரைச் சொல்லைப் பயன்படுத்துகிறது என்பது மெய்யேயாகும்; இது நான் மேலே கூறியது போன்று, க்ஷத்திரியர்கள் மட்டுமே இந்த சொல்லைத் தமது வணக்கவுரைச் சொல்லாகப் பயன்படுத்தி வந்தனர். மராத்தியர்களும் கூட ஒரு காலத்தில் 'ஜோஹார்' என்ற சொல்லை வணக்கவுரைச் சொல்லாகப் பயன்படுத்தி வந்தனர் என்பதில் ஐயமில்லை, அது சிவாஜியின் ஆட்சிக் காலத்தின் ஒரு பகுதியின் போது நடைமுறையில் இருந்து வந்துள்ளது. சிவாஜியும் கூட, தனது கையாலேயே கையொப்பமிடப்பட்ட ஒரே ஒரு கடிதம் என்று ஒத்துக் கொள்ளப்பட்டு மாலோனிகோர்பாடேக்கு எழுதப்பட்டிருந்த அந்தக் கடிதத்தில் 'ஜோஹர்' என்ற சொல்லை வணக்கச் சொல்லாக உபயோகப்படுத்தியுள்ளார். மராத்தியர்கள், சிவாஜிக்குப் பின்னர், 'ஜோஹார்' என்ற சொல்லுக்குப் பதிலாக, 'ராம் ராம்' என்ற சொல்லை 'வணக்கச் சொல்லாக' உபயோகப்படுத்தத் தொடங்கினர் என்பது நன்கு அறிந்ததே. ஆனால் மகர்கள் இதைப் பின்பற்றவில்லை என்பது வியப்புக்குரியதே. மராத்தியர்கள் கைவிட்ட பிறகும் மகர்கள் ஏன் 'ஜோஹார்' என்ற சொல்லையே உபயோகப்படுத்தினர் என்பதும், எல்லோரும் 'ராம்ராம்' என்ற சொல்லையே உபயோகப்படுத்த வேண்டும் என்று அரசு வலியுறுத்திய போதிலும், 'ஜோஹார்' என்ற சொல்லை மகர்கள் பயன்

படுத்துவதற்கு அரசு அனுமதித்தது என்பதும் விளக்கம் தேவைப் படுகிற கேள்விகளாகும். ஆனால் 'ஜோஹார்' ஒரு க்ஷத்திரியனின் அந்தஸ்தை சுட்டிக்காட்டுவதாகும் என்பது உண்மையே.

கவனத்தில் கொள்ள வேண்டிய மற்றொரு விஷயம் இருக் கிறது, ஏனெனில் அது, நான் ஆதரவளிக்கின்ற ஒரு கருத்துக்கு மாறாகச் செல்கிறது. அதாவது, மகர்கள் பூர்வ குடிகள் அல்ல, அவர்கள் மெய்யாகவே மராத்திய சமூகத்தைச் சேர்ந்தர்வகள்தான், மற்றும் ஒரு காலத்தில் அவர்கள் க்ஷத்திரியர்கள் என்று கருதப்பட்ட வர்கள் என்பதுதான் அது. உண்மை என்னவெனில் இறந்தவர்களின் சடலத்தைப் புதைப்பது மகர்களிடமிருந்து வந்த மரபாகும். ஆனால் ஒரு கொள்கை என்ற முறையிலும், நடைமுறையிலும் மராத்தி யர்களும் க்ஷத்திரியர்களும் சடலத்தை எரிப்பதை மரபாகக் கொண் டிருந்தனர். இறந்தவர்களைப் புதைக்கும் பழக்கம் இருந்துவருவது ஒத்துக் கொள்ளப்பட வேண்டியதே, ஆனால் இந்த வழக்கம் இருந்து வருவதை ஒத்துக் கொள்வது, அதிலிருந்து பெறப்பட முயலும் முடிவின் வடிவத்தை ஒத்துக்கொள்ள முடியாது என்பதாகும். முத லாவதாக, இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கம் அசலானதல்ல, என்பதற்குக் குறியீடுகள் உள்ளன. ஆனால், மகர்களிடையில் இறந்தவர்களை எரிக்கும் வழக்கம்தான் பூர்வீகமானது என்பதற்கு ஆதாரம், மகர்கள் இறந்தவர்களைப் புதைத்த போதிலும், அவர்கள் கல்லறைக்கு, சடலத்துடன் ஒரு மண் பானையில் தீக்கங்குகளை யும் எரியும் நிலக்கரியையும் எடுத்துச் செல்கிறார்கள் என்பதாகும். அத்தகைய ஒரு செயலுக்கு ஏதாவது நோக்கம் இருந்தாக வேண்டும். சடலத்தை எரிப்பதற்கு அந்தத் தீயைப் பயன்படுத்துவதைத் தவிர வேறு எந்த நோக்கமும் இருக்க முடியாது. இறந்தவர்களை எரிக்கும் வழக்கம் கைவிடப்பட்டு மகர்கள் புதைக்கும் வழக்கத்தை ஏன் கைக்கொண்டார்கள் என்பதற்கு ஒரு திட்டவட்டமான பதிலைக் கூற முடியாது. ஆனால், ஒரு பிந்திய காலகட்டத்தில் மகர்களின் அந்தஸ்து தாழ்ந்து அவர்கள் தீண்டப்படாதவர்கள் என்று வகைப் படுத்தப்பட்டபோது சடலத்தைப் புதைக்கும் வழக்கம் மகர்களின் மீது திணிக்கப்பட்டதாகத் தோன்றுகிறது. பத்ம - புராணத்தில் இந்தக் கருத்துக்குப் பெருமளவு ஆதரவைக் காணமுடியும். இறந்தவர்களை எரிப்பது உயர்வடைந்த மூன்று வர்க்கங்களின் தனிச் சலுகையாத லால், சில சமூகத்தினர் தமது இறந்தவர்களின் சடலங்களை எரிப்பது தடுக்கப்பட்டது என்று பத்ம புராணத்தில் கூறப்பட்டுள்ளது. இது சரியானதெனில் இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கமானது மகர்கள் பூர்வ குடிகள் அல்ல, கடந்த காலத்தில், இன அடிப்படையில்

மராத்தியர்களின் ஒரு பாகமாகவும், அந்தஸ்து அடிப்படையில் க்ஷத்திரியர்களின் பாகமாகவும் இருந்திருக்கக் கூடும் என்று காட்டுகிற பெருமளவான சான்றை மறுதலிக்க முடியாது.

## II

### அவர்கள் ஏன் கிராமத்திற்கு வெளியில் வசிக்கிறார்கள்?

மகர்கள் கிராமத்திற்கு வெளியில் வசிக்கிறார்கள் என்பது அட்டூழியமானதாகும். இந்த எதார்த்தத்தை எப்படியும் வெளிநாட்டவர்களால் புரிந்து கொள்ள முடியாத ஒன்றாகும். ஏனெனில், கிராமம் பொதுவாக திறந்த வெளியில் கட்டியமைக்கப்படுவதாகும்; அதனுடைய எல்லைகளைப் பற்றி எத்தகைய அடையாளமும் இருக்காது. ஆனால் மகர்கள் கிராமத்திற்கு வெளியில் இருப்பவர்கள் என்று கருதப்படுவதற்கு இரண்டு காரணங்கள் மறுக்கப்பட முடியாதவாறு எடுத்துக் காட்டுகின்றன. ஒவ்வொரு கிராம வாசியும் ஒரு கிராமத்திற்கும் மஹர்வாடாவிற்கும் (மஹர்கள் வசிக்கும் பகுதிக்கும் இடையில் ஒரு வேறுபாட்டைக் காண்கிறார். அதன்படி - மகர்கள் வசிக்கும் பகுதி, கிராமம் என்று அழைக்கப்படுவதன் உள்ளே இல்லை என்று அர்த்தப்படுத்துகிறார். எங்கெங்கு கிராமத்தைச் சுற்றிலும் சுவர் இருக்கின்றதோ, அங்கு இது கூடுதல் தெளிவாக எடுத்துக்காட்டப்படுகிறது. எங்கெங்கு ஒரு கிராமம் ஒரு (பொது) கிணற்றைக் கொண்டிருக்கிறதோ, - மராத்தி மொழியில் இதற்கு 'கவ்குஸ்' என்று பெயர் - அங்கெல்லாம் மகர்களின் குடியிருப்புகள் எப்போதும் சுவற்றுக்கு அப்பால்தான் இருக்கும் என்பதைக் காணலாம். முதல் கேள்வி சம்பந்தமாக இந்த ஆவணத்தில் கூறப்பட்டுள்ளவற்றின் வெளிச்சத்தில் இந்த உண்மையைப் பரிசீலனை செய்யும்போது இரண்டாவது கேள்விக்கு மிகுந்த முக்கியத்துவம் கிடைக்கிறது. மகர்கள் ஒரு பூர்வகுடி இனம் அல்லவென்றால், அவர்கள் சமுதாயத்தின் ஒதுக்கப்பட்ட மக்களாக ஏன் கருதப்பட்டு, கிராம சமூகத்திற்கு வெளியில் வசிக்கும்படியாக ஏன் செய்யப்பட வேண்டும்? இதற்கு ஓர் உண்மையான பதிலாகத் தோன்றும் மிகவும் இயற்கையான பதில் என்னவெனில் மனுவின் சட்டத்தில் அடங்கியுள்ள ஆணைகளில் இதை நாம் காணலாம். சண்டாளர்களைப் பற்றி மனு கூறுகையில், அவர் ஒரு கிராமத்தின் எல்லைக் காப்பாய் வசிக்கும்படியாகக் கட்டாயப்படுத்த வேண்டும் என்று விதிக்கிறார். சண்டாளர்களைப் பற்றி மனு கூறியுள்ளதிலிருந்து பொதுமைப்படுத்திப் பார்க்கும்போது, சண்டாளர்களைப் பற்றி அவர் கூறியதானது, இந்து ஆட்சியாளர்களால் அவர்களைப் போன்ற

அனைத்து வர்க்கங்களின் மீதும் மிகுந்த உக்ரத்துடன் சுமத்தப்பட்டது என்று ஊகிக்கலாம். ஆழமாகப் பரிசீலனை செய்து பார்க்கும்போது, எழுப்பப்பட்ட கேள்விக்கு இது விடையாக இருக்க முடியாது என்று நான் அறிகிறேன். அவர் கூறியதானது, அவ்வளவாக, சட்டம் - வழங்கியவரின் மூல ஆணை அல்ல. என்னுடைய மதிப்பீட்டின்படி, மனு செய்துள்ளதானது, வரலாற்றுக் காலகட்டத்தின்போது, சக்தி களின் செயல்பாட்டின் விளைவாக ஏற்பட்டதை அங்கீகரித்ததும், எதார்த்தத்தை தனது லட்சியமாக ஆக்கிக் கொண்டதுமாகும். ஏனெனில் அவருடைய மனதில் இருந்ததற்கு அது பொருத்தமாக இருந்தது. கேள்விக்கான பதிலை ஒரு மிகவும் வேறுபட்ட திசையில் காணவேண்டும். என்னுடைய கருத்தின்படி, உண்மையான விடை காணப்படக்கூடிய திசைவழி, ஓர் இடையர் சமூகம், ஒரு நிலையான சமூகமாக மாற்றமடைந்த காலக்கட்டம் சம்பந்தமான ஆய்வில் அடங்கியுள்ளது. சமூகத்தின் சொத்தின் வடிவமானது, (மக்களின்) பழக்க வழக்கங்களை நிர்ணயம் செய்யும் பிரதான நிர்ணய அம்ச மாகும் என்பது நாகரிக வளர்ச்சி குறித்து ஆய்வு செய்யும் அனைத்து மாணவர்களின் பொதுவான ஞானமாக இருக்க வேண்டும். இடையர் சமூக மக்கள் ஒருபோதும் எங்கும் நிலையாக வசித்திருந்தது இல்லை, மாறாக அவர்கள் நாடோடி வாழ்க்கை வாழ்ந்தனர். ஒவ்வொரு இடமாக மாறிமாறி இடம்பெயர்ந்து சென்று கொண் டிருந்தனர்; ஏனெனில் கால்நடைகளும் செம்மறியாடுகளும்தான் அவர்களது சொத்தாக இருந்தது. செம்மறியாடுகளும் கால்நடை களும் இடம்பெயர்ந்து சென்று கொண்டேயிருந்தன, அவற்றின் உடமையாளர்களும், தமது சொத்து தங்களை அழைத்துச் சென்ற இடங்களுக்கெல்லாம் தாங்களும் பெயர்ந்து சென்றனர். நிலத்தில் சாகுபடிசெய்து, அதனால் கிடைத்த பண்டங்களை மதிப்பிடும் கலையைக் கற்றுக் கொண்ட ஒரு சமூகம், தமது நாடோடி வாழ்க்கை யைக் கைவிட்டு, ஓர் இடத்தில் நிலையாக அமர்ந்திருந்தனர். அதற்கான காரணம், இப்பொழுது அவர்களுடைய செல்வம் அசையா சொத்தாக, அதாவது நிலமாக இருந்தது என்பதில் ஐயமில்லை. இப்பொழுது, நாடோடி வாழ்க்கைக்கு பதிலாக நிலையான வாழ்க்கை ஏற்பட்ட இந்த நிகழ்வுப் போக்கு ஒரு நீண்ட நெடும் நிகழ்வுப்போக்காக இருந்தது. இந்த நிகழ்வுப் போக்கில் சிலர் அங்கும் இங்குமாக சுற்றி அலைந்தனர், சிலர் நிலையாக அமைந்தனர். அந்த ஆரம்ப நாட்களில் சமூக வாழ்க்கை அனைத்தும் இனமரபுக் குழுக்களாக ஒழுங்கமைக் கப்பட்டிருந்தனர். இந்த இன மரபுக் குழுக்கள் அடிக்கடி ஒருவருக் கொருவர் (ஒரு குழு மற்றொரு குழுவுக்கு எதிராக) சண்டை யிட்டுக் கொண்டிருந்தனர் என்பது மனித நாகரிகத்தின் ஆரம்பகால

வரலாற்று மாணவர்களுக்கு நன்கு தெரிந்த விஷயமேயாகும். இந்த நிலைமைகளை முன்னிட்டு, நாம் மீண்டும் தொடக்க காலத்திற்குப் பயணம் செய்து பார்த்தால், அப்பொழுது சமூகங்கள் (குலங்கள்) அல்லது இனமரபுக் குழுக்கள், நாடோடிகளாக இருந்த நிலைமையிலிருந்து மாற்றமடைந்து, நிலையாக அமைந்து வாழத் தொடங்கினர். அப்பொழுது, பூவுலகின் மிகவும் தலையாயத் தேவைகளாக அவர்கள் உணர்ந்த தேவைகள் என்னவாக இருந்திருக்கும் என்று கற்பனை செய்து பாருங்கள். இங்கு ஒரு இன மரபுக் குழு நிலையாக அமைந்து ஒரு குடியிருப்பாக உருவாயினர். தற்பொழுது அதை ஒரு கிராமம் என்கிறோம். அது சாம்பல் நிலத் தானியங்களைக் கொண்டிருந்தது. அது செம்மறியாடுகளையும் கால்நடைகளையும் கொண்டிருந்தது. மறுபுறத்தில், அதைச் சுற்றிலும் பழங்குடி மக்கள் வாழ்கிறார்கள், அவர்கள் நாடோடிகள், கிராமத்திற்கு சொந்தமான தானியம், பசுக்கள் மற்றும் செம்மறியாடுகளின் மீது அவர்களின் பேராசைமிக்க பார்வை விழுகிறது. இத்தகைய ஒரு நிலையாய் அமைந்த பழங்குடி மக்களுக்கு நாடோடிப் பழங்குடியினரின் திடீர்தாக்குதல்கள் மற்றும் படையெடுப்புகளுக்கு எதிராகத் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதே முதலாவதும் முதன்மையானதுமான பிரச்சினையாகும் என்பது வெளிப்படை. அவர்கள் எவ்வாறு தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முடியும்? இந்தப் பாதுகாப்பை அவர்களால் எவ்வாறு ஏற்படுத்திக் கொள்ள முடியும்? அவர்கள் தங்களுடைய தானியத்தையோ அல்லது தங்களுடைய கால்நடைகளையோ பாதுகாத்துக் கொள்வதற்காக, இடையறாது போரில்-தற்காப்போ அல்லது எதிர்த்தாக்குதலிலோ- ஈடுபட்டுக் கொள்ள முடியாது என்று தெளிவு. ஏனெனில் அவர்களது ஆற்றல் முழுவதும் விவசாயத்தில் ஈடுபடுத்தப்படுகிறது. இது அவர்களுக்குப் புதிய தொழில், அதற்கு அவர்கள் தங்களுடைய சொந்த உடலுழைப்பையே சார்ந்திருக்க வேண்டியிருந்தது. தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கான ஒரே வழி, தங்களுடைய பழங்குடித் தலைவரை எதிர்பார்த்து நிற்பதுதான். ஆனால் நிலையாய் அமைந்து, விடா முயற்சியுடன் நிலத்தை உழுது பயிர் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ள தனது பழங்குடியினரைப் பழங்குடித் தலைவன் எவ்வாறு பாதுகாக்க முடியும்? தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கு அவர்களுக்கு நேரமும் இல்லை, அல்லது தங்கள் சார்பில் ஆயுதமேந்திப் போராடுவதற்கான ஆட்களும் இல்லை. எனவே, பழங்குடித் தலைவன், நாடோடிகளின் படையெடுப்புகளிலிருந்து தமது பழங்குடியைப் பாதுகாப்பதற்குத் தனது ஆணையின் கீழ் செயல்படுவதற்கு ஒரு படையைத் திரட்டுவதற்கு வேறு ஆதாரத்தைக் காண

வேண்டும். தனது தற்காப்புப் படைக்கு ஆட்களைத் திரட்டுவதற்கு வேறு எந்த ஆதாரத்தைப் பழங்குடித் தலைவன் எதிர்பார்க்க முடியும்?

ஒரு ஆதாரத்திலிருந்துதான் என்பது தெளிவு. இங்கு, சற்று தொலைவில் பழங்குடி மக்களுக்கு இடையிலான போர்கள் நடைபெற்று வருகின்றன. ஒரு பழங்குடி மற்றொரு பழங்குடிக்கு எதிராகப்போர் தொடுத்து வருகிறது. இந்தப் போரில், ஒரு பழங்குடி முறியடிக்கப்படுகிறது. ஒரு பழங்குடியைச் சேர்ந்த ஆட்கள் தோல்வியினால் துவண்டுபோகிறது, அவர்களின் சிறுசிறு குழுக்கள், மனமுடைந்து, தங்களுடைய சொந்தப் பாதுகாப்பு குறித்தே அச்சமடைந்து, ஒரு பாதுகாப்பான இடம் தேடி சுற்றித் திரிகின்றனர். நிலையாய் அமைந்த பழங்குடியின் தலைவனையும் தோல்வியடைந்த பழங்குடியின் நொறுங்கிப் போன ஆட்களையும் விதி ஒன்றாகச் சேர்க்குமேயானால் இரு தரப்பினருக்கும் எவ்வளவு நன்றாக இருக்கும்? நிலையாய் அமைந்துள்ள பழங்குடியின் தலைவனுக்கு, பழங்குடியினரின் தொழிலுக்கு எவ்வித பாதிப்புமின்றி, தனது பழங்குடியைப் பாதுகாப்பதற்குத் தேவையான படைபலம் கிடைக்கும். நொறுங்கிப் போன பழங்குடியின் ஆட்களுக்கு, கிராம சமூகத்திற்குச் செய்த சேவைக்காக, வாழ்க்கை உத்தரவாத உதவி கிடைக்கும். மற்றும் தலைவனின் பாதுகாப்பும் கிடைக்கும். ஆனால், நொறுங்கிப் போன பழங்குடியின் ஆட்களைப் பெற்றதற்குப்பின், பழங்குடித் தலைவனுக்கு ஏற்படும் அடுத்த பிரச்சினை, அந்த ஆட்களை எங்கு குடியமர்த்துவது என்பதுதான். நிலையாய் அமைந்துள்ள சமூகத்தின் மத்தியில் அவர்கள் குடியமர்வதற்கு அனுமதிக்க முடியாது, ஏனெனில் அவர்கள் ஒரு வேறுபட்ட பழங்குடியைச் சேர்ந்தவர்கள், குருதித் தொடர்பு உடையவர்கள் அல்ல. குருதித் தொடர்பு உடையவர்கள் மட்டுமே பழங்குடியின் குடியிருப்புக்குள் வசிக்க முடியும்.

நிலையாய் அமைந்த சமூகத்தின் பாதுகாப்பிற்கு அவருக்குத் தேவைப்படும் படையாக மற்றொரு பழங்குடியின் நொறுங்கிய ஆட்களை அமர்த்தவதற்கு பழங்குடித் தலைவனுக்கு உள்ள ஒரே வழி, தனது பழங்குடிகளின் குடியிருப்புகளின் எல்லைகளுக்கு அப்பால் அவர்களைக் குடியமர்த்துவதேயாகும் என்பது தெளிவு. என்னுடைய மதிப்பீட்டின்படி, மகர்கள் கிராமத்தின் எல்லைகளுக்கு வெளியில் வாழ்ந்ததற்கு இந்த நிகழ்வுப் போக்கு மட்டுமே விளக்கந்தர முடியும். மகர்கள் பழங்குடிகளின் நொறுங்கிய

ஆட்களாவர், அந்தப் பழங்குடிகள் ஆதிகாலத்தில் ஒருவர் மற்றொரு வருடன் போரிட்டுக் கொண்டிருந்தனர். அவர்களை, நிலையாய் அமைந்த சமூகத்தின் தலைவர்- அதாவது கிராமத்தின் படீல் என்பவர், வசப்படுத்தி, தனது கிராமத்தின் எல்லைகளுக்கு அப்பால் குடியமர அனுமதித்தார். அவர்கள் அவருக்குக் காவல் புரியும் கடமையைச் செய்தனர், பதிலுக்கு அவர்களுக்குக் குடியிருப்பு மனை கள் வழங்கப்பட்டன. மகர்கள் கிராமத்தின் எல்லைகளுக்கு அப்பால் வசித்து வந்ததில் விநோதமானது எதுவுமில்லை. அவர்கள் ஒரு கீழான அந்தஸ்தைச் சேர்ந்தவர்கள் என்றும் அதனால்தான் அவர்கள் கிராம எல்லைக்கு அப்பால் வசிக்கச் செய்யப்பட்டார்கள் என்றும் குறிப்பிடுவதற்கு அந்த எதார்த்தத்தில் எதுவுமேயில்லை. கிராமத் தலைவரால், தனது சமூகத்தின் பாதுகாப்பிற்காக அவர்கள் கிராமத்திற்குக் கொண்டுவரப்பட்டு, கிராமத்தின் எல்லைகளுக்கு வெளியில் வசிக்கச் செய்யப்பட்டதற்குக் காரணம், அவர்கள் தாழ்ந்த அந்தஸ்திலுள்ளவர்கள் என்பதனால் அல்ல, மாறாக அவர்கள் மற்றொரு பழங்குடியைச் சேர்ந்தவர்கள் என்பதனால்தான், இந்த முடிவுக்க ஆதாரமாக வேல்ஸிலோ அல்லது அயர்லாந்திலோ நடை பெற்றதைக் கூறலாம்.

ஐரிஷ் மக்களிடையிலும் கிராம சமூகம் இருந்தது என்றும் அது நிலையாய் அமைந்த ஒரு சமூகமாயிருந்தது என்றும் அந்த சமூகத்தின் அடியிருப்பின் எல்லையில் போயர்கள் என்று அறியப் பட்ட ஒரு மக்கட் பகுதி வசித்து வந்ததென்றும், ஐரிஷ் மக்களின் பழங்குடி அமைப்பு சம்பந்தமான அயர்லாந்தின் பிரெஹான் சட்டங் களை ஆய்வு செய்ததிலிருந்து தெரியவருகிறது. போயர்கள் ஒரு நொறுங்கிய பழங்குடியின் மீத மிச்சங்களாவர். கிராமத் தலைவன் தனக்கக் கீழ் சேவை புரிவதற்கும், சமூகத்தின் பாதுகாப்பின் நலனுக் காகவும் அவர்களைக் கொண்டு வந்தார். திட்டவட்டமாக, இது போன்ற நிலைமைகள்தான், குவெல்லீஸ் என்று அறியப்பட்ட வேல்ஸ் பிரதேச கிராமங்களில் இருந்து வந்தது. ஒவ்வொரு குவெல்லி யிலும், அந்நியர்களின் ஒரு குழு, அதனுடைய எல்லைகளில் குடி யமர்ந்திருந்தது. அவர்கள் அலடுட் என்று அழைக்கப்பட்டனர். அவர்களும் ஒரு நொறுங்கிய பழங்குடியைச்சேர்ந்தவர்களே. குவெல்லி யின் தலைவனால், குவெல்லியின் பாதுகாப்புக்காக, தலைவனால் அவர்கள் கொண்டுவரப்பட்டிருந்தனர். இந்தக் கேள்விக்கு, என் னுடைய மதிப்பீட்டின்படி, இதுவே ஒரே திருப்பதிகரமான பதி லாகும். ஆயினும், அயர்லாந்திலும் வேல்ஸிலும் அல்டுட்களும் போயர்களும் காலப்போக்கில் தனியான சமூகங்களாக இல்லாமல்,

கிராம மக்களின் பொதுவான திரளுடன் ஐக்கியமாகி விட்டிருந்த போது, மகர்கள் ஏன் தொடர்ந்து தனி சமூகமாக வசித்து வந்தனர் என்ற கேள்வி இருந்து வருகிறது. இந்தக் கேள்விக்கான பதில் சிரமமானதொன்றுமல்ல. சாதி அமைப்பு மற்றும் தீண்டாமையும் தான், அந்த இணைப்பைத் தடுத்து வந்துள்ளது. இது, இந்த ஆவணத்தில் விவாதத்திற்காக எழுப்பப்பட்டுள்ள மூன்றாவதும், கடைசியுமான கேள்வியை நம்முன் வைக்கிறது.

## III

### மகர்கள் தீண்டத்தகாதவர்கள் என்று ஏன் வகைப்படுத்தப்பட்டார்கள்?

புத்த மதத்திற்கு எதிராக பிராமணீயத்தின் போராட்டங்களில் தான் தீண்டாமையின் தொடக்கத்தைக் காணவேண்டும். இது மேலே கூறப்பட்ட கேள்விக்கு விநோதமான பதிலாகும். ஆனால் அதுதான் உண்மையான பதில் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. விஷயங்களைத் தெளிவாக்குவதற்கு, புத்தமதம் எந்தக் கோட்பாடுகளுக்காக நின்றது என்பதை விளக்க வேண்டியது அவசியமாகும். எல்லா விவரங்களுக்கும் போகவேண்டிய அவசியமில்லை. புத்தர் மிகவும் கடுமையாக எதிர்த்த விஷயங்களில் ஒன்று யாத்னியா என்பதுதான் என்று கூறினாலே போதுமானதாகும். இது ஆரியர்களின் முக்கியமான பிரதானமான மதவடிவமாகும். யாத்னியாவில் பசுவை பலி கொடுப்பது அடங்கியுள்ளது.

ஆரியப் பொருளாதாரத்தில் பசு மிகவும் முக்கியமான பிராணியாகும். விவசாய அமைப்பு முழுவதுமே பசுவை சார்ந்திருந்தது. பசு பாலைக் கொடுத்தது. அது மக்களின் பிரதான வாழ்வாதாரமாயிருந்தது. பசு எருதுகளை ஈன்றது, அவை நிலத்தை உழுவதற்குத் தேவையான பிராணிகளாக இருந்தன. யாத்னியாவிற்கு புத்தரின் ஆட்சேபனைகள் தத்துவயியல் காரணங்களை அடிப்படையாகக் கொண்டிருந்த போதிலும் சாதாரண மக்கள் - அவர்களின் அறிவு வாழ்க்கையின் எதார்த்தங்களுக்கு அப்பால் போக முடியாததாகையால் - புத்தமத பதாகையைச் சுற்றித்திரண்டார்கள். ஏனெனில், அது பசு அடிக்கடி கொல்லப்படுவதினின்றும் காப்பாற்றுவதை நோக்கமாகக் கொண்டது என்பதை அவர்களால் பார்க்க முடிந்தது. பிராமணர்கள் பசுவை பலியிடும் நோக்கத்திற்கு உட்படுத்தியிருந்தனர். எனவே பசு, முதலில் சிறப்பாக கவனிக்கப்பட வேண்டிய

பிராணியாகவும், கடைசியில் போற்றி மதிக்கக் கூடிய ஒன்றாக வும் ஆக்கப்பட்டது. பசுவை பலியிடுவதற்கு சம்மதிக்க மறுக்கும் மக்களால் பிராமணர்களின் மேலாதிக்கம் கடுமையாக பாதிப்புக் குள்ளாகியது. எனவே, புத்த மதத்திற்கு மாறிச்சென்ற மக்களின் மனதை மாற்றித் தங்கள் பக்கம் ஈர்ப்பதற்கு அவர்கள் வேறு முறை களைக் கண்டறிய வேண்டியிருந்தது. பிராமணர்கள் இதை எவ்வாறு செய்தனர்? பசுவைப் போற்றி மதிக்க வேண்டுமென்று புத்த மதத்தினால் உருவாக்கப்பட்டிருந்த எண்ணம் மக்களின் மனதில் மிகவும் ஆழமாகப் பதிந்திருந்ததினால், பிராமணர்களுக்குத் தங்க ளுடைய யாத்னியாவைக் கைவிடுவதையும், அதற்கு பதிலாக, பௌத்தர்கள் செய்தது போன்று பசுவை மதிப்பதையும், வழிபடு வதையும் தவிர வேறு எதுவும் செய்வது அசாத்தியமாயிற்று. ஆனால், அது போதுமானதாக இருக்கவில்லை. புத்த மதத்திற்கு எதிரான போராட்டங்களில் பிராமணர்கள், மத நோக்கத்தின் பேரிலான எத்தகைய பயபக்தியான நோக்கத்தையும் கொண்டிருக்கவில்லை. அவர்கள், வெகுஜனங்கள் மீது கொண்டிருந்த, பின்னர் புத்த பிட்சு களிடம் சென்றுவிட்ட அதிகாரத்தையும் மரியாதையையும் மீண்டும் பெறுகின்ற முற்றிலும் அரசியல் உள்நோக்கத்தினாலேயே தூண்டப் பட்டிருந்தனர். பௌத்தர்களுக்கு எதிராக தாங்கள் ஏதாவது ஆதிக்கம் பெறுவது எனில், அவர்கள் பௌத்தர்களைக் காட்டிலும் ஒரு படி முன்னே செல்ல வேண்டுமென்பதை அவர்கள் அறிந்தனர், எனவே, அவ்வாறே அவர்கள் ஒருபடி முன்னே சென்று, தாங்கள் பசுவைக் கொல்ல மாட்டோம் என்பது மட்டுமன்றி, வேறு எந்தப் பிராணியையும் கொல்லமாட்டோம் அல்லது எந்த உயிர் வாழும் ஜந்துவையும் அழிக்கமாட்டோம் என்றும் பிரகடனம் செய்தனர். பிராமணர்களிடையில் இருந்துவரும் புலால் உண்ணா (சைவ உணவு)ப் பழக்கத்தின் தொடக்கத்தை, பௌத்தர்களை வெல்வதற் கான ஒரு சாதனமாகக் கடந்தகால பிராமணர்கள் மேற்கொண்ட ஒரு போர்த்தந்திர நடவடிக்கையில்தான் காணவேண்டும்.

இதோடு கூட, வேறு ஒரு விஷயத்தையும் மனதிலிருத்த வேண்டும். பௌத்த மதக் காலத்திற்கு முன்னரும், அசோகர் காலம் வரையிலும் மாட்டிறைச்சி எல்லாப் பிரிவினருக்கும் - பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் ஆகியோரின் - பொதவான உணவாக இருந்துவந்தது. அதில் விரும்பத்தகாதது எதுவுமில்லை. பசுவானது செம்மறியாடு, அல்லது வெள்ளாடு அல்லது மான் போன்ற ஒரு பிராணி மட்டுமே. எனவே, மக்கள் நான்கு வருணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்த போதிலும், இந்த நான்கு வர்ணத்தினரும்

அவர்களின் உணவு விஷயத்தில் வேறுபட்டிருக்கவில்லை. குறிப்பாக அனைவரும் மாட்டிறைச்சி உண்டனர். ஒரு வேளை ஒரே ஒரு வேறுபாடு-கொல்லப்பட்ட பிராணிகளின் இறைச்சியை சிலர் உண்டனர். அதை வாங்குவதற்கு வசதியுள்ளவர்களுக்கு அது சாத்தியமாயிற்று. ஏழைகளாயிருந்த எஞ்சியவர்கள் இறந்த பிராணிகளின் இறைச்சியை சாப்பிடும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். ஒருவேளை, வசதியுள்ளவர்கள் அதை உணவாகக் கொள்வதற்கு அக்கறை கொள்ள வில்லை. இறந்துபோன பசுக்கள் மற்றும் செத்துப்போன பிராணிகளின் உடல்களை கிராமத் தலைவன், சிரமத்தினுள் குடியமர்ந்த நொறுங்கிய பழங்குடிகளைச் சேர்ந்த ஆட்களுக்கு நிலையாய் அமைந்த சமூகத்திற்கு அவர்கள் ஆற்றிய சேவைகளுக்காக ஊதியம் என்ற வகையில் கொடுத்திருந்தார் என்பதும் எண்ணிப் பார்க்கக் கூடியதே. உண்மைக்கு எத்தகைய மாசும் ஏற்படாத வகையில், அசோகர் காலகட்டத்திற்கு முன்னால், பசுவின் இறைச்சியைப் புசிப்பது சம்பந்தப்பட்ட வரையிலும், எத்தகைய வேறுபாடும் இருந்ததில்லை என்று கூற முடியும். எல்லோரும் பசுவின் இறைச்சியை உண்டனர். ஏற்பட்டிருந்த ஒரே ஒரு வேறுபாடு என்னவெனில், கிராமத்து மக்கள் கொல்லப்பட்ட பிராணிகளின் இறைச்சியை உண்டனர். கிராமத்தின் வெளியில் வசித்தவர்கள், மரணமடைந்த பசுவின் இறைச்சியை உண்டனர் என்பதுதான். இந்த வேறுபாடு கவனிக்கப்பட வேண்டும். இதற்கு மதம் சார்ந்த அல்லது சமூக முக்கியத்தவம் எதுவும் கிடையாது. இது பணக்காரர், ஏழை என்ற வித்தியாசத்தின் குறியீடேயாகும். புத்தர் காலத்திற்குப் பின், குறிப்பாக அசோகர் காலத்தில் ஒரு முக்கிய மாற்றம் ஏற்பட்டது. பசுவைக் கொல்வது விருப்ப பூர்வமாகவே கைவிடப்பட்டது, அல்லது அரசாங்கத்தினால் தடைசெய்யப்பட்டது. இதன் விளைவாக ஒரு கூர்மையான வேறுபாடு எழுந்தது. கொல்லப்பட்ட பிராணியின் இறைச்சியைத் தின்று வாழ்ந்தவர்கள், இறந்த பிராணியின் (மாட்டிறைச்சியை) சாப்பிடுவதை நிறுத்திவிட்டார்கள். கொல்லப்படுவது நிறுத்தப்பட்டதால், அவர்கள் மாட்டிறைச்சியை சாப்பிடுவதையும் நிறுத்திவிட்டார்கள்.

கிராமத்தின் எல்லையில் வாழ்ந்து நொறுங்கிப்போன பழங்குடியினர், இறந்துபோன பசுவின் இறைச்சியைத் தொடர்ந்து உண்டு வந்தனர். அதைத் தடை செய்வது அவசியமற்றதாக இருந்தது, ஏனெனில் அதில் பசுவிற்கு இம்சை கொடுக்கும் அம்சம் அடங்கி இருக்கவில்லை. இப்பொழுது இந்த வேறுபாடு - அதாவது மாட்டிறைச்சியை சாப்பிடாதவர்கள், சாப்பிடுகிறவர்கள் என்ற வேறுபாடு

ஒரு வெறும் பொருளாதார வேறுபாடு அல்ல. இந்த வேறுபாடு மத நோக்கங்களை ஏற்படுத்தியது. பசுவைக் கொல்வது ஒரு கண்ணோட்டமாகி விட்டது - இது மதத்தின் கண்ணோட்டத்தில் வெறுப்புக்குரியதாகி விட்டது. இதன் தொடர்ச்சியாக, மரணமடைந்த பசுவின் இறைச்சியை சாப்பிடும் பிரிவினரும் ஒரு வெறுக்கப்படு வதற்குரிய பிரிவினராகினர். இந்த வெறுப்புக் கண்ணோட்டத்தில் தான் தீண்டாமையின் தொடக்கம் அடங்கியுள்ளது. அந்த வெறுப்புக் கண்ணோட்டம், பசுவை மதித்துப் போற்றுவது அல்லது மதிக் காததன் மீது சார்ந்துள்ளது. பிராமணர்கள் தமது சொந்த சுயநலக் கண்ணோட்டத்தில், பசுவை மதித்து வழிபடுவதற்கு ஒத்துக் கொண் டனர். எனவே, பசுவை வழிபடாத (மதிக்காத) எந்தப் பிரிவினரும் தீண்டப்படாதவர்களாகவும், சேர்ந்து (கலந்து) வாழ்வதற்குத் தகுதி யற்றவர்கள் அல்ல என்று கருதும் அளவிற்குச் சென்றது.

இதுதான் தீண்டாமையின் தொடக்கமாகும். அதனால்தான் மகர்கள் தீண்டப்படாதவர்களாகக் கருதப்பட்டனர். இந்த விஷ யத்தை ஆய்வு செய்யவும் இந்தியாவில் இந்த சமூகங்களின் - தீண்டப் படாத சமூகங்கள் என்று நடத்தப்படும் துரதிருஷ்டத்தைக் கொண் டுள்ள இவர்களின் சிறப்புத் தொழில்கள் யாவை என்பதைக் கண்டறியவும் ஆர்வமுள்ளவர்கள் இந்த உண்மையைக் காண முடியும். இந்தியா முழுவதிலும் தீண்டப்படாதவர்கள் ஆற்றும் சில கடமைகள் அவர்களுக்குப் பொதுவானவையாக உள்ளன என்பதை இந்த விஷயத்திலான ஆய்வு எடுத்துக்காட்டும். இந்தக் கடமைகள் - இறந்த பசுவின் உடலை எடுத்துச் செல்வது, அதன் தோலை உரிப்பது, இறைச்சியை உண்பது, எலும்புகளை விற்பது முதலியவை சம்பந்தமானதாகும். இந்த நிலைபாட்டுக்கு விதிவிலக்கேயில்லை. இது எல்லோருடைய விஷயத்திலும் எல்லா மாகாணங்களுக்கும் பொருந்தும். இறந்த பசுவுக்கும் தீண்டாமைக்கும் இடையில் ஏன் இத்தகைய நெருக்கமான உறவு இருக்க வேண்டும்? இந்த இரண்டும் ஏன் ஒன்றாகச் சேர்ந்து செல்கின்றன? இதற்கு என்னுடைய பதில் ஒன்று மற்றொன்றின் காரணமாக இருப்பதால்தான் அவை இணைந்து செல்கின்றன. இந்து சமூகத்தின் வெறுப்பின் விளை வாகவே தீண்டாமை தோன்றியது. இது பௌத்த மதத்தின் விளைவாக, பசுவைப் போற்றி மதிப்பதை வளர்த்தது, பசுவை உண்பதை நிறுத் தாதவர்களின் பாலும் மதிப்பை வளர்த்தது. மகர்கள் இறந்த பசுவை உண்பதை நிறுத்தவில்லை. அதன் விளைவாக அவர்கள் இந்த வெறுப்புக்குரியவர்களாயினர், அதனால் பாதிக்கப்பட்டனர்.

★ ★ ★

இந்த ஆவணத்தில் முன்வைக்கப்பட்ட மூன்று கேள்விகளுக்கு இப்பொழுது பதில் கூறப்பட்டுள்ளது. ஆயினும், மேலும் ஒரு கேள்வி இருந்துவருகிறது. அது இதுதான்: மகர்கள், மகர்கள் என்று ஏன் அழைக்கப்பட்டனர்?

பலர் இதற்கு விளக்கம் கூறுவதற்கு முயன்றுள்ளனர், ஆனால் அந்த அனைத்து விளக்கங்களிலும் டாக்டர் பண்டார்கர் கொடுத்துள்ள விளக்கமே சரியானதொன்றாகத் தோன்றுகிறது. பண்டார்கரின் கருத்துப்படி, மகர் என்ற சொல் மீருத் அஹர் என்ற சொல்லின் திரிபேயாகும். இறந்த பிராணிகளின் இறைச்சியை உண்டு வாழ்பவர் என்பது இதன் பொருளாகும். இது, தீண்டாமையின் தொடக்கம் சம்பந்தமாக விவாதிப்பதில் மேலே கூறியவற்றோடு இது பொருந்துகிறது. ஆனால் இது சம்பந்தமாக வேறு இரண்டு துணைக் கேள்விகளும் எழுகின்றன. ஒரு கேள்வி, மகர்களின் வாழ்க்கையின் இந்தக் குறிப்பிட்ட அம்சம் அவர்களை அவ்வாறு வகைப்படுத்துவதற்கு ஏன் அடிப்படையாகக் கொள்ளப்பட்டது என்பதாகும். இதற்கான பதில் ஏற்கனவே கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், இது மகர் என்ற சொல் எதிலிருந்து பெறப்பட்டது என்பது எவ்வாறு சரியானது என்பதை வலுப்படுத்துவதால், அதன் சுருக்கத்தை இங்கே மீண்டும் கூறுகிறேன். நான் ஏற்கனவே கூறியது போன்று பசுவின் இறைச்சியை சாப்பிடுவதானது ஒரு காலத்தில் எங்கும் பரவியதாக இருந்ததால், யாரும் இது பற்றி கவனிப்பதற்குக் கவலைப்படவில்லை. சிலர், கொல்லப்பட்ட பிராணியின் இறைச்சியை உண்டனர், சிலர் மாண்டுபோன பிராணியின் இறைச்சியை உண்டனர் என்ற போதிலும், இந்த வேறுபாடு பொருளாதார முக்கியத்துவம் உடையதாக இருந்ததேயன்றி, எத்தகைய மத அல்லது சமூக முக்கியத்துவம் கொண்டதாக இருக்கவில்லை. ஆனால், பசுவின் இறைச்சியை உண்பதை எல்லோரும் கைவிட்டதற்குப் பின்னர், சிலர் தொடர்ந்து அதைச் சாப்பிட்டு வந்ததானது ஒரு வேறுபாட்டை முன்வைத்தது. அது தெளிவாகத் தெரிந்தது. மதம் சார்பானவர்களுக்கு அது முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது. எனவே, மிகவும் வெளிப்படையான, மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த வேறுபாட்டை மக்களின் இதர பகுதியினர், அந்தப் பிரிவினரை அவ்வாறு வகைப்படுத்துவதற்கு ஆதாரமாகக் கொண்டது இயற்கையானதே. ஆனால் மகர் என்ற சொல் எதிலிருந்து பெறப்பட்டது என்பது ஒரு சிக்கலை ஏற்படுத்துகிறது. அதை சமாளித்தாக வேண்டும். இது அந்த சொல்லின் சரியான விளக்கமெனில் மற்றும் அது நடைமுறைக்கு வந்ததற்கு இவைதான் காரணங்கள் எனில், அந்த வேறுபாடு

கூடாமையும் முக்கியத்துவமும் அடைந்தபோதுதான், அது நடைமுறைக்கு வந்திருக்க வேண்டும். மகர்கள் என்று அழைக்கப்படத் தொடங்குவதற்கு முன்னால், வரலாற்றில் மகர்கள் எந்தப் பெயரால் அறியப்பட்டிருந்தனர்? மகர் என்ற பெயர் ஒரு புதிய பெயர் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. ஏனெனில் தியானேஸ்வர் காலத்திற்கு முன்னால் இலக்கியத்திலோ, வரலாற்றிலோ எந்த ஓரிடத்திலும் இந்தப் பெயர் காணப்படவில்லை. ஆயினும் இது, மற்றையக் கேள்வியைக் கூடுதல் முக்கியத்துவமுடையதாக்குகிறது. அதாவது, மகர் என்பது அவர்களுடைய பொதுவான பெயராவதற்கு முன்னால், எந்தப் பெயரால் அவர்கள் அழைக்கப்பட்டனர்? மகர்கள் பர்வாரி என்றும் அழைக்கப்பட்டனர் என்பது நன்கு அறியப்பட்டதே. இந்தப் பெயர் ஒருபோதும் வழக்கொழிந்து போகவில்லை. மகர் என்ற பெயர் கூடுதல் பிரபலமாகிய போதிலும் அந்தப் பெயரும் இதற்கு அக்கம்பக்கமாக இருந்து கொண்டே வந்தது. ஆனால் கடந்த காலத்தில், பர்வாரி என்ற பெயர், மகர் என்ற பெயரைக் காட்டிலும் கூடுதல் பிரதானமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தது - உதாரணமாக, கிழக்கு இந்தியக் கம்பெனிக் காலத்தில், கம்பெனியின் ராணுவத்தில் படைவீரர்களாகவும் அதிகாரிகளாகவும் மகர்கள் மிகப் பெருமளவில் வேலைக்கு அமர்த்தப்பட்டிருந்தனர். அவர்களுடைய சாதிப் பிரிவில் அவர்கள் யாவரும் பர்வாரிகள் என்று வகைப்படுத்தப்பட்டிருந்தனர். எனவே, மகர்களுக்கு இது அவர்களுடைய வேறு பெயராக இருந்தது என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. மகர் என்ற பெயர் அமலுக்கு வருவதற்கு முன்னால் இந்தப் பெயரில்தான் மகர்கள் அழைக்கப்பட்டனர் என்று நான் துணிந்து கூறுவேன். பர்வாரி என்ற இந்தப் பெயர் ஒரு மிகவும் பண்டைக் காலத்தியப் பெயர் என்பது, இது படோலிமியின் ஆவணத்தில் வருகிறது என்பதனால் நிரூபணமாகிறது. 'பௌரவார்டி' என்ற சொல்லை அவர் பயன்படுத்துகிறார். இது அனேகமாக பர்வாரி* என்ற சொல்லின் தவறான எழுத்துக் கூட்டுரு அல்லது தவறான உச்சரிப்பாக இருக்கக் கூடும். பர்வாரி என்ற சொல்லின் பொருள் என்ன? இது பதிலளிப்பதற்கு ஒரு சிரமமான கேள்விதான். இதுபற்றித் தெரிந்திருப்பதெல்லாம், இதன் பொருள் சார்பு என்பதாகும். 'பரிவார்' என்ற சொல்லின் வேர்ப் பொருள் இதுதான். 'பரிவார்' என்ற சொல்தான் திரிந்து 'பர்வாரி' என்று மாறியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. நொறுங்கிய பழங்குடியினரும் தங்களுடைய வாழ்க்கைக்கு ஐயத்திற்கிடமின்றி, கிராம சமூகத்தின் மீதே சார்ந்திருந்த நிலையில், கிராம சமூகம், சமூகத்திற்கு அந்நியர்களான, ஆயினும் அதன்மீது சார்ந்திருக்க

அந்த நொறுங்கிய பழங்குடி ஆட்களைப் பொருத்தமாக 'பர்வாரி' என்று வகைப்படுத்தியிருந்தனர். அன்று நடைமுறையிலிருந்த 'பர்வாரி' என்ற சொல் மகர் சமூகம் என்று அறியப்பட்டிருந்தவர்களுக்கு மட்டும் இடப்பட்டிருக்கவில்லை என்பதைக் கூறியாக வேண்டும். அது ஒரு பொதுவான அர்த்தத்தில் பயன்படுத்தப்பட்டது. எப்படியிருந்தபோதிலும், மாங் சமூகம் என்று இப்பொழுது அறியப்படும் சமூகமும் அதில் உள்ளடங்கியிருந்தது என்பததைக் காட்டுவதற்கு ஆவணபூர்வமான சான்று இருக்கிறது. எனவே 'பர்வாரி' என்ற சொல், கிராமச் சமூகத்திற்கு அந்நியர்களாக வந்து குடியமர்ந்த அனைவருக்கும் பிரயோகப்படுத்தப்பட்டதாகத் தோன்றுகிறது. 'பர்வாரி' என்ற சொல் ஒரு கலப்புச் சொல் என்பது மட்டுமன்றி, மகர் என்ற சொல்லும் ஒரு கூட்டுச் சொல்லாகும். அது பொதுவான தொடக்கமிருப்பதாக குறிப்பதில்லை. மகர் சமூகம் ஒரு கலப்பு சமூகமாத் தோன்றுகிறது, மற்றும், அது உயர்வான தொடக்கமுடைய ஒரு பகுதியையும், தாழ்வான பூர்வீகமுடைய ஒரு பகுதியையும் தன்னுள் கொண்டுள்ளது. மகர்களின் வெவ்வேறு குலங்கள் இதை சுட்டிக் காட்டுகின்றன. 96க்குள் அடங்குகின்ற குலங்கள் உயர் பகுதியைச் சேர்ந்தவை, அவற்றினுள் வராத குலங்கள் தாழ்ந்த பிரிவைச் சேர்ந்தவர்களாவர். ஆனால் கடந்த பலநூறு ஆண்டுகளாக இருந்துவரும் மகர் என்ற பொதுவான பெயர், அவர்களினுள் ஒரு வகைப்பட்ட உணர்வை ஏற்படுத்தியுள்ளது. அது அவர்களிடையில் உயர்ந்தவர் - தாழ்ந்தவர் என்ற எண்ணங்களை அழித்துவிட்டுள்ளது.தற்பொழுது மகர் சமூகம் என்று அறியப்படுகின்றவர்கள் தொடக்கத்தில் வெவ்வேறு பழங்குடிகளின் நொறுங்கிய பகுதிகளின் ஒரு அவியல் கூட்டாகும். அவர்கள் 'பர்வாரிகளாக' அதாவது கிராம சமூகத்தை சார்ந்தவர்கள் என்பதைத் தவிர அவர்களிடையில் பொதுவான அம்சம் எதுவும் கிடையாது.

● ● ●

---

★ பர்வாரி என்ற சொல், பரோடா சமஸ்தானத்தின் ஓர் அரசுக் கடிதத்திலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதற்கு, இந்தத் தொகுதியின் முதல் பாகத்தின் 472ம் பக்கத்தில் VIIவது பின் இணைப்பையும் பார்க்கவும்.

# 22

# சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், நீதி ஆகியவற்றுக்காகக் குடியரசுக் கட்சி நிற்கிறது

*மதமாற்றம் சம்பந்தமாக டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் முடிவின்படி, 1956ல் தாம் புத்த மதத்தைத் தழுவப்போவதாக, 1956 மே மாதத்தில் அறிவித்தார். இதே சமயத்தில், இந்திய அரசியல் சாசனத்தில் பொறிக்கப்பட்டுள்ள கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட ஒரு புதிய அரசியல் கட்சியை அமைப்பது குறித்தும் அவர் ஸ்தூலமாக சிந்தித்துக் கொண்டிருந்தார்.*

*1936ல் 'சுதந்திரமான தொழிலாளர் கட்சி', 1942 ஷெட்யூல்டு சாதியினர் சம்மேளனம், மற்றும் இப்பொழுது இந்தியக் குடியரசுக் கட்சியை நிறுவுவதற்கான முடிவு ஆகியவை ஒரு லட்சியபூர்வமான அரசியல் கட்சியின் வாயிலாகத் தனது தொலை நோக்கை எதார்த்த மாக்குவதற்கு அவர் மேற்கொண்ட கடுமையான முயற்சிகளை விளக்குகின்றன.*

*தனது தொலை நோக்கிற்கு உருவம் கொடுப்பதற்காக, டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், இந்தியக் குடியரசுக் கட்சியின் ஒரு முன்வரைவைத் தீர்மானகரமாகத் தயாரித்தார். திரு.டி.டி. ரூப்வாதே தயாரித்த இந்த முன்வரைவின் மராத்தி மொழியாக்கம், பின்னர் 'பிரபுத்தபாரத் - குடியரசுக் கட்சி நிறுவப்படுவது பற்றி இந்தியர் களுக்குப் பரம்பூஜ்ய டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கரின் பகிரங்கக் கடிதம் என்ற தலைப்பில் வெளியிடப்பட்டது.*

*அந்த முன்வரைவில் கீழ்வருமாறு ஐந்து அத்தியாயங்கள் அடங்கியிருந்தன.*

*அத்தியாயம் 1 :* *ஓர் இயக்கம் எவ்வாறு அரசியல் கட்சியாகிறது?*

*அத்தியாயம் 2 :* *ஜனநாயகம் வெற்றிகரமாகச் செயல்படுவதற்கு முன்நிபந்தனைகள்*

*அத்தியாயம் 3 :* *நாடாளுமன்ற அரசுக்கு ஓர் எதிர்க்கட்சி ஏன் தேவைப்படுகிறது?*

*அத்தியாயம் 4 : ஒரு கட்சி என்பது என்ன?*

*அத்தியாயம் 5 : கட்சியின் குறிக்கோள்களும் லட்சியங்களும்*

*இதற்கேற்ப, 'இந்தியக் குடியரசுக் கட்சி அமைக்கப்படுவது குறித்த செய்தி, 1955 டிசம்பர் 10ம் தேதிய 'ஜனதா' இதழில் வெளி வந்தது. இது சம்பந்தமாக அவர், டாக்டர் ராம் மனோகர் லோஹியா போன்ற தனது ஒத்த மனப்போக்குடைய சமகாலத் தலைவர்களுடன் கடிதப் போக்குவரத்து நடத்தினார்.*

*ஷெட்யூல்டு சாதியினர் சம்மேளனத்தின் நிர்வாகக் கமிட்டி 1956 செப்டம்பர் 30ல் புதுடில்லியில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரின் இல்லத்தில் நடைபெற்றது. டாக்டர் அம்பேத்கர் தலைமை வகித்தார். அந்தக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட எண்.2 தீர்மானத்தின்படி, ஷெட்யூல்டு சாதியினர் சம்மேளனத்தைக் கலைப்பதன் வாயிலாக, 'குடியரசுக் கட்சி' என்ற புதிய அரசியல் கட்சி நிறுவப்படுகிறது, என்று ஏகமனதாக முடிவு செய்யப்பட்டது.[1]*

*1956 அக்டோபர் 13ல், நாகபுரியில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசினார்; அதில் அவர், குடியரசுக் கட்சியின் அமைப்பு விதிகளைத் தான் ஏற்கனவே தயாரித்து விட்டதாகத் திட்டவட்டமாகக் கூறினர்.[2]*

*'இந்தியா ஓட்டளிக்கிறது' என்ற தொகுதியின் ஆசிரியர்கள், ஆர்.சந்திதாஸ், வார்டு மோர்ஹவுஸ், லியோன் கிளார்க், மற்றும் ரிச்சர்டு ஃபான்டெரா, குடியரசுக் கட்சியின் தனிச் சிறப்பான அம்சங்களைப் பற்றிப் பின்வருமாறு கூறினர்:*

*''காலஞ்சென்ற டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கரால் தொடங்கப்பட்ட இந்தியக் குடியரசுக் கட்சி ஓர் அகில இந்திய அரசியல் கட்சியாகும். அவர் ஒரு மாபெரும் அரசியல் சிந்தனை யாளர். மகத்தான சமூகப் புரட்சியாளர், மற்றும் மகத்தான அரசியல் சாசன நிபுணராவார். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய வற்றை அடிப்படையாகக் கொண்டு இந்திய சமுதாயத்தை மறுநிர்மாணம் செய்யும் லட்சியத்திற்குத் தனது வாழ்க்கையை*

---

1. *பிரபுத்த பாரத் : அக்டோபர் 6, மற்றும் 13, 1956.*
2. *பிரபுத்த பாரத், டாக்டர் அம்பேத்கர் : புத்த மதத்திற்கு மதமாற்றம், சிறப்பு இதழ், அக்டோபர் 27, 1956.*

அர்ப்பணித்தார். இந்தியக் குடியரசுக் கட்சி இந்த மகத்தான பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்கிறது:

**இந்தியக் குடியரசுக் கட்சி நாடாளுமன்ற ஜனநாயகத்திற்காக நிற்கிறது.**

1. இந்தியக் குடியரசுக் கட்சி நாடாளுமன்ற அரசு முறைக்காக நிற்கிறது. இது, பொது மக்களின் நலன்களுக்காகவும், தனிநபரின் நலனுக்காகவும் ஆகச் சிறந்த வடிவமாகும்.

**மதச் சார்பின்மைக்கு ஆதரவு**

2. இந்தியக் குடியரசுக் கட்சி, அரசின் மதச்சார்பற்ற குணாம்சத்தை உயர்த்திப் பிடிக்கிறது.''[1]

முன்வரைவு வாசகம் பின்வருமாறு:

## அத்தியாயம் 1

### ஓர் இயக்கம் எவ்வாறு ஓர் அரசியல் கட்சியாகிறது?

இந்திய தேசியக் காங்கிரஸ் 1885ல் நிறுவப்பட்டது. 1947 வரையிலும் இந்திய சுதந்திரத்தைப் பெறுவதற்கான ஓர் இயக்கமாக அது செயல்பட்டது. ஆரம்பத்தில் அதற்குத் திட்டவட்டமான இலக்கு இல்லாமலிருந்தது. நல்ல அரசுதேவை என்ற கோரிக்கையுடன் அது தொடங்கியது. சில காலத்திற்குப் பின் அது தனது இலக்கை மாற்றிக் கொண்டது. அது சுயாட்சி என்று தனது லட்சியத்தை விளக்கியது. பிரிட்டிஷ் அரசியல் சிந்தனை அதை-சுயாட்சியை இரண்டாகப் பிரித்தது. (1) குடியேற்ற நாட்டந்தஸ்து, மற்றும் (2) சுதந்திரம். குடியேற்ற நாட்டந்தஸ்து என்றால், ஒரு பொதுவான மன்னருக்கு விசுவாசம் செலுத்துவதோடு கூடிய சுதந்திரம் என்று அர்த்தப்படுத்தப்பட்டது. சுதந்திரம் என்றால், மன்னருக்கு விசுவாசம் செலுத்துவது இல்லாத சுதந்திரம் என்று அர்த்தப்படுத்தப்பட்டது.

சில காலத்திற்கு இந்திய தேசியக் காங்கிரஸ், டொமினியன் அந்தஸ்துக்கு உடன்பாடாயிருந்தது. ஆனால் சிறிது காலத்திற்குப்

1. இந்தியா வாக்களிக்கிறது, பக்கம் 35.

பின்னர், இந்திய தேசியக் காங்கிரஸ் மிகவும் பரபரப்பான முறையில், 1930ல், சுதந்திரத்திற்கு ஆதரவான ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அதை அது 1947ல் பெற்றது. இது வரையிலும் காங்கிரஸ், நாடாளுமன்ற ஜனநாயகத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கத்திற்காகத் திரட்டப்பட்ட ராணுவத்தைப் போன்று இருக்கவில்லை, மாறாக, ஓர் அந்நிய அரசுக்கு எதிராக அரசியல் போரை நடத்தும் நோக்கத்திற்காகத் திரட்டப்பட்டிருந்தது. இதைக் கண்ட திரு.காந்தி, காங்கிரஸ் கலைக்கப்பட்டுவிடலாம் என்றும், அரசை நடத்துவதற்குக் கட்சி அடிப்படையில் புதிய அரசியல் கட்சிகள் உருவாக்கப்படலாம் என்றும் மிகவும் விவேகமான முறையில் ஆலோசனை கூறினார். ஆனால் கட்சித் தலைவர்கள், அரசின் லகானைத் தங்கள் கைகளில் எடுத்துக் கொள்வதற்குத் தங்களுடைய முகாம்களில் தயாராக இருந்தனர். திரு.காந்தியின் புத்திமதியைக் கேட்பதற்கு அவர்கள் மறுத்தனர். சாதாரணமாக, சமாதானம் ஏற்பட்டதற்குப் பின்னர், அதற்காகப் போரிட்ட ராணுவம் கலைக்கப்பட்டுவிடும். இதற்கான எளிய காரணம் என்னவெனில், போரின்போது, ராணுவத்திற்கு ஆட்களைத் திரட்டும் தரங்கள் தாழ்த்தப்பட்டு, நல்லவர்கள், மோசமானவர்கள், அசிரத்தையானவர்கள் ஆகிய எல்லோரும் சேருவதற்கு அனுமதிக்கப்படுகிறார்கள். இந்தியா விஷயத்தில் ராணுவம் கலைக்கப்படவில்லை என்பது மட்டுமின்றி, அது அரசைக் கைப்பற்றவும் அனுமதிக்கப்பட்டது.

நமக்குக் காங்கிரஸ் ஆட்சியின் பத்து வருட அனுபவம் இருக்கிறது. அது அவ்வளவு நம்பகமானதல்ல என்று தான் கூற முடியும். திரு.காந்தி அவர்களின் ஆலோசனையை (புத்திமதியை) ஆழ்ந்த உணர்வுடன் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டிய காலம் வந்து விட்டது. ஓர் எதிர்க்கட்சியாக செயல்பட வேண்டிய மற்றொரு கட்சியை உருவாக்குவதற்கு நாம் முன் செல்ல வேண்டும்.

## அத்தியாயம் 2

இந்த அத்தியாயத்தில், 1952 டிசம்பர் 22ம் நாள்* திங்கள் அன்று, புனேயில், ''ஜனநாயகம் வெற்றிகரமாகச் செயல்படுவதற்கான முன் நிபந்தனைகள்'' என்ற தலைப்பில் டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர் நிகழ்த்திய உரையின் வாசகம் அடங்கியுள்ளது - ஆசிரியர்கள்.

---

★ இந்தத் தொகுதியின் 3ம் பாகம், பக்கம் 472 - 486ல் இந்த உரை வெளியிடப்பட்டுள்ளதால், அந்த வாசகம் மீண்டும் இங்கே கொடுக்கப்படவில்லை.

## அத்தியாயம் 3

### நாடாளுமன்ற அரசுக்கு ஓர் எதிர்க்கட்சி ஏன் தேவை?

கற்றறிந்தவர்களைக் கொண்ட பொதுஜன அபிப்பிராயத்தில் மக்களில்லாமல் நாடாளுமன்ற ஜனநாயகம் செயல்படமுடியாது. அரசும் நாடாளுமன்றம் சரியாக செயல்படுவதற்கு, பொதுவான அபிப்பிராயம் என்ன என்று அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

இதை இன்னும் தெளிவாகக் கூறுவதெனில், கல்விக்கும் (போதனைக்கும்) பிரச்சாரத்திற்கும் இடையில் வேறுபாட்டைக் காண்பது அவசியமாகும். பிரச்சாரத்தின் மூலமான அரசு என்பது போதனையின் மூலமான அரசினின்றும் மிகவும் வேறுபட்டதாகும். பிரச்சாரம் என்றால் விஷயத்தின் சாதகமான அம்சங்களை முன் வைப்பதாகும். கல்வி (போதனை) என்றால், விஷயத்தின் சாதக பாதகங்களை சீர்தூக்கிப் பார்க்கும் அரசு என்று பொருள்.

எந்த விஷயம் சம்பந்தமாகவும் நாடாளுமன்றத்தின் முடிவு தேவைப்படும்போது, அந்த விஷயத்தின் சாதக பாதகங்களை மக்களின் முன் வைக்க வேண்டியது அவசியமென்றால், அப்பொழுது இரண்டு கட்சிகள் இருக்க வேண்டியது தெளிவு; ஒரு கட்சி, சாதகமான அம்சங்களை முன்வைக்க வேண்டும், மற்றையது எதிர்நிலையான அம்சங்களை முன்வைக்க வேண்டும். ஒரு கட்சி மட்டுமே இருப்பது என்பது சர்வாதிகாரத்தைத் தவிர வேறல்ல. சர்வாதிகாரத்தைத் தவிர்ப்பதற்கு ஓர் இரண்டாவது கட்சி அவசியமாகும். இது ஒரு கேந்திரமான விஷயமாகும். நல்ல சட்டங்களைக் காட்டிலும் நல்ல நிர்வாகம் பற்றித்தான் மக்கள் அதிக அக்கறை கொள்வார்கள், சட்டங்கள் நல்லவையாக இருக்கக்கூடும், ஆனால் அதன் நிர்வாகம் மோசமாக இருக்கக்கூடும்.

சட்டங்களை நிர்வாகம் செய்வது நல்லதாகவோ அல்லது மோசமாகவோ இருப்பதானது அவற்றை நிர்வாகம் செய்வதற்கு நியமிக்கப்பட்டுள்ள அதிகாரியின் சுதந்திரத்தைப் பொறுத்துள்ளது. ஒரே ஒரு கட்சி மட்டுமே இருக்குமானால், அந்த அதிகாரி, அமைச்சர் என்று அழைக்கப்படும் அவருடைய அரசியல் தலைவருக்குக் கட்டுப்பட்டவராக இருப்பார். அமைச்சரின் வாழ்வு வாக்காளர் களைத் திருப்திப்படுத்துவதைச் சார்ந்துள்ளது. அடிக்கடி அமைச்சர், வாக்காளர்களின் நன்மைக்காக, தவறுகளைச் செய்யுமாறு அதிகாரியை

நிர்பந்திக்கிறார். ஓர் எதிர்க்கட்சி இருக்குமேயானால், அமைச்சரின் அத்தகைய நடவடிக்கை அம்பலப்படுத்தப்பட்டு, தவறு செய்வது தடுத்து நிறுத்தப்படும்.

நல்ல நிர்வாகத்திற்கு அடுத்தப்படியாக, மக்கள் விரும்புவது பேச்சுரிமையும், கைது செய்யப்படாமலிருப்பதற்குமான உரிமையுமாகும். ஓர் எதிர்க்கட்சி இருக்கும்போது பேச்சுரிமையும், செயல்படுவதற்கான உரிமையும் இருக்கும். எதிர்க்கட்சி இல்லாமலிருக்கும்போது அவற்றுக்கு ஆபத்து ஏற்படும். ஏனெனில் அப்பொழுது, ஒரு குறிப்பிட்ட நபர் பேசுவதினின்றும் ஏன் தடுக்கப்பட்டார். தனது இறுதி லட்சியத்தை நோக்கிச் செல்வதினின்றும் ஏன் தடுக்கப்பட்டார் என்று யாரும் கேள்வி எழுப்ப முடியாது.

ஓர் எதிர்க்கட்சி ஏன் அவசியமென்பதற்கு இவையெல்லாம் காரணங்களாகும். நாடாளுமன்ற அரசு இருக்கும் எல்லா நாடுகளிலும் எதிர்க்கட்சியானது ஓர் அரசியல் நிறுவனம் என்று அங்கீகரிக்கப்படுகிறது.

இங்கிலாந்திலும், கனடாவிலும் எதிர்க்கட்சியானது சட்டப்படி அங்கீகரிக்கப்பட்ட ஓர் அமைப்பாகும். இரு நாடுகளிலும் நாடாளுமன்றம், எதிர்க்கட்சித் தலைவருக்கு சம்பளம் வழங்கப்படுகிறது, அப்பொழுதுதான் அவர் தனது நாடாளுமன்றக் கடமைகளை, சிரமமின்றி நிறைவேற்ற முடியும்.

## அத்தியாயம் 4

### ஒரு கட்சி என்றால் என்ன?

கட்சி ஒரு இராணுவத்தைப் போன்றதாகும். அதற்கு,

(1) ஒரு தலைவர் இருக்க வேண்டும். அவர் சேனாதிபதி போன்றவர்

(2) ஒரு ஸ்தாபனம் பின்வருவனவற்றைக் கொண்டிருக்கும்:

(i) அங்கத்தினர்கள், (ii) ஓர் ஆதாரத் திட்டம், (iii) ஒழுங்கு, கட்டுப்பாடு.

(3) அதற்குக் கோட்பாடுகளும் கொள்கையும் இருக்க வேண்டும்.

(4) அதற்கு வேலைத் திட்டங்களும் அல்லது செயல்பாட்டுக்கான திட்டமும் இருக்க வேண்டும்.

(5) அதற்கு நீண்ட காலத்திட்டமும் நடைமுறை உத்திகளும் தேவை, அதாவது, எதை எப்பொழுது செய்ய வேண்டுமென்றும், தனது இலட்சியத்தை எவ்வாறு அடைவது என்பதற்கும் திட்டமிட வேண்டும். எளிய சொற்களில் கூறுவதெனில், அது சில குறிக்கோள்களுடன் கூடிய வாக்காளர்களின் ஓர் கழகமாகும்.

(1) ஒரு கட்சி ஸ்தாபனத்தை அமைப்பதையும் வளர்ப்பதையும் ஊக்குவிப்பது, அதன் வாயிலாகக் கட்சியைப் பேணி வளர்ப்பதாகும்.

(2) பத்திரகைகள் வாயிலாகவும், சொற்பொழிவுகள், உரைகள், பிரசுரங்கள் மூலமும் கட்சிக் கோட்பாடுகளைப் பரப்புவது.

(3) ஓர் அரசியல் கட்சியை அமைப்பதன் மூலம் ஒன்றுபட்ட அரசியல் நடவடிக்கைக்கு ஓர் அடிப்படையாக சேவைபுரிய, குடியரசுக் கட்சி என்று அழைக்கப்படும் அமைப்பின் உறுப்பினர்களுக்கு சட்டசபையில் பிரதிநிதித்துவம் வகிக்க.

## அத்தியாயம் 5

### கட்சியின் நோக்கங்களும் குறிக்கோள்களும்

1. இந்திய அரசியல் சாஸனத்தின் முன்னுரை இவ்வாறு கூறுகிறது: இந்திய மக்களாகிய நாங்கள், இந்தியாவை இறையாண்மை படைத்த ஜனநாயகக் குடியரசாக அமைத்துக் கொள்வதென்று ஆழ்ந்த உணர்வுடனும், அதனுடைய அனைத்துக் குடிமக்களுக்கும் பின்வருவனவற்றைப் பெற்றுத் தருவதென்றும் முடிவு செய்துள்ளோம்.

சமூக, பொருளாதார, அரசியல் நீதி;

சிந்தனை, வெளிப்படுத்துதல், நம்பிக்கை, ஈடுபாடு, மற்றும் வழிபாட்டு சுதந்திரம்;

அந்தஸ்து மற்றும் வாய்ப்பு சமத்துவம்; எல்லோருடனும் சகோதரத்துவத்தை வளர்ப்பது, தனிநபரின் மதிப்பு மற்றும் நாட்டின் ஒற்றுமையை வளர்ப்பது.

நம்முடைய அரசியல் நிர்ணய சபையில் இந்த 1949 நவம்பர் இருபத்தி ஆறாம் நாளில், இந்த அரசியல் சாஸனத்தை ஏற்றுக் கொண்டு, சட்டமாக்கி, எங்களுக்கு வழங்கிக் கொள்கிறோம்.

முன்னுரையில் வரையறுத்துக் கூறப்பட்டுள்ள நோக்கங் களையும் குறிக்கோள்களையும் -அதாவது நீதி, சுதந்திரம், சமத்துவம் மற்றும் சகோதரத்துவத்தை எய்துவது என்பதே குடியரசுக் கட்சியின் நோக்கங்களும் குறிக்கோள்களுமாகும்.

இவை, கட்சியின் நோக்கங்களும் குறிக்கோள்களுமாக இருந்துவரும் நிலைமையில், பொது விவகாரங்கள் சம்பந்தமாகக் கட்சியின் கண்ணோட்டம், கீழ்வரும் கோட்பாடுகளை அடிப்படை யாகக் கொண்டிருக்கும்:-

(1) அது, அனைத்து இந்தியர்களையும் சட்டத்தின் முன் சமமானவர்கள் என்று கருதும்; ஆனால் சமத்துவத்திற்கு உரிமை பெற்றவர்கள் என்ற நிலையில், அதற்கேற்ப, சமத்துவம் இல்லாத இடத்தில் அதைப் பேணி வளர்க்கும், அது மறுக்கப்படும் இடத்தில் அதை உயர்த்திப் பிடிக்கும்.

(2) ஒவ்வொரு இந்தியரையும் முழுமையானவர் என்று கருதி, அவருடைய சொந்த வழியில் அவரது சொந்த வளர்ச்சிக்கு அவருக்கு உரிமையுண்டு என்றும், அந்த நோக்கத்திற்கு அரசு ஒரு சாதனம் என்றும் கருதுகிறது.

(3) ஒவ்வொரு இந்தியனுக்கும் சமய, பொருளாதார, மற்றும் அரசியல் சுதந்திரம் உண்டு என்ற உரிமையை நிலைநாட்டும் - பிற இந்தியர்கள் அல்லது நாட்டின் நலனின் பாதுகாப்பதன் தேவை யிலிருந்து எழும் எல்லை வரம்புகளுக்கு இது உட்பட்டது.

(4) ஒவ்வொரு இந்தியனுக்கும் சமத்துவ வாய்ப்புக்கான உரிமையை உயர்த்திப் பிடிக்கும் - அதே பொழுதில், கடந்த காலத்தில் எந்த வாய்ப்பும் பெறாதவர்களுக்கு, வாய்ப்புப் பெற்றவர்களைக் காட்டிலும் முன்னுரிமை வழங்கப்படும்.

(5) ஒவ்வொரு இந்தியனும் வறுமையினின்றும் அச்சத்தி னின்றும் விடுபட்டவராக இருக்கச் செய்வது அரசின் கடமையாகும் என்பதை எப்பொழுதும் அது உணரும்படியாகச் செய்யும்.

(6) சுதந்திரம், சமத்துவம் மற்றும் சகோதரத்துவம் பராமரிக்கப் பட வேண்டும் என்று அது வலியுறுத்தும். மற்றும் மனிதனை மனிதனும், வர்க்கத்தை வர்க்கமும், நாட்டை நாடும் ஒடுக்குவதி னின்றும் சுரண்டுவதினின்றும் மீட்பதற்காகப் பாடுபடும்.

(7) நாடாளுமன்ற அரசு முறைக்காக அது நிற்கிறது; - இதுதான் பொதுமக்களின் நலனுக்கும், தனி நபரின் நலனுக்கும் சிறந்த அரசு வடிவமாகும்''.



# 23

# 'புத்தரும் அவருடைய தம்மமும்' மூன்றில் ஒன்று

'புத்தரும் அவருடைய தம்மமும்' என்ற நூலுக்கு முகவுரை, டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரால் *1956*, மார்ச் *15*ல், அவருக்கே உரிய சிறந்த முறையில் தன் கையாலேயே *13* நீண்ட தாள்களில் எழுதப் பட்டது. அதை எழுதி முடிப்பதற்கு அவர் மூன்று முறை பேனாக் களை மாற்றினார். சந்தேகத்திற்கிடமின்றி, மிகத் தெளிவாகக் கூறுவதற்கு, 'முகவுரையின் கடைசி பாரா இங்கே அப்படியே மறு பிரசுரம் செய்யப்படுகிறது, இது ஏற்கனவே கூறியதற்கு நல்ல சான்றாக அமைகிறது.

I may mention that this is one of the three books which will form a group for the proper understanding of Buddhism. The other two books are (1) Buddha and Karl Marx and (2) Revolution and Counter Revolution in Ancient India. They are written out in parts. I hope to publish them soon.

15th March 1956. B.R. Ambedkar

புத்த மதத்தை சரியாகப் புரிந்து கொள்வதற்கான மூன்று புத்தகங்களின் தொகுதியில் அடங்கியுள்ள புத்தகங்களில் ஒன்றாகும் இது. மற்ற இரு புத்தகங்கள் (1) புத்தரும் கார்ல்மார்க்சும் மற்றும் (2) பண்டைய இந்தியாவில் புரட்சியும் எதிர்ப்புரட்சியும். அவை பகுதி பகுதியாக எழுதப்பட்டன. அவற்றை விரைவில் வெளியிட நான் நம்பிக்கை கொண்டிருக்கிறேன்.

*மார்ச் 15, 1956,* (ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்[1].

---

1. ராட்டு நானக்சந்த், டாக்டர் அம்பேத்கரின் கடைசி சில ஆண்டுகள், பக். 197.

# 24

# அரசியலில் பிரவேசிப்பதற்குப் பயிற்சிப் பள்ளி

### ஆசிரியர் குறிப்பு

நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கும் மாநில சட்டப் பேரவை உறுப்பினர்களுக்கும் எந்த முறைப்படியான தகுதிகள் இருக்க வேண்டும் என்பது சம்பந்தமாக 1962ல், பேராசிரியர் கே.டி.ஷா நடாளுமன்றத்தில் ஒரு தீர்மானத்தைப் பிரேரேபித்தார். சில குறைந்த பட்சக் கல்வித் தகுதிகள் இருக்க வேண்டுமென்று உறுப்பினர்கள் கருதினர். ஆனால் அத்தகைய வரைமுறை, ஏராளமான மக்களைப் போட்டியிட முடியாமல் செய்துவிடும். இதுகுறித்து டாக்டர் அம்பேத்கர், சட்டத்துறை அமைச்சர் என்ற வகையில், எத்தகைய முறைப்படியான தகுதிகளுக்கு பதிலாக, போட்டியிடுபவர்களுக்கு ஞானமும் (பிரத்னியா) பண்பாடும் (ஷீல்) இருக்க வேண்டும் என்று ஆலோசனை கூறினார். அவருடைய உரையின் பொருத்த மான பகுதி கீழே தரப்படுகிறது.

''ஆயினும் அவருடைய தீர்மானத்தை ஆதரித்தவர்கள் அவரது மனதில் உள்ளதை சரியாக வியாக்கியானம் செய்துள்ளார்கள் என்று நான் கருதுகிறேன். மற்றும், பேராசிரியர் ஷாவின் தீர்மானத்திற்கு ஆதரவாக நிகழ்த்தப்பட்ட பல்வேறு உரைகளை கவனத்தில் எடுத்துக் கொண்டு பார்க்கும்போது, அரசியல் சாசனத்தில் குறிப் பிடப்பட்டுள்ளவை தவிர, மேலும் சில தகுதிகளைக் கூடுதலாகச் சேர்க்க வேண்டும் என்று ஆர்வத்துடன் குறிப்பிட்ட பல உறுப் பினர்கள் ஒரு வகைப்பட்ட கல்வித் தகுதியை மனதில் கொண் டிருந்தார்கள் என்று தோன்றுகிறது. ஆனால் அவர்களில் யாரும் திட்ட வட்டமாகக் குறிப்பிடவில்லை; ஒரு வேட்பாளர் சட்டப்படி நிற்ப தற்குத் தகுதியுடையவராவதற்கு அவர்கள் என்ன கல்வித் தகுதியை வரையறை செய்ய விரும்புகிறார்கள் என்பது குறித்து யாரும் எவ்விதக் கருத்தும் எனக்குத் தரவில்லை.

இந்த அவையில் உறுப்பினராவதற்குக் கல்விதான் ஒரே தகுதியாக இருக்க முடியாது என்று எனக்குத் தோன்றுகிறது. புத்தரின் சொற்களைப் பயன்படுத்துவது எனில், மனிதனுக்கு இரண்டு விஷயங்கள் தேவை என்று அவர் குறிப்பிட்டார். ஒன்று, ஞானம்,

மற்றொன்று பண்பாடு. பண்பாடு இல்லாது ஞானம் மட்டுமே இருப்பது மிகவும் அபாயகரமானதாகும், அத்துடன் கூடவே பண்பாடும் இருக்க வேண்டும். இதன் பொருள் ஒழுக்க ரீதியான துணிவு, எத்தகைய சபலத்திற்கும் இடமளிக்காமல் சுயேச்சையாக இருக்கும் தன்மை, ஒருவர் தனது லட்சியங்களுக்கு உண்மையாக இருத்தல் என்பதாகும். பேராசிரியர் ஷாவை ஆதரித்துப் பேசிய உறுப்பினர்களின் உரைகளில் இரண்டாவது தகுதி குறித்து எத்தகைய குறிப்பையும் என்னால் காணமுடியவில்லை. இந்த மதிப்புமிக்க பேரவையினுள் பிரவேசிக்கும் உறுப்பினர்களுக்கு இந்தத் தகுதி இருக்க வேண்டுமென்பதில் நான் மிகவும் ஆர்வத்துடன் இருந்த போதிலும், போதிய அளவு பண்பாடு இல்லாத உறுப்பினருக்கு அந்த மதிப்புமிக்கத் தகுதியை உறுதிப்படுத்துவதற்கு எந்த வழி முறையையும் காண்பது எனக்கு மிக மிக சிரமமாக இருக்கிறது.

கல்விப் பிரச்சினைக்கு வரும்போது, கல்லாமையை ஒரு நற்பண்பாக நான் கருதுகிறேன் என்று யாரும் புரிந்துகொள்ளக் கூடாது என்று நான் விரும்புகிறேன். இதை மிகத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். கல்வியானது ஒரு மிகவும் அவசியமான தகுதி என்று நான் கருதுகிறேன். ஏனெனில், அந்த அளவு தகுதி பெற்றி ருப்பது ஒருவர் தனது கடமையை ஆற்றுவதற்கு இது மிகவும் அவசியமாகும். இந்த அவையில் சிலர் கல்வித் தகுதி இல்லாத வர்களாக இருந்த போதிலும், தாங்கள் பிரதிநிதித்துவப்படுத்தும் வர்க்கத்தின் குறைகளுக்குக் குரல்கொடுப்பதற்கு மிகவும் தகுதி உடையவர்களாக இருக்கிறார்கள். இது குறித்து நான் நிச்சியமாக அறிவேன். ஒரு கூடுதல் கல்வி கற்ற நபரால் அந்தப் பணியை நிறை வேற்ற முடியாது. ஏனெனில் அவருக்கு அதுபற்றித் தெரியாது, அந்த அனுபவமும் அவருக்கு இல்லை. ஆனால், இந்த வர்க்கங் களிலிருந்து வரும் நண்பர்கள்,- அவர்களிடம் எனக்கு இயல் பாகவே மிகுந்த அனுதாபம் உண்டு - அவர்கள் பிரதிநிதித்துவப் படுத்தும் மக்கள் பிரிவுக்கு நிவாரணம் அளிப்பதற்குக் கூடுதல் தேவையாயிருப்பது, இந்த அவையில் உரைகள் நிகழ்த்துவது மட்டுமல்ல; அவர்களின் குறைகளை அகற்றுவதற்குத் தீர்வுகளை யோசனை கூறுவதுமாகும். உரைகள் நிகழ்த்துவதும் குறைகளை எடுத்துக் கறுவதும் மிகவும் எளிதான விஷயம்; ஆனால் தீர்வுகளை உருவாக்குவது மிகவும் சிரமமான காரியமாகும். அதற்குக் கல்வி தேவை, எனவே, பிற்படுத்தப்பட்ட வர்க்கங்கள் ஷெட்யூல்டு சாதி யினர், அல்லது பழங்குடி பிரதேசங்களின் கண்ணோட்டத்திலிருந்தும் கூட கல்வி ஒரு மிகவும் அவசியமான ஆக்கக் கூறு ஆகும். இதை நாம்

எவ்வாறு உறுதிப்படுத்த முடியும்? ஏதாவது ஒரு வகைப்பட்ட கல்வித் தகுதி வேண்டும் என்ற ஆலோசனையை நான் பரிசீலித்த போது, கொள்கை ரீதியில் அல்லது அதனுடைய அறிவுசார்ந்த அம்சத்தில் நல்லதாக இருக்கும் ஒரு கருத்தரையை, பிற தீமைகளைத் தோற்றுவிக்காமல் நடைமுறைக்குக் கொண்டுவர முடியாது என்பதை நான் கண்டேன். அதுதான் எனக்கு ஏற்பட்டுள்ள இடர்ப்பாடு. கல்வித் தரத்தை எந்த நிலையில் நிர்ணயிப்பது? பி.ஏ. படித்தவர்கள் மட்டுமே இந்த அவையின் உறுப்பினர்களாவதற்குத் தகுதி பெற்ற வர்கள் என்று நிர்ணயிக்க வேண்டும் என்று நீங்கள் கூறுவீர்களா? ஒருக்கால் நீங்கள் அவ்வாறு கூறினால், இதன் விளைவு என்ன ஆகும்? கல்லூரிக்குள்ளேயோ, பல்கலைக் கழகத்தினுள்ளேயோ நுழையாத பலர், எந்தப் பட்டதாரியைக் காட்டிலும் கல்வி ரீதியிலும் அறிவு ரீதியிலும் மிகவும் தகுதி பெற்றவர்களாக இருக்கிறார்கள் என்பதை உறுப்பினர்கள் ஒரு வேளை அறிந்திருக்கக் கூடும். அத்தகையோர் ஏராளமானவர்கள் இருக்கிறார்கள். தனிப்பட்ட முறையில் கல்வி கற்றுக் கொண்ட இவர்களை, பி.ஏ.க்களைப் போன்றும் அல்லது எம்.ஏ.க்களைப் போன்றும் சம அளவில் அல்லது மேம்பட்ட அளவில் தகுதிபெற்றுள்ள இவர்களை - ஒரு பல்கலைக் கழகத்தி லிருந்து அவர்கள் சான்றிதழ் பெறவில்லை என்ற காரணத்தினால் ஒதுக்கி வைக்கப்போகிறீர்களா? அவ்வாறு செய்வது ஒரு முகவும் துரதிருஷ்டமான நிகழ்ச்சியாக இருக்கும் என்று நான் நினைக்கிறேன்.

மற்றொரு நிலைமையை எடுத்துக் கொண்டு பாருங்கள், இந்த நாட்டில், கல்வி மிகவும் தாழ்ந்த மட்டத்தில் இருக்கிறது. அது அவ்வாறு இருக்கிறது என்பது மட்டுமன்றி, ஏதோ காரணத்தினால் - இதை நாம் அனைவரும் அறிவோம். கல்வியானது இந்த நாட்டில் எல்லா சமூகங்களிடையிலும் முழுமையாகப் பரவவில்லை. சில சமூகங்கள் உயர் கல்வி பெற்றவையாக இருக்கின்றன, சில சமூகங் கள் கல்வியில் மிகமிகத் தாழ்ந்த நிலையில் உள்ளன. உதாரணமாக, பி.ஏ., அல்லது மெட்ரிகுலேஷன் படிப்பைக் கூட ஒருபடித்தரமாக நீங்கள் ஏற்படுத்துவீர்களேயானால், நீங்கள் இந்த அவையின் உறுப் பினர் பதிவை ஒரு சிலரின் ஏகபோகமாக்குகிறீர்கள் இல்லையா? அந்த விளைவுதான் ஏற்படுமென்று நான் அஞ்சுகிறேன். ஒருவேளை நீங்கள் படிப்புத் தரத்தைத் தாழ்த்துகிறீர்கள் என்று உதாரணமாக, நான்காம் வகுப்பு வரை எழுத, படிக்க மற்றும் கணக்குப் போடுகிற அளவிற்குத் தாழ்த்துகிறீர்களென்றால், அப்பொழுது எந்த சமூகமும் தனது உறுப்பினர்களை இந்த அவைக்கு அனுப்பும் வாய்ப்புக் கிடைக்கக்கூடும். அந்தத் தகுதி போதுமானதா? அது எவ்வித மதிப்பும் உடையதல்ல.

எனவே, என்னுடைய விண்ணப்பம் இதுதான். அந்தப் படிப்பு வரை படித்து, இந்த அவையின் உறுப்பினராவது நல்லதுதான். தங்களுடைய பல்வேறு தொகுதிகளை இந்த அவையில் பிரதிநிதித்துவப்படுத்துவதற்கு வருகின்ற உறுப்பினர்களுக்கு ஓரளவு கல்வி இருக்க வேண்டுமென்ற உணர்வை நான் குறைகூறப் போவதில்லை. ஆனால் அதற்கு சட்டப்படியான அமலாக்கத்தை நீங்கள் எவ்வாறு செய்ய முடியும் என்பதை என்னால் பார்க்க முடியவில்லை. எனவே, என்னுடைய ஆலோசனை என்னவெனில், இந்த விஷயத்தை மக்களின் முடிவிற்கே விட்டுவிடலாம், அல்லது அரசை நடத்தவிருக்கும் அரசியல் கட்சிகளுக்கே விட்டுவிடலாம். அரசியல் கட்சிகள், தமது சொந்தக் குறிப்பிட்ட நோக்கங்களுக்காக, இந்த விஷயம் குறித்து கவனம் செலுத்தாமல் விட்டு விடுவார்களேயானால், மக்கள், தாங்களே, காலப்போக்கில் இது குறித்து முடிவு செய்வார்கள், இந்த அவையில் தமது கடமைகளை சரிவர நிறைவேற்ற முடியாதவர்களைத் தொடர்ந்து இருந்து வருவதற்கும், மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுவதற்கும் மக்கள் ஒருபோதும் அனுமதிக்க மாட்டார்கள். அவர்களுக்குப் பயன்கள் தேவை. தங்களுடைய நல்வாழ்வு பராமரிக்கப்பட வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். இது குறித்து நான் நிச்சயமாகக் கூறமுடியும். இந்த நோக்கத்தை எய்துவதற்கான ஒரே கருவி, இந்த அவைக்கு நல்ல நபர்களைத் தேர்ந்தெடுப்பதுதான் என்பதை அவர்கள் உணருவார்கள். எனவே, இந்த விஷயத்தை மக்களிடம் விட்டுவிடுவதுதான் முறையான பாதை என்று நான் நினைக்கிறேன்.''[1]

தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களுக்கு ஞானமும் பண்பாடும் இருக்கக் கூடும் என்றபோதிலும், அவர்களுக்கு நாடாளுமன்ற சட்டமியற்றும் நடைமுறையில் பயிற்சி பெற்றிருப்பது அவசியம் என்பதை டாக்டர் அம்பேத்கர் மிகவும் உணர்ந்திருந்தார். இந்த எண்ணம் அவருடைய மனதில் ஊடாடிக் கொண்டிருந்ததால், அவர் 'அரசியலில் பிரவேசிப்பதற்கான பயற்சிப் பள்ளி' ஒன்றை நிறுவும் ஆலோசனையை அவர் முன்வைத்தார்.

இந்தியாவில் ஜனநாயக சக்திகளை ஊக்குவிப்பதற்கும், அவருடைய உத்தேசக் குடியரசுக் கட்சியில் புதிய ரத்தத்தைக் கொண்டுவருவதற்கும் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் ''அரசியல் பிரவேசிப்பதற்கான பயிற்சிப் பள்ளியை 1956 ஜூலையில் நிறுவினார்.

1. கட்டுரைகளும் சொற்பொழிவுகளும், தொகுதி 15, பக். 189 - 191.

டாக்டர் அம்பேத்கர் அதனுடைய இயக்குநர் (டைரக்டர்) ஆகவும், திரு.எஸ்.எஸ்.ரெகே, அதனுடைய பதிவாளராகவும் செயல்பட்டனர். சட்டப் பேரவையில் சேரும் ஆர்வமுள்ளவர்களுக்காக இந்தப் பள்ளி நிறுவப்பட்டது. இது நாட்டில் இத்தகைய முதலாவது பள்ளியாகும். புதிதாக வருபவர்கள், பொருளியல், அரசியல், சமூக மற்றும் நாடாளுமன்ற நடைமுறை விஷயங்கள் போன்ற பல்வேறு விஷயங்கள் சம்பந்தமாகத் தமது கருத்துக்களை முன்வைப்பதற்கான பேச்சுத்திறனை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார்.

ஒரு நல்ல ஆளுமையும், சிறந்த விஷய ஞானம் உள்ளவரும், கவர்ந்திழுக்கும் முறையில் நன்றாகப் பேசக் கூடியவருமான ஒரு முதல்வரை, தனது பயிற்சிப் பள்ளிகக்கு அவர் தேடிக் கொண்டிருந்தார். ஆசிரியரின் ஆற்றலின் மீதும் பேச்சுத் திறமையின் மீதும் தான் பள்ளியின் நன்மதிப்பு பெருமளவு சார்ந்துள்ளது என்று அவர் உறுதியாக நம்பினார். இந்தப் பள்ளி 15 மாணவர்களுடன் தொடங்கி, 1956 ஜூலை 1 முதல் 1957 மார்ச் வரையில் செயல்பட்டது.

இந்தப் பள்ளியின் மாணவர்களுக்கு 1956 டிசம்பரில் பேச்சுத் திறமை பற்றி சொற்பொழிவுகள் நிகழ்த்துவதற்கு டாக்டர் அம்பேத்கர் திட்டமிட்டிருந்தார். ஆனால் அகால மரணத்தினால், அவரால் அந்தப் பள்ளிக்கு விஜயம் செய்ய முடியவில்லை.[1]



1. கட்டுரைகளும் சொற்பொழிவுகளும், பக்கம் 491 - 492, ரெகே, பக்கம் 80 -81.

# அமைச்சரவைத் தூதுக்குழுவும் அதிகார மாற்றமும் குறித்து டாக்டர் அம்பேத்கர்

## ஆசிரியர் குறிப்பு

''இந்திய தேசிய ராணுவ வீரர்களின் கலகத்திலிருந்து ஊற்றெடுத்த தேசபக்த எழுச்சி, அவர்கள் மீது நடத்தப்பட்ட விசாரணை, இந்தியக் கடற்படை வீரர்களும் இந்திய விமானப்படை வீரர்களும் எழுப்பிய கலகம் ஆகியவை ஏகாதிபத்திய உட்கட்டமைப்பை உடைத்தெறிந்ததாகத் தோன்றியது. இந்திய ராணுவத்தின் சுதந்திர ஏக்கம் செயல்படத் துவங்கியதற்கு எடுத்துக் காட்டாகும் இது. அரசியலும் தேசியமும் அவர்களின் அணிக்குச் சென்றடைந்து அவர்களின் இதயத்தைச் சுண்டி ஈர்த்தது. இந்தியாவை அடிமைத்தனத்தில் தாங்கள் வைத்திருப்பது இனிச் சாத்தியமல்ல என்பதை பிரிட்டிஷ்காரர்கள் உணர்ந்தனர். பிரிட்டிஷ் காமன்வெல்த்துக்கு உள்ளிருந்தோ அல்லது வெளியில் இருந்தோ முழு சுதந்திரம் அடைய இந்தியாவின் உரிமையை பிரிட்டிஷ் பிரதம மந்திரி கிளெமென்ட் அட்லி 1946 மே மாதம் 15ம் தேதி ஏற்றுக்கொண்டு அதை அறிவித்தார். அரசியல் நெருக்கடியைத் தீர்ப்பதற்கு இந்திய கட்சிகளின் தலைவர்களுடன் நேரில் விவாதிப்பதற்காக ஒரு அமைச்சரவைத் தூதுக்குழுவை பிரதம மந்திரி இங்கு அனுப்பி வைத்தார். இந்தக் குழு உறுப்பினர்கள் சர்.ஸ்டாப்போர்ட் கிரிப்ஸ், ஏ.வி.அலெக்ஸாண்டர் மற்றும் பெத்திக் லாரன்ஸ் பிரபு ஆகும்; பெத்திக் லாரன்ஸ் பிரபு அப்பொழுது இந்திய விவகார அமைச்சராக இருந்தார். பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழு* 1946 மார்ச் 24ம் தேதி புதுடெல்லி வந்தடைந்தது''.[1]

''ஷெட்யூல்ட் வகுப்பினரின் உரிமைகளைப் பற்றிய ஒரு குறிப்பை (Memorandum) அமைச்சரவைக் குழுவின் முன் சமர்ப்பித்து தமது நுண்ணறிவு, திறமை ஆகியவற்றைப் பயன்படுத்தி ஆவன செய்யும்படி டாக்டர் அம்பேத்கருக்கு ஷெட்யூல்ட் வகுப்பினர் சம்மேளனம் அதிகாரம் அளித்தது. தனித் தேர்தல் தொகுதிகள் மூலம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு வகை செய்யும் ஒரு ஷரத்தை அரசியல் சாசனத்தில் உட்படுத்த

---

★ பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழுவின் பங்கை அறிய, இணைப்பு III ஐப் பார்க்க

வேண்டியதன் தேவையை அவர் வலியுறுத்தினார். மேலும் மாநில, மத்திய சட்டசபைகளிலும் பொதுப் பணிகளிலும் பொதுக் கமிஷன் களிலும் ஷெட்யூல்ட் வகுப்பினருக்கும் போதுமான பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் என்பதை அவர் வலியுறுத்தினார். ஷெட்யூல்ட் வகுப்பினருக்குக் கல்விக்காக தனித்து உதவித் தொகை ஒதுக்கப்படவேண்டும் என்றும் மேலும் அவர்கள் வசிப்பதற்கு இட வசதி அளிக்கப்பட வேண்டுமென்றும் டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்தினார்.

இந்திய நெருக்கடிக்கு இறுதியான தீர்வுகாண 'அரசியல் ஆவணங்கள்' உருவில் அமைச்சரவைத் தூதுக்குழு தனது திட்டத்தை 1946 மே 16ம் தேதி வெளியிட்டது. இந்திய யூனியன் என்ற சம்பிரதாய அமைப்பு மூன்று மாகாணப் பிரிவுகள் கொண்டதாக இருந்தது; மேலும் அரசியல் நிர்ணய சபை அமைக்கப்படும். வகுப்பு வாரி அடிப்படையில் மாநிலச் சட்ட சபைகளை தேர்ந்தெடுக்கும் உறுப்பினர்களும் இந்திய யூனியனில் சேரவிரும்பும் சமஸ்தானங் களின் பிரதிநிதிகளும் அதில் இடம் பெறுவர். ஆனால் டாக்டர் அம்பேத்கர் முன்வைத்த ஷெட்யூல் வகுப்பினரின் கோரிக்கைகள் பற்றி அந்த அரசு ஆவணத்தில் எதுவும் குறிப்பிடப்படவில்லை.''[1]

உத்தேசிக்கப்பட்டுளள அரசியல் சாசனத்தில் ஷெட்யூல் வகுப் பினருக்கு அரசியல் சாசன ரீதியான உரிமைகளைப் பெற்றுத்தர டாக்டர் அம்பேத்கர் தீவிரமான முயற்சிகளை மேற்கொண்டார். இவையெல்லாம் அடுத்துவரும் ஆவணங்களில் எடுத்துரைக்கப் பட்டுள்ளன. அவை தாமே தெளிவாக எடுத்துரைக்கின்றன

- ஆசிரியர்கள்

1. ஜாதவ்: 'தேசிய இயக்கத்தில் டாக்டர் அம்பேத்கரின் பாத்திரம், பக்கம் 184-185

# 1

# நிர்வாகக் கவுன்சிலில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு பிரதிநிதித்துவம் அளிப்பது பற்றி ஆலோசனை

*புதுடில்லி, 1945 ஜூன்*

*அன்புள்ள வேவல் பிரபுவுக்கு,*

*நிர்வாக சபையை இந்தியமயமாக்குவது பற்றித் தங்களின் ஆலோசனையை முன் கொண்டுசெல்ல தாங்கள் கூட்டவிருக்கும் மாநாட்டில் ஷெட்யூல்டு வகுப்பினரின் தலைவர் என்ற தகுதியில் ஒரு உறுப்பினராகக் கலந்துகொள்ள என்னைக் கேட்டுக் கொண்டதற்காக நான் நன்றியுடையவனாக இருக்கிறேன்.*

*தங்களிடம் தெரிவித்த காரணங்களுக்காக - அவற்றை இங்கு திரும்பக் கூறவேண்டியதில்லை - தங்கள் அழைப்பை ஏற்றுக் கொள்ள இயலாதவனாக இருக்கிறேன். அதையடுத்து, எனக்குப் பதிலாக வேறு ஒருவரின் பெயரைக் குறிப்பிடும்படி விருப்பம் தெரிவித்தீர்கள். நான் தங்களின் ஆலோசனைகளை ஏற்கமுடியவில்லை என்று கூறியபோதிலும், தங்கள் மாநாட்டில் ஷெட்யூல் வகுப்பினரின் ஒரு பிரதிநிதி மூலம் நாங்கள் பெறக்கூடிய உதவியை மறுக்க நான் விரும்பவில்லை. எனவே எனக்குப் பதிலாக மற்றொருவர் பெயரை முன்வைக்க நான் தயாராக இருக்கிறேன். தகுதி வாய்ந்தவர்களாக எனக்குத் தோன்றுகிறவர்களில், ராவ்பகதூர் என்.சிவராஜ் பி.ஏ.பி.எல் தவிர வேறு என்னால் யாரையும் நினைத்துப் பார்க்க முடியவில்லை. அவர் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் தலைவராக உள்ளார். மேலும் மத்திய சட்டசபையின் மற்றும் தேசிய பாதுகாப்புக் கவுன்சில் உறுப்பினராகவும் இருக்கிறார். தங்களுக்குப் பிடித்திருந்தால், ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதியாக அவரைத் தாங்கள் அழைக்கலாம்.*

*2. இப்பொழுதே தங்கள் கவனத்தை அவசியம் ஈர்க்க வேண்டிய மற்றொரு விஷயமும் உள்ளது. நிர்வாகக் கவுன்சிலை*

மாற்றி அமைப்பதற்கான மன்னர் பிரான் அரசாங்கத்தின் ஆலோசனை களில், ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அளிக்கப்பட்டுள்ள பிரதி நிதித்துவம் மிகவும் குறைவானது என்பது பற்றியது அது. 9 கோடி மக்கள் தொகையைக் கொண்ட முஸ்லிம்களுக்கு 5 இடங்கள், 5 கோடி மக்கள் தொகை கொண்ட தீண்டத்தகாதவர்களுக்கு ஒரு இடம்; 60 லட்சம் சீக்கியர்களுக்கும் ஒரு இடம். இது ஒரு விசித் திரமான, தீங்கான அரசியல் கணக்காக உள்ளது; நீதி மற்றும் பொது அறிவு பற்றிய எனது கருத்துக்களுக்கு இது வெறுக்கத்தக்கதாக, அரு வருக்கத்தக்கதாக உள்ளது. அதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. அவர்களின் தேவைகள் அடிப்படையில் பார்த்தால், முஸ்லீம் களுக்குப் போலவே தீண்டத்தகாதவர்களுக்கும் அதே அளவு - அதிகப்படியாக இல்லாவிடினும் - பிரதிநிதித்துவம் கிடைக்க வேண்டும். தேவைகளை விட்டுவிட்டாலும், தீண்டத்தகாதவர்களின் எண்ணிக்கையை மட்டுமே எடுத்துத் கொண்டால், அவர்களுக்குக் குறைந்தபட்சம் மூன்று பிரதிநிதிகள் அளிக்கப்பட வேண்டும். மாறாக 15 நபர்கள் கொண்ட நிர்வாகக் கவுன்சிலில் அவர்களுக்கு ஒரு இடமே அளிக்கப்படுகிறது. இது ஒரு சகிக்க முடியாத நிலையாகும்.

ஜூன் 5ம் தேதி நடந்த நிர்வாகக் கவுன்சில் கூட்டத்தில், மன்னர் பிரான் அரசாங்கத்தின் ஆலோசனைகளைத் தாங்கள் விளக்கியபோது நான் தாங்கள் கவனத்தை ஈர்த்த விஷயம் இது.

முந்தைய நாள் மாலையில் நடந்த கூட்டத்தில் கவுன்சில் உறுப்பினர்கள் இந்த ஆலோசனைகளின் தகுதி பற்றி அளித்த விமர் சனங்களுக்கு 6ம் தேதி காலையில் நடந்த கூட்டத்தில் தாங்கள் பதிலளித் தீர்கள். இயல்பாகவே, நான் எழுப்பிய விஷயம்பற்றியும் தாங்கள் பேசுவீர்கள் என்று எதிர்பார்த்தேன். எனக்கு ஏற்பட்ட பெரிய ஆச்சரியம் என்னவெனில், அதை தாங்கள் அலட்சியப்படுத்தி எதுவும் கூற வில்லை. நான் போதுமான அளவு உறுதியாகக் கூறவில்லை என்று இருக்க முடியாது. நான் அளவுக்கு அதிகமான உறுதியான நிலையை எடுத்திருந்தேன். ஒன்று தங்களின் கவனத்தை ஈர்க்க வேண்டிய அளவுக்கு விஷயம் போதுமான முக்கியத்துவம் வாய்ந்தது என்று தாங்கள் கருதவில்லை என்ற முடிவுக்கு நான் வந்துள்ளேன்; அல்லது ஒரு ஆட்சேபம் தெரிவிப்பதைத்தவிர வேறு எந்த நோக்கமும் எனக்கு இருக்கவில்லை என்று தாங்கள் நினைத்தீர்கள். மன்னர் பிரான் அரசாங்கம் இந்த தவறைத் திருத்திக் கொள்ளாவிடில், திட்டவட்டமான நடவடிக்கையை நான் எடுப்பேன் என்று சந்தேகத்திற்கிடமின்றி தங்களிடம் கூற விரும்புகிறேன். எனவே இந்தக் கடிதத்தை எழுத வேண்டியது அவசியம் என உணர்கிறேன்.

இத்தகைய ஒரு ஆலோசனை காங்கிரஸ் அல்லது இந்துமகா சபையிடமிருந்து வந்திருந்தால் நான் இவ்வளவு மனவேதனை அடைந்திருக்கமாட்டேன். ஆனால் இது மன்னர்பிரான் அரசாங்கத்தின் முடிவாகும். சட்டசபைகளிலும் நிர்வாகக் கவுன்சிலிலும் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அதிகப்படியான பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் என்ற பொதுவான இந்துக்களின் கருத்து என்பதற்கு சாதகமாக உள்ளது. சப்ரூ கமிட்டியின் ஆலோசனைகள் பொதுவான இந்துக் கருத்தைச் சுட்டிக்காட்டுகிறது. எடுத்துக் கொண்டால், மன்னர் பிரான் என்று அரசாங்கத்தின் ஆலோசனை மோசமானது (பின்னடைவானது) என்பதை ஒப்புக்கொண்டாக வேண்டும். சாப்ரு கமிட்டி அறிக்கை கூறுவது இதுதான்: ''இந்திய அரசாங்கச் சட்டத்தில், சீக்கியர்களுக்கும் ஷெட்யூல்டு வகுப்பினருக்கும் கொடுக்கப்பட்டுள்ள பிரதிநிதித்துவம் போதுமானதாக இல்லாதது, நியாயமற்றது என்பது தெளிவாகிறது, இது கணிசமான அளவு உயர்த்தப்பட வேண்டும். அதிகரிக்க வேண்டிய பிரதிநிதித்துவ அளவை அரசியல் சாசனத்தை வரையும் அமைப்பிற்கு விட்டு விடலாம்.

பிரிவு (b) ஷரத்துக்களுக்கு உட்பட்டு (இந்திய) யூனியனின் நிர்வாகக் கவுன்சில் பலர் சேர்ந்தமைந்த ஒரு அமைச்சரவையாக இருக்கும்; அதன்பொருள் என்னவெனில், பின்கண்ட சமூகங்கள் (வகுப்புகள்) அதில் பிரதிநிதித்துவப்பட வேண்டும்; அதாவது,

(1) ஷெட்யூல் வகுப்பினர் தவிர மற்ற இந்துக்கள்
(2) முஸ்லீம்கள்
(3) ஷெட்யூல்டு வகுப்பினர்
(4) சீக்கியர்கள்
(5) இந்திய கிருஸ்தவர்கள்
(6) ஆங்கிலோ - இந்தியர்கள்

''(b) நிர்வாகக் கவுன்சிலில் சமூகங்களின் பிரதிநிதித்துவம், சாத்தியமான அளவு சட்டசபையில் அவர்களின் பலத்தைப் பிரதிபலிப்பதாக இருக்கும்''

மற்றொன்றைக் கூற விரும்புகிறேன். நிர்வாகக் கவுன்சிலில் உள்ள எனது 2 இந்து சகாக்கள் இன்று காலை* தங்களுக்குச்

---

★ பக்கம் 482 (அதிகார மாற்றம்)

சமர்ப்பித்த பொதுநிலைக் குறிப்பில் (Memorandum) ஷெட்யூல்டு வகுப்பினருக்கு பிரதிநிதித்துவம் பற்றி மன்னர்பிரான் அரசாங் கத்தின் ஆலோசனை போதுமானதாக இல்லை, நியாயமானதாக இல்லை என்று கூறியிருக்கிறார்கள். என்னை அதிர்ச்சிக்குள்ளாக் கியது என்னவெனில், ஷெட்யூல்டு வகுப்பினர்களின் அறங்காவ லர்கள் என்று கூறிக் கொள்ளும் மன்னர்பிரான் அரசாங்கம், திரும்பத் திரும்ப செய்த பிரகடனங்களுக்கு மாறாக தாங்கள் பாதுகாக்க வேண்டியவர்களை இவ்வளவு தாராளமற்ற, நேர்மை யற்ற, நியாயமற்ற முறையிலும் அறிவார்ந்த ஒரு இந்து நடந்து கொண்டிருக்கக் கூடியதைவிட மோசமாகவும் நடத்தியிருப்பது என்பதுதான். எனவே, எனது சக்தி அனைத்தையும் திரட்டி இந்த ஆலோசனையை எதிர்ப்பதே நான் நிறைவேற்ற வேண்டிய புனிதமான கடமை என்று நான் உணர்கிறேன். இந்த ஆலோசனை தீண்டத்தகாதவர்களின் விமோசனத்திற்காக கடந்த 50 ஆண்டு காலத்திற்கு மேலான அவர்களின் முயற்சிகளை சிதறடிக்கக்கூடிய விளைவை ஏற்படுத்தும். தங்களின் பல அறிவிப்புகளையும் மீறி இந்து முஸ்லீம் கூட்டணியின் தயவிற்கு தீண்டத்தகாதவர்களின் தலைவிதியை ஒப்புவிக்க மன்னர் பிரான் அரசாங்கம் விரும்பினால், அவர்கள் அவ்வாறு செய்து கொள்ளலாம். ஆனால் எனது மக்கள் நசுக்கப்படுவதற்கு நான் ஒருபோதும் துணைபோகமாட்டேன். நான் வந்துள்ள முடிவான நிலை என்னவெனில், புதிய நிர்வாக சபையில் குறைந்தது 3 இடங்கள் தீண்டத்தகாதவர்களுக்கு அளி யுங்கள் என்று மன்னர் பிரான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்வது தான். இந்தக் கோரிக்கையை வழங்க மன்னர்பிரான் அரசாங்கம் தயாராக இல்லை எனில், புதிதாக மாற்றியமைக்கப்பட்ட நிர்வாக கவுன்சிலில் எனக்கு ஒரு இடம் அளிக்கப்பட்டாலும் நான் ஏற்க முடியாது என்பதை மன்னர்பிரான் அரசாங்கம் தெரிந்துகொள்ள வேண்டும். கடந்த கொஞ்ச காலமாக, தீண்டத்தகாதவர்கள் தங்களது அரசியல் உரிமைகளின் முழு அங்கீகாரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். மன்னர் பிரானின் அரசாங்கத்தின் முடிவு அவர் களுக்கு அதிர்ச்சி அளிக்கும் என்பதில் எனக்கு ஐயமில்லை. கண்டனம் தெரிவிக்க புதிய அரசாங்கத்துடன் எந்த உறவுகளையும் வைத்துக் கொள்ளப் போவதில்லை என்று ஷெட்யூல் வகுப்பினர் அனை வரும் முடிவு செய்தால் நான் ஆச்சரியப்பட மாட்டேன். அவர்களின் அதிருப்தி பிரிந்து செல்வதற்கு நிச்சயம் இட்டுச் செல்லும் என்று நினைக்கிறேன். மன்னர் பிரான் அரசாங்கத்தின் ஆலோசனைகள் மாற்றி அமைக்கப்படாவிடில் விளைவு இதுவாகத்தான் இருக்கு மென்று நான் எதிர்பார்க்கிறேன். என்னைப் பொறுத்தவரை, நான் முடிவு செய்து விட்டேன். இது இறுதி வடிவமல்ல என்றும் இது

ஒரு இடைக்கால ஏற்பாடு என்றும் எனக்குக் கூறப்படலாம். சலுகைகளும் சரிசெய்து கொள்வதும் சுயநல ஏற்பாடுகளாக வளர்வதும் ஒரு தடவை செய்துகொள்ளப்பட்ட தவறான ஒப்பந்தம் எதிர்கால ஒப்பந்தங்களுக்கு முன்மாதிரியாக மாறுவதும் அரசியலில் நீண்டகாலம் இருந்த நான் புரிந்து கொண்டவையே. என் முன்னால் ஒரு தவறு நடப்பதை என்னால் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியாது (I cannot, therefore, allow, grass to grow under my feet). என்னுடைய கணிப்பு சரி என்றால், இடவினியோகம் ஒரு தற்காலிக ஏற்பாடு என்று துவங்கி அது நிரந்தரமானதாக முடியும் என்பதை நான் காண்கிறேன். இறுதியில் தவறு என்று கருதுவதைவிட, துவக்கத்திலேயே அதற்கு எதிராக எனது கண்டனத்தை அவசியம் தெரிவிக்க வேண்டுமென நான் கருதுகிறேன்.

இந்தியாவின் எதிர்கால அரசாங்கத்திலிருந்து நான் மறைவதையோ ஷெட்யூல்டு வகுப்பினர் மறைந்து விடுவதையோ பற்றி மன்னர் பிரான் அரசாங்கம் பொருட்படுத்தாமல் இருக்கலாம். அதன் விளைவாக, இந்த நாட்டின் பிரிட்டிஷ் அரசாங்கம் ஷெட்யூல் வகுப்பினரும் பிரிந்து செல்வதைப் பற்றி வருத்தப்படாமல் இருக்கலாம். ஆனால், இந்தப் பொருள் பற்றி நான் சொல்ல வேண்டியதை மன்னர்பிரான் அரசாங்கம் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியது நியாயமானது என்றே நான் நம்புகிறேன். எனவே, நிர்வாகக் கவுன்சிலில் ஷெட்யூல் வகுப்பினரின் பிரதிநிதித்துவத்தை உயர்த்த வேண்டும் என்ற எனது கோரிக்கையையும் இந்தக் கோரிக்கை அவர்களால் நிராகரிக்கப்பட்டால் நான் எடுக்க உத்தேசித்த நடவடிக்கை பற்றியும் மன்னர்பிரான் அரசாங்கத்திற்குத் தெரிவிக்கும்படி நான் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.[1]

தங்கள் உண்மையுள்ள,

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்**



1. வேவல் ஆவணங்கள், அரசியல் தொடர் வரிசை, 1944 ஏப்ரல் முதல் 1945 ஜூலை வரை, பக்கங்கள் 207-209

# 2

# அமைச்சரவைத் தூதுக்குழுவிடம் சமர்ப்பிக்கப்பட்ட நிகழ்ச்சிப் பதிவுக் குறிப்பு

இந்தியாவை இனிமேலும் தங்களால் அடிமைத்தனத்தில் வைத்திருக்க முடியாது என்பதை பிரிட்டிஷ்காரர்கள் தெரிந்து கொண்டனர். எனவே, பிரிட்டிஷ் காமன்வெல்த்திற்கு உள்ளே இருந்தோ அல்லது வெளியில் இருந்தோ முழு சுதந்திரம் அடைய இந்தியாவின் உரிமையை 1946 மார்ச் 15ம் தேதி பிரிட்டிஷ் பிரதம மந்திரி கிளெமென்ட் அட்லி அங்கீகரித்தார்; பெரும்பான்மையினரின் முன்னேற்றத்தை தடுத்து நிறுத்தும் அதிகாரத்தை சிறுபான்மையினருக்கு தாங்கள் அனுமதிக்கமாட்டோம் என்றும் கூறினார். அரசியல் நெருக்கடிக்குத் தீர்வுகாண இந்தியக் கட்சித் தலைவர்களுடன் விவாதிக்க ஒரு அமைச்சரவைத் தூதுக்குழுவை பிரிட்டிஷ் பிரதம மந்திரி அனுப்பி வைத்தார். அதில் சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ், ஏ.வி.அலெக்சாண்டர் மற்றும் பெத்திக் லாரன்ஸ் பிரபு - (இவர் அப்பொழுது இந்திய விவகார அமைச்சராக இருந்தார்) ஆகியோர் இடம் பெற்றனர். பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக் குழு 1946 மார்ச் 24ம் தேதி புதுடெல்லி வந்தடைந்தது. பல்வேறு பேட்டிகள், உயர்மட்ட விவாதங்கள், நுட்பமான கருத்துப் பரிமாற்றங்கள் வைஸ்ராய் மாளிகையில் நடந்தன.

இந்தச் சூழ்நிலையில் சிறுபான்மை வகுப்பினரின் இரு பிரதிநிதிகளை தூதுக்குழுவினர் பேட்டி கண்டனர். அவர்கள் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரும் மாஸ்டர் தாராசிங்கும் ஆவர். தூதுக் குழுவின் முன் டாக்டர் அம்பேத்கர் ஒரு நிகழ்ச்சிப் பதிவுக் குறிப்பை (Memorandum) சமர்பித்தார். அது பின்வருமாறு:

# அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் நிகழ்ச்சிப் பதிவுக் குறிப்பு (Memorandum) 1946 ஏப்ரல் 5ம் தேதி டாக்டர் அம்பேத்கரால் அமைச்சரவைத் தூதுக் குழுவுக்கு சமர்ப்பிக்கப்பட்டது

**டெல்லியில் 1946 ஏப்ரல் 2ம் தேதி நடைபெற்ற அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி (நிர்வாகக் குழு)க் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம்.**

## பகுதி - I

## பொது

1. 1946 ஏப்ரல் 2ம் தேதி டெல்லியில் நடந்த ஷெட்யூல்டு வகுப்பினர் காரியக் கமிட்டிக் கூட்டம் அமைச்சரவைத் தூதுக் குழு தனது குறிக்கோளை அடைய, அதாவது இந்தியாவை சுயஆட்சி செய்யும் நாடாக ஆக்கும் அதன் குறிக்கோளை அடைய உதவும் பிரச்சினையை மிக ஆழமாகப் பரிசீலித்தது.

தூதுக்குழுவின் முன்பு தனது கருத்துக்களை முன்வைப்பது என்று முடிவு செய்கிறது; மேலே குறிப்பிட்ட நோக்கம் இந்துப் பெரும்பான்மையினருக்கு சுதந்திரம் அளிப்பதோடு மட்டுமல்லாமல் சிறுபான்மை சமூகத்தினரை, குறிப்பாக ஷெட்யூல் வகுப்பினரை, பெரும்பான்மை சமூகத்தினரின் கொடுங்கோன்மையிலிருந்து விடுவிக்கவும் வேண்டும்; இந்தக் கொடுங்கோன்மை அரசியல் ரீதியானதில்லை என்பதால், அது மாற்றக் கூடியதல்ல; அது வகுப்பு ரீதியானதால் பெரும்பான்மையை என்றும் நிலை நிறுத்தக் கூடியது.

2. இந்தியாவின் அரசியல் முன்னேற்றத்தை தடுத்து நிறுத்துகிறது என்று ஷெட்யூல் வகுப்பினர் மீது சாட்டப்படும் அவதூறை மறுதலிக்க முடியாமல் இருக்க முடியாது. காரியக் கமிட்டி யின் கருத்தில், இந்திய அரசியல் முன்னேற்றத்திற்கு தடையாக இருப் பதற்கு முழுப் பொறுப்பு பெரும்பான்மை சமூகத்தைச் சார்ந்தது; சிறுபான்மை சமூகத்தினர், குறிப்பாக ஷெட்யூல்டு வகுப்பினர், சிறுபான்மையினருக்கு எத்தகைய பாதுகாப்புகள் தேவை என்பதை முடிவு செய்யும் உரிமை தனக்கு இருப்பதாக அகம்பாவத்துடனும் நியாயமற்ற முறையிலும் அவர்கள் உரிமை கொண்டாடுகிறார்கள்; உண்மையில் அவர்கள் எந்த அக்கறையும் ஒரு பொழுதும் எடுத்துக் கொண்டதில்லை; சிறுபான்மையினருக்கு, குறிப்பாக ஷெட்யூல்டு வகுப்பினருக்கு பாதுகாப்பு அளிப்பது பற்றி எந்தத் திட்டத்தையும் அளிப்பதை தவிர்த்து வருகின்றனர். ஷெட்யூல்டு வகுப்பினர் கோருவதெல்லாம் அதை எதிர்காலத்தில் செய்யவும் தயங்க மாட்டார்கள். முதலாவதாக, தங்கள் உரிமைகளையும் சுதந்திரத்தை யும் சரியாக பாதுகாக்க அரசியல் சாசனத்திலேயே அவை உட்படுத் தப்பட வேண்டும்; இரண்டாவதாக, தாங்கள் விரும்பும் பாதுகாப்பு களின் தன்மையையும் வடிவத்தையும் தீர்மானிக்கும் அவர்களது உரிமையைப் பெரும்பான்மையினர் ஏற்றுக்கொள்வதாகும்.

3. ஷெட்யூல்டு வகுப்பினரின் இந்த நிலை நியாயமானது தங்களை கட்டுப்படுத்தக்கூடியது என்று மன்னர்பிரான் அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டன என்று கூறவேண்டியது அவசியமில்லை. மன்னர் பிரான் அரசாங்கத்தின் பிரதிநிதிகள் அவ்வப்போது சந்தேகத்திற்கு இடமின்றி வாக்களித்துள்ளார்கள்; இவை பற்றிய விவரங்கள் இந்தத் தீர்மானத்தின் இறுதியில் அட்டவணை I ல் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

தூதுக்குழு துவக்கியுள்ள பேச்சுவார்த்தைகளின் விளைவாக அது எடுக்கக்கூடிய முடிவுகளில் ஷெட்யூல்டு பிரிவினருக்கு அளித்துள்ள வாக்குறுதிகளிலிருந்து மாறாது என்றும் தீர்த்து வைக்கும் அவசரத்தில், எத்தகைய பாதுகாப்புகள் ஷெட்யூல்டு வகுப் பினருக்கு வேண்டுமென்று எந்தக் கட்சியும் ஆணையிடுவதை அனுமதிக்க மாட்டார்கள் என்றும் காரியக் கமிட்டி நம்புகிறது.

4. தூதுக்குழுவின் நோக்கத்திலிருந்து எழும் பல்வேறு பிரச்னைகள் பற்றிய தனது கருத்துக்களை முன்வைப்பதற்கு முன்பு, பல்வேறு மாகாணங்களில், அண்மையில் நடந்த துவக்க

(Primary) முதல்கட்ட தேர்தல்களின் முடிவுகள் பற்றி தூதுக்குழுவின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறது காரியக்கமிட்டி; குறிப்பாக இந்தியாவின் ஷெட்யூல்டு வகுப்பினர் சார்பாக பேச உரிமையுள்ள அமைப்பு அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினரின் சம்மேளனமே என்றும் காங்கிரஸுக்கோ திடீரென்று தோன்றிய எந்த அமைப்பிற்கோ அவர்கள் சார்பாகப் பேச உரிமை கிடையாது என்பதை இந்தத் தேர்தல்கள் இறுதியாக நிரூபித்துள்ளன.

## பகுதி II

# சுதந்திர இந்தியாவின் முடிவான அரசியல் சாசனம் பற்றிய கருத்துக்கள்

5. சுதந்திர இந்தியாவின் முடிவான அரசியல் சாசனத்தைப் பொறுத்தவரை, கீழே கொடுக்கப்பட்டுள்ள பாதுகாப்புகளை உட்கொள்ளாத எந்த அரசியல் சாசனத்தையும் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி ஒருபோதும் ஏற்றுக்கொள்ளாது என்பதை மிகத் தெளிவாக்க விரும்புகிறது.

(i) மத்திய மற்றும் எல்லா மாகாணங்களின் சட்ட சபைகளில் உண்மையில் போதுமான பிரதிநிதித்துவம்.

(ii) மத்திய மற்றும் மாகாண நிர்வாக கவுன்சில்களில் உண்மையில் போதுமான பிரதிநிதித்துவம்;

(iii) தனித் தேர்தல் தொகுதிகள் மூலம் தேர்தல் நடத்த வழிவகை செய்தல்

(iv) பொதுப் பணிகளில் (Public Services) போதுமான பிரதி நிதித்துவம்

(v) மத்திய, மாகாண ஊழியர் தேர்வாணையங்களில் போதுமான பிரதிநிதித்துவம்

(vi) ஷெட்யூல் வகுப்பினர் உயர்கல்விக்காக மத்திய மற்றும் மாகாண வரவு செலவு அறிக்கைகளில் தேவையான நிதி ஒதுக்கீடு.

(vii) புதிய தனிக் குடியிருப்புகளுக்கு வகை செய்வது.

6. மேற்சொன்ன பாதுகாப்புகளின் முக்கியத்துவத்தையோ அவசியத்தையோ எந்த வழியிலும் குறைவுபடுத்தாமல் இவற்றில் அதிமிகு அடிப்படையானவை வருமாறு:-

*(1) தனித் தேர்தல் தொகுதிகளுக்கு அரசியல் சட்ட ரீதியாக வகை செய்வது (2) சட்டசபைகளிலும் நிர்வாக கவுன்சிலும் மற்றும் பொதுப் பணிகளிலும் போதுமான பிரதிநிதித்துவத்திற்கு அரசியல் சட்ட ரீதியாக வகை செய்வது. (3) புதிய, தனிக் குடியிருப்புகளை அமைக்க வகை செய்வது.*

7. தனித் தொகுதிகளுக்கு தேவையான ஷரத்து சம்பந்தமாக, தூதுக்குழுவின் கவனத்திற்கு கீழ்கண்ட உண்மைகளை காரியக் கமிட்டி கொண்டுவர விரும்புகிறது.

(i) இது புதுக் கோரிக்கையல்ல. ஷெட்யூல்டு வகுப்பினர் பிரதி நிதிகளால் வட்டமேஜை மாநாட்டில் முன் வைக்கப்பட்டவை.

(ii) திரு.காந்தி இதைக் கடுமையாக எதிர்த்தார். ஆனால் அவரது எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு தனித்தேர்தல் தொகுதிகளின் அவசியத்தை மன்னர் பிரான் அரசாங்கம் ஒப்புக் கொண்டது. (convinced); மேலும் தங்களது 1932ம் ஆண்டு வகுப்பு வாரித் தீர்ப்பில ஷெட்யூல்டு வகுப்பினருக்கு தனித் தேர்தல் தொகுதிகளை வழங்கியது.

(iii) தனித் தொகுதிகள் முறை அமுலுக்கு (நடைமுறைக்கு) வரும்முன்பே, ஷெட்யூல்டு வகுப்பினருக்கு வழங்கப்பட்ட தனித் தொகுதி முறை வாபஸ் பெறப்படாவிடில் தாம் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாக திரு.காந்தி அறிவித்தார்; மேலும் அத்தகைய உண்ணாவிரதத்தை உண்மையில் துவக்கினார். திரு.காந்தியின் சாகும் வரையான உண்ணாவிரதம் ஏற்படுத்திய நிர்ப்பந்தத்தின் காரணமாக அவர்களின் தனித் தேர்தல் தொகுதிகளை விட்டுக் கொடுக்கும்படி ஷெட்யூல்டு

வகுப்பினர் நிர்ப்பந்தத்திற்கு உட்படுத்தப்பட்டனர்.

(iv) வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தின் இடத்தை எடுத்துக் கொண்ட புனா ஒப்பந்தம் (1) இரு தேர்தல்களை ஷெட்யூல்டு வகுப்பினர் மீது சுமத்தியுள்ளது (அ) முதலாவதானது (ஆ) இறுதியானது; முந்தையது தனித் தேர்தல் தொகுதிகள் மூலம்; பிந்தியது கூட்டுத் தொகுதிகள் மூலம். (2) கூட்டுத் தொகுதிகளில் பெரும் எண்ணிக்கையில் உள்ள சாதி இந்துக்களின் வாக்காளர்களின் தயவில் சிறு எண்ணிக்கையில் உள்ள ஷெட்யூல்டு வகுப்பினரின் வாக்குகள் வைக்கப்பட்டன.

(v) இறுதித் தேர்தல்களின் முடிவுகளை துவக்கத் தேர்தல் முடிவுகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால், - இவை அட்டவணை IIல் கொடுக்கப்பட்டுள்ளன - கூட்டுத் தேர்தல் தொகுதிகள் மற்றும் ஒதுக்கப்பட்ட தொகுதிகளும் சட்டசபைகளுக்கு தங்களின் உண்மைப் பிரதிநிதிகளை அனுப்ப ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அளித்த உரிமை ஒரு கேலிக் கூத்தாக ஆகிவிட்டது; ஷெட்யூல்டு வகுப்பினருக்கு செய்யப்பட்ட ஒரு மோசடியாகிறது.

8. ஷெட்யூல்டு வகுப்பினர் தங்கள் வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவரை, - அதனால் அங்கு ஷெட்யூல்டு வகுப்பினரின் உண்மையான பிரதிநிதியாக இருப்பவரை - மாகாண சட்டசபைக்கு அனுப்ப ஷெட்யூல்டு வகுப்பினரால் முடியவில்லை எனில், அதற்குக் காரணம் கூட்டுத் தொகுதி முறைதான்; அதில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு தொகுதிகள் ஒதுக்கப்படுகின்றன; ஆனால் ஷெட்யூல்டு வகுப்பினரின் வாக்குகளுக்கும் சாதி இந்துக்களின் வாக்குகளுக்கும் இடையிலான பெரிய (ஏராளமான) வித்தியாசம் இந்த (சட்டசபைகளை) அமைப்புகளை ஷெட்யூல்டு வகுப்பினரின் கண்ணோட்டத்தில் மோசமானதாக ஆக்கிவிடுகிறது; சாதி இந்துக்களின் பார்வையில் அவர்களின் சட்டைப் பைக்குள் உள்ள அமைப்புகளாகின்றன; தங்கள் கைப்பாவைகளாக உள்ள ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த வேட்பாளர்களைக் கூட்டுத் தொகுதிகளில் உள்ள சாதி இந்துக்களின் (ஓட்டுக்கள்) வாக்குகள் மூலம் மட்டுமே தேர்ந்தெடுக்கலாம்.

9. சென்ற காலத்தில் கூட்டுத் தொகுதிகள் மூலம் கிடைத்த கடுமையான அனுபவத்தை கணக்கில் கொண்டு, ஷெட்யூல்டு

வகுப்பினருக்கு தனித் தொகுதிகள் ஒதுக்கப்படுவது மீண்டும் நடைமுறைப்படுத்தப்பட வேண்டியது தலையாய விஷயமாகிறது என்று தனக்குள்ள உறுதியான நிலையை காரியக் கமிட்டி தூதுக் குழுவுக்கு எடுத்துக் கூற விரும்புகிறது. ஏனெனில் தனித் தொகுதிகள் தான், அவர்களின் அரசியல் சட்ட ரீதியான பாதுகாப்பை சாதி இந்துக்கள் செல்லுபடியாகாததாக்க முடியாதபடி ஆக்குவதற்கு எதிரான ஒரே உத்தரவாதம் என்று அவர்கள் சரியாகவே நம்பு கிறார்கள்; தனித்தொகுதிகள் இல்லாமல் எந்தவிதமான அரசியல் பாதுகாப்புகளும் ஷெட்யூல்டு வகுப்பினருக்குப் பயனளிக்காது.

10. சட்டசபை, நிர்வாகக் கவுன்சில் மற்றும் பொதுப் பணி களில் போதுமான பிரதிநிதித்துவம் என்ற விஷயத்தைப் பொறுத்த வரை, பல சமயங்களில் பெயரளவில் பிரதிநிதித்துவம் வழங்கப் படுவதை காரியக் கமிட்டி முற்றிலுமாகக் கண்டிக்கிறது; மற்ற சிறு பான்மையினருக்கு அதிக இடம் அளித்து ஷெட்யூல்டு வகுப் பினருக்கு அளிக்க வேண்டிய இடத்தை அளிக்காமல் செய்வதை கடுமையாக எதிர்க்கிறது; இப்படிச் செய்வதால், ஷெட்யூல்டு வகுப்பினர் தங்களுக்குரிய பங்கைப் பெறாமல் தடுப்பதாகும். இந்தி யாவின் அரசியல் வாழ்வில் மூன்றாவது முக்கியக் கூறாக ஷெட்யூல்டு வகுப்பினர் உள்ளனர் என காரியக் கமிட்டி வலியுறுத்திக் கூற விரும் புகிறது; அவர்களின் தேவை, எண்ணிக்கைக்கு ஏற்ப கணிசமான பிரதிநிதித்துவம் அளிக்கப்படாமல் அவர்கள் திருப்தியடைய மாட்டார் கள். போலீஸ் அல்லது ரெவின்யூ பணிகளில் நிலவுவதை நினைத் தாலே பெரும் அச்சம் ஏற்படுகிறது என்பதை தூதுக்குழுவினருக்கு தெரியப்படுத்த முடிந்தால் காரியகமிட்டி மகிழ்ச்சியடையும்; இந்த இலாகாவை முற்றிலுமாகப் பிடித்துக் கொண்ட சாதி இந்துக்கள் அவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழ் பணியாற்றினாலும் ஷெட்யூல்டு வகுப்பினரை நசுக்குகிறார்கள். கொடுமைப்படுத்து கிறார்கள், அவர்களுக்கு எதிராகப் பாரபட்சம் காட்டுகிறார்கள். தங்களின் கொடுமைப்படுத்தும், நசுக்கும் செயல்களுக்கு சாதி இந்துக்களின் ஆதிக்கத்திலுள்ள சட்டசபை மற்றும் நிர்வாகத்தின் ஆதரவைப் பெறுகின்றனர். சட்டசபையிலும் நிர்வாகக் கவுன் சிலிலும் பொதுப் பணிகளிலும் ஷெட்யூல்டு வகுப்பினருக்குக் கணிசமான பிரதிநிதித்துவம் அளிக்கப்படாவிடில், அலட்சியப் படுத்தும் சட்டசபை இந்துக்களுக்கு ஆதரவான நிர்வாகம், ஷெட்யூல் வகுப்பினருக்கு எதிரான கொள்கை ஆகியவற்றால் அவர்களுக்கு பாதுகாப்பு இருக்க முடியாது.

11 (a) தனிக்குடியிருப்புகளுக்கு வகை செய்ய வேண்டியது பற்றி, காரியக் கமிட்டியின் ஆழ்ந்த கருத்து வருமாறு: இன்றையக் கிராம அமைப்பு, கிராமங்களில் உள்ள ஷெட்யூல்டு வகுப்பினரை சாதி இந்துக்களின், அடிமைகளாக ஆக்குகிறது. குற்றத் தண்டனைச் சட்டம் அடிமைத்தனத்தை அங்கீகரிக்காவிடினும், இந்தியா முழுவதிலும் ஒவ்வொரு கிராமத்திலும் ஷெட்யூல்டு வகுப்பினர் உண்மையில் சாதி இந்துக்களின் அடிமையாக வாழ்கின்றனர்; அதற்குக் காரணம் அது கிராம அமைப்பின் பாகமாக உள்ளது. தீண்டத்தகாதவர் மீது அடிமைத்தனத்தை நடைமுறைப்படுத்த இதைவிட அதிகம் பயனுள்ள முறையை உருவாக்கியிருக்க முடியாது.

(b) நிலவும் இந்த கிராம அமைப்பில், யார் தீண்டத்தகாதவர் யார் தீண்டத்தக்கவர் என்று ஒவ்வொருவரும் அறிந்து கொள்ள முடியும். தீண்டாமையை நிரந்தரமாக்கும் விளைவை அது ஏற்படுத்துகிறது. தீண்டாமையை நிரந்தரமாக்குவதற்கு இதைவிட அதிகம் பயனுள்ள முறையைக் கண்டுபிடித்திருக்க முடியாது.

(c) கிராம அமைப்பின் கீழ்:

(i) கிராமத்தின் உள்ளே வசிக்க ஷெட்யூல்டு வகுப்பினர் அனுமதிக்கப்படுவதில்லை. எல்லைப்புறப் பகுதிகளில் அவர்கள் வாழ வேண்டியுள்ளது. கிராமக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. கிராமப் பள்ளிகளுக்கு அவர்களின் குழந்தைகளை அனுப்ப அனுமதிப்பதில்லை. எந்த சவரத் தொழிலாளியும் அவர்களுக்கு சவரம் செய்ய முடியாது. அவர்கள் ஒரு சமூகத்தினர் என்பதைத் தவிர, அந்தக் கிராமத்தில் வசிக்கும் சாதி இந்துக்கள் உடன் எந்தவிதமான ஆன்மீக ரீதியான பிற உறவுகளும் அவர்களுக்குக் கிடையாது.

(ii) அவர்களுகக்கு சுயேச்சையான எந்த வாழ்க்கை (வசதிகளும்) வழிகளும் கிடையாது. அவர்களுக்கு நிலம் எதுவும் கிடையாது. சுதந்திரமாக வாழ, சம்பாதிக்க எந்த வழியும் அவர்களுக்கு இல்லை. அவர்களுக்குள்ள ஒரே சந்தை இந்துக் கிராமமே. ஆனால், எந்த இந்துவும் அவர்களிடமிருந்து எந்தப் பொருளையும் வாங்க முடியாது. கிராமத்திலுள்ள தங்களது காப்பாளர்களிடமிருந்து உணவைப் பிச்சையெடுத்து அவர்களில் பெரும்பான்மையினர் வாழ்ந்து வருகின்றனர். இந்து நிலச்சுவான்தார்கள் அளிக்கும் வேலையில் அவர்கள் கொடுக்கும் கூலியில் வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கும் நிலமில்லா தொழிலாளர்களாக, முற்றிலும் வறிய நிலையில் உள்ள பெரும்பகுதியினராக அவர்கள் உள்ளனர்.

(iii) இந்து நில உடைமையாளர்களால் தங்களுடைய குடியிருப்புகளிலிருந்து தங்களை வெளியேற்றி விடுவார்களோ என்ற அச்சத்தில் அவர்கள் கட்டாயத் தொழிலாளர்களாக நாள் முழுவதும் பணியாற்ற வேண்டியுள்ளது. இந்த நில உடமையாளர்கள் மலிவான வேலையாளர்களாக இவர்களைக் கருதுகின்றனர்; அவர்களை எப்பொழுதும் கூலித் தொழிலாளர்களாக வேலைக்கு அமர்த்த முடியும்; எனவே, ஷெட்யூல் வகுப்பினருக்கு எதிராக எப்பொழுதும் அணிதிரளத் தயாராக இருக்கிறார்கள் அவர்கள்.

(iv) தலைமுறை, தலைமுறையாக இழிவான, அவமதிப்பான, கேவலமான வாழ்க்கையை அவர்கள் வாழவேண்டியுள்ளது. அது ஒரு நிரந்தர நரகம் போன்றது. அவர்கள் சுத்தமான உடை உடுத்தக் கூடாது; அவர்கள் நகைகளை அணியமுடியாது; வளமான உணவை அவர்கள் சாப்பிட முடியாது; ஒரு இந்துவின் முன்னால் ஒரு நாற்காலியில் உட்கார முடியாது; அவர்கள் எந்த அசுத்தமான வேலைகளையும் கட்டாயம் செய்யவேண்டும்.

(v) ஷெட்யூல்டு வகுப்பினர் மீது கிராம இந்துக்கள் செய்யும் கொடுங்கோன்மை அவ்வளவு மாபெரும் அளவில் உள்ளது; அவ்வளவு சர்வ வியாபகமாக ஆகியுள்ளது; சென்ற தேர்தல்கள் எடுத்துக்காட்டியபடி தாங்கள் விரும்பும் வேட்பாளருக்கு, அவரை கிராம இந்துக்களுக்குப் பிடிக்கவில்லையெனில், ஷெட்யூல்டு வகுப்பினர் அவருக்கு வாக்களிக்க முடியாது.

(vi) கிராம அமைப்பு ஷெட்யூல்டு வகுப்பினரின் எந்த முன்னேற்றத்தையும் சாத்தியமற்றதாக ஆக்குகிறது; ஏனெனில், அதி வலுவான ஆயுதமான சமூக பகிஷ்காரத்தை இந்துக்கள் பிரயோகிப்பதை சாத்தியமாக்குகிறது. ஷெட்யூல் வகுப்பினரை இதைக் கொண்டு எப்பொழுதும் பயமுறுத்துகிறார்கள்; அவர்களை கீழே அமுக்கி வைப்பதற்கு அவர்களைப் பயமுறுத்துகிறார்கள். ஷெட்யூல்டு வகுப்பினரின் பார்வையில் எந்தச் செயலோ அல்லது இயக்கமோ அவர்களுக்கு நன்மை பயப்பதாக இருந்தாலும், அது இந்து நலன்களையோ அல்லது இந்து உணர்வுகளையோ பாதிப்பதாக இருந்தால், அவற்றை கைவிடும்படி ஷெட்யூல்டு வகுப்பினரை நிர்ப்பந்திக்க முடியும்.

12. இந்தக் கிராம அமைப்பு உடைபடாமல் இருக்கும் வரை ஷெட்யூல்டு வகுப்பினர் தொடர்ந்து தீண்டத்தகாதவர்களாக இருப்பர் என்பதில் ஐயம் எதுவும் இருக்க முடியாது; சாதி இந்துக்களால் கொடுமைக்கும், துயரத்திற்கும் இவர்கள் உட்படுத்தப் படுகின்றனர். சுதந்திரமான, கண்ணியமான முழு வாழ்க்கையை அவர்கள் ஒரு போதும் அனுபவிக்க முடியாது. காரியக் கமிட்டி ஆழமான விவாதத்தின் அடிப்படையில் பின்கண்ட முடிவுக்கு வந்துள்ளது; சாதி இந்துக்களின் கொடுமை மற்றும் அடக்கு முறையிலிருந்து நல்ல முறையிலான பாதுகாப்பிற்கு - இது சுயராஜ்யத்தில் பெரிய அளவு ஆகலாம்; ஏனெனில் இந்து ராஜ்யத்திற்கு மறுபெயர்தான் அது - முழுமையான மனிதர்களாக அவர்கள் வளர்ச்சியடைவதற்கு, அவர்களுக்கு பொருளாதார, சமூகப் பாதுகாப்பு அளிக்கவும், மேலும் தீண்டாமையை ஒழிப்பதற்கும் பல நூற்றாண்டுகளாக இந்துக்களின் பிடியில் அவர்கள் அனுபவித்துவரும் தீமைகளிலிருந்து விடுவிக்கப்படவும் வேண்டுமானால், கிராம அமைப்பில் தீவிர மாறுதல் செய்யப்பட வேண்டும். கிராம அமைப்பில் செய்ய வேண்டிய மாற்றத்தின் அவசியத்தை உணர்ந்து கீழ்கண்ட அடிப்படையில் இந்தியாவின் அரசியல் சாசனத்தில் ஷரத்துக்களைக் கொண்டு வருவது அத்தியாவசியம் என காரியக்கமிட்டி கருதுகிறது.

(i) ஷெட்யூல்டு வகுப்பினர் அவர்களது இப்போதைய குடியிருப்பிலிருந்து மாற்றம் செய்வதற்கும் சுதந்திரமாக இந்து கிராமங்களிலிருந்து தள்ளி ஷெட்யூல்டு வகுப்பினர் கிராமங்களை அமைக்க அரசியல் சாசனம் வகை செய்ய வேண்டும்.

(ii) ஷெட்யூல்டு வகுப்பினரை புதிய கிராமங்களில் அமைக்க குடியேற்ற ஒரு அமைப்பை (கமிஷன்) ஏற்படுத்த அரசியல் சாசனத்தில் ஒரு திருத்தம் சேர்க்கப்பட வேண்டும்.

(iii) விளைச்சலுக்குத் தகுதிவாய்ந்த ஆனால் யாரும் கைவசப்படுத்தாத எல்லா அரசு நிலத்தையும் ஷெட்யூல்டு வகுப்பினர் புதிய குடியிருப்புகளை அமைக்கும் நோக்கத்திற்காக கமிஷனிடம் ஒப்புவிக்கப்பட வேண்டும்.

(iv) ஷெட்யூல்டு வகுப்பினர் குடியிருப்புகள் அமைக்க தனிப்பட்ட நிலச் சொந்தக்காரர்களிடமிருந்து புதிய நிலத்தை வாங்க கமிஷனுக்கு அதிகாரம் அளிக்கப்பட வேண்டும்.

(v) குடியிருப்புக் கமிஷன் தனது கடமையை நிறைவேற்று வதற்காக, வருடத்திற்கு ரூபாய். 5 கோடி கமிஷனுருக்கு வழங்கு வதை அரசியல் சாசனம் உத்தரவாதம் செய்ய வேண்டும்.

## பிரிவு III

## இந்தியாவுக்கும் மன்னர் பிரான் அரசாங்கத்திற்கும் இடையிலான உடன்படிக்கை

13. சுதந்திர இந்தியாவிற்கும் மன்னர் பிரான் அரசாங் கத்திற்கும் இடையே உத்தேசிக்கப்பட்டுள்ள உடன்படிக்கை பற்றி காரியக் கமிட்டி மிக ஆழமாகப் பரிசீலித்தது. இந்த உடன்படிக்கையின் பின்னால் உள்ள கருத்து சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு அளிப் பதும் இந்தியா சுதந்திர நாடாக ஆனபின்பும் மற்ற நலன்களுக்கு மன்னர்பிரான் அரசாங்கம் அளித்த உறுதிமொழிகளைப் பாதுகாப் பதும்தான் என்று காரியக்கமிட்டி உணர்ந்து கொண்டது.

உத்தேசிக்கப்பட்ட உடன்படிக்கையின் நோக்கத்தைப் புரிந்து கொண்டாலும், அரசியல் சாசனத்தையும் மீறி (Override) அத்தகைய உடன்படிக்கையை செய்து கொள்வது எவ்வாறு சாத்தியம் என்பதைக் காரியக் கமிட்டியால் புரிந்து கொள்ள முடிய வில்லை; ஏனெனில் இந்தியா ஒரு சுதந்திர நாடு. அந்த உடன் படிக்கை அரசியல் சாசனத்தை பின்னுக்குத் தள்ளினால் அது சிறுபான்மையினருக்கு எவ்வாறு நன்மை பயக்கும்? கட்டுப் படுத்தாத ஒரு ஒப்பந்தத்தில் அமைவதைவிட, தங்கள் பாது காப்புகள் அரசியல் சாசனத்தில் உட்படுத்தப்படுவதற்கே ஷெட்யூல் வகுப்பினர் முன்னுரிமை அளிப்பர் என்ற முடிவுக்கு வந்தது காரியக் கமிட்டி.

## பிரிவு IV

### அரசியல் நிர்ணய சபை

14. காரியக் கமிட்டியின் திட்ட வட்டமான கருத்து இதுவே :-

(i) அரசியல் சாசன விஷயங்கள் மட்டுமே கையாள் வதற்கு அரசியல் நிர்ணய சபை அவசியமில்லாதது, திறமையற்றது.

(ii) வகுப்புப் பிரச்சினைகளை கையாள அரசியல் நிர்ணய சபை பயனற்றது; ஏனெனில் பெரும்பான்மையினரின் முடிவுகளை சிறுபான்மையினர் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

(iii) அரசியல் நிர்ணய சபையில் லஞ்ச நடைமுறைகள் நடப்பதற்கு வாய்ப்புண்டு. அது தங்களுடன் வாக்களிக்க ஷெட்யூல்டு வகுப்பினரின் உறுப்பினர்களை விலைக்கு வாங்க பலமான பணபலமுள்ள கட்சிக்கு சந்தர்ப்பத்தை (free hand) அளிக்கும்.

(iv) அரசியல் நிர்ணய சபையில் ஷெட்யூல் வகுப்பினரின் எண்ணிக்கையை விட பெரும்பான்மையினரின் எண்ணிக்கை மிக அதிகம் இருக்கும்; எனவே அதன் முடிவுகள் மீது எந்தப் பயனுள்ளதையும் செய்ய முடியாது.

இக்காரணங்களால், ஒரு அரசியல் நிர்ணய சபை என்ற திட்டத்தையே காரியக் கமிட்டி எதிர்க்கிறது.

## பிரிவு V

## இடைக்கால அரசாங்கம் பற்றிய கருத்துக்கள்

15. கீழ்க்கண்ட நிபந்தனைகளை ஒப்புக் கொள்ளும்வரை, ஷெட்யூல்டு வகுப்பினருக்கு எந்த இடைக்கால அரசாங்கமும் ஏற்புடையதல்ல.

(i) மத்திய சட்டசபையில் நியமிக்கப்பட்ட அதிகார பூர்வ கூட்டு நியமனங்களை ரத்து செய்து அவர்களால் (block) காலியாகும் இடங்களுக்குப் போதுமான எண்ணிக்கையில் ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதி நிதிகளை நியமிக்க வகை செய்ய வேண்டும்.

(ii) நிர்வாகக் கவுன்சிலில் முஸ்லிம்களுக்கு ஒதுக்கப் படும் இடங்களில் பாதியாவது ஷெட்யூல் வகுப் பினரின் பிரதிநிதிகளுக்கு வகை செய்யப்படும்.

(iii) பொதுப் பணிகளில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அளிக்கப்படும் பிரதிநிதித்துவம் சம்பந்தமாக, 1943 இந்திய அரசாங்கத்தின் தீர்மானத்தை ஷெட்யூல்டு வகுப்பினரை தீவிரமாகப் பாதிக்கும் விதத்தில் கவர்னர் ஜெனரல் சம்மதமின்றி அதில் எந்த மாற்றமும் கூடாது.

(iv) ஷெட்யூல்டு வகுப்பினரின் உயர் கல்விக்காக இந்திய அரசாங்கம் ஒதுக்கிய நிதியை ஷெட்யூல்டு வகுப் பினரின் நலன்களுக்குப் பாதகமாக கவர்னர் ஜெனரல் அனுமதி இன்றி ரத்து செய்யவோ மாற்றம் செய்யவோ கூடாது.

(v) வேவல் பிரபு 1944 ஆகஸ்ட் 15ம் தேதி திரு. காந்திக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டதுபோல், சுதந்திரஇந்தியாவின் இறுதி அரசியல் சாசனத்தில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கான பாதுகாப்பு பற்றிய ஆதாரக் கோட்பாடுகளை அரசியல் கட்சிகளால் முன்கூட்டியே ஏற்றுக்கொள்ளப்படுவது.

## பிரிவு VI

## பாகிஸ்தான் பற்றிய கருத்துக்கள்

பாகிஸ்தானுக்கான கோரிக்கை பற்றி காரியக் கமிட்டி அறியும். இந்தக் கோரிக்கையால் ஏற்படும் பிரச்சினைகள் பற்றி ஷெட்யூல்டு வகுப்பினர் தீவிர கவலை கொண்டுள்ளனர். இந்தக் கட்டத்தில் அதுபற்றி ஷெட்யூல்டு வகுப்பினரின் கருத்துக்களைத் தெரியப்படுத்துவதால் எந்தப் பயனும் ஏற்படாது. இதிலிருந்து தப்பமுடியாது என்று தெரியும் வரை தனது கருத்துக்களைக் கூறுவதை ஒத்தி வைக்கிறது.

## இணைப்பு I

## வாக்குறுதிகளும் பிரகடனங்களும்

1. ''தாழ்த்தப்பட்ட சாதியினர் சுய பாதுகாப்புப் பற்றி பாடத்தைக் கற்றுக் கொள்ள வேண்டுமென்று வாக்குறுதி

அளித்தவர்கள் (authors) குறிப்பிட்டனர். அறுபது அல்லது எழுபது சாதி இந்துக்கள் உள்ள சட்டசபையில் சமூகத்தின் ஒரு உறுப்பினரைச் சேர்ப்பதால் இந்தப் பலன் கிடைக்கும் என்று நம்புவது நிச்சயமாகக் கற்பனையே. அறிக்கையின் 51, 152, 154 மற்றும் 155 பாராக்களில் உள்ள கோட்பாடுகளை நடைமுறைப்படுத்த, சமூகத்திலிருந்து ஒதுக்கப்பட்டவர்களை அதிகப் பெருந்தன்மையுடன் நடத்த வேண்டும். முழுவதும் மூழ்கடிக்கப்படுவதிலிருந்து தாழ்த்தப்பட்ட வகுப்பினரைக் காப்பாற்ற ஒவ்வொரு கவுன்சிலிலும் அவர்களின் பிரதிநிதிகள் போதுமான அளவு இருக்க வேண்டும் என்று நாங்கள் கருதுகிறோம்; அதே சமயம் கூட்டுச் செயல்பாட்டின் சக்தியை ஊக்குவிக்க வேண்டும். மதராஸைப் பொறுத்தவரை, அவர்களுக்கு ஆறு இடங்கள் அளிக்கப்பட வேண்டுமென்று ஆலோசனை கூறினோம். வங்காளம், ஐக்கிய மாகாணம், பீஹார் மற்றும் ஒரிஸ்ஸாவுக்கு நான்கு இடங்கள் வீதம் நாங்கள் கொடுப்போம். மத்திய மாகாணம் மற்றும் பம்பாய்க்கு தலா இரண்டு இடங்கள். மற்றவற்றிற்கு ஒன்று இவை சம்பந்தப்பட்டவற்றில் கமிட்டியின் அறிக்கையில் ஐயத்திற்கிடமின்றி மாற்றங்கள் தேவைப்படுகிறது என்று நாங்கள் நினைக்கிறோம்''

வாக்குரிமை பற்றிய சவுத் பரோ கமிட்டியின் அறிக்கை மீது 1919 ஏப்ரல் 23ம் தேதிய இந்திய அரசாங்கத்தின் ஐந்தாவது அறிக்கையிலிருந்து சில பகுதிகள்.

2. ''எந்த அரசியல் சாசனத் திட்டத்திலும் இந்திய ஐக்கியத்தின் நலன்களுக்காக இந்திய சமஸ்தானங்களை உட்படுத்தப்பட வேண்டியதன் அத்தியாவசிய அவசியத்தையும் நாம் மறக்கக் கூடாது.

அவற்றில் இரண்டைப் பற்றி நான் குறிப்பிட வேண்டும். மேன்மைமிக்க முஸ்லீம் சிறுபான்மை மற்றும் ஷெட்யூல்டு வகுப்பினர் சென்ற காலத்தில் சிறுபான்மையினருக்கு அளித்த வாக்குறுதிகள் உள்ளன; அவர்கள் நிலைமை பாதுகாக்கப்பட வேண்டுமென்ற உண்மை; அந்த வாக்குறுதிகள் கௌரவிக்கப்பட வேண்டும்.''

1940 ஜனவரி 10ம் தேதி பம்பாய் ஓரியண்ட் கிளப்பில் லின் லித்கோ பிரபு ஆற்றிய உரையிலிருந்து சில பகுதிகள்.

3. ''முன்வந்துள்ள இரண்டு பிரதான விஷயங்கள் இவை தான். அவர்களின் நிலையை இப்பொழுது நான் தெளிவுபடுத்த வேண்டுமென்று மன்னர்பிரான் அரசாங்கம் விரும்புகிறது. முதலாவது விஷயம், எந்த எதிர்கால அரசியல் சாசனத் திட்டத்திலும் சிறுபான்மையினரின் நிலை.

இந்தியாவின் அமைதி மற்றும் நல்வாழ்க்கைக்கான தங்கள் பொறுப்புக்களை, எந்த அமைப்பு முறையான அரசாங்கத்திற்கும் - அதன் அதிகாரம் தேசிய வாழ்விலுள்ள பெரிய, பலம்வாய்ந்த கூறுகளால் நேரடியாக மறுக்கப்பட்டால் - மாற்ற அவர்கள் (மன்னர் பிரான் அரசாங்கம்) யோசிக்க முடியாது என்பது சொல்லாமலே விளங்கும். அத்தகைய அரசாங்கத்திற்கு அக்கூறுகள் பணிந்து போகும்படி அவற்றை நிர்பந்திப்பதிலும் அவர்கள் துணை போக மாட்டார்கள்''

- லின்லித்கோ பிரபுவின் 1940 ஆகஸ்ட் 8ம் தேசிய அறிக்கையிலிருந்து சில பகுதிகள்.

4. ''காங்கிரஸ் தலைவர்கள் .... ஒரு பிரமிக்கத்தக்க ஸ்தாபனத்தைக் கட்டி வளர்த்துள்ளார்கள். அதிகத் திறமைவாய்ந்த அரசியல் இயந்திரம் அது. .... அவர்கள் மட்டும் வெற்றி பெற்றிருந்தால் அவர்கள் கூறிக்கொள்வதுபோல், இந்திய அரசியல் வாழ்வின் எல்லாக் கூறுகளுக்காக காங்கிரஸ் உண்மையில் பேசமுடிந்திருந்தால், அப்பொழுது அவர்கள் கோரிக்கை எவ்வளவு தீவிரமாக இருந்தாலும், இன்று இருப்பதைவிட நமது பிரச்சினை பல அம்சங்களில் மிக எளிதானதாக இருந்திருக்கும். பிரிட்டிஷ் இந்தியாவில் தனியாக எடுத்துக் கொண்டால் எண்ணிக்கையில் மிகப்பெரிய கட்சி தான் அது. ஆனால் இந்தியா முழுமைக்கும் தாங்கள் பேசுவதாக உரிமை கோருவது இந்தியாவின் சிக்கலான வாழ்வில் பல முக்கிய கூறுகளால் முற்றிலுமாக மறுக்கப்படுகிறது. இந்த மற்றவர்கள் எண்ணிக்கையில் அதிகம் உள்ள சிறுபான்மையினராகத் தங்களை கருத வேண்டும் என்று மட்டும் உரிமை கோரவில்லை; எந்த எதிர்கால இந்தியக் கொள்கையிலும் அவசியமான முக்கிய தனிக் கூறுகளாக பங்கேற்கவும் உரிமை கோருகின்றனர். இக்கூறுகளில் அதி முன்னணியில் நிற்பவர்கள் மேன்மைமிகு முஸ்லிம் சமூகம். பூகோள ரீதியான தொகுதிகளில் பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்படும் அரசியல் நிர்ணய சபை உருவாக்கும் எந்த அரசியல் சாசனத்தோடும் தங்களுக்கு எந்த சம்பந்தமும் இல்லை

என்று கூறுகிறார்கள். வெறும் எண்ணிக்கையில் பெரும் பான்மையினராக உள்ளவர்களின் செயல்பாடுகளுக்கு எதிராகத் தங்களை ஒரு கூறாகக் கருதி அரசியல் சாசன சம்பந்தமான எந்த விவாதத்திலும் கலந்துகொள்ள உரிமை கோருகின்றனர். ஷெட்யூல்டு வகுப்பினர் என்று கூறப்படும் மகத்தான கூறுக்கும் இதுபொருந்தும். அவர்கள் சார்பாக திரு.காந்தி இதயபூர்வமான முயற்சிகளை மேற்கொண்டாலும், ஒரு சமுதாயமாக, காங்கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்தும் இந்து சமூகத்தின் பிரதான பகுதிக்கு வெளியே தாங்கள் நிற்பதாக அவர்கள் எண்ணுகிறார்கள்''.

- இந்திய விவகார அமைச்சர் மாண்புமிகு திரு.எல்.எஸ். அமெரி, காமன்ஸ் சபையில் 14-8-1940 ம் தேதி ஆற்றிய உரை யிலிருந்து சில பகுதிகள்

5. ''எல்லாக் காரணங்களையும் விரிவாக மீண்டும் விவ ரிக்காமலேயே மன்னர்பிரான் அரசாங்கம் ......... தெளிவுபடுத் தியதை தங்களுக்கு நினைவூட்டுகிறேன்.

(அ) இந்திய தேசிய வாழ்வின் எல்லாக் கூறுகளும் ஏற்றுக் கொள்ளும் அரசியல் சாசனத்தை வரைவது தேவைப் படும் ஒப்பந்த ஏற்பாடுகளைப் பற்றி மன்னர்பிரான் அரசாங்கத்துடன் பேச்சுவார்த்தைகள் நடத்தும் என்ற நிபந்தனை அடிப்படையில் யுத்த நடவடிக்கைகள் முடிந்ததும் நிபந்தனையற்ற சுதந்திரத்தை அளிப்ப தாக அவர்கள் (மன்னர்பிரான் அரசாங்கம்) வாக்களித் தனர்.

(ஆ) யுத்தம் நடந்து கொண்டிருக்கும் காலத்தில் அரசியல் சாசனத்தில் எந்த மாற்றத்தையும் கொண்டுவருவது சாத்தியமல்ல. அவ்வாறு செய்வதன் மூலமே தாங்கள் ஆலோசனை கூறும் ''தேசிய அரசாங்கத்தை'' மத்திய சட்டசபைக்கு பொறுப்புள்ளதாக ஆக்க முடியும்.

இந்த நிபந்தனைகளின் நோக்கம் இன மற்றும் மத சிறு பான்மையினர், தாழ்த்தப்பட்டவர்களின் நலன்களை பாதுகாப்பதற் கான தங்கள் கடமையை நிறைவேற்றுவதையும் இந்திய சமஸ்தானங் களுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவதையும் உறுதி செய்வதுமாகும்.''

-1944 ஆகஸ்ட் 15ம் தேதி வேவல் பிரபு திரு.காந்திக்கு எழுதிய கடிதத்திலிருந்து சில பகுதிகள்.

# இணைப்பு II

| தொகுதி | முதல்நிலை (Primary) தேர்தல் | | இறுதித் தேர்தல் | |
|---|---|---|---|---|
| | காங்கிரஸ் வேட்பாளருக்கு அளிக்கப்பட்ட வாக்குகள் | சம்மேளன வேட்பாளருக்கு அளிக்கப்பட்ட வாக்குகள் | காங்கிரஸ் வேட்பாளருக்கு அளிக்கப்பட்ட வாக்குகள் | சம்மேளன வேட்பாளருக்கு அளிக்கப்பட்ட வாக்குகள் |
| I - பம்பாய் நகரம் | | | | |
| 1. பம்பாய் (பரேல், பைகுல்லா) | 2,096 | 11,096 | 43,456 | 39,498 |
| 2. பம்பாய் நகரம் (வடக்கு மற்றும் நகர்ப்புறம்) | 2,088 | 12,899 | 59,646 | 42,510 |
| II - மத்திய மாகாணங்கள் | | | | |
| 1. நாகபுரி-உம்ரோ | 270 | 1,933 | இறுதித் தேர்தல் முடிவுகள் கிடைக்கவில்லை | |
| 2. ஹிங்கன் காட் -வார்தா | 342 | 1,339 | | |
| 3. பந்தரா - சரோலி | 976 | 3,187 | | |
| 4. யோட்மல் தார்வா | 514 | 452 | | |

## இணைப்பு II (தொடர்ச்சி)

| தொகுதி | முதல்நிலை (Primary) தேர்தல் | | இறுதித் தேர்தல் | |
|---|---|---|---|---|
| | காங்கிரஸ் வேட்பாளருக்கு அளிக்கப்பட்ட வாக்குகள் | சம்மேளன வேட்பாளருக்கு அளிக்கப்பட்ட வாக்குகள் | காங்கிரஸ் வேட்பாளருக்கு அளிக்கப்பட்ட வாக்குகள் | சம்மேளன வேட்பாளருக்கு அளிக்கப்பட்ட வாக்குகள் |
| **III பஞ்சாப்** | | | | |
| 1. கர்னால் | 519 | 1,691 | காங்கிரஸல்லாத வாக்காளர் எதிர்ப்பின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார். | |
| 2. அம்பாலா - சிம்லா | 1,392 | 6,509 | 10,503 | 7,533 |
| 3. கோஷியார்பூர் (மேற்கு) | 641 | 6,577 | 16,307 | 19,134 |
| 4. ஜலந்தர் | 775 | 7750 | 18,018 | 21,476 |
| 5. லூதியானா - பெரோஸ்பூர் | 812 | 5,986 | 24,352 | புள்ளி விவரம் கிடைக்கவில்லை |
| **IV மதராஸ்** | | | | |
| 1. அமலாபுரம் | 2,083 | 10,540 | 2,321 | முடிவுகள் தெரியவில்லை |
| 2. கோல்கொண்டா | 1,411 | 7,590 | | |
| 3. பந்தர் | 4,914 | 12,182 | 11,442 | |
| 4. கடப்பா | 3,482 | 1,360 | - | |
| 5. பெனுகொண்டா | 2,564 | 2,567 | - | |
| 6. திருவண்ணாமலை | 1,960 | 1,874 | - | |
| 7. திண்டிவனம் | 2,785 | 2,679 | 209 | |
| 8. மன்னார்குடி | 2,893 | வேட்பாளர் நிறுத்தப்படவில்லை | 6,505 | |
| 9. பொள்ளாச்சி | 2,430 | 791 | 337 | |
| 10. நாமக்கல் | 2,336 | 2,069 | - | |

குறிப்பு : முதல்நிலை தேர்தலில் ஒரு வாக்காளருக்கு ஒரு ஓட்டு மட்டுமே உள்ளது; இறுதித் தேர்தலில் எத்தனை தொகுதிகள் உள்ளனவோ அத்தனைவாக்குகள் ஒரு வாக்காளர் பெறுவர். வினியோக முறை கட்டாயமாக உள்ள மதராஸைத் தவிர, மற்ற எல்லா மாகாணங் களிலும் தான் விரும்புகிறபடி தமது வாக்குகளைப் பகிர்ந்து அளிக்கலாம்.

## இணைப்பு III

### பம்பாய் மாகாணத்தில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட தொகுதிகளில் ஒப்புநோக்கில் சாதி இந்துக்களின் வாக்காளர்களின் மற்றும் ஷெட்யூல்டு வகுப்பினர் வாக்காளர்களின் பலாபலம்

| பொதுத் தொகுதியின் பெயர் | வாக்காளர்களின் மொத்த எண்ணிக்கை | பொது வாக்காளர்களின் மொத்தம் | ஷெட்யூல்டு வகுப்பினர் வாக்காளர்களின் மொத்தம் |
|---|---|---|---|
| 1. பம்பாய் நகர் வடக்கு மற்றும் நகர்ப்புற மாவட்ட பகுதி | 2,10,268 | 1,67,002 | 34,266 |
| 2. பம்பாய் நகரம் (பைகுல்லாவும் பரேலும்) | 1,70,511 | 1,52,991 | 28,520 |
| 3. பைரா மாவட்டம் | 1,46,584 | 1,39,266 | 7,318 |
| 4. சூரத் மாவட்டம் | 90,435 | 85,670 | 4,765 |
| 5. தாணா தெற்கு | 72,416 | 67,749 | 4,667 |
| 6. அஹமத் நகர் தெற்கு | 82,989 | 75,607 | 7,382 |

இணைப்பு III (தொடர்ச்சி)

| பொதுத் தொகுதியின் பெயர் | வாக்காளர்களின் மொத்த எண்ணிக்கை | பொது வாக்காளர்களின் மொத்தம் | ஷெட்யூல் டு வகுப்பினர் வாக்காளர்களின் மொத்தம் |
|---|---|---|---|
| 7. கிழக்கு ராந்தேஷ் கிழக்கு | 1,01,486 | 91,377 | 10,109 |
| 8. நாசிக் மேற்கு | 1,11,969 | 99,271 | 12,698 |
| 9. பூனா மேற்கு | 91,368 | 77,389 | 13,979 |
| 10. சத்தாரா வடக்கு | 1,05,352 | 94,200 | 11,152 |
| 11. ஷோலாப்பூர் - வடகிழக்கு | 74,296 | 64,583 | 9,713 |
| 12. பெல்காம் வடகிழக்கு | 97,725 | 79,422 | 18,303 |
| 13. பீஜப்பூர் வடக்கு | 69,478 | 60,485 | 8,993 |
| 14. கொலாபா மாவட்டம் | 1,07,638 | 1,02,637 | 5,001 |
| 15. ரத்னகிரி வடக்கு | 36,531 | 33,002 | 3,329 |

குறிப்பு: மேற்கண்ட அட்டவணையில், பொது வாக்காளர்கள் என்றால் சாதி இந்து வாக்காளர்கள் ஆகும். ஷெட்யூல்டு வகுப்பினர் வாக்காளர்களைவிட சாதி இந்துக்களின் வாக்குகள் எவ்வளவு அதிகம் உள்ளது என்பதையும் கூட்டுத் தொகுதியில் தங்களின் பலத்தைக் கொண்டு ஷெட்யூல்டு வகுப்பினர் (எல்லா ஷெட்யூல் வகுப்பினரும் வாக்களித்தாலும்) ஒதுக்கப்பட்ட தொகுதியில் வெற்றிபெற முடியாது என்பதையும் இந்த அட்டவணை எடுத்துக் காட்டுகிறது. மற்ற மாகாணங்களின் நிலையும் அதே மாதிரிதான்.

●●●

# 3

# அமைச்சரவைத் தூதுக் குழுவுடன் டாக்டர் அம்பேத்கர் பேட்டி

*அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் ஒரு பிரதிநிதி என்ற முறையில் அமைச்சரவைத் தூதுக்குழு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரைப் பேட்டி கண்டது. அதேபோல் அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கழகத்தின் பிரதிநிதிகளாக திரு.ஜெகஜீவன்ராம், ராதாநாத் தாஸ் மற்றும் பிருதிவிசிங் ஆசாத் ஆகியோரையும் பேட்டி கண்டது - ஆசிரியர்கள்.*

''ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் சார்பில் டாக்டர் அம்பேத்கரைப் பேட்டி கண்டது. அரசியல் நிர்ணய சபையில் ஷெட்யூல்டு வகுப்பினரைப் பிரதிநிதித்துவப்படுத்த கையாள வேண்டிய முறை பற்றி கேட்டதற்கு, அரசியல் நிர்ணய சபையைத் தாம் விரும்பவே இல்லை என்று தமது பதிலில் கூறினார். சாதி இந்துக்களின் ஆதிக்கத்திற்கு உட்படும் ஷெட்யூல்டு வகுப்பினர் ஒரு சிறிய சிறுபான்மையினராக மட்டுமே இருக்கப்போவதால், அவர்களால் எப்பொழுதும் தோற்கடிக்கப்படுவர். சிறுபான்மையினருக்கு பாதுகாப்பு அளிப்பதாக மன்னர்பிரானின் அரசாங்கம் அளித்த எல்லா வாக்குறுதிகளும் பயனற்றுப் போகும்.

அவரது சொந்த ஆலோசனை என்னவாயிருந்தது எனில், அரசியல் நிர்ணயசபைக்காக உள்ள கடமைகளை இரு பகுதிகளாகப் பிரித்துக் கொள்ள வேண்டும் என்பதாகும்; அதாவது (அ) அரசியல் சாசனப் பிரச்னைகள் சரியாகக் கனிக்கப்பட வேண்டும்; உதாரணமாக சட்ட சபைக்கும் நிர்வாகத்திற்கும் இடையே உள்ள உறவுகள் மற்றும் அவற்றில் யார் யார் இருப்பர், அவர்களின் செயல்பாடுகள் பற்றி. (ஆ) வகுப்புப் பிரச்னை பற்றிய கேள்விகள் (அ) பிரிவில் குறிப்பிட்டவை புகழ்பெற்ற அரசியல் சாசன விஷயங்களில் நிபுணத்துவம் வாய்ந்த புகழ்பெற்ற கிரேட் பிரிட்டன் அல்லது ஐக்கிய அமெரிக்காவைச் சார்ந்த ஒரு சட்ட நிபுணர் அந்தக் கமிஷனுக்குத் தலைமை தாங்க வேண்டும். பிற உறுப்பினர் பிரபல இரண்டு இந்திய சட்ட நிபுணர்கள் - அதாவது இந்து அல்லது முஸ்லிம் சமூகத்தினரைப் பிரதிநிதித்துவப்படுத்துபவராக இருக்க வேண்டும். பரிசீலிக்கப்பட

வேண்டியது 1935ம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம்; இப்பொழுது அமுலிலுள்ள சட்டத்தில் ஏற்படுத்தப்பட வேண்டிய மாற்றங்கள் பற்றி சிபாரிசு செய்யும்படி கமிஷன் கோரப்பட வேண்டும். (ஆ) பிரிவில் உள்ளதைப் பொறுத்தவரை பல்வேறு சமூகத்தினரின் தலைவர்கள் கலந்துகொள்ளும் மாநாட்டின் முன் இந்த மாற்றங்கள் பரிசீலனைக்கு வைக்கப்பட வேண்டும்.

எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய ஒரு தீர்வுக்கு மாநாடு வரமுடியவில்லையெனில் மன்னர்பிரான் அரசாங்கம் ஒரு தீர்ப்பை (award) வழங்க வேண்டும்.

தூதுக்குழு திரும்பச் செல்லும்முன்பு, புதிய அரசியல் சாசனத்தில் ஷெட்யூல்டு வகுப்பினரின் அடிப்படை மனித உரிமைகளுக்கு, அதாவது வாழவும் சுதந்திரமாக இருக்கவும் இனிமையான வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவுமான உரிமைகளுக்கு உத்தரவாதம் செய்வதை உறுதிப்படுத்த வேண்டும் என டாக்டர் அம்பேத்கர் கோரினார். மேலும் தனித் தொகுதிகள் மீண்டும் அளிக்கப்படுவதோடு, அவர்கள் கோரிய மற்ற பாதுகாப்புகளும் வழங்கப்பட வேண்டும்.

இந்திய அரசியலில் இரண்டு விஷயங்கள் ஆதிக்கம் செலுத்துவதாக இந்திய விவகார அமைச்சர் குறிப்பிட்டிருந்தார். பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து சுதந்திரம் பெறுவது, மற்றும் இந்து-முஸ்லீம் பிரச்னை. இவை தீர்க்கப்பட்டால் கட்சிகளிடையே உள்ள வேறுபாடுகள் (divisions) பொருளாதார பிரச்னைகள் மீதாக இருக்கலாம். அதிகாரத்தை மாற்றப்போகும் பிரிட்டிஷ்காரர்களை நம்புவதைவிட, ஷெட்யூல்டு வகுப்பினர் தங்களை இடது சாரிகளுடன் இணைத்துக் கொள்வதன் மூலம் தங்கள் உரிமைகளைப்பெற நல்ல வாய்ப்பைப் பெறுவர். கூட்டுத் தேர்தல் தொகுதிகள் இருக்கும் வரை, ஷெட்யூல்டு வகுப்பினரின் வாக்காளர் மிகச் சிலராகவே இருப்பர். அவர்களின் அபிலாஷைகளை இந்து வேட்பாளர்கள் சுலபமாகப் புறக்கணிக்க முடியும் என்பதை டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்தினார். சாதி இந்துக்கள் ஷெட்யூல்டு வகுப்பினரின் வேட்பாளர்களை ஒருபோதும் ஆதரிக்கமாட்டார்கள். தனித் தொகுதிகள் அடிப்படையானவை. அவையின்றி ஷெட்யூல்டு வகுப்பினர் ஒருபோதும் தங்கள் சொந்த பிரதிநிதிகளைப் பெற முடியாது.

●●●

# 4

# பீல்டு மார்ஷல் வைகவுண்ட் வேவலுக்கும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கும் இடையே நடந்த கூட்டம் பற்றிய ஒரு குறிப்பு

ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளனம் பற்றிய கொள்கை பற்றி 1946 ஏப்ரல் 5ம் தேதி அமைச்சரவைக் குழுவிற்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், ஒரு நிகழ்ச்சி பதிவுக் குறிப்பைச் (Memorandum) சமர்ப்பித்தார். அதே நாளில் மதியம் 12 மணிக்கு பீல்ட் மார்ஷல் வைகவுண்ட் வேவல் உட்பட்ட அமைச்சரவைக் குழுவிற்கும் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கருக்கும் இடையே ஒரு கூட்டம் நடந்தது. கூட்டத்திற்குப் பிறகு ஒரு குறிப்புத் தயாரிக்கப்பட்டது. அது வருமாறு:

- ஆசிரியர்கள்

**ரகசியம்**

நிகழ்ச்சிப் பதிவுக் குறிப்போடு சேர்ப்பதற்கு தம்மிடம் எதுவுமில்லை என டாக்டர் அம்பேத்கர் கூறினார். அதன் பிரதிகள் தூதுக்குழுவினருக்கு அளிக்கப்பட்டன. அகில இந்திய ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளனம் ஏப்ரல் 2ம் தேதி தனது கூட்டத்தில் நிறை வேற்றிய தீர்மானங்களின் பதிவேட்டின் பாரா 5ல் பாதுகாப்புப் பற்றிய கோரிக்கைகள் பட்டியலிடப்பட்டுள்ளன; அவை பெரு மளவில், அரசாங்கத்திலும் பொதுப் பணிகளிலும் ஷெட்யூல் வகுப்பினருக்குப் போதுமான பிரதிநிதித்துவம் பெறுவதை நோக்க மாகக் கொண்டது. தாங்கள் உட்படுத்தப்படாத எந்த அரசியல் சாசனத்தையும் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் ஒரு போதும் ஏற்றுக் கொள்ளாது.

பாகிஸ்தான் விஷயத்தைப் பொறுத்தவரை, புதிய அரசால் மொத்தமாக முஸ்லீம்கள் அனைவரும் உண்மையில் பயனடைவார்களா என்பதைப் பற்றி டாக்டர் அம்பேத்கர் ஐயப் பட்டார். அவர்களில் பற்பலர் இந்துஸ்தானத்தில் இருந்தாக வேண்டும்; (பாகிஸ்தானுக்கு) குடிபெயர விரும்ப மாட்டார்கள். அல்லது சாத்தியமாகாது.

*பாகிஸ்தான் நிரந்தரமானதா அல்லது முஸ்லீம்களிடம் உள்ள தற்காலிக உணர்வா என்று டாக்டர் அம்பேத்கர் ஆச்சரியப்பட்டார். இது ஒருவேளை கடந்து சென்றுவிடக் கூடியதாக இருக்கலாம். ஆனால் பொறுத்துப் பார்க்கலாம் என்பது சாத்தியமானதல்ல; முஸ்லீம்களின் கோரிக்கை அவ்வளவு பலமாக, வளர்ந்துள்ளதால், அதைச் சந்திப்பது (எதிர்கொள்வது) எப்படியாகிலும் அவசியமாகி யுள்ளது. ஐயர்லாந்துப் பிரச்சினைக்கு 1920ல் திரு.அஸ்குயித் முன்மொழிந்ததை தக்க மாற்றம் செய்து இந்தச் சிக்கலுக்கு தீர்வுகாண வேண்டுமென்று இந்த பொருள் பற்றிய தனது நூலில் ஆலோசனை கூறியுள்ளார். ஐயர்லாந்தின் மற்றப் பகுதியான அல்ஸ்டர் (Ulster) ஆறு வருடங்களுக்கு பிரிக்கப்பட வேண்டுமென அவர் ஆலோசனை கூறினார்; ஆனால் இந்த இடைக்காலத்தில் பொதுவான அக்கறை உள்ள விஷயங்களை கையாள்வதற்கு நாட்டின் இருபாகங்களின் பிரதிநிதிகள் கொண்ட கவுன்சில் அமைக்கப்பட வேண்டும். ஆறு வருடங்கள் கழித்து தனியாக இருக்க வேண்டுமா அல்லது தெற்கு அயர்லாந்துடன் மீண்டும் இணைந்து கொள்ள வேண்டுமா என்பதை அல்ஸ்டர் முடிவு செய்ய வேண்டும். அம் மாதிரியே 10 ஆண்டுகளுக்கு பாகிஸ்தானுக்கு சுதந்திரம் அளிக்கப் பட வேண்டும் என டாக்டர் அம்பேத்கர் ஆலோசனை கூறினார். அந்தக் காலம் முடியும்போது அது பொருளாதார சாத்தியம் வாய்ந்ததா என்பது தெரிந்துவிடும். அப்பொழுது பாகிஸ்தானின் மக்கள் இந்துஸ்தானுடன் இணைய விரும்பினால், பேச்சுவார்த்தைகளை நடத்துவதில் அவர்கள் பலவீனமான நிலையில் இருப்பர் என்பது பேரம் பேசுவதில் இந்துஸ்தானுக்கு எல்லா அம்சங்களிலும் சாதகமாக இருக்கும் என்பதும் கவனிக்கத்தக்கது. 10 ஆண்டு காலத்தில் ஒரு பொதுக் கவுன்சில் இருக்கலாம்; ஆனால் வெறும் கலந்து ஆலோசிக்கும் அமைப்பாக, எவ்வித நிர்வாக அதிகாரம் இல்லாத தாக இருக்கும். இன்றைய உணர்வில் அகில இந்திய மத்திய அரசாங் கத்தை முஸ்லீம்கள் ஒத்துக்கொள்ள செய்வது பலவீனமானதாகவும் பயனற்றதாகவும் இருக்கும். பாகிஸ்தான் வேண்டுமென்ற முஸ்லீம் களின் கோரிக்கையோடல்லாமல் பல பிரிவினைப் போக்குகள் இருக்கலாம். அவசியப்படும் ஒரு மத்திய அரசாங்கம்தான் பல முடையதாக இருக்கும்; அதுதான் நாட்டை ஒன்றிணைத்துக் கொள்ள முடியும்.*

*அரசியல் நிர்ணய சபையில் ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதித்துவத்திற்கான வழிமுறைகள் பற்றிய கேள்விக்கு பதிலளித்த டாக்டர் அம்பேத்கர் ஒரு அரசியல் நிர்ணய சபையை*

தாம் விரும்பவில்லை என்று கூறினார். அதில் சாதி இந்துக்கள் ஆதிக்கம் செலுத்துவர். ஷெட்யூல்டு வகுப்பினரின் உறுப்பினர்கள் ஒரு சிறிய சிறுபான்மையாக இருப்பர். அவர்கள் - அசெம்பளி முடிவுகளுக்கு நான்கில் மூன்று பங்கு அல்லது மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை தேவைப்பட்டாலும் - எப்பொழுதும் தோற்கடிக்கப்படுவர். மன்னர் பிரான் அரசாங்கம் பாதுகாப்பு பற்றி சிறுபான்மையினருக்கு அளித்த வாக்குறுதிகள் அனைத்தும் பயனற்றுப்போகும். சட்டசபை உறுப்பினர்களிடையே ஏராளமான அளவு லஞ்சம் ஊடாடும்; தங்கள் சமூகத்தினருக்கு எதிராக வாக்களிக்கும்படி உறுப்பினர்கள் விலைக்கு வாங்கப்படுவர்.

அவரது சொந்த ஆலோசனை வருமாறு:

அரசியல் நிர்ணய சபைக்காக வகுக்கப்பட்ட கடமைகள் இரு பாகங்களாகப் பிரிக்கப்பட வேண்டும்.

(அ) அரசியல் சாசன ரீதியான கேள்விகள் :

சட்ட சபைக்கும் நிர்வாகத்துக்குமிடையிலான உறவுகள்; அவற்றின் உள்ளடக்கமும் செயல்பாடுகளும் இவ்விஷயங்கள் பற்றி பெரிய அளவு வாக்குவாதங்கள் இல்லாதிருந்தாலும் அவை பற்றி கிளர்ச்சி எழவில்லை. மாகாண சட்ட சபைகள் தேர்ந்தெடுக்கும் நபர் இம்மாதிரி விஷயங்களை கையாளும் மனோபலம் கொண்டவராக இருக்கமாட்டார். இது நிபுணர்களின் வேலை.

(ஆ) வகுப்புப் பிரச்சினை

இந்தத் தலைப்புகளில் உள்ள கேள்விகள் ஒரு கமிஷனுக்கு அனுப்பப்பட வேண்டும்; கிரேட் பிரிட்டன் அல்லது ஐக்கிய அமெரிக்காவைச் சேர்ந்த ஒரு புகழ்பெற்ற அரசியல் சட்ட நிபுணர் அதன் தலைவராக இருக்க வேண்டும். மற்ற இரு உறுப்பினர்கள் இரண்டு நிபுணர்கள்- இந்து மற்றும் முஸ்லிம் சமூகத்தினருக்கு ஒருவர் வீதம் - ஆவர். அவர்கள் பரிசீலிப்பது 1935 ம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டமாகும். அது இப்பொழுதுள்ள வடிவில் என்ன மாற்றங்கள் செய்யப்பட வேண்டுமென்று சிபாரிசுகள் செய்ய அவர்கள் கோரப்படுவர்.

(ஆ)ன் கீழ் உள்ள கேள்விகள் பல்வேறு வகுப்பினரின் தலைவர்களின் மகா நாட்டில் அது வைக்கப்பட வேண்டும் (எல்லோரும்) ஏற்றுக்கொளளக்கூடிய தீர்வு ஏற்படவில்லையெனில் மன்னர்

பிரான் சர்க்கார் ஒரு தீர்ப்பை (award) அளிக்க வேண்டியிருக்கும். அது நியாயமானதாக இருந்தால் சந்தேகமின்றி அது ஏற்றுக் கொள்ளப்படும்.

அடுத்து ஷெட்யூல்டு வகுப்பினரின் இன்றைய நிலைமை டாக்டர் அம்பேத்கர் விவரித்துக் கூறினார். அவர்கள் எண்ணிக்கை 6 கோடி என்று மதிப்பிடப்பட்டுள்ளது; இது ஒருவேளை கறாராக இல்லாமல் இருக்கலாம்; முதலாவதாக, மாகாணங்களுக்கான நம்பத் தகுந்த புள்ளிவிவரங்கள் இல்லை. இரண்டாவதாக, மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அரசியலுடன் குழப்பப்படுகிறது. இந்த மக்கள் அனைவரும் சட்ட ரீதியான பாதுகாப்பில்லாமல் தீவிரமாக பாதிக்கப்பட்டுள்ளனர். கிராமங்களில் அவர்களுக்கு நலம் இல்லை. நடைமுறையில் சாதி இந்துக்களின் அடிமைகளாக உள்ளனர். சாதி இந்துக்களின் அதிகாரத்திற்கு ஒரு உதாரணம் கூறினால் சில தீண்டத்தகாதவர்கள் அதிக சம்பளம் தரும் இராணுவ அதிகாரிகளின் கீழ் வேலை செய்ய தங்கள் கிராமத்திலிருந்து தப்பினர். தங்களுக்காக வேலை செய்யத் திரும்பவும் அவர்களைக் கொண்டுவர சாதி இந்துக்களால் முடிந்தது. போலீஸ் மற்றும் ரெவின்யூ துறைகளில் கீழ்மட்ட பணிகளில் சாதி இந்துக்களைப் பொறுத்தவரை இது பிரிட்டிஷ் அரசாங்கமல்ல, ஒரு இந்து அரசாங்கமே. எடுத்துக் காட்டாகக் கூற வேண்டுமெனில், திரு.காந்தி மீது கற்களை எறிந்ததற்காக அவர்களில் 100 பையன்கள் பம்பாயில் கைது செய்யப் பட்டனர். நகரின் ஷெட்யூல்டு வகுப்பினர் வாழும் இடங்களில் ஏராளமான சேதத்தை ஏற்படுத்த போலீஸ் இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்தியது.

அரசியல் ரீதியாக, மற்ற சாதியினரைப் போல (சமூகத்தினர் போல) ஷெட்யூல் வகுப்பினருக்கு 1932ல் தனித்தேர்தல் தொகுதிகள் வழங்கப்பட்டிருந்த போதிலும், புனா ஒப்பந்தத்தால் அநேகமாக அவர்கள் அவற்றை இழந்தார்கள். அதற்குப் பதிலாக இரட்டைத் தேர்தல் முறைகளைப் பெற்றார்கள். அதன் விளைவு எல்லா இந்துக்களும் வாக்களித்த இரண்டாவது (இறுதி) தேர்தலில் முடிவுகள் முதலாவது தேர்தலின் முடிவுகளை - அதில் தீண்டத்தகாதவர்கள் மட்டுமே வாக்காளர்கள் - செல்லத்தகாததாகிவிட்டன. ஏப்ரல் 2ம் தேதிய காரிய கமிட்டியின் தீர்மானங்களில் இணைக்கப் பட்ட புள்ளி விவரங்கள் பற்றிக் குறிப்பிட்டார். அது காண்பிப்பது என்னவெனில், முதலாவதாக முதல் நிலைத் தேர்தலில் காங்கிரஸ் நிறுத்திய ஷெட்யூல்டு வகுப்பு வேட்பாளர்களைவிட பலவற்றில் சம்மேளன வேட்பாளர்கள் அதிக வாக்குகள் பெற்றனர்; ஆனால்,

இறுதித் தேர்தலில் அவர்கள் தோற்கடிக்கப்பட்டனர். இரண்டாவதாக, பொது வாக்காளர்களின் எண்ணிக்கையோடு ஒப்பிட்டால், ஷெட்யூல்டு வகுப்பினர் பெற்ற வாக்குகள் எவ்வளவு குறைவானது. அப்படி இருந்தும் தங்கள் வேட்பாளர்கள் வெற்றிபெறுவதை ஊர்ஜிதம் செய்த காங்கிரஸ் கொள்ளையடிப்பதிலும் தீயிட்டுக் கொளுத்துவதிலும் ஈடுபட்டது. அவர்கள் என்ன செய்தார்கள் என்று காண்பிக்க ஏராளமான புகைப்படங்களை முன்வைத்தார்.

மத்திய சட்டசபை 1919 லிருந்து செயல்பட்டு வருகிறது. என்றாலும், கேள்விகள் எதுவும் கேட்கப்படவில்லை; தீர்மானங்கள் எதுவும் முன்வைக்கப்படவில்லை; ஷெட்யூல் வகுப்பினருக்கு உதவும் நோக்கத்துடன் எதுவும் செய்யப்படவில்லை.

இந்திய சமஸ்தானங்களிலும் ஷெட்யூல்டு வகுப்பினரின் நிலையும் மோசம்தான். அவர்கள் சாப்பிட அனுமதிக்கப்படாத சில உணவுப் பொருள்கள் கூட இருந்தன. சில சமஸ்தானங்களில் இப்பொழுது நிறுவப்பட்டுவரும் பிரதிநிதித்துவ அமைப்புகளில் கூட, முஸ்லிம்களைத் தவிர, வேறு எந்த சமூகத்திற்கும் தனி பிரதி நிதித்துவம் கொடுக்கப்படவில்லை. அரசியல் சட்ட ரீதியான இந்தச் சோதனை முயற்சிகளில் அரசியல் இலாகா அதிக அக்கறை எடுத்திருக்க வேண்டும்; ஷெட்யூல்டு வகுப்பினருக்கு தனித் தொகுதிகளை அளித்திருக்க வேண்டும். அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் மாநாட்டுத் தலைவரை தூதுக்குழுவினர் பார்த்துப் பேச வேண்டும்.

கிழக்கு இந்தியக் கம்பெனியின் ராணுவத்தில் மனித சக்தியின் மிக ஆரம்பத் தோற்றுவாய் (Source) ஷெட்யூல் வகுப்பினரே; அவர்கள் உதவியுடன் பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவை வென்றனர் (கைப்பற்றினர்) அன்றிலிருந்து அவர்கள் பிரிட்டிஷ் காரர்களுக்கு நண்பர்களாக இருந்து வந்தனர். எனினும் உணர்வு பூர்வமாகவும் திட்டமிட்டும் பிரிட்டிஷ்காரர்கள் ஒருபோதும் அவர்களுக்கு உதவவில்லை. ஆனால் 1892லிருந்து முஸ்லிம்களுக்கு ஏராளமாக உதவியுள்ளனர்.

இந்தியா சுதந்திரம் அடைந்தால், அது விளையக் கூடிய மிகப்பெரிய துயரம் தரும் நிகழ்ச்சியாக இருக்கும் என்று அவர் கருதினார். பிரிட்டிஷ்காரர்கள் வெளியேறும் முன்பு, ஷெட்யூல் வகுப்பினருக்கு அடிப்படை மனித உரிமைகளான வாழ்க்கை,

சுதந்திரம் மற்றும் மகிழ்ச்சிகர வாழ்வை புதிய அரசியல் சாசனத்தில் உத்தரவாதமளிக்க அது உறுதிசெய்ய வேண்டும். அவர்களது தனித் தேர்தல் தொகுதிகள் மீண்டும் அளிக்கப்படுவதையும் அவர்கள் கோரிய மற்ற பாதுகாப்புகளையும் அளிக்க உறுதி செய்ய வேண்டும். இப்பொழுது அதிருப்தி அவரைப் பின்பற்றுபவர்களை வன்முறைக்கும் கம்யூனிஸத்தையும் நோக்கித் துரத்துகிறது. அரசியல் சாசன முறைகளின் பயனை உணர்த்த அவர்களுடன் சோதனையில் அவர் ஈடுபட்டுள்ளார்.

இதுவரை இந்திய அரசியலில் இரு விஷயங்கள் ஆதிக்கம் செலுத்துகின்றன என்று பெத்திக் லாரன்ஸ் பிரபு கூறினார். அவை பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து சுதந்திரத்தை வெல்வதும், இந்து-முஸ்லிம் பிரச்சினையும். அவை தீர்க்கப்பட்டால், கட்சிப் பிரிவுகள் பொருளாதார பிரச்னைகள் மீதாக இருக்கலாம். அதிகாரத்தை வழங்கவிருக்கும் பிரிட்டிஷ்காரர்களை நம்பியிருப்பதை விட தங்களை இடதுசாரிகளுடன் இணைத்துக் கொண்டால் ஷெட்யூல் வகுப்பினர் தங்கள் உரிமைகளைப் பெற நல்ல வாய்ப்பு உள்ளது. தமது பதிலில், கூட்டுத் தொகுதிகள் இருக்கும்வரை, ஷெட்யூல் வகுப்பினர் வாக்காளர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருக்குமாதலால் இந்து வேட்பாளர்கள் நன்கு ஏமாற்றலாம். ஷெட்யூல் வகுப்பினரின் வேட்பாளர்களை இந்துக்கள் ஒருபொழுதும் ஆதரிக்க மாட்டார்கள். இன்றைய அமைப்பு முறையில் அவர்கள் இறுதித் தேர்தலில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அவர்கள் ஓட்டுப் போட வேண்டும்; அப்படிச் செய்வதில் அவர்களின் நோக்கம் தங்கள் வேட்பாளர்களுக்கு சாதகமாக இருப்பதற்காக அல்ல; அவரது சொந்த சம்மேளனம் நிறுத்தும் வேட்பாளர்களை அதிக ஓட்டுகள் பெற்று தோற்கடிப்பதுதான். தனித் தேர்தல் தொகுதிகள் அடிப்படையானவை; அவை இல்லாமல் ஷெட்யூல்டு வகுப்பினர் தங்கள் சொந்த பிரதிநிதிகளைப் பெற முடியாது.

● ● ●

# 5

# தீண்டத்தகாதவர்களுக்கு தனிக் குடியிருப்புகள்

*தீண்டத்தகாதவர்களுக்கு குடியிருப்புக் கிராமங்கள் வேண்டுமெனக்கோரி டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் அமைச்சரவைத் தூதுக் குழுவிடம் பதிவுக் குறிப்பு ஒன்றைச் சமர்ப்பித்தார். பத்திரிக்கை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் இது விஷயம் பற்றிய தமது கருத்துக்களை அவர் தெளிவுபடுத்தினார். - ஆசிரியர்கள்*

''ஷெட்யூல்டு வகுப்பினருக்கு தனிக் கிராமங்கள் என்ற கோரிக்கை எந்த கட்சியின் (நபரின்) உரிமைகளையும் தடை செய்வதாகாது என்ற கருத்தை ஒரு பேட்டியில் இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நல உறுப்பினர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் தெரியப் படுத்தினார்.

நாட்டில் விளைச்சலுக்கு பயன்படும் தரிசு நிலம் யார் கையிலும் இல்லாமல் பெரிய அளவில் நாட்டில் உள்ளது; ஷெட்யூல்டு வகுப்பினருக்கு குடியிருப்புகளாக இவை ஒதுக்கப்படலாம். இந்த ஆலோசனையைச் செயல்படுத்த அரசாங்கம் ஒரு டிரஸ்டை அமைக்கலாம். ஷெட்யூல்டு வகுப்பினர் கூலி வேலைக்கு அமர்த்த, எல்லா அசுத்தமான வேலைகளையும் செய்ய மிகக் குறைந்த கூலியில் அமர்த்த தோற்றுவாயாக உள்ளனர். அவர்கள் இந்த அடிமைத்தனத்தை நீட்டிக்க விரும்புவர். பம்பாய், மதராஸ் போன்ற மாகாணங்களில் சகிக்க முடியாத நிலையில் ஷெட்யூல்டு வகுப்பினர் வாழ்வதால், அவர்களுக்காக தனிக் கிராமங்கள் இருப்பது அவசியமாகிறது.

கிராமம் சமுதாயத்தின் பொருளாதார அலகாக (unit) இல்லாமல் ஒரு சமூக அலகாக இருப்பதால், பொருளாதார ரீதியில் தனிக்கிராமங்களின் கழுத்து நெரிக்கப்படும் என்ற பயப்படத் தேவையில்லை என்று டாக்டர் அம்பேத்கர் விளக்கினார். இந்த இடங்களில் உற்பத்தியாகும் பொருட்கள் அவை எங்கு வரவேற்கப் படுமோ அந்த இடங்களுக்கு அனுப்பப்படும்.

*இந்தக் கோரிக்கை பாகிஸ்தானுக்கும் பொருந்துமா என்று கேட்டதற்கு, ஆம் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். இப்போதைக்கு பாகிஸ்தான் பற்றி ஸ்தூலமாக எதுவும் இல்லை. அது ஸ்தூலமான உரு எடுக்கும் போது, தனிக் கிராமங்கள் அமைக்கப்பட வேண்டுமா என்ற பிரச்சினை எழும்.*

*தென்னாப்பிரிக்காவில் உள்ள பண்டு மற்றும் பிற மலை ஜாதியினரின் நிலையை ஒத்ததாக இருக்கிறது. ஷெட்யூல் வகுப்பினரின் நிலை. தென்னாப்பிரிக்க அரசியல் சாசனத்தில், பாண்டுக்கள் சம்பந்தமாக செய்யப்பட்டது போலவே, ஷெட்யூல் வகுப்பினரின் நலனைப் பாதுகாக்க, எதிர்கால இந்திய அரசியல் சாசனத்தில் (ஷரத்து) பாதுகாப்பை ஏன் உட்படுத்தக் கூடாது என்று அவர் கேட்டார்.*

A.P.I"



6

# அமைச்சரவை ஆலோசனைகளுக்கு எதிராக கண்டனம் தெரிவிக்கும் கடிதம்

| | |
|---|---|
| *பீமராவ் R. அம்பேத்கர்,* | *22, பிருதிவிராஜ் சாலை,* |
| *எம்.ஏ.பி.எச்டி, டி.எஸ்ஸி, பார்-அட்-லா,* | *புதுடெல்லி,* |
| *கவர்னர் ஜெனரல் நிர்வாகக் கவுன்சில் உறுப்பினர்* | *1946 மே 3ம் தேதி* |

*அன்புள்ள வேவல் பிரபுவுக்கு,*

*சிம்லா மாநாட்டிற்கு ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதிக்கு அழைப்பு அளிக்காமல் அமைச்சரவை தூதுக் குழு விட்டுவிட்டது இது. அரசியல் சட்ட ரீதியான பாதுகாப்புகள் பற்றிய தங்களது கோரிக்கையை அமைச்சரவைத் தூதுக்குழு எவ்வாறு (பைசல்) தீர்த்து வைக்கப் போகிறது என்ற பல அவநம்பிக்கைகளை ஷெட்யூல் வகுப்பினரின் மனதில் தோன்றக் காரணமாகிவிட்டது. இது சம்பந்த மாக ஷெட்யூல் வகுப்பினரிடையே ஏற்படுத்திய பிரதிபலிப்புகளை தங்களுக்கு எடுத்துக் கூற விரும்புகிறேன்.*

*ஷெட்யூல்டு வகுப்பினரின் ஒரு பிரதிநிதியை சிம்லா மாநாட் டிற்கு அழைக்காமல் விட்டுவிட்டது பல விளக்கங்களுக்கு உட்படும். சாத்தியமாகயிருக்கும் என்று எனக்கு தோன்றுகிற விளக்கம், ஷெட்யூல் வகுப்பினரின் கோரிக்கைகள் மற்ற கட்சிகளின் ஆதரவை பெறத் தேவையில்லாதவை; ஏனெனில் அவை அவர்களின் நியாயமான கோரிக்கைக்கு குறுக்கே இல்லை; அந்தக் கோரிக்கை கள் பின்வருமாறு:*

*(1) தனித் தேர்தல் தொகுதிகள், (2) நிர்வாகக் குழுவில் போது மான பிரதிநிதித்துவம், (3) இடைக்கால அரசாங்கத்திற்கு முன்பாக எதிர்கால அரசியல் சாசனத்தில் ஷெட்யூல்டு வகுப்பினர் நலன்களைப் பாதுகாக்க சில பொதுக் கோட்பாடுகளைப் பற்றிக் கட்சிகளிட மிருந்து உறுதிமொழி.*

ஷெட்யூல்டு வகுப்பினரின் கோரிக்கைகள் மற்ற கட்சிகளின் ஒப்புதலைப் பெறத் தேவையில்லை என்ற கருத்து, 1946 ஏப்ரல் 5ம் தேதி அமைச்சரவைத் தூதுக்குழுவை நான் பேட்டி கண்டபோது நான் வலியுறுத்திய கருத்தாகும்.

பஞ்சாப், வடமேற்கு மாகாணம், சிந்து மற்றும் வங்காளத்தில் பெரும்பான்மை சமூகமாக உள்ள முஸ்லிம்கள் தனித்தொகுதிகள் கோருவது என்பது ஷெட்யூல்டு வகுப்பினர் போன்ற ஒரு சிறுபான்மை வகுப்பினர் தனித் தேர்தல் தொகுதி கோருவதிலிருந்து மாறுபட்டது. ஒரு பெரும்பான்மை சமூகத்தினரின் தனித் தொகுதிக் கோரிக்கை சிறுபான்மை சமூகத்தினரின் சம்மதத்தை நிச்சயம் பெற வேண்டும். ஆனால் ஒரு சிறுபான்மை சமூகத்தினரின் தனித் தொகுதிக் கோரிக்கை பெரும்பான்மை சமூகத்தினரின் விருப்பத்தை பொறுத்ததல்ல. பெரும்பான்மைக்கு எதிராக சிறுபான்மையினரை பாதுகாக்க வகுக்கப்பட்ட அமைப்பு முறையே வாக்காளர் தேர்தல் தொகுதி. கூட்டாகவா அல்லது தனியாக இருக்க வேண்டுமா என்பதைக் தீர்மானிப்பதை முற்றிலுமாக சிறுபான்மையினரிடம் விட்டுவிட வேண்டும். அதற்குக் காரணம் எது சிறந்த நலன் என்பதைச் சிறுபான்மையினர் அறிவர். பெரும்பான்மையினருக்கு சொல்வதற்கு இதில் ஒரு இடம் கூடஇல்லை. சிறுபான்மையினரின் முடிவை உண்மையில் ஏற்றுக்கொள்ள வேண்டும். இதன்படி, ஷெட்யூல்டு வகுப்பினர் தனித்தொகுதி பெறவேண்டுமா அல்லது இல்லையா என்பதில் சொல்வதற்கு அவர்களுக்கு அதிகம் எதுவும் இல்லை.

ஷெட்யூல்டு வகுப்பினரின் தனித் தொகுதிக் கோரிக்கை மற்ற எந்த சமூகத்தினரையும் பாதிக்கவில்லை. எனவேதான் மற்ற சமூகத்தினரால் இந்தக் கோரிக்கை ஏற்கப்பட்டுள்ளது. ஷெட்யூல்டு வகுப்பினர் இந்துக்கள், எனவே தனித் தொகுதி அவர்களுக்கு அளிக்கக்கூடாது என்ற வாதம் உண்மையில் ஆதாரமற்றது; சிறுபான்மையினரின் பாதுகாப்புக்கான அமைப்பு உண்மையிலேயே தனித் தேர்தல் தொகுதியே, மதத்தோடு எந்த சம்பந்தமும் இல்லாதது. இதற்கு அத்தாட்சி எதுவும் வேண்டுமெனில், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் மற்றும் இந்திய கிறித்தவர்கள் விஷயத்தை எடுத்துக் கொள்ளலாம். அவர்கள் எல்லோரும் ஒரே மதத்தை சார்ந்தவர்கள். ஆனால் அவர்கள் ஒவ்வொருவரும் தனித் தேர்தல் தொகுதிகள் பெற்றுள்ளனர்.

இந்த விவரங்களை மற்றும் வாதங்களையெல்லாம் தூதுக் குழு பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டிருந்தால், இந்துக்களின் ஒப்புதல் தேவையில்லை என்றும் இது அமைச்சரவைத் தூதுக் குழு முடிவு செய்ய வேண்டிய விஷயம் மட்டுமே என்றும் ஷெட்யூல்டு வகுப்பினர் கூறுவதை அது ஒப்புக்கொண்டிருந்தால் அது இயல் பானதே. அதுவும் குறிப்பாக, கூட்டுத் தேர்தல் தொகுதி ஷெட்யூல் வகுப்பினரின் பிரதிநிதித்துவத்தை கேலிக்கூத்தாக்கியுள்ளது.

இரண்டாவது கோரிக்கை, இடைக்கால அரசாங்கத்தில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கான பிரதிநிதித்துவம் முஸ்லிம்களுக்கு அளிக்கப்படுவதில் 50% ஆக இருக்க வேண்டும். இந்தக் கோரிக்கை ஏற்கப்படும் முன்பு, இந்துக்களின் ஒப்புதல் தேவையற்றது. ஷெட்யூல்டு வகுப்பினரின் எண்ணிக்கை அவர்கள் அனுபவித்து வரும் கஷ்டங்கள் பிற முன்னேறிய சமூகங்கள் இருக்கும் நிலைக்கு தங்களை உயர்த்திக் கொள்ள அவர்கள் செய்ய வேண்டியவை ஆகியவற்றை கணக்கில் கொண்டு மத்திய நிர்வாகக் கவுன்சிலில் அவர்களின் பிரதிநிதித்துவம் பற்றி முடிவு செய்ய வேண்டியது தூதுக்குழு. சென்ற சிம்லா மாநாட்டில் இந்த விஷயத்தை நான் எழுப்பியதை தாங்கள் நினைவில் வைத்திருப்பீர்களென நான் நம்புகிறேன். ஷெட்யூல்டு வகுப்பினருக்கு இரு இடங்கள் அளிக்கத் தாங்கள் தயாராக இருந்தீர்கள்; முஸ்லிம்களுக்கு வழங்கப்பட்டதில் இது 50%க்கு கொஞ்சம் குறைவு.

மூன்றாவது கோரிக்கையில் புதிது எதுவுமில்லை. 1944 ஆகஸ்ட் 15ம் தேதி திரு.காந்திக்கு தாங்கள் எழுதிய கடிதத்தில் தாங்கள் வெளிப்படுத்திய தங்கள் சொந்தக் கருத்தை மீண்டும் வலியுறுத்துவது மட்டுமே. கடிதத்தின் 5வது பாராவில் தாங்கள் கூறினீர்கள்.

> **''தங்களது ஆலோசனையின் அடிப்படையில் இந்த சூழ் நிலைமகளில் விவாதம் எந்தப் பலனையும் அளிக்காது என்பது தெளிவு. எனினும், இப்போதைய அரசியல் சாசனத்தின் கீழ் அமைக்கப்படும் இடைக்கால அரசாங்கத்தில் இந்துக்கள், முஸ்லிம் கள் மற்றும் முக்கிய சிறுபான்மையினர் ஆகியோரின் தலைவர் கள் ஒத்துழைக்கத் தயாராக இருந்தால் நல்ல முன்னேற்றம் ஏற்படும் என நான் நம்புகிறேன். அத்தகைய இடைக்கால அரசாங் கம் வெற்றிபெற, அது அமைக்கப்படுவதற்கு முன்பு, புதிய அரசியல் சாசனத்தை உருவாக்கும் முறைபற்றி கோட்பாடு அடிப்படையில் இந்துக்கள், முஸ்லிம்கள் மற்ற முக்கிய பகுதி யினரிடை உடன்படிக்கை அவசியம் செய்துகொள்ளப்பட வேண்டும்''**

தாங்கள் முன்வைத்த கோட்பாடு மன்னர் பிரான் அரசாங்கத்தின் சார்பாகச் செய்யப்பட்டதென்றும், எனவே அமைச்சரவைத் தூதுக் குழுவையும் அது கட்டுப்படுத்தும் என்றும் நம்பலாம். இந்த கோட்பாட்டை நடைமுறைப்படுத்துவதற்கு ஷெட்யூல்டு வகுப்பினர் விரும்புவதெல்லாம் இதுவே - கட்சிகளின் சம்மதம் முற்றிலும் தேவையற்றது என்று தோன்றுகிறது.

நான் இவ்வாறு கூற முடிந்தால், ஷெட்யூல்டு வகுப்பினர் கோரிக்கைகள் மீது தங்கள் முடிவை வெளியிடும் முன்பு இந்துக்களின் சம்மதம் தேவையென்று தூதுக்குழுவினர் கருதுகின்றனர் என்ற முடிவுக்கு இட்டுச் செல்கிறது. இந்தக் கருத்துக்கு போதுமான பலம் உள்ளது; எனவேதான் சிம்லா மாநாட்டிற்கு தங்கள் பிரதிநிதிகளை அனுப்பிவைக்கும்படி ஷெட்யூல் வகுப்பினருக்கு அழைப்பு விடுக்கப்படவில்லை.

துரதிர்ஷ்டவசமாக, ஒரு மனதிற்குத் தோன்றும் விளக்கம் இது ஒன்று மட்டுமல்ல. சாத்தியமான மற்றொரு விளக்கமும் உள்ளது. காங்கிரஸாருக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையே உடன்படிக்கை ஏற்பட்டால், ஷெட்யூல் வகுப்பினரின் பிரச்சினையை பரிசீலிக்கக் காத்திராமல் இடைக்கால அரசாங்கத்தை ஏற்படுத்துவதை நோக்கியும் எதிர்கால அரசியல் சாசனத்தை உருவாக்குவதையும் நோக்கி முன்னேறதக்க ஏற்பாடுகளைச் செய்யப் போதுமானது என்று அமைச்சரவை தூதுக்குழு கருதுகிறது என்பது அந்த விளக்கம்.

அமைச்சரவையின் திட்டம் என்பது பற்றி ஷெட்யூல் வகுப்பினர் அறியமாட்டார்களாதலால் அவர்கள் கவலைப்படுகிறார்கள். தூதுக்குழு இரண்டாவது திட்டத்தைக் கடைப்பிடித்தால் - அது உண்மையாக இருக்கலாம் - ஷெட்யூல்டு வகுப்பினருக்கு எதிரான இந்த துரோகத்திற்கு எதிராக எனது கண்டனத்தை தெரிவிக்காவிடில், நான் எனது கடமையிலிருந்து தவறுவதாக நான் உணர்கிறேன்; இதன் மூலம் ஏற்படும் எல்லா விளைவுகளுக்கும் தூதுக்குழுவினரே முழுப் பொறுப்பாவர்.

ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதி என்ற தகுதியில் நான் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். அமைச்சரவைத் தூதுக்குழுவின் ஒரு உறுப்பினர் என்ற தகுதியில் இது உங்களுக்கு எழுதப்படுகிறது.

*தங்கள் சகாக்களுக்கு இதை அனுப்பிவைத்தால் தங்களுக்கு மிகவும் நன்றியுடையவனாவேன்.*

*தங்கள் உண்மையுள்ள,*

*(ஒப்பம்) பி.ஆர்.அம்பேத்கர்*

***மேன்மையுள்ள ஃபீல்ட் மார்ஷல்***
***ரைட் ஆனரபிள் வைகவுண்ட் வேவல்,***
***வைஸ்ராய் மற்றும் இந்திய கவர்னர் ஜெனரல்***



# 7

# அமைச்சரவைக் குழுவின் ஆலோசனைகள் பற்றி ஏ.வி. அலெக்சாண்டருக்கு எழுதிய கடிதம்

*பீம.ராவ் ஆர்.அம்.பேத்கர்,*
*எம்.ஏ.,பி.எச்டி.,டி.எஸ்ஸி.,பார்-அட்-லா*
*உறுப்பினர்,*
*கவர்னர்-ஜெனரல் நிர்வாக சபை*

*22, பிருதிவிராஜ் சாலை,*
*புதுடெல்லி*
*தேதி : 1946 மே 14ம் தேதி*

***அன்புள்ள திரு. அலெக்சாண்டர் அவர்களுக்கு,***

*காங்கிரஸுக்கும் லீகுக்கும் இடையே உடன்படிக்கை ஏற்பட தாங்கள் மேற்கொண்ட முயற்சிகள் தோல்வியுற்றது வருந்தத்தக்கது. அனுதாபமும் நன்றியும் பெற தாங்கள் தகுதி பெற்றுள்ளதை நான் அறிவேன். உடன்படிக்கை ஏற்பட தூதுக்குழு மேற்கொண்ட முயற்சி ஒரு கதையை எனக்கு நினைவிற்குக் கொண்டு வருகிறது. தனது சொத்துக்கு வாரிசாக மகன் பிறக்காததால், தனக்கு ஒரு வாரிசைப் பெற்றுத் தர ஒரு பணியா ஓர் இளம்பெண்ணை திருமணம் செய்து கொண்டார். அந்த மணப்பெண் கர்ப்பம் தரித்தாள்; ஆனால் மணமகன் ஒரு தீவிர வியாதிக்கு உட்பட்டார். எனினும் குழந்தையைப் பார்க்காமல் இறக்க மறுத்தார்; பிரசவம் ஏற்படும் காலம்வரை காத்திருக்கவும் விரும்பவில்லை அவ்வளவு அதிக மாக பொறுமை இழந்த அவர், ஒரு மருத்துவரை அழைத்து, அந்த குழந்தை பையனா அல்லது பெண்ணா என்று தாம் தெரிந்து கொள்ள தமது மனைவியின் வயிற்றை அறுக்கும்படி அவரைக் கேட்டுக் கொண்டார். அறுவை சிகிச்சையின் விளைவு என்ன வெனில் குழந்தையும் தாயும் இறந்துவிட்டனர். நான் கூற முடியும் என்றால், பனியா செய்ததுபோலவே, தூதுக்குழு செய்ய விரும்பியது. கருவில் வளர இயல்பாகத் தேவைப்படும் காலத்திற்கு முன்பே கட்டாய பிரசவத்தை ஏற்படுத்தத் தூதுக்குழு முயற்சி மேற்கொண்டது என என்னைப்போல் பலர் நினைக்கிறார்கள் என்பதைத் தாங்கள் அறியாமல் இருக்கலாம்.*

இந்த நாட்டின் எதிர்காலத்தைப் பற்றி முடிவுசெய்ய இந்துக்களும் முஸ்லிம்களும் இன்று மனரீதியில் பக்குவம் அடையவில்லை என்று சொல்வது சரி என்று எனது மனதிற்குத் தோன்றுகிறது. இந்துக்களும் முஸ்லிம்களும் வெறும் (கூட்டங்கள்) கும்பல்கள் மட்டுமே. வாழ்வதற்கு தேவையானவற்றை பெற ஊக்குவிக்கப்படுவதைவிட, கூட்டாக எழும் உணர்வால் தூண்டப்படுவது சுலபம் என்பது தங்களது அனுபவத்திற்கு உட்பட்டதே. சாதகமானவற்றை நிதானமாகக் கணிப்பதைவிட, பெரும் திரளான மக்களைக் கூட்டாகத் தியாகம் செய்ய இணங்க வைப்பது சுலபமானது. லாப நஷ்டம் பற்றி அறிவுபூர்வமாக உணரும் நிலையை ஒரு கூட்டம் சுலபமாக இழந்துவிடுகிறது. அது லட்சிய நோக்கத்தால் ஈர்க்கப்படுகிறது. அது உயர்வானதாக அல்லது கீழானதாக இருக்கலாம்; பண்புடையதாக அல்லது நாகரீகமற்றதாக, பரிவு காட்டத்தக்கதாக அல்லது கருணையற்றதாக இருக்கலாம்; ஆனால் அது எப்பொழுதும் பகுத்தறிவுக்கு மேலாகவோ அல்லது கீழாகவோ இருக்கலாம். ஒவ்வொருவருடைய அறிவு பூர்வமான சிந்தனையே எல்லோரின் உணர்ச்சிப் பெருக்கில் மறைந்துவிடுகிறது. அதிகார மாற்றத்திற்கு பாடுபட வேண்டும் என்பதை ஏற்றுக்கொள்வதைவிட தற்கொலை செய்து கொள்ளும்படி ஒரு கூட்டத்தை இணங்க வைப்பது சுலபமானது. அடுத்து என்ன செய்யவேண்டும் என்று உங்களுக்கு ஆலோசனை கூறுவது என் வேலையல்ல. பங்கி பஸ்தியிலும் 10 அவுரங்கசீப் சாலையிலும் விவேகத்தையும் உற்சாக உணர்வையும் தூதுக்குழு பெற்றது. அந்த விவேகத்தையும் (Wisdom) உற்சாக உணர்வையும் குறைத்துக் கூறுவதில் நான் கடைசி ஆளாக இருப்பேன். அவசரத்தில் ஒரு வயதானவர் அவசரப்படுவதுபோல - அயர்லாந்து குடியாட்சி (Home Rule) இயக்கத்தில் கிளாட்டன் ஈடுபட்டது குறித்து சேம்பர்லேன் உபயோகித்த பதப்பிரயோகத்தைப் போல் -பரிதாபகர நிலையை தூதுக்குழு வெளிப்படுத்தவில்லை எனில், ராஜ தந்திரத்தில் குளிர்ச்சியடையும் (பக்குவமடையும்) காலத்தை (Cooling Period) அனுமதித்தால், அவர்கள் கையாள வேண்டிய நிலை இலகுவானது என்பதை அவர்கள் காண்பார்கள்.

தூதுக்குழுவுக்கும் பிரதான கட்சிகளுக்கும் இந்த கட்சிகள் மீது நம்பிக்கை வைத்தவர்களுக்குமிடையிலான விஷயம் இது. நான் அக்கறைகொள்வது, தீண்டத்தகாதவர்களின் பிரச்னையும், அரசியல் சட்ட ரீதியான பாதுகாப்புகள் வேண்டும் என்ற அவர்களின் கோரிக்கையை தாங்கள் கையாளப் போவது எவ்வாறு என்பதுதான். சிம்லாப் பேச்சுவார்த்தைகளின் கடைசி நாளில், தாங்கள் டெல்லி திரும்பிய பின் அது எடுக்கவிருக்கும் அடுத்த நடவடிக்கை பற்றி

தூதுக்குழு அறிவிக்கும் என்று அதிகாரபூர்வ அறிக்கையில் குறிப் பிடப்பட்டிருந்தது சந்தேகத்திற்கு இடமில்லாமல், ஷெட்யூல்டு வகுப்பினரின் கவனம் எல்லாம் அந்த அறிவிப்பு பற்றியே உள்ளது. தங்களின் விதியை இறுதியாக முடிவு செய்ய தூதுக்குழு என்ன செய்யப்போகிறது. தூதுக்குழுவின் முடிவு ஒன்று வாழ்வுக்கும், சுதந்திரத்திற்கும் இன்ப வாழ்க்கையை நோக்கி செல்லவும் தீண்டத் தகாதவர்களுக்கு வழிகாட்டும் அல்லது அவர்களின் சவப்பெட்டி யில் ஆணி அடிக்கும். வாழ்வா அல்லது மரணமா என்ற பிரச்னை என்பதால், தீண்டத்தகாதவர்களின் பிரச்னை பற்றி சில நிமிஷங்கள் தங்கள் கவனத்தை நான் ஈர்த்தால் அது தவறாக இருக்காது.

4. தீண்டத்தகாதவர்கள் எதிர்கொள்ளும் பிரச்சினை மிகக் கடினமானது. கீழே கூறும் உண்மைகளைக் கவனத்தில் கொண்டால் அதிர்ஷ்டவசமாக அதை எளிதாகப் புரிந்துகொள்ளலாம். பெரும் எண்ணிக்கையிலான இந்து மக்களால் தீண்டத்தகாதவர்கள் சூழப் பட்டுள்ளனர். இந்துக்கள் அவர்களை பகை உணர்வுடன் பார்க்கின் றனர். அவர்களைக் கீழ்த்தரமாக நடத்தவும் அவர்களுக்கு எதிராகக் கொடுமை இழைக்கவும் வெட்கப்படுவதில்லை. தினசரி நடைபெறும் இந்த தவறுகளுக்கு பரிகாரம் தேட, தீண்டத்தகாதவர்கள் நிர்வாகத் தின் உதவியைக் கோரவேண்டியுள்ளது. இந்த நிர்வாகத்தின் தன்மையும் உள்ளடக்கமும் என்ன? சுருக்கமாகக் கூற வேண்டு மெனில், இந்தியாவில் நிர்வாகம் முழுவதும் இந்துக்கள் கரங் களில் உள்ளது. அது அவர்களின் ஏகபோகம். கீழிருந்து மேல்வரை அவர்களால் கட்டுப்படுத்தப்படுகின்றன. அவர்கள் ஆதிக்கத்தி லில்லாத இலாகா ஒன்றுகூட இல்லை. போலீஸ், நீதித்துறை மற்றும் ரெவின்யூத் துறைகளில் - ஏன், நிர்வாகத்தின் எல்லாக் கிளைகளிலும் அவர்கள் ஆதிக்கம் செலுத்துகின்றனர். அடுத்து ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டியது நிர்வாகத்தில் உள்ள இந்துக்கள் வெறும் சமூகத் தன்மை இல்லாதவர்களாக மட்டுமல் லாமல், தீண்டத்தகாதவர்பால் சமூக-எதிர் நிலையை எடுக்கிறார்கள், பகை உணர்வு கொண்டிருக்கிறார்கள். அவர்களின் ஒரே நோக்கம் தீண்டத்தகாதவர்களைப் பாரபட்சமாக நடத்துவதும் அவர்களின் சட்டப்படியான நலன்களை மறுத்து அவர்களை இல்லாததாக்க மட்டுமன்றி அவர்களை கொடுங்கோன்மைக்கும் அடக்குமுறைக் கும் உட்படுத்துவதுமாகும். விளைவு என்னவெனில், இந்து மக்க ளுக்கும் இந்து ஆதிக்கத்திலுள்ள நிர்வாகத்திற்குமிடையே தீண்டத் தகாதவர்கள் மாட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு தீங்கு விளைவிப்பவர்கள் ஒரு பக்கம், பாதிக்கப்பட்டவர்களை பாதுகாப் பதற்குப் பதிலாக தீங்கிழைப்பவர்களை பாதுகாப்பது மறுபக்கம்.

5. இந்தப் பகைப் புலனில், காங்கிரஸ் சுயராஜ்யம் தீண்டத் தகாதவர்களுக்கு என்ன செய்யும்? அது ஒன்றேதான்; அது இப் பொழுது நிர்வாகம் மட்டுமே இந்துக்கள் (அவர்கள்) கையில் உள்ளது; சுயராஜ்யத்தின் கீழ், சட்ட சபைகளிலும் நிர்வாக சபையிலும் முழுவதுமாக இந்துக்களே இருப்பர். சுயராஜ்யம் தீண்டத்தகாதவர் களின் துயரங்களை தீவிரப்படுத்தும் என்பது கூறாமலே விளங்கும். ஏனெனில், விரோதமனப்பான்மையுள்ள நிர்வாகத்தை எதிர்கொள் வதற்கு (மேலாக) அதிகமாக, தீண்டத்தகாதவர்கள் பகைமையும் அலட்சியமும் கொண்ட சட்ட சபையையும், உணர்ச்சியற்ற நிர்வாக சபையையும் தீண்டத்தகாதவர்கள்பால் அவை காட்டும் கட்டுக் கடங்காத விஷத்தையும் கடுமையையும் பாரபட்ச கண்ணோட் டத்தையும் அவர்கள் எதிர்கொள்ள வேண்டும். வேறு முறையில் கூறவேண்டுமெனில், காங்கிரஸ்-பாணி சுயராஜ்யத்தின் கீழ் இந்துக் களும் இந்துத்துவமும் தீண்டத்தகாதவர்கள் மீது திணிக்கிற அவமானகரமான விதியிலிருந்து அவர்கள் தப்புவதற்கு வழியே இல்லை.

6. சுயராஜ்யம் (அவர்களுக்கு) தீண்டத்தகாதவர்களுக்கு கடும் துயராக (Calamity) ஆகாமல் தடுக்க ஒரே வழி அவர்களுக்கு சட்ட சபையில் பிரதிநிதித்துவம் அளிப்பதே என்று அவர்கள் வலியுறுத்தி வருகிறார்கள் என்பதைப் பற்றி உங்களுக்கு ஒரு கருத்தை இது அளித் திருக்குமென நம்புகிறேன். அதன் மூலம் இந்துக்களால் அவர் களுக்கு இழைக்கப்படும் தவறுகளையும் அநீதிகளையும் எதிர்த்து ஆட்சேபித்துக் கொண்டே இருப்பர்; நிர்வாகக் கவுன்சிலில் அவர் களின் பிரதிநிதிகள் இருப்பதன் மூலம் தங்கள் முன்னேற்றத்திற்காக திட்டங்களை அவர்கள் வகுக்கலாம். பொதுப் பணிகளில் பிரதிநிதி களைக் கொண்டிருப்பது நிர்வாகம் அவர்கள்பால் பகைமை உணர்ச் சியை முற்றிலுமாக காட்டாமல் இருக்கலாம். அரசியல் சட்ட ரீதியான பாதுகாப்புகளை தீண்டத்தகாதவர்கள் கோருவதில் உள்ள நியாயத்தைத் தாங்கள் ஏற்றுக்கொண்டால், தனித் தேர்தல் தொகுதி களை ஏன் அவர்கள் விரும்புகிறார்கள் என்பதைப் புரிந்துகொள்வதில் உங்களுக்கு கஷ்டம் எதுவும் இருக்காது. சட்ட சபையில் தீண்டத்த காதவர்கள் சிறுபான்மையினராக இருப்பர். சிறுபான்மையினராக இருக்கப் போவது அவர்கள் விதி. எண்ணிக்கையில் இந்தப் பெரும் பான்மையை வெற்றிபெற முடியாது; ஏனெனில் அது வகுப்பு அடிப்படையிலானது; நிர்ணயிக்கப்பட்டது, முன்கூட்டியே தீர்மானிக் கப்பட்டது. அவர்கள் செய்யக்கூடியதெல்லாம், எந்த நிபந்தனைகள் அடிப்படையில் பெரும்பான்மையுடன் பணியாற்ற முடியும் என்பதை அவர்கள் நிர்ணயிக்க முடியும்; பெரும்பான்மை விதிக்கும் நிபந்

தனைகளை ஏற்றுக்கொள்ள அவர்களைக் கட்டாயப்படுத்த முடியாது, இரண்டாவதாக, பெரும்பான்மை இவர்களுடன் பணியாற்ற மறுத்து இவர்களின் பிரச்னைகளை தீர்த்துவைக்க மறுத்தால், சட்ட மன்றத்தில் பெரும்பான்மைக்கு எதிராக தங்கள் கண்டனத்தைத் தெரிவிக்கும் உரிமை உண்டு. கண்டனம் தெரிவிக்கும் தங்களது உரிமையை தீண்டத்தகாதவர்கள் நிலைநிறுத்திக் கொள்வது எப்படி? சட்டசபையில் உள்ள தங்கள் பிரதிநிதிகள் பெரும்பான்மையின் வாக்குகளுக்குக் கட்டுப்படாமல் இருந்தால்தான். தனித் தேர்தல் தொகுதிகள் என்ற அவர்களின் கோரிக்கைக்கு இதுதான் அடிப்படை.

7. தீண்டத்தகாதவர்கள் ஒரு தனித் தேர்தல் தொகுதியை பெறாவிடில், எந்தப் பாதுகாப்புகளும் தீண்டத்தகாதவர்களுக்கு எந்தப் பயனையும் அளிக்காது. விஷயத்தின் சாரம் தனித்தேர்தல் தொகுதி. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த அரிஜனங்களில் மூவரை தூதுக்குழு 1946 ஏப்ரல் 9ம் தேதி பேட்டி கண்டபோது அவர்கள் சமர்ப்பித்த கோரிக்கைகளின் நகல் என் முன் உள்ளது. டூலித் தெருவைச் சேர்ந்த மூன்று தையல்காரர்கள் ''இங்கிலந்து மக்களாகிய நாங்கள்'' என்று பார்லிமென்டுக்கு மனு சமர்ப்பித்த மூர்க்கத் தனத்தைப் (audacity) போன்றதே இது; மாறுபட்டதல்ல. இதைத் தவிர, ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளனத்தின் சார்பில் நான் முன் வைத்த கோரிக்கைகளுக்கும் அந்த அரிஜனங்களின் கோரிக்கைகளுக்குமிடையே எந்த வித்தியாசமும் இல்லை என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டியது. இருக்கும் ஒரே வித்தியாசம் (தனி) தேர்தல் தொகுதிகள் பற்றி காங்கிரஸ் ஹரிஜனங்களின் கோரிக்கையை தாங்கள் எப்படிப் புரிந்து கொள்கிறீர்கள் என்று நான் அறியேன். உண்மையில் அவை கோரிக்கைகள் அல்ல. அரசியல் பாதுகாப்புகளாக ஷெட்யூல் வகுப்பினருக்குத் தர காங்கிரஸ் தயாராக இருப்பதையே இவை பிரதிபலிக்கின்றன. இது நான் மட்டும் புரிந்து கொண்டதல்ல. எனக்குத் தெரிந்த விஷயம் இது. காங்கிரஸின் சிந்தனையைப் பற்றி தெரிந்துகொண்ட ஒரு நபர் எனக்குத் தெரிவித்தது, நான் கூட்டுத் தேர்தல் தொகுதிகளை ஒப்புக் கொண்டால், எனது மற்ற கோரிக்கைகளை எல்லாம் தன் பங்கிற்கு வழங்க காங்கிரஸ் தயாராக இருக்குமாம்.

ஷெட்யூல்டு வகுப்பினரின் எல்லாக் கோரிக்கைகளையும் ஒப்புக் கொள்ள காங்கிரஸ் தயாராக உள்ளது என்றும் ஒரு கோரிக்கையை, அதாவது தனித் தேர்தல் தொகுதியை மட்டும் ஆட்சேபிக்கிறது ஏன் என்று தாங்கள் அதிசயப்பட்டுக் கொண்டிருக்க

வேண்டும். காங்கிரஸ் எந்த விளையாட்டை விளையாடுகிறது என்பதை நீங்கள் புரிந்துகொண்டால் அதில் ஆச்சரியம் எதுவும் இருக்காது. தீண்டத்தகாதவர்களுக்கு சில பாதுகாப்புகளை அளிப் பதிலிருந்து தப்பிக்க முடியாது என்று உணர்ந்து அவற்றைப் பயனற்ற தாக்க ஏதாவது வழி கண்டுபிடிக்க வேண்டுமென்று காங்கிரஸ் விரும்புகிறது. கூட்டுத் தொகுதிகள் முறையில் பாதுகாப்புகள் பயனற்றுப் போனதாக ஆக்கக் காங்கிரஸ் இதில் ஒரு ஆயுதத்தைக் காண்கிறது. இந்த முறையில்தான் காங்கிரஸ் கூட்டுத் தொகுதி பற்றி வலியுறுத்துகிறது. ஏனெனில், கூட்டுத் தொகுதிகள் என்றால் அதிகாரம் இல்லாத அலுவலகத்தை தீண்டத்தகாதவர்களுக்கு அளிப்பதாகும். ஷெட்யூல் வகுப்பினரெல்லாம் விரும்புவது அதிகாரம் உள்ள அலுவலகம். இதை அவர்கள் தனித்தேர்தல் தொகுதியுடன் தான் அடைய முடியும்; எனவேதான் அவர்கள் அதை வலி யுறுத்தி வருகிறார்கள்.

8. ஷெட்யூல்டு வகுப்பினருக்கு சாதகமான தனித்தேர்தல் தொகுதி திட்டவட்டமாக வகுக்கப்பட்டதாகும். காங்கிரஸைத் தவிர மற்ற எல்லாக்கட்சிகளும் ஏற்றுக் கொள்கின்றன. 1946 மே மாதம் 3ம் தேதி வேவல்பிரபுவுக்கு நான் எழுதிய கடிதத்தில் தனித் தொகுதிகளுக்குச் சாதகமான வாதங்களை முன் வைத்துள்ளேன்; அதை அவர் தங்களிடம் காண்பித்திருப்பார் என்று நம்புகிறேன்; எனவே அவற்றை மீண்டும் இங்கே குறிப்பிடுவது அவசியமில்லை என கருதுகிறேன். கேள்வி என்னவெனில், ஷெட்யூல் வகுப்பினரின் கோரிக்கையைப் பற்றி தூதுக்குழு என்ன செய்யப் போகிறது என்பது. இந்துக்களின் அரசியல் நுகத்தடியிலிருந்து தீண்டத்தகாதவர்களை விடுவிக்கப் போகிறார்களா? இல்லையெனில், இந்து பெரும் பான்மையை பிரதிநிதித்துவப் படுத்தும் காங்கிரஸ் உடன் நண்பர் களாக ஆக, கூட்டுத் தொகுதி என்ற முறைக்கு சாதகமாக அவர்களை ஓநாய்களின் மத்தியில் போடப்போகிறார்களா? மன்னர்பிரான் அரசாங்கத்தை கேட்க ஷெட்யூல் வகுப்பினருக்கு உரிமை உண்டு. அதாவது, பிரிட்டிஷ்காரர்கள் ஆட்சியை துறக்கும் முன், சுயராஜ்யம் தீண்டத்தகாதவர்களின் குரல் வளையை பிடிக்காமல் இருப்பதை உறுதிசெய்ய வேண்டும்.

9. ஷெட்யூல்டு வகுப்பினர்பால், பிரிட்டிஷ்காரர்களுக்கு ஒரு தார்மீகப் பொறுப்பு உள்ளது என்று நான் கூறுவதை அனுமதி யுங்கள். எல்லா சிறுபான்மையினர்பாலும் அவர்களுக்குத் தார்மீகப் பொறுப்பு இருக்கலாம் ஆனால், தீண்டத்தகாதவர்கள் சம்பந்த மாக

அவர்களுக்குள்ள பொறுப்பை அவர்கள் மீறிப் போக முடியாது. சில பிரிட்டிஷ்காரர்களே இதை அறிவர் என்பது வருந்தத் தக்கது; இதை நிறைவேற்றத் தயாராக உள்ளவர்கள் மேலும் குறை வானவர்களே. இந்தியாவில் தங்கள் ஆட்சி நிலைபெற்று இருப் பதற்கே தீண்டத்தகாதவர்கள் ஆற்றிய உதவிக்கு பிரிட்டிஷ்காரர்கள் கடமைப்பட்டுள்ளனர். பல பிரிட்டிஷ்காரர்கள் நினைக்கிறார்கள், கிளைவ்களும், ஹேஸ்டிங்ஸ்களும் கோட்ஸுகளும் மற்றவர்களும் இந்தியாவை கைப்பற்றினர் என்று. அதைவிட மிகப் பெரிய தவறு இருக்க முடியாது. இந்தியாவை வென்றது இந்தியர்களைக் கொண்ட ராணுவம். அந்த ராணுவத்தை உருவாக்கியது எல்லோரும் தீண்டத் தகாதவர்களே. இந்தியாவை வெல்வதற்கு பிரிட்டிஷ்காரர்களுக்கு தீண்டத்தகாதவர்கள் உதவி செய்திருக்காவிடில், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி சாத்தியமாகியிருக்காது. பிளாஸிப் போரை எடுத்துக் கொள்ளுங்கள்; அது பிரிட்டிஷ் ஆட்சியைத் துவக்கி வைத்தது; கிர்கிப் போரை எடுத்துக்கொள்ளுங்கள் அது இந்தியாவை கைப்பற்று வதை முடித்து வைத்தது. விதியை நிர்ணயிக்கும் இந்த இரண்டு போர்களிலும் பிரிட்டிஷ்காரர்களுக்காகப் போராடியவர்கள் எல் லோரும் தீண்டத்தகாதவர்களே.

தங்களுக்காகப் போராடிய தீண்டத்தகாதவர்களுக்கு பிரிட்டிஷ் கார்கள் என்ன செய்தார்கள்? அது ஒரு வெட்கக்கேடான கேள்வி. அவர்கள் செய்த முதல்காரியம் இவர்களை ராணுவத்தில் சேர்ப்பதை நிறுத்தினர். இதைவிட அதிகக் கருணையற்ற, அதிக நன்றிகெட்ட, அதிக கொடூரமான செயலை வரலாற்றில் காணமுடியாது. ராணு வத்தின் கதவை தீண்டத்தகாதவர்களுக்கு மூடிவிட்டதில், தங்கள் ஆட்சியை ஏற்படுத்த உதவியர்கள் தீண்டத்தகாதவர்கள் என்பதையோ, 1857 (சிப்பாய்) கலகத்தின்போது உள்நாட்டு சக்திகளின் பலமான கூட்டுறவால் அதற்கு அபாயம் ஏற்பட்டபோது அதைப் பாதுகாத்தது என்பதையோ கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. அது தீண்டத் தகாதவர்கள் மீது எத்தகைய பாதிப்பை ஏற்படுத்தியது என்பதைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் ஒரே கையெழுத்தில் அவர் களின் வாழ்க்கை ஆதாரம் பறிக்கப்பட்டது; அவமானகரமான பழைய நிலைக்கு அவர்கள் தள்ளப்பட்டனர். அவர்களின் சமூக இயலாமை களை சமாளிக்க பிரிட்டிஷ்காரர்கள் எந்த உதவியையும் செய் தார்களா? இதற்கு பதிலும் எதிர்மறைதான். பள்ளிகள், கிணறுகள், பொது இடங்கள் அவர்களுக்கு மறுக்கப்பட்டன. பொது நிதியில் நிர்வகிக்கப்படும் எல்லா நிறுவனங்களிலும் பிரஜைகள் என்ற முறையில், அனுமதிக்கப்பட தீண்டப்படாதவர்கள் உரிமை

உடையவர்கள். பிரிட்டிஷார் இதை எதையும் செய்யவில்லை. மிகவும் மோசமானது என்னவெனில் தாங்கள் செயல்படாததை நியாயப்படுத்த, தீண்டாமை தாங்கள் ஏற்படுத்தியதல்ல என்று கூறினர்.

தீண்டாமை பிரிட்டிஷாரால் ஏற்படுத்தபட்டதாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் ஆட்சிசெய்யும் அரசு என்ற முறையில் தீண்டாமையை ஒழிப்பது நிச்சயமாக அவர்கள் பொறுப்பாகும். எந்த அரசாங்கமும், தனது செயல்பாடுகள் கடமைகள் என்ற உணர்வுடைய எந்த அரசாங்கமும் இதைத் தவிர்த்திருக்க முடியாது. பிரிட்டிஷ் அரசாங்கம் என்ன செய்தது? இந்து சமுதாயத்தில் எந்த விதமான சீர்திருத்தத்திலும் தன்னை ஈடுபடுத்திக் கொள்வதை மறுத்தது. சமூக சீர்திருத்தம் சம்பந்தப்பட்டவரை, எந்த உள்நாட்டு அரசாங்கத்தின் கீழ், சோகமான மறந்துவிட்ட வரலாறு முழுவதும் உழைத்துத் துன்பத்தை அனுபவித்து, வாழ்ந்து இறந்தார்களோ அதிலிருந்து எந்த ஜீவாதார விஷயத்திலும் பிரிட்டிஷ் அரசாங்கம் மாறுபட்டு செயல்பட்டதை தீண்டத்தகாதவர்கள் காணவில்லை. அரசியல் பார்வையில் மாற்றம் பெயரளவிற்கே. முன்போலவே இந்துக்களின் யதேச்சாதிகாரம் தொடர்ந்தது. பிரிட்டிஷ் ஆட்சித் தலைமையால் குறைக்கப்படுவதற்குப் பதில் அதற்கு ஊக்கம் அளிக்கப்பட்டது. சமூக கண்ணோட்டத்தில் பார்த்தால், ஏற்கனவே இருந்த ஏற்பாடுகளை ஏற்றுக் கொண்டு அவர்களுக்கு ஊக்கமளித் தனர். விளைவு என்ன? இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டு 200 வருடங்கள் கடந்துவிட்டபோதிலும், தீண்டத்தகாதவர்கள் தீண்டத் தகாதவர்களாகவே இருந்தனர். அவர்களுக்கு இழைக்கப்பட்ட தவறுகள் நீக்கப்படாமலேயே இருந்தன. ஒவ்வொரு கட்டத்திலும் அவர்கள் முன்னேற்றம் தடைபட்டது. உண்மையில் இந்தியாவில் பிரிட்டிஷார் ஏதாவது சாதித்தார்களெனில், அது பிராமணியத் தைப் பலப்படுத்தி உத்வேகத்தையும் அளித்தனர் என்பதுதான். பிரா மணியம்தான் தீண்டத்தகாதவர்களின் ஆழமாக வேரூன்றிய எதிரி; ஆண்டாண்டு காலமாக தீண்டத்தகாதவர்கள் அனுபவித்துவரும் துயரங்களுக்கு அதுவே மூலவேர். இது எப்படி இருந்தது எனில், ஒரு சீன தையல்காரரிடம் ஒரு பழைய கோட்டை மாதிரியாக அளித்தபோது, அதே மாதிரியான டூப்ளிகேட் கோட்டை தைத்துக் கொடுத்தது போல. விளைவு என்ன?

பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவை விட்டு வெளியேறுவதை அறிவிப்பதற்காக நீங்கள் இங்கே வந்தீர்கள். யாரிடம் அரசியல் ரீதியாக அதிகாரத்தையும் பலத்தையும் மாற்றிக் கொடுக்கப்

போகிறீர்கள் என்று தீண்டத்தகாதவர்கள் கேட்பதில் நியாயம் உள்ளதல்லவா? பிராமணியத்திற்கு வக்காலத்து வாங்குகிறவர் களுக்கா? அப்படியாயின் தீண்டத்தகாதவர்களை அடக்குபவர் களுக்கும் கொடுங்கோன்மை புரிகிறவர்களுக்குமா? இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை இவ்வாறு முடிவுக்கு கொண்டுவருவது மற்ற கட்சிகளின் உறுப்பினர்களின் மனச்சாட்சியில் எந்த உறுத்தலும் ஏற்படுத்தாமல் இருக்கலாம். ஆனால் பிரிட்டிஷ் (லேபர்) தொழி லாளர் கட்சியைப் பற்றி என்ன? வசதியில்லாதவர்களுக்கும் அடிமட்டத்தில் உள்ளவர்களுக்கும் நிற்பதாக தொழிலாளர் கட்சி உரிமை கோருகிறது. அதில் ஓரளவாவது உண்மையிருந்தால், இந்தியாவில் உள்ள 6 கோடி தீண்டத்தகாதவர்களுக்கு ஆதரவாக நிற்கும் என்பதிலும், அவர்கள் நிலையை பாதுகாக்க தேவைப்படும் அனைத்தையும் செய்யும் என்பதிலும் எனக்கு சந்தேகமில்லை; தங்கள் மதம், சித்தாந்தத்தின் அடிப்படையில் ஆட்சி செய்ய தகுதியில்லாதவர்களும், தீண்டத்தகாதவர்களுக்கு உண்மையான எதிரிகளுமானவர்களிடம் அதிகாரத்தை அளிக்காது என்றும் நம்பு கிறேன். ஷெட்யூல்டு வகுப்பினரின் பாதுகாவலர்கள் (Trustees) என்று எப்போதும் உரிமை கொண்டாடிய பிரிட்டிஷ்காரர்கள் அவர் களை அலட்சியப்படுத்தியதற்கான குறைந்தபட்ச பிராயச் சித்தமாகும் அது.

12. இவ்வளவு விரிவாக என் மனதில் உள்ள சுமையை இறக்கி வைக்க என்னைத் தூண்டியது எதுவெனில், தீண்டத்தகாத வர்கள் அரசியல் சட்ட ரீதியான பாதுகாப்பைப் பற்றி எழுப்பிய கேள்வி மீது தூதுக்குழு மேற்கொண்ட தெளிவாகத் தெரியும் மௌனம் ஏற்படுத்திய கவலைதான். தீண்டத்தகாதவர்களுக்கும், சிறுபான்மையினருக்கும் மன்னர் பிரான் அரசாங்கம் அளித்த வாக் குறுதிகள்பால் தூதுக்குழு எடுத்த கண்ணோட்டம் அந்தக் கவலையை மேலும் அதிகப்படுத்தியுள்ளது. இந்த வாக்குறுதிகள்பால் தூதுக் குழு மேற்கொண்ட கண்ணோட்டம் பால்மெர்சன் பிரபு சொல் லியதை நினைவுக்குக் கொண்டு வருகிறது. அவர் கூறினார் ''எங்களுக்கு நிரந்தர எதிரிகள்'' யாருமில்லை, எங்களுக்கு நிரந்தர நண்பர்கள் யாரும் இல்லை, எங்களுக்கு இருப்பதெல்லாம் நிரந்தர நலன் மட்டுமே'! தூதுக்குழு இந்த பால்மெர்ஸ்டனின் கோட் பாட்டை வழிகாட்டியாகக் கொண்டுள்ளது என்ற எண்ணம் ஏற் படுத்தப்பட்டால், தீண்டத்தகாதவர்களுக்கு எத்தகைய பயங்கரமான எதிர்காலத்தை அவர்களுக்கு ஏற்படுத்தும் என்பதை தாங்கள் நன்கு கற்பனை செய்யலாம். அடித்தட்டிலுள்ள கிரேட் பிரிட்டனின்

வர்க்கத்தில் தோன்றியவர் தாங்கள்; இந்தியாவின் அடித்தட்டு மக்களான 6 கோடி மக்களுக்கு ஏற்படச் சாத்தியமுள்ள துரோகத்தைத் தடுத்து நிறுத்த தங்களாலான அனைத்தையும் செய்வீர்களென்று முழு நம்பிக்கை எனக்குள்ளது. எனவேதான் அவர்களின் பிரச்னையை தங்கள் முன்வைக்க நான் எண்ணினேன். என்னைக் கூற நீங்கள் அனுமதித்தால், தூதுக்குழுவில் உங்களைத் தவிர தங்களுக்கு சிறந்த நண்பர் யாரும் இல்லை என்ற எண்ணம் தீண்டத்தகாதவர்களிடம் உள்ளது.

தங்கள் உண்மையுள்ள,

டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்

**மேன்மை தங்கிய திரு. ஏ.வி. அலெக்சாண்டர்,**
**ஸி.எச்.எம்.பி. அமைச்சரவைத் தூதுக்குழு உறுப்பினர்,**
**வைஸ்ராய் மாளிகை**
**புதுடெல்லி.**



# 8

# அமைச்சரவை தூதுக்குழு வெளியிட்ட அறிக்கை பற்றி பெத்திக் லாரன்ஸ் பிரபுவுக்கு எழுதிய கடிதம்

*22, பிருதிவிராஜ் சாலை,*
*புதுடெல்லி,*
*22 மே 1946.*

*அன்புள்ள பெத்திக் லாரன்ஸ் பிரபு அவர்கட்கு,*

*அமைச்சரவைத் தூதுக்குழு வெளியிட்ட அறிக்கையைப் படித்ததில், சில விஷயங்களின் தெளிவற்ற தன்மையை நான் காண்கிறேன். அவை கீழே வகுத்து அளிக்கப்பட்டுள்ளன.*

*(1) அறிக்கையின் பாரா 20ல், ''சிறுபான்மையினர்'' என்ற பதம் ஷெட்யூல்டு வகுப்பினரை உட்படுத்துகிறதா?*

*(2) குடிமக்கள், சிறுபான்மையினர், மலைவாழ் மக்கள் மற்றும் விடப்பட்ட பிரிவினரின் உரிமைகள் பற்றிய ஆலோசனைக்குழு எல்லா நலன்களையும் முற்றிலுமாகப் பிரதிநிதித்துவம் கொண்டதாக இருக்கும் என்று பாரா 30 வகுக்கிறது.*

*(3) பாதிக்கப்பட்ட நலன்களுக்கு முழுப் பிரதிநிதித்துவம் அளிக்க அத்தகைய நலன்களைப் பிரதிபலிக்க ஆலோசனைக் குழுவிற்கு நிர்ணய சபைக்கு வெளியே உள்ள நபர்களை நியமிக்கும் உரிமையை மன்னர் பிரான் அரசாங்கம் ஒதுக்கிவைக்க உத்தேசித்துள்ளதா? வெளியிலிருந்து நியமனம் செய்ய வேண்டியது அத்தியாவசியம் என்று தோன்றுகிறது; ஏனெனில் மற்றபடி மலை சாதி மக்களுக்கும் விடப்பட்ட வட்டாரங்களுக்கும் அரசியல் நிர்ணய சபைக்குள்ளே பிரதிநிதித்துவம் பெற வேறு வழிமுறை எதுவும் இல்லை. நியமனம் அவசியம் என்று ஒப்புக் கொண்டால், ஆலோசனைக்குழுவில் ஷெட்யூல்டு வகுப்பினர் முழு பிரதிநிதித்துவம் அடைய அரசியல் நிர்ணய சபைக்கு வெளியிலிருந்து நியமனம் செய்யும் கோட்பாடு ஷெட்யூல்டு வகுப்பினருக்கு விரிவுபடுத்தப் படுமா?*

(4) அறிக்கையின் 22வது பாராவில், யூனியன் அரசியல் நிர்ணய சபைக்கும் பிரிட்டனின் அதிகார மாற்றத்தின் விளைவாக எழும் பிரச்னைகள் பற்றி அந்த ஒப்பந்தத்தில் ஒரு ஷரத்து இருக்கிறது. கிரிப்ஸ் ஆலோசனைகளில் நிர்ணயித்தபடி சிறுபான்மையினரின் பாதுகாப்புக்கான ஒரு ஷரத்து உத்தேசிக்கப்பட்டு ஒப்பந்தத்தில் உட்படுத்தப்படுமா?

அந்த ஒப்பந்தத்தில் அத்தகைய ஷரத்து இல்லையெனில், ஆலோசனைக் குழுவின் சிபாரிசுகள் அரசியல் நிர்ணய சபையைக் கட்டுப்படுத்த மன்னர் பிரான் அரசாங்கம் என்ன உத்தேசித்துள்ளது?

(5) அறிக்கையில் ஐரோப்பியர்கள் இ (E) வகையின் கீழ் கொண்டுவரப்பட்டுள்ளனர். இதிலிருந்து, அரசியல் நிர்ணய சபைப் பிரதிநிதிகளை தேர்ந்தெடுப்பதில் வாக்கு அளிக்கும் உரிமை ஐரோப்பியர்களுக்கு உண்டு என்று ஊகிக்கலாம். அரசியல் நிர்ணய சபைக்கான தேர்தலில் ஐரோப்பியர்களை வேட்பாளர்களாக நிறுத்த அவர்கள் உரிமை பெற்றிருப்பரா? இது அறிக்கையில் தெளிவுபடுத்தப்படவில்லை.

தெளிவு தேவைப்படும் விஷயங்கள் இவை. இவற்றிற்கு தங்கள் பதில்களை அனுப்ப இசைந்தால் நான் நன்றியுடையவனாக இருப்பேன். இன்று இரவு டெல்லியிலிருந்து கிளம்புகிறேன். மேலே எழுப்பப்பட்ட கேள்விகளுக்கு தாங்கள் அளிக்க விரும்பும் பதில் எனது பம்பாய் விலாசத்திற்கு தயவு செய்து அனுப்புங்கள்.

தங்கள் உண்மையுள்ள,

(ஒப்) டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்

விலாசம்:
பி.பி. அன்ட் C.I ரெயில்வே *
சலூன் 27,
சென்ட்ரல் ரயில் நிலையம்,
பம்பாய்.

---

* பம்பாய்-பரோடா மற்றும் மத்திய இந்திய ரெயில்வே

# 9

# டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு பெத்திக் லாரன்ஸ் பிரபு அளித்த விளக்கம்

'' மே 28, 1946

தங்களின் மே 22ம் தேதிய கடிதத்திற்கு நன்றி; சமீபத்திய அறிக்கையில் சில விஷயங்களுக்கு அதில் விளக்கம் கேட்டிருக் கிறீர்கள்.

தூதுக்குழுவின் நோக்கம், ஒரு சுதந்திர இந்தியாவுக்கு இந்தியர்களே தங்கள் சொந்த அரசியல் சாசனத்தை வரையக்கூடிய ஒரு அமைப்பை (Machinery) ஏற்படுத்துவதே என்பதைத் தாங்கள் ஏற்றுக்கொள்வீர்கள். எமது அறிக்கையின் நோக்கம் இந்த நோக்கத் திற்காக கட்சிகள் ஒன்று சேர ஒரு அடிப்படையை ஏற்படுத்துவதே; சம்பந்தப்பட்ட எல்லோரும் இதை ஏற்றுக்கொண்டு செயல்படுவர் என நாங்கள் நம்புகிறோம். இந்த நோக்கத்திற்கு அவசியப்படும் என்று எங்களுக்குத் தோன்றும் வகையில் எங்கள் அறிக்கையை மட்டுப்படுத்திக் கொண்டோம். எழக்கூடிய மற்ற விஷயங்கள் அரசியல் நிர்ணய சபையின் முடிவுக்கு உட்படும்.

அறிக்கையின் 20 வது பாராவில் சிறுபான்மையினர் என்ற பதம் ஷெட்யூல் வகுப்பினரையும் உட்படுத்தும் என்பதே நிச்சய மாக எங்கள் நோக்கம். மற்றப்படி, ஒரு ஆலோசனைக் குழுவை அரசியல் நிர்ணய சபையே அமைக்கும்; அது முற்றிலும் பிரதிநிதித் துவம் உள்ளதாக இருக்க வேண்டும் என்பது அதன் விருப்பமாக இருக்கும் என நினைக்கிறோம்.

அரசியல் நிர்ணய சபையில் தலையிடுவது எங்கள்ள நோக்க மல்ல. என்றாலும் ஆலோசனைக் குழு உறுப்பினர்கள் அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்களை மட்டும் கொண்டதாகக் கட்டுப் படுத்தப்படாது.

*தங்களின் பிற பிரச்சினைகளை சனிக்கிழமை மாலை தூதுக் குழு வெளியிட்ட அறிக்கை பெரும்பாலும் கையாளுகிறது என நான் நினைக்கிறேன்.*

*தாங்கள் அண்மையில் அனுப்பியகடிதம் தமக்குக் கிடைத்த தாகவும் அந்தக் கடிதத்திற்கு நன்றி தெரிவிக்கும்படி என்னை திரு.அலெக்ஸ் சாண்டர் கேட்டுக்கொண்டார். அவர் டெல்லிக்கு வெளியே சில தினங்கள் இலங்கைக்கு விஜயம் செய்துள்ளார். திரும்பி வந்ததும் தங்களுக்கும் பதிலளிப்பார்.* [1]



1. அதிகார மாற்றம், தொகுப்பு VII எண் 399 பக்கம் 729.

# 10

# அம்பேத்கர், சர்ச்சிலை தனது ஆதரவாளராகக் காண்கிறார்

''லண்டன், மே 30 (ராய்ட்டர்) - 6 கோடி தீண்டத்தகாதவர்களுக்கு ''அவர்களின் சகோதர மதவாதிகளால் அவர்களுக்கு ஏற்படுத்தப்பட்டுள்ள துயரமும் மனச்சோர்வும் இந்திய உபகண்டத்தில் உள்ள ஒரு மிகமோசமான அம்சம்'' அவர்களின் எதிர்காலத்தை பாதுகாக்க கன்சர்வேடிவ் கட்சி சாத்தியமான அனைத்தையும் செய்யும் என்ற வாக்குறுதியை திரு. வின்ஸ்டன் சர்ச்சில், வைஸ்ராய் நிர்வாகக் கவுன்சில் உறுப்பினர் டாக்டர் அம்பேத்கருக்கு அனுப்பியுள்ள கடல்வழித் தந்தியில் தெரிவித்துள்ளார்.

திரு.சர்ச்சில் மேலும் கூறுகிறார் : மனிதர்கள் எல்லோரும் சுதந்திரமாகவும் சமத்துவமாகவும் பிறக்கிறார்கள்; எனவே வாழ்விற்கும் சுதந்திரத்திற்கும் மகிழ்ச்சிகரமாக இருக்கும் வழிதேடும் உரிமை அவர்களுக்கு உண்டு. அமெரிக்கச் சுதந்திரப் பிரகடனத்தில் வகுக்கப்பட்ட இந்தப் பரந்த கோட்பாடுகளின் மீது எங்கள் நிலையை எடுப்போம்.

டாக்டர் அம்பேத்கர் திரு.சர்ச்சிலுக்கு அனுப்பிய கடல்வழித் தந்தியில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார். ''அமைச்சரவைக் குழுவின் ஆலோசனைகள் 6 கோடி தீண்டத்தகாதவர்களின் லட்சியத்திற்கு இழைக்கப்பட்ட வெட்கக்கேடான துரோகமாகும். இந்தியா முழுவதிலுமுள்ள தீண்டத்தகாதவர்கள், பாராளுமன்றத்தில் தாங்கள் ஆற்றிய சொற்பொழிவுக்கு நன்றி தெரிவிக்கின்றனர். தீண்டத்தகாதவர்களின் எதிர்காலம் இருள் சூழ்ந்துள்ளது. அவர்களின் நலன்கள் பாதுகாக்கப்படுவதில் உங்களை நாங்கள் நம்பியிருக்கிறோம்''[1]



1. பாம்பே கிரானிக்கில், தேதி 31 மே 1946

# 11

# பம்பாயில் இந்து-ஷெட்யூல்டு வகுப்பினரிடையே மோதல்கள்

*1946 ஜுன் 1*

*கடந்த நான்கு நாட்களாக வோர்லி வட்டாரத்தில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கும் சாதி இந்துக்களுக்குமிடையே அடிக்கடி மோதல்கள் ஏற்பட்டன. அவற்றின் விளைவாக இதுவரை ஐந்து பேர்கள் கொல்லப்பட்டனர். சுமார் 70 பேர் காயமடைந்தனர்; இன்று காலை அங்கு அமைதி நிலவுகிறது. அந்த வட்டாரம் முழுவதும் பெரும் எண்ணிக்கையில் காவல் துறையினர் நிறுத்தப்பட்டுள்ளனர். ஆயுதம் தாங்கிய காவல் துறையின் போலீசார் பாதிக்கப்பட்ட வட்டாரத்தில் தொடர்ந்து ரோந்து செய்து வருகின்றனர். இன்று மதியம் வரை ஆங்காங்கே மூன்று தாக்குதல்கள்தான் நிகழ்ந்துள்ளன.*

*வோர்லி வட்டாரத்தில் சகஜ நிலைமையை எவ்வளவு திறமையாகக் கொண்டு வருவது என்பதைப் பற்றி விவாதிக்க பம்பாய் மாகாணப் பிரதம மந்திரி திரு. பி.ஜி. கெர், ஷெட்யூல்டு வகுப்பினரின் தலைவர் டாக்டர் அம்பேத்கரை இன்று மாலை சந்திக்கவிருக்கிறார்.*

*சென்ற நான்கு நாளையக் கலவரங்கள் ஆலைப் பணிகளை பாதித்துள்ளன; ஏனெனில் கற்கள் வீசப்படும் என்ற பயத்தில் ஆலைத் தொழிலாளர்கள் வேலைக்குப் போகவில்லை. நேற்று இரவு நான்கு ஆலைகளில் இரவு நேர (ஷிப்ட்) வேலை நிறுத்தி வைக்கப்பட்டது. இன்று காலை ஒரு ஆலையைத் தவிர மற்ற எல்லா ஆலைகளும் குறைந்த வேலையாட்களைக் கொண்டே இயங்கின.*

### மாகாணத்தில் அவசர நிலைமைப் பிரகடனம்

*சாதி இந்துத் தொழிலாளர்களுக்கும் ஷெட்யூல் வகுப்புத் தொழிலாளர்களுக்கும் இடையே ஏற்பட்ட மோதுதல்களால் பாதிக்கப்பட்ட வோர்லி மற்றும் டெலிஸ்லா சாலை வட்டாரங்களில் பம்பாய் அரசாங்கம் அவசர நிலைமையைப் பிரகடனப்*

படுத்தியுள்ளது. நிலைமையைக் கட்டுப்படுத்த - குறிப்பாக மோசமானவர்களைக் கைது செய்து, நகர எல்லைக்குள் வராமல் அவர்களைத் தடுக்க (Extern) நிலைமையைச் சமாளிக்க இது (பிரகடனம்) காவல் துறைக்கு பரவலான அதிகாரத்தை வழங்கு கிறது.

குத்துக் காயத்துடன் நேற்று மருத்துவ மனையில் சேர்க்கப் பட்ட மேலும் ஒருவர் இன்று காலமானார். மொத்தம் மரண மடைந்தவர்களின் எண்ணிக்கை 6 ஆகிறது.

## டாக்டர் அம்பேத்கர் துயரம்

பம்பாய் அரசாங்கத்தின் உள்நாட்டு இலாகா வோர்லி தொழிலாளர் காலனிகளிலும் டெலிசி சாலை வட்டாரத்தில் சட்ட அமைதியின்மையை உறுதியாக அடக்குவது என்று முடிவு செய்துள்ளது.

இது சம்பந்தமாக அரசாங்கம் முடிவெடுத்துள்ள அதே சமயம், மாகாணக் காங்கிரஸ் கமிட்டி, ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் மற்றும் ஸ்தல இந்து அமைப்புகள் முதலான பாதிக்கப் பட்ட வட்டாரத்தில் அமைதியை மீண்டும் நிலைநிறுத்த கையாள வேண்டிய முறைகள் பற்றி விவாதித்து வருகின்றன.

இந்திய அரசாங்கத்தில் தொழிலாளர் நல உறுப்பினர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் இன்று காலை பம்பமாய் அரசாங்க உள்நாட்டு இலாகா அமைச்சர் திரு.மொரார்ஜிதேசாயுடனுடன், பின்பு பிரதம மந்திரி பி.ஜி.கெர் உடனும் பேட்டி கண்டபின் மேற்சொன்ன நிகழ்ச்சி உருவாயிற்று பேட்டியின்போது வோர்லி வட்டாரத்தின் நிகழ்வு பற்றி துக்கம் தெரிவித்து, சமாதானத்தை மீண்டும் ஏற்படுத்த சில நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று அவர் ஆலோசனைகளை அளித்தார்.

தன்னைப் பின்பற்றுகிறவர்களை அவர்கள் பக்கத்தில் சமாதானமாக இருக்கும்படியும் மிகவும் அதிகம் கட்டுப்படுத்திக் கொள்ளும்படியும் ஆலோசனை கூறப்போவதாகவும் கூறினார் டாக்டர் அம்பேத்கர்.

சாதி இந்துக்கள், காங்கிரஸ் ஊழியர்கள் மற்றும் ஷெட்யூல் வகுப்பினர்கள் அமைதியாக இருக்கும்படியும், சகஜ நிலைமைகள் திரும்பவும்வர ஆவன செய்ய வேண்டுமென்றும் அவர்களைக் கேட்டுக் கொண்டு ஒரு கூட்டறிக்கையை வெளியிடுவதென டாக்டர் அம்பேத்கர், திரு.நாகின்தர் டி.மாஸ்டர் திரு எஸ்.கே. பட்டீல் ஆகியவர்கள் முடிவு செய்ததாக அறிகிறோம்.

வோர்லி வட்டாரத்தில் சமாதானக் குழுக்கள் அமைக்கப் படலாமென்றும் சமாதானத்திற்குப் பங்கம் வந்தால் சமாதானத்தை நிலைநிறுத்த அவை பொறுப்பேற்க வேண்டும் என்றும், விஷயங்கள் கையை மீறிப் போனால் அந்த குழுக்களின் உறுப்பினர்கள் பொறுப்பேற்க வேண்டும் என்றும் டாக்டர் அம்பேத்கரிடம் உள்நாட்டுத் துறை அமைச்சர் ஆலோசனைகள் கூறியதாக தெரிகிறது.

நிலைமைமைச் சமாளிக்க, உள்துறை அமைச்சரின் உத்தரவுக்கு இணங்க காவல்துறை அதிகாரிகள் சில ஆணைகளைப் பிறப்பித்துள்ளனர். உத்தேசிக்கப்பட்ட உத்தரவுகள், மோசமாக நடந்து கொள்பவர்களை கைது செய்யும் அதிகாரத்தை வழங்குகின்றன; நிலைமை சீர்கேடடையும் போக்கு தென்பட்டால், அவசர நிலை அதிகாரங்கள் உபயோகிக்கப்படும்.

இன்றுவரை, நான்கு நாள் கிளர்ச்சியில், 6 பேர் கொல்லப் பட்டனர், 70 பேர் காயமுற்றனர்; ஆலை வட்டாரத்தின் ஒரு பெரும்பகுதி ஒரு தொடர்ந்த பதட்ட நிலையில் வைக்கப்பட்டுள்ளது.

## திரு. ராஜ்போஜின் அறிக்கை

வோர்லி தொழிலாளர் குடியிருப்புகளை (Chawls)ப் பார்வையிட்டபின், அகில இந்திய ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளனப் பொதுச் செயலாளர் திரு.பி.என்.ராஜ்போஜ் தமது அறிக்கையில் கூறுகிறார்: கலவர வட்டாரத்தில் தன்னை பின்பற்றுபவர்களில் பலரின் நிலைமை மிக மோசமாக உள்ளது. தாக்கப்படலாம் என்ற பயத்தில் வேலைக்குப் போகும் துணிவு அவர்களிடம் இல்லை. அவர்களில் பலர் வாரத்திற்கான ரேஷன்களைக்கூட பெற்றுக்கொள்ளவில்லை. அவர்களுக்குப் போலீஸ் பாதுகாப்பு காசில்லாமல் (freely) கிடைப்பதில்லை; பல அப்பாவிகள் கைது செய்யப்பட்டு சிறையில் வைக்கப்பட்டுள்ளனர்.

அண்மைக் கலவரத்தில் அவர் கட்சியைச் சேர்ந்த சுமார் 130 பேர் காயமடைந்தனர்; இருவர் இறந்தனர் என திரு. ராஜ்போஜ் குறிப்பிடுகிறார்.

## இந்துக்களுக்கு அதிகப் பொறுப்பு: பொதுமக்களுக்கு பம்பாய் தலைவர்கள் வேண்டுகோள்

வோர்லி மற்றும் தொழிலாளர் வட்டாரங்களில் ஏற்பட்ட கலவரங்கள் பற்றி டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், திரு.நகிந்தாஸ் டி. மாஸ்டர் மற்றும் திரு.எஸ்.கே.பட்டீல் ஆகியோர் விடுத்துள்ள கூட்டறிக்கையில் பின்வருமாறு கூறுகின்றனர்.

''பெரும்பான்மை சமூகம் என்பதால், மற்றவர்களைவிட அதிகப் பொறுப்பு இந்துக்களின் தோள்களில் விழுகிறது. ஆத்திர மூட்டல் ஏற்பட்டாலும் பெரும்பான்மை சமூகம் தங்களைக் கட்டுப் படுத்திக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளது; பெரும்பான்மை சமூகம் சிறுபான்மையினரோடு அரசியல் பிரச்சினைகளில் உடன்பாடு கொள்ளாவிடினும், வாழ்க்கை, சுதந்திரம், சொத்து ஆகிய விஷயங் களில் ஷெட்யூல்டு வகுப்பினர் போன்ற சிறுபான்மை சமூகம் எந்தப் பயமும் கொள்ளத் தேவையில்லை என்று (பெரும்பான்மை) நிரூபித்துக் காண்பிக்க வேண்டும்''.

அறிக்கை மேலும் கூறுகிறது, வோர்லியில் துரதிர்ஷ்டவச மாக நிகழ்ந்த சம்பவங்களால் நாங்கள் ஆழமாக வருந்துகிறோம்.

பம்பாய் நகரின் நைகாம், வோர்லி மற்றும் டெலிசி ரோடு வட்டாரங்களில் அண்மைக் காலத்தில் ஷெட்யூல் வகுப்பினரைச் சேர்ந்தவர்களுக்கும் இந்துக்களுக்குமிடையே ஏற்பட்ட துரதிருஷ்ட மான நிகழ்வுகளால் நாங்கள் அதிகமாக வேதனை அடைந்துள் ளோம். இரு பிரிவினருக்கு இடையே அடிக்கடி ஏற்பட்ட மோதல் கள் விளைவாக மூவர் மடிந்தனர். பலர் காயமடைந்தனர். இந்த இரண்டு பிரிவினரும் ஒருவரை ஒருவர் தாக்கிக்கொண்டு அதன் விளைவாக இந்த வட்டாரங்களில் சமாதானத்திற்கு பங்கம் ஏற் பட்டதற்கு எங்கள் கருத்தில் காரணங்கள் எதுவுமில்லை. ஏதாவது இந்த அல்லது அந்த விஷயத்தில் நியாயமான அல்லது பலமான கருத்து வேறுபாடுகள் இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும் அவ்வப்போது ஏற்படும் இத்தகைய மோதல்கள் எதையும் தீர்த்து வைக்க முடியாது. தாவாக்களை தீர்த்துக் கொள்வதற்கு, நியாயத்தை

அடைவதற்கு அதிகம் பயனளிக்கும் முறைகள் உள்ளன. இத்தகைய வன்முறைச் செயல்களும் கோபதாபங்களும் நகரத்தின் நற்பெயருக்கு களங்கம் விளைவிக்கிறது; காயத்தை ஏற்படுத்துவதோடு அப்பாவிகளின் உயிர் சேதமும் ஏற்படுகிறது. நிகழ்வு சம்பவங்களுக்கு பொறுப்பை பகிர்ந்தளிக்க எங்களுக்கு விருப்பமில்லாவிடினும், ஒரு விஷயத்தை வலியுறுத்திக் கூறவிரும்புகிறோம்; அதாவது, பெரும்பான்மை சமூகம் என்பதால், மற்றவர்களைவிட அதிக பொறுப்பு இந்துக்களின் தோள்களில் விழுகிறது.

இத்தகைய புத்தியில்லாத வன்முறை வெளிப்பாடுகளை நாங்கள் வன்மையாகக் கண்டிக்கிறோம். இந்த பயித்தியக்கார நடத்தைக்கு முடிவு கட்டும்படி சம்பந்தப்பட்ட எல்லோருக்கும் அவர்களின் நல்லெண்ணத்திற்கு வேண்டுகோள் விடுக்கிறோம். தங்களுக்கிடையே பொறுப்பான குடிமக்களாக நடந்து கொள்வார்கள் என்றும் தங்களின் சகஜமான சமாதானபூர்வமான பணிகளை மீண்டும் துவங்குவார்கள் என்றும் நாங்கள் நம்புகிறோம் - A.P. 1''



1. ஜெய்பீம், 1946 ஜூன் 11

# 12

# நேரடி நடவடிக்கை பற்றி சம்மேளனத்தின் நிர்வாகக் குழு முடிவு செய்கிறது

## மறுக்க முடியாத நிரூபணங்களை அமைச்சரவைக் குழு பொருட்படுத்தவில்லை.

'' இரண்டாயிரம் சொற்கள் கொண்ட தனது தீர்மானத்தில், அகில இந்திய ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளன காரியக் கமிட்டி (நிர்வாகக் குழு) ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அமைச்சரவைக் குழு இழைத்த தீங்கை (அநீதி) சரிசெய்து அவர்களின் லட்சியத்தை எடுத்துக் கொள்ளுமாறு மன்னர்பிரான் அரசாங்கத்தையும் இங்கிலாந்தின் தொழிற் கட்சியையும் அறைகூவி அழைக்கிறது. ''இதைச் செய்யத் தவறினால், நேரடி நடவடிக்கையில் இறங்குவதைத் தவிர ஷெட்யூல்டு வகுப்பினருக்கு வேறு எந்த மாற்று வழியும் இல்லை'' என்று அத்தீர்மானம் கூறுகிறது. தீர்மானம் மேலும் கூறுகிறது; ஷெட்யூல்டு வகுப்பினரை அவர்களை எதிர்நோக்கும் படு நாசத்திலிருந்து காப்பாற்ற நேரடி நடவடிக்கை தேவைப்பட்டால் அதில் இறங்கும்படி அவர்களைக் கேட்டுக் கொள்ள நிர்வாகக் குழு தயங்காது''

அகில இந்திய ஷெட்யூல் ஜாதிகள் சம்மேளன நிர்வாகக் குழு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நல உறுப்பினர், இந்திய அரசாங்கம்) இல்லம் ''ராஜ்கிரஹா'' வில் ராவ் பகதூர் என். சிவராஜ் தலைமையில் 1946 ஜூன் 4ம் தேதி நடந்தது.

(1946) ஜூன் 4ம் தேதி காலை தலைவர் ப்ம்பாய் சென்ட்ரல் ரயில் நிலையத்தில் சலூனில் டாக்டர் பாபாசாகிப் அம்பேத்கரைச் சந்தித்தார். நாட்டின் பல பாகங்களிலிருந்து சம்மேளன ஊழியர்கள் தலைவர்களைச் சந்தித்து நாடு மற்றும் சமூகத்தின் சம்பந்தமான பல்வேறு பிரச்னைகளைப் பற்றி விவாதித்தார்கள் ஷெட்யூல்டு வகுப்பினர், சாதி இந்துக்களின் கொடுமைக்கு ஆளாகி அனுபவித்த சொல்லப்படாத துன்பங்களையும் கற்பனை செய்ய முடியாத கொடுமைகளையும் அவர்கள் தலைவர்களிடம் எடுத்துரைத்தனர்.

பிற்பகல் 2 மணிக்கு நிர்வாகக்குழு விவாதித்தது. குழு உறுப்பினர் 20 பேரில் பதினொறு உறுப்பினர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டனர். இதில் ஐவர் பம்பாயிலிருந்து, நால்வர் மத்திய மாகாணங்களிலிருந்து, சென்னை (மதராஸிலிருந்தும்) ஐக்கிய மாகாணத்திலிருந்தும் தலா ஒருவரும், விசேஷ அழைப்பின் பேரில், டாக்டர் அம்பேத்கரும் கலந்துகொண்டனர். அமைச்சரவைத் தூதுக் குழுவின் ஆலோசனைகள்மீது ஷெட்யூல் வகுப்பினரின் பொதுவான பிரதிபலிப்புகள் பற்றி சம்மேளனத்தின் பொதுச் செயலாளர் திரு.பி.என்.ராஜபோஜின் அறிக்கையைக் கூட்டம் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டது. உத்தேசிக்கப்பட்டுள்ள அரசியல் நிர்ணய சபையில் சமூகத்தின் எந்த பிரதிநிதித்துவமும் அளிக்கப்படாதது பற்றிய அதிருப்தியை அறிக்கை வெளிப்படுத்தியது என்று தெரிகிறது.

இடைக்கால அரசாங்கம் பற்றி பிரிட்டிஷ் அமைச்சரவையின் ஆலோசனைகள் பற்றி நிர்வாகக்குழு 10 முக்கியத் தீர்மானங்களை நிறைவேற்றியது. தனித் தேர்தல் தொகுதிகள் மூலம் சட்டசபைகளில் பிரதிநிதித்துவம் பெற ஷெட்யூல் வகுப்பினர் உரிமை பெற வேண்டும் என்று ஷெட்யூல் வகுப்பினருக்கு தனியான குடியிருப்புகள் அமைத்துக்கொடுக்க வேண்டியது அரசாங்கத்தின் செய்து தீரவேண்டிய கடமையாகும் என்ற ஷரத்து அரசியல் சாசனத்தில் அவசியம் இடம்பெற வேண்டும் என்று நிர்வாகக்குழு கோரியது.

''பீதியடைய வேண்டியதற்கான காரணம் எதுவுமில்லை என்றும் துணிவும் ஒருமைப்பாடும் இருந்தால், நீதியையும் மனித நேயத்தையும் அடிப்படையாகக் கொண்ட அவர்களது லட்சியம், அவர்களின் எதிரிகளின் சூழ்ச்சிகளையும் மீறி, வெற்றிபெறும்'' என்று குழு ஷெட்யூல் வகுப்பினருக்கு உறுதியளித்தது.

நேரடி நடவடிக்கை எவ்வகையில் அமைய வேண்டும் என்பதையும், மிகவும் பயனுள்ள நடவடிக்கை எது என்பதை நிர்ணயிக்கவும் அதை செயல்படுத்தவும் காலத்தையும் முடிவு செய்ய 'நடவடிக்கை குழு' ஒன்றை நிறுவ தலைவருக்கு நிர்வாகக்குழு அதிகாரம் அளிக்கிறது. சம்மேளனத்தின் தீர்மான நகல்கள் இந்திய விவகார அமைச்சர், டெல்லியிலுள்ள வைஸ்ராய் மற்றும் லண்டனிலுள்ள பிரதம மந்திரி அட்லி மற்றும் திரு.சர்ச்சிலுக்கும் அனுப்பப்படுகின்றன.

''பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்ற தங்கள் கோரிக்கை நிராகரிக்கப்பட்டால், தங்கள் கோரிக்கை ஏற்கப்படுவதற்கு மிகவும் பயனளிக்கும் நேரடி நடவடிக்கை முறைகளை முடிவு செய்ய ஒரு நடவடிக்கைக் குழுவை அமைக்க தலைவர் ராவ் பகதூர் என்.சிவராஜ் அவர்களுக்கு குழு அதிகாரமளிக்கிறது''

ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளன நிர்வாகக் குழுவின் சார்பில் விளக்கிப்பேசிய அதன் பிரதிநிதி (பேச்சாளர்) , எதிர்கால அரசியல் நிர்ணய ரீதியான உடன்பாடு பற்றி குழு பிரதான கவனம் செலுத்தியது என்றும் ஏனெனில் இடைக்கால அரசாங்கத்தை பற்றியதை விட, சட்டரீதியான இறுதியான பாதுகாப்பு பற்றித்தான் அவர்கள் அதிக கவலை கொண்டதாக விளக்கினார். அவர் மேலும் குறிப்பிட்டார். ''கண்ணியமான நிபந்தனைகளின்கீழ் இடைக்கால அரசாங்கம் அமைப்பது பற்றி எங்களது ஒத்துழைப்பை எவர் கோரினாலும் நாங்கள் ஒத்துழைப்பை நல்க தயாராக உள்ளோம்''.

தங்களது இரண்டாவது அறிக்கையில் இந்திய-பிரிட்டிஷ் உடன்படிக்கை முடிவு செய்யப்படுவது சிறுபான்மையினரின் உரிமைகள் போதுமான அளவு பாதுகாப்பு அளிக்கப்படுவதை பொறுத்தது என்று அமைச்சரவைக்குழு கூறியதன் மூலம் அது பிரிட்டிஷ் அரசாங்கம் கௌரவத்தை ஓரளவு திரும்பக் கொண்டு வந்தது. எனினும், ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் கோரியது இதை உறுதி செய்ய அமைச்சரவைக் குழுவின் ஆலோசனைகளில் பொருத்தமான திருத்தம் இப்பொழுதே செய்யப்பட வேண்டும் என்பதாகும். முஸ்லிம்கள் விஷயத்தைப் போல இதைச் செய்வதில் எந்தக் கஷ்டமும் இருப்பதை தாம் காணவில்லை என்று அந்தப் பிரதிநிதி குறிப்பிட்டார். இறுதியில், தீர்மானத்திலுள்ள நேரடி நடவடிக்கை பற்றிய பிரிவு, சம்மேளனம் தனது லட்சியத்தை அடைவதில் தோல்வியுற்றால்தான் நடைமுறைப்படுத்தப்படும். அவசரப்பட்டு ஆராயாமல் நடவடிக்கைகள் எடுக்கும் நோக்கம் எதுவுமில்லை என்று அந்தப் பேச்சாளர் குறிப்பிட்டார்.

## அமைச்சரவைத் தூதுக்குழுவுக்கு A.I.S.C.F-ன் இறுதி எச்சரிக்கை

(ஜூன் முதல் வாரத்தில் பம்பாயில் நடைபெற்ற அகில இந்திய ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளன நிர்வாகக்குழுக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களின் முழு வாசகம் பின்வருமாறு)

அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளன நிர்வாகக் குழு பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டது (1) இந்திய அரசியல் சாசனம் பற்றி அமைச்சரவைத் தூதுக்குழு வெளியிட்ட முதல் அறிக்கை; (2) தங்களின் உறுப்பினர்கள் பத்திரிகைகளுக்கு அளித்த பேட்டி (3) அமைச்சரவைத் தூதுக்குழு வெளியிட்ட இரண்டாவது அறிக்கை; மற்றும் (4) அமைச்சரவைக் குழுவுக்கும் கனம் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கருக்கும் இடையே நடந்த கடிதப் போக்குவரத்து. அமைச்சரவைக் குழுவின் அறிக்கையிலிருந்து பல விஷயங்கள் தோன்றியுள்ளன; அவை பற்றி நிர்வாகக் குழு தனது கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறது. இப்போதைக்கு, இந்தியாவின் எதிர்கால அரசியல் சாசனத்தை, அது ஷெட்யூல்டு வகுப்பினரை பாதிப்பது பற்றி செயற்குழு முதலில் எடுத்துக் கொள்ள விரும்புகிறது.

5000 வார்த்தைகள் கொண்ட தனது அறிக்கையில் ஷெட்யூல்டு வகுப்பினரைப் பற்றி அமைச்சரவைத் தூதுக் குழு ஒரு வார்த்தை கூட சொல்லவில்லை என்பதைக் கண்டு நிர்வாகக் குழு ஆழமான ஆத்திரத்தை அடைகிறது. அமைச்சரவைத் தூதுக்குழுவின் சிந்தனை யோட்டம் பற்றி புரிந்து கொள்வது கஷ்டம். தீண்டத்தகாதவர்கள் இருப்பதையும், அவர்களின் இயலாமைகளையும், அவர்கள் மீது இந்தியா முழுவதிலும் சாதி இந்துக்கள் தினமும் நடைமுறைப் படுத்தும் கொடுங்கோன்மையையும் அடக்குமுறைகளையும் அமைச்சரவை குழு தெரிந்து கொள்ளாமல் இருக்க முடியாது. தீண்டத்தகாதவர்கள் என்பதையும் இந்திய அரசியல் வாழ்வில் அவர்கள் தெளிவாக வேறுபட்ட கூறு என்பதையும் மன்னர் பிரான் அரசாங்கம் அறிவித்ததையும் அமைச்சரவைத் தூதுக்குழு அறியாமல் இருக்க முடியாது. ஷெட்யூல்டு வகுப்பினரின் ஒப்புதலில்லாமல் வரையப்படும் எந்த அரசியல் சாசனமும் அவர்கள் மீது திணிக்கப் பட மாட்டாது என்று மன்னர் பிரான் அரசாங்கம் அளித்த வாக் குறுதியை பற்றி அமைச்சரவைக்குழு அறியாமல் இருக்க முடியாது. ஒரு ஆண்டுக்கு முன்பே, வேவல் பிரபு கூட்டிய சிம்லா மாநாட்டில் சாதி இந்துக்களிடமிருந்து தனித்து, ஷெட்யூல் வகுப்பினருக்கு ஒரு தனிப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டதை அமைச்சரவைக் குழு அறியாமல் இருக்க முடியாது. இந்த சூழ்நிலைமைகளில், ஷெட்யூல்டு வகுப்பினரை அலட்சியப்படுத்திய அமைச்சரவைக் குழு தன் செயல் மூலம் பிரிட்டனுக்கு அவமதிப்பையும் அவமானத்தையும் ஏற்படுத்தியுள்ளது என்று நிர்வாகக்குழு நினைப்பதில் தயக்கம் எதுவுமில்லை.

*3. பத்திரிகைக்காரர்களுக்கு அளித்த பேட்டியின் போது தூதுக் குழு வெளியிட்ட அறிக்கையை நிர்வாகக் குழு கவனித்து; அதில் அரசியல் நிர்ணய சபையிலும் ஆலோசனைக்குழுவிலும் ஷெட்யூல்டு வகுப்பினரின் இரட்டை பிரதிநிதித்துவத்திற்கு அவர்கள் வகை செய்துள்ளதை அந்த அறிக்கை குறிப்பிடுகிறது. இந்த வழிவகைகள் (ஷரத்துக்கள்) முற்றிலும் கற்பனையானது என்றும் ஆழமான பரிசீலனைக்கு லாயக்கற்றது என்று நிர்வாகக் குழு நினைப்பது இயல்பே. அவர்கள் வகுத்துள்ள திட்டத்தில், மாகாண சட்ட சபைகள் அரசியல் நிர்ணய சபைக்கு பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவதில், சீக்கியர்களுக்கும் முஸ்லீம்களுக்கும் செய்துள்ளது போல, ஷெட்யூல்டு வகுப்பினருக்கு எந்த இடமும் ஒதுக்கப்படவில்லை. அரசியல் நிர்ணய சபைக்கு ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையில் ஷெட்யூல்டு வகுப்பினர் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்ற சட்ட ரீதியான கட்டாயம் மாகாண சட்ட சபைகளுக்குக் கிடையாது. அரசியல் நிர்ணய சபையில், ஷெட்யூல்டு வகுப்பினரின் ஒரு பிரதிநிதிகூட இல்லாமல் போவது முற்றிலும் சாத்தியமே.*

*அரசியல் நிர்ணய சபையில் ஷெட்யூல்டு வகுப்பினரின் சில பிரதிநிதிகள் இடம் பெற்றால் கூட, அவர்கள் இந்துக்களின் வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்படுவதால், அவர்கள் ஷெட்யூல்டு வகுப்பினரின் உண்மையான நலன்களை ஒருபோதும் பிரதிநிதித்துவப் படுத்த முடியாது. ஆலோசனைக் குழுவை எடுத்துக் கொண்டால், அது அரசியல் நிர்ணய சபையைவிட அதிக அளவு மாறுபட்டிருக்க முடியாது. அது அரசியல் நிர்ணய சபையின் ஒரு பிரதிபலிப்பாக (மறுபதிப்பாக) மட்டுமே இருக்கும். அரசியல் நிர்ணய சபையிலும் ஆலோசனைக் குழுவிலும் ஷெட்யூல்டு வகுப்பினரின் குரல் பயனளிக்கும் முறையில் ஒலிக்க (பிரதிநிதித்துவம்) தாங்கள் வழிவகை செய்துள்ளதாக அமைச்சரவைக் குழு எப்படி நம்ப முடிந்தது என்பதை புரிந்து கொள்வது மிக கஷ்டம் என்று நிர்வாகக்குழு கருதுகிறது. முதல்கட்டத் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்படுபவர்களே -இதற்கு ஷெட்யூல் வகுப்பினருக்குத் தனித் தொகுதிகள் உள்ளன- ஷெட்யூல் வகுப்பினரின் உண்மையான பிரதிநிதிகள் என்று காண்பிக்க, ஏராளமான, மறுக்க முடியாத நிரூபணங்கள் அமைச்சரவைத் தூதுக்குழுவிடம் அளிக்கப்பட்டன; முதல்கட்ட தேர்தலில் போட்டியிட்டு வென்று மாகாண சட்டசபையில் ஷெட்யூல் வகுப்பினர் உறுப்பினர்களாக இருப்பவர்களின் வாக்குகளைப் பொறுத்தவரை அடித்தட்டில் இருந்தவர்களின் விஷமத்தனமான கூட்டுத் தொகுதிகள் அமைப்பு முறையால், முதல்கட்டத் தேர்தலில் அடி*

மட்டத்தில் இருந்தவர்கள் இறுதித் தேர்தலில் இந்து வாக்குகளின் காரணமாக மேலே வந்து விடுகிறார்கள்; எனவே மாகாண சட்ட சபையில் ஷெட்யூல்டு வகுப்பினரைச் சேர்ந்த உறுப்பினர்கள் எவ் வகையிலும் ஷெட்யூல்டு வகுப்பினரைப் பிரதிநிதித்துவப்படுத்த வில்லை; அவர்கள் சாதி இந்துக்களின் கைப்பாவைகளே. அரசியல் நிர்ணய சபையிலும் ஆலோசனைக் குழுவிலும் ஷெட்யூல் வகுப் பினரைப் பிரதிநிதித்துவப்படுத்த இரட்டை வழிவகை செய் வதற்குப் பதிலாக அமைச்சரவைத் தூதுக்குழு எவ்வித மன உறுத்தலும் இல்லாமல் அசைக்க முடியாத நிரூபணங்களைப் புறக்கணித்து, எவ்வித நியாயமும் இல்லாமல் (ஷெட்யூல் வகுப் பினரை) இந்துக்களின் பட்சாதாபத்திற்கு விட்டு விட்டதன் மூலம் மிகக் கடுமையான துரோகத்தைச் செய்துள்ளது தூதுக்குழு. தூதுக் குழுவின் தர்க்கவாதம் அல்லது அதன் தார்மீக பொறுப்புணர்வு நம்பக் கூடியதாக இல்லை என்று தூதுக்குழுவிற்கு நிர்வாகக் குழு தெரிவிக்க விரும்புகிறது.

5. அமைச்சரவைத் தூதுக்குழுவின் திட்டம் விஷமத்தன மானது; எப்படியெனில், முஸ்லீம்கள் பிராந்தியத்தில் முஸ்லிம் அல்லாத சிறுபான்மையினர் விஷயத்தை முஸ்லீம் பெரும்பான்மை யினர் தீர்வுக்கும் விட்டுவிட்டு, இந்து பிராந்தியத்தில் ஷெட்யூல்டு வகுப்பினர் உட்பட்ட இந்து அல்லாத சிறுபான்மையினர் விஷ யத்தை இந்து பெரும்பான்மையினரின் தீர்வுக்கும் விட்டுவிடு கிறது. தனது திட்டத்தை வகுக்கும்போது, முஸ்லிம் சமூகத்தினர் பாதுகாப்புக்கு அதிக (greater) அக்கறை காட்டியுள்ளதை நிர்வாகக் குழு காண்கிறது; ஆனால், ஷெட்யூல்டு வகுப்பினர் நலன்களைப் பாதுகாப்பது பற்றி எந்தக் கவனத்தையும் அது செலுத்தவில்லை. திட்டத்தின் 15வது பாராவில், அரசியல் நிர்ணய சபையின் எல்லை யைத் தாண்டிய விஷயங்களை தூதுக்குழு வகுத்துள்ளது. இந்த வழிவகை (ஷரத்தின்)க்கு பின்னால் உள்ள நோக்கம் முஸ்லிம் சமூகத்தின்மீது இந்து சமூகத்தின் ஆதிக்கம் ஏற்படாமல் தடுப்பதற்கு முஸ்லீம் சமூகத்திற்கு உள்ள பயத்தைவிட இந்து சமூகத்தின்மீது ஷெட்யூல் வகுப்பினருக்கு உள்ள பயம் மிக அதிகமானது, மிக அதிகம் உண்மையானது. எனவே, ஷெட்யூல்டு வகுப்பினர் தனித் தேர்தல் தொகுதிகள் மூலமாகவும் தனி குடியிருப்புக்கு வழிவகுப் பதன் மூலமாகவும் மட்டுமே தாங்கள் பயனுள்ள பாதுகாப்பை பெறமுடியும் என்று வற்புறுத்தி வந்தனர். இந்தக் கோரிக்கைகளை யும் அவற்றிற்கு ஆதரவான நிரூபணங்களையும் அமைச்சரவைத் தூதுக் குழு அறியும்.

மேலே சொல்லப்பட்ட முறையில் இந்துப் பெரும்பான்மையின் ஆதிக்கத்திலிருந்து விடுபட அமைச்சரவைத் தூதுக் குழு கையாண்ட கோட்பாட்டைப் பின்பற்றி அதே பாரா 15ல், தனித் தேர்தல் தொகுதிகள் மூலம் சட்டசபையில் பிரதிநிதித்துவம் பெற ஷெட்யூல் வகுப்பினருக்கு உரிமை இருக்க வேண்டும் என்றும் இந்துப் பெரும்பான்மையின் ஆதிக்கத்திலிருந்து விடுபட தனிக் குடியிருப்புகளுக்கு கட்டாயமாக வழிவகை செய்யும் ஷரத்து மூலம் அரசியல் நிர்ணய சபையின் அதிகாரத்தை மேலும் கட்டுப்படுத்த அதே கோட்பாட்டை அமைச்சரவைத் தூதுக்குழு பின்பற்றலாம்.

6. பிரிட்டனுக்கும் (UK) இந்திய அரசியல் நிர்ணய சபைக்கும் இடையேயான ஒப்பந்தம் சரிசெய்யப்படுவது என்பது ஷெட்யூல்டு வகுப்பினர் உட்பட சிறுபான்மையினருக்கு முறையான பாதுகாப்புகள் அளிக்கப்படுவதைப் பொறுத்தது என்று தனது இரண்டாவது அறிக்கையில் தூதுக்குழு வகுத்துள்ளதை நிர்வாகக் குழு கவனத்தில் கொண்டது. காங்கிரஸைத் திருப்திப்படுத்தும் அவசரத்தில் பிரிவு 22ல் இந்த ஷரத்தை சேர்க்கும் துணிவு அமைச்சரவைத் தூதுக் குழுவுக்கு இல்லை. ஆனால் இது கிரிப்ஸின் 1942 ஆலோசனைகளில் உட்படுத்தப்பட்டிருந்தது.

அமைச்சரவைத் தூதுக்குழு தன் நிலையை சரிசெய்துள்ளது மூலம் பிரிட்டிஷ் மக்களின் கௌரவத்தைப் பாதுகாத்துள்ளது என்பதற்காக நிர்வாகக் குழு மகிழ்ச்சி அடைகிறது அந்த மக்கள் சார்பில்தான் ஷெட்யூல்டு மக்களுக்கு வாக்குறுதிகள் அளிக்கப்பட்டன. அமைச்சரவைத் தூதுக்குழுவின் திட்டம் கீழ்க்கண்ட அம்சங்களில் திருத்தப்பட வேண்டுமென்று நிர்வாகக் குழு கோருகிறது:-

(1) அறிக்கையின் 15வது பாராவில் கீழ்கண்ட பிரிவுகள் பிரிவு (7) என்று சேர்க்கப்பட வேண்டும்.

''(7) தனித் தேர்தல் தொகுதிகள் மூலம் சட்ட சபைகளில் ஷெட்யூல்டு வகுப்பினரை பிரதிநிதித்துவப்படுத்த அவர்களுக்கு உரிமை வழங்கப்பட வேண்டும்''

(8) ஷெட்யூல்டு வகுப்பினருக்கு தனிக் குடியிருப்புகள் அமைக்க வேண்டியது அரசாங்கத்தின் கட்டாயக் கடமை என்ற ஷரத்து அரசியல் சாசனத்தில் அவசியம் இடம் பெற வேண்டும்.

(2) சென்ற முதல்கட்டத் தேர்தல்களில் அதிக வாக்குகள் பெற்ற ஷெட்யூல்டு வகுப்பினரை ஆலோசனைக் குழுவின் உறுப்பினர்களாக ஆக்கவும், அவர்கள் ஆலோசனைக் குழுவுக்கு ஷெட்யூல்டு வகுப்பினரின் ஐந்து பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்க அவர்களை அனுமதிக்கும் முறையில் முதல் அறிக்கையின் பாரா 20 திருத்தப்பட வேண்டும்.

7. ஷெட்யூல்டு வகுப்பினரின் லட்சியத்தை கர்ம சிரத்தையுடன் உடனே எடுத்துக் கொண்டு அமைச்சரவைத் தூதுக்குழு அவர்களுக்கு இழைத்த தவறை திருத்திக் கொள்ளும்படியும் மன்னர் பிரான் அரசாங்கத்திற்கும் பிரிட்டிஷ் தொழிற் கட்சிக்கும் நிர்வாகக் குழு தெரிவிக்க விரும்புகிறது. இது நடக்காவிடில், நேரடி நடவடிக்கையில் இறங்குவதைத் தவிர மாற்று வழி எதுவும் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு இல்லை என்று நிர்வாகக் குழு நினைக்கிறது. சூழ்நிலைமைகளில் அவ்வாறு தேவைப்பட்டால், அவர்களை எதிர்நோக்கும் சர்வநாசத்திலிருந்து காப்பாற்ற, ஷெட்யூல்டு வகுப்பினரை அவ்வாறு செய்யும்படி கோர நிர்வாகக் குழு தயங்காது.

8. அமைச்சரவைத் தூதுக்குழு முன்வைத்த திட்டத்தால் ஷெட்யூல்டு வகுப்பினரிடையே ஏற்பட்ட பீதிபற்றி நிர்வாகக்குழு அறியும். சென்ற தேர்தல்களின் போது, காங்கிரஸுக்கு எதிராக தனிமையாக, வசதிகள் எதுவும் இல்லாமல் காங்கிரஸ் கையாண்ட வன்முறைகள், நிர்பந்தம், மற்றும் தீயிட்டுக் கொளுத்துதலையும் சமாளித்து, மற்றபிற கட்சிகள் கடைகளை மூடிவிட்டபோதிலும் ஷெட்யூல்டு வகுப்பினர் காட்டிய தைரியத்தையும் வீரத்தையும் தொடர்ந்து காட்டும்படி அவர்களுக்கு சொல்ல நிர்வாகக் குழு விரும்புகிறது; பீதி அடைய காரணம் எதுவுமில்லை. துணிவும் ஒருமைப்பாடும் இருந்தால், நீதியையும் மனித நேயத்தையும் கொண்ட அவர்கள் லட்சியம், எதிரிகளின் சூழ்ச்சிகளையும் மீறி வெற்றி பெறுவது நிச்சயம் என்று அவர்களுக்கு உறுதி கூறுகிறது.

9. நேரடி நடவடிக்கை அம்முறையில் அமைய வேண்டும். மிகவும் பயனுள்ளது எது, அதைத் துவக்குவதற்கான நேரம் ஆகியவற்றைப் பரிசீலிக்க ஒரு நடவடிக்கைக் குழுவை அமைக்க நிர்வாகக் குழு தலைவருக்கு அதிகாரம் அளிக்கிறது.

10. தேர்தல்களில் காங்கிரஸுக்கு எதிராக போராடிய ஒரே காரணத்திற்காக அதில் பலர் இறந்தனர். பலர் காயம் அடைந்தனர் -

*(1) ஷெட்யூல்டு வகுப்பினருக்கு எதிராக நாடு முழு வதிலும் கிராமங்களிலும் நகரங்களிலும் கொடுங்கோன்மையை யும் அடக்குமுறையையும் சாதி இந்துக்கள் கையாண்டு வருகின் றனர்.*

*(2) இதில் வெட்கக்கேடான பகுதி என்னவெனில், போலீஸ் சாதி இந்துக்களுக்கு சாதகமாகச் செயல்பட்டு ஷெட்யூல்டு வகுப் பினரைச் சேர்ந்த அப்பாவி ஆண்களையும் பெண்களையும் நையப்புடைத்ததோடு கைதும் செய்தார்கள்;*

*(3) ஷெட்யூல்டு வகுப்பினருக்கு உணவு பங்கீட்டுக் கடைகள் அவர்களுக்குரிய உணவுப் பொருட்களை வழங்க மறுத்தது;*

*(4) அப்பாவிகளான ஆண்கள், பெண்கள் மீது தொடுக்கப் பட்ட இந்தக் கொடுமைகளை கண்டிக்க தவறிய பத்திரிகைகள் மௌன சதியைக் கடைப்பிடித்தன.*

*(5) ஷெட்யூல்டு வகுப்பினர்களின் உயிர்களையும் சொத்துக் களையும் காப்பதில் மாகாண அரசாங்கம் காட்டிய அலட்சியப் போக்கு.*

*பெரும்பான்மை சமூகத்தின் இந்த நடவடிக்கை அதிகாரத்தை நம்பி அளிக்கப்படுவதற்கு அருகதையற்றது இந்து சமூகம் என்பது சந்தேகத்திற்கிடமின்றி நிரூபிக்கிறது என்று நிர்வாகக் குழுவால் உணராமல் இருக்க முடியவில்லை; பெரும்பான்மை சமூகம் தனது ஒழுக்கப் பண்பை அபிவிருத்தி செய்து கொள்ளவில்லை எனில், தங்களைப் பாதுகாத்துக் கொள்ள எல்லா வழிகளையும் கையாள ஷெட்யூல் வகுப்பினர் நிர்ப்பந்திக்கப்படுவர்.*



# 13

# பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழுவின் திட்டம் பற்றிய பிரதிபலிப்புகள் : சர்ச்சிலுக்கு டாக்டர் அம்பேத்கர் வேண்டுகோள்

*அமைச்சரவைத் தூதுக்குழு 1946 மே 16ம் தேதி ''அரசு ஆவணத்தை'' வெளியிட்டது; தீண்டத்தகாதவர்களின் நலனை பாதுகாக்கும் எந்த ஏற்பாடும் (ஷரத்தும்) அதில் இல்லை. டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் அதைப் பற்றிக் கவலை கொண்டு இந்த விஷயத்தை கவனிக்கும்படி திரு.சர்ச்சிலுக்கு எழுதினார். அதற்கு திரு. சர்ச்சில் சாதகமான பதிலை அளித்தார். டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர் எழுதிய கடிதம் பின்வருமாறு. - ஆசிரியர்கள்.*

*''திரு.சர்ச்சில் அமெரிக்கச் சுதந்திரப் பிரகடனத்தை மேற்கோள் காட்டி, 6 கோடி தீண்டத்தகாதவர்களின் எதிர்காலத்தை பாதுகாப்பதற்கு கன்சர்வேட்டிவ் கட்சி தன்னாலான அனைத்தையும் செய்யும் என்று குறிப்பிட்டார்.''*

*ஒரு சுதந்திர இந்திய அரசாங்கத்திற்கான பிரிட்டிஷ் அமைச்சரவை தூதுக்குழுவின் ஆலோசனைகள் தீண்டத்தகாதவர்களின் நலன்களுக்கு வெட்கக் கேடான ஒரு துரோகம் என்று இந்திய வைஸ்ராய் கவுன்சில் உறுப்பினர் டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர் அனுப்பிய கண்டனத்திற்கு, எதிர்கட்சித் தலைவர் (சர்ச்சில்) பின்வரும் தந்தியில் பதிலளித்தார்.*

*''எல்லா மனிதர்களும் பிறக்கும்போது சுதந்திரமாகவும் சமத்துவமாகவும் இருக்கிறார்கள். வாழவும், சுதந்திரமாக இருக்கவும், நல்வாழ்வைத் தேடிக் கொள்ளவும் அவர்களுக்கு உரிமை உண்டு என்ற அமெரிக்க சுதந்திர பிரகடனத்தின் அடிப்படையில் (நாங்கள்) நிலை எடுப்போம்''*

*டாக்டர் அம்பேத்கரின் செய்தி பின்வருமாறு: ''அமைச்சரவை தூதுக்குழுவின் ஆலோசனைகள் 6 கோடி தீண்டத்தகாத*

வர்களின் நலனுக்குச் செய்யப்பட்ட வெட்கக் கேடான துரோகம் ஆகும். அரசியல் நிர்ணய சபையில் பிரதிநிதித்துவம் எதுவும் இல்லை. ஆலோசனைக் குழுவில் பிரதிநிதித்துவம் எதுவும் இல்லை, உடன்படிக்கை மூலம் பாதுகாப்பு இல்லை. இதன் விளைவு என்ன வெனில், தீண்டத்தகாதவர்களை கையையும் காலையும் கட்டி ஒப்படைப்பதாகும். பாராளுமன்றத்தில் தாங்கள் ஆற்றிய உரைக்கு இந்தியாவெங்கிலும் உள்ள தீண்டத்தகாதவர்கள் தங்களுக்கு நன்றி செலுத்துகின்றனர். தீண்டத்தகாதவர்களின் எதிர்காலமாகவும் இருள் சூழ்ந்துள்ளது. அவர்களின் நலன்களைப் பாதுகாப்பதில் நாங்கள் உங்களை நம்பியிருக்கிறோம்''

திரு.சர்ச்சில் பின்வருமாறு பதிலளித்தார்:''6 கோடி தீண்டத்தகாதவர்களின் எதிர்காலத்தைப் பாதுகாக்க, கன்சர் வேட்டிவ் கட்சி தன்னாலான அனைத்தையும் செய்யுமென்று தாங்கள் உறுதி கொள்ளலாம். தங்கள் சக-மதவாதிகளால் தீண்டத் தகாதவர்கள் படும் வேதனையும் சோர்வும் இந்திய உபகண்டத்தின் பிரச்சினையில் மிகமோசமான அம்சமாகும். எல்லா மனிதர்களும் சுதந்திரமாகவும் சமத்துவத்திலும் பிறக்கிறார்கள்; வாழ்க்கைக் கும் சுதந்திரத்திற்கும் சுகவாழ்விற்கும் அவர்கள் உரிமை பெற்றுள் ளார்கள் என்ற அமெரிக்க சுதந்திரப் பிரகடனத்தில் வகுக்கப் பட்ட பரந்த கோட்பாடுகளின் அடிப்படையில் எங்கள் நிலையை எடுப்போம்''



# 14

# ஷெட்யூல்டு வகுப்பினரின் உரிமைகளுக்காக நான் போராடுகிறேன்

## பிரதம மந்திரி அட்லிக்கு (லண்டன்) தந்தி

*இந்தியாவின் இடைக்கால அரசாங்கத்தில் ஷெட்யூல்டு வகுப்பினருக்குப் போதாத அளவு பிரதிநிதித்துவத்தை அமைச்சரவைத் தூதுக்குழு சிபாரிசு செய்தது. கிரேட் பிரிட்டனின் அப்போதைய பிரதம மந்திரியாக இருந்த திரு.அட்லிக்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு தந்தியை அனுப்பினார் - ஆசிரியர்கள்.*

*சென்ற ஆண்டின் சிம்லா மாநாட்டின்போது, நான் எழுப்பிய ஆட்சேபணையின் பேரிலும் உள்நாட்டு அரசாங்கத்தின் சம்மதத்தின் பேரிலும் இடைக்கால அரசாங்கத்தில், 14 பேர் கொண்ட கவுன்சிலில் ஷெட்யூல் வகுப்பினருக்கு இரண்டு இடங்கள் வழங்க வாக்களிக்கப்பட்டது. நான் மூன்று கோரினேன். சமரசத்தின் பேரில் இரண்டிற்கு நான் ஒப்புக் கொண்டேன். நேற்று அறிவிக்கப்பட்ட புது ஆலோசனைகளின்படி ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒரு இடம் கொடுக்கப்படுகிறது; நன்கு விவாதித்தபின் ஒப்புக் கொள்ளப்பட்ட திட்டவட்டமான வாக்குறுதி மோசமாக மீறப்பட்டது. 6 கோடி ஷெட்யூல்டு வகுப்பினரை 40 லட்சம் சீக்கியர்களோடும் 30 லட்சம் கிருஸ்தவர்களோடும் சமமாக வைத்து ஒரு இடம் கொடுப்பது மிகவும் நியாயமற்றது. ஷெட்யூல்டு வகுப்பினரின் நியமன உறுப்பினர் அந்த வகுப்பினரை பிரதிநிதித்துவப்படுத்துவதில்லை. அவர் இந்து வாக்குகளால் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டவர். காங்கிரஸின் சிருஷ்டி. ஷெட்யூல்டு வகுப்பினரைச் சார்ந்த காங்கிரஸ்காரர், ஷெட்யூல்டு வகுப்பினரைப் பிரதிநிதித்துவப்படுத்தியதாகாது. அது காங்கிரஸுக்கு அளிக்கப்படும் பிரதிநிதித்துவம். ஷெட்யூல்டு வகுப்பினர் மீது அமைச்சரவைத் தூதுக்குழு தவறுக்கு மேல் தவறை இழைத்து வருகிறது; காங்கிரஸைத் திருப்திப்படுத்த நாட்டில் அவர்களின் சுதந்திரமான நிலையை நாசம் செய்ய உறுதி பூண்டுள்ளது.*

தாங்கள் தலையிட்டு ஷெட்யூல்டு வகுப்பினருக்கு 2 இடங்கள் அளிக்கும்படியும் அந்த இடங்கள் சம்மேளனம் நியமிப்பவர்களால் நிரப்பப்பட வேண்டும் என்றும் தூதுக்குழுவுக்கு ஆணையிட்டு இழைக்கப்பட்ட தவறுக்கு பரிகாரம் செய்யும்படி வேண்டுகிறேன்; ஷெட்யூல்டு வகுப்பினரை பிரதிநிதித்துவப்படுத்துவது சம்மேளனம் மட்டுமே என்று தூதுக் குழுவுக்குத் தெரியும். இரண்டு இடங்கள் வேண்டும் என்று ஷெட்யூல்டு வகுப்பினர் வலியுறுத்துகின்றனர். எனது நோக்கம் பற்றி தவறான கருத்து ஏற்படுவதைத் தடுக்க, இடைக்கால அரசாங்கத்தில் இருக்க எனக்கு எந்த விருப்பமும் இல்லை என்பதை தெரிவிக்க விரும்புகிறேன். நான் விலகி இருப்பேன். ஷெட்யூல்டு வகுப்பினரின் உரிமைகளுக்காக நான் போராடி வருகிறேன். பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் ஓரளவு நியாய உணர்வு இருக்கிறதென நம்புகிறேன் - டாக்டர் அம்பேத்கர்

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்,
22, பிருதிவிராஜ் ரோடு,
புது டெல்லி.

தேதி : 17.6.1946



# 15

# இந்தியாவின் தீண்டத்தகாதவர்களை இந்திய தேசிய காங்கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்துகிறதா?

*தனது ஆலோசனையில் தீண்டத்தகாதவர்களுக்கு சரியான பாதுகாப்பை அமைச்சரவை தூதுக்குழு அளிக்காததால், திரு.அட்லிக்கும், திரு.சர்ச்சிலுக்கும் மற்ற தொழிற் கட்சித் தலைவர்களுக்கும் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் தந்தி அனுப்பியதைத் தொடர்ந்து ஒரு நிகழ்ச்சிப் பதிவுக் குறிப்பை (Memorandum) அனுப்பி வைத்தார். அந்த குறிப்பின் வாசகம் பின்வருமாறு - ஆசிரியர்கள்.*

**இந்திய அரசியல் சட்ட மாற்றங்கள் பற்றி , அமைச்சரவை குழுவின் ஆலோசனைகள் பற்றி, அவை ஷெட்யூல் வகுப்பினரைப் பாதிப்பது பற்றி ஒரு விமர்சனம்.**

***(தீண்டத்தகாதவர்கள்)***

*டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்*

*இந்தியாவில் அரசியல் நெருக்கடியைத் தீர்த்து வைப்பதற்காக தொழிற் கட்சி அரசாங்கத்தால் இந்த ஆண்டுத் துவக்கத்தில் அனுப்பி வைக்கப்பட்ட அமைச்சரவைத் தூதுக்குழு, ஒரு அரசியல் நிர்ணய சபையால் அரசியல் சாசனத்தை வரைவதற்கான ஒரு திட்டத்தை முன்வைத்தது. மாகாண சட்ட சபைகளின் உறுப்பினர்களால் ஒற்றை மாற்று வாக்கால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளைக் கொண்டதாக இருக்கும் இந்த அரசியல் நிர்ணய சபை. அதை நிரப்பும் உறுப்பினர்களைப் பொறுத்தவரை, அமைச்சரவை தூதுக்குழுவின் திட்டம் மாகாண சட்டசபைகளின் உறுப்பினர்களை மூன்று வகைகளாகப் பிரித்தது : (1) முஸ்லீம்கள் (2) சீக்கியர்கள் (3) பொது; ஒவ்வொன்றுக்கும் கோட்டா (Quota) நிர்ணயிக்கப்பட்டது ஒவ்வொரு வகைக்கும் தனித் தேர்தல் தொகுதிகள் உள்ளன; அரசியல் நிர்ணய சபையின் முஸ்லீம் பிரதிநிதிகள்*

மாகாண சட்டசபையின் முஸ்லிம் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப் படுவர். அதேபோல் சீக்கிய உறுப்பினர்களால் சீக்கியர்களும், பொதுவான வகை உறுப்பினர்கள் மற்ற எல்லோராலும் தேர்ந் தெடுக்கப்படுவர். இந்தப் பொது (1) இந்துக்கள் (2) ஷெட்யூல் வகுப்பினர் (3) இந்திய கிருஸ்தவர்கள் (4) ஆங்கிலோ-இந்தியர்கள் ஆகியோரை உட்படுத்தும்.

2. தங்களை இந்துக்களுடன் இணைத்து வைத்திருப்பது (lumped) கண்டு இந்தியாவின் ஷெட்யூல்டு வகுப்பினர் மிகவும் ஆச்சரியம் அடைந்தனர். திரும்பத் திரும்ப மன்னர்பிரான் அரசாங்கம் வெளிப்படையாகக் கூறிவந்தது என்னவெனில், இந்திய தேசிய வாழ்வில், ஷெட்யூல்டு வகுப்பினர் தனிக்கூறு (element) என்று மன்னர்பிரான் அரசாங்கம் அங்கீகரிக்கிறது என்றும், ஷெட்யூல்டு வகுப்பினர் ஒப்புக் கொள்ளாத எந்த அரசியல் சாசனத்தையும் மன்னர்பிரான் அரசாங்கம் திணிக்காது என்பதும் தான். கேட்கப்படும் கேள்வி என்னவெனில், முஸ்லீம்களையும் சீக்கியர்களையும் அமைச்சரவைத் தூதுக்குழு தனிக்கூறுகளாக ஏன் அங்கீகரித்தது, அதே அந்தஸ்தை ஷெட்யூல் வகுப்பினருக்கு அளிக்க அவர்கள் ஏன் மறுத்தார்கள் என்பதுதான்.

அமைச்சரவைத் தூதுக் குழுவின் ஆலோசனைகள் மீது 1946 ஜுலை 18ம் தேதி பாராளுமன்றத்தில் நடந்த விவாதத்தில் சர். ஸ்டாப்போர்டு கிரிப்ஸ், திரு.அலெக்ஸாண்டர் மற்றும் பெத்திக் லாரன்ஸ் பிரபுவும் இந்த விமர்சனத்திற்கு எதிராகத் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முயன்றனர். அவர்களின் வாதம் இரு பகுதிகளைக் கொண்டதாக இருந்தது.

(1) சென்ற பிப்ரவரியில் சட்டசபைக்கு நடந்த தேர்தல் களில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட இடங்களை காங்கிரஸ் கைப்பற்றியது; இது காட்டுவது ஷெட்யூல்டு வகுப்பினர் காங்கிஸுடன் இருக்கிறார்கள், தங்கள் விதியை (எதிர்காலம்) காங்கிரஸுக்கு விட்டுவிட்டார்கள், அதாவது இந்துக்களிடம்; அவர்களை பிரிப்பதற்கு அடிப்படை எதுவுமில்லை.

(2) சிறுபான்மையினர் பற்றி ஒரு ஆலோசனைக் குழு இருக்கும்; அதில் ஷெட்யூல்டு வகுப்பினர் பிரதிநிதித்துவம் பெறுவர். தங்களுக்கு தேவைப்படும் பாதுகாப்புகளை வகுப்பதில் அவர்கள் குரல் எழுப்பலாம்.

இரண்டாவது வாதம் அதிக மோசமானதும் பயனற்றது மாகும். ஆலோசனைக் குழுவின் அந்தஸ்தும் அதிகாரமும் இன்னமும் வகுத்துக் கூறப்படவில்லை. ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதிகளின் எண்ணிக்கை இன்னமும் நிர்ணயிக்கப்பட வில்லை. ஆலோசனைக் குழுவின் முடிவுகள் வெறும் பெரும் பான்மை எண்ணிக்கை அடிப்படையில் நிறைவேற்றப்படும். கடைசியாக, ஆலோசனைக்குழு, அரசியல் நிர்ணய சபையின் பிரதி பலிப்பாக மட்டுமேயன்றி வேறாக இருக்க முடியாது. அரசியல் நிர்ணய சபையில் உள்ள ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதிகள் எல்லோரும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள். அவர்கள் ஷெட்யூல்டு வகுப்பினரைப் பிரதிநிதித்துவப்படுத்தவில்லை. எனவே அந்தக் கட்சியின் ஆணைக்கு உட்பட்டவர்கள். அரசியல் நிர்ணயசபையிலோ ஆலோசனைக் குழுவிலோ ஷெட்யூல் வகுப் பினரின் உண்மையான பிரச்சினைகளை (கருத்துக்களை) அவர் களால் முன் வைக்க முடியாது.

ஷெட்யூல்டு வகுப்பினருக்கு பிரதிநிதித்துவம் அளிக்க தாங்கள் தவறியதை நியாயப்படுத்த அமைச்சரவைத் தூதுக்குழு உறுப்பினர் கள் முன்வைத்த பிரதான வாதம், சென்ற தேர்தலில் ஷெட்யூல்டு வகுப்பினர் இடங்களை காங்கிரஸ் ஜெயித்தது என்பது. இந்த வாதமும்கூட நிற்க முடியாது. இறுதியான தேர்தலில் ஷெட்யூல்டு வகுப்பினர் இடங்களை காங்கிரஸ் கைப்பற்றியது என்பது உண்மை, இதற்குப் பதில் என்னவெனில், இந்தத் தேர்தல்களின் முடிவுகளை பல்வேறு காரணங்களுக்காக (சோதனை) அடிப்படையாக எடுத்துக் கொண்டிருக்கக் கூடாது என்பதுதான்.

முதலாவதாக, பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு ஒத்துழைத்த ஷெட்யூல்டு வகுப்பினர் போன்ற கட்சிகள் அதன் காரணமாக மக்களுடன் சாதகமற்ற நிலையில் இருந்தன.

இரண்டாவதாக, இந்திய தேசிய ராணுவ வீரர்கள் மீதான விசாரணையும் தேர்தல்களும் ஒரே காலத்தில் நிகழ்ந்ததால், காங்கிரஸுக்கு சாதகமான நிலை ஏற்பட்டது; மற்ற கட்சிகளுக்கு சாதகமற்ற நிலை ஏற்பட்டது. இந்திய தேசிய ராணுவ வீரர்கள் மீதான விசாரணை தேர்தல்களின் போது நிகழ்ந்திராவிடில், காங்கிரஸ் முற்றிலுமாகத் தோல்வியுற்றிருக்கும்; அதன் நிலை அவ்வளவு கீழ்மட்டத்தில் இருந்தது.

இந்த இரு காரணங்களைத் தவிர, தேர்தல்களை ஒரு அடிப் படையாக எடுத்துக் கொண்டிருக்கக் கூடாது- அதாவது காங்கிரஸ் ஷெட்யூல்டு வகுப்பினரைப் பிரதிபலிக்கிறதா இல்லையா என்ற அடிப்படையில் எடுத்துக் கொண்டிருக்கக் கூடாது- என்பதற்கு ஒரு விசேஷ காரணம் இருக்கிறது. ஷெட்யூல்டு வகுப்பினர் இடங்களின் எண்ணிக்கை உயர்வை நிர்ணயிப்பது இந்துக்களும் வாக்களிக்கும் கூட்டுத் தொகுதி அமைப்பு முறை, இந்துக்களின் வாக்குகள்தான் மேம்பாட்டு நிலையில் இருப்பதால் ஷெட்யூல் வகுப்பினரைச் சார்ந்த ஒருவர், ஷெட்யூல்டு வகுப்பினர் இடத்தில் நின்றால் முற்றிலுமாக இந்துக்கள் வாக்குகளால் தேர்ந்தெடுக்கப் படுவது சுலபம். மாகாண சட்டசபைகளின் காங்கிரஸ் டிக்கெட்டில் நின்ற ஷெட்யூல்டு வகுப்பினர் காங்கிரஸ் வாக்குகளால் மட்டும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்; ஷெட்யூல்டு வகுப்பினர் வாக்குகளால் அல்ல; (இதை) இந்த உண்மையை அமைச்சரவைத் தூதுக்குழு வினால்கூட மறுக்க முடியாது.

காங்கிரஸ் ஷெட்யூல்டு வகுப்பினரைப் பிரதிநிதித்துவப் படுத்துகிறதா என்பதைக் கண்டறிய உண்மையான பரிசோதனை முதல்கட்ட தேர்தல்களின் முடிவுகளைப் பரிசீலிப்பதுதான்; இந்தத் தேர்தல்கள் இறுதித் தேர்தல்களுக்கு முன்பாக நடந்தன; ஏனெனில், முதல்கட்ட தேர்தல்களில், ஷெட்யூல்டு வகுப்பினருக்குத் தனித் தேர்தல் தொகுதிகள் இருந்தன; அதில் வாக்களிக்க இந்துக் களுக்கு உரிமை கிடையாது. எனவே, முதல்கட்டத் தேர்தல்கள் ஷெட்யூல்டு வகுப்பினரின் உண்மையான உணர்வுகளைப் பிரதி பலிக்கிறது. முதல் கட்ட தேர்தல் முடிவு எதைக் காண்பிக்கிறது? ஷெட்யூல்டு வகுப்பினர் காங்கிரஸுடன் இருக்கிறார்கள் என்பதைக் காண்பிக்கிறதா? மாகாண சட்டசபைகளுக்கு ஷெட்யூல்டு வகுப் பினருக்கு 151 இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. அவை சிந்து, வடமேற்கு எல்லை மாகாணம் தவிர மற்ற பல்வேறு மாநிலங் களுக்கு பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

முதல் கட்டத் தேர்தல்கள் கட்டாயமானவையல்ல. ஒரு இடத்தில் நான்கு வேட்பாளர்களுக்கு மேல் போட்டியிட்டால் தான் அது கட்டாயமாகிறது.

*முதல் கட்டத் தேர்தலில் - இது முடிவான தேர்தலுக்கு முன்னால் நடந்தது - 151 இடங்களில் 40 இடங்களுக்குத் தேர்தல் கட்டாயமாயிற்று, அவை பின்வருமாறு பகிர்ந்தளிக்கப்பட்டன.*

| | |
|---|---|
| *மதராஸ்* | *10* |
| *பம்பாய்* | *3* |
| *வங்காளம்* | *12* |
| *ஐக்கிய மாகாணம்* | *3* |
| *மத்திய மாகாணங்கள்* | *5* |
| *பஞ்சாப்* | *7* |

*பீஹார் மற்றும் ஒரிஸ்ஸா மாகாணங்களில் முதல் கட்டத் தேர்தல்கள்* (Primary elections) *நடைபெறவில்லை.*

*முதல் கட்டத் தேர்தல்களில் இந்த 40 தொகுதிகளின் முடிவுகள் இந்தக் குறிப்புடன் வரும் இணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன. தேர்தல்கள கீழ்வருமாறு நிரூபிக்கின்றன :*

(I) *காங்கிரஸ் நிறுத்திய 282 வேட்பாளர்களில் 46 வேட்பாளர்கள் மட்டுமே அதன் டிக்கெட்டில் (அட்டவணை* I*); வெற்றி பெற்ற 168 வேட்பாளர்களில் 38 பேர்கள்தான் அவர்கள் கணக்கில் (அட்டவணை* V *ஐப் பார்க்கவும்).*

(II) *முதல் கட்டத் தேர்தலில் இறங்கும் ஒரு கட்சியின் நோக்கம் தன்னுடைய முத்திரையில் 4 வேட்பாளர்களை நிறுத்துவதன் மூலம் எல்லா எதிர்க்கட்சிகளையும் இறுதித் தேர்தலிலிருந்து விரட்டியடிப்பதுதான். தன்னுடைய டிக்கெட்டில் நான்கு வேட்பாளர்களை நிறுத்த முடிவது தன் கட்சிக்கு வாக்களிப்பவர்கள் மீதுள்ள நம்பிக்கையைப் பொறுத்தது. ஒவ்வொரு தொகுதியிலும் ஒரு வேட்பாளருக்கு அதிகமாக வேட்பாளர்களை நிறுத்த காங்கிரஸுக்குத் துணிவில்லை. காங்கிரஸ் வேட்பாளர்களாக நிற்பவர்களுக்கு ஷெட்யூல் வகுப்பினர் வாக்களிப்பர் என்ற நம்பிக்கை காங்கிஸுக்கு இல்லை. தான் போட்டியிட்ட ஒவ்வொரு தொகுதியிலும் நான்கு வேட்பாளர்களை நிறுத்த துணிந்த ஒரு கட்சி இருக்கிறதென்றால், அது ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளனமே (அட்டவணை* II, *பாகங்கள்* I, V, *பத்தி 3,4)*

காங்கிரஸுக்கு ஆதரவாக அளிக்கப்பபட்ட வாக்குகளைக் கணக்கில் கொண்டால், முதல்கட்டத் தேர்தல்களில் அளிக்கப் பட்ட மொத்த வாக்குகளில், காங்கிரஸ் பெற்ற வாக்குகள் 28 சதவிகிதமே என்று சந்தேகத்திற்கு இடமின்றி நிரூபணமாகியது. (அட்டவணை IV ஐப் பார்க்கவும்).

(IV) இந்து வாக்குகளின் உதவியால் ஒருவர் இறுதித் தேர்தலில் வெற்றிபெறும் ஆசை இல்லாமலிருந்தால், எல்லா சுயேச்சைகளும் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் உறுப் பினர்களாக ஆகியிருப்பர். ஷெட்யூல்டு வகுப்பினரை பிரதிநிதித் துவப்படுத்தும் ஒரே கட்சி ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் என்று எடுத்துக் கொண்டால், காங்கிரஸ் அல்லாத கட்சிகளுக்கு சாதகமாகக் கிடைத்த வாக்குகள் 72 சதவிகிதம் என்றால், அதன் பெருமை அதைச் சாரும் (அட்டணை IV).

டாக்டர் அம்பேத்கரை பின்பற்றுகிறவர்கள் பம்பாய் மாகாணத்திலும் மத்திய மாகாணங்களிலும் உள்ள ஷெட்யூல்டு வகுப்பினர் மட்டுமே என்று அமைச்சரவைத் தூதுக்குழு உறுப்பினர் வாதித்தனர்.

இந்த வாதத்திற்கு எந்த அடிப்படையும் கிடையாது. ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் மற்ற மாகாணங்களிலும் செயல்படுகிறது. (அவற்றிலும்) பம்பாய் மற்றும் மத்திய மாகாணங் களில் போல சிறப்பான தேர்தல் வெற்றிகள் கிடைத்துள்ளன. அரசியல் நிர்ணய சபைக்கான தேர்தலில் சம்மேளனம் பெற்ற தனி வெற்றியை தங்கள் வாதத்தை முன் வைக்கும்முன் தூதுக்குழு கணக்கிலெடுக்கத் தவறியது. வங்காள மாகாண சட்டசபையிலிருந்து ஒரு வேட்பாளராக அவர் நின்றார்; அவர் முன்னுரிமை (Preferential) வாக்குகள் பெற்ற பொதுத் தொகுதிகளைப் பொறுத்தவரை மிக உயர்ந்த எண்ணிக்கை வாக்குகளைப் பெற்று, காங்கிரஸ் கட்சியின் தலைவர் திரு. சரத் சந்திர போஸைத் தோற்கடித்தார். பம்பாய் மற்றும் மத்திய மாகாணங்களுக்கு வெளியே டாக்டர் அம்பேத்கருக்கு எந்த செல்வாக்கும் இல்லையெனில் அவர் வங்காளத்திலிருந்து எப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டார்? வங்காள மாகாண சட்டசபைக்கு ஷெட்யூல்டு வகுப்பினருக்கு 30 இடங்கள் இருந்தன. அந்த 30ல் 28 பேர் காங்கிரஸ் டிக்கெட்டில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவரது கட்சியைச் சேர்ந்த இருவரில் ஒருவர் தேர்தல் தினத்தன்று நோய்வாய்ப்பட்டார். அதன் பொருள் என்னவெனில், காங்கிரஸ் முத்திரையில் தேர்ந்தெடுக்கப்பட்ட 6 ஷெட்யூல் வகுப்பைச் சார்ந்த உறுப்பினர்கள், காங்கிரஸின் ஆணையையும் மீறி டாக்டர்

அம்பேத்கருக்கு வாக்களித்தனர் என்பது காங்கிரஸைச் சார்ந்த ஷெட்யூல்டு வகுப்பினர் உறுப்பினர்களும் அவரை ஷெட்யூல்டு வகுப்பினரின் தலைவராகக் கருதுகிறார்கள் என்றும், தூதுக் குழுவின் வாதம் (அறிக்கை) முற்றிலுமாகத் தவறு என்றும் நிரூபிக் கிறது.

தூதுக் குழுவின் சரணாகதி காங்கிரஸை மிக அதிகம் ஊக்கு வித்தது; ஷெட்யூல்டு வகுப்பினர் ஒரு சிறுபான்மையினர் அல்ல என்று மறுத்து தூதுக்குழுவுக்கு அனுப்பிய கடிதத்தில் கூறும் அளவுக்கு சென்றது. மற்ற சிறுபான்மையினருக்கு வழங்கும் பாதுகாப்புகளை ஷெட்யூல்டு வகுப்பினருக்கு வழங்க காங்கிரஸ் தயாராக இல்லை. காங்கிரஸின் இந்தப் போக்கை தூதுக் குழு மறுக்கவில்லை. இங்குதான் ஒரு மாபெரும் அபாயம் மறைந் திருக்கிறது; விவாதிப்பதன் மூலம் ஷெட்யூல்டு வகுப்பினர் சிறு பான்மையினர் என்று அவர்கள் கருதுகிறார்களா இல்லையா என்று கூறும்படி தூதுக் குழுவை நிர்ப்பந்திப்பது அவசியமாகிறது.

இறையாண்மை (sovereignty) மாற்றப்படுவதற்கு முன்பு சிறுபான்மையினருக்கான பாதுகாப்புகள் போதுமானவையா என்று பாராளுமன்றம் தன்னை திருப்திப்படுத்திக் கொள்ள வேண்டும். பாதுகாப்புகளைப் பற்றிப் பரிசீலிக்க எந்த ஏற்பாட்டையும் தூதுக் குழு வகுக்கவில்லை. சிறுபான்மையினரின் பாதுகாப்புகளைப் பரிசீலிக்க பாராளுமன்ற இரு அவைகளின் கூட்டுக் குழு இருக்குமா என்பதும் தெளிவுபடுத்தப்படவில்லை. பாதுகாப்புகள் போது மானவையா என்று முடிவு செய்வதில் மன்னர்பிரான் அரசாங்கம் சுதந்திரமான மதிப்பீட்டை செய்யுமா என்பதையும் கூட தூதுக் குழு கூறவில்லை. இந்த விஷயங்களெல்லாம் வரையறுக்கப்பட வேண்டியது அவசியம்; ஏனெனில் இந்த ஷரத்தை தூதுக்குழு பின்னால் சிந்தித்தது; மூல ஆலோசனைகளில் இது இடம்பெற வில்லை; சிறுபான்மையினருக்கு ஆறுதல் கூறவே இது உட் படுத்தப்பட்டுள்ளது என்ற எண்ணத்தை ஏற்படுத்துகிறது.

## 1945 டிசம்பரில் நடந்த முதல்கட்டத் தேர்தல் முடிவுகள் பற்றிய பரிசீலனை

1946 பிப்ரவரியில் நடந்த பொதுத் தேர்தல்களுக்கு முன்பு இந்தியாவின் சட்டசபைகளில் ஷெட்யூல்டு வகுப்பினருக்காக (தீண்டத்தகாதவர்களுக்காக) ஒதுக்கப்பட்ட இடங்களுக்கு வேட் பாளர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக.

குறிப்பு : அட்டவணைகளில் உள்ள பரிசீலனை அதிகாரபூர்வமான புள்ளி விவரங்களிலிருந்து தயாரிக்கப்பட்டது.

### அட்டவணை I

**ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட தொகுதிகளில் முதல்கட்டத் தேர்தல்களில் போட்டியிட்ட கட்சிகள் - மாகாண வாரியாக**

| முதல்கட்டத் தேர்தல்களில் வேட்பாளர்களை நிறுத்திய கட்சிகளின் பெயர் | ஒவ்வொரு கட்சியும் நிறுத்திய வேட்பாளர்களின் எண்ணிக்கை | | | | | | எல்லா மாகாணங் களிலும் கட்சி நிறுத்திய வேட்பாளர்களின் மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|---|---|
| | மதராஸ் | பம்பாய் | வங்காளம் | ஐக்கிய மாகாணங்கள் | மத்திய மாகாணங்கள் | பஞ்சாப் | |
| 1.காங்கிரஸ் | 10 | 3 | 13 | 11 | 5 | 4 | 46 |
| 2. ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் | 35 | 6 | 8 | 9 | 12 | இல்லை | 70 |
| 3. ஹரிஜன லீக் | ( இல்லை) | இல்லை | இல்லை | 1 | 3 | இல்லை | 4 |
| 4. கட்சியில்லாத சுயேச்சைகள் | 5 | 9 | 76 | 3 | 8 | 52 | 153 |
| 5. இந்து மஹாசபா | இல்லை | இல்லை | 1 | 1 | இல்லை | இல்லை | 2 |
| 6. கம்யூனிஸ்டுகள் | 6 | இல்லை | 1 | இல்லை | இல்லை | இல்லை | 7 |
| 7. தீவிர ஜனநாயகக் கட்சி | இல்லை | இல்லை | 1 | இல்லை | இல்லை | இல்லை | 1 |
| மொத்தம் | 56 | 18 | 100 | 25 | 28 | 56 | 283 |

## அட்டவணை II

### பாகம் IV ஐக்கிய மாகாணங்கள்

| முதல்கட்ட தேர்தலில் போட்டியிட்ட தேர்தல் தொகுதி | தேர்தலில் போட்டியிட்ட வேட்பாளர்களின் எண்ணிக்கை | தேர்தலில் போட்டியிட்ட கட்சிகளும் அவை நிறுத்தி வைத்த வேட்பாளர்களின் எண்ணிக்கையும் | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | காங்கிரஸ் | ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் | ஹரிஜன லீக் | இந்து மகா சபை | கட்சிசார்பற்ற வேட்பாளர் (சுயேச்சைகள்) |
| ஆக்ரா நகரம் | 11 | 1 | 5 | 1 | 1 | 3 |
| அலகாபாத் நகரம் | 6 | 1 | 4 | இல்லை | இல்லை | 3 |
| அல்மோரா | 8 | 3 | இல்லை | இல்லை | இல்லை | 3 |
| மொத்தம் | 25 | 5 | 9 | 1 | 1 | 9 |

### பாகம் V - மத்திய மாகாணங்கள்

| முதல்கட்ட தேர்தலில் போட்டியிட்ட தேர்தல் தொகுதி | தேர்தலில் போட்டியிட்ட வேட்பாளர்களின் எண்ணிக்கை | தேர்தலில் போட்டியிட்ட கட்சிகளும் அவை நிறுத்தி வைத்த வேட்பாளர்களின் எண்ணிக்கையும் | | | |
|---|---|---|---|---|---|
| | | காங்கிரஸ் | ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் | ஹரிஜன லீக் | கட்சிசார்பற்ற வேட்பாளர் (சுயேச்சைகள்) |
| நாகபுரி மற்றும் | | | | | |
| சக்கோலா | 5 | 1 | 2 | 1 | 1 |
| ஹிங்கண்காட் | 6 | 1 | 2 | 1 | 2 |
| பந்தரா | 5 | 1 | 3 | 1 | இல்லை |
| யோத்மால் | 6 | 1 | 2 | இல்லை | 3 |
| சிக்லி | 6 | 1 | 3 | இல்லை | 2 |
| மொத்தம் | 28 | 5 | 12 | 3 | 8 |

### பாகம் VI - பஞ்சாப்

| முதல்கட்ட தேர்தலில் போட்டியிட்ட தேர்தல் தொகுதி | தேர்தலில் போட்டியிட்ட வேட்பாளர்களின் எண்ணிக்கை | தேர்தலில் போட்டியிட்ட கட்சிகளும் அவை நிறுத்தி வைத்த வேட்பாளர்களின் எண்ணிக்கையும் | | |
|---|---|---|---|---|
| | | காங்கிரஸ் | யூனியனிஸ்ட்கள் | கட்சிசார்பற்ற வேட்பாளர் (சுயேச்சைகள்) |
| குர்கான் | 10 | .. | 1 | 9 |
| கர்னால் | 10 | 1 | .. | 9 |
| அம்பாலா | 8 | .. | .. | 8 |
| ஹோசியாப்பூர் | 9 | 1 | 1 | 7 |
| லூதியானா | 10 | 1 | .. | 9 |
| லயால்பூர் | 6 | .. | .. | 6 |
| ஜலந்தர் | 6 | 1 | 1 | 4 |
| மொத்தம் | 59 | 4 | 3 | 52 |

## அட்டவணை III

முதல்கட்டத் தேர்தலில் போட்டியிட்ட பல்வேறு கட்சியினர் பெற்ற வாக்குகள் - மாகாணங்கள் வாரியாக.

| கட்சியின் பெயர் | ஒவ்வொரு கட்சியும் பெற்ற வாக்குகள் | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | சென்னை | | பம்பாய் | | வங்காளம் | | ஐக்கிய மாகாணங்கள் | | மத்திய மாகாணங்கள் | | பஞ்சாப் | |
| | மொத்தம் | % | மொத்தம் | % | மொத்தம் | % | மொத்தம் | % | மொத்தம் | % | மொத்தம் | % |
| 1.காங்கிரஸ் | 27,838 | 33 | 5,333 | 14 | 56,848 | 32.7 | 4,101 | 41.8 | 1,131 | 107 | 8,298 | 17.6 |
| 2. ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளனம் | 30,199 | 36 | 28,489 | 74 | 21,129 | 12.2 | 3,093 | 30.5 | 8,685 | 82.8 | இல்லை | 53 |
| 3. சுயேச்சைகள் | 4,648 | 4.5 | 3,814 | 10 | 83,869 | 47 | 1,773 | 18.8 | 5551 | | 24,618 | |
| 4. ஹரிஜன் லீக் | இல்லை | | இல்லை | | இல்லை | | 370 | | 113 | | இல்லை | |
| 5. இந்து மகாசபா | இல்லை | | இல்லை | | 760 | | 4552 | | இல்லை | | இல்லை | |
| 6. யூனியனிஸ்டுகள் | இல்லை | | இல்லை | | இல்லை | | இல்லை | | இல்லை | | 13,521 | |
| 7. கம்யூனிஸ்டுகள் | 20,814 | 25 | இல்லை | | 10,049 | 5.8 | இல்லை | | இல்லை | | இல்லை | |
| மொத்தம் | 83,499 | | 37,636 | | 1,72,655 | | 9,789 | | 10,480 | | 46,437 | |

## அட்டவணை IV

### இந்தியாவின் முழுவதிலும் முதல் கட்ட தேர்தல்களில் பதிவான வாக்குகளின் பகுந்தளிப்பும், காங்கிரஸுக்கும் காங்கிரஸ் அல்லாத கட்சிகளுக்குமிடையே அவற்றின் பங்களிப்பும்

| முதல்கட்டத் தேர்தலில் இந்தியா முழுவதிலும் பதிவான மொத்த வாக்குகள் | காங்கிரஸ் கட்சிகளுக்கு சாதகமாக | | | | காங்கிரஸ் அல்லாத கட்சிகளுக்குச் சாதகமாக (ஆதரவாக) | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | காங்கிரஸ் | ஹரிஜன் லீக் | மொத்தம் | % | ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் | சுயேச்சைகள் | இந்து மகா சபா | கம்யூனிஸ்டுகள் | யூனியனிஸ்டுகள் | தீவிர ஜன நாயகக் கட்சி | மொத்தம் | % |
| 3,59,532 | 1,03,449 | 483 | 1,03,932 | 28 | 91,595 | 1,19,273 | 1,212 | 30,863 | 13,521 | 136 | 2,56,600 | 72 |

## அட்டவணை V

முதல்கட்ட தேர்தல்களில் பல்வேறு மாகாணங்களில் வெற்றிபெற்ற வேட்பாளர்களின் எண்ணிக்கை அவற்றின் கட்சி இணைப்புக்கு ஏற்ப பிரிக்கப்பட்டுள்ளன.

| கட்சியின் பெயர் | மதராஸ் | பம்பாய் | வங்காளம் | ஐக்கிய மாகாணங்கள் | மத்திய மாகாணங்கள் | பஞ்சாப் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1.காங்கிரஸ் | 10 | 3 | 12 | 4 | 5 | 4 | 38 |
| 2. ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் | 24 | 5 | 6 | 5 | 11 | இல்லை | 51 |
| 3. சுயேச்சைகள் | 3 | 4 | 36 | 2 | 3 | 21 | 69 |
| 4. இந்து மகாசபா | இல்லை | இல்லை | 1 | 1 | 1 | | 3 |
| 5. ஹரிஜன் லீக் | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | - | - |
| 6. கம்யூனிஸ்டுகள் | 3 | இல்லை | 1 | இல்லை | இல்லை | - | 4 |
| 7. தீவிர ஜனநாயகக் கட்சி | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | - | - |
| 8. யூனியனிஸ்ட்டுகள் | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | 3 | 3 |
| மொத்தம் | 40 | 12 | 56 | 12 | 20 | 28 | 168 |

# 16

# மற்ற எவரையும் விட நான் மிகச்சிறந்த தேசியவாதி

''நீதி மற்றும் மனித நேய லட்சியத்துக்காகப் போராடும் படியும் தங்களுக்கு எதிராக செய்யப்பட்ட சூழ்ச்சிகளையும் சதியை யும் அம்பலப்படுத்தும் படியும் தமது மக்களுக்கு இப்பொழுது டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர் ஒரு அறைகூவல் விடுத்தார். தமது மக்களின் உரிமைகளையும் உணர்வுகளையும் உறுதிப்படுத்த இதுதான் கடைசிச் சந்தர்ப்பம் என்பதை அவர் அறிவார்; ஏனெனில் சுதந்திர இந்தியா தனது பழைய பாரம்பரியங்களுக்குத் திரும்பி செல்லும் என்றும் தமது மக்கள் வறுமைக்கு ஆளாக்கப்பட்டு, அலட்சியப்படுத்தப்பட்டு, சமுதாயத்திலிருந்தும் பொதுப் பணி களிலிருந்தும் தூக்கி எறியப்படுவர் என்றும் அவர் அஞ்சினார்.

ஜூன் 29ம் தேதி இடைக்கால அரசாங்கம் (care-taker government) அறிவிக்கப்பட்டது; பிரிட்டிஷ் தூதுக்குழு மற்ற விவகாரங் களைத் தீர்த்து வைக்கும் பொறுப்பை வைஸ்ராய்க்கு விட்டுவிட்டு லண்டனுக்குப் புறப்பட்டுச்சென்றது

பம்பாய் சட்ட சபையின் புனா தொடர் கூட்டத் துவக்கத்தைக் குறிக்கும் வகையில் 1946 ஜூலை 15ல் போராட்டம் துவங்கியது.

1946 ஜூலை 16ம் தேதி ஏ.பி.ஏ. செய்தி நிறுவனத்திற்கு அளித்த பேட்டியில் பின்வருமாறு கூறினார். டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர்.

**''மற்ற எவர் எவ்வளவு விரும்புகிறார்களோ அந்த அளவுக்கு நமது நாடு முன்னேற வேண்டும் என்று நாங்களும் விரும்பு கிறோம். அதற்குத் தடையாக இருக்க நாங்கள் விரும்பவில்லை. நாங்கள் விரும்புவதெல்லாம், எதிர்கால இந்தியாவில் எங்கள் நிலை பாதுகாக்கப்பட வேண்டும் என்பதுதான்.''**

''இதற்காக, மே 16ம் தேதி பிரிட்டிஷ் ஆலோசனைகளுக்கு எதிராக எந்த மாதிரியான போராட்டத்திலும் நாங்கள் கலந்து கொள்வோம். பிரிட்டனுக்கு எதிராக முஸ்லீம் லீக் எந்த நேரடி

நடவடிக்கையைத் துவங்கினாலும் - இப்பொழுது சீக்கியர்கள் எடுத்த நிலையை நான் முற்றிலுமாக ஆதரிக்கிறேன் - தங்கள் நடவடிக்கைக்கு எங்கள் ஆதரவை அவர்கள் பெறுவார்கள்''

அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் பிரதிநிதிகளால் புனாவில் இப்பொழுது நடத்தப்படும் சத்தியாகிரகம் இறுதியில் 1942 ஆகஸ்ட் மாதம் காங்கிரஸ் துவக்கிய போராட்ட உருவத்தைபோல் ஒரு நாடு தழுவிய போராட்டமாக ஆகும் என்று அவர் எச்சரித்தார்.

''இது எங்கள் போராட்டத்தின் துவக்கமே'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். ''காங்கிரஸ் இயக்கத்தின் உருவைப் போல் போராட்டம் எடுக்கும் நிர்ப்பந்தம் ஏற்படுத்தப்பட்டால், ஆகஸ்ட் கலவரங்களின்போது காங்கிரஸால் செய்யப்பட்ட ஒவ்வொரு விஷயத்தையும் நாமும் செய்வோம்''

''கடந்த 28 ஆண்டுகளாக ஷெட்யூல்டு வகுப்பினருக்கு பிரிட்டிஷ் அரசாங்கம் அளித்த எல்லா விதமான வாக்குறுதியை யும் உடைத்ததற்கு எதிரான கண்டனம் என்று ஷெட்யூல்டு வகுப் பினரின் ஆர்ப்பாட்டங்களை வர்ணித்தார் டாக்டர் அம்பேத்கர்.

''அரசியல் சாசனத்தில், ஒரு சிறுபான்மையினருக்கு உரிய பாதுகாப்புகளை அடைந்தாலொழிய மற்ற இடத்தில் வேறு ஒரு உருவில் போராட்டம் தொடரும். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நியாயமற்ற ஆலோசனைகளுக்கு எதிராக நாடு தழுவிய போராட் டத்தை மாகாணங்கள் நடத்த அது சரியான நேரமாகும்''

இந்த ஆர்ப்பாட்டங்களை நடத்துவதில் அவை எந்த உரு வத்தில் நடத்த வேண்டும் என்பது பற்றி தாங்கள் மாகாணங்களுக்கு ஏதாவது ஆணை பிறப்பித்துள்ளாரா எனக் கேட்டபோது டாக்டர் பதிலளித்தார் :''எந்த போராட்ட உருவத்தை கையாளுவது என்பதை தீர்மானிக்கும் பொறுப்பை மாகாணங்களுக்கே நாம் விட்டுவிடு வோம். இந்த விஷயங்களையெல்லாம் தத்துவார்த்த ரீதியில் விவாதிக்க முடியாது. ஒவ்வொரு மாகாணத்திற்கும் அதன் சொந்தப் பின்னணி உள்ளது; ஒரு மாகாணத்திற்கு பயனளிப்பதாக இருக்கும் போராட்ட உருவம் மற்றதற்கு பொருத்தமானதாக இல்லாமல் போகலாம்''

சம்மேளனத்தின் நோக்கம் பூனாவில் சத்தியாகிரகம் நடத்த சிறு குழுக்களை அனுப்புவது என்ற இன்றைய உருவத்தில் புனாவில் ஆர்ப்பாட்டம் தொடரும் என்றார் டாக்டர் அம்பேத்கர். ' 'புனாவில் பெரிய அளவிலான போராட்டத்திற்கு பிரதான கஷ்டத்தை அளிப்பது ரேஷன் முறைதான்'' மேலும் டாக்டர் அம்பேத்கர் கூறினார் ''இல்லையெனில், நாங்கள் ஒரு மிகப் பெரிய போராட்டத்தை நடத்தியிருப்போம்''

அடுத்து வரும் காலத்தில், சத்தியாகிரகத்தை நடத்த அவர் தற்காலிகமாகத் திட்டமிட்டுள்ளாரா என்று கேட்டதற்கு, ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத் தலைவர் இவ்வாறு பதிலளித்தார்: ''படைத் தளபதி போர்க்களத்தில் இருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. நம்பிக்கை வாய்ந்த துணைத் தளபதிகள் என்னிடம் உள்ளனர். எனவே அவர்கள் போராட்டத்தைக் கவனித்து கொள்வர். நான் (பங்குபெற வேண்டும்) இருக்க வேண்டுமென்ற நிலைமை அதன் வளர்ச்சியில் ஏற்பட்டால் நான் களத்தில் இருப்பேன்''.

புனாவிலிருந்து தினம் அனுப்பப்படும் எனது சொந்த தூதுவர் மூலம் போராட்டம் பற்றி மிக சமீபத்திய எல்லாச் செய்திகளையும் நான் பெறுகிறேன்''

## காந்தியிடமிருந்து அழைப்பு இல்லை

''விஷயங்களை நேரில் கண்டறிய'' தாம் ஞாயிற்றுக் கிழமை புனா செல்ல தற்காலிகமாகத் திட்டமிட்டுள்ளதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். விவகாரத்தைத் தீர்த்து வைப்பதற்காக பேச்சு வார்த்தைகளைத் துவக்க திரு. காந்தியிடமிருந்தோ அல்லது உயர் மட்ட காங்கிரஸ் தலைவர்களிடமிருந்தாவது தாம் எந்த அழைப்பையும் பெறவில்லை என்றும் கூறினார்.

அவர் மேலும் கூறினார், சம்பந்தப்பட்ட கட்சிகளுடன் பேச்சு வார்த்தைகளைத் துவக்க இன்னமும் சம்மேளனம் விரும்புகிறது என்றார். ''ஷெட்யூல்டு வகுப்பினரைப் புறக்கணிக்க பிரிட்டிஷ் அமைச்சர்கள் ஒப்புக் கொண்டார்கள் என்ற பிரதான அடிப்படையின் பெயரில்தான், பிரிட்டிஷ் அமைச்சரவைக் குழுவின் நீண்டகால ஆலோசனைகளை திரு.காந்தி ஒத்துக் கொண்டார் என்பதை இந்த நாட்டிலுள்ள ஷெட்யூல்டு வகுப்பினர் நினைக்கிறார்கள் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்''

நீண்ட கால ஆலோசனைகள் கயமைத்தன்மை வாய்ந்ததாக இருந்தாலும் - இது பற்றி காங்கிரஸ் தலைவர்களே சமீபத்தில் பேசியுள்ளனர் - அவைதான் மிகப் பெருமளவு சாதகமானவை என்று v , .PÕ¢v Ps hÕ°. PÕ[ Ø µø é öÁ ß ëÓk ˝ £ uØ PÕP (win over) ஷெட்யூல் வகுப்பினரைத் தியாகம் செய்ய பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்புக் கொண்டது; இது அப்பட்டமான நம்பிக்கைத் துரோகம் என்று தாம் குற்றம் சாட்டுவதாக அவர் உறுதிபடக் கூறினார்.

''எவர் ஒருவர் எவ்வளவு விரும்புகிறாரோ அந்த அள வுக்கு நாடு முன்னேற வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். அதற்குத் தடங்கலாக நிற்க நாங்கள் விரும்பவில்லை. நாங்கள் விரும்புவதெல்லாம், எதிர்கால இந்தியாவில் எங்கள் நிலை பாதுகாக்கப்பட வேண்டும் என்பதுதான்''

புனாவில் அஹிலாஸ்ரமத்தில், 1946 ஜுலை 21ம் தேதி தீண்டத்தகாதவர்களின் கூட்டம் கூட்டப்பட்டது. கூட்டத்திற்கு பின்பு, ஒரு பத்திரிகையாளர் மாநாட்டில் டாக்டர் அம்பேத்கர் பேசினார். அந்த பத்திரிகையாளர் மாநாட்டைப் பற்றிய செய்தி பின்வருமாறு

- ஆசிரியர்கள்.

## ஷெட்யூல்டு வகுப்பினரின் எதிர்காலம்: திட்ட வரைவை (Blue Print) அளிக்கும்படி காங்கிரஸ் கோரப்பட்டது.

இன்று புனாவில் பத்திரிகையாளர் மாநாட்டில் உரையாற்றிய டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், இந்தியாவின் எதிர்கால அரசியல் சாசனத்தில் 6 கோடி தீண்டத்தகாதவர்களின் நலன்களைப் பாதுகாக்க காங்கிரஸ் உத்தேசித்துள்ளதை ஒரு பகிரங்கப் பிர கடனத்தில் வெளியிடுமாறு அவர்களைக் கோரினார். அதற்கான திட்டவரைவை (Blue-print) க் கேட்டார்; பொதுப்படையான வாக் குறுதிகள் அல்ல.

ஷெட்யூல்டு வகுப்பினர் தங்களது நியாயமான அரசியல் உரிமைகளைப்பெற புனாவில் துவங்கப்பட்ட சத்தியாக்கிரகம் நாடு தழுவிய போராட்டத்தின் துவக்கமே இது. புனாவில் நடைபெற்று வரும் சத்தியாக்கிரகம் உயர்வான தார்மீக மட்டத்தில் நடைபெற்று வருகிறது; ஏராளமான ஊழியர்களின் அகிம்சை நடவடிக்கை தம்மை

'சத்தியாக்கிரகத்தின் பட்டதாரி' என்று கூறிக்கொள்ளும் திரு. காந்திக்கே கூட ஒரு பாடத்தை அளிக்கும். எனினும், தார்மீக ஆதாரங்கள் தீர்ந்துவிடும்போது, தங்கள் கண்டனத்தைத் தெரிவிக்க ''வேறு முறைகளை'' அவர்கள் பார்ப்பார்கள் என்ற எச்சரிக்கையையும் விடுத்தார்.

''பம்பாய் அரசாங்கத்திற்கு எதிராக அரிஜனங்கள் என்ன வைத்திருக்கிறார்கள்?'' என்று பிரதம மந்திரி திரு.பி.ஜி.கெர் கேட்டதற்கு டாக்டர் அம்பேத்கர் ஆச்சரியம் கொண்டார். பதில் எளிமையானது என்றார்.

## அதிகாரத்திற்கு வாரிசு

இந்நாட்டில் பிரிட்டிஷ் அதிகாரம், செல்வாக்கு மற்றும் இறையாண்மைக்கும் வாரிசுகள் இரு சமூகத்தினரே - முஸ்லிம்களும் சாதி இந்துக்களுமே - என்று அமைச்சரவைத் தூதுக்குழு முடிவு செய்தது. உத்தேசிக்கப்பட்டுள்ள அரசியல் நிர்ணயசபையில், எல்லா விஷயங்களும் சாதி இந்துக்களின் அதீதப் பெரும்பான்மையால் மட்டுமே முடிவு செய்யப்படப் போகின்றன. இந்தியாவை விட்டு வெளியேறுவது என்று பிரிட்டிஷ்காரர்கள் மக்கள் முடிவு செய்து விட்டனர். அவர்களின் அதிகாரத்தை வாரிசுகள் என்ற முறையில் சாதி இந்துக்களும் முஸ்லிம்களும் பெறுவர். 6 கோடி ஷெட்யூல்டு வகுப்பினரின் பாதுகாப்பிற்கு என்ன செய்ய உத்தேசித்துள்ளனர் என்று சாதி இந்துக்களை கேட்கும் உரிமை அவர்களுக்கு (ஷெட்யூல் வகுப்பினருக்கு) இல்லையா?

பம்பாய் அரசாங்கமும் மற்றும் பம்பாய் சட்ட சபையும் காங்கிரஸின் அங்கம்தான்; எனவே காங்கிரஸ் கொள்கைக்கு எதிராக கண்டனம் தெரிவிப்பதை நோக்கமாகக் கொண்டதே சத்தியாக்கிரகம்.

முஸ்லிம் மாகாணங்களாகிய பஞ்சாபிலும் வங்காளத்திலும் சத்தியாகிரகத்தை நடத்த தமக்கு விருப்பம் எதுவும் இல்லை என்றார் டாக்டர் அம்பேத்கர். காரணம் ''முஸ்லிம்களோடு எங்களுக்கு எந்தச் சண்டையும் இல்லை. எங்களது நலம் பாதுகாக்கப்படும் என்று அவர்கள் (வாக்களித்து) உறுதியளித்துள்ளனர்.

சத்தியாக்கிரக இயக்கம் சோர்வு உணர்வால் தூண்டப்பட்டது என்பதை கோபத்துடன் மறுத்த டாக்டர் அம்பேத்கர், சென்ற தேர்தலில் ஷெட்யூல்டு வகுப்பினர் நூறு சதவிகிதம் வென்றனர்.

காங்கிரஸ் நிறுத்திய வேட்பாளர்களுக்கு ஷெட்யூல்டு வகுப்பினர் வாக்களித்திருந்தால், சோர்வு இருந்திருக்க முடியும். ஷெட்யூல்டு வகுப்பினரில் 4 சதவிகிதத்தினர்கூட காங்கிரஸ் அரிஜனங்களுக்கு வாக்களிக்கவில்லை என்பதை புள்ளி விவரங்கள் அடிப்படையில் நிரூபிக்கத் தயார் என்றார்; காங்கிரஸ் அரிஜனங்களில் வெற்றி பெற்றவர்கள் சாதி இந்துக்களின் வாக்குகளைக் கொண்டே. ஒரு தோல்வி மனப்பான்மையால் அவர் பாதிக்கப்படவில்லை. அவரது சம்மேளனத்தின் பின்னே 90 சதவிகித ஷெட்யூல்டு வகுப்பினர் உள்ளனர் என்பதால் அது வெற்றி.

## புனா ஒப்பந்தம்

சட்ட சபைகளுக்கு ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவதைத் தடுத்த புனா ஒப்பந்தம் அவசியம் போகவேண்டும் (ரத்து செய்யப்பட வேண்டும்) 6 கோடி தீண்டத்தகாதவர்களின் வாக்குரிமை பறிக்கப்படுவதில் அது முடிந்தது. சர்வதேச சட்டத்தின் படிகூட, எந்த ஒப்பந்தமும் இறுதியானதோ புனிதமானதோ அல்ல. அவர்களின் லட்சியத்திற்கு தீங்காய் இப்பொழுது ஆகிவிட்டதால், அதை மாற்றியமைப்பதற்கு போராட ஷெட்யூல்டு வகுப்பினருக்கு உரிமை உண்டு.

இன்று மாலை பம்பாய் திரும்பும் முன், ஷெட்யூல்டு வகுப்பினர் மிகத் திரளாகக் கூடியிருந்த புனாவில் நடந்த பொதுக் கூட்டத்தில் உரையாற்றினார். போராட்டம் கடுமையாக இறுதி வரை தொடர்ந்து நடைபெறும் என்று கூறினார்.[1]

இதுவரை, 569க் குறையாத ஷெட்யூல்டு வகுப்பினரின் ஊழியர்கள், பூனா சத்தியாகிரகம் சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டு தண்டிக்கப்பட்டனர்''

## நாங்கள் கேட்பது நீதியும் நியாயமும்தான்

பம்பாய், புதன்கிழமை*

தம்மிடம் பல அதிசயங்களை சட்டைப் பைக்குள் வைத்திருப்பதாக 'சரியான' நேரம் வரும்போது, ''பிரிட்டிஷ் அதிகாரத்தின்

1. 'டைம்ஸ் ஆப் இந்தியா', 1946 ஜூலை 22ம் தேதி இதழ் மறு பதிப்பு - கைர்மோடு, தொகுப்பு 8, ப. 96-98

★ 1946 ஜூலை 26

வாரிசுகளான இந்து காங்கிரஸ்'' கோட்டையின்மீது மேலும் பயங்கர மான தார்மீக ஆயுதங்களைப் பிரயோகிக்கப் போவதாகவும் அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத் தலைவர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் ''பம்பாய் கிரானிக்கில்'' பத்திரிகை நிருபரிடம் 60 நிமிடம் பேசிக் கொண்டிருக்கும்போது கூறினார்.

## ஏளனக் காட்சியல்ல

டாக்டர் அம்பேத்கர் கூறினார்: ''எனது முழு பலத்தை நான் இன்னமும் காட்டவில்லை. புனாவில் நாங்கள் ஏளனக் (mock) காட்சியை நடத்துவதாகக் கற்பனை செய்யாதீர்கள் போராட் டத்தின் துவக்கமே இது. நாளாக நாளாகக் கடுமையானதாகவும் கட்டுக்கடங்காததாகவும் வளர்ந்து முடிவாக நாடு முழுவதையும் அதிர வைக்கும்.''

அவரது ஆயுதங்களின் தன்மையை எடுத்துக்கூற ஒரு மாதிரியை குறிப்பிட்டு, அவர் கூறினார் ''உதாரணத்திற்கு, நானும் எனது மக்களும் சாகும்வரை உண்ணாவிரதம் மேற்கொள்ளலாம்'' பம்பாய் பிரதம மந்திரி ரேஷன் வழங்க வாக்களித்தால், புனாவை நோக்கி நடைபோட ஒரு லட்சம் 'சத்தியாக்கிரகிகள்' தயாராக உள்ளனர். விரைவில் போராட்டம் அகில இந்திய வடிவை எடுக்கும். அவரது மக்களின் ''பிரமாண்டமான சாத்தியப்பாடு களுக்கு (சக்திகளுக்கு) புனா ஒரு லேசான தோற்றம் மட்டுமே''.

## காங்கிரஸுக்கு நன்மை புரிபவர்

ஒரு விதத்தில் தாம் காங்கிரஸுக்கு நன்மை செய்பவரே என்று உரிமைகோரும் டாக்டர் அம்பேத்கர் அந்த ஸ்தாபனத்தை முற்றிலுமாக செயலற்றதாக ஆக்குவது தமது சக்தியில் உள்ளது என்றார். ''நானும் எனது சமூகமும் முஸ்லீம்களாக மாற முடிவு செய்ய முடியாதா? ''திரு. ஜின்னாவின் மதத்தை ஏற்றுக் கொண்டால், எவ்வகையிலும் நான் இழந்தவனாக மாட்டேன்; மற்றும், நிர்வாகக் கவுன்சிலுக்கு ஒரு முஸ்லீம் உறுப்பினராக என்னை நியமிக்கக்கூடும். அந்தத் தீவிரமான நடவடிக்கையை நான் எடுக்க வில்லை; ஏனெனில், முழு பேரழிவிலிருந்து காங்கிரஸைக் காப்பாற்ற விரும்புகிறேன்''.

''இத்தகைய கடுமையான நடவடிக்கையில் ஏன் நான் இறங்கவில்லை?'' என்று கேட்டு தொடர்ந்தார் டாக்டர் அம்பேத்கர் ''அது னெனில் காங்கிரஸுக்கு மற்றொரு சந்தர்ப்பத்தை அளிக்க நான் விரும்புகிறேன். நாம் துவக்கியுள்ள போராட்டம் எனது கட்சி குறைந்தபட்ச எதிர்ப்பு என்ற கொள்கையை எடுத்துள்ளது''.

பொருத்தமான நேரத்தில் தாமே சத்தியாக்கிரகப் போராட்டத்தில் பங்கெடுக்கப் போவதாகவும் கூறினார். இப்பொழுது ராணுவத் தளபதி படைத் தளபதிகளின் ஒரு சிறிய மையக் கரு மட்டுமே (nucleus) உயர் தளபதிகளும் அவரது ஆயிரக்கணக்கான ஆதரவாளர்களின் நம்பிக்கையும் உள்ள போது தாமே கைதியாக ஆவது அவசியமில்லை என்று டாக்டர் அம்பேத்கர் கருதுகிறார். ''ஆனால் நான் சிறை வாழ்க்கையைக் கண்டு பயப்படவில்லை'' என்றும் பிரமிக்கத்தக்க மற்றும் திட்டமிடாத நடவடிக்கையில் நான் நம்பிக்கை வைக்கவில்லை'' என்றும் கூறுகிறார்.

எத்தகைய திட்ட வரைவை அவர் காங்கிஸிடமிருந்து எதிர்பார்க்கிறார் என்று கேட்டதற்கு டாக்டர் பதிலளித்தார். ''கடந்த இருபது ஆண்டுகளில் காங்கிரஸ் ஆக்கப்பூர்வமாக நமக்கு என்ன செய்துள்ளது? பிரிட்டிஷ் அதிகாரம், மற்றும் ஆதிக்கத்துக்கும் இப்பொழுது அவர்கள் வாரிசுகள், புதிய அரசியல் சாசனத்தின் கீழ் நமக்கு என்ன செய்ய அவர்கள் உத்தேசித்துள்ளனர் என்று அவர்களைக் கேட்க நமக்கு உரிமை உண்டு. தெளிவற்ற வாக்குறுதிகள் மீதும் வெற்றுரைகள் மீதும் நாம் நம்பிக்கை வைப்பதில்லை. நியாயமாகவும் நேர்மையாகவும் நம்மை நடத்தப் போவது பற்றிய அவர்களின் (காங்கிரஸின்) நேர்மை பற்றிய ஸ்தூலமான ருசுக்களை நாங்கள் விரும்புகிறோம். வார்த்தை ஜாலங்களில் கற்பனை உலகத்திலிருந்து இறங்கி யதார்த்தத்திற்கு வரட்டும்''

## திருப்திகரமான திட்ட வரைவுக்கு கோரிக்கை

''முற்றிலும் திருப்திகரமான திட்ட வரைவை காங்கிரஸ் அளித்தால், அந்த அமைப்பில் சேரும்படி தங்களை பின்பற்றுபவர்களுக்கு நீங்கள் அறைகூவல் விடுக்கத் தயாரா?'' என்று அடுத்து டாக்டர் அம்பேத்கர் கேட்கப்பட்டார்.

''நிச்சயமாக இல்லை. காங்கிரஸைவிட சமூக ரீதியிலும் அரசியல் ரீதியிலும் நாங்கள் அதிகம் தீவிரமாக இருக்கிறோம்.

ஏழையிலும் ஏழைகளை நாங்கள் பிரதிபலிக்கிறோம். நாங்கள் மண்ணின் மைந்தர்கள், உண்மை மாந்தர். எனவே காங்கிரஸ் போன்ற போலித்தனமான சோஷலிச ஸ்தாபனத்தில் சேருவதை எண்ணிப் பார்க்க முடியாது''.

எனினும், ஷெட்யூல்டு வகுப்பினருக்கு காங்கிரஸ் உண்மையிலேயே நல்லது செய்தால் நாட்டின் 'உண்மையான' புனரமைப்புக்கான போராட்டத்தில், தயக்கமின்றி தமது ஒத்துழைப்பை அளிக்கத் தயார் என்றும் கூறினார்.

இந்தப் பிரச்னையில் முஸ்லீம் லீக்கிலிருந்து கட்சிக்கு ஏதாவது வாக்குறுதிகள் அளிக்கப்பட்டுள்ளதாக புனா பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் தாம் கூறியதாகச் சொல்லப்பட்டதை அவர் மறுத்தார். முஸ்லீம் மாகாணங்களில் சத்தியாக்கிரக இயக்கத்தை துவக்குவதற்கு அவர் விரும்பாததற்குக் காரணம் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு முஸ்லீம்கள் எந்தத் தீங்கையும் விளைவிக்கவில்லை.

## வாக்குகளை பெற்றாலும் இடங்கள் இழக்கப்பட்டன

சமீபத்தியப் பொதுத் தேர்தல்களில் ஷெட்யூல்டு வகுப்பினரின் வேட்பாளர்களின் தலைவிதி பற்றிக் குறிப்பிட்டு, உண்மையில் எந்தப் பலப் பரீட்சையும் இல்லை என்றார். அவரது ஆட்கள் எல்லா வாக்குகளையும் வென்றனர். ஆனால் இடங்களைப் பிடிக்கவில்லை; ஏனெனில், இந்து வாக்குகள் இடம் பெறும் சந்தர்ப்பத்தை மூழ்கடித்தன.

''எங்களது சுதந்திரத்திற்காகவும் ஜீவிதத்திற்காகவும் நாங்கள் போராடிக் கொண்டிருக்கிறோம்'' என்று உணர்ச்சியுடன் இறுதியில் குறிப்பிட்டார். ''நாங்கள் ஒரு பெரிய சமூகம், பல பத்தாண்டுகளாக அடிப்படை நீதி மறுக்கப்பட்டோம். நாங்கள் மோசமாக நடத்தப்பட்டோம்; எங்களது நியாயமான கோரிக்கைகள் அவமரியாதையுடன் தூக்கியெறியப்பட்டன. எந்த பக்கத்திலிருந்தும் எந்த அனுதாப உணர்வும் எங்களை அணுகியதில்லை. நாங்கள் கேட்பது என்னவெனில் நீதியும் நேர்மையும், எங்களுக்கு அது கிடைக்கட்டும். இல்லையெனில், கடவுளே! விளைவுகள் யாராலும் கற்பனை செய்ய முடியாத பயங்கரமானதாக இருக்கும்''.[1]

1. பாம்பே கிரானிக்கில், தேதி 1946 ஜூலை 25

## பாபா சாகேப் தலைமை தாங்கத் தயார்

அஸ்ஸோசியேடட் பிரஸ் ஆப் இந்தியாவுக்கு அளித்த பேட்டியில், ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் சத்தியாகிரகிகளின் எண்ணிக்கையை சிறிய எண்ணிக்கைக்குள் வைத்திருப்பது அவர்களுக்கு உணவளிப்பதில் உள்ள கஷ்டத்தால்; எனவே எண்ணிக்கையை மட்டுப்படுத்திக் கொள்ள வேண்டிய நிர்பந்தம் சம்மேளனத்திற்கு ஏற்பட்டுள்ளது என்று பீம்ராவ் அம்பேத்கர் கூறினார்.'' இந்தியாவின் எல்லா பாகங்களிலிருந்தும் பர்மா, மலேசியாவிலிருந்தும் கடிதங்களும் தந்திகளும் புனா சத்தியாகிரகத்தில் கலந்து கொள்ள வருவதாக எங்களுக்கு வந்து கொண்டிருக்கின்றன. ஆனால், உண்மையான கஷ்டம் என்னவெனில், அவர்களுக்கு உணவும் இருப்பிடமும் அளிப்பதுதான். உணவுபங்கீட்டு முறை (rationing) க் கஷ்டத்தால், இது சாத்தியமல்ல'' சட்ட சபை வட்டாரத்தில் மாவட்ட மாஜிஸ்ட்ரேட்டின் தடையை மீறி சிறு குழுக்களாக இன்று முதல் சத்தியாகிரகத்தில் இறங்குவார்கள். புனா முஸ்டி நபுநிதி அவர்களின் தேவையைக் கவனித்துக் கொள்ளும். இதை தவிர இதில் பங்கெடுப்பவர்கள் நான்கு ஐந்து நாள் ரேஷன்களை கொண்டு வரும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அதற்கு மேலாக, ஆண்கள் தங்களுடன் நான்கு ஐந்து நாட்களுக்கு ரேஷன் கொண்டுவரும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

எப்பொழுது தேவைப்பட்டாலும் அவர் அவர்களுக்குத் தேவைப்பட்டால் புனா செல்ல தாம் தயாராக இருப்பதாக இயக்க அமைப்பாளர்களிடம் தெரிவித்துள்ளார்.[1]

## லக்னோ, சத்தியாகிரகத்தைத் துவக்குகிறது

ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தில் 140க்கு மேற்பட்ட உறுப்பினர்கள் புனா ஒப்பந்தத்திற்கு எதிராக சத்தியாக்கிரகத்தில் இறங்கியபோது கைது செய்யப்பட்டனர்.

கைது செய்யப்பட்ட 140 சம்மேளன உறுப்பினர்களில் 80 பேர் கவுன்சில் இல்லத்தில் கைது செய்யப்பட்டனர். மற்றவர் நகரின் பல்வேறு பாகங்களிலிருந்து.

1. ஜெய்பீம், 1946 ஆகஸ்ட் 13, பக்கம் 7.

குற்றவியல் சட்டத்தின் 144 பிரிவின்படி காவலர்கள் கட்டுப்பாடுகளை நடைமுறைப்படுத்தினர்.

## சமாதானபூர்வமான எதிர்ப்பை ஷெட்யூல்டு வகுப்பினர் துவங்குகிறார்கள்

### பொதுச் செயலாளரின் அறிவிப்பு

ஷெட்யூல்டு வகுப்பினரை ஒரு தனிக் கூறாக இருப்பதை பொருட்படுத்தாமல் விட்டுவிட்டு அமைச்சரவைக் குழு தங்களுக்கு இழைத்த அநீதியை எதிர்த்து (வன்முறை - இல்லாத) ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளன உறுப்பினர்களும் அவர்களைப் பின் பற்றியவர்களும் சத்தியாகிரகத்தைத் துவங்குவார்கள்.

பம்பாய் சட்ட சபைக் கூட்டத் தொடர் துவங்குவதையொட்டி ஜுலை 15ம் தேதி புனாவில் கூட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள், ஊர்வலங்களை நடத்த புனா மாஜிஸ்ட்ரேட் விதித்துள்ள தடையை மீறி, கவுன்சில் ஹால் மற்றும் அரசாங்கச் செயலகம் ஆகியவை உள்ள ½ மைல் வட்டாரத்தில் (இயக்கம்) துவங்க இருக்கிறது.''

### பொதுச் செயலாளரின் விளக்கம்

ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் பொதுக் காரியதரிசி திரு.ராஜ்போஜ் இந்த முடிவை விளக்கி வெளியிட்ட அறிக்கையில் பின்வருமாறு கூறுகிறார். 1946 ஜுன் 4ம் தேதி பம்பாயில் அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளன நிர்வாகக் குழு தீர்மானப்படி அமைதியான எதிர்ப்புப் போராட்டத்தை நடத்தும் காலம் வந்துவிட்டது. இந்த நேரடி நடவடிக்கையை மேற்கொள்வதை விட இப்பொழுது வேறு மாற்று இல்லை. வரவிருக்கும் அழிவிலிருந்து ஷெட்யூல்டு வகுப்பினரைக் காப்பாற்ற இன்றுள்ள சூழ்நிலைமைகளில் ஒரு போராட்டம் தேவைப்படுகிறது.

திரு.ராஜ்போஜ் மேலும் கூறுகிறார் : ''ஷெட்யூல்டு வகுப்பினர் ஒரு தனி அரசியல் கூறு என்பதை அலட்சியம் செய்தும் அரசியல் பாதுகாப்புகளுக்காக டாக்டர் அம்பேத்கர் மற்றும் ராவ்பகதூர் என்.சிவராஜ் ஆகியவர்கள் முன்வைத்த கோரிக்கைகளை நிராகரித்ததன் மூலமும் பிரிட்டிஷ் அரசும் அதன் அறிக்கையும் நம்பிக்கைத் துரோகத்தைச் செய்கின்றன''. எனவே பிரிட்டிஷ்

அரசாங்கத்திற்கு எதிராக நேரடி நடவடிக்கை எடுப்பதற்கு சம்மேளனத்திற்கு அவசியமாகிறது. இந்த மோசமான விஷயத்தில், காங்கிரஸ் வகித்த விஷமத்தனமான பாத்திரத்தை அவர்கள் மறக்கவும் முடியாது. தான் பெரும்பான்மைக் கட்சி என்பதை காங்கிரஸ் தவறாக பயன்படுத்தியது என்றும் காங்கிரஸைத் தாஜா செய்யும் அக்கறையில் ஒரு தனி அரசியல் கூறு என்று ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அங்கீகாரம் மறுக்கும் நிர்பந்தத்திற்கு பிரிட்டன் உட்பட்டது என்றும் சம்மேளனம் தெளிவாகப் புரிந்து கொண்டுள்ளது. அமைச்சரவைத் தூதுக்குழு ஷெட்யூல்டு வகுப்பினருக்கு என்ன செய்ததோ அதற்கு காங்கிரஸ் சூழ்ச்சியே காரணம்; எனவே, காங்கிரஸுக்கு எதிராகவும் நடவடிக்கை எடுக்க சம்மேளனத்திற்கு கட்டாயமாகிறது''. ஒரு போராட்டத்தை நடத்தும் வழிமுறைகளைப் பற்றித் தீர்மானிக்கும் நடவடிக்கைக் குழு ஒவ்வொரு மாகாணத்திற்கும் அவை நடத்தவிருக்கும் போராட்டம் எத்தன்மை கொண்டிருக்க வேண்டும் என்பதை அவற்றிற்கு அறிவிக்கும் என்று திரு.ராஜ்போஜ் கூறுகிறார். மேலும் கூறுகிறார்: இதற்கிடையே, பம்பாய் மாகாண ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் பூனாவின் ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டின் தடையை மீறிப் போராட்டத்தின் முதல் அடியை ஜுலை 15ல் எடுத்து வைப்பதென முடிவு செய்தது. இந்த இயக்கத்தில் பங்குபெற விரும்புபவர்கள் எல்லோரும் புனாவில் உள்ள பம்பாய் மாகாண ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளன அலுவலகத்தில் தங்கள் பெயர்களைப் பதிவு செய்யுமாறு திரு.ராஜ்போஜ் அறைகூவி அழைக்கிறார்; அங்கு பொறுப்பு வகிப்பவர் தலைவர் பி.கே.கெயிக்வார்ட்.

## சத்தியாக்கிரகத்தின் நோக்கம் பற்றி பாபா சாகேப் விளக்குகிறார்

6 கோடி ஷெட்யூல்டு வகுப்பினரின் எதிர்காலத்தை (விதியை) எப்படி தீர்த்து வைக்கப் போகிறார்கள் என்பதை விளக்கி ஒரு திட்ட வரைவை காங்கிரஸ் வெளியிட வேண்டுமென்று கோரி டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் பத்திரிக்கைக்கு அளித்த ஒரு பேட்டியில் கோரியுள்ளார். ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் புனாவில் துவக்கிய சத்தியாக்கிரகத்தின் நோக்கம் பற்றிய கேள்விக்குப் பதிலளித்த டாக்டர் அம்பேத்கர் காங்கிரஸிடமிருந்து பெறுவதும் எதிர்கால இந்திய அரசியல் சாசனத்தில் ஷெட்யூல் வகுப்பினரின் நலன்களை பாதுகாக்க அவர்கள் திட்டம் என்ன என்று பகிரங்கமாக அறிவிக்க காங்கிரஸைக் கேட்டுக் கொள்வதும்தான் என்று அவர் விளக்குகிறார்[1]

1. ஜெய் பீம் 1946 ஆகஸ்ட் 13, ப.23

டாக்டர் அம்பேத்கர் கூறினார்: இந்தியாவில் பிரிட்டிஷ் அதிகாரத்திற்கும் செல்வாக்கிற்கும் இறையாண்மைக்கும் வாரிசுகள் இரண்டு சமூகங்கள் - முஸ்லிம்களும் சாதி இநதுக்களும் என்று சரியாகவோ தவறாகவோ பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக் குழு முடிவு செய்துவிட்டது. ஷெட்யூல்டு வகுப்பினர் அதை தவறு என்றும் அநீதியானது என்றும் கருதுகின்றனர். முஸ்லீம்களுடன் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு எந்தச் சச்சரவும் இல்லை; ஏனெனில் ஷெட்யூல்டு வகுப்பினரின் உரிமைகளைப் பாதுகாப்பதில் அவர்கள் நோக்கம் என்ன என்பதை ஒரு பிரகடனத்தை வெளியிட அவர்கள் தயாராக இருந்தனர். முஸ்லீம்கள் அதிகாரத்திலிருக்கும் மாகாணங்களில் எந்த சத்தியாக்கிரகமும் இருக்காது. எனினும், இந்த பிரச்னை பற்றி காங்கிரஸ் இதுவரை ஊமையாக இருந்து வருகிறது. அரசியல் நிர்ணய சபையில் காங்கிரஸ் நான்குக்கு மூன்று 3/4 பெரும்பான்மையில் இருக்கும். ஷெட்யூல் வகுப்பினரை பாதிக்கும் விஷயங்கள் மற்றும் உரிமைகள் பற்றி அவர்களின் பெரும்பான்மை வாக்குகள் மூலம் அவர்கள் முடிவு செய்வார்கள். எனவே தங்கள் கேள்விக்கு காங்கிரஸிடமிருந்து விடைபெற ஷெட்யூல் வகுப்பினருக்கு உரிமை உள்ளது.

பம்பாய் சர்க்காருக்கு ஷெட்யூல்டு வகுப்பினர் சிரமம் கொடுத்து வருகின்றனர் என்றால், அதற்குக் காரணம் அது காங்கிரஸ் யந்திரத்தின் ஒரு பாகமாகும் என்று கூறினார் டாக்டர் அம்பேத்கர். ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்திற்கு உள்ள தோல்வி உணர்வே இப்போதைய சத்தியாக்கிரகத்திற்கு தூண்டு கோல் என்று தமது அறிக்கையில் திரு.பி.ஜி.கெர் குறிப்பிடுகிறார். இயக்கத்திற்கு உள்நோக்கம் - அது பெரிதா அல்லது சிறிதா - கற்பிப் பதற்கு அவருக்கு என்ன உரிமை உள்ளது; இதற்குக் காரணம் சென்ற தேர்தலில் தோல்வி அடைந்ததுதான் என்று விளக்குகிறார்; ஆனால் அவரைப் பொறுத்தவரை, அரசியலிலும் பொது வாழ்விலும் பகிரங்கமாக நியாயப்படுத்த முடியாத எதையும் செய்ய மாட்டார். எனினும், ஷெட்யூல்டு வகுப்பினர் மனதில் தோல்வி உணர்வு ஏற்படுத்தப்பட்டுள்ளது என்று கூறுவது தவறு அவர்கள் 100 சத விகிதம் வெற்றி பெற்றனர். ஆனால் தேர்தல் தொகுதிகளை இழந் தார்கள். நமது வேட்பாளர்களுக்கு எதிராக வாக்களித்து காங்கிரஸ் வேட்பாளர்களுக்கு சாதகமாக வாக்களித்திருந்தால் தோல்வி மனப்பான்மை இருந்திருக்கலாம். அது நமக்கு நாசத்தை விளை வித்திருக்கும். சாதி இந்துக்கள் சார்பாக வெற்றிபெற்ற அபேட்ச கர்கள் பெற்ற வாக்குகள் 4 சதவிகிதத்திற்கு மேல் இல்லை. இந்தத்

தேர்தல்களில் நாம் தோல்வி அடைந்தோம் என்பதால் அவற்றை ஒவ்வொரு தடவையும் இழக்கப் போகிறோம் என்பதல்ல''.

ஷெட்யூல்டு வகுப்பினரின் கோரிக்கைகளைப் பற்றிப் பேசும் பொழுது, அவற்றில் ஒன்று புனா ஒப்பந்தத்தை ரத்து செய்வதாகும். அதற்கு எதிராக நாம் ஏன் கிளர்ச்சி செய்யக்கூடாது? உலகில் எந்த ஒப்பந்தமும் புனிதமானதல்ல. புனா ஒப்பந்தம் எந்த மக்கள் நல னுக்காகச் செய்யப்பட்டதோ அவர்களின் அரசியல் குடிமை உரிமை (வாக்களிக்கும் உரிமை) மறுக்கப்படுவதற்கு இட்டுச் சென்றது. ஆழ்ந்து சிந்தையின் அடிப்படையிலான ஒரு சமூகத்தின் கருத்தை மற்றொரு சமூகத்தால் செல்லுபடியாகாததாக்கப்படக் கூடாது. நாட்டில் எங்கெல்லாம் முதல்கட்டத் தேர்தல்கள் நடந்தனவோ, சம்மேளனத்தின் வேட்பாளரை எதிர்த்து எந்த காங்கிரஸ்காரரும் வெற்றி பெறவில்லை. ஆனால் பொதுத் தேர்தல்களில், அந்த சமூகம் தேர்ந்தெடுத்த வேட்பாளர்கள் நிராகரிக்கப்பட்டனர்; மற்றொரு கட்சியின் 'கையாட்களும், கைக்கூலிகளும்' மேலிடத் திற்கு வந்தனர். அதற்குக் காரணம் சாதி 'இந்து வாக்குகள் ஒரு சமூகத்தின் அரசியல் பாதுகாப்பிற்காகச் செய்யப்படும் ஏற்பாடு 'முற்றிலும் குறையில்லாததாகவும்' 'ஏமாற்றுக்காரர்களிடமிருந்து காக்கப்படுவதாகவும்' இருக்க வேண்டும்.

சாமான்ய மக்களின் நலன்களில் அக்கறை கொண்டுள் ளோர்கள் அனைவரும் ஷெட்யூல் வகுப்பினரில் சத்தியாக்கிர கத்தில் கலந்து கொள்ளும்படி டாக்டர் அம்பேத்கர் வேண்டுகோள் விடுத்தார். சுயராஜ்யம் என்றால் அவசியமாக எல்லோருக்கும் சுதந்திரம் என்பதாகாது. ஒரு சிறிய கும்பலுக்கு அதிகாரம் மாறலாம்; அவர்கள் சாமான்ய மக்களை, அவர்கள் முன்பு அனுபவித்ததற்கு மேலாக, கொடுமைக்கு உட்படுத்தப்படலாம். ''உதவி வருகிறதோ இல்லையோ, தார்மீக அடிப்படையில் மிகக் கடுமையான முடிவு வரை போராட்டத்தை நடத்த நாங்கள் தயார்'' என்று டாக்டர் அம்பேத்கர் பிரகடனப் படுத்தினார் ''தார்மீக ஆதாரங்கள் தீர்ந்துவிட்டால், மற்ற முறைகளை நாங்கள் கையாள்வோம்''[1]

''ஒரு மக்களின் சுதந்திரம், அதை அடைய கையாளப்படும் முறைகளின் புனிதத்தைவிட, மிக உயர்ந்தது''.

1. ஜெய்பீம், 1946 செப்டம்பர் 16.

கடுமையாக, இறுதிக் கட்டம் வரை போராட்டத்தை நடத்தும் படி தமது மக்களை அறைகூவி அழைத்தார். அம்பேத்கரின் உழைப்பு மற்றும் போராட்டத்தின் பயனைப் பெற்ற காங்கிரஸ் அரிஜன் தலைவர்கள் அம்பேத்கரின் போராட்டத்தை எதிர்த்துப் பேசினர்; அரிஜனங்களின் கோரிக்கைகளை எப்பொழுதும் எதிர்த்தவர்களுக்கு ஆதரவளித்தனர். தனக்கு நன்மை செய்த ஒருவரை எதிர்ப்பது போல் ஆகிறது (It was like barking at one's own benefactor)

இந்தச் சத்தியாக்கிரகத்தை குறிப்பிட்டு காந்தி அரிஜனில், அம்பேத்கரால் அரங்கேற்றப்பட்ட சத்தியாக்கிரகத்தை அரிஜன் பத்திரிகையில் நையாண்டி செய்வது அடங்கி இருந்தது என்று அம்பேத்கர் எழுதினார்.

சத்தியாக்கிரக இயக்கம் தொடர்ந்து 15 நாட்களுக்கு நடந்தது. அதன் நிர்ப்பந்தம் புனா சட்ட சபைக் கூட்டத் தொடரை முடிவுக்கு கொண்டுவரும்படி அரசாங்கத்தை நிர்ப்பந்தித்தது. அம்பேத்கருடன் சமரசம் செய்து கொள்வதன் அவசியத்தை காங்கிரஸ் தலைவர்கள் உணர்ந்தார்கள். பம்பாய் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் எஸ்.கே.பாட்டீல், டாக்டர் அம்பேத்கரை சித்தார்த் கல்லூரியில் சென்று பார்த்தார், அவர்கள் இருவரும், எம்.என்.ஜோஷி பின் தொடர, ஜூலை 27ல் சர்தார் பட்டேலைச் சந்தித்தனர். அரசியல் நிர்ணய சபையில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு பிரதிநிதித்துவம் அளிப்பது சம்பந்தமாகவும் புனா சத்தியாக்கிரகம் பற்றியும் அவர்களிடையே சுமார் ஒரு மணி நேரம் பேச்சுவார்த்தை நடந்தது. அவர்களால் எந்த ஒப்பந்தத்திற்கும் வரமுடியவில்லை என்று தோன்றுகிறது. ஏனெனில், ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரபல தலைவர்களான கெயிக்வாட் மற்றும் ராஜ்போஜ் தலைமையில், வார்தாவில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி நடத்திய கூட்டத்தை நோக்கி ஷெட்யூல்டு வகுப்பினரின் ஊர்வலம் சென்றது.

ஒரு தனிநபர் எவ்வளவு சிறந்தவராக இருந்தாலும் அவரை விட நாடுதான் அதிகம் சிறந்தது என்று தாம் கருதுவதாக சில காலம் கழித்து அம்பேத்கர் சர்தார் படேலுக்கு எழுதினார். ஒருவர் காங்கிரஸ்காரராக இல்லாமலே ஒரு சிறந்த தேசியவாதியாக இருக்க முடியும் என்றும் அவர் குறிப்பிட்டார். எந்த காங்கிரஸ் தலைவரை யும் விட தாம் அதிகம் சிறந்த தேசியவாதி என்றும் மேலும் குறிப் பிட்டார்.[1]

1. கீர், பக்கம் 383

# 17

# டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு திரு. அட்லியின் கடிதம்

*பாரீஸ், ஆகஸ்டு 1, 1946*

**எனது அன்பார்ந்த அம்பேத்கர் அவர்கட்கு,**

*தங்களது ஜூலை 1 ம் தேதிக் கடிதத்தையும் அத்துடன் அனுப்பப்பட்ட ஆவணங்களையும் கவனமாகப் பரிசீலித்தேன்.* [1]

*அமைச்சரவைத் தூதுக்குழுவும் வைஸ்ராயும் ஷெட்யூல் வகுப்பினருக்கு அநீதி அளித்தார்கள் என்ற கருத்தை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை என்று நான் அஞ்சுகிறேன். 1945ல் நடந்த சிம்லா மாநாட்டின் கொள்கையை ஏன் மாற்றினார்கள் என்றால், தாங்கள் கூறியுள்ளதுபோல், சென்ற வசந்த காலத்தில் மாகாண சட்டசபைகளுக்கு நடந்த தேர்தல்களின் முடிவுகள்தான். தூதுக் குழு வாக்குகளின் புள்ளி விபரங்களை கவனமாகப் பரிசீலித்தது; நானும் அவற்றை ஆய்வு செய்தேன். இன்றைய தேர்தல் அமைப்பு முறை காங்கிரஸை எதிர்த்துப் போட்டியிட்ட ஷெட்யூல் வகுப்பினரின் வேட்பாளர்களுக்கு நீதி வழங்கவில்லை என்ற கருத்துக்குக் காரணங்கள் உள்ளன என்பதை நாங்கள் உணர்கிறோம். மறுபக்கம், முதல்கட்ட தேர்தல்களில் உங்களின் சம்மேளனத்தை சேர்ந்த வேட்பாளர்களின் சாதனைகள் பற்றி தாங்கள் கூறுவதை நிரூபிப்பதாக நான் காண முடியவில்லை.** இந்த விஷயத்தைப் பற்றி இங்கு விரிவாக கூறப்போவதில்லை எனினும்,*

---

*1. ஜூலை 1ம் தேதி திரு. அட்லிக்கு டாக்டர் அம்பேத்கர் ஒரு நீண்ட கடிதம் எழுதினார்; அத்துடன் சமீபத்திய கடிதப் போக்குவரத்து, ஒரு நிகழ்ச்சிப் பதிவுக் குறிப்பு, ஒரு உரை மற்றவைகளின் நகல்களையும் கடிதத்துடன் சேர்த்து அனுப்பியிருந்தார். ஜூன் 17ம் தேதி திரு. அட்லிக்கு அவர் அனுப்பிய தந்தியைத் தொடர்ந்து அனுப்பப்பட்டது டாக்டர் அம்பேத்கரின் கடிதம்; அவை அதே விஷயத்தை பற்றியவையே. தந்திக்கான பக்கம் பார்க்க*

★ *அதிகார மாற்றம், தொகுப்பு VIII, எண் 105 பக்கம் 170-172.*

★ *'தமது ஜூலை 1ம் தேதிக் கடிதத்தில் டாக்டர் அம்பேத்கர் எழுதினார்: முதல் கட்டத் தேர்தல்கள் இந்தியாவில் அவை எங்கு நடைபெற்றாலும் சம்மேளனம் நிறுத்திய வேட்பாளர்கள் உயர் வாக்குகள் பெற்றனர்; காங்கிரஸ் நிறுத்தியவர்கள் அடிமட்ட வாக்குகள் பெற்றனர் L/P 10/50 of 81*

விவரங்கள் என்னவெனில், முதல்கட்டத் தேர்தல்கள், ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட 15 தொகுதிகளில் 43 தொகுதிகளில் மட்டுமே நடந்தன, இந்த 43 தொகுதிகளில், ஷெட்யூல்டு வகுப்பினர் 22 இடங்களில் போட்டியிட்டு, 13ல் மட்டுமே அதி உயர்வாக்குகள் (top) பெற்றனர்.

தங்கள் கடிதத்தில் மூன்று குறிப்பிடத்தக்க வேண்டுகோளை வைத்திருக்கிறீர்கள். முதலில் உள்ளதைப் பொறுத்தவரை, அமைச்சரவை தூதுக் குழுவின் மே 16, மே 25 தேதி அறிக்கைகளின் நிபந்தனைகளுக்கு முரணில்லாமல், அரசியல் நிர்ணய சபை செயல்பட அதிகபட்ச சுதந்திரம் பெற்றிருக்க வேண்டும் என்பதில், மன்னர் பிரான் அரசாங்கம் அக்கறை கொண்டுள்ளது, ஷெட்யூல்டு வகுப்பினை ஒரு முக்கிய சிறுபான்மையினர் என்று நாங்கள் நிச்சயமாக கருதுகிறோம். அது சிறுபான்மையினர் ஆலோசனைக் குழுவில் பிரதிநிதித்துவம் பெறவேண்டும் என்றும் கருதுகிறோம். ஆனால் தாங்கள் கேட்கும் பிரகடனம் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு மட்டும் என்று கட்டுப்படுத்த முடியாது; ஆலோசனைக் குழுவில் சிறுபான்மையினர் என்று சேர்க்கப்பட வேண்டிய எல்லாக் கூறுகளுக்கும் பொருந்துவதாக அந்த அறிக்கை இருக்க வேண்டும். அவை வருமாறு:

(1) அமைச்சரவை குழுவின் அறிக்கையின் 20வது பாராவின் பொருள்படி ஷெட்யூல் வகுப்பினர் ஒரு சிறுபான்மையினர் என்பதை மன்னர்பிரான் அரசாங்கம் பகிரங்கமாக அறிவிக்க வேண்டும்.

(2) இறையாண்மையை முடிவுக்குக் கொண்டுவரும் முன்பு, பெரும்பான்மையிடம் பயமில்லாமல் வாழ்வதை அவர்களுக்கு சாத்தியமாக்க ஷெட்யூல் வகுப்பினருக்கு பாதுகாப்புகள் அளிக்கப் படுவதைப் பற்றி மன்னர்பிரான் அரசாங்கம் கவனிக்க வேண்டும்.

(3) இடைக்கால அரசாங்கத்தில், ஷெட்யூல்டு வகுப்பினர் குறைந்தபட்சம் இரண்டு பிரதிநிதிகள் பெறவேண்டும்; அவர்கள் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தால் நியமிக்கப்பட வேண்டும். அது (அறிவிப்பு) மன்னர்பிரான் அரசாங்க கருத்தின் வெளிப்பாடு மட்டுமே என்றாலும், சபையின் சுதந்திரத்தில் தலையிடும் ஒரு முயற்சி என்று, தவிர்க்க முடியாமல், விளக்கம் கூறப்படும்; ஆகையால், கடுமையான சினத்தை ஏற்படுத்தலாம். இத்தகைய சூழ்நிலைமைகளில், அத்தகைய ஒரு பிரகடனம் ஷெட்யூல்டு

வகுப்பினரின் லட்சியத்திற்குப் பயனை அளிக்கும் என்று நான் நம்ப முடியாது.

தங்களது இரண்டாவது வேண்டுகோளை எடுத்துக் கொண்டால், காமன்ஸ் சபையில் மார்ச் 15ல் நான் பேசியதில் நான் கூறியதாக தாங்கள் குறிப்பிடும் சொற்கள் அதில் இருப்பதை நான் காணமுடியவில்லை.* நான் கூறியது என்னவெனில் ''சிறுபான்மையினரின் உரிமைகள் பற்றி நாங்கள் அக்கறை கொண்டுள்ளோம்; சிறுபான்மையினர் நிச்சயமாக பயமின்றி வாழமுடிய வேண்டும்''. மன்னர்பிரான் அரசாங்கத்தின் கருத்தாக அது இன்னமும் இருக்கிறது; அமைச்சரவைக் குழுவின் மே 25ம் தேதி அறிக்கையின் 4வது பாராவில் இது இடம் பெற்றுள்ளது. அந்தப் பாராவில் கூறப்பட்டதை மன்னர்பிரான் அரசாங்கம் இந்தக் கட்டத்தில் விளக்கிக் கூறுவது விவேகம் உள்ளதாக இருக்கும் என்று நான் கருதவில்லை.

தங்களது கடைசி வேண்டுகோள் என்னவெனில், இடைக்கால அரசாங்கத்தில் ஷெட்யூல்டு வகுப்பினர் அவசியம் இடம்பெற வேண்டுமென்றும் அவர்கள் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தால் நியமிக்கப்பட வேண்டும் என்பது. இது சாத்தியம் என்ற நம்பிக்கையை நான் அளிக்க முடியாது என்று கூறுவதற்கு வருந்துகிறேன்.

அரசியல் நிர்ணய சபைக்கு தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள் என்பதை அறிந்து நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

**ஸி.ஆர். அட்லி**



---

★ சிறுபான்மையினருக்குப் போதுமான பாதுகாப்பளிக்க வேண்டும் என்ற ஷரத்து பற்றி ஏற்கனவே அமைச்சரவைத் தூதுக்குழு கூறியுள்ளதாக டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்டார். 'பெரும்பான்மையினர் பற்றி அச்சமின்றி வாழ ஷெட்யூல் வகுப்பினருக்கு பாதுகாப்புகள்' என்ற சொற்கள் அறிக்கையில் சேர்க்கப்பட்டால் அவரது இரண்டாவது வேண்டுகோளுக்குப் பதில் கிடைக்கும். தமது மார்ச் 15ம் தேதி உரையில் திரு. அட்லியே இந்த சொற்களைப் பயன்படுத்தியதாக டாக்டர் அம்பேத்கர் கருதினார்.

# 18

# திரு. அட்லிக்கு டாக்டர் அம்பேத்கர் அனுப்பிய ஆட்சேபக் கடிதம்

*'ராஜ்கிரகா'*
*தாதர், பம்பாய் 14*
*1946 ஆகஸ்ட், 12*

*எனது அன்புள்ள அட்லி அவர்கட்கு,*

*தங்களின் 1946 ஆகஸ்ட் 1ம் தேதி கடிதத்திற்கு நான் நன்றி செலுத்துகிறேன். எனது 1946 ஜுலை 1ம் தேதி கடிதத்திற்கு பதில் அளிக்க தங்களுக்கு நேரம் கிடைக்கும் என்று நான் எதிர்பார்க்க வில்லை. என்னுடைய கடிதத்தில் நான் எழுப்பிய விஷயங்களுக்கு தங்கள் கருத்துக்களை எனக்குத் தெரியப்படுத்த தாங்கள் நேரம் ஒதுக்கியதற்கு நான் உங்களுக்கு நன்றியுடையவனாக இருக்கிறேன்.*

*2. 1945 சிம்லா மாநாட்டில் மன்னர்பிரான் அரசாங்கம் கடைப்பிடித்த கொள்கையை மாற்றி அமைத்ததை தாங்கள் நியாயப் படுத்தியதையோ அல்லது ஷெட்யூல்டு வகுப்பினரை தூதுக்குழு நடத்திய விதத்தையோ நான் ஏற்றுக்கொள்ள முடியாது என்று அஞ்சுகிறேன். ஷெட்யூல்டு வகுப்பினரில் பெரும்பான்மையினர் காங்கிரஸுடன் இருக்கிறார்கள் என்று திரு. அலெக்ஸாண்டர் காமன்ஸ் சபையில் தெரிவித்த அறிவிப்பு மிகக் கொடூரமானது என்று கூறாமல் என்னால் இருக்க முடியாது; உண்மையில் அதற்கு எந்த அடிப்படையும் கிடையாது. இது என்னுடைய கருத்து மட்டு மல்ல; இந்தியாவிலுள்ள ஒவ்வொரு இங்கிலீஸ்காரரின் கருத்து மாகும். இப்பொழுது இங்கிலாந்தில் இருக்கும் எட்வர்ட் பெந்தால் அவர்களைத் தாங்கள் கலந்தாலோசித்தால், அவர் என்னை ஆதரிப்பார்.*

*3. முதல்கட்டத் தேர்தல்களின் முடிவுகளில் சம்மேளனம் அடைந்த சாதனைகள் பற்றிய தங்கள் பரிசீலனையைப் பொறுத்த வரை, தாங்கள் நிலமையைத் தவறாகப் புரிந்து கொண்டீர்கள் என்று மட்டுமே நான் கூறுமுடியும்; உண்மை விவரங்களின் முக்கியத்து வத்தைப் பற்றியோ அல்லது தேர்தலின் முறையைப் பற்றியோ*

அறியாத வெளிநாட்டார் எவரும் அவை பற்றி முறையான விளக்கம் இல்லாமல் புரிந்து கொள்ள முடியாது. தூதுக்குழுவிற்கு எதிரான எனது குற்றச்சாட்டிற்கான பிரதான அடிப்படை, நிலவரத்தின் மறு பக்கம் காங்கிரஸால் முன் வைக்கப்பட்டபோது, என்னை அழைத்து விளக்கம் கோர வேண்டியது அதன் மறுக்க முடியாத கடமையாகும். இதைத் தூதுக்குழு செய்யவில்லை; நியாயத்தின் அடிப்படையில் அவர்கள் செய்திருக்க வேண்டும். திருப்திகரமான விளக்கத்தை நான் அவர்களுக்கு அளிக்கத் தவறியிருந்தால், அவர்கள் செய்த முடிவை நியாயப்படுத்த முடியும். வங்காளத்திலிருந்து அரசியல் நிர்ணய சபைக்கு நான் தேர்ந்தெடுக்கப்பட்டது தூதுக்குழு முற்றிலும் தவறாக புரிந்துகொண்டது என்பதை நிரூபிக்கிறது. என் செல்வாக்கு பம்பாய் மற்றும் மத்திய மாகாணங்களில் எல்லைக்குட்பட்டது மட்டுமே என்று அமைச்சரவைத் தூதுக்குழு காமன்ஸ் சபையில் அறிவித்தது. அப்படியாயின், வங்காளத்திலிருந்து நான் எப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டேன்? எனது தேர்தல் பற்றி மூன்று உண்மைகளை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஒன்று, நான் விளிம்பில் (கஷ்டப்பட்டு) வெற்றிபெறவில்லை. காங்கிரஸ் கட்சியின் மிக உயர்மட்ட வங்காளத் தலைவரான திரு.சரத் சந்திர போஸையே தோற்கடித்து மிக உயர்ந்த வாக்குகள் பெற்று நான் வெற்றி பெற்றேன். இரண்டாவதாக வங்காளத்தின் ஷெட்யூல்டு வகுப்பின் சமூகத்தோடு எந்த சமூகரீதியிலும் எந்த தொடர்பிலும் நான் சம்பந்தப்படவில்லை. அவர்கள் வேறுபட்ட சாதிகளைச் சார்ந்தவர்கள்; அவற்றைச் சேர்ந்தவன் அல்ல நான். உண்மையில், என் சாதியைச் சேர்ந்த மக்கள் வங்காளத்தில் இல்லை; என்றாலும் முதல் இடம் பெற்று வெற்றிபெற வங்காள ஷெட்யூல்டு வகுப்பினர் எனக்கு ஆதரவளித்தனர். மூன்றாவதாக, வங்காளத்திலுள்ள ஷெட்யூல்டு வகுப்பினர் காங்கிரஸ் டிக்கெட்டில் வெற்றி பெற்றாலும், காங்கிரஸ்காரரைத் தவிர வேறுயாருக்கும் வாக்களிக்கக் கூடாது என்ற அவர்களின் விதியை மீறி எனக்கு வாக்களித்தனர். என்னைப் பின்பற்றுபவர்கள் வங்காளத்தில் இல்லை என்று இது நிரூபிக்கிறதா? தூதுக் குழு தங்கள் முடிவு பற்றி நேர்மையாக இருந்தார்களெனில், காமன்ஸ் சபையில் அவர்கள் தெரிவித்த தவறான கருத்தை மாற்றி சம்மேளனத்திற்கு முறையான அங்கீகாரத்தை அளித்திருப்பார்கள் என நான் உறுதியாக நம்புகிறேன்.

சிறுபான்மையினர் ஆலோசனைக் குழுவில் ஷெட்யூல் வகுப்பினரின் அந்தஸ்தைப் பொறுத்தவரை, ஷெட்யூல் வகுப் பினரும் ஒரு முக்கிய சிறுபான்மையினர் என்று பிரிட்டிஷ் அமைச் சரவை கருதுகிறது என்ற உறுதிமொழி பற்றி நான் மகிழ்ச்சியடை கிறேன். தூதுக்குழு ஒரு பகிரங்கப் பிரகடனத்தை வெளியிடும் வகையிலும், இந்த கருத்து ஷெட்யூல்டு வகுப்பினருக்கு உதவாது என்று மீண்டும் அவசியம் எடுத்துக் கூறவேண்டுமென அஞ்சுகிறேன். இதை நான் ஏன் கூறுகிறேன் என்றால், பேச்சு வார்த்தைகள் தோல் வியடைந்ததற்கு முன்னால், காங்கிரஸ் சார்பாக வைஸ்ராய்க்கு மௌலானா அப்துல் கலாம் ஆசாத் எழுதிய கடைசிக் கடிதத்தில், ஷெட்யூல் வகுப்பினர் ஒரு சிறுபான்மையினர் என்ற கருத்தை மறுத்து சவால் விட்டார். பிரிட்டிஷ் அமைச்சரவை தக்க காலத்தில் இந்த கருத்தைத் திருத்திக் கொள்ளாவிடில், காங்கிரஸ்காரர்களால் நிரப்பப்படும் ஆலோசனைக் குழுவில் ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரச்னை பரிசீலிக்கப்படாமலே போகலாம். சிறுபான்மையினர் என்பதிலிருந்து இந்துக்களுக்குள்ளேயே ஒரு சமூகக் குழு என்று ஷெட்யூல்டு வகுப்பினர் பின்தள்ளப்படுவர் என்ற அபாயம் திரு. காந்தியின் சமீபத்திய அறிவிப்பினால் மிக நிச்சயமாக இருப்பதாகத் தோன்றுகிறது; ஷெட்யூல்டு வகுப்பினருக்கு பிரிட்டிஷ் அரசாங்கம் தங்கள் ஆதரவைத் தர மறுத்ததால், அவர்கள் பற்றி தாம் விரும்புகிற எதுவும் செய்ய முடியும் என்று அவர் (காந்தி) நினைக்கிறார் என்பது தெளிவு.

5. இந்த சூழ்நிலைகளில், இந்த விஷயத்தை மீண்டும் மறு பரிசீலனை செய்யும்படியும், புதிய அரசியல் சாசனத்தில் ஷெட்யூல் வகுப்பினருக்கு ஏற்படக் கூடிய அபாயத்தை தடுத்து நிறுத்த அவர் களை ஒரு முக்கியமான சிறுபான்மையினர் என்று ஒரு பிரகடனத்தை வெளியிடும்படி தங்களை வலியுறுத்துகிறேன்.

6. இடைக்கால அரசாங்கத்தில் ஷெட்யூல்டு வகுப்பினர் இரு இடங்கள் பெறுவர் என்ற எந்த நம்பிக்கையும் தங்களால் அளிக்க இயலாது என்று படிக்க நான் வருந்துகிறேன். இந்த மறுப்புக்கு எந்த நியாயத்தையும் என்னால் காணமுடியவில்லை. அவர்களின் எண்ணிக்கை அடிப்படையிலும் 1945 சிம்லா மாநாட்டில் அளிக்கப் பட்ட வாக்குறுதியோடு ஒப்பிட்டும் பார்க்கும் காரணத்தாலும் சீக்கியர்களும் மற்ற சிறிய சிறுபான்மையர்களும் நடத்தப்பட்டதை விட இவர்கள் மேலும் நல்ல முறையில் நடத்தப்படுவதற்கு உரிமை பெற்றிருக்கிறார்கள்.

நான் கோரிய உரிமை மிகவும் நியாயமானது என்று நான் நினைக்கிறேன்.

அன்பான மதிப்புடன்,

தங்கள் உண்மையுள்ள,
பி.ஆர்.அம்பேத்கர்



# 19

# எங்கள் மீது வெற்றி கொண்டிருக்கலாம், நாங்கள் நிச்சயம் சரணடைய மாட்டோம்

அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் நிர்வாகக் குழுக்கூட்டத்திற்காக பூனாவில் உள்ள டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் இடைக்கால அரசாங்கத்தில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ''போதுமான பிரதிநிதித்துவம் அளிக்கப்படாதது பற்றி'' அதிருப்தியைத் தெரிவித்தார்.[1]

''நிர்வாகக் கவுன்சிலில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு பிரதிநிதித்துவம் அளிப்பது பற்றி காங்கிரஸ் எடுத்துள்ள கண்ணோட்டத்தின் காரணமாக வைஸ்ராய் அமைத்துள்ள இடைக்கால அரசாங்கம் ஷெட்யூல்டு வகுப்பினரின் கீழ்படிதலையோ மரியாதையையோ கோரத் தகுதியற்றது'' என்று இடைக்கால அரசாங்கம் அமைந்தது பற்றி பேட்டி ஒன்றில் டாக்டர் அம்பேத்கர் தெரிவித்தார்.

அம்பேத்கர் கூறினார். ''நிர்வாகக் கவுன்சிலில் ஷெட்யூல்டு வகுப்பினரை முற்றிலும் ஒரு செல்லாக் காசாகத் தாழ்த்த (utter non-entity) பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் காங்கிரஸுக்கும் இடையே ஒரு திட்டமிட்ட சதி இருப்பது போல் தோன்றுகிறது. பாகிஸ்தானுக்கு நியாயம் இருக்கிறது; ஆனால் சாதி இந்துக்களுடன் சமநிலை (parity) இடம் முஸ்லிம்களுக்கு அளிப்பதில் நியாயம் எதுவும் இல்லை; அதே போல் மற்ற சிறுபான்மையினருக்கு பிரதிநிதித்துவத்தை 4 இடங்களாக குறைப்பதிலும் நியாயம் எதுவுமில்லை; அதுவும் முஸ்லிம் மக்கள் மொத்தத் தொகையில் 50 சதவிகித்திற்கு மேல் ஷெட்யூல்டு வகுப்பினரின் மக்கள் தொகை இருக்கும்போது முஸ்லிம்களின் உரிமையைப் பொறுத்தவரை, இதுவரையில் பிரிட்டிஷ் அரசாங்கம் அதிகபட்சமாக ஒப்புக் கொண்டது அவர்களுக்கு 33 1/3 சதவிகிதம் மதிப்பு (33 1/3 %) அளிக்க வேண்டும் என்பதே. அவர்களுக்கு அதிகப்படியான பிரதிநிதித்துவம் அளிக்க அதற்குப் பின் எதுவும் நடக்கவில்லை. இந்துக்களோடு சம அளவு இடம் வேண்டும் என்று முஸ்லிம்கள் கோருவது நியாயம் என்றால், முஸ்லிம்களுக்கு

1. டைம்ஸ் ஆப் இந்தியா, தேதி 1946 ஆகஸ்ட் 26

அளிக்கப்பட்ட பிரதிநிதித்துவத்தில் குறைந்தபட்சம் 50 சதவிகிதம் ஷெட்யூல்டு வகுப்பினர் கோருவதில் அதிகம் நியாயம் உள்ளது.

டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்தார்: ''சிம்லா மாநாட்டில் ஷெட்யூல்டு வகுப்பினர் 3 இடங்கள் வேண்டுமென்று வலியுறுத்தினாலும் அவர்களுக்குக் குறைந்தது 2 இடங்கள் வேண்டும் என்பது வைஸ்ராயால் ஒப்புக் கொள்ளப்பட்டது. அவர்களும் இந்த இடைக்கால ஏற்பாட்டிற்கு இரு இடங்களுக்கு ஒப்புக் கொண்டார்கள். அந்தச் சமயம் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு இரு இடங்கள் வழங்க காங்கிரஸ் தயாராக இருந்தது. காங்கிரஸால் முன்மொழியப்பட்ட (sponsored) இடைக்கால அரசாங்கத்திற்கு அப்பட்டமான அநியாயம் காங்கிரஸ் நிகழ்த்தியதை அறிந்த பின்பு - இந்த புதிய இடைக்கால அரசாங்கத்துடன் ஷெட்யூல்டு வகுப்பினர் ஒத்துழைக்க வேண்டுமா என்பது அதிகம் கவலையளிக்கும் விஷயமாகும். நிர்வாகக் கவுன்சிலில் ஷெட்யூல்டு வகுப்பினர் பிரதிநிதித்துவம் பற்றி காங்கிரஸ் இப்பொழுது காண்பிக்கும் கண்ணோட்டத்தின் காரணமாக வைஸ்ராயால் அமைக்கப்பட்டுள்ள நிர்வாகக் கவுன்சில் ஷெட்யூல்டு வகுப்பினரிடமிருந்து கீழ்ப்படிதலோ அல்லது மரியாதையோ பெறத் தகுதியற்றது''

டாக்டர் அம்பேத்கர் கூறினார் : ''இதைவிட அதிக ஆச்சரியமானது, நிர்வாகக் கவுன்சிலில் சேரும்படி அழைப்பு விட்டதை திரு.ஜெகஜீவன் ராம் ஏற்றுக் கொண்டதுதான். நிர்வாகக் கவுன்சிலில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு போதுமான பிரதிநிதித்துவம் அளிக்கப்படாததை ஆட்சேபித்து, பிரதம மந்திரிக்கு நான் தந்தி அனுப்பியபோது, நிர்வாகக் கவுன்சிலில் ஷெட்யூல்டு வகுப்பினர் சார்பாக அதிகப்படியான பிரதிநிதித்துவம் நான் கோரியதை ஆதரித்து திரு.ஜெகஜீவன் ராமே பத்திரிகைக்கு அறிக்கை வெளியிட்டார். ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதித்துவத்தை அதிகரிக்க காங்கிரஸ் ஒப்புக்கொள்ளாத போதிலும், அழைப்பை திரு. ஜெகஜீவன்ராம் ஏற்றுக் கொண்டிருக்க வேண்டுமெனில் ஷெட்யூல்டு வகுப்பினரின் உரிமைகளுக்காக எந்த அளவுக்கு அவர் நிற்பார் என்பதையும் காண்பிக்கிறது. காங்கிரஸுக்கு உள்ளே இருக்கும் ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதிகள் என்று பாவனை செய்பவர்கள் ஷெட்யூல்டு வகுப்பினர் காங்கிரஸால் கைவிடப்படாமல் இருப்பதை கவனித்துக் கொள்வார்கள் என்று எந்த அளவு இவர்களை நம்ப முடியும் என்பதற்கு திரு.ஜெகஜீவன் ராம் போன்றவர்களின் நேர்மைக்கும் நியாயத்திற்கும் இது ஒரு நல்ல சோதனையாக இந்த சந்தர்ப்பம் ஏற்பட்டுள்ளது''.

சம்மேளனம் துவக்கியுள்ள இயக்கம் பற்றிக் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர், தங்களது நியாயமான கோரிக்கைகளை அடையும்வரை போராட்டம் தொடரும் என்றார். ''நம்மை வெல்ல லாம்'' ஆனால் நாம் சரணடைய மாட்டோம்'' என்று பிரகடனப் படுத்தினார்.[1]



1. ஜெய் பீம் - தேதி 1946 செப்டம்பர் 16.

# 20

# பெத்திக் லாரன்ஸ் பிரபு பிரதம மந்திரி அட்லிக்கு எழுதிய கடிதம்

இந்தியா அலுவலகம்
1946 செப்டம்பர் 3

இந்தியா விவகார அமைச்சரின் கூட்ட நடவடிக்கைக் குறிப்பேடு - வரிசை எண் 48/46

பிரதம மந்திரிக்கு,

தங்களுக்கு 1946 ஆகஸ்ட் 12ம் தேதி டாக்டர் அம்பேத்கர் எழுதிய கடிதம் பற்றி எனது கருத்தைத் தாங்கள் கேட்டிருந்தீர்கள்.

2. அவரது இரண்டாவது பாராவைப் பொறுத்தவரை, தேர்தல் முடிவுகள் பற்றிய ஒரு பரிசீலனையை நிகழ்ச்சிப் பதிவுக் குறிப்பில் தாங்கள் பார்க்கலாம்; அதை எனது தனிச் செயலாளர் தங்களுக்கு டாக்டர் அம்பேத்கரின் முந்திய கடிதத்திற்கு நகல் பதிலுடன் அனுப்பினார். சுருக்கமாகக் கூறவேண்டுமெனில், போட்டியிட்ட முதல் கட்டத் தேர்தல்களில், டாக்டர் அம்பேத்கரின் அமைப்பை விட காங்கிரஸ் அதிகமான வாக்குகளைப் பெற்றது. அதே சமயம் அதைவிட அதிக விகிதத்தில் வாக்குகளை சுயேச்சைகள் பெற்றனர்; அவர்கள் டாக்டர் அம்பேத்கரின் ஆதரவாளர்களாக இருக்கலாம். அது இல்லாமலே, மூன்றுக்கு இரண்டு பங்கு இடங்களை காங்கிரஸ் போட்டியின்றி வென்றது. புள்ளி விவரங்கள் நிச்சயமாக முடிவானவையல்ல; உண்மையில் ''எந்த அடிப்படையும் இல்லை''யென்று நிதி அரங்க முதல்வர் (First Lord) அறிக்கையில் சொன்னது நியாயப்படுத்த முடியாது; அது மிக மிகையானது என்று நான் நினைக்கிறேன்.

டாக்டர் அம்பேத்கரின் கடித 3வது பாராவைப் பொறுத்த வரை, அவரது செல்வாக்கு பம்பாய் மற்றும் மத்திய மாகாணங்களில் மட்டுமே உள்ளது என்று காமன்ஸ் சபையில் கூறப்படவில்லை.

வர்த்தக வாரியத்தின் தலைவரின் உரையைப் பற்றி அவர் குறிப்பிடுகிறார். உண்மையில் உபயோகிக்கப்பட்ட வார்த்தைகள் வருமாறு\

டாக்டர் அம்பேத்கரின் ஸ்தாபனம் (காங்கிரஸ் ஸ்தாபனத்தைவிட) அதிகமாக ஸ்தலத் தன்மை கொண்டது; அது பிரதானமாக பம்பாயையும் மத்திய மாகாணங்களையும் மையமாகக் கொண்டுள்ளது'' அரசியல் நிர்ணய சபைக்கு வங்காளத் தேர்தலில் என்ன நடந்தது என்பது பற்றி விசாரித்தேன். அது சரிசம வீதமான பிரதிநிதித்துவம் (proportional representation) கொண்டது. டாக்டர் அம்பேத்கர் முதல் ஐந்து முன்னுரிமைக்குரிய வாக்குகளை (first preference votes)ப் பெற்றார். சரத் சந்திர போஸும் ஐந்து முதல் முன்னுரிமைக்குள்ள வாக்குகளைப் பெற்றார். வங்காளத் தேர்தலுக்கு கோட்டா நான்கு வாக்குகள். தங்களின் ஒவ்வொரு வேட்பாளரும் சாத்தியமான அளவு நான்கு முன்னுரிமை வாக்குள் பெறுவதை காங்கிரஸ் திட்டமிட்டிருக்கும். சரிசமவீத அளவான தேர்தலில் 'உச்ச வாக்குகள் பெற்றதாக' கூறுவதற்கு உண்மையில் எந்த அர்த்தமும் இல்லை. வங்காளத்தில் ஷெட்யூல்டு வகுப்பினர் சிலர்பால் டாக்டர் அம்பேத்கர் செல்வாக்கு பெற்றிருக்கிறார் என்பதை யாரும் மறுக்கவில்லை. வங்காள சட்டசபையில் இருபத்து ஐந்து ஷெட்யூல்டு வகுப்பு உறுப்பினர்கள் உள்ளனர்; அவர்களில் நால்வர் சுயேச்சைகளாக வென்றனர்; ஒருவர் டாக்டர் அம்பேத்கர், அரசியல் நிர்ணய சபைத் தேர்தலில் எல்லா சுயேச்சைகளும் டாக்டர் அம்பேத்கருக்கு வாக்களித்தனரா அல்லது அவர் சில ஆங்கிலோ-இந்திய வாக்குகளைப் பெற்றாரா என்பது எனக்குத் தெரியாது.

டாக்டர் அம்பேத்கரின் 4வது பாராவைப் பொறுத்தவரை, ஷெட்யூல்டு வகுப்பினரை ஒரு சிறுபான்மையினராக நாம் கருதுகிறோம் என்றும், ஆலோசனைக் குழுவில் அவர்கள் பிரதிநிதித்துவப்படுத்தப்பட வேண்டும் என்றும் ஒரு பகிரங்க (public) பிரகடனத்தை நாம் வெளியிட முடியாது என்பதை நான் நம்புகிறேன். தனி அரசியல் பிரதிநிதித்துவத்திற்கு அவர்களை ஒரு சிறுபான்மையினர் என்று காங்கிரஸ் கருதவில்லை என்பது சரியே; ஆனால் நாம் எப்பொழுதும் அவ்வாறு செய்துள்ளோம். ஆனால் சிறுபான்மையினர் ஆலோசனைக் குழுவில் டாக்டர் அம்பேத்கரின் ஸ்தாபனத்திற்கு பிரதிநிதித்துவம் பெற்றுத்தரும் நிலைமையில் நாம் இல்லை.

5. டாக்டர் அம்பேத்கருக்கு பதில் அனுப்ப வேண்டியது உண்மையில் அத்தியாவசியம் என நான் நினைக்கவில்லை. மரியாதை நிமித்தம் அவ்வாறு செய்வது நல்லது என்று தங்களுக்குத் தோன்றினால், ஒரு சிறிய நகலை நான் இணைத்துள்ளேன். தாங்கள் பார்க்க விரும்பினால் நிதி அரங்க முதல்வர் மற்றும் வர்த்தக வாரியத்தின் தலைவரும் காமன்ஸ் விவாதத்தில் ஆற்றிய உரைகளி லிருந்து பகுதிகளையும் இணைத்துள்ளேன். எனது சொந்த உரை யிலும் கடிதத்தில் உள்ள வாசகம் போன்ற வாசகம் - ஆனால் சுருக்க மானதாக இருந்தது.

**பெத்திக் லாரன்ஸ்** [1]

★ இங்கு அச்சிடப்படவில்லை

1. அதிகார மாற்றம், தொகுப்பு VIII, Gs VIII எண் 250 பக்கம் 441 - 442

## II

*இந்திய அலுவலகம், 1946 செப்டம்பர் 9*

*இந்திய விவகார அமைச்சரின் கூட்ட நிகழ்ச்சிக் குறிப்பு : வரிசை எண் 51/46*

*பிரதம மந்திரிக்கு,*

*அரசியல் நிர்ணய சபையின் ஆலோசனைக் குழுவில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு பிரதிநிதித்துவம் பற்றிய செப்டம்பர் 4ம் தேதிய தங்களது சொந்த கூட்ட நிகழ்ச்சி குறிப்பு எண் M 296/46. **

*2. ஆலோசனைக் குழுவில் ஷெட்யூல் வகுப்பினர் பிரதிநிதித்துவம் பெறவேண்டும் என்பதை நிச்சயமாகத் தூதுக்குழுவின் நோக்கமாக இருந்தது. இந்தியாவில் டாக்டர் அம்பேத்கருக்கு நான் எழுதிய கடிதத்தில் இதைத் தெரியப்படுத்தினேன். அவருக்கு ஆகஸ்ட் 1ம் தேதி எழுதிய கடிதத்தில் டாக்டர் அம்பேத்கருக்கு நீங்கள் தெளிவுபடுத்தினீர்கள்; ஷெட்யூல்டு வகுப்பினர் ஒரு முக்கிய சிறுபான்மை என்றும் அது ஆலோசனைக் குழுவில் பிரதிநிதித்துவம் பெறவேண்டும் என்றும் மன்னர்பிரான் அரசாங்கம் கருதிய போதிலும், பின்வரும் காரணங்களுக்காக அதை ஒரு பொதுப் பிரகடனமாக வெளியிட வேண்டும் என்ற அவரது வேண்டுகோளை அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியாது என்று:[1]*

*(அ) ஆலோசனைக் குழுவில் சிறுபான்மையினர் என்று உட்படுத்தப்பட வேண்டும் என்று மன்னர்பிரான் அரசாங்கம் கருதுவது மற்ற கூறுகளையும் பற்றி திட்டவட்டமாக வரையறுத்துக் கூற வேண்டும்.*

*(ஆ) அரசியல் நிர்ணய சபையின் சுதந்திரமான செயல் பாட்டில் தலையிடும் ஒரு முயற்சி என்று பொருள் கொள்ளப்படுவதற்கு ஏதுவாகலாம்.*

---

*அதிகார மாற்றம், தொகுப்பு VIII, எண் 288, ப. 466-68.*

*★ எண் 253 (அதிகார மாற்றம் S.No க்குறிக்கிறது - ஆசிரியர்.*

*1. எண் 399, தொகுப்பு VII ப.502 - ஆசிரியர்*

3. என்றாலும், நிலைமை என்னவெனில், ஆலோசனை குழுவில் சேர்க்கப்படுபவர்கள் பற்றி முடிவெடுப்பது அரசியல் நிர்ணய சபைக்கு நாம் விட்டுவிட்டோம்; இப்பொழுது அதை நாமே வரையறுக்க முடியாது. சபைக்கு நாம் தவறான விளக்கத்தை அளித்தோம் என்று நம்மைக் குற்றம் சாட்ட முடியாது என நினைக்கிறேன்; ஏனெனில் வர்த்தக வாரியத் தலைவரின் ஜூலை 18ம் தேதி உரையில் நிலைமை தெளிவாக விளக்கிக் கூறப்பட்டது; அதில் சம்பந்தப்பட்ட பகுதி வாசகத்தை தங்களுக்கு அனுப்பிய எனது செப்டம்பர் 3 நினைவுக் குறிப்பில் இணைக்கப்பட்டது.[1]

4. தனியான அரசியல் பிரதிநிதித்துவம் பெற ஷெட்யூல்டு வகுப்பினர் ஒரு சிறுபான்மையா அல்லது அவர்கள் இந்துக்களுடன் சேர்க்கப்பட வேண்டுமா என்ற விஷயம் பற்றிய கருத்து வேறுபாடு நிச்சயமாக ஒரு நீண்ட வரலாற்றைக் கொண்டது. பின்சொன்ன கருத்தைப் பிரசாரம் செய்ய தனது வாழ்க்கையின் ஒரு பெரும் பாகத்தை காந்தி செலவழித்துள்ளார். என்னுடைய செப்டம்பர் 3ம் தேதி நாட்குறிப்பில் தனியான அரசியல் பிரதிநிதித்துவத்திற்காக ஷெட்யூல்டு வகுப்பினரை ஒரு சிறுபான்மையாக காங்கிரஸ் கருதவில்லை என்று நான் கூறியபோது, ஜூன் 25ம் தேதி வைஸ்ராய்க்கு ஆசாத் எழுதிய கடிதத்தின் வாசகம் என் மனதில் இருந்தது[2] (கடிதம் மே 16ம் தேதிய நமது அறிக்கைக்கு சில வாரங்கள் கழித்து எழுதப்பட்டது). இது பற்றி தங்களுக்கு எழுதிய இரு கடிதங்களிலும் டாக்டர் அம்பேத்கர் இது பற்றிக் குறிப்பிட்டிருந்தார்.[3] அதில் ஆசாத் கூறினார்: ''ஷெட்யூல்டு வகுப்பினரை ஒரு சிறுபான்மை என்ற கருத்தை காங்கிரஸ் மறுக்கிறதென்றும் அவர்களை இந்துக்களின் பிரிக்க முடியாத பாகமாகக் கருதுகிறது'' (cond. 6861, பக்கம் 23, பாரா 2) இடைக்கால அரசாங்கத்தில் சிறுபான்மையினருக்கு ஒதுக்கப்பட்ட இடங்களை நிரப்புவதற்கு முன்பு, தாம் பிரதான கட்சிகளை கலந்து ஆலோசிக்கப் போவதாக ஜின்னாவுக்கு[4] வைஸ்ராய் அளித்த வாக்குறுதியும் அந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது.

5. ஆலோசனைக் குழுவில் போதுமான எண்ணிக்கையில் ஷெட்யூல்டு வகுப்பினர் பிரதிநிதிகளை உட்படுத்த காங்கிரஸ் விரும்பாது என்பதற்கு சாதகமான காரணம் எதுவும் இல்லை. இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் உள்ள விமர்சனங்களிலிருந்து தப்பிக்க

1. எண் 250 (பக்கம் 515 ஐப் பார்க்க -ஆசிரியர்).
2. தொகுதி VII , எண். 603 (அதிகார மாற்றம்).
3. (அதிகார மாற்றம்) எண் 105 மற்றும் 142 - கீழ்க் குறிப்பில் காண்க
4. தொகுப்பு VII, எண் 573 (அதிகார மாற்றம்)

வேண்டுமென அவர்கள் கவலைப்படுவார்கள். ஷெட்யூல்டு வகுப்பினர் முஸ்லிம் லீகுடன் இணைந்து கொள்வதைத் தடுக்க வாகிலும், ஷெட்யூல்டு வகுப்பினர் அதிகம் பேரை தங்கள் பக்கம் வென்றெடுக்க, அல்லது சமரசம் செய்து கொள்ள வேண்டுமென்ற அக்கறை கொண்டுள்ளனர். குடிமக்கள் (citizen) உரிமைகளோடு, சிறுபான்மையினர் உரிமைகள் பற்றியும் பரிசீலிக்கும் (ஆலோசனைக் குழு) ஷெட்யூல்டு வகுப்பினர் பிரதிநிதிகளை உட்படுத்துவது அவர்கள் ஒரு சிறுபான்மையா, இல்லையா என்ற கேள்வியைப் பாதிக்க வேண்டியதில்லை. மறுபுறத்தில், காங்கிரஸை எதிர்க்கும் அம்பேத்கரோ அல்லது ஷெட்யூல்டு வகுப்பினரின் மற்ற உறுப் பினரோ குழுவில் ஒரு இடம் பிடிப்பாரா என்பதற்கு எந்த உத்தர வாதமும் இல்லை.

6. தூதுக் குழுவின் மே 16 அறிக்கையின் பாரா 20ன் அர்த் தத்தில் ஷெட்யூல் வகுப்பினர் ஒரு சிறுபான்மை என்று ஒரு பொதுப் பிரகடனம் வேண்டுமென்ற டாக்டர் அம்பேத்கரின் வேண்டுகோளை நாம் முன் வந்து செய்யக் கூடாது என்றுதான் நான் இன்னமும் நினைக்கிறேன். அவ்வாறு செய்வது காந்தியுடன் மிக நிச்சயமாக ஒரு கருத்து வேறுபாட்டை ஏற்படுத்தும். அதை வெளிப்படுத்துவதற் காக, அவர்களை உட்படுத்துவதை காங்கிரஸ் எதிர்ப்பதில் முடியலாம். ஷெட்யூல்டு வகுப்பினர் ஒரு சிறுபான்மை என்று நாம் கூறிவிடலாம் ஆனால், அவர்கள் குழுவில் உட்படுத்தப்பட வேண்டும் என்று கூறினால், நமது அறிக்கை ஆங்கிலோ - இந்தியர் மற்றவர்களும் தங்களுக்குச் சாதகமாக அத்தகைய அறிக்கைக்கு வேண்டுகோள் விடுக்கத் தூண்டலாம். அரசியல் நிர்ணய சபையில் தலையிடுவதாக புரிந்துகொள்ளப்படலாம்; இதைத் தவிர்ப்பதில் நாம் அதிகமாக அக்கறை கொண்டுள்ளோம். ஆலோசனைக் குழுவில் ஷெட்யூல்டு வகுப்பினரை, (இப்பொழுது) உதாரணமாக, காங்கிரஸ் நடத்துவதைவிட மேலும் நல்லவிதமாக நடத்த அத்தகைய (பிரகடனம்) ஊக்குவிக்கும் என்பதற்கான சாத்தியப்பாடு எதுவும் இல்லை. அம்பேத்கர் அவர்களுக்கும் இது உதவி செய்யாது; ஏனெனில், காங்கிரஸுக்கு சாதகமாக இருப்பவர்கள் மற்றும் சாதகமாக இல்லாதவர்கள் என்ற எந்தப் பாகுபாடும் இல்லாமல் சும்மா ஷெட்யூல்டு வகுப்பினர் என்று அது குறிப்பிடும். அட்லி தமது நாட்குறிப்பில் மேற்கொண்டு நடவடிக்கை இல்லை என்று குறித்தார்.*

பெத்திக் லாரன்ஸ்

★ அட்லி ஆவணங்கள், பல்கலைக் கழகக் கல்லூரி, ஆக்ஸ்போர்ட்

# 21

# அமைச்சரவைத் தூதுக்குழுவும் தீண்டத்தகாதவர்களும்

## தீண்டத்தகாதவர்களை அமைச்சரவைத் தூதுக்குழு எவ்வாறு அலட்சியப்படுத்தியது?

*''கராச்சி, 1946 அக்டோபர் 14*

*ஷெட்யூல் வகுப்பினரின் தலைவரும் வைஸ்ராயின் நிர்வாகக் கவுன்சிலின் முன்னாள் உறுப்பினருமான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் லண்டன் போகும் வழியில் பம்பாயிலிருந்து விமானம் மூலம் இன்று கராச்சி வந்தடைந்தார்.*

*ஒரு அரசியல் பணியாக தாம் சென்று கொண்டிருப்பதாகவும், பிரதம மந்திரி திரு.ஸி.ஆர். அட்லி அவர்களையும் மற்றும் திரு. சர்ச்சில் அவர்களையும் சந்தித்து அவர்களுடனும் இந்திய அரசியல் சாசன விஷயங்கள் பற்றி விவாதிப்பேன் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். மேற்கொண்டு விவாதத்தில் இறங்கவோ அவரது பயண நோக்கம் பற்றி தெளிவுபடுத்தவோ அவர் மறுத்தார் - ஏ.பி.ஐ.''[1]*

*வினியோகிப்பதற்காக கீழ்க்கண்ட ஒரு நிகழ்ச்சிப் பதிவுக் குறிப்பை தயாரித்து தம்முடன் எடுத்துச் சென்றார் டாக்டர் அம்பேத்கர்*

***- ஆசிரியர்கள்***

*''இந்தியாவில் நெருக்கடியைத் தீர்ப்பதற்காக அமைச்சரவைத் தூதுக்குழு தமது மே 10ம் தேதி அறிக்கையில் தமது இடைக்கால, மற்றும் நீண்டகால ஆலோசனைகளை முன் வைத்தனர். அவர்களின் ஆலோசனைகளின் மிகவும் புண்படுத்தும் மற்றும் திகைப்பையூட்டும் அம்சம் என்னவெனில் இந்தியாவின் தேசிய வாழ்வில் தீண்டத்தகாதவர்களை ஒரு தனியான, தெளிவாக வேறுபட்ட ஒரு கூறு (element) என்று அவர்கள் ஏற்றுக் கொள்ள மறுப்பதாகும். தீண்டத்தகாதவர்களை தூதுக்குழு முற்றிலுமாக அலட்சியப்படுத்தினர் என்பதை நீண்ட அறிக்கையில் ஒருமுறைகூட குறிப்பிடாததிலிருந்து தெரிந்து கொள்ளலாம். எந்த அளவுக்கு அமைச்சவைத்*

---

*1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1946 அக்டோபர் 15*

தூதுக்குழு தீண்டத்தகாதவர்களை அலட்சியப்படுத்திற்று என்பதை கீழ்க்கண்டவை தெளிவாக்கும்.

(i) சீக்கியர்கள் மற்றும் முஸ்லிம்கள் சம்பந்தமாக அவர்களுக்கு மத்திய நிர்வாகக் கவுன்சிலில் பிரதிநிதித்துவம் அளித்தது போல, தங்கள் பிரதிநிதிகளை அதற்கு நியமிக்க தீண்டத்தகாதவர்களுக்கு உரிமை வழங்கப்படவில்லை. இப்போதைய இடைக்கால அரசாங்கத்தில் அவர்களுக்கு இரு பிரதிநிதிகள் உள்ளனர்; ஆனால் அவர்களில் எவரும் ஷெட்யூல் வகுப்பினருக்கு விசுவாசம் உள்ளவர்களோ கடமைப்பட்டவர்களோ இல்லை. இவர்களில் ஒருவர் காங்கிரஸால் நியமிக்கப்பட்டவர், மற்றவர் முஸ்லிம் லீகினால் நியமிக்கப்பட்டார்.

(ii) இடைக்கால அரசாங்கத்தில் முஸ்லிம்களுக்குச் செய்துள்ளதுபோல, ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒரு பங்கு (கோட்டா) நிர்ணயிக்கப்படவில்லை. 1945ல் நடந்த சிம்லா மாநாட்டில், 14 பேர் கொண்ட அமைச்சரவையில் (Cabinet) ஷெட்யூல்டு வகுப்பினருக்கு குறைந்தது இரண்டு உறுப்பினர் அளிக்கப்படும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது. 1945க்கும் 1946க்கும் இடையிலான இந்த மாற்றத்திற்கு காரணம் தெரிந்து கொள்ள முடியவில்லை.

(iii) அரசியல் நிர்ணய சபையில் தனி பிரதிநிதித்துவம் பெற அவர்களுக்கு உரிமை வழங்கப்படவில்லை. மன்னர்பிரான் அரசாங்கத்தின் நிலைநிறுத்தப்பட்ட கொள்கையிலிருந்து அமைச்சரவைக் குழுவின் முடிவு எவ்வாறு விலகிச் செல்கிறது.

2. அமைச்சரவைத் தூதுக்குழு தீண்டத்தகாதவர்களுக்கு ஒரு கொடுமையான தவறை இழைத்தது மட்டுமல்லாமல், இந்திய அரசியல் மற்றும் தீண்டத்தகாதவர்களின் நிலைபற்றி மன்னர் பிரான் அரசாங்கத்திற்கு வழிகாட்டிய கோட்பாடுகளிலிருந்து மிக மோசமாக விலகி செல்கிறது.

(i) 1920க்கு முன்பு தங்கள் சொந்த அதிகாரத்தின் அடிப்படையிலும் அவர்களின் சொந்த விருப்பங்களுக்கு ஏற்பவும் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்திய அரசாங்கத்தில் அரசியல் சாசன மாற்றங்களைச் செய்தது.

1920ல் முதல் முறையாக இந்தியர்களைக் கலந்தாலோசித்து இந்திய அரசியல் சாசனத்தை உருவாக்குவது என்று பிரிட்டிஷ்

அரசாங்கம் முடிவு செய்தது. அதற்கு ஏற்ப ஒரு வட்டமேஜை மாநாடு கூட்டப்பட்டது; அதில் கலந்துகொள்ள இந்தியர்கள் அழைக்கப்பட்டனர். இந்தியர்களுக்குள்ளே, தீண்டத்தகாதவர்களின் பிரதிநிதிகளும் இருந்தனர்; காங்கிரஸ் அல்லது வேறு அரசியல் கட்சியிலிருந்து தனியாக, சுதந்திரமாக இவர்கள் அழைக்கப்பட்டனர்.

(ii) இந்தியத் தேசிய வாழ்வில் ஒரு தனிக் கூறாக தீண்டத்தகாதவர்கள் அங்கீகரிக்கப்படுவதை எதிர்த்து திரு.காந்தி போராடினார்; அவர்கள் இந்துக்களின் ஒரு பகுதி என்றும் எனவே தனிப் பிரதிநிதித்துவத்திற்கு அவர்களுக்கு உரிமை கிடையாது என்றும் அவர் வாதித்தார். (தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்தி) திரு.காந்தியின் வாதத்தை ஏற்க மறுத்து பிரிட்டிஷ் அரசாங்கம், இந்திய தேசிய வாழ்வில் தீண்டத்தகாதவர்கள் ஒரு தனியான வேறுபாடுடைய கூறு என்று அங்கீகரித்து, எனவே முஸ்லிம்கள் இந்தியக் கிறித்துவர்கள் போன்ற மற்ற சிறுபான்மையினரைப் போல இவர்களும் பாதுகாப்புக்கு உரிமை பெருகின்றனர் என்று அவர்கள் தீர்ப்பு வழங்கினர்.

(iii) 1945ல் நடைபெற்ற சிம்லா மாநாட்டில், பிரிட்டிஷ் அரசாங்கம் இதே கோட்பாட்டைக் கடைப்பிடித்தது. அழைப்பு விடுக்கப்பட்ட இந்தியர்களில், தீண்டத்தகாதவர்களின் ஒரு பிரதிநிதி இருந்தார். அவர் காங்கிரஸ் அல்லது எந்த பிற எந்த அரசியல் கட்சியின் சார்பில் இல்லாமல் தனியாகவும் சுதந்திரமாகவும் அழைக்கப்பட்டார்.

(iv) 1942 கிரிப்ஸ் ஆலோசனைகளில் உட்படுத்தப்பட்ட அரசியல் நிர்ணய சபையில் தீண்டத்தகாதவர்களுக்குத் தனி பிரதிநிதித்துவம் அளிக்கும் ஷரத்து இல்லாமல் இருந்ததால், அமைச்சரவைத் தூதுக் குழுவின் இப்போதைய ஆலோசனைகள் அதிலிருந்து விலகி செல்லவில்லை என்று கூறப்படலாம். பதில் என்னவெனில், அவை விலகிச் செல்கின்றன. 1942 கிரிப்ஸ் ஆலோசனைகளில், தீண்டத்தகாதவர்களுக்கு மட்டும் தனிப்பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை என்று கூறமுடியாது. அரசியல் நிர்ணய சபையில் எந்த சிறுபான்மையினருக்கும் தனிப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை. ஆனால், அமைச்சரவைத் தூதுக் குழுவின் அரசியல் நிர்ணய சபையில், தீண்டத்தகாதவர்களுக்கு மறுக்கப்பட்ட தனிப்பிரதிநிதித்துவம், முஸ்லிம்களுக்கும் சீக்கியர்

களுக்கும் அளிக்கப்பட்டது. இது பாரபட்சமாகும்; இழைக்கப்பட்ட இந்தத் தவறைப் பற்றித்தான் அவர்கள் (தீண்டத்தகாதவர்கள்) புகார் செய்கிறார்கள்.

3. அமைச்சரவைக் குழுவின் ஆலோசனைகள், இந்திய தேசிய வாழ்வில் தீண்டத்தகாதவர்களை ஒரு தனிக் கூறாக அங்கீகரிக்கும் கொள்கையிலிருந்து விலகிச் செல்கிறது; மேலும் முஸ்லிம்களையும் சீக்கியர்களையும் அங்கீகரித்து இவர்களை (தீண்டத்தகாதவர்களை) அங்கீகரிக்க மறுப்பதன் மூலம் அவர்களைப் பாரபட்சமாக நடத்துகிறது; (தூதுக்குழுவின்) ஆலோசனைகளில் உள்ள நியாயமற்ற தன்மை இதில் அடங்கியுள்ளது.

**தீண்டத்தகாதவர்களுக்கு மன்னர்பிரான் அரசாங்கம் அளித்த வாக்குறுதிகளை அமைச்சரவைத் தூதுக் குழுவின் முடிவு எவ்வாறு ரத்து செய்கிறது?**

4. தீண்டத்தகாதவர்கள் ஒரு தனிக்கூறு என்று அமைச்சரவைத் தூதுக் குழுவால் அங்கீகரிக்காதது, பிரிட்டிஷ் அரசாங்கம் அவர்களுக்கு அளித்த வாக்குறுதிகளுக்கு மாறானது, குறிப்பிடப்பட வேண்டிய சில வாக்குறுதிகள் பின்வருமாறு:

**(i)**

''அரசியல் சாசன திட்டங்கள் எதிலும், இந்திய ஐக்கிய நலன்களுக்காக, இந்திய சமஸ்தானங்களை உட்படுத்துவது அத்தியாவசியமான தேவை என்பதையும் நாம் மறக்கக்கூடாது.

அவற்றில் இரண்டை மட்டும் - பெரும் எண்ணிக்கையிலான முஸ்லிம்களும் ஷெட்யூல் வகுப்பினரும் - சென்ற காலத்தில் சிறுபான்மையினருக்கு அளித்த வாக்குறுதிகள் (உத்தரவாதங்கள்) உள்ளன. அவர்களின் நிலை பாதுகாக்கப்பட வேண்டும் என்பது யதார்த்தமானது; அந்த உத்தரவாதங்கள் கௌரவிக்கப்பட வேண்டும்''.

*- 1940 ஜனவரி 10ம் தேதி பம்பாய் ஓரியண்ட் கிளப்பில் லின்லித்கோ பிரபு ஆற்றிய உரையிலிருந்து சில பகுதிகள்.*

**(ii)**

*''முன்வந்துள்ள இரண்டு முக்கிய விஷயங்கள் இவை. தங்களுடைய நிலையை நான் தெளிவுபடுத்த வேண்டுமென்று மன்னர்பிரான் அரசாங்கம் இப்பொழுது விரும்புகிறது. முதலாவது விஷயம், எந்த எதிர்கால அரசியல் சாசனத் திட்டத்திலும் சிறு பான்மையினர் நிலை.... இந்தியாவின் அமைதி நிலை மற்றும் நல்வாழ்க்கைக்கான தங்கள் பொறுப்புக்களை, எந்த அமைப்பு முறையான அரசாங்கத்திற்கும் - தேசிய வாழ்வில் உள்ள பெரிய பலம் வாய்ந்த கூறுகளால் அதன் அதிகாரம் நேரடியாக மறுக்கப் பட்டால் - மாற்ற அவர்கள் (மன்னர்பிரான் அரசாங்கம்) யோசிக்க முடியாது என்பது சொல்லாமலே விளங்கும். அத்தகைய அரசாங் கத்திற்கு பணிந்து போகும்படி அக்கூறுகளை நிர்ப்பந்தப்படுத்து வதற்கும் மன்னர்பிரான் அரசாங்கம் துணைபோகாது''*

*- 1940 ஆகஸ்ட் 8ம் தேதிய வின்லித்கோ பிரபுவின் அறிக்கை களிலிருந்து சில பகுதிகள்.*

**(iii)**

*''காங்கிரஸ் தலைவர்கள் ஒரு பிரமிக்கத்தக்க ஸ்தாபனத்தைக் கட்டி வளர்த்துள்ளார்கள். இந்தியாவில் அதி திறமை வாய்ந்த அரசியல் இயந்திரம் அது. அவர்கள் கூறிக்கொள்வதுபோல் இந்திய அரசியல் வாழ்வில் எல்லாக் கூறுகளுக்காக காங்கிரஸ் உண்மையில் பேச முடிந்தால், அப்பொழுது அவர்கள் கோரிக்கை எவ்வளவு தீவிரமாக இருந்தாலும் இன்று இருப்பதைவிட நமது பிரச்சினை பல அம்சங்களில் மிக எளிதானதாக இருந்திருக்கும். இந்தியாவில் தனியாக எடுத்துக் கொண்டால், எண்ணிக்கையில் மிகப் பெரிய கட்சிதான் அது. ஆனால், இந்தியா முழுமைக்கும் தாங்கள் பேசு வதாக உரிமை கோருவது, இந்தியாவின் சிக்கலான வாழ்வில் பல முக்கிய கூறுகளால் முற்றிலுமாக மறுக்கப்படுகிறது. இந்த மற்ற வர்கள் எண்ணிக்கையில் அதிகம் உள்ள சிறுபான்மையினராகக் கருதப்படவேண்டும் என்ற உரிமை மட்டும் கோரவில்லை. ஆனால் எதிர்கால இந்தியக் கொள்கையில் தாங்கள் முக்கிய தனிக் கூறுகளாக*

பங்கேற்க உரிமை கோருகின்றனர். இந்தக் கூறுகளில் அதிக முன்னணியில் நிற்பவர்கள் பெரும் எண்ணிக்கையிலுள்ள முஸ்லிம் சமூகம். பூகோள ரீதியான தொகுதிகளில் பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்படும் அரசியல் நிர்ணய சபை வரையும் அரசியல் சாசனத்தோடு தங்களுக்கு எந்த சம்பந்தமும் இல்லை என்று கூறுகின்றனர். வெறும் எண்ணிக்கையில் பெரும்பான்மையாக உள்ளவர்களின் செயல்பாடுகளுக்கு எதிராக, தங்களை ஒரு கூறாகக் கருதி அரசியல் சாசனம் சம்பந்தமான எந்த விவாதத்திலும் கலந்து கொள்ள தங்கள் உரிமையைக் கோருகிறார்கள். ஷெட்யூல்டு வகுப்பினர் என்று அறியப்படும் மகத்தான கூறுக்கும் இது பொருந்தும்; அவர்கள் சார்பாக திரு.காந்தி இதய பூர்வமான முயற்சிகளை மேற்கொண்டாலும், ஒரு சமூகம் என்ற முறையில் காங்கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்தும் இந்து சமூகத்திற்கு வெளியில் நிற்கிறார்கள் அவர்கள்''

-இந்திய விவகார அமைச்சர் மாண்புமிகு திரு. எல்.எஸ். அமெரி அவர்கள் காமன்ஸ் சபையில் 1940 ஆகஸ்ட் 14ம் தேதி ஆற்றிய சொற்பொழிவிலிருந்து ஒரு பகுதி.

(iv)

''எல்லாக் காரணங்களையும் விவரங்களையும் மீண்டும் எடுத்துக் கூறாமலே, மன்னர்பிரானின் அரசாங்கம் அப்பொழுது தெளிவுபடுத்தியதைத் தங்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்:-

(அ) இந்தியத் தேசிய வாழ்வின் எல்லாக் கூறுகளும் ஏற்றுக் கொள்ளும் அரசியல் சாசனத்தை வரைவதும் தேவைப்படும் மன்னர் பிரான் அரசாங்கத்துடனான ஒப்பந்தம் பற்றி பேச்சுவார்த்தைகள் நடத்துவது என்ற நிபந்தனையின் பேரில், போர் நடவடிக்கைகள் முடிந்தபின் நிபந்தனையற்ற சுதந்திரத்தை அளிப்பதாக (மன்னர் பிரான் அரசாங்கம்) வாக்களித்தனர்.

(ஆ) யுத்தம் நடந்து கொண்டிருக்கும் காலத்தில், அரசியல் சாசனத்தில் எந்த மாற்றத்தையும் கொண்டு வருவது சாத்தியமல்ல. அவ்வாறு செய்வதன் மூலமே தாங்கள் ஆலோசனை கூறும் ஒரு தேசிய அரசாங்கத்தை ''மத்திய சட்ட சபைக்குப் பொறுப்புள்ளதாக ஆக்க முடியும்''

*இன மற்றும் மதச் சிறுபான்மையினர், தாழ்த்தப்பட்டவர்கள் நலன்களை பாதுகாப்பதற்கான அவர்களது கடமையை நிறை வேற்றுவதையும் இந்திய சமஸ்தானங்களுடன் தங்களுக்குள்ள ஒப்பந்தக் கடமைகள் நிறைவேற்றுவதையும் உறுதி செய்து கொள்வதே இந்த நிபந்தனைகளின் நோக்கம்''*

*-1944 ஆகஸ்ட் 15ம் தேதி வேவல் பிரபு திரு.காந்திக்கு எழுதிய கடிதத்திலிருந்து ஒரு பகுதி*

*5. தீண்டத்தகாதவர்களுக்கு தனிப் பிரதிநிதித்துவம் அளிக்கக் கூடாது என்ற அமைச்சரவைக் குழுவின் ஆலோசனை சம்பந்தப் பட்ட உண்மைகளை நேர்மையுடன் பரிசீலித்ததன் அடிப்படையில் அவர்கள் எடுத்த தனிப்பட்ட நிர்ணயம்* (judgement) *அல்ல. மாறாக, தூதுக்குழு செய்துள்ளது என்னவெனில், திரு.காந்தியின் ஒருசார்பான தப்பெண்ணத்தை* (prejudice) *முழுவதும் திருப்தி செய்வதே இந்தியா வின் தேசிய வாழ்வில் தீண்டப்படாதவர்களை ஒரு தனிக்கூறாக ஏற்றுக் கொள்வதை திரு.காந்தி மூர்க்கத்தனமாக எதிர்க்கிறார். வட்டமேஜை மாநாட்டில் அவர்கள் அங்கீகரிக்கப்பட்டதை அவர் எதிர்த்தார். தமது எதிர்ப்பையும் தாண்டி திரு. ராம்சே மாக் டொனால்டின் வகுப்புவாரித் தீர்வில் அவர்களை ஒரு தனிக்கூறு என்று அங்கீகரித்த பொழுது, இந்த (தனிக்கூறு என்ற) அங்கீகாரம் வாபஸ் பெறாவிடில் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாகப் பயமுறுத்தினார். மறுபடியும் 1945 சிம்லா மாநாட்டில், தீண்டத்தகாதவர்களுக்கு மன்னர்பிரான் அரசாங்கம் தனி அங்கீகாரம் அளிக்கப்பட்டுள்ளதைக் கண்டதும் திரு.காந்தி தமது எதிர்ப்பைத் தெரிவித்தார். தங்கள் ஆலோசனைகள் வெற்றிபெற வேண்டுமென் பதில் அமைச்சரவை குழு ஆர்வம் கொண்டிருந்தது. திரு.காந்தியின் சம்மதத்தைப் பெறாவிடில், அது சாத்தியமில்லை. திரு.காந்தி அதற்கு ஒரு விலை கேட்டார்; அதைத் தூதுக்குழு வழங்கியது. அந்த விலை என்னவெனில், தீண்டத்தகாதவர்களின் தனியான அரசியல் ஜீவிதத்தை தியாகம் செய்வதாகும். அதற்கு மேலும் செல்ல முடியும்; அது என்னவெனில், சிறுபான்மையினர் பற்றிய அமைச்சரவைக் குழுவின் ஆலோசனைகள் வட்டமேஜை மாநாட்டில் திரு.காந்தி எதிரொலித்த (திட்டம்) சூத்திரத்தின் மறுபதிப்பேயன்றி வேறல்ல. அரசியல் நோக்கங்களுக்காக தாம் கீழ்கண்ட சமூகத்தினரையே தாம் அங்கீகரிப்பதாக திரு. காந்தி சொன்னார் : (1) இந்துக்கள், (2) முஸ்லிம்கள், (3) சீக்கியர்கள்.*

## III

### தனது முடிவை நியாயப்படுத்த அமைச்சரவைத் தூதுக்குழு வலியுறுத்திய காரணங்கள் :

6. தீண்டத்தகாதவர்களை தனிக்கூறாக அங்கீகரிக்க வேண்டாம் என்ற தங்கள் முடிவை நியாயப்படுத்த, 1946 பிப்ரவரியில் மாகாண சட்டசபைகளுக்கு நடந்த தேர்தல்களின் முடிவுகளை, அமைச்சரவைத் தூதுக்குழு ஆதாரமாகக் கொண்டது. 1946 ஜூலை 18ல் பாராளுமன்றத்தில் அமைச்சரவை தூதுக் குழு ஆலோசனைகள் மீது நடந்த விவாதத்தின் போது, கீழ்கண்ட விஷயங்களை எடுத்துக்கூற தூதுக்குழு உறுப்பினர்கள் முயற்சித்தனர்.

(i) தேர்தலில், தீண்டத்தகாதவர்களுக்கு ஒதுக்கப்பட்ட எல்லா இடங்களையும் காங்கிரஸ் கைப்பற்றியது; எனவே காங்கிரஸ் தீண்டத்தகாதவர்களை பிரதிநிதித்துவப் படுத்தியது. விஷயம் இவ்வாறிருக்க, தீண்டத்தகாதவர்களுக்கு தனிப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு எந்த நியாயமும் இல்லை என்பது;

(ii) அகில இந்திய ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளனத்தையும் என்னையும்கூட பின்பற்றுபவர்கள் பம்பாய் மற்றும் மத்திய மாகாணங்களின் எல்லைக்குள்ளேயே உள்ளனர்.

### காரணங்கள் பயனற்றவை

7. இவையெல்லாம் அருவருக்கத்தக்க விளக்கங்கள்; எந்த நேர்மையான பரிசீலனைக்கும் நிற்காது. காங்கிரஸின் பிரதிநிதித்துவத் தன்மையை மதிப்பிட தேர்தல் முடிவுகளை அடிப்படையாகக் கொண்டது. அமைச்சரவைத் தூதுக் குழு துவக்கத்திலேயே செய்த மிகப் பெரிய தவறாகும். அவ்வாறு செய்ததன் மூலம், கீழ்க்கண்ட சூழ்நிலைகளை கணக்கில் எடுக்க தூதுக்குழு தவறியது.

(i) யுத்த காலம் முழுவதிலும், இந்து வாக்காளர்கள் தீவிரமாக பிரிட்டிஷ் - எதிர்ப்பு நிலையில் இருந்தனர். அவர்கள் யுத்தம் சம்பந்தமான வேலைகளை செய்தாலும் அதை இஷ்டபூர்வமாகச் செய்யவில்லை.

பிரிட்டிஷ் எதிர்ப்பையும் யுத்த முயற்சியில் ஒத்துழை யாமையையும் காங்கிரஸ் கையாண்டதால் அது இந்து வாக்காளர் களுக்கு மிக வேண்டியதாய் ஆயிற்று. மற்ற கட்சிகள் குறிப்பாக ஷெட்யூல் வகுப்பினர், இந்த தேர்தல்களில் தோற்றதற்கு காரணம் (அவை) அவர்கள் பிரிட்டிஷ்காரர்களுக்கு மிக சாதகமாக இருந்து யுத்த முயற்சியில் ஒத்துழைத்தனர்.

(ii) தேர்தல் தேதி நிர்ணயிக்கப்படுவதற்கு சற்று முன்னே (வைஸ்ராய்) படைத் தளபதி இந்திய தேசிய ராணுவத்தினர் மீது விசாரணையை நடத்தினார். உடனே காங்கிரஸ், இந்திய தேசிய ராணுவ வீரர்களின் லட்சியத்தை உடனே எடுத்துக் கொண்டு ஆதரவளித்தது; அதை ஒரு தேர்தல் பிரச்னையாகவும் ஆக்கியது. சரிந்துபோன செல்வாக்கு உயர்ந்ததற்கு ஒரு பிரதான அம்சமாக இருந்தது, இந்த விசாரணையாகும்.

(iii) தேர்தல் போராட்டம், சுதந்திரம், இந்தியாவை விட்டு வெளியேறு என்ற கோஷங்கள் மீது நடைபெற்றது. இந்தியாவின் எதிர்கால அரசியல் சாசனம் ஒரு பிரச்சினையாக இருக்கவில்லை. அது முக்கிய விஷயமாக முன்வைக்கப்பட்டிருந்தால், அதற்குக் கிடைத்த பெரும்பான்மையை காங்கிரஸ் ஒருபோதும் பெற்றிருக்காது.

(iv) தேர்தல் முடிவுகளை அறிவிக்கும் அதிகாரிகளும் தேர்தல் மையங்களில் இருந்த அதிகாரிகளும் - அவர்கள் அனைவரும் சாதி இந்துக்கள். காங்கிரஸை எதிர்த்து போட்டியூட்ட ஷெட்யூல்டு வகுப்பினர்பால் காட்டிய விரோத மனப்பான்மையை அமைச் சரவைத் தூதுக்குழு கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. நியமனப் பத்திரங்களை நிராகரிக்கும் அளவிற்கும் வாக்குச் சீட்டுகளை வழங்க மறுக்கும் அளவிற்கும் சென்றது. தீண்டத்தகாதவர்களின் வாக் காளர்கள் காங்கிரஸ் வேட்பாளர்களுக்கு ஓட்டு அளிக்கத் தயாராக இல்லை என்ற காரணத்திற்காக, அவர்கள் மீது எந்த அளவுக்கு வன் முறை கையாளுவதும், பயமுறுத்துவதும் நடந்தது என்பதை அமைச்சரவைத் தூதுக்குழு கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. ஆக்ராவில் தீண்டத்தகாதவர்களின் 40 வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டன. பம்பாயில் ஒரு தீண்டத்தகாதவர் கொலை செய்யப்பட்டார். கிராமப் புறங்களில் நூற்றுக்கணக்கான கிராமவாசிகள் வாக்கு அளிப்பதி லிருந்து தடுக்கப்பட்டனர். நாகபுரியில் ஒரு போலீஸ் அதிகாரி காங்கிஸுக்கு தீவிர ஆதரவாளராகி வாக்காளரை பயமுறுத்தி அனுப்புவதற்காக மாஜிஸ்ரேட் அனுமதியின்றி ஒரு கூட்டத்தின்

மீது சுட்டார். இந்தியா முழுவதிலும் ஏராளமாக இத்தகைய சம்பவங்கள் நிகழ்ந்தன.

8. அமைச்சரவைத் தூதுக்குழு இந்த சூழ்நிலைகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டிருந்தால், தேர்தல்களில் காங்கிரஸ் வெற்றிக்குக் காரணம் முற்றிலுமாக சாதகமான நிலைமைகளே என்பதை உணர்ந்திருப்பார்கள். இத்தகைய சூழ்நிலைமைகளில் நடந்த தேர்தல் முடிவுகளை, அரசியல் நிர்ணய சபையில் தீண்டத் தகாதவர்களுக்கு பிரதிநிதித்துவம் அளிக்காததை நியாயப்படுத்து வதற்கு எடுத்துக் கொள்ளக்கூடாது.

### தனது முடிவுக்காக தூதுக்குழு தவறான அளவுகோலை (criterian) கையாண்டது எவ்வாறு?

9. காங்கிரஸ் தீண்டத்தகாதவர்களை பிரதிநிதித்துவப் படுத்துகிறதா இல்லையா என்பதை முடிவு செய்ய தூதுக்குழு கையாண்ட அளவுகோல் தீண்டத்தகாதவர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களில் எத்தனையை காங்கிரஸ் இந்தத் தேர்தலில் வென்றது என்பது. இது தவறான அளவுகோல்; ஏனெனில், இறுதித் தேர்தல் களின் முடிவுகள் தீண்டத் தகாதவர்களின் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டது. பூனா ஒப்பந்தப்படி, இறுதித் தேர்தல்கள் இந்து வாக்குகளால் நிர்ணயிக்கப்படுகின்றன. தூதுக்குழு கையாண் டிருக்க வேண்டிய உண்மையான அளவுகோல் எது எனில், தீண்டத் தகாதவர்கள் எவ்வாறு வாக்களித்தனர், காங்கிரஸுக்கு சாதகமாக எத்தனை வாக்குகள் கிடைத்தன, காங்கிரஸுக்கு எதிராக எத்தனை வாக்குகள் என்று கண்டுபிடிப்பதாகும். இது முதல் கட்டத் தேர்தல் முடிவுகளிலிருந்து மட்டும்தான், இறுதித் தேர்தல் முடிவுகளிலிருந் தல்ல. ஏனெனில், முதல் கட்டத் தேர்தலில் தீண்டத்தகாதவர்கள் மட்டுமே வாக்களிக்கிறார்கள். முதல் கட்டத் தேர்தல்களின் முடிவு களை அடிப்படையாக எடுத்துக்கொண்டால், அமைச்சரவைக் குழுவின் முடிவு மடத்தனமானது, உண்மைகளுக்கு விரோதமானது என்று காணமுடியும். முதல் கட்டத் தேர்தல்களில் பதிவான வாக்கு களில் காங்கிரஸுக்கு 28 சதவிகிதவாக்குகளே கிடைத்தன; அதற்கு எதிராக 72 சதவிகித வாக்குகள் கிடைத்தன.

10. தீண்டத்தகாதவர்கள் காங்கிரஸில் இல்லை என்று கருதினால், அவர்களுக்கு ஒதுக்கப்பட்ட 151 இடங்களில் ஒவ்வொன்றுக்கும் ஒரு முதல்கட்ட தேர்தலை அவர்கள் பெற்றிருக்க வேண்டும். உண்மை என்னவெனில், இந்தியா முழுவதிலும் 43 இடங்களுக்கே முதல் கட்டத் தேர்தல்கள் இருந்தன. மீதி 108 இடங்களில் தீண்டத்தகாதவர்களுக்கு ஏன் முதல்கட்டத் தேர்தல்களை நடத்தவில்லை? கீழ்க்கண்ட காரணங்களுக்காக இந்த வாதம் அபத்தமானது.

(i) முதல்கட்டத் தேர்தல்கள் கட்டாயமில்லை. ஒரு இடத்திற்கு நான்கு வேட்பாளருக்கு மேல் போட்டி இருந்தால்தான், அது கட்டாயமாகிறது. முதல்கட்டத் தேர்தலில் ஒருவர் நின்றால் இறுதித் தேர்தல்களிலும் அவசியம் நிற்க வேண்டியதன் அவசியம் உணரப்படவில்லை. இரட்டை தேர்தலுக்கான செலவுகளை ஏற்க தீண்டத்தகாதவர்களின் இயலாமை, முதல்கட்டத் தேர்தல்களின் நிற்கும்படி தீண்டத்தகாதவர்களின் உறுப்பினர்களை ஊக்குவிப்பது மிகக் கஷ்டம். 43 இடங்களுக்காக மட்டுமே முதல்கட்டத் தேர்தல்கள் நடந்தன என்ற உண்மையை காங்கிரஸிலிருந்து தனியாக இருக்க தீண்டத்தகாதவர்கள் உரிமை கோரவில்லை என்ற ஊகத்துக்கு அடிப்படையாக முடியாது.

(ii) முதல்கட்டத் தேர்தலில் ஒவ்வொரு இடத்திற்கும் நான்கு வேட்பாளர்களை ஏன் நிறுத்தவில்லை என்று கேட்கப்பட வேண்டியது காங்கிரஸையே தீண்டத்தகாதவர்களை தான் பிரதிநிதித்துவப்படுத்துவதாக காங்கிரஸ் உரிமை கோரினால் 151 தொகுதிகளில் ஒவ்வொன்றிலும் (அது) நான்குக்கு மேற்பட்ட வேட்பாளர்களை காங்கிரஸ் டிக்கெட்டில் நிறுத்தி இறுதித் தேர்தலில் மற்ற எல்லாக் கட்சிகளையும் தோற்கடித்திருக்க வேண்டும். இதைக் காங்கிரஸ் செய்யவில்லை. அதற்கு மாறாக, 43 முதல் கட்டத் தேர்தல்களிலும் ஒவ்வொரு தொகுதியிலும் ஒரே வேட்பாளரை நிறுத்தி முதல் நான்கில் வருவதற்கான சந்தர்ப்பத்தை ஏற்படுத்தி, இறுதித் தேர்தலில் இந்து வாக்குகள் மூலம் அவரை வெற்றிபெறச் செய்தனர். இது எதைக் காண்பிக்கிறது எனில், காங்கிரஸ் மீது தீண்டத்தகாதவர்களுக்கு நம்பிக்கை இல்லை என்பதை காங்கிரஸ் அறியும் என்பதை.

(iii) 1937ல் தான் முதல்முறையாக வாக்களிக்கும் உரிமையை தீண்டத்தகாதவர்கள் பெற்றனர். 1937க்குப் பின்புதான் தேர்தல்களை நடத்துவதற்காக தங்களை ஸ்தாபன ரீதியாக திரட்ட தீண்டத்

தகாதவர்கள் துவங்கினர். தேர்தல்களில், காங்கிரஸ் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தை வென்றனர் என்ற உண்மையிலிருந்து, ஷெட்யூல்டு வகுப்பினர் காங்கிரஸுடன் இருக்கிறார்கள் என்ற முடிவு தவறு.

தேர்தல்களை போட்டியிட்டு நடத்துவதில் காங்கிரஸுக்கும் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்திற்கும் இடையே உள்ள சமத்துமற்ற பலத்தை அமைச்சரவை தூதுக்குழு கவனத்தில் கொண்டிருக்க வேண்டும். அதேபோல் தேர்தல்கள் முடிவுகளிலிருந்து சம்மேளனத்திற்கு பாதகமான முடிவுக்கு வரும்போதும் பரிசீலித்திருக்க வேண்டும்.

## தூதுக்குழு தங்கள் முடிவை நியாயப்படுத்த வலியுறுத்திய காரணங்களின் பயனற்ற தன்மை

11. டாக்டர் அம்பேத்கரைப் பின்பற்றியவர்கள் பம்பாய் மாகாணம், மத்திய மாகாண எல்லைகளுக்குள்ளேயே இருக்கிறார்கள் என்று அமைச்சரவைத் தூதுக்குழு வாதித்தது. இந்த அறிவிப்புக்கு எந்த அடிப்படையும் இல்லை. ஷெட்யூல் வகுப்பினர் சம்மேளனம் மற்ற மாகாணங்களிலும் செயல்பட்டு வருகிறது; மேலும், அங்கெல்லாம்கூட, பம்பாய் மற்றும் மத்திய மாகாணங்களைவிட அதிகம் இல்லாவிடினும் குறிப்பிடத்தக்க தேர்தல் வெற்றிகளை ஈட்டியுள்ளன. இவ்வாறு அறிவிப்பதற்குமுன், அரசியல் நிர்ணய சபைத் தேர்தலில் டாக்டர் அம்பேத்கர் பெற்ற வெற்றியை தூதுக்குழு கணக்கிலெடுக்கத் தவறியது. வங்காள மாகாண சட்ட சபையிலிருந்து ஒரு வேட்பாளராக அவர் நின்றார். பொதுத் தொகுதிகளை (இடங்களை)ப் பொறுத்தவரை எல்லோரையும் விட அதிக வாக்குகளை அவர் பெற்றார். காங்கிரஸ் கட்சித் தலைவரான திரு.சரத் சந்திரபோஸையே அவர் தோற்கடித்தார். பம்பாய் மற்றும் மத்திய மாகாணங்களுக்கு வெளியே டாக்டர் அம்பேத்கருக்கு செல்வாக்கு எதுவும் இல்லையெனில், வங்காளத்திலிருந்து அவர் எவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டார்? மேலும் அவசியம் ஞாபகத்தில் கொள்ள வேண்டியது : வங்காள சட்ட சபையில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு 30 இடங்கள் இருக்கின்றன. இந்த 30ல் 28 பேர் காங்கிரஸ் டிக்கெட்டில் நின்று வெற்றி பெற்றனர். தமது கட்சியைச் சேர்ந்த இருவரில் ஒருவர் தேர்தல் தினத்தன்று நோய் வாய்ப்பட்டார். அப்படியிருந்தும் டாக்டர் அம்பேத்கர் மற்ற எல்லோரையும்விட அதிக வாக்குகள் பெற்றார். காங்கிரஸ் வேட்பாளராக தேர்தலில் வெற்றிபெற்ற ஷெட்யூல்டு வகுப்பு

உறுப்பினர்கள் அவருக்கு வாக்களித்தாலன்றி இது நடந்திருக்க முடியாது. வங்காளத்திலுள்ள ஷெட்யூல்டு வகுப்பினர் டாக்டர் அம்பேத்கரின் வகுப்பைச் சேர்ந்தவர்களல்ல என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். காங்கிரஸைச் சார்ந்த ஷெட்யூல்டு வகுப்பு உறுப்பினர்கள், ஆனால் டாக்டர் அம்பேத்கரின் வகுப்பைச் சேராத வர்கள்கூட, ஷெட்யூல் வகுப்பினரின் தலைவராக அவரைக் கருது கிறார்கள் என்பதை இது எடுத்துக் காட்டுகிறது. தூதுக்குழு உறுப்பினர்களின் அறிவிப்பில் கூறப்பட்டது உண்மையல்ல என்று இது நிரூபிக்கிறது.

12. அரசியல் நிர்ணய சபையின் கலவை (composition)யுடன் ஒத்த நிலையை வைத்துக் கொள்வதற்காக, மற்ற சிறுபான்மையினர் விஷயத்தில் தாங்கள் செய்ததுபோல, ஷெட்யூல் வகுப்பின் விஷயத்திலும் இறுதித் தேர்தல் முடிவுகளை எடுத்துக் கொண்ட தாக அமைச்சரவைத் தூதுக்குழு உறுப்பினர்கள் வாதித்தனர். விசேஷ மாக வாதாடும் தன்மையில் உள்ளது இது; ஆனால், எந்த நியாய மும் இல்லை. முஸ்லிம்கள், இந்தியக் கிறிஸ்தவர்கள், மற்றும் சீக்கியர்களின் கடைசித் தேர்தல்கள் தனித் தொகுதிகள் அடிப் படையில் நடந்தன என்பதைத் தூதுக்குழு அறியும். ஷெட்யூல்டு வகுப் பினருக்கான இறுதித் தேர்தல் தனித் தேர்தல் தொகுதிகள் அடிப் படையில் அல்ல. இதனால், சமநிலை (uniformity) ஒரே தன்மையை கடைப்பிடிக்க அரசியல் நிர்ணய சபையில் தீண்டத்தகாதவர்களுக்கு பிரதிநிதித்துவம் அளிக்க முதல் கட்டத் தேர்தல் முடிவுகளை தூதுக்குழு அவ்வாறு செய்திருக்க வேண்டும்; ஏனெனில், தீண்டத் தகாதவர்களுக்கு புனா ஒப்பந்தம் நிர்ணயித்த தேர்தல் முறை அநீதியானது என்று விவாதத்தில் சர்.ஸ்டாபோர்ட் கிரிப்ஸால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அப்படியெனில், அதன் முடிவிற்கு தூதுக்குழு எதை அடிப்படையாகக் கொண்டது?

## IV

### நேரிடவிருக்கும் பெரிய ஆபத்திலிருந்து தீண்டத்தகாதவர்களைக் காப்பாற்ற என்ன செய்ய முடியும்?

13. அரசியல் நிர்ணய சபையை அமைச்சரவைத் தூதுக்குழு நிறுவியதன் மூலம், அதில் அறுதிப் பெரும்பான்மை பெற்றுள்ள சாதி இந்துக்களின் முழுத் தயவிற்கு கருணைக்கு (mercy) தீண்டத் தகாதவர்களை அது (அமைச்சரவைத் தூதுக்குழு) விட்டுவிட்டது.

மன்னர்பிரான் அரசாங்கம் வகுப்புவாரித் தீர்ப்பில் தங்களுக்கு வழங்கப்பட்ட தனித் தேர்தல் தொகுதிகள் திரும்பத் தரப்பட வேண்டுமென்றும், தமது சாகும்வரை உண்ணாவிரதம் மூலம் திரு. காந்தி ஏற்படுத்திய நிர்ப்பந்தத்தால் தங்கள் மீது திணிக்கப்பட்ட புனா ஒப்பந்தம் ரத்து செய்யப்பட வேண்டும் என்று தீண்டத்தகாத வர்கள் கோருகின்றனர். இதை இந்துக்கள் எதிர்க்கத்தான் செய்வார்கள். இந்து பெரும்பான்மையின் தயவில் அவர்கள் விடப் பட்டதாக கூறப்படும் விமர்சனத்திற்கு பதில் அளிக்கும் வழியில், சிறுபான்மையினர் உரிமைகளை பாதுகாக்கும் ஒரு வழியாக சிறு பான்மையினர் நலன்களைப் பாதுகாக்க சிறுபான்மையினர் ஆலோசனைக் குழு அமைக்க வேண்டும் என்ற தங்களது ஆலோ சனையை அடிக்கிறார்கள். அமைச்சரவைத் தூதுக்குழு ஆலோசனை குழு அமைக்கப்படுவதையும் அதன் அதிகாரங்களையும் பரிசீலிக்கும் எவரும் அது (அந்த அமைப்பு) பயனற்றதிலும் மோச மானது என்று தெரிந்து கொள்வர்.

(i) அதன் கலவையில் அது அரசியல் நிர்ணய சபையின் ஒரு வெளிறிய பிரதிபலிப்புத்தான். அரசியல் நிர்ணய சபையில் போலவே இதிலும் இந்துக்கள் ஆதிக்கம் வகிப்பர்;

(ii) அரசியல் நிர்ணய சபையிலும் ஆலோசனைக் குழுவிலும் காங்கிரஸ் தயவால் தேர்ந்தெடுக்கப்பட்ட தீண்டத்தகாதவர்கள் சில எண்ணிக்கையில் இருப்பர் என்ற உண்மை அவர்களுக்கு உதவி கரமாக இருக்காது; காரணம் அரசியல் நிர்ணய சபையிலும் ஆலோ சனை குழுவிலும் உள்ள தீண்டத்தகாதவர்கள் காங்கிரஸின் சிருஷ்டி களாக மட்டுமே இருப்பர்;

(iii) ஆலோசனைக் குழுவால் சிறுபான்மையினர் பாதுகாப்பு சம்பந்தப்பட்ட விஷயங்களின் மீதான முடிவுகள் வெறும் பெரும் பான்மைக்கு விடப்படுகிறது; அதன் பொருள்: முடிவுகள் சாதி இந்துக்களால் எடுக்கப்பட்டு, சிறுபான்மையினர் மீது திணிக்கப்படும்.

(iv) ஆலோசனைக் குழுவின் முடிவுகள் சாதகமாக இருந் தாலும், அவை சிபாரிசுகள் மட்டுமே. அவை அரசியல் நிர்ணய சபையைக் கட்டுப்படுத்தாது.

14. ஒரு ஆலோசனைக் குழுவின் அமைப்பு இவ்வாறு வஞ்சகமாக இல்லாவிட்டாலும் அது கேலிக் கூத்தாகும்; சிறுபான்மை

யினரின் லட்சியத்திற்கு இந்துப் பெரும்பான்மை விளைவிக்கக் கூடிய தீங்கான (பாதகமான) நடவடிக்கைகளை எதிர்த்து செயல்படுமென அதை நம்பி இருக்க முடியாது. தங்களது வன்மம் கொண்ட நோக்கங்களுக்கு இந்துப் பெரும்பான்மை தீண்டத்தகாதவர்களைக் குறிவைத்திருக்கிறது; ஒரு சிறுபான்மைக்குரிய அரசியல் பாதுகாப்புகளுக்கான உரிமையை அவர்களிடமிருந்து பறிக்க உறுதி கொண்டிருக்கிறது எனத் தோன்றுகிறது. 1946 டிசம்பர் 25ம் தேதி காங்கிரஸ் எழுதிய கடிதத்திலிருந்து இது தெளிவாகிறது. (வரிசை 21 cmd 6861) அந்தக் கடிதத்தில், தீண்டத்தகாதவர்கள் ஒரு சிறுபான்மை இல்லை என்ற நிலையை எடுத்துள்ளது. இது ஒரு வியப்பூட்டும் பிரேரணை (proposition). 1939 அக்டோபர் 21ம் தேதிய தமது வார இதழில் திரு.காந்தியே ஒப்புக் கொண்டபடி, இந்தியாவில் ஒரு உண்மையான சிறுபான்மையினர் தீண்டத்தகாதவர்கள். இவ்வாறு காங்கிரஸ் ஒரு முழு பல்டி அடித்துள்ளது. காங்கிரஸ் இப்பொழுது எடுத்துள்ள நிலை, 1935 இந்திய அரசாங்கச் சட்டத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுக்கு முரணானது; அந்தச் சட்டம் அவர்களைச் சிறுபான்மை என்பதை அங்கீகரித்தது. இந்த பல்டியால் திட்டமிடப்பட்ட தீங்கு என்ன என்பதைப் புரிந்துகொள்வது சாத்தியமல்ல. தீண்டத்தகாதவர்கள் ஒரு சிறுபான்மை என்று காங்கிரஸ் கருதாவிடில் மற்ற சிறுபான்மையினருக்கு அரசியல் நிர்ணயசபை ஒப்புக்கொள்ளக்கூடிய பாதுகாப்புகளை இவர்களுக்கு அளிக்க மறுக்கலாம். ஆகவே, தீண்டத்தகாதவர்களை ஆலோசனைக்குழு ஆபத்திலிருந்து காப்பாற்ற முடியாது.

15. எனவே, தீண்டத்தகாதவர்களின் நிலை பாதிக்கப்படாமல் இருக்க பாராளுமன்றம் அவசியம் தலையிட வேண்டும். தான் அளித்த வாக்குறுதிகளுக்காக மட்டுமல்லாமல், அரசியல் நிர்ணய சபை விவாதங்கள் அங்கீகாரத்திற்கு (ratification) உட்பட்டவையல்ல என்பதாலும் பாராளுமன்றம் அவசியம் செய்தாக வேண்டும்.

16. பாராளுமன்றம் என்ன செய்ய முடியும்? இடைக்கால அரசாங்க விஷயத்தில் தங்களுக்கு இழைக்கப்பட்ட தவறு திருத்தப்பட வேண்டும் என்று தீண்டத்தகாதவர்கள் விரும்புவார்கள். தங்களுக்கான இட ஒதுக்கீட்டை நிர்ணயிக்கப்படுவதை அவர்கள் விரும்புவார்கள். நிர்வாகக் கவுன்சிலுக்கு தங்கள் பிரதிநிதிகளை நியமிக்கும் உரிமை தங்களுக்கு அளிக்கப்பட வேண்டுமென அவர்கள் விரும்புவார்கள். இந்த உரிமைகள், அவை 1945 சிம்லா மாநாட்டில் கூட அங்கீகரிக்கப்பட்டன. இந்தத் தவறுகளை இப்பொழுது

*திருத்துவது கஷ்டம் என்று அவர்கள் உணர்கிறார்கள். ஆனால் சூழ்நிலைமைகள் மாறி, அரசாங்கம் மாற்றி அமைக்கப்பட்டால், இந்த தவறைச் சரிசெய்ய மன்னர்பிரான் அரசாங்கத்தைப் பாராளு மன்றம் வலியுறுத்தும் என அவர்கள் எதிர்பார்க்கிறார்கள்.*

*17. தீண்டத்தகாதவர்களுக்கு அவர்களின் அரசியல் பாது காப்புகளைப் பாதிக்க உறுதிபூண்டுள்ள சாதி இந்துக்களால் ஆதிக்கம் செலுத்தப்படும் அரசியல் நிர்ணய சபை செய்யக்கூடிய தீங்கிலிருந்து தீண்டத்தகாதவர்களைக் காப்பாற்ற இப்பொழுது அதிகம் செய்ய முடியும். இந்தத் தீங்கைத் தடுக்க கீழ்க்கண்ட நடவடிக்கைகள் எடுக்கப்படலாம்.*

I. *தாங்கள் தீண்டத்தகாதவர்களை ஒரு சிறுபான்மை என்று கருதுவதாக ஒரு பிரகடனத்தை வெளியிட மன்னர்பிரான் அரசாங் கத்தை வலியுறுத்துவது*

*தனது 1946 ஜுன் 25ம் தேதிக் கடிதத்தில் காங்கிரஸ் எடுத்த நிலையின் காரணமாக இது அத்தியாவசியமாகிறது, இது மேலும் அவசியம், ஏன் என்றால், 1946 ஜுன் 27ம் தேதி காங்கிரஸின் 1946 ஜுன் 5ம் தேதி கடிதத்திற்கு தாம் அளித்த பதிலில், தீண்டத் தகாதவர்கள் ஒரு சிறுபான்மை அல்ல என்ற காங்கிரஸின் வாதத்திற்கு ஒரு நேரடி மறுப்பு தெரிவிப்பதை வைஸ்ராய் தவிர்த்திருக்கிறார். ஒரு பிரகடனத்தை வெளியிடும்படி இப்பொழுது அரசாங்கத்தை வற்புறுத்தாவிடில், தீண்டத்தகாதவர்கள் இருவகைகளில் துன்புறுவர்:-*

*(அ) இந்துக்களால் ஆதிக்கம் செலுத்தப்படும் அரசியல் நிர்ணய சபை சிறுபான்மையின் உரிமைகளை அவர்களுக்கு மறுக்கலாம்.*

*(ஆ) தீண்டத்தகாதவர்களை ஒரு சிறுபான்மை என்று தாங்கள் வாக்குக் கொடுக்கவில்லை என்று காரணம் காட்டி அவர்களைப் பாதுகாக்க வராமல் மன்னர்பிரான் அரசாங்கம் தப்பிக்கலாம்.*

II. *அரசியல் நிர்ணய சபை சிறுபான்மையினருக்கு வகுக்கும் பாதுகாப்புகள் போதுமானவையா மற்றும் உண்மையானவையா என்று பரிசீலிப்பதற்கு ஏதாவது ஒரு அமைப்பை மன்னர்பிரான் அரசாங்கம் அமைக்குமா என்பதைப் பற்றி ஒரு பிரகடனத்தை வெளியிட வலியுறுத்துதல்.*

(அ) 1946 மே 25ம் தேதி, துணை அறிக்கையில் (cmd 6835) அமைச்சரவைத் தூதுக்குழு இவ்வாறு கூறுகிறது :

''அரசியல் நிர்ணய சபை தனது பணிகளை முடிக்கும் போது அறிக்கையில் குறிப்பிடப்பட்ட கீழ்கண்ட இரண்டு விஷயங்களுக்கு உட்பட்டு - அவை சர்ச்சைக்கு உரியவையல்ல என்று நாம் நம்பு கிறோம் - இறையாண்மையை இந்திய மக்களுக்கு மாற்றுவதற்குத் தேவையான நடவடிக்கைதஞ் மன்னர்பிரான் அரசாங்கம் பாராளு மன்றத்திற்கு சிபாரிசு செய்யும்; அவை சிறுபான்மையினருக்கு போதுமான பாதுகாப்புக்கு வகை செய்வது (adequate provision, மற்றும் அதிகார மாற்றத்திலிருந்து எழும் விஷயங்களைக் கையாள மன்னர்பிரான் அரசாங்கத்துடன் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்வதற்கு விருப்பம் (அறிக்கையின் 22வது பாரா)

இந்தப் பாராவின் பின்னாலுள்ள கருத்து அவ்வளவு தெளி வாக இல்லை. தங்கள் நோக்கத்தைத் தெளிவுபடுத்த வேண்டுமென்று மன்னர்பிரான் அரசாங்கத்தை வலியுறுத்த வேண்டியது அவசியம்.

''உட்பட்டு'' என்ற வார்த்தைக்குப் பொருள் அரசியல் நிர்ணய சபை சிறுபான்மையினருக்கு வகுக்கும் பாதுகாப்புகள் போதுமானவை மற்றும் உண்மையானவை என்பதை பரிசீலிக்கும் உரிமையை மன்னர்பிரான் அரசாங்கம் வைத்துக் கொண்டிருக் கிறதென்றால் அத்தகைய விசாரணையை நடத்த எத்தகைய ஏற்பாட்டை செய்ய உத்தேசித்துள்ளனர் (machinery) என்பதை அறிவிக்கும்படி மன்னர்பிரான் அரசாங்கத்தை வற்புறுத்த வேண்டியது அவசியம். சிறுபான்மை சமூகத்தினர்களின் சாட்சி களை விசாரிக்கும் உரிமையுடன் கூடிய கூட்டு பாராளுமன்றக் குழுவை நியமிப்பது அதிமிகப் பொருத்தமாக இருக்கும். அதற்கு ஒரு முன்மாதிரியும் உள்ளது. 1935 இந்திய அரசாங்க சட்டம் இறுதி வடிவம் பெறும்முன் ஒரு கூட்டுப் பாராளுமன்றக் குழு நியமிக்கப் பட்டது. அரசியல் நிர்ணய சபை அறிக்கையை (report) கையாளு வதற்கு மேற்சொன்ன முன்மாதிரியைப் பின்பற்றுவதில் தவறு எதுவும் இல்லை.

III. எதிர்காலத்தில் சிறுபான்மையினரின் பாதுகாப்பை அறுதிப்பெரும்பான்மையால் சட்டசபை ரத்து செய்யும் அதிகாரத்தை மட்டுப்படுத்தும் (தடை செய்யும்) ஒரு ஷரத்து அரசியல் நிர்ணய சபை வகுக்கும் அரசியல் சாசனத்தில் உட்படுத்தப்படும் என்பதை தாங்கள் வலியுறுத்துவார்கள் என்று அறிவிக்க மன்னர்பிரான் அரசாங்கத்தை வற்புறுத்த,

a) சுதந்திர இந்தியாவின் சட்டசபை அரசியல் சாசனத்தை மாற்றவோ அல்லது சிறுபான்மையினருக்கு பாதுகாப்பு அளிப்பது பற்றிய ஷரத்துக்களை ரத்து செய்யவோ அதிகாரம் இருக்காது என்ற விஷயம் பற்றி அமைச்சரவைக் குழுவின் 1946 மே 16 அறிக்கையோ அல்லது 1946 மே 25ம் தேதி துணை அறிக்கையோ குறிப்பிடவில்லை. இந்திய சட்டசபையால் பாதுகாப்புகள் நீக்கப்படும் என்றால் அந்தப் பாதுகாப்புகளை பாராளுமன்றம் புகுத்துவதில் எந்தப் பயனும் இல்லை. அத்தகைய செயலுக்கு எதிரான பாதுகாப்பு கள் என்னவெனில், அரசியல் நிர்ணய சபை வகுத்த அரசியல் சாசனம், இந்திய சட்டசபையின் அரசியல்சட்ட அதிகாரத்திற்கு எல்லை வகுக்கும் (limitation) சிறுபான்மையினர் பாதுகாப்பு மாற்றம் செய்ம் முன்பு அனுசரிக்க வேண்டிய நிபந்தனைகளை வகுக்கும் ஷரத்துக்களை உட்கொண்டிருக்க வேண்டும். அத்தகைய ஷரத்துக்கள் ஐக்கிய அமெரிக்கா மற்றும் ஆஸ்திரேலியா அரசியல் சாசனங்களில் உள்ளன.

ஆ) சிறுபான்மையினருக்கு இது ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்தது என்றாலும், இந்த விஷயத்தின்பால் அமைச்சரவைத் தூதுக்குழு எந்த சிந்தனையையும் செலுத்தவில்லை. இது விஷயமாக அவர்கள் சொல்ல விரும்புவது என்ன என்பதை கூறும்படி மன்னர் பிரான் அரசாங்கத்தை வலியுறுத்த வேண்டியது அவசியமாகிறது.

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்



# 22

# டாக்டர் அம்பேத்கரின் நிகழ்ச்சி நினைவுக் குறிப்பு

லண்டன், அக்டோபர் 25

''பிரிட்டிஷ் பிரதம மந்திரி, இந்திய விவகார அமைச்சர், திரு.வின்ஸ்டன் சர்ச்சில் மற்றும்பிற ராஜதந்திரிகளுக்கும் நேற்று இரவு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கடிதங்களை அனுப்பினார்.

டாக்டர் அம்பேத்கர் தமது நிலையை எடுத்துக்கூற தமக்கு பேட்டிகள் அளிக்கும்படி கடிதங்கள் கேட்டுக்கொண்டன.

அவர் கடிதங்கள் அனுப்பியவர்களில் பின் வருபவர்களும் உட்படுவர்.

டெம்பிள்வுட் பிரபு (முன்பு சர்.சாமுவேல் ஹோர்) ஸ்கார்பரே பிரபு (முன்பு சர்ரோஹர் லம்பிலே), லின்லித்கோ பிரபு மற்றும் பிரபு சாலிஸ்பரி

நேற்று இரவு டாக்டர் அம்பேத்கர் ராய்ட்டர் அரசியல் நிருபரிடம் கூறினார், ''வட்டமேஜை மாநாட்டில் கலந்து கொண்டவர்களுக்கும், ஷெட்யூல்டு வகுப்பினரின் நிலையை அறிந்தவர்களுக்கும் மற்றும் நண்பர்களுக்கும் நான் எழுதியுள்ளேன். ஷெட்யூல்டு வகுப்பினரைக் காங்கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்பது முற்றிலும் தவறு என்பதைக் காண்பிப்பதற்காக முதல்கட்ட தேர்தல் புள்ளி விபரங்களை பரிசீலிக்கும் நிகழ்ச்சி நினைவுக் குறிப்பை (Memorandum) தயாரித்துள்ளேன்.

நிகழ்ச்சி நினைவுக் குறிப்பு அச்சிடப்பட்டுள்ளது. அணுகும் பல்வேறு ராஜதந்திரிகளுக்கும் பிரதிகள் அளிக்கப்படும் - ராய்ட்டர்''[1]

●●●

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, அக்டோபர் 26, 1946.

# 23

# ‘அரசியல் சுதந்திரத்திற்கான’ கோரிக்கை

லண்டன், நவம்பர் 1

இப்பொழுது லண்டனிலுள்ள ஷெட்யூல்டு வகுப்பினரின் தலைவரான டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரின் கூற்றுப்படி புதிய இந்திய அரசாங்கத்தில், தாங்கள் தனிப் பிரதிநிதித்துவம் பெறவில்லை யெனில், இந்தியாவிலுள்ள ஷெட்யூல்டு வகுப்பினர் தங்களை முஸ்லிம் சமூகத்தோடு இணைத்துக் கொள்ளும் சாத்தியப்பாடு உள்ளது.

திருப்திபெற முடியவில்லையெனில், இஸ்லாம் (முஸ்லிம்) மதத்தைத் தழுவும்படி தமது மக்களுக்கு டாக்டர் அம்பேத்கர் ஆலோசனை கூறியுள்ளார் என்று டொரன்டோ பல்கலைக்கழக இந்திய மாணவனும் முன்னாள் லாகூர் பத்திரிகையாளருமான திரு.அமீன்டரீன் கூறியதாக டொரோண்டோவிலிருந்து வந்த செய்தியைப்பற்றி இன்று ராய்ட்டரிடம் கருத்துத் தெரிவித்தார். அந்த மாதிரியான ஆலோசனையை நான் அளிக்கவில்லை, ஆனால் அத்தகைய நிலைமை எழலாம். எனது மக்களில் பலர் இந்த விஷயத்தை ஆழமாகப் பரிசீலித்துக் கொண்டிருக்கின்றனர். காங்கிரஸும் காந்தியும் நிலைமையை புரிந்துகொண்டு தீண்டத்தகாதவர்களுக்கு இந்துக்களிடமிருந்து அரசியல் சுதந்திரம் அளிக்க ஒப்புக்கொள்வார்கள் என்று நாங்கள் நம்புகிறோம். வேறுபாட்டை திரு.காந்தி புரிந்துகொள்ள முடியாமல் இருப்பது பரிதாபமே.

‘‘என் சொந்தக் கருத்துப்படி, திரு.காந்தியும் காங்கிரஸும் அவர்களுக்கு அரசியல் சுதந்திரம் அளித்தால், மேலும் அதிகமான ஐக்கியம் இருக்கும் என நான் எண்ணுகிறேன்; ஆனால், ‘‘தீண்டத்தகாதவர்களை’’ காங்கிரஸ் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவரவும் அவர்களை இந்துக்களின் அரசியல் அடிமைகளாக ஆக்கவும் திரு.காந்தியும் காங்கிரஸும் முயன்றால், தீண்டத்தகாதவர்கள் கிளர்ச்சி செய்து, வேறு ஒரு சமூகத்துடன் சேர்ந்து தங்களது விமோசனத்தைத் தேட முயல்வார்கள்’’[1].



---

1. பம்பாய் கிரானிக்கில், தேதி : 1946, நவம்பர் 2

# 24

# சர்ச்சில் -அம்பேத்கர் பேச்சுவார்த்தைகள்

திரு.சர்ச்சிலை டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் சந்தித்து, இந்தியாவில் தீண்டத்தகாதவர்களின் பெரும் துன்பகரமான நிலைமைகளை அவரிடம் எடுத்துரைத்தார். அந்தப் பேச்சுவார்த்தைகள் பற்றியப் பத்திரிகை செய்தி வருமாறு : ஆசிரியர்கள்

லண்டன், நவம்பர் 4: மாகாண அரசாங்கங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு தனிப்பிரதிநிதித்துவம் பற்றி பிரிட்டிஷ் கன்சர்வேடிவ் கட்சித் தலைவர் திரு.வின்ஸ்டன் சர்ச்சிலிடம் தமது கருத்துக்களை எடுத்துரைத்ததாக ஷெட்யூல்டு வகுப்பினரின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் இன்று கூறினார்.

இந்தக் கூட்டம் திரு.சர்ச்சிலின் வெஸ்டர் ஹாம்கென்டில் உள்ள புறநகர் இல்லத்தில் நடந்தது என்று அவர் கூறினார். அங்கு மதிய உணவருந்தி யுத்த காலத் தலைவருடன் அன்றைய தினத்தின் பெரும் பகுதியைச் செலவழித்தார். 'திரு. சர்ச்சில் மிக அனுதாபம் காட்டியதாக' அவர் சொன்னார்.[1]



1. டைம்ஸ் ஆப் இந்தியா, நவம்பர் 6, 1946, பக்கம் 5
மறுபதிப்பு : கைர்மோட், தொகுதி 8, பக்கம் 139.

# 25

# தனித் தேர்தல் தொகுதிகளை மீண்டும் அளியுங்கள்

லண்டனில் தங்கியிருந்தபோது 1946 நவம்பர் 5ல் காமன்ஸ் சபையில் உள்ள கன்சர்வேடிவ் கட்சியின் இந்தியக் குழுவின் கூட்டத்தில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் உரை நிகழ்த்தினார். சில தொழிற்கட்சி, மற்றும் லிபரல் பாராளுமன்ற உறுப்பினர்கள் அதில் கலந்து கொண்டனர். அதுபற்றிய செய்தி பின்வருமாறு : ஆசிரியர்கள்

''லண்டன் : நவம்பர் 6 (யூ.பி.ஐ) காமன்ஸ் சபையில் உள்ள கன்சர்வேடிவ் இந்தியக் குழுக் கூட்டத்தில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் நேற்று உரையாற்றினார். சில தொழிற்கட்சி மற்றும் லிபரல் பாராளுமன்ற உறுப்பினர்களும் கலந்துகொண்டனர். பத்திரிகை நிருபர்கள் அனுமதிக்கப்படவில்லை. அது சுமார் ஒரு மணி நேரம் நடந்தது. இது பற்றிய செய்தி பத்திரிகைகளுக்கு அளிக்கப்படவில்லை.

எனினும், அமைச்சரவைத் தூதுக் குழுவின் பணிகள் பற்றி தமது ஆழ்ந்த ஏமாற்றத்தை வெளிப்படுத்தினார் என்று தெரிகிறது. திரு. சர்ச்சிலிடமும், பெத்திக் லாரன்ஸிடம் தாம் (அளித்த) சமர்ப்பித்த நிகழ்ச்சிப் பதிவுக் குறிப்பை (Memorandam) பற்றி கூட்டத்தில் கலந்து கொண்ட உறுப்பினர்களுக்கு விளக்கினார்; காங்கிரஸ் தீண்டத்தகாதவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தவில்லை என்று கூறிய அம்பேத்கர் தாமும் மகாத்மா காந்தியும் கையெழுத்திட்ட புனா ஒப்பந்தத்தை ரத்து செய்ய வேண்டும் என்று அவர் கோரினார்; திரு.மாக்டொனால்டின் வகுப்பு வாரித் தீர்ப்பு எதிர் நோக்கியபடி தனித் தேர்தல் தொகுதிகள் மீண்டும் அளிக்கப்பட வேண்டுமென்று கோரினார்.

எனினும், திரு.சர்ச்சில் மீண்டும் அதிகாரத்திற்கு வந்தா லொழிய தாம் தமது தூதுக்குழு பணியில் வெற்றி கிடைக்கும் என்பதில் அவருக்கு அதிக நம்பிக்கை இல்லை.

தொழிற்கட்சி உறுப்பினர்கள் பல கேள்விகளை எழுப் பினர்; ''மொத்த வகுப்புப் பிரச்னையையும் மீண்டும் கிளற ஆளும் கட்சிக்கு விருப்பமில்லை'' என்பதை எடுத்துக் கூறும்படியாக இருந்தன அவை. மாறிய சூழ்நிலைக்கு ஏற்ப சரிசெய்து கொண்டு, அரசில் நிர்ணய சபையில் அவரது அதிர்ஷ்டத்தை முயற்சிக்கும் படியும் அவரிடம் கூறப்பட்டது[1] என்று தெரியவருகிறது.



1. பம்பாய் கிரானிக்கில், 1946, நவம்பர் 7

# 26

# பிரிட்டிஷார் நியாயம் வழங்குவர் என்று டாக்டர் அம்பேத்கர் நினைக்கிறார்

லண்டன், நவம்பர் 7

சந்தர்ப்பம் ஏற்பட்டால் ஷெட்யூல் வகுப்பினருக்கு இழைத்த தவறுகளைத் திருத்த பிரிட்டிஷ் அரசாங்கம் தயங்காது என்ற நம்பிக்கையை ராய்ட்டர் அரசியல் நிருபர் பிரேசர் விட்டனுக்கு அளித்த ஒரு பேட்டியில் ஷெட்யூல்டு வகுப்பினரின் தலைவர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் வெளிப்படுத்தினார்; இங்கிலாந்திற்கு வந்த அவரது தூதுப் பயணத்தின் இறுதியில் திங்கட்கிழமை விமானம் மூலம் இந்தியாவுக்கு அவர் திரும்புகிறார்.

இந்திய இடைக்கால அரசாங்கத்தில் ஷெட்யூல்டு வகுப்பினர் தங்கள் சொந்தப் பிரதிநிதிகளை நியமிக்க அனுமதியாதது அநீதி என்று தாம் கருதுவதை எடுத்துக்கூறி தமது கண்டனத்தைத் தெரிவிக்க வந்த டாக்டர் அம்பேத்கர் பிரதம மந்திரி திரு.கிளெமென்ட் அட்லி உட்பட எல்லா பிரதான பிரிட்டிஷ் அரசியல் தலைவர்களையும் சந்தித்தார்.

தமது இங்கிலாந்து விஜயத்தின் பலன்பற்றி தாம் அதிகம் திருப்தியடைந்ததாக அவர் கூறினார். ''ஷெட்யூல்டு வகுப்பினர் பற்றியும் அவர்களின் எதிர்காலம் பற்றியும் எல்லாக் கட்சிகள் மத்தியிலும் ஆழ்ந்த அனுதாபம் இருப்பதை நான் கண்டேன்'' என்று அவர்கூறினார்.

''இது எல்லாக் கட்சிகளுக்கும்'' எல்லாப் பிரிவினருக்கும் பொருந்தும் என்று கூறிய அவர் மேலும் சொன்னார் : அரசியல் நிர்ணய சபை அமைக்கப்படுவது பற்றியும் அதில் தங்களின் இடம் பற்றியும் இன்று ஷெட்யூல்டு வகுப்பினர் எதிர்நோக்கும் அபாயம் பற்றியும் எல்லோருக்கும் எடுத்துக் கூறுவதில் அவரது பயணம்

பயனளித்தது என்று அவர் கருதினார்.

இந்தியா விவாதத்திற்கு வரும் பொழுதெல்லாம் பாராளு மன்றத்திலுள்ள பல்வேறு கட்சிகளும் இந்தப் பிரச்னையை மறக்க மாட்டார்கள் அல்லது அலட்சியப்படுத்த மாட்டார்கள் என்பதில் எனக்கு எந்த சந்தேகமும் இல்லை. தங்கள் நிலை கவனிக்கப் படாமல் போகுமோ என்று எண்ணிக்கொண்டிருந்த தீண்டத் தகாதவர்களுக்கு இது மிகப் பெரிய ஆறுதலாக இருக்கும்''.

டாக்டர் அம்பேத்கர் மேலும் தாம் அரசாங்கத்தின் உறுப் பினர்களைச் சந்தித்ததாகவும், தங்களின் எதிர்கால நடவடிக்கைப் பற்றிய தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க அவர்கள் தயக்கமாக இருப்பது இயல்பானது என்றாலும் அவர்களின் தலையீட்டுக்கு சந்தர்ப்பம் ஏற்பட்டால், தீண்டத்தகாதவர்களுக்கு இழைக்கப்பட்ட தவறைத் திருத்த தயங்க மாட்டார்கள் என்றும் கூறினார்.

லண்டனில் உள்ள திரு.காந்தியின் நண்பர்கள் ஷெட்யூல்டு வகுப்பினர்பால் அவரது கண்ணோட்டம் பற்றி விமர்சிக்கிறார்கள் என்று அறிந்த தாம் முற்றிலும் ஆச்சரியமடைந்ததாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். ''அவர்களின் கருத்துப்படி, தீண்டத்தகாதவர் கள் இந்துக்களாக இருந்தாலும்கூட, அவர்களுக்குத் தனித் தொகுதி கொடுப்பதற்கு அதுவே ஒரு ஆட்சேபணையாகாது''. இந்தியா வின் நிலைமை பற்றி திரு.அட்லிக்கு உள்ள ஞானம் டாக்டர் அம்பேத்கரைத் திருப்திப்படுத்தியது; ஷெட்யூல்டு வகுப்பினர் விஷயம் கவனிக்கப்பட வேண்டியது என்பதை பிரதம மந்திரி தெரிந்திருக்கிறார் என்று அவர் (டாக்டர் அம்பேத்கர்) நினைத்தார்.

''உருவாக்கப்படவிருக்கும் எந்த ஒரு அரசியல் சாசனத் திலும் ஷெட்யூல்டு வகுப்பினர் பாதுகாக்கப்படுவதில் திரு.சர்ச்சில் மிக ஆர்வமுடையவராகவும் அதை உத்தரவாதம் செய்வதில் விருப்பமுடையவராகவும் இருந்தார்'' என்று டாக்டர் அம்பேத்கர் நினைத்தார் [1].



1. பம்பாய் கிரானிக்கில், : 1946, நவம்பர் 9

# 27

# சிறுபான்மையினரின் விருப்பங்களை நிச்சயப்படுத்துங்கள்

*லண்டனிலிருந்து இந்தியா திரும்பும் வழியில் 1946 நவம்பர் 16ம் தேதி டாக்டர் அம்பேத்கர் பேட்டியளித்தார். அது பற்றிய செய்தி பின்வருமாறு : ஆசிரியர்கள்.*

**கராச்சி,** *1946 நவம்பர் 15 :* இறையாண்மையை இந்தியாவுக்கு மாற்றும் சட்டம் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்படும் முன்பு, ஷெட்யூல்டு வகுப்பினர் உட்பட்ட சிறுபான்மையினரின் உண்மையான விருப்பங்களை கண்டறிய பிரிட்டிஷ் அரசாங்கம் சில திட்டவட்டமான நடவடிக்கைகள் எடுக்கும் என்ற நம்பிக்கையை, கிரேட் பிரிட்டனிலிருந்து திரும்பும் வழியில் அளித்த பேட்டியில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தெரிவித்தார்.

இந்தக் கடைசி நேரத்திலாவது, ஷெட்யூல்டு வகுப்பினருக்கு தனி அரசியல் பிரதிநிதித்துவம் அளித்து அதன்மூலம் அவர்களிடையே முழுமையான சமாதானம் நிலவுவதை உத்தரவாதம் செய்யுமாறு காங்கிரஸை டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்தினார்.

தாழ்த்தப்பட்ட மக்களின் பிரச்னைகளைப் பிரிட்டிஷ் பிரதம மந்திரி, இந்திய விவகார மந்திரி மற்றும் திரு.சர்ச்சில், திரு.ஆர்.ஏ. பட்லர், டெம்பிள்உட் பிரபு, முன்னாள் சர். சாமுவேல் ஹோர், 1935ம் ஆண்டு இந்தியச் சட்டத்தை முன்னின்று நிறைவேற்றியவர் - ஸ்கார்பரோ பிரபு ஆகியோருடன் தாம் விவாதித்ததாக அவர் கூறினார்.

பிரிட்டனில் ஏராளமான அனுதாபம் இருப்பதோடல்லாமல், அமைச்சரவை தூதுக்குழு ஷெட்யூல்டு வகுப்பினரை இவ்விதம் அலட்சியப்படுத்தியிருக்க வேண்டுமா என்பது பற்றி ஆழ்ந்த மனக்கசப்பு உள்ளது, என்றார் டாக்டர் அம்பேத்கர். முதல் கட்டத் தேர்தல்கள் பற்றிய புள்ளிவிவரங்களின் பரிசீலனை அடங்கிய (தாம் சமர்ப்பித்த) நிகழ்ச்சி பதிவுக் குறிப்பு பெரும் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது; ஏனெனில், ஷெட்யூல்டு வகுப்பினரைக் காங்கிரஸ்

பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்ற அமைச்சரவைத் தூதுக் குழு உறுப்பினர்களின் அறிக்கையை தவறு என்று அவை முற்றிலுமாக நிரூபித்தன இந்தப் புள்ளி விபரங்கள். இறையாண்மையை மாற்றம் செய்யும் சட்டம் பாராளுமன்றத்தில் பரிசீலிக்கப்படும்போது, சிறுபான்மைக்குப் பாதுகாப்பு பற்றிய முடிவு ஒரு பெரும்பான்மை எடுத்த முடிவை மட்டும் அவர்கள் வழிகாட்டியாகக் கொள்ளாமல், சம்பந்தப்பட்ட சிறுபான்மையினரின் உண்மையான விருப்பங் களை நிச்சயப்படுத்த சில திட்டவட்டமான நடவடிக்கைகளை எடுப்பார்கள் என்று நான் முற்றிலும் நிச்சயமாக இருக்கிறேன்.

அரசியல் நிர்ணய சபையில் அவர் பங்கெடுப்பாரா என்று கேட்டதும், தாம் அவசியம் பங்கெடுக்கப் போவதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். மேலும் சொன்னார், ''எங்கள் லட்சியத்தை முன்கொண்டு செல்ல அரசியல் சட்ட ரீதியான முறையில் செயல் படுவேன். அரசியல் சட்ட முறைகள் தீர்ந்துவிட்டால், எந்த வழி முறைகளைக் கையாளலாம் என்பதைப் பற்றி அப்பொழுது நாங்கள் பரிசீலிப்போம்''

இன்று பிற்பகல் விமானம் மூலம் பம்பாய்க்கு டாக்டர் அம்பேத்கர் கிளம்பினார்''[1].



1. 'டைம்ஸ் ஆப் இந்தியா', சனிக்கிழமை, நவம்பர் 16, 1946 ,மறுபதிப்பாக வெளிவந்தது. கயர்மோடு, தொகுப்பு 8, ப.142-143

# 28

# இங்கிலாந்துக்கு அம்பேத்கரின் அரசியல் தூது பற்றி 'டான்' (Dawn) ஏடு

*1947, ஜனவரி 1*

*பிரிட்டனில் தமது ஒரு மாதப் பொறுமையான பணிக்குப் பின் ஷெட்யூல்டு வகுப்பினரின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் இந்தியா திரும்பினார்; அங்கு பிரபல அரசாங்க உறுப்பினர்களை யும் எதிர்க்கட்சி உறுப்பினர்களையும் சந்தித்தார்; அவரது பிரதான பணி இங்குதான் உள்ளது. தமது சமூகத்தினரின் வழக்கு பிரிட்டிஷ் பொது மக்கள் முன் யதார்த்தமான முறையில் எடுத்துக்கூறுவதற் காகவே இந்த லண்டன் பயணத்தை அவர் மேற்கொண்டார். கடந்த பல ஆண்டுகளாக காங்கிரஸின் பிரச்சாரம் நாட்டில் நிலவும் பிரிவு (பிளவுகள்) பற்றி ஒரு தவறான சித்திரத்தை உண்டாக்கியுள்ளது; உண்மைகளை தவறாக படம்பிடித்துக் காட்டியதை அமைச்சரவை தூதுக்குழுகூட நம்பியது.*

*அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் இந்த சமூகத்தின் பிரதிநிதித்துவ ஸ்தாபனம்; இந்த ஸ்தாபனத்தின் பலத் தையும் ஒருமைப்பாட்டையும் சீர்குலைக்க அழைப்பின்றி நுழைந் திருக்கிறது காங்கிரஸ். ஷெட்யூல்டு வகுப்பினரை காங்கிரஸ் பிரதி நிதித்துவப்படுத்துகிறது என்று அமைச்சரவை தூதுக்குழு உறுப் பினர்கள் காமன்ஸ் சபையில் கூறியிருப்பது இந்த அளவுக்குத்தான் சரி; அதாவது, இந்த பலம்வாய்ந்த அரசியல் ஸ்தாபனம், தன் னுடைய அபரிமிதமான செல்வாதாரங்களின் துணைகொண்டு, ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கிய பல இடங்களை கைப்பற்று வதில் வெற்றி பெற்றது. இந்த சமூகத்தின் உண்மையான பிரதிநிதி கள் பல்வேறு சட்டசபைகளுக்கு அனுப்பப்பட்டிருக்கிறார்கள் என்று அது பொருள்படாது.*

*பிரிட்டனில் டாக்டர் அம்பேத்கரின் உடனடிக் கடமை இந்தக் கட்டுக் கதையை (மாயையை) உடைத்து எறிவதுதான்; பிரிட்டிஷ் அரசியல் தலைவர்களுக்கு அவர் சமர்ப்பித்த நிகழ்ச்சி பதிவுக் குறிப் பில் (Memorandum) இதை அவர் செய்துள்ளார். இந்த நிகழ்ச்சி*

பதிவுக் குறிப்பே அச்சிட்டு வெளியிடப்படவில்லை; ஆனால், கராச்சி வந்தடைந்ததும் டாக்டர் அம்பேத்கர் அளித்த பேட்டியிலிருந்து, அவரது தூதுப் பயணத்தில் குறிப்பிடத்தக்க அளவு பயன் பெற்றார் என்பது தெளிவு. பிரிட்டனில் திரு.அட்லி, திரு.சர்ச்சில் உள்ளிட்ட பல முக்கியப் பிரமுகர்களுடன் (தலைவர்களுடன்) நேரடித் தொடர்பை ஏற்படுத்தியுள்ளார்.

இறையாண்மையை மாற்றும் சட்டம் பாராளுமன்றத்தின் பரிசீலனைக்கு வரும்போது சிறுபான்மையினருக்கு தேவைப்படும் பாதுகாப்பு பற்றி அவர்களின் உண்மையான விருப்பத்தைக் கண்டறிய சிலதிட்டவட்டமான நடவடிக்கைகள் நிச்சயமாக எடுக்கப்படும் என்று நம்பிக்கையுடன் அவர் பேசுகிறார். ஷெட்யூல் வகுப்பினர் லட்சியத்தின்பால் பிரிட்டிஷ் மக்களிடையே பெருமளவு அனுதாபம் இருப்பது மட்டுமல்லாமல் இந்த சமூகத்தின் உரிமைகளை அமைச்சரவைத் தூதுக்குழு அலட்சியப்படுத்தியிருக்க வேண்டுமா என்ற பொதுவான மனக்கசப்பும் இருக்கிறது என்று டாக்டர் மூலம் கேட்டறிவதில் மகிழ்ச்சி ஏற்படுகிறது. தொழிற் கட்சி மக்களிடையே, இந்திய அரசியல் சட்ட பிரச்னையில் தீர்வுகாணச் செய்ய வேண்டியதை தொழிற்கட்சி அரசாங்கம் செய்திருக்கிறதா என்ற எண்ணம் வளர்ந்து வருகிறது. இது நிச்சயமாக ஒரு லாபமே; ஏனெனில், பிரிட்டிஷ் மக்கள் கற்பனைச் சிந்தனையை விட்டுவிட்டு இந்திய நிலைமையின் யதார்த்தங்களை நேர்கொண்டால், இந்தியப் பிரச்சினைக்கான தீர்வில் கஷ்டம் குறையும். ஷெட்யூல்டு வகுப்பினருக்கும் காங்கிரஸுக்கும் இடையிலான தாவாவுக்கு தீர்வுகாண ஒரே வழி ஷெட்யூல்டு வகுப்பினருக்கு தனி அரசியல் பிரதிநிதித்துவம்தான் என்று டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்துகிறார்; இது அளிக்கப்பட்டால் காங்கிரஸுக்கும் ஷெட்யூல் வகுப்பினருக்கும் இடையே முழுமையான சமாதானம் நிலவும் என்று அவர் நினைக்கிறார்.

தமது ஆரம்ப நாட்களில் (இளமைக் காலத்தில்) இந்துக் கொடுமையாலும் சாதிப் பிரிவுகளாலும் துன்பத்தை அனுபவித்த டாக்டர் அம்பேத்கரை மேல் சாதியினரை நம்பவைப்பது அவ்வளவு சுலபமல்ல; தமது சமூகத்தினரின் எதிர்காலத்தை அவர்களின் தயவில் 'பாதுகாப்பாக' வைக்க அவரால் முடியாது. ஜாதி இந்து ஆக்கிரமிப்புகளுக்கு எதிராக தங்கள் உரிமைகளுக்குப் போதுமான அரசியல் சட்ட ரீதியான பாதுகாப்பே என்பதுதான் அவரது செயல்பாடுகளை வகுக்கும் வழி, தமது சமூகத்தினரின் குறைகளுக்குத் தீர்வுகாண அரசியல் சட்டரீதியான முறைகளையே அவர் கடைப்பிடிப்பார்

என்று அவர் கூறுகிறார். அவை தீர்ந்து போனால்தான் மற்ற வழி முறைகளைப் பற்றி யோசிப்பார். காங்கிரஸுக்கு அளிக்கப் பட்டுள்ள அரிய சந்தர்ப்பம் இது.

ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்திற்கும் முஸ்லீம் லீக்கிற்கும் இடையே எந்த ரகசிய ஒப்பந்தம் இருப்பதை ஷெட்யூல்டு வகுப்பினர் தலைவர் மறுத்தார். இந்த உபகண்டத்தின் மீது சாதி இந்துக்களின் ஆட்சியை திணிப்பதால் இவர்களுக்கு ஏற்படும் பொது அபாயத்தை பற்றி இருவரும் உணர்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தவிர அவர்களிடை எந்த ரகசிய அல்லது ரகசியமல்லாத ஒப்பந்தம் இருக்க முடியும்? காங்கிரஸ் தலைமையின் குணாம்சமும் கலவையும் மக்களின் விரிவான பகுதியினரிடையே கடுமையான பயத்தை ஏற்படுத்துவதாக உள்ளது; லீகும் ஷெட்யூல் வகுப்பினரும் ஒன்றாக ஈர்க்கப்பட்டால், அது பொதுவான அபாயத்தைப் புரிந்துகொள்வதாலும், மக்கள் அனைவரின் பொதுவான நலனுக்காகவும் நல்வாழ்க்கைக்காகவும் அதை எவ்வளவு சிறந்த முறையில் எதிர்க்கொள்வது என்பதாலேயே இந்த நாட்டில் தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்க்கை ஆண்டாண்டுகளாக அடிமைகள் வாழ்வுதான்; அதை முடிவுக்குக் கொண்டுவர அவர்கள் உறுதிபூண்டிருக்கிறார்கள். அதை எவ்வளவு சிறப்பாகச் செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்ய வேண்டியது அவர்களே; காங்கிரஸ் கட்டளை இடுவதற்கல்ல.

டான்
(Dawn)[1]

1. மறுபதிப்பு : ஜெய் பீம், 1947, ஜனவரி 1

# 1

# பொறுப்புகளற்ற மாகாண சுயாட்சி புத்திசாலித்தனமானதல்ல

*1932 நவம்பர் 7ல் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் இங்கிலாந்துக்குப் புறப்பட்டார். புறப்படுகையில், மத்தியில் பொறுப்புகளற்ற மாகாண சுயாட்சியை நிறுவுவது புத்திசாலித்தனமற்றது என்று நேர்காணலில் அவர் கூறியுள்ளார். அகில இந்திய பெடரேஷனைச் சார்ந்திருக்கும் மத்தியப் பொறுப்பிலான பிரிட்டிஷ் இந்தியா என்ற கருத்தை அவர் வரவேற்கவில்லை என்பதையும் தெரிவித்துள்ளார்.*

---

*கீர், பக்கம் 219.*

# 2

# கூட்டுத் தொகுதி மற்றும் தனித் தொகுதி சம்பந்தமாக டாக்டர் அம்பேத்கரின் நடுநிலைக் கருத்து

## ஒரு மாகாணத்திலுள்ள சிறுபான்மையினரே இப்பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டும்.

*இந்த விஷயம் குறித்து டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் அறிக்கையை ''டைம்ஸ் ஆப் இந்தியா'' வெளியிட்டுள்ளது -*

''வகுப்புகளுக்கிடையேயான பிரச்சினை சம்பந்தமாக மேன்மை தங்கிய மன்னர் பிரானின் முடிவை பரஸ்பர ஒப்பந்தத்தின் அடிப்படையில் மாற்றுவதற்கு உடனடியாகச் சாத்தியமில்லை என்பது பண்டிட் மதன் மோகன் மாளவியா மற்றும் திரு. ஜின்னா ஆகியோரிடையே நடைபெற்ற கருத்துப் பரிமாற்றம் மற்றும் பாராட்டுரைகளிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. தற்போதைக்கு இரண்டு சமூகத்தினரும் தனித்தனியாகவே செயல்பட வேண்டும் என்று கூறி களத்தைவிட்டு இறங்கிவிட்டார் பண்டிட் மாளவியா. இரண்டு சமூகத்தினரும் தனித்தனியாக எதிர்காலத்தில் செயல்படுவதை எவ்வளவு பேர் திருப்தியுடன் நோக்குவர் என்று தெரியவில்லை. தனித்தனியாகச் செயல்படுவது என்பது ஒருவருக்கொருவர் எதிரும் புதிருமாகவே செயல்படுவதில் முடியும் என்பது தவிர்க்க முடியாதது என்று எனக்குத் தோன்றுகிறது.

நான் ஒரு இந்துவும் அல்ல முஸ்லிமுமல்ல. எந்த ஒரு கட்சியின் ஆதரவாளனுமல்ல. ஆனால் இந்தப் பிரச்சினையில் ஆர்வமுள்ள மாணவன் என்ற முறையில் என் கருத்தை முன் வைக்கிறேன்.

என் கருத்தை முன் வைக்கும் முன்பு, வகுப்பினர்கள் சம்பந்தமான விவாதங்களில் 'சிறுபான்மையினர்' என்ற சொல் மிகவும் தெளிவற்ற முறையில் உபயோகப்பட்டு வந்துள்ளது. ஒரு மாகாணம் அல்லது தொகுதி சம்பந்தமாக அது உபயோகப்படுத்தப்

படவில்லை. அந்த நிலையில் உபயோகப்படுத்தினால் மட்டுமே அரசியலில் அதற்கு ஏதாவது பொருள் இருக்க முடியும். ஒரு மாகாணத்தில் அல்லது தெளிவாகக் கூறுவதென்றால் ஒரு தொகுதி யில் ''சிறுபான்மையினர்'' என்று இருந்தால்தான், சிறுபான்மை யினர் என்ற முறையில் அந்த சமூகம் பாதுகாப்பு பெறத் தகுதி பெறுகிறது என்பதே என் கருத்து. ஒரு மாகாணம் அல்லது தொகுதி சம்பந்தமின்றி ''சிறுபான்மையினர்'' என்று கூறுவதற்கு எந்தவித அரசியல் முக்கியத்துவமும் கிடையாது.

## ஓர் யோசனை

நான் மிகவும் முக்கியத்துவம் அளிக்க நினைக்கும் இந்த அடிப்படையிலிருந்தே வகுப்புகள் சம்பந்தமான தீர்ப்பில் உள்ள இரண்டு விஷயங்களையும் அதாவது இடங்கள் மற்றும் தொகுதிகள் ஆகியவற்றைத் தனித்தனியாகப் பிரிக்க வேண்டுமென்பதே என் முடிவாக உள்ளது. இந்த இரண்டுமே தனித்தனியான பொருள்கள் என்பதுடன் இவற்றின் தீர்வுக்காக எடுத்துக்கொள்ளப்பட வேண்டிய விஷயங்களும் மாறுபட்டவை. இந்த இரு பொருள்களையும் இவ்வாறு பிரித்த பிறகு, இடங்களின் எண்ணிக்கையை நிரந்தரமாக இல்லாவிடினும் பிறகு ஒரு காலக்கட்டத்தில் நியாயமான அடிப் படையில் தீர்மானிக்கலாம் என தற்போதைக்கு விட்டுவிட்டு, வகுப் புகள் சம்பந்தமான தீர்ப்பில் கொடுத்துள்ள அந்தப் பகுதியை இந்துக்களும், முஸ்லீம்களும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதே என் யோசனை. தொகுதிகளைப் பொறுத்தவரையில் வகுப்புகள் சம்பந்தமான தீர்ப்பை இந்த எளிய திருத்தத்தின் மூலம் மாற்றம் செய்ய இந்துக்களும், முஸ்லீம்களும் சம்மதிக்க வேண்டும். அதாவது மத்திய அவைக்கான அல்லது மாகாண சட்டசபைக்கான தேர்தலாக இருந்தாலும் தொகுதிகள் குறித்த விஷயம் மாகாணத்திலுள்ள சிறுபான்மையினர் அல்லது தெளிவாகக் கூறுவதென்றால், மாகாணத்திலுள்ள குறிப்பிட்ட தொகுதியிலுள்ள சிறுபான்மையினர் சம்பந்தப்பட்டது என்பதுடன் சிறுபான்மையினரின் முடிவுக்கு பெரும்பான்மையினர் கட்டுப்பட வேண்டும்.

## சிறுபான்மையினரே தீர்மானிக்க வேண்டும்

தனித்தொகுதி வேண்டுமென்று சிறுபான்மையினர் விரும் பினால் அதை எதிர்த்துப் பேசுவதற்கு பெரும்பான்மையினருக்கு ஒன்றுமில்லை. அதேபோன்று சிறுபான்மையினர் கூட்டுத்

தொகுதியே வேண்டுமென்றால் பெரும்பான்மையினர் அந்த முடிவை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

ஒரு தொகுதியில் சிறுபான்மையினர் சமூகங்கள் பல இருந்து அவர்களிடையே தொகுதி பற்றி ஒருமித்த கருத்து இல்லையென்றாலும் இந்தப் பிரேரணை பொருந்தும். இந்த மாதிரியான நேர்வுகளில், தனித் தொகுதி விரும்பும் சிறுபான்மையினர் அதற்கான தனிப் பதிவேடுகளை வைத்துக் கொள்வதுடன் கூட்டுத் தொகுதி விரும்பும் சிறுபான்மையினர் பெரும்பான்மையினருடன் இணைந்து பொதுவான பதிவேட்டை வைத்துக் கொள்வர். ஒவ்வொரு தொகுதியிலும் சிறுபான்மையினரே தொகுதி பற்றிய முடிவை எடுக்க வேண்டுமென்ற கொள்கை இந்த ஒப்பந்தத்தில் அடங்கியிருந்தால் அதைவிட சிறந்தது வேறொன்றும் இருக்க முடியாது. ஆனால், இந்த இலக்கை அடைய முடியாவிட்டால் தொகுதி பற்றிய உடன்பாடு மாகாணத்திலுள்ள சிறுபான்மையினரின் முடிவின் அடிப்படையிலே இருக்க வேண்டுமென்ற உடன்பாடு ஏற்கப்படுமானால் அதுவே சிறந்த முன்னேற்றமாகும்.

பம்பாய், மெட்ராஸ், மத்திய மாகாணங்கள், ஐக்கிய மாகாணங்கள் போன்ற இந்துக்கள் அதிக எண்ணிக்கையிலுள்ள மாகாணங்களில், முஸ்லீம் சிறுபான்மையினர் விரும்பினால் தங்களுக்குத் தனித் தொகுதியை அவர்கள் தேர்ந்தெடுக்கலாம். அதே சமயத்தில் முஸ்லீம்கள் பெரும்பான்மையாக உள்ள மாகாணங்களான பஞ்சாப், சிந்து, வங்காளம், வடமேற்கு எல்லை மாகாணங்களில் இந்துக்கள் விரும்பினால் கூட்டுத் தொகுதியைத் தேர்ந்தெடுக்கலாம். தொகுதி பற்றிய கேள்வியை சிறுபான்மையினரின் முடிவுக்கு விட்டுவிடுவதே இந்தப் பிரேரணையின் அடிப்படைக் கருத்தாகும். தனியான தொகுதிகளா அல்லது கூட்டுத் தொகுதிகளா என்பது சிறுபான்மையினரின் பாதுகாப்பிற்கான வழிமுறையாகும். இந்த இரண்டில் எது தங்களுக்குப் பாதுகாப்பானது என்பதைச் சிறுபான்மையினரே சரியான முறையில் தீர்மானிக்க முடியும்.

கொள்கையளவில் தவறாக இருக்குமானால் நிச்சயமாக திரு. ஜின்னா மற்றும் பண்டிட் மதன் மோகன் மாளவியா ஆகியவர்களின் கவனத்திற்கு இந்தப் பிரேரணை அருகதையாகாது. ஆனால் என்னைப் பொறுத்தவரை இந்த முன்மொழிவு நியாயமானதால், தமது சகமதத்தினரிடம் இதை எடுத்துச் செல்லும் மனஉறுதி திரு. ஜின்னாவிற்கு இருக்கும் என்று நினைக்கிறேன். மற்றும்

அதை ஏற்றுக்கொள்ளும் அறிவாற்றல் பண்டிட் மதன் மோகன் மாளவியாவிற்கு இருக்கும் எனக் கருதுகிறேன்.

## ஒரு நடுநிலைக் கட்டம்

இந்தியாவிலுள்ள எல்லா மாகாணங்களிலும் கூட்டுத் தொகுதிகளாக இருக்க வேண்டுமென்ற காங்கிரஸ் மற்றும் இந்து மகாசபையினரின் இலட்சியத்தை ஒரே வீச்சில் அடைய இந்தப் பிரேரணை உதவி செய்யாது. எல்லா இடங்களிலும் கூட்டுத் தொகுதி கோரும் இந்து மகாசபை மற்றும் காங்கிரசின் நிலைப் பாட்டிற்கும் நாடு முழுவதும் தனித் தொகுதிகளே வேண்டு மென்று கோரும் முஸ்லீம்களின் நிலைப்பாட்டிற்கும் இடையே ஒரு நடுநிலைக் கட்டத்தை இது ஏற்படுத்துகிறது என்ற சிறப்பம்சம் அதற்குள்ளது. சில மாகாணங்களில் கூட்டுத் தொகுதிகளும், மற்றவை களில் தனித் தொகுதிகளும் கொண்ட இந்த நடுநிலைக் கட்டத்தி லிருந்து நாடு முழுவதும் கூட்டுத் தொகுதிகளென்ற இறுதிக் கட்டத்திற்கான பயணம் எளிதாக இருக்கும். கூட்டுத் தொகுதிகளில் ஆர்வம் கொண்டுள்ள பொறுமையற்ற இலட்சியவாதிகள் மட்டுமே இந்தப் யோசனையை எதிர்ப்பார்கள்.''[1]

எனினும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் இந்த விஷயம் குறித்து அளித்த அறிக்கைக்கு மேலும் சில பரிமாணங்கள் உள்ளதை ''ஜனதா'' பத்திரிகை வெளியிட்டுள்ளது. அது வருமாறு:

''ஒரு தொகுதியின் கட்டமைப்பு சிறுபான்மையினருக்கு மட்டுமே அக்கறையுள்ள விஷயமல்ல. இது நாடு முழுவதிற்குமே அக்கறையுள்ள அரசியலமைப்பை உருவாக்குவதில் எழும் பிரச்சினையாகும். ஒரு தேசியப் பிரச்சினையின் எந்தப் பகுதியைக் குறித்தாவது அதிலிருந்து விளையும் சில உரிமைகளைக் காப்பதற்கு, தனிப்பட்ட முடிவுகளை எடுப்பதற்காக அதை ஒதுக்கப் பட்ட தனி விஷயமாக ஆக்கிவிட முடியாது. எந்தப் பிரச்சினை யிலும் ஒருமைப்பாடு சாத்தியமில்லையாதலால் அரசியல் கொள்கைகளில் தவிர்க்க முடியாத வேறுபாடுகளைக் கொண்டுள்ள இந்த உலகில், மக்களின் விருப்பத்திற்கு ஈடாக அதிக அளவில் நெருக்கமாக இருக்கும் பெரும்பான்மை மக்களே தமது கடமையை ஆற்ற வேண்டும்.

1 : டைம்ஸ் ஆப் இந்தியா, தேதி ஏப்ரல் 9, 1934.

சிறுபான்மையினரை, சிறுபான்மையினர்கள் என்பதற்காக பெரும்பான்மையினர்களுக்குள்ள அந்தஸ்தைவிட அதிகமான அந்தஸ்து அளித்து அதிகார உச்சிக்கு அவர்களை இட்டுச் செல்வது ஜனநாயக அரசின் அடிப்படைக் கொள்கைகளை வேருடன் அழிப்பதாகும். அரசின் சிந்தனைகள் முன்னோடி நிகழ்வுகளிலிருந்து, முன்னோடி நிகழ்வுகள் என்ற முறையில் முன்னோக்கிச் செல்கிறது. ஒரு தவறுதலான கொள்கைக்கு இடம் கொடுத்தால், அதைச் சுற்றி உரிமை கொண்டாடும் கும்பல் கூடிவிடுகிறது. மக்களின் ஆர்வமற்ற தன்மையின் விளைவாக மட்டுமே பெறப்படும் அதிகாரம் அதை நீக்குவதற்கான எல்லா முயற்சிகளையும் வீழ்த்திவிடும். இந்தக் காரணத்தினால்தான் விரைவில் சரிசெய்யப்பட்டுவிடும் என்று தற்காலிகமாகச் செய்யப்படும் சமரசங்கள் முன்னேற்றத்திற்குப் பெருந்தடையாக அமைந்துவிடுகின்றன.

சிறுபான்மையினர் கொடுங்கோலாட்சியை அமைக்க அல்லது பெரும்பான்மையினரின் விருப்பத்தை சிறுபான்மையினரின் கருத்துக்குக் கீழான நிலைக்கு தள்ளுவது எந்தவிதத்திலும் நியாயமாகாது.

- ''ஃபிரிபிரஸ்''[1]



1 : மறுபதிப்பு, ஜனதா 8, ஏப்ரல் 1934.

# 3

# உறுதிமொழி அளிப்பது ஆளுநருக்கு இழப்புமில்லை, காங்கிரசுக்கு ஆதாயமுமில்லை

*பம்பாய், ஏப்ரல் 8, 1937*

*''சட்ட வல்லுனரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், இந்தியா வின் அரசியல் சட்டத் தேக்கநிலை குறித்து பின்வரும் அறிக்கையை வெளியிட்டுள்ளார்:*

*''அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானப்படி, ஆளுநர்கள் காங்கிரசுக்கு உறுதிமொழி அளிக்க மறுத்ததன் விளை வாகத் தோன்றியுள்ள நிலை குறித்து, களத்தைக் காங்கிரஸுக்கு இழந்துவிட்டதால், கருத்து எதுவும் தெரிவிக்கத் தேவையில்லை என எண்ணியிருந்தேன். இந்த நிலை குறித்து நான் என்ன நினைக் கிறேன் என்பதைக் கூற நண்பர்கள் சிலர் வலியுறுத்தியதன் பேரில், இந்த விவாதங்களில் தலையிட முன்வந்துள்ளேன்.*

*இடைக்கால அமைச்சரவைகளை நியமிக்கும் ஆளுநர்கள் மீது காங்கிரஸ்காரர்கள் ஏன் பழிசுமத்த வேண்டுமென்பது புரிய வில்லை. பதவிகளை ஏற்பதில்லை என்பதோடு அரசியலமைப்பைச் சீர்குலைக்க வேண்டுமென்ற திட்டத்தைக் கொண்ட காங்கிரஸ் காரர்கள் இடைக்கால அமைச்சரவை அமைக்கப்பட்டதைக் கண்டு, பிரச்சினைகள் தீர்ந்தது என்று திருப்தியடையாது வாய்ப்பை இழந்ததால் சீற்றமடைந்து ஆர்ப்பரிப்பது எனக்கு ஒரு வகையில் ஆச்சரியமாக இருக்கிறது. அரசியலமைப்பை முறியடிக்க வேண்டு மென்று அவர்கள் கூச்சல் போடுவது வெறும் வேஷம் என்றே தோன்றுகிறது.*

## ஆளுநர்கள் மீது பழி சுமத்த முடியாது

*பெரும்பான்மை பெற்ற ஒரு கட்சி பதவியேற்க மறுக்கையில், தங்களது கொள்கைகளை ஆதரிக்கும் பெரும்பான்மையைச்*

சட்டமன்றத்தில் நிரூபிக்கிறோம் என்று உறுதியளிப்பவர்களுக்கு வாய்ப்பளிப்பது ஆளுநரின் கடமையாகும். குற்றம் சாட்டப்பட வேண்டியவர்கள் ஆளுநர்களல்ல. ஆனால் பதவியை ஏற்றுக் கொண்டுள்ளவர்கள்தான். அவையில் பெரும்பான்மையை நிரூபிக்காவிடின் , ஆளுநரை ஏமாற்றிய குற்றத்திற்கு ஆளாவோம் என்பதை அவர்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். சட்டமன்றத்தில் பெரும்பான்மையை இழந்த அமைச்சர்களை அரசியலமைப்பின் படியுள்ள சிறப்பு அதிகாரங்களைக் கொண்டு அமைச்சர்கள் தொடர்ந்து பதவியில் இருக்க அனுமதித்தால், ஆளுநர் மீது பழி சுமத்தப்பட வேண்டும்.

ஏனெனில் அவர்களுக்களிக்கப்பட்டுள்ள நெறிமுறை உத்தரவுகளின்படி, தங்களுடைய அதிகாரங்களை உபயோகிப்பதில் அவர்கள் கவனத்துடன் செயல்பட வேண்டும். ஆளுநர்களின் சிறப்பதிகாரங்களின் ஆதரவில் தங்களுக்குரிய பொறுப்புகளை அமைச்சர்கள் தட்டிக் கழித்துவிட முடியாது.

## சூழ்நிலை இன்னும் உருவாகவில்லை

இந்தச் சூழ்நிலை இன்னும் உருவாகவில்லை. ஆளுநர்களின் செயல்பாடுகள் மீது குற்றம் சாட்டுவதற்கு முன்பு சட்டமன்றத்தில் எதிர்க்கட்சி வாக்குகளால் அமைச்சர்கள் தோற்கடிக்கப்படும்போது அவர் என்ன செய்கிறார் என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.

## உறுதிமொழிக் கோரிக்கை

தங்களுடைய பெரும்பான்மையினால் பதவியை ஏற்றுக் கொள்ளும் தகுதி படைத்த காங்கிரஸ்காரர்கள் பதவி ஏற்பதற்கு முன்பேயே ஆளுநரிடம் உறுதிமொழி கேட்பது நியாயமானதா என்பதே முக்கியக் கேள்வியாகும். சட்டத்தில் மாற்றம் எதையும் விரும்பவில்லை என்பதை அவர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். இந்திய ராஜாங்க சட்டத்தின் எந்த விதிகளையும் நீக்கிவிடாமல் அவர்கள் விரும்பும் உறுதிமொழியை ஆளுநர்கள் கொடுத்திருக்கலாம் என்பதே காங்கிரஸ்காரர்களின் வாதம். ஆனால் சட்டத்தை மீறாமல் இத்தகைய உறுதிமொழியை கொடுக்க முடியுமா என்பதே கேள்வி.

## மன்னரும் ஆளுநரும்

இம்மாதிரி உறுதிமொழி அளிப்பதைத் தடை செய்வதற்கான விதிகள் எதுவும் சட்டத்தில் இல்லை, உறுதிமொழி கொடுக்க வேண்டுமென்ற விருப்பம் இல்லாததாலேயே ஆளுநர்கள் உறுதி மொழி அளிக்க மறுத்துள்ளனர் என்ற காங்கிரஸின் நிலையை ஆதரித்து திரு. புலாபாய் தேசாய் மற்றும் திரு. சி. ராஜகோபாலாச்சாரி ஆகிய இருவரும் மிகவும் விரிவாகப் பிரச்சாரம் செய்துள்ளனர்.

இந்திய ராஜாங்கச் சட்டத்தின் விதிகளைப் பாதிக்காமல் தங்களுடைய சிறப்பதிகாரங்களை தற்காலிகமாக நிறுத்தி வைத்துக் கொள்ள சம்மதிக்க ஆளுநர்களால் முடியுமா என்ற கேள்வியே நாம் அக்கறை கொண்டுள்ள விஷயம். இந்த ராஜாங்க சட்டத்தின் அடிப்படையில் ஆளுநருக்கு அளிக்கப்பட்டுள்ள சிறப்பு அதிகாரமும், மன்னர் பிரானின் ரத்து அதிகாரமும் எந்தவிதமான வேறுபாடும் இல்லாதவை என்ற அடிப்படையில் புலாபாய் தேசாயின் வாதம் இருப்பதாகத் தோன்றுகிறது. பிரிட்டிஷ் அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி மன்னர் பிரான் பெற்றுள்ள ரத்ததிகாரம், ஆளுநருக்கு அளிக்கப்பட்டுள்ள தனிப்பட்ட முடிவெடுக்கும், தன்னிச்சையாக முடிவெடுக்கும் அதிகாரத்தின் தன்மையிலிருந்து முற்றிலும் மாறுபட்டது எனக் கூறுகிறேன்.

ஒரு சில நடவடிக்கைகள் பின்பற்றப்பட வேண்டும் என்ற அமைச்சரவையின் அல்லது அமைச்சரின் ஆலோசனையை மறுக்கும் உரிமையை மன்னருக்கு ரத்து அதிகாரம் அளிக்கிறது. அமைச்சர் ஒருவரின் ஆலோசனையின்றி தம் பொறுப்பிலேயே செயல்படும் அதிகாரத்தை அந்த ரத்ததிகாரம் மன்னருக்கு அளிக்கவில்லை. தனிப் பட்ட முறையில் முடிவெடுக்கும் அதிகாரம், தன்னிச்சையாக செயல்படும் அதிகாரம், ஓர் அமைச்சரின் ஆலோசனையை மறுப்பதற் கான அதிகாரம் அதற்கு ஆதரவாக அமைச்சர் ஒருவரின் ஆதரவின்றி அவர் செயல்படும் உரிமையும் ஆளுநருக்கு அளிக்கப்படுகிறது. உண்மையில், ஓர் அமைச்சரின் ஆலோசனைக்கு எதிராக செயல் படுவதற்கு மன்னருக்கு மற்ற அமைச்சர்களின் ஆதரவு இருக்க வேண்டும். தாம் எடுக்கும் நடவடிக்கைகளுக்கு எந்த அமைச்சரின் ஆதரவும் ஆளுநருக்குத் தேவையில்லை. தனிப்பட்ட முறையில் தீர்மானிப்பதற்கும், ரத்து அதிகாரத்திற்கும் உள்ள வேறுபாடு இதுதான்.

## வரையறுக்கப்பட்ட அமைச்சரவை

நாடாளுமன்ற அமைப்பின் அடிப்படையிலான வெகுஜன அரசின் அமைச்சர்கள் நடத்தப்படுவதைப் போன்றே இந்திய அமைச்சர்களும் நடத்தப்பட வேண்டும் என்ற திரு. ராஜகோபாலாச்சாரி யின் கோரிக்கை, இந்திய ராஜாங்க சட்டத்திலுள்ள அரசு முறையை அவர்கள் முற்றிலும் தவறாகப் புரிந்து கொண்டுள்ளதைக் காட்டுகிறது. இந்திய ராஜாங்க சட்டத்திலுள்ள இந்திய அரசின் தன்மை வரை யறுக்கப்பட்ட அமைச்சரவையாகும். அது அரசியல் அமைப்புக்கு கட்டுப்பட்ட முடியரசு அல்ல. அரசியல் அமைப்பின்படி வரை யறுக்கப்பட்ட முடியரசில், முடியரசின் அதிகாரம், அமைச்சர வையின் அதிகாரத்தினால் கட்டுப்படுத்தப்படுகிறது. வரையறுக்கப் பட்ட அமைச்சரவை முறையில் அமைச்சரவையின் அதிகாரங்கள் ஆளுநரின் அதிகாரத்திற்கு கட்டுப்பட்டுள்ளன. ரத்ததிகாரம் மற்றும் தனிப்பட்டு முடிவெடுக்கும் அதிகாரம், வரையறுக்கப்பட்ட அமைச்சரவை மற்றும் அரசியலமைப்பால் கட்டுப்படுத்தப்பட்ட முடியரசு ஆகியவைகளுக்கு இடையேயான வேறுபாடுகளை நன்கு உணர்ந்தால்தான் தம்முடைய ரத்ததிகாரத்தை மன்னர் பிரான் தற்காலிகமாக நிறுத்தி வைத்துக் கொள்ள முடியும். ஆனால் ஆளுநரால் அது முடியாது என்பது புரியும். தம்முடைய சிறப்பு அதிகாரத்தை ஆளுநர் விட்டுக் கொடுக்க முடியாது. அமைச்சரவை யின் நடவடிக்கைகளுக்கும் அதனால் ஏற்படும் தீய விளைவுகளுக் கும் ஆளுநர் பொறுப்பாகிறார். அமைச்சரவை மீதுதான் பொறுப்பு இருக்க வேண்டும், ஆளுநர் மீதல்ல என்று நாம் அரசியல் அமைப்புச் சட்டத்தைக் குறித்து வாதிக்க முடியும். ஆனால் நாம் அதை அசட்டை செய்துவிட முடியாது. அரசியல் அமைப்புச் சட்டத்தை இன்றுள்ளபடியே ஏற்றுக்கொண்டு, அதற்கும் பிரிட்டிஷ் அரசியல் அமைப்புக்கும் உள்ள வேறுபாட்டை கணக்கில் எடுத்துக் கொண்டால் தங்களுடைய விசேஷ அதிகாரங்களை ஆளுநர்கள் விட்டுவிடுவது என்பது சட்டப்படி சாத்தியமற்றது என்று எனக்குத் தோன்றுகிறது. அரசியல் அமைப்புச் சட்டத்தை மீறாமல் இது சாத்தியமற்றது. அவர்கள் நடைமுறை விதிகளை ஏற்று நடக்க வேண்டும். இதை மேலும் தெளிவாகக் கூறுவதென்றால் பொறுப் பில்லாத அதிகாரத்தை விட்டுவிட முடியும். பொறுப்பிருந்தால் அதிகாரத்தை விட்டுவிட முடியாது.

அரசியல் அமைப்பின் செயல்பாட்டிற்கு சிறப்பதிகாரங்கள் எதிர்ப்புத் தளமாக இருப்பதாக வலியுறுத்தக் கூடாது என்பதே என் கருத்து.

## மகாத்மா காந்தியின் வாதங்கள்

இந்த உறுதிமொழியைக் கோருவதற்கு மகாத்மா காந்தி முற்றிலும் மாறுபட்ட வேறொரு காரணத்தை அளித்துள்ளார். அரசியலமைப்பு செயலாற்றும் விதத்தை அறிந்த எவரும் இவ்வளவு வலிமையற்ற வாதத்தை முன்வைக்க மாட்டார். அவர் கூறுகிறார்: ''வாக்காளர்களின் பலத்த ஆதரவு பெற்ற ஒரு வலிமையான கட்சி, ஆளுநர் தம் விருப்பப்படி குறுக்கிடுவாரோ என்று எந்நேரமும் அச்சத்துடன் உறுதியற்ற நிலையில் செயல்பட முடியாது. தம்முடைய பெரும்பான்மையை உணர்ந்த எந்த சுயகௌரவமுள்ள அமைச்சராலும் இது முடியாது. தன்னுடைய வாக்காளர்கள் பலத்தை உணர்ந்துள்ள அமைச்சரவை ஆளுநரிடம் உறுதிமொழியைப் பெறக் கெஞ்சிக் கொண்டிருக்காமல், களத்தில் இறங்கி தங்கள் அதிகாரத்தை உபயோகித்து ஆளுநருக்குச் சவால் விடும். இம்மாதிரி உறுதிமொழி நிச்சயமாக வாக்காளரின் ஆதரவற்ற, வலிவற்ற ஒரு அமைச்சரவைக்குத்தான் அவசியம். காங்கிரஸ் போன்ற வலிமையான கட்சிக்கு உறுதிமொழி எதுவும் தேவையில்லை. நன்னடத்தைக்கான உறுதிமொழி கோரி காங்கிரஸ்காரர்கள் ஆளுநரை ஏன் யாசிக்கிறார்கள். சரியான முறையில் நடந்து கொள்ளுமாறு ஆளுநரை அவர்களால் கட்டுப்படுத்த முடியும்.

## ஆளுநர்கள் உறுதிமொழி அளிக்கலாம்

தொந்தரவு செய்யும் குழந்தைகளைக் கையாளுவது போல, காங்கிரஸ்காரர்களுக்கு உறுதிமொழி அளித்து அவர்கள் அழுகையை ஆளுநர்கள் நிறுத்த முடியுமா? அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானத்தைப் படித்துவிட்டு அதன் அடிப்படையில்தான் அவர்கள் உறுதிமொழி கோருகின்றனர் என்பதைக் கவனத்தில் கொண்டால் இந்த மாதிரி உறுதிமொழி அளிப்பதன் மூலம் எதையும் இழக்கப் போவதில்லை என்றே நான் நம்புகிறேன். அரசியல் அமைப்புக்குட்பட்டே தாங்கள் செயல்படப் போவதாக காங்கிரஸ் அமைச்சர்கள் உத்தரவாதம் அளித்திருப்பதால், அதற்கு இணையாக ஆளுநர்களும் தங்கள் சிறப்பதிகாரங்களை உபயோகிக்கப் போவதில்லை என உத்தரவாதம் அளிக்க மறுப்பதற்கு எவ்விதக் காரணமும் இருப்பதாகத் தெரியவில்லை.

## ஆதாயமும் இல்லை நஷ்டமும் இல்லை

காங்கிரஸ்காரர்கள் அனைவரிடமும் நான் கேட்க விரும்பும் கேள்வி இதுதான் : அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானத்தின்படி உத்தரவாதத்தை ஆளுநர் அளித்திருந்தால் அவர்கள் அடையக்கூடிய ஆதாயம் என்ன? ஆளுநர் தமது விசேஷ அதிகாரத்தை உபயோகிக்க வேண்டிய தருணம் வந்து விட்டதா இல்லையா என்பதைத் தீர்மானிக்க வேண்டியது யார் என்பதே முக்கியமான கேள்வி என்று எனக்குத் தோன்றுகிறது. சிறப்பு அதிகாரத்தை உபயோகிக்க வேண்டிய தருணம் வந்து விட்டதா, இல்லையா என்பதை அமைச்சரவையே தீர்மானிக்க வேண்டும் என்ற உத்தரவாதத்தை ஆளுநர் அளிக்க வேண்டுமென்று காங்கிரஸ்காரர்கள் கோருவதன் மூலம் அவர்கள் ஏதோ சாதித்துவிட்டதாகக் கூறலாம். இம்மாதிரி உத்தரவாதம் உண்மையிலேயே பயனற்றது. இம்மாதிரி உத்தரவாதம் கோரப்படவில்லை. காங்கிரஸ்காரர்கள் கோரும் உத்தரவாதம் சம்பந்தமற்றது. அவ்வாறு உத்தரவாதம் அளிக்கப்படினும், அதையும் மீறாது, ஒரு குறிப்பிட்ட நடவடிக்கையில் விசேஷ அதிகாரத்தை உபயோகிக்க வேண்டிய வகையில் அமைச்சரவை செயல்பட்டது என்று ஆளுநர் நடவடிக்கை எடுக்கலாம். இந்த உத்தரவாதத்தை அளிப்பதன் மூலம் ஆளுநர் இழப்பதென்ன என்பதைக் காணவும், இந்த உத்தரவாதம் அளிக்கப்பட்டால் காங்கிரஸ்காரர்கள் அடையும் ஆதாயம் என்ன என்பதை காணவும் நான் முயன்றுள்ளேன்.''[1]



1. பம்பாய் கிராணிக்கில், 9 ஏப்ரல், 1937.

## 4

# அது முற்றிலும் ஒரு கட்சியின் நடவடிக்கை, அதில் தேசிய நோக்கம் எதுவும் இல்லை

பம்பாய் மாகாணச் சட்டமன்றச் சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் தலைவர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தம் சார்பாகவும், தமது கட்சி உறுப்பினர்கள் சார்பாகவும் காங்கிரஸ் கட்சியின் தலைவர் திரு. பி.ஜி. கேருக்கு எழுதியுள்ள கடிதத்தில், பம்பாய் ஆளுநர் மந்திரிசபை ஒன்றை நியமித்துள்ளதற்கு காங்கிரஸ் கட்சியின் எதிர்ப்புக்கு ஆதரவளிக்க மறுத்துவிட்டதைத் தெரிவித்துள்ளார்.

தற்போதைய சூழ்நிலைக்குக் காங்கிரஸ் கட்சியே காரணம் என்று தமது பதிலில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் குற்றம் சாட்டியுள்ளார். ஏனெனில், ஆளுநர் உறுதிமொழி தரவேண்டும் என்ற காங்கிரஸின் கோரிக்கை தேவையற்றது என்பதுடன் சாத்தியமற்றது என்பதும் அவருடைய கட்சியின் கருத்தாகும்.

சட்டமன்றக் கூட்டத்தைக் கூட்ட, இத்தருணத்தில் அழைப்பு அனுப்பாததற்கு ஆளுநரைக் குற்றம் சாட்ட முடியாது என்று டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார். சட்டசபை கூட்டப்படாமல் ஆறு மாதம் கழிந்தால்தான், அரசியல் சட்ட விரோத நடவடிக்கையாக, அது கருதப்படும்.[1]

ஏற்கெனவே அரசியல் சாசனம் நடைமுறைக்கு வந்து விட்டதால், அரசியல் சாசனப்படியான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு அவை தோல்வியடைந்தால் மட்டுமே, அரசியல் சாசனத்திற்குப் புறம்பான ஆர்ப்பாட்டங்களில் சட்டமன்ற உறுப்பினர்கள் ஈடுபட வேண்டுமென்று சுதந்திரத் தொழிலாளர் கட்சி கருதியது.

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 17 மே, 1937.

காங்கிரஸ் கட்சியின் இந்த நடவடிக்கை அக்கட்சியின் அதிகாரத்தை மற்றும் அந்தஸ்தை உயர்த்துவதையும், அதன் நிலைப்பாட்டை நியாயப்படுத்துவதையும் நோக்கமாகக் கொண்டுள்ளது என்று மேலும் டாக்டர் அம்பேத்கர் கூறியுள்ளார். அது முற்றிலும் ஒரு கட்சி நடவடிக்கையே. அதில் தேசிய நோக்கம் எதுவும் இல்லை.*



★ பீகார் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் லீகின் (பாட்னா) தலைவர் ஜெகஜீவன் ராம், 1937 மார்ச் 8ல் டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு எழுதிய கடிதத்தை இணைப்பு VIIIல் காண்க.

## 5

# வயது வந்தோர் வாக்குரிமையை அறிமுகப்படுத்த அயராது போராடுவோம்

வயது வந்தோர் வாக்குரிமையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணய சபை மூலம் தேசிய அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்க வேண்டுமென்று உரத்த குரலில் கூறிவந்த இந்திய தேசிய காங்கிரஸின் சார்பில், பதவிக்கு வந்துள்ள பம்பாய் அமைச்சரவை ''திருத்தப்பட்ட முனிசிபல் சட்டத்தில்'' வயது வந்தோர் வாக்குரிமை சம்பந்தமாக தங்கள் கடமையிலிருந்தும், பொறுப்பிலிருந்தும் நழுவுவது பெரும் ஆச்சரியத்தை அளிக்கிறது என்று 'சென்டினல்' பிரதிநிதிக்கு அளித்த நேர்காணலில் டாக்டர் அம்பேத்கர் கூறியுள்ளார்.

காங்கிரஸ் அதிக ஆர்வம் கொண்டிராத லோதியன் கமிட்டியின் சில உறுப்பினர்கள், மாகாணம் முழுவதும் வயது வந்தோர் வாக்குரிமையை அறிமுகப்படுத்தத் தயாராக உள்ளனர். ஆனால் வாக்கெடுப்பன்று, வாக்களிப்பதற்கு உறுப்பினர்கள் வராததே இதற்கு முட்டுக்கட்டையாக இருந்தது'' என்று அவர் கூறியுள்ளார்.

வயது வந்தோர் வாக்குரிமைக்காகப் பல ஆண்டுகளாக கூக்குரல் எழுப்பிவரும் காங்கிரஸ் அரசு, முனிசிபாலிட்டியிலும், தாலுகாக்களிலும், அதை அமல்படுத்தும் வாய்ப்பை பயன்படுத்தியிருக்க வேண்டும். ஆரம்பத்திலேயே அவர்கள் தங்கள் கடமையை கைகழுவி விட்டனர்.

பம்பாய் முனிசிபாலிட்டியில் வயது வந்தோர் வாக்குரிமையை அறிமுகப்படுத்த எந்தத் தயக்கமும் தேவையில்லை. ஏனெனில் வயது வந்தோர் வாக்குரிமையை சோதித்துப் பார்க்க மாகாணம் முழுவதற்குமாக பம்பாயைப் போல பொருத்தமான வேறு எந்த நகரமும் இருக்க முடியாது.

மற்ற இடங்களைவிட இங்கு எழுத்தறிவு அதிகம். மற்ற இடங்களை விட கல்வியின் தரம் இங்கு சிறப்பாக உள்ளது. பொது நலப் பிரச்சினைகளில் மற்ற இடங்களைக் காட்டிலும்

இங்குள்ள மக்கள் அதிக அக்கறை கொண்டுள்ளனர். வயது வந்தோர் வாக்குரிமையை அறிமுகப்படுத்த, பம்பாயே பொருத்தமான இடம் என்பதற்கு மேலும் பல காரணங்கள் உள்ளன. 1942ல் வயது வந்தோர் வாக்குரிமை அறிமுகப்படுத்த வேண்டும் என்று அறிவிக்கும் மசோதா ஒன்றை காங்கிரஸ் அமைச்சரவை கொண்டு வந்தது. அதுவும் நகரமன்றத்தின் அனுமதியுடன் என்ற நிபந்தனையும் அதில் சேர்க்கப்பட்டுள்ளது.

''திரு.எம்.என்.ஜோஷி கூறியபடி இது ஒரு முட்டாள்தனமான நிபந்தனையாகும். தங்களை நகரமன்றத்திலிருந்து வெளியே தள்ளும் வாக்காளர்களை உருவாக்கி, நகர மன்றம் தற்கொலை செய்துகொள்ள வாக்களிக்கப் போவதில்லை

**காங்கிரசின் கொள்கை எதுவாயினும், சமூகத்தில் மிகவும் கீழ்மட்டத்திலுள்ள மக்களை பிரதிநிதித்துவப் படுத்தும் எங்கள் கட்சியும், நானும் வயது வந்தோர் வாக்குரிமையை நகரத்திற்கு அளிக்க பாடுபடும் எந்த இயக்கத்திலும் சேர்ந்து செயல்படுவோம்.**

ஜனநாயகத்தின் முக்கிய கூறான இதை அடைவதற்கு சட்ட மன்றத்தில் அயராது போராட்டம் நடத்துவதுடன், முடிந்தால் அமைச்சரவையை பணிய வைக்க முயல்வோம்.

**மக்கள் சக்தியை அமைச்சரவை உணர்ந்துகொள்ளவும், அவர்களுக்கு அளித்துள்ள வாக்குறுதிகள் மற்றும் கொள்கைகளை நிறைவேற்றுவதைப் புரிந்து கொள்ளவும் சட்டமன்றத்திற்கு வெளியே கூட்டங்கள் மற்றும் ஆர்ப்பாட்டங்கள் நடத்த நாங்கள் உதவி செய்வோம்.**

இப்பொழுது இவ்வகை மசோதாவை அறிமுகப்படுத்தும் முட்டாள்தனத்தை அமைச்சரவை உணர்ந்து கொள்ளும் என நான் நம்புகிறேன். இதைச் சட்டமன்றத்தில் அறிமுகப்படுத்துவதற்கு முன்பு, அவர்களுடைய உறுதிமொழிகளையும் வாக்குறுதிகளையும் நினைவில் கொண்டு, 1942 வரை காத்திராமல் மற்றும் நகரமன்றத்தில் அனுமதி தேவை என்ற நிபந்தனையை எடுத்து விட்டு தேவையான மாற்றங்களைச் செய்வார்கள் என நம்புகிறேன்.[1]



---

1938 ஜனவரி 1931 - பம்பாய் சென்டினல்



*போராட்டம் மற்றும் தியாகத்தின் மூலமே மேன்மை நிலையை எட்ட முடியும். நெருப்பில் புடம்போடாது இறைத்தன்மையையோ, மனிதத்தன்மையையோ எட்ட முடியாது.*

**- டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்**

# 6

# கூட்டரசுக்கு (பெடரேஷன்) எதிரான இயக்கம் நாட்டு வரலாற்றில் திரும்பு முனை

*பம்பாய், ஜூலை 20, 1938*

''கூட்டரசுப் பிரச்சினைக்கு எதிராக கட்சி வேறுபாடுகளை மறந்து நாட்டிலுள்ள முற்போக்கு சக்திகளெல்லாம் தங்கள் பலத்தைத் திரட்ட வேண்டும். அப்பொழுதுதான் நாட்டை எதிர் நோக்கியிருக்கும் போராட்டத்தைத் தவிர்க்க முடியும்.''

இது மிகவும் சோதனையான தருணம். எல்லோரும் தியாகம் செய்ய வேண்டிய அவசியம் வந்துவிட்டது என்று பம்பாய் சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் தலைவர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தெரிவித்துள்ளார். கூட்டரசு மற்றும் அது குறித்த கட்சியின் கண்ணோட்டம் சம்பந்தமாக ''யுனைட்டெட் பிரஸ்ஸுக்கு'' அளித்த அறிக்கையில் இதை அவர் தெரிவித்துள்ளார்.

### காங்கிரசும் கூட்டரசும்

''தற்பொழுது'' மிகவும் தேசிய முக்கியத்துவம் பெற்ற அரசியல் பிரச்சினை யாதெனில், 1935 ஆம் ஆண்டு இந்திய ராஜாங்க சட்டத்தில் உள்ள கூட்டரசுத் திட்டத்தை ஏற்றுக் கொள்வதா, மறுப்பதா என்பதுதான். எவ்வளவு விரைவில் கூட்டரசு முறையை அமுல் படுத்தலாம் என்று பிரிட்டிஷ் அரசின் பிரதிநிதிகள் துடிதுடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இந்திய அரசாங்கச் சட்டத்தில் கூட்டரசு சம்பந்தமான பிரிவை நாடு முழுவதுமே எதிர்க்கிறது என்பது தெளிவு. இருப்பினும் எதிர்ப்பில் பல தரங்கள் உள்ளன. கூட்டரசு திட்டத்தை கைவிட உறுதி பூண்டுள்ள காங்கிரஸ் கட்சியில்கூட கூட்டரசு சம்பந்தமாக நடைமுறையில் எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் குறித்து, மாறுபட்ட கருத்துகள் உள்ளன. தங்களுடைய எதிர்ப்பில் சமரசத்திற்கு இடமின்றி பெரும்பாலான மூத்த தலைவர்கள் நடந்து கொள்ளவில்லை என நம்புவதற்கு காரணங்கள் உள்ளன. காங்கிரஸ் மேடையிலிருந்து

இந்தப் பொருள் சம்பந்தமாக நிறைவேற்றப்பட்ட வாசகங்கள் கூட்டரசு அறிமுகத்தை வரவேற்க சிலரை இட்டுச் செல்லக் கூடும்.

''மேலும் இம்மாதிரியான விஷயங்களில் கடந்தகால அனுபவத்திலிருந்து பார்க்கையில், இளைய தலைமுறையின் எதிர்ப்புக்கு வாய்ப்பூட்டு போடுவதில் வெற்றி பெற்றுவிடுவார்கள் அல்லது ஏற்றுக் கொண்டு முறியடித்துவிடுவார்கள். இந்தியாவிலும் இங்கிலாந்திலும் ரகசியப் பேச்சு வார்த்தைகள் நடைபெற்றது குறித்து நம்புவதற்கு சூழ்நிலைச் சான்றுகள் உள்ளன. எனவே இந்தப் பேச்சு வார்த்தைகளின் விளைவாக அரசியலமைப்பு, சில பழுதுபார்க்கும் பணிகளுக்கு உள்ளாகக் கூடும். பிறகு அது ஏற்றுக் கொள்ளத் தகுந்தது என அறிவிக்கப்படும்.

## திரும்புமுனை

சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் கொள்கை சம்பந்தமாக டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது : நாட்டின் வாழ்வில் இது ஒரு திரும்புமுனை என்று சுதந்திரத் தொழிலாளர் கட்சி கூறுகிறது. இந்தப் பிரச்சினையை ஒரு கட்சிக் கண்ணோட்டத்தில் பாராது நாட்டு நலன் கண்ணோட்டத்தில் பார்க்க வேண்டும். இந்திய அரசாங்க சட்டத்தின், கூட்டாட்சி திட்டத்தின் பிற்போக்குத் தன்மையை பலதரப்புகள் சரியாக, முற்றிலுமாக உணர்ந்ததாகத் தெரியவில்லை. சுயாட்சிக்கான முழு அதிகாரம் அளிப்பதை நிறுத்தி வைக்கிறது என்பதற்காகவே புதிய அரசியலமைப்புச் சட்டத்தின் மீது பெரும்பாலான இந்திய அரசியல்வாதிகளும் அதிருப்தி கொண்டுள்ளதாகத் தெரிகிறது. அதன் ஆபத்துகளை அவர்கள் முற்றிலுமாக உணரவில்லை. இந்தத் தலைவர்களைப் பொறுத்த வரையில் அரசியல் சாசனம் செயல்படாதிருக்கும் ஆபத்து வெறும் வேஷமாகவே கருதப்படுகிறது. பெரும்பாலான காங்கிரஸ்காரர்கள் அல்லது பெரும்பான்மையான தலைவர்கள் இந்தப் பிரிவிலேயே உள்ளனர் என அஞ்சுகிறேன்.

நாட்டின் சுதந்திரம் ஒரு முழு தேசிய நிலைக்கு வளர்வதை, அற்ப ஆதாயத்திற்காக - அது எந்தப் பெயரில் அழைக்கப்பட்டாலும் - பண்ட மாற்றம் செய்வதில் சுதந்திர தொழிலாளர் கட்சி பங்கேற்காது. பரிணாம வளர்ச்சியில், கூட்டரசு தவிர்க்க முடியாததானாலும், நிச்சயமாக புதிய அரசியலமைப்பில் எதிர் நோக்கப்படுவது கூட்டரசல்ல.

## கூட்டரசின் குறைபாடுகள்

கூட்டரசுக்கு எதிராக முன்வைத்துள் குற்றச்சாட்டுகளைக் குறித்து டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது: ''குற்றச்சாட்டு களின் அடிப்படைகளை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம் (1) நிறைவற்ற தன்மை, (2) குறைபாடுகள். முந்தையதில் உள்ளியல் பாயிருக்கிற சமஸ்தானங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அதிக அளவிலான பிரதிநிதித்துவம், நியமனத்தின் மூலம் சமஸ்தான பிரதிநிதிகள் நியமிக்கப்படுவது, சமஸ்தானங்களுக்குமிடையே யான சமநிலையற்ற நிதிச் சுமை பகிர்ந்தளிப்பு, பிரிட்டிஷ் இந்தியா விற்கும் கூட்டரசு சபைக்கும் மறைமுகத் தேர்தல், கவர்னர் ஜெனரலுக்குள்ள விசேஷ பொறுப்புகளைச் சேர்க்கலாம். பின்னதில் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்: 1) உச்ச அதிகாரத்தை ஒதுக்கப்பட்ட பொருளாக வைத்திருப்பது 2) இராணுவத்தின் மீது முழுக் கட்டுப்பாடு கொண்டு வருவதில் சாத்தியமின்மை; நிதித் துறையின் மீது முழுக் கட்டுப்பாட்டிற்கு சாத்தியமின்மை. இந்தக் குறைபாடுகள் கடுமையானதுதான் என்றாலும், காலப்போக்கில் அவை மறைந்துவிடலாம் அல்லது நீக்கப்பட்டு விடலாம். உள்ளார்ந்த குறைபாடுகள் இப்படிப்பட்டவை அல்ல. கூட்டரசு அரசியலமைப்பு முழுவதையும் அழிக்காமல் இந்தக் குறைபாடு களை நீக்க முடியாது. சில பகுதிகள் முற்றிலும் சரியாக இல்லாம லிருப்பதற்காக அரசியலமைப்பை குறை கூறவேண்டிய அவசிய மில்லை. நடைமுறையில் பரஸ்பர பேச்சுவார்த்தைகளுக்குப் பிறகு இவை சரிசெய்யப்படலாம். இது முற்றிலும் சாத்தியம் என்பது அனுபவத்தில் தெரிகிறது. நடைமுறையில் அவை நீக்கத்தக்கதாக இல்லையென்றால் மறுபரிசீலனையின்போது அவை நீக்கப் படலாம். ஆனால் அரசமைப்பு குறைபாடுகளின் அடிப்படையில், அதன் வளர்ச்சியைத் தடுக்க கூடியதாக இருக்குமானால் அது முற்றிலும் மாறுபட்ட நிலையாகும். கூட்டரசு அரசமைப்பு கொள்கை யளவில் தவறானது என்பதுடன் அடிப்படையும் தவறானதாகும்.

## ''பயங்கர விஷம்''

இறுதியாக டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது: ''கூட்டரசுத் திட்டத்தை இந்திய அரசாங்கச் சட்டத்தில் அறிமுகப்படுத்துவதை சுதந்திர தொழிலாளர் கட்சியின் நோக்கில் எல்லா விதத்திலும் தடுக்கப்பட வேண்டும். புதிய அரசியல் அமைப்பில் கூட்டரசு சம்பந்தமான பிரிவு கடும் விஷம் என்று ஒதுக்கப்பட வேண்டும்.

காங்கிரஸ், புதிய அரசியலமைப்பை எதிர்க்க பெரும்பான்மையாக முடிவு செய்தால் அதற்கு சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் முழு ஆதரவும் உண்டு. ஆனால் காங்கிரஸ் கட்சி பிற்போக்கு சக்திகளால் திசைமாறினால், திரு.சுபாஷ் தமது நிலையில் உறுதியாக இருப்பாரானால், சுதந்திரத் தொழிலாளர் கட்சி அவருடன் சேர்ந்து கொள்ளும். புதிய அரசியல் அமைப்பின் கூட்டரசுப் பகுதியை எதிர்க்கும் கட்சியுடனும், கட்சிக் கூட்டணிகளுடனும் எங்கள் கட்சி எல்லா விதங்களிலும் ஒத்துழைக்கும்.

'யுனைடெட் பிரஸ்'



1 : பம்பாய் கிராணிக்கில், தேதி 21 ஜுலை 1938

# 7

# பங்கீட்டு முறை வாக்களிப்பு : டாக்டர் அம்பேத்கரின் எதிர்ப்பு

பம்பாய், வியாழன்*

''தீண்டத்தகாதவர்களுக்குப் பங்கீட்டு வாக்களிப்பு முறை குறித்து தமது எதிர்ப்பை இந்தியாவிற்கான ராஜாங்கக் காரிய தரிசிக்கும் மற்றும் எதிர்க் கட்சித் தலைவரான அட்லிக்கும் தந்தி மூலம் தெரிவித்துள்ளார்.

தந்தியின் வாசகம் வருமாறு:

இந்தியாவுக்கான ராஜாங்கக் காரியதரிசி, லண்டன்

பாட்னா ஒப்பந்தத்தின் கொள்கைக்கு எதிரான பங்கீட்டு வாக்களிப்பு முறையை அறிமுகப்படுத்தும் தீர்மானத்தை தீண்டத் தகாதவர்களின் சார்பாக வன்மையாகக் கண்டிக்கிறேன்.

அம்பேத்கர்.

மேஜர் அட்லி எம்.பி.
காமன்ஸ் சபை,
லண்டன்.

''தீண்டத்தகாதவர்களைப் பாதிக்கும் பங்கீட்டு வாக்களிப்பு முறையை அறிமுகப்படுத்த சபைக்கு வந்துள்ள தீர்மானத்தை எதிர்க்கிறேன்.

அம்பேத்கர்.''[1]

---

★ 9, மார்ச் 1939

1 : பிரி பிரஸ் ஜர்னல், 10 மார்ச் 1939.

# 8

# பிரிட்டனை ஆதரிக்க வேண்டும்

*கட்சியின் கண்ணோட்டத்தை விளக்கி பத்திரிகைகளுக்கு அளித்த அறிக்கையில் சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் தலைவர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், இந்தப் போரில் பிரிட்டனை ஆதரிக்க வேண்டும் என்ற கருத்தை வெளிப்படுத்தியுள்ளார். - ஆசிரியர்கள்.*

ஐரோப்பிய யுத்தம் சம்பந்தமாக கட்சியின் கருத்தை விளக்கி பின்வரும் அறிக்கையை வெளியிட சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் நிர்வாகக் குழு அதன் தலைவருக்கு அனுமதி அளித்துள்ளது.

போர் அறிவிக்கப்பட்டதிலிருந்தே, இந்த யுத்தத்தில் இந்தியர்களின் கடமை என்ன என்பது குறித்து முக்கிய இந்தியர்களிடமிருந்து அறிக்கைகள் வந்து குவிந்துள்ளன. யுத்தத்தில் பிரிட்டனின் தரப்பில் சேரவேண்டுமென்று பெரும்பான்மை கருத்துகள் இருந்தாலும், அதிகமான உற்சாகம் காணப்பட வில்லை, மாறாக பிரிட்டன் தரப்பில் முழு மூச்சுடன் சேர்வதில் தயக்கத்தையும் ஆர்வமின்மையையும் நன்கு காண முடிந்தது. உதவி அளிக்கப்படுவதென்றால், அது நட்புறவற்றதாகவோ அரைகுறை மனதுடனோ இருக்கக்கூடாது.

செயலற்ற பாதுகாப்புக்கு மட்டுமே ஒத்துழைக்க வேண்டுமென்ற அரைகுறை மனதுடையவர்களுக்கும் சாத்விக தடைகளை அளிக்க விரும்பும் நட்பற்றவர்களுக்குமிடையே உண்மையான உதவி முனைப்பிழந்து விடுகிறது. எனவே எல்லா வகுப்பினர் மற்றும் பிரிவினரின் உதவியை எடுத்துக் கொள்ள வேண்டியது அவசிய மாகிறது. எனவே இந்த ஆர்வமற்ற நிலைக்கு பொறுப்பான காரணங்களை புரிந்துகொண்டு ஆய்வு செய்வது அவசியமாகிறது.

## சேம்பர்லினின் மந்த நிலை

காரணங்களை ஆராய்ந்து பார்க்கையில் கடந்த காலத்தில் பிரான்சும், பிரிட்டனும் நடந்துகொண்ட முறையே இந்த ஆர்வமின்மைக்கு ஐயமின்றி காரணமாக இருக்கிறது என

சுதந்திரத் தொழிலாளர் கட்சி கருதுகிறது. ஜெர்மனிக்கு எதிராக பிரிட்டன் மற்றும் பிரான்ஸ் மிகவும் மெதுவாகவே நடவடிக்கை களைத்துவக்கின.

கிடைத்த முதல் சந்தர்ப்பத்திலேயே கூட்டு நடவடிக்கைகளின் மூலம் ஜெர்மனியின் ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்துவதற்குப் பதிலாக ஒவ்வொரு ஆக்கிரமிப்பாகத் தொடர, அவர்களை அனுமதித்தார்கள். செக்கோஸ்லாவாக்கியாவைப் பாதுகாக்க வேண்டிய புனிதப் பணியை மறந்து, அந்நாட்டு மக்களின் வாழ்வை யும் சுதந்திரத்தையும் தாரை வார்த்துக் கொடுக்க அவர்கள் சமரசம் செய்துகொண்டனர். ஹிட்லர் ஐந்து இடங்களில் வெற்றி பெறுவதற்கு அனுமதித்ததுடன், போலந்தை ஆறாவது பலிகடாவாகக் கொடுக்க முன்வந்துள்ளனர்.

இப்பொழுது ஹிட்லரை எதிர்க்க முன்வந்துள்ள இந்த அரசுகள் முன்பே அந்த சர்வாதிகாரிக்கு கடுமையான பதிலடி கொடுத்திருக்க வேண்டும்.

ஜெர்மனியின் தாக்குதலிருந்து தப்பித்துக் கொள்ள, சிறிய வலிமையற்ற நாடுகளின் சுதந்திரத்தையும், வாழ்வையும் தியாகம் செய்துவிட்டு, இப்பொழுது ஆயுதம் ஏந்திய போருக்கு அறைகூவல் விடுவது நேர்மையற்ற அடிப்படையாகவே உள்ளது.

நீண்ட காலத்திற்கு நியாயமான அமைதியை உலகில் நிறுவிட உண்மையான விருப்பத்துடன் போர்கள் நடத்தப்படு வதில்லை. போர் முடிந்தவுடன் அமைதிக்கான நிபந்தனைகள் நசுக்கப்பட்டு விடுகின்றன என்று சுதந்திரத் தொழிலாளர் கட்சி கருதுகிறது.

## மூன்று முக்கிய நிபந்தனைகள்

கூட்டுப் பாதுகாப்புச் சிறந்தது என்றாலும், அது போதுமான தல்ல என்பதைப் பிரிட்டனும், பிரான்சும் ஒரு பொழுதும் உணர வில்லை. 1914 ஆம் ஆண்டுப் போரில் கூட்டுப் பாதுகாப்பில் எந்த விதக் குறைபாடும் இருக்கவில்லை. ஆக்கிரமிப்பாளரை அடித்து நொறுக்க பல நாடுகள் முன்வந்தன. ஆக்கிரமிப்பாளரும் தோற் கடிக்கப்பட்டனர். ஆனால் ஆக்கிரமிப்பாளர்களும் கல்லறையி லிருந்து எழுந்து எல்லோரையும் அச்சுறுத்துகின்றனர்.

ஆக்கிரமிப்பாளரை தலைதூக்கவிடாமல் ஒடுக்க வெறும் வெற்றி மட்டும் போதாது. நிரந்தர அமைதியை நிறுவ வேறு சில முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளும் எடுக்கப்பட வேண்டும் என்று சுதந்திரத் தொழிலாளர் கட்சி நம்புகிறது.

முதலாவது :- ஒரு நியாயமான சமாதானத்திற்காக வெற்றியின் விளைவு இருக்க வேண்டும்.

இரண்டாவது :- கூட்டு நடவடிக்கைகள் மூலம் அமைதி காக்கப் பட வேண்டும்.

மூன்றாவது :- அமைதிக்குக் குந்தகம் விளைவிப்பவர்கள் அருகிலோ, தொலைவிலோ எங்கிருந்தாலும், அமைதிக்குப் பாடுபடுபவர்கள் அதை மிகத் தெளிவாகப் பறைசாற்ற வேண்டும்.

இந்த முன்னெச்சரிகையில்லாமல் போருக்கு முடிவுகட்ட முடியாது. இந்த நிபந்தனைகளில் சுதந்திரத் தொழிலாளர் கட்சி ஆழ்ந்த அக்கறை கொண்டுள்ளது. சமாதானத்திற்கான நிபந்தனை களைத் தீர்மானிக்கவும், அவர்கள் தரப்பில் போரிட முன்வரும் நாடு களின் 'குழு' ஒன்றை அமைப்பதை ஆரம்ப நடவடிக்கையாக எடுக்க வேண்டும். இந்த நிபந்தனைகள் உலகம் முழுவதற்கும், ஜெர்மன் மக்களுக்கும் தெரிவிக்கப்பட வேண்டும்.

நேச நாடுகளின் நியாயத்தை உலகம் ஏற்றுக்கொள்வதற்கு இந்த அறிவிப்பைவிட உகந்தது வேறு எதுவும் இருக்க முடியாது என்பதே சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் கருத்தாக உள்ளது. ஒரு நியாயமான சமாதானத்தை நிலை நிறுத்தவும், அதைப் பேணிப் பாதுகாக்கவுமே நேச நாடுகள் விரும்புகின்றன என்பதற்கு உத்தர வாதமாக அது இருக்கும்.

## இந்தியாவும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் வெளிநாட்டுக் கொள்கையும்

பிரிட்டனுக்கு உதவுவதற்கு இந்தியா தயக்கம் காட்டு வதற்கு நிலைமையில் மேலும் ஒரு குறைபாடு இருப்பதாகச் சுதந்திரத் தொழிலாளர் கட்சி கருதுகிறது. இன்றைக்குள்ள நிலைமையில், பிரிட்டிஷ் அமைச்சரவை என்ற தேர்ச் சக்கரத்தில் இந்தியா கட்டப்பட்டிருக்கிறது. பிரிட்டிஷ் அரசியல் பிரமுகர்கள்

எந்தவித வெளிநாட்டுக் கொள்கையையும் பின்பற்ற முடியும். எந்தவித சர்வதேசப் பொறுப்புகளையும் ஏற்றுக்கொள்ள முடியும். அவர்கள் விருப்பப்படி யுத்தத்தை அறிவிக்கவோ, அறிவிக்காம லிருக்கவோ, எந்தவித சமாதானத் திட்டத்தையும் அறிவிக்க முடியும். யுத்தத்தை அறிவிக்கும் வெளிநாட்டு கொள்கையிலோ, சமா தானத்தை அறிவிப்பதிலோ இந்தியாவுக்கு எந்தவிதப் பங்கும் இல்லை.

ஒரு குறிப்பிட்ட வெளியுறவு கொள்கை வெற்றிபெற்றால், அதில் கிடைக்கும் ஆதாயத்தில் ஒரு சிறுபாகமே இந்தியாவுக்குக் கிடைக்கிறது. ஆனால் அந்த வெளிநாட்டுக் கொள்கையின் விளைவாக யுத்தம் நேர்ந்தால் நிதி உதவியையும் மக்கள் சேவை யையும் யுத்தத்திற்கு இந்தியா அளிக்க வேண்டும்.

யுத்தத்தைத் தீர்மானிக்கும் நிகழ்வுகளில் இந்தியாவுக்கு எந்தப் பங்கும் கிடையாது. யுத்தத்தை முடிவுக்குக் கொண்டுவருவதற்கு நிபந்தனைகளை முன்வைப்பதில் இந்தியாவுக்கு எந்தப் பங்கும் கிடையாது. யுத்தம் நடக்கும் போது அதில் பங்கு கொள்வது மட்டுமே அதன் கடமை. இந்தியா போன்ற ஒரு பெரிய நாட்டிற்கு இது அவமானமும் நியாயமற்றதுமாகும்.

## எல்லா நாடுகளுக்கும் அச்சுறுத்தல்

தயக்கத்திற்கான இந்த எல்லா அடிப்படைகளையும் சுதந்திரத் தொழிலாளர் கட்சி கவனத்தில் எடுத்துக்கொண்டுள்ளது. அவை பலமான ஆதாரங்கள் என்பதை மறுக்க முடியாது. போலந்தைப் பாதுகாப்பதற்காக மட்டுமே இந்த யுத்தம் நடைபெறுகிறது என்றால் அவர்கள் பலமான படைபலத்தை பெற்றிருப்பார்கள். போலந்தின் தரப்பில் தார்மீக ரீதியில் அதிக வலு இருப்பதாக சுதந்திரத் தொழி லாளர் கட்சி கருதவில்லை. நீண்ட நாட்களுக்கு முன்பே, போலந்து ஜனநாயகத்தைக் குழிதோண்டிப் புதைத்துவிட்டது. ஜெர்மானி யர்கள், யூதர்களுக்கு எதிராக இழைத்த கொடுமைகள் குறைந்ததல்ல. இந்த நெருக்கடியான காலகட்டத்தில்கூட ரஷ்யாவின் ஆதரவுடன் காப்பாற்றப்படுவதைவிட, மடிவதற்கே போலந்து தயாராக இருந்தது. போலந்திற்காக மட்டுமே இந்த யுத்தம் நடைபெற வில்லை என்று சுதந்திரத் தொழிலாளர் கட்சி கருதுகிறது.

இந்த யுத்தத்தில் போலந்து ஒரு தற்செயலான நிகழ்வுதான். போலந்துக்கும் ஜெர்மனிக்கும் இடையிலான யுத்தம் ஆழமான முக்கியத்துவமும், பரந்த நோக்கமும் கொண்டுள்ளதை யாரும் மறுக்க முடியாது. எல்லா நாடுகளையும் போன்று தானும் ஒரு நாடு என்றல்லாமல் மற்ற நாடுகளைவிட உயர்வானது என்பதை ஏற்க வேண்டுமென்றும், அதனுடைய விருப்பத்தை கேள்வி ஏதும் கேளாது மற்ற நாடுகள் நிறைவேற்ற வேண்டுமென்றும், அதற்கு மறுத்தால் தன்னுடைய கருத்தை பலவந்தமாக திணிக்க எந்த வன்முறையையும் உபயோகிக்க அது தயங்காது என்பதையும் இந்தப் போரில் ஜெர்மானி வலியுறுத்தியது. இம்மாதிரி உரிமை கோருவது போலந்திற்கு மட்டுமல்ல எல்லா நாடுகளுக்குமே அச்சுறுத்தலாகும்.

## இந்தியாவிற்கு அவமதிப்பு

இந்த மாதிரிச் சூழ்நிலையில் எல்லா நாடுகளும் சமமானவை, இதர நாடுகளின் குறுக்கீடுகளும் இல்லாமல் தங்கள் முன்னேற்றப் பாதையில் செல்ல ஒவ்வொரு நாட்டிற்கும் சம உரிமை உண்டு என்று நம்பும் நாடுகள்; மனித நாகரிக உலகம் அனைத்தும் ஒன்றிணைந்து இந்த முட்டாள்தனமான சர்வாதிகாரக் குரலை தடுத்து நிறுத்த வேண்டும். ஜெர்மன் நாட்டின் சார்பாக எழுப்பப்படும் இந்த சர்வாதிகாரக் குரல் மற்ற நாடுகளை அவமதிப்பதாகும். முக்கியமாக இந்தியாவிற்கு இது அருவருக்கத்தக்கதாகும். அது இந்திய மக்களின் குறிக்கோளுக்கும், அபிலாஷைகளுக்கும் எதிரானது என்பதுடன் அவைகளை அழித்து ஒழித்துவிடும். இந்தியா ஒரு சுய ஆட்சி நாடாக மாற விரும்புவதுடன் பல இடர்பாடுகள் இருந்தாலும் இந்த நிலையை அடைவதுடன் அதை பாதுகாப்பதே அதன் விருப்பமாகும்.

உலகில் நார்டிக் இனம் மட்டுமே ஆதிக்கம் செலுத்த வேண்டுமென்று ஜெர்மனி வலியுறுத்துவது எல்லா இன மக்களுக்கும் ஒரு சவாலாக உள்ளது.

இந்திய மக்களின் அபிலாஷைகளையும், குறிக்கோள்களையும் கணக்கில் கொண்டும், ஜெர்மனிக்கும் அதற்கும் இடையேயான முரண்பாடுகளை கருத்தில் கொண்டும், ஜெர்மனியின் சவாலை முறியடிக்க இலட்சிய இந்தியா முன்னுக்கு வருவதுடன் தன் நிலையை உறுதிப்படுத்தி தன் லட்சியத்தை அடையும் உரிமையை நிரூபிக்க அது தயாராக உள்ளது.

இந்த யுத்தத்தில் அடங்கியுள்ள விஷயங்கள் இவை என்ற கருத்தை இந்திய மக்கள் கொண்டுள்ளதால் தங்கள் சொந்த நலனைக் கருதி பிரிட்டனுக்கு ஆதரவு அளித்து உதவ வேண்டிய யுத்தம் இது என்று எந்த விதத் தயக்கமுமின்றி சுதந்திரத் தொழிலாளர் கட்சி கருதுகிறது.

## அர்த்தமற்ற சொற்றொடர்கள்

மற்ற அரசியல் கட்சிகளிடமும் ஓரளவு தயக்கம் இருப்பதை சுதந்திர தொழிலாளர் கட்சி உணர்ந்துள்ளது. அது கொள்கையின் அடிப்படையில் உருவானதல்ல, சமய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தும் தந்திரந்தான், இங்கிலாந்தின் தேவையை அவர்கள் இந்தியாவின் வாய்ப்பாக மாற்ற நினைக்கின்றனர். முஸ்லிம் லீகும், இந்து மகாசபையும் இந்த ''நெருக்கடி நேரத்தை'' பயன்படுத்தி இந்திய அரசியல் அமைப்பில் உள்ள வகுப்புவாரி சமன்பாட்டை தங்களுக்குச் சாதகமாகத் திருப்ப விரும்புகின்றனர். இம்மாதிரி ஒருசார்புடைய கண்ணோட்டத்தை கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை.

இங்கிலாந்தின் நெருக்கடியான நேரத்தை இந்தியாவின் முன்னேற்றத்திற்கு வாய்ப்பாகக் கருதும் பிரிவே முக்கியமானதாகத் தெரிகிறது. இந்தியாவின் வாய்ப்பின் பொருள் என்ன என்பதை அறிந்து கொள்வதே கடினமாக உள்ளது.

தனக்கே உரிய பலத்தின் அடிப்படையில் பிரிட்டனுக்கு தங்கள் நிபந்தனைகளை கட்டளையிடலாம் என்று அது பொருள் படுமானால் இந்தியாவின் வாய்ப்பு என்பது எந்தவித பொருளும் அற்ற, அர்த்தமற்ற ஒரு சொற்றொடர் என்பதை எவரும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். காந்திய வழியான சட்ட மறுப்பு இயக்கம் ஆற்றல் இழந்துவிட்டதால் அதை மீண்டும் செயல்படுத்த யாரும் விரும்பவில்லை.

பிரிட்டனின் ஆதிக்கத்திலிருந்து விடுபட அதன் எதிரிகள் யாரையாவது அழைக்க இதுவே சரியான தருணம் என்பது அதன் பொருளாக இருக்குமானால் அது ஆபத்தான சுருக்குக் கயிறாகும். விருந்தினராக வருபவர்கள் இந்தியர்களின் எஜமானர்களாக மாறும் வாய்ப்பு உள்ளதை உணரும் எந்த இந்தியனும் அதீத

உணர்ச்சியால் சீர்தூக்கிப் பார்க்கும் சக்தியை இழக்காமலிருந்தால் இப்படிப்பட்ட நடவடிக்கையை புத்திசாலித்தனமற்றது, விவேக மற்றது என்றுதான் கருதுவான்.

## தயதுசெய்து புதிய எஜமானர்கள் வேண்டாம்

நடைமுறை அரசியலில் உறுதியாகக் காலூன்றி, அடுத்து வரும் எதிர்காலத்தைப் பார்த்தால், பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளில் ஒன்றாக இருந்து, அதிலேயே சமமான கூட்டாளி நிலையை அடைவதே இந்தியாவிற்கு மிகச் சிறந்தது என்று சுதந்திரத் தொழிலாளர் கட்சி கருதுகிறது.

அந்த நிலைக்கான நீண்ட பாதையில் பெரும் பகுதியைக் கடந்து வந்துவிட்டோம். கடக்க வேண்டிய பகுதி சிறியது மட்டுமன்றி எட்டக்கூடியதுதான். இந்தியாவின் கற்பனை நண்பன் ஒருவன் அதற்கு விடுதலையளிப்பான் என்ற நம்பிக்கையில், இந்த சாதக நிலையை இழப்பது தேசத்தின் தற்கொலை என்றில்லாவிடினும், முட்டாள்தனமான செயலாகும். புதிய எஜமானரின் கீழ் இந்தியா வின் விதி எவ்வாறு இருக்கும் என்று தெரியாது. அறிவுள்ள எந்த இந்தியனும் பேரழிவான விளைவுகளை அளிக்காவிடினும் இந்த மாதிரியான மிகவும் நிச்சயமற்ற சூதாட்ட நடவடிக்கையில் தனது நாட்டு மக்களை ஈடுபட அழைக்க மாட்டான்.

## இந்தியாவிற்கு பிரிட்டனின் கடமை

ஜெர்மனியுடனான இந்தப் போரில் பிரிட்டனுடன் ஒத்துழைப்பது இந்திய மக்களின் நலனுக்காகவே என்றாலும், இந்தியாவின்பால் அவர்களுக்குச் சில கடமைகள் உள்ளதை பிரிட்டிஷார் உணரவேண்டும். அதை நிறைவேற்றுவதை நீண்ட காலத்திற்குத் தள்ளிப்போடக் கூடாது.

இந்தியர்கள் தமது நாட்டைப் பாதுகாப்பதற்கு அவர்களை தயார் செய்வதே, பிரிட்டிஷாரின் முதற் கடமையாகும். எல்லாப் பக்கங்களிலிருந்தும் தாக்குதலுக்கு ஆளாகத் திறந்து கிடக்கும் நாடு இந்தியா. தரைவழி, கடல் வழி, வான் வழி ஆகிய எவ்வகை தாக்கு தலிலிருந்தும் தன்னைக் காத்துக் கொள்ள, இந்தியாவுக்கு எவ்வித ஆதாரமும் கிடையாது. முற்றிலும் இல்லாவிடினும் தனது

பாதுகாப்பிற்கு பெருமளவில் அது பிரிட்டிஷ் ராணுவத்தின், பிரிட்டிஷ் கடற்படை விமானப்படை ஆகியவைகளின் உதவியையே சார்ந்திருக்கிறது. இந்தியாவின் பாதுகாப்பு இந்தியாவின் பொறுப்பாகவே நடத்தப்பட வேண்டும் என்று வட்டமேஜை மாநாட்டில் ஏற்றுக் கொள்ளப்பட்டாலும் இந்தக் கொள்கைகளைச் செயல்படுத்த இதுவரை ஒன்றும் செய்யப்படவில்லை. ராணுவக் கல்லூரிகளைத் திறக்க வேண்டுமென்று அதிகமாகப் பேசப்பட்டது. அதிகாரிகள் கிரேடை இந்தியர்களாக ஆக்க வேண்டுமென்று கூறப்பட்டது. தங்கள் நாட்டைப் பாதுகாக்க இந்தியர்களுக்கு பயிற்சியளிப்பதில் இவை மிகச்சிறிய விஷயங்களே என்று சுதந்திரத் தொழிலாளர் கட்சி கருதுகிறது. ஜாதி மத பேதமின்றி, ஒரு குறிப்பிட்ட வயதிற்குட்பட்ட எல்லோருக்கும் ராணுவப் பயிற்சியை அறிமுகப்படுத்துவதே மிகவும் முக்கியமானதாகும். இந்தக் கொள்கை மட்டுமே இந்தியர்கள் தங்கள் நாட்டைக் காப்பதற்கான முயற்சியில் வெற்றியளிக்கும்.

இந்தியாவின் மனித வளம் அளவிடற்கரியது. தேவைப்படும் ராணுவப் பயிற்சி அளிக்கப்பட்டால் இந்தியாவை மட்டுமல்ல, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையே எவ்வளவு வலிமையான ஆக்கிரமிப்பாளரிடமிருந்தும் அது பாதுகாக்கும். தேசியப் பாதுகாப்பிற்காக இந்திய இளைஞர்களுக்குப் பயிற்சி அளிப்பதை பிரிட்டிஷ் அரசு சிந்திக்காதிருப்பது ஆச்சரியமாக உள்ளது. யுத்தம் நடக்கும்போது மட்டுமே இந்தியர்களை ராணுவ வீரர்களாக்கி யுத்தம் முடிந்தவுடன் அவர்களை ராணுவப் பணியிலிருந்து நீக்கிச் செயலற்றவர்களாகச் செய்வது ஆச்சரியத்தை அளிக்கிறது.

## கட்டாய ராணுவப் பயிற்சி

யுத்த காலத்தைப் போன்று சமாதான காலத்திலும் ராணுவக் கண்ணோட்டத்தில் இந்திய மக்களைத் தயார் நிலையில் வைத்திருக்க, பிரிட்டிஷ் அரசு ஏன் தயாராக இல்லை என்ற கேள்வி பல தரப்புகளிலிருந்தும் கேட்கப்படுகிறது. கட்டாய ராணுவப் பயிற்சியை அறிமுகப்படுத்த பிரிட்டிஷார் விரும்பாததன் காரணம், ராணுவப் பயிற்சி பெற்ற இந்தியர்களை அவர்கள் நம்பமுடியாது என்ற கருத்து உள்ளது. இந்த சந்தேகத்தை நீக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். இந்தியர்கள் தங்களுக்கு உதவ வேண்டும், பாது

காப்பு அளிக்க வேண்டும் என்று பிரிட்டிஷார் விரும்பினால் அவர்கள் இந்தியர்களை நம்பக் கற்றுக் கொள்வதுடன் அவர்களது ராணுவப் பயிற்சிக்கு வாய்ப்பளிக்க வேண்டும். நம்பிக்கையிலிருந்துதான் நம்பிக்கை பிறக்கும்.

அதேபோன்று, நிரந்தரப் படைக்கு எல்லா வகுப்புகளில் இருந்தும், ஒரு குறிப்பிட்ட பிரிவினரே ராணுவத்திற்குத் தகுதியான வர்கள் என்ற வேறுபாடின்றி எல்லாப் பிரிவினர்களிடமிருந்தும் ஆட்கள் சேர்க்கப்பட வேண்டும். அதிகாரிகள் பணியை நேர்மையான முறையில் இந்தியர் மயமாக்க வேண்டும். தற்பொழுது கடற்படை மற்றும் ராணுவப் பயிற்சிப் பள்ளிகளில் செல்வந்தர் வீட்டுப் பிள்ளைகளே சேரமுடிகிறது. அவர்கள் அதற்குத் தகுதியானவர்கள் என்பதால் அல்ல. பயிற்சிக்கான அதிகக் கட்டணத்தை அவர் களால் செலுத்த முடிவதால்தான். வேறுவார்த்தைகளில் கூறுவ தென்றால், ராணுவ சேவையில், உயர் பதவிகளில் செல்வந்தர் களும் விசேஷமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சில வகுப்பினர்கள் மட்டுமே ஆக்கிரமித்துக் கொண்டது மாற்றப்படுவதன் மூலம் பிரிட்டிஷ் அரசின் மீது நம்பிக்கை உருவாகக்கூடும்.

## பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் இந்தியாவின் நிலை

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் இந்தியாவுக்குள்ள நிலையை பிரிட்டிஷார் உறுதிப்படுத்துவதே இரண்டாவது கடமையாகும். இந்திய அரசாங்கச் சட்டத்தின் முன்னுரையில், இறுதியில் இந்தியா டொமினியன் அந்தஸ்தை அடையும் என்று குறிப்பிட பிரிட்டிஷ் பாராளுமன்றம் தயக்கம் காட்டியது அதிக மனக் கொதிப்பை கிளப்பி விட்டது. இர்வின் பிரபு 1929 முறைசாரா ஆனால் அதிகார பூர்வமாக, இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்தை அறிவித்தும், பாராளு மன்றம் முறையாக அனுமதியளியாதது பிரிட்டன் மீது உள்ள நம்பிக்கையை தகர்த்தது.

இது குறித்த இந்தியாவின் சந்தேகத்தை விரைவில் நீக்க பிரிட்டிஷ் அரசு முன்வரவேண்டும். எந்தக் கொள்கையின் ஆதாயங் களில் யுத்தம் முடிந்த பிறகு இந்தியாவுக்குரிய பங்கு உறுதி செய்யப் படவில்லையோ அந்தக் கொள்கைகளுக்காக இந்தியா மனப் பூர்வமாகப் போரிட முடியாது.

சுதந்திர தொழிலாளர் கட்சியின் கொள்கை இதுதான். இந்த யுத்தத்தில் பிரிட்டிஷ் அரசுக்கு உதவிட மேன்மைதங்கிய வைஸ்ராய் இந்தியாவுக்கு விடுத்த வேண்டுகோளை இந்த அறிக்கையில் குறிப்பிட்டுள்ள காரணங்களுக்காக, சுதந்திரத் தொழிலாளர் கட்சி ஆதரிக்கிறது.

நிபந்தனைகள் விதிப்பதற்கு இது உரிய தருணமல்ல என்பதை சுதந்திரத் தொழிலாளர் கட்சி ஏற்றுக் கொள்கிறது. அதே நேரத்தில் , எதற்காகப் போரிடுகிறோம், ஒருவரிடம் மற்றவர் எதை எதிர்பார்க்கிறார் என்பதை பிரிட்டிஷாரும் இந்தியர்களும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று சுதந்திர தொழிலாளர் கட்சி நம்புகிறது.[1]



1. விவித் விரித்தா 17 செப்டம்பர் 1939

# 9

# இந்தியா இரண்டு பிரிவுகளாக பிளவுபடுவதைத் தடுக்க விவேகமும் அரசியல் பண்பும் மலரட்டும்

1939ல் அக்டோபர் 6ல் கிடைத்த செய்திகளின்படி 1939 அக்டோபர் 9ல் மேதகு வைஸ்ராயைக் காண டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அழைக்கப்பட்டுள்ளார். அதன்படி அக்டோபர் 9, 1939ல் மேதகு வைஸ்ராய் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கருக்கு பேட்டி கொடுத்துள்ளார். மேலும் திரு.வி.டி.சாவர்க்கர், திரு.முகமத் யாகூப் ஆகியோருக்கும் பேட்டி கொடுக்கப்பட்டுள்ளன.

பிறகு டாக்டர் அம்பேத்கர் அறிக்கை ஒன்றை வெளியிட்டார்.

புதுடில்லி, அக்டோபர் 10, 1939

''காங்கிரசுக்கு வெளியிலுள்ள கட்சிகள் மற்றும் நபர்களைக் குறித்து சுயநல துடுக்குத் தனமான கண்ணோட்டத்தைத் திரு.காந்தியும், காங்கிரசும் கைவிட்டாலொழிய ஒருபோதும் சிறுபான்மையினரின் பிரச்சினைக்கு தீர்வு ஏற்படப் போவதில்லை. நாட்டுப்பற்று காங்கிரஸ்காரர்களின் ஏகபோகமல்ல. காங்கிரசுக்கு மாறாக மாறுபட்ட கொள்கைகளைக் கொண்டவர்கள் இருக்கவும், ஏற்றுக் கொள்ளப்படவும் முற்றிலும் நியாயமான உரிமை உண்டு'' என்று இன்று காலை பம்பாய்க்குப் புறப்படுவதற்கு முன்பு 'அசோசியேட் பிரஸ்ஸுக்கு' அளித்த அறிக்கையில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தெரிவித்தார். நேற்று டில்லி வந்துள்ள டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மேதகு வைஸ்ராயுடன் நீண்ட பேட்டி கண்டார். இந்தியாவில் அரசியலமைப்பு முன்னேற்றம் குறித்தும் தமது வகுப்பினரின் கருத்துகள் குறித்தும் மேதகு வைஸ்ராய்க்கு விரிவாக எடுத்துரைத்ததாக நம்பப் படுகிறது. புனா ஒப்பந்தத்தின்

---

1. பம்பாய் கிராணிக்கில், அக்டோபர் 7, 1939
2. பம்பாய் கிராணிக்கில், அக்டோபர் 10, 1939

செயல்பாடு திருப்திகரமாக இல்லை என்று இது சம்பந்தமாக டாக்டர் அம்பேத்கர் கூறியுள்ளார். பல உறுப்பினர்கள் தொகுதிகள் இல்லாத நிலையில், ஷெட்யூல்டு வகுப்பினரின் உண்மையான பிரதிநிதிகள் சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படவில்லை. அடுத்த மறுபரிசீலனைக் கூட்டத்தில் இந்தப் பிரச்சினையை எழுப்பப் போவதாக அவர் தீர்மானித்துள்ளார். இது ஏற்கெனவே திட்டமிட்டதற்கு முன்பே நடக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. உண்மையான பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்க சில வழிமுறைகள் இல்லாது ஷெட்யூல்டு வகுப்பினர்களின் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்க வழிகாணாவிடின் தமது வகுப்பினருக்கு தனித் தொகுதி வேண்டுமென வலியுறுத்த வேண்டியிருக்குமென்றார் அவர்.

## இந்து -முஸ்லீம் பிரச்சினைகள்

இந்து முஸ்லீம் பிரச்சினை சம்பந்தமாகப் பேசிய டாக்டர் அம்பேத்கர், காங்கிரஸ் மாகாணங்களில் முஸ்லீம்கள் கொடுமைப் படுத்தப்படுகிறார்கள், அச்சுறுத்தப்படுகிறார்கள் என்ற குற்றச்சாட்டை தாம் நம்பவில்லை என்று கூறினார். நாட்டு அரசில் பங்கு வேண்டும் என்று முஸ்லீம்களும், சிறுபான்மையினரும் விரும்புவதுடன் ஆட்சியில் இருக்கும் வகுப்பினர்களுடன் சம அந்தஸ்தையும் விரும்புகின்றனர். இது காங்கிரஸ் கட்சியால் மறுக்கப்படுகிறது. தனது கட்சிக்கு வெளியேயுள்ள எந்த வகுப்பினரையும், பிரிவினரை யும் இதுவரை அது அங்கீகரித்ததில்லை.

இதுவரை முஸ்லீம்கள் பாதுகாப்பை விரும்பினர். அதாவது தேவையான பாதுகாப்பு அளிக்கப்படுமானால் மற்ற வகுப்பினர் களுடன் சேர்ந்து வாழ அவர்கள் தயாராக இருந்தனர் என்று அவர் கூறினார். இன்று இந்துக்கள் இந்தியா, மற்றும் முஸ்லீம்கள் இந்தியா என இந்தியாவைப் பிரிக்கக் கோரிக்கை எழுந்துள்ளது. வெகுஜன மக்களிடையே இந்தக் கோரிக்கை வேரூன்றினால் ஒன்றுபட்ட இந்தியா என்ற நம்பிக்கை சிதறுண்டு போகும். இதற்கான தீர்வு காங்கிரஸ் மற்றும் பெரும்பான்மை சமூகத்தாரின் கைகளில்தான் உள்ளது. பரந்த மனதும், அரசியல் விவேகமும் யதார்த்த நிலைமை களைப் புரிந்து கொள்வது ஆகியவையே இப்பொழுது தேவைப் படுகின்றன.

## "காலம் கடந்துவிடும்"

நாளை என்று விட்டுவிட்டால் அது காலம் கடந்த நடவடிக்கை யாகிவிடும் என்று கூறினார் டாக்டர் அம்பேத்கர். சிறுபான்மையினர் நல்ல முறையிலும், நியாயமான முறையிலும் நடத்தப்பட வேண்டுமென்று பிரச்சினையாக இல்லை. நாட்டு அரசின் அங்கமாக இப்பதை சிறுபான்மையினரை உணரச் செய்ய வேண்டுமென்பதே இன்றைய பிரச்சினை. சுயகௌரவம், அந்தஸ்து என்பதே இன்றைய கேள்வியாகிவிட்டது. தம்முடைய சமூகத்தினர் வேறு ஏதாவது பெரிய சமூகத்தினருடன் இணைந்து கொள்ள விரும்பு வதைத் தடுத்து நிறுத்துவது கஷ்டமாக இருக்கிறது. காங்கிரஸின் தற்போதைய கண்ணோட்டத்தால் தம்முடைய வார்த்தைகளுக்கு மதிப்புக் குறைந்துவருவதாக, இறுதியில் டாக்டர் அம்பேத்தர் குறிப்பிட்டார். ஷெட்யூல்டு வகுப்பினர் வேறு ஏதாவது வகுப் பினரிடம் சேர்ந்து கொண்டால் அதற்கான பொறுப்பு காங்கிரசையே சாரும். "புத்திசாலித்தனத்துடனும், அரசியல் விவேகத்துடனும் காங்கிரஸ் நடந்து கொள்ளுமென்று நான் நம்புகிறேன்," என்று அவர் கூறினார். "இந்தியா பிளவுபடாமல் இருக்கவும், ஷெட்யூல்டு வகுப்பினர் வலிமையான சிறுபான்மை யினருடன் இணைவதைத் தடுக்கவும் விவேகத்துடன் அவர்கள் செயல்படுவார்கள் என நம்புகிறேன்."[1]



1. டைம்ஸ் ஆஃப் இந்தியா, அக்டோபர் 11, 1939.

# 10

# மிகவும் தெளிவற்ற திட்டம்

## கலந்தாய்வுக் குழு பற்றி டாக்டர் அம்பேத்கர்

சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் பின்வரும் அறிக்கையை வெளியிட்டுள்ளார்:

அக்டோபர் 21ல் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் தலைமையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில் பின்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது:

தற்போதைய யுத்தத்தினால் தோன்றியுள்ள நிலைமைகளைக் குறித்து வெளியிட்டுள்ள அறிக்கையை சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் செயற்குழு உறுதிப்படுத்துகிறது.

அக்டோபர் 27ல் மேதகு வைஸ்ராய் வெளியிட்டுள்ள அறிக்கையை கட்சியின் செயற்குழு கணக்கில் எடுத்துக் கொண்டுள்ளது.

நாட்டிலுள்ள பல்வேறு வகுப்பினர்களுக்கிடையே ஒற்றுமையை உருவாக்க காங்கிரஸ் முயன்றிருந்தால் இந்திய மக்களின் கோரிக்கைகள், அபிலாஷைகள் குறித்து மேன்மை தங்கிய மன்னர் பிரானின் அரசு அதிகத் திருப்திகரமான, சிறப்பான பதிலை அளித்திருக்கும் என செயற்குழு கருதுகிறது.

இந்திய அரசியலமைப்பில் திருத்தங்கள் செய்வதற்கு பல வகுப்பினர்களின், கட்சிகளின் குழுக்களின் பிரதிநிதிகளுடன் மேன்மை தங்கிய மன்னர் பிரானின் அரசு யுத்தம் முடிந்தவுடன் கலந்தாலோசிக்கும் என மேதகு வைஸ்ராய் உறுதியளித்திருப்பதாலும், இந்தியாவின் இலக்கு டொமினியன் அந்தஸ்தே என மேன்மை தங்கிய மன்னர் பிரானின் அரசு அறிவித்திருப்பதாலும், பிரிட்டி

ஷாருக்கு உதவுவது என்ற நிலைமாறி இந்தியாவை பாதுகாக்க வேண்டும் என்ற நிலைக்கு போரின் போக்கு மாறும் சாத்தியமுள்ளதால், பிரிட்டனுடன் ஒத்துழைப்பை நிறுத்தி வைக்க வேண்டிய தருணம் இதுவல்ல எனச் செயற்குழு கருதுகிறது.

கலந்தாய்வுக் குழு நியமனம் குறித்த தீர்மானம் திருப்திகரமானதல்ல என்று செயற்குழு கருதுகிறது. எந்த வித முடிவுகளையும் எடுக்கவும் வழிகாட்டுதலையும் காட்ட அந்த குழுவிற்கு அதிகாரம் கிடையாது. குழுவில் நிரந்தர உறுப்பினர்கள் கிடையாது. தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் முறை (Panel System) மிகவும் கண்டிக்கத்தக்கதாகும். இறுதியான முடிவுகள் எதுவும் செயற்குழு எடுக்கும் முன்பு திட்டமிடப்பட்ட குழுக்களின் அமைப்பு, அதிகாரங்கள், செயல்பாடுகள் நோக்கங்கள் ஆகியவற்றை குறித்த விரிவான விளக்கம் வேண்டும்.''[1]



1 : பாம்பாய் கிரானிக்கல், 24 அக்டோபர் 1939.

# 11

# சமூக ஒருங்கிணைப்பின் மூலமே நாம் ஒரு நாடாக முடியும்

*1940 பிப்ரவரி 5ல் பத்திரிகை பிரதிநிதி ஒருவரிடம் காங்கிரஸ் மற்றும் முஸ்லீம் லீகின் கண்ணோட்டத்தைக் குறித்து விவாதிக்கையில் சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் தலைவர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் கூறியதாவது:*

திரு.காந்தியும், காங்கிரசும் இந்தியா ஒரு நாடு என்று கூறுகையில் அதை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. முஸ்லீம் லீகின் வெளிநாட்டு உறவுகளுக்கான குழு, இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரு நாடாக இணைய முடியாது என்று கூறுவதையும் நான் ஏற்றுக் கொள்ளவில்லை.

நாம் ஒரு நாடல்ல என்பதே என் நம்பிக்கை என்று மேலும் அவர் தொடர்ந்தார். சமூக ஒருங்கிணைப்பு செயல்பாடுகள் தொடர்ந்தால் நாமும் ஒரு நாடாக முடியும் என்பதே என் உறுதியான நம்பிக்கை.''[1]



---

*1 : டைம்ஸ் ஆஃப் இந்தியா, பிப்ரவரி 6, 1940*
*மறுபதிப்பு கைர்மோட், தொகுதி 9, ப.31*

# 12

# டாக்டர் பி.ஆர். அம்பேத்கரை சுபாஷ் சந்திர போஸ் சந்தித்தார்

காங்கிரஸ் தலைமைப் பதவியிலிருந்து கீழிறங்கியவுடன் சுபாஷ் போஸ் மன அமைதியின்றி இருந்தார். ஐரோப்பாவில் வாழ்வா-சாவா என்ற போரில் ஈடுபட்டிருந்த பிரிட்டிஷ் அரசுக்கு எதிராக இந்திய சக்திகளைத் திரட்டிவந்தார். ஜூலை 22ல் 1940 பம்பாய் வந்த அவர், ஜின்னா, அம்பேத்கர், சாவர்க்கர் ஆகியோரை சந்தித்தார்.

திட்டமிடப்பட்ட கூட்டரசுக்கு சுபாஷ் சந்திரபோஸ் கடுமையான எதிரி. டாக்டர் அம்பேத்கரும் அதற்கு எதிராகையால் இது அவர்களுக்கிடையே ஒற்றுமையான அம்சம் என்று அவர் கருதினார்.

கூட்டரசு சம்பந்தமாக அவர்கள் விவாதம் முடிந்தபிறகு காங்கிரசுக்கு எதிராக தேர்தலில் அவர் வேட்பாளரை நிறுத்துவாரா என்று கேட்டார். அவர் எதிர்மறையாகப் பதிலளித்தார். தீண்டப்படாதவர்கள் குறித்து அவரது ஆக்கபூர்வமான கண்ணோட்டம் என்ன என்று கேட்டார். போஸின் பதில் நம்பிக்கையளிப்பதாக இல்லை. இத்துடன் பேட்டி முடிந்தது.''[1]



---

*1 : கீர், ப.332*

# 13

## காங்கிரஸ் முடிவின் பொருள்

### திரு. காந்தியின் மறுப்பு குறித்து டாக்டர் அம்பேத்கர்

ஆசிரியர் அவர்களுக்கு,
'டைம்ஸ் ஆஃப் இந்தியா.'

ஐயா,

பம்பாயில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் திரு.காந்தி நடந்து கொண்ட விதம் பற்றி பம்பாயில் இரு கருத்துகள் நிலவுகின்றன.

சாதாரண மக்களின் அறிவுக்கு அப்பாற்பட்ட மிகச் சிறந்த அறிவாளியாக திரு.காந்தி நடந்து கொண்டார் என்ற ஒரு கருத்தும், தமது நடவடிக்கைகள் மூலம் சட்டமறுப்பு இயக்கக் கொந் தளிப்பைத் தவிர்த்தார் என்றும் கருதப்படுகிறது. இந்த இரண்டு கருத்துகளுமே எனக்குத் திகைப்பூட்டுவதாக உள்ளன. இம்மாதிரி யான முக்கியமான விஷயங்களில் இவ்வளவு சாதாரண முறையில் சிந்தனை செய்வது, முக்கியமாக, இந்து மக்கள் குறித்த அவரின் சிந்தனா சக்தி பற்றிய விளக்கம் வருந்தத்தக்க உள்ளது. யுத்தத் திற்கு எதிராகப் பிரசாரம் செய்யும், யுத்தத்தில் பங்கு கொள்ளக் கூடாதென்று மக்களுக்குக் கூறும், அல்லது அதற்காக மனித உதவி மற்றும் பண உதவி அளிக்கக் கூடாது என்று பிரசாரம் செய்யும் உரிமையை காந்தி கோருகிறார் என்பது உண்மைதான்.

இதன் பொருள் என்ன? இந்திய பாதுகாப்புச் சட்டத்திற் கெதிரானது சட்டமறுப்பு இயக்கம் என்றே எனக்குத் தோன்று கிறது. காந்தியின் திட்டத்தை சட்டமறுப்பு இயக்கத்திற்கு சமமான தல்ல என்று எப்படி இந்துக்கள் கருதுகிறார்கள் என்பது என் அறிவுக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது.

## மிகவும் திகைப்பூட்டுகிறது

வைஸ்ராய் தமக்கு நிச்சயமாகப் பேட்டி அளிப்பார் என்று திரு.காந்தி வைஸ்ராயை காணச் சென்றத் துடுக்குத்தனம் மிகவும் திகைப்பூட்டுவதாக உள்ளது. இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தை உடைப்பதற்கு வைஸ்ராயிடம் சென்று அனுமதி கேட்பதைவிட நகைப்புக்கிடமான செயல் வேறு எதுவும் இருக்க முடியாது என்பதை திரு.காந்தியைவிட மிகக் குறைந்த அறிவுள்ளவர்கூட உணர முடியும். இங்கிலாந்து அல்லது அமெரிக்காவில் மனச்சாட்சியின் அடிப்படையில், யுத்தத்தை எதிர்ப்பவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள உரிமைகளைவிட அதிகமாக அவர் கேட்கிறார் என்பது திரு.காந்தியின் அறிவுக்கு அப்பாற்பட்ட விஷயமல்ல. யுத்த நடவடிக்கைகளில் ஈடுபட, மனச்சாட்சியின் அடிப்படையில் யுத்தத்தை எதிர்ப்பவர்கள் கட்டாயப்படுத்தப்படுவதில்லை. ஆனால் இதர சேவைகளிலிருந்து அவர்கள் விடுவிக்கப்படுவதில்லை. யுத்தம் நடந்து கொண்டிருக்கும்போது யுத்தத்திற்கு எதிராகப் பிரசாரம் செய்யும் உரிமையும் அளிக்கப்படுவதில்லை.

ஆனால் இத்துடன் நிறுத்திக் கொள்ளலாம் என திரு. அமெரி நினைக்கிறார். ஓர் இணக்கமான தீர்வுக்கு வர இந்தியர்களைக் கோரும் உரிமை மட்டுமின்றி, தங்கள் வேற்றுமைகளை இந்தியர்களால் முடிவுக்குக் கொண்டுவர முடியவில்லை என்றால் அவைகளை தீர்த்து வைப்பது பிரிட்டிஷ் அரசின் கடமையாகும். ஓர் அரசியலமைப்புப் பிரச்சினையின் தீர்வுக்கு முட்டுக்கட்டை வந்துவிட்டால் அதன் தீர்வுக்கான ஒரே முக்கிய இறுதி வழிமுறையை இந்தியர்களுக்கு மறுப்பதன் மூலம், அந்தக் கடமை பிரிட்டிஷார் தலையில் விழுந்துவிடுகிறது. இந்த வழி போரின்றி வேறெதுவுமில்லை. இதைக் கேட்டு பலர் திடுக்கிடலாம். இங்கிலீஷ் புரட்சி, பிரெஞ்சு புரட்சி, அமெரிக்க உள்நாட்டுப் போர் ஆகியவை அரசியலமைப்பு முட்டுக் கட்டைகளின் தீர்வுக்கான போர்களுக்கான உதாரணங்கள் என்பதை யாரும் மறந்துவிட முடியாது. எல்லோருடைய நன்மைக்காகவும் பிரிட்டிஷ் அரசு இதற்கு தடை விதித்துள்ளது. எனவே, ஒரு கட்சியின் முரட்டுப் பிடிவாதத்தால் பிரச்சினைக்கு முடிவு காண முடியாதபோது, அதுதான் களத்தில் இறங்க வேண்டும். விஷயங்கள் இவ்வாறு இருக்க, அரசியலமைப்பு குறித்த கருத்து வேறுபாடுகளை இந்தியர்கள் தலையில் சுமத்தி பிரிட்டிஷ் அரசு தப்பித்துக் கொள்ள முடியாது. இந்த விஷயத்தில் இறுதியான பொறுப்பை அது ஏற்றுக் கொள்ள

வேண்டும். இதுவே என் கருத்து. பின்வரும் விதத்தில் பிரிட்டி
அரசு அறிக்கை ஒன்றை வெளியிடலாம் :

(1) சமாதானம் ஆரம்பிக்கும் தினத்திலிருந்து மூன்றாண்டு
குள் இந்தியா டொமினியன் அந்தஸ்து நிலைக்கு உயர்த்தப்படு
என தீர்மானிக்கப்பட்டுள்ளது.

(2) அதாவது, இந்த முடிவை விரைவில் எய்திட, சமாதா
ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்ட ஓராண்டிற்குள் அரசமைப்
குறித்த தங்கள் வேறுபாடுகளுக்கு ஓர் இணக்கமான தீர்வை
தேசிய வாழ்வில் உள்ள பல்வேறு பிரிவினர்களும் உருவாக்
வேண்டும்.

(3) அதாவது, இணக்கம் ஏற்படாவிட்டால் பிரச்சினையை
சர்வதேச தீர்ப்பாயத்தின் முடிவுக்குவிட பிரிட்டிஷ் அரசு நட
வடிக்கைகள் எடுக்கும்.

(4) அதாவது, தீர்ப்பு அளிக்கப்படும்போது, இந்திய டொமினியன்
அரசியலமைப்பின் பகுதியாக அதைச் செயல்படுத்த பிரிட்டிஷ்
அரசு நடவடிக்கைகள் எடுக்கும். எல்லா நியாயமான மக்களுக்கும்,
இந்த அறிக்கை திருப்திகரமாக இருக்கும். சமுதாயம் சார்ந்த பிரச்
சினைகள் குறித்து இணக்கமான தீர்வு அவசியம் என்ற தாழ்த்தப்
பட்ட வகுப்பினர் கருத்துகளுக்கும் மற்றும் திரு.ஜின்னாவின் கருத்து
களுக்கு அது பொருத்தமாக இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.
டொமினியன் அரசியலமைப்பு உதயமாவதை தடைசெய்யும்
அதிகாரம், பிரிட்டிஷ் இந்திய தேசிய வாழ்விலுள்ள எந்தப் பிரிவுக்கும்
இருக்கக் கூடாது. அறிக்கையை வெளியிடாமலிருப்பதற்கு யுத்தத்
தின் மத்தியில் நாம் இருக்கிறோம் என்பது சரியான வாதமாக
இருக்க முடியாது. உண்மையில் அதற்குச் சாதகமான வாதமே அது.

யுத்த முயற்சிகள் மூன்று விஷயங்களைச் சார்ந்துள்ளன
(1) நிலைமைகளின் அவசரத்தை உணர்வது, (2) போருக்கான
காரணங்களில் அக்கறை, (3) போரில் வெற்றிபெறுவது குறித்து திட்ட
வட்டமான கருத்து, யதார்த்தமான நம்பிக்கை யூட்டும் திட்டம்.
போரில் ஜப்பான் குதித்தது, நிலைமையின் அவசரத்தை இந்தியர்
களுக்கு நன்கு உயர்த்தியுள்ளது. இறுதி இலட்சியத்தைவிட, உடனடி
யான அழிவிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டு
மென்ற இந்தியர்கள் நிலைமையின் அவசரத்தை நன்கு உணர்ந்துள்

ளனர். இந்திய மக்களுக்கு அதிகார மாற்றம் செய்வதாக பிரிட்டிஷ்
அரசு அறிக்கை விடுவதன் மூலம் போர் மீது மக்களுக்கு அக்கறை
அதிகரிக்கும். அறிக்கையைத் தொடர்ந்து தேசிய அரசு அமைக்கப்
பட வேண்டுமா? அது நடந்தால் சிறப்பாக இருக்கும். ஆனால்
திரு.ஜின்னா இரு கோரிக்கைகளை முன்வைத்துள்ளார். ஒன்று
இறுதி லட்சியமான பாகிஸ்தான். மற்றொன்று உடனடியான
கோரிக்கை-அமைச்சரவையில் 50 சதவீத பிரதிநிதித்துவம்.
பாகிஸ்தான் கோரிக்கையை என்னால் நன்கு புரிந்துகொள்ள
முடிகிறது. முஸ்லிம்கள் ஒரு தேசிய இனம் என்று திரு.ஜின்னா கூறு
வதில் எனக்கு எந்தத் தகராறும் இல்லை. அவர்கள் தேசிய இன
மாகையால் முஸ்லிம்களுக்கு பாகிஸ்தான் அவசியம் என்று
ஜின்னா கூறுகையில், நீங்கள் கூறியபடி வேறு தேசிய இனமான
இந்துக்களைக் கொண்ட பெரும்பகுதியையும் அபகரித்து செல்லா
விடில் நீங்கள் பாகிஸ்தானை பெற்றுக் கொள்ளுங்கள்.

பாகிஸ்தானைப் பொறுத்தவரையில் குஞ்சு பொரிப்பதற்கு
முன்பே ஜின்னா எண்ணிக்கையில் மூழ்கிவிட்டார். எஜமானரைக்
கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை. இந்தப் பாகிஸ்தானின்
ஒன்றிணைந்த பகுதியாக வடமேற்கு எல்லை மாகாணம் கருதப்
படுகிறது. இந்த வடமேற்கு எல்லை மாகாணத்தின் எஜமானர்
தாம் இல்லை என்பதை திரு.ஜின்னா ஏற்றுக் கொள்ள வேண்டும்.
அங்கு அதிகாரம் உள்ள தலைவர் கான் அப்துல் காஃபர் கான் ஆவார்.
அவருடைய இசைவின்றி எந்தப் பாகிஸ்தானும் உருவாக
முடியாது. பாகிஸ்தானுக்கு ஆதரவாக புயல்வேக பிரச்சாரத்திற்குப்
பதிலாக, கான் அப்துல் காஃபர் கானை மாற்றுவதற்கு நேரத்தை
யும், காலத்தையும் திரு.ஜின்னா செலவிட வேண்டும். இது திரு.
ஜின்னா கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டிய விஷயம்.

## பாகிஸ்தான் கோரிக்கை

நான் கூறியபடி, பாகிஸ்தான் கோரிக்கையை என்னால்
புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் முஸ்லிம் இனத்தவருக்கு 50 சதம்
பிரதிநிதித்துவம் வேண்டுமென்பதை என்னால் புரிந்துகொள்ள
முடியவில்லை. உடனடி கோரிக்கையான 50 சதவீதம் இறுதி
இலட்சியமான பாகிஸ்தான் என்பதுடன் சம்பந்தப்பட்டது எவ்வாறு
என்பதையும் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. முஸ்லிம்
லீகின் இந்தக் கோரிக்கை நேர்மையற்றது என்பதுடன், இதை
மறுத்ததன் மூலம் லின்லித்கோ பிரபு இந்திய மக்களுக்குப் பெரும்

சேவை செய்துள்ளார். ஜின்னாவின் கோரிக்கையான 50 சதவிதப் பிரதிநிதித்துவத்தை ஏற்பதென்றால், தற்காலிக நடவடிக்கையாக எந்தவித தேசிய அரசையும் நிறுவுவது அவசியமில்லை என்பதே என் உறுதியான கருத்தாக உள்ளது. போர் முயற்சிகளில் ஏற்கனவே எடுக்கப்பட்ட நடவடிக்கைளைவிட அதிகமாக எதையும் தேசிய அரசு செய்ய முடியாது என்பதை உறுதியாக நம்புகிறேன்.

இந்தியா அதிகமாக எதையும் செய்ய முடியாது. இந்தக் குறைபாட்டிற்கான முக்கிய காரணம் பிரிட்டிஷ் அரசுதான். சமாதான காலங்களில் இந்தியாவின் ஆதாரச் செல்வங்களை அவர்கள் வளர்க்க விரும்புவதில்லை. எனவே அரசிற்கோ, தேசிய அரசிற்கோ தற்பொழுது எடுக்கப்படும் நடவடிக்கைகளைவிட ஒன்றும் செய்ய முடியாது. முற்றிலும் வளர்ச்சி பெற்ற நாடாக இருந்தால், சாம்ராஜ்யத்தையே அவர்கள் பாதுகாத்திருப்பார்கள். இப்பொழுது தன்னையே அதால் பாதுகாத்துக் கொள்ள முடியவில்லை. அது வலிவுபெற்றதாக இருக்க வேண்டும். ஜப்பானின் தாக்குதலிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள இங்கிலாந்தின் பாதங்களில் விழ அது கட்டாயப்படுத்தப்பட்டுள்ளது. இந்தப் பரிதாப நிலையில்தான் அது இருக்கிறது.

இந்தியர் ஒருவரை பாதுகாப்பு அமைச்சராக நியமிப்பது சிறந்ததுதான். ஆனால் அது போதுமா? தமது கட்டுப்பாட்டிற்குள் பாதுகாப்புச் சாதனங்கள் ஏதுமில்லாது, இந்தியாவின் பாதுகாப்பு அமைச்சர் என்ன செய்யப்போகிறார் என்பதைப் புரிந்து கொள்வது கஷ்டந்தான். தமது சொந்தப் பாதுகாப்புக்காக குவித்து வைத்திருக்கும் பாதுகாப்புச் சாதனங்களை இங்கிலாந்து, இந்தியாவுக்கு அனுப்ப வேண்டுமென்று கோருவதுதான் புத்திசாலித்தனமான நடவடிக்கை என்று தோன்றுகிறது. இதில்தான் இந்தியாவின் உடனடித் தேவை இருக்கிறது. இங்கிலாந்தின் கடமையும் இதில்தான் அடங்கியுள்ளது.



1 : டைம்ஸ் ஆப் இந்தியா, பிப்ரவரி 27, 1942.

# 14

# இந்திய நெருக்கடியைத் தீர்க்க டாக்டர் அம்பேத்கரின் திட்டம் முஸ்லீம்களின் கோரிக்கை விமர்சிக்கப்படுகிறது

இந்திய மக்களின் கோரிக்கை எதற்கும் காத்திராமல், எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில், அவர்களுக்கு உண்மையான அரசியல் அதிகாரம் வழங்க வேண்டுமென்று பிரிட்டிஷ் அரசுக்கு சியாங்-கே-ஷேக் வேண்டுகோள் விடுத்துள்ளார். இவ்வாறான முடிவை நிறைவேற்றுவதில் தடைக்கற்களாக இருக்கும் பிரச்சினைகளுக்கு அவர் எந்தத் தீர்வும் அளிக்கவில்லை.

இந்திய தேசிய வாழ்விலுள்ள சில முக்கிய பிரிவினர்களின் ஒப்புதல் எதிர்கால அரசியல் சாசனத்திற்கு வேண்டும் என்று வைஸ்ராய் தமது ஆகஸ்டு அறிக்கையில் கூறியுள்ள அடிப்படையான அம்சத்தை காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளாததே பெரும் முட்டுக்கட்டையாக உள்ளது. தனது பொறுப்பு என்ன என்பதை பிரிட்டிஷ் அரசு உணராதிருப்பது அதே போன்று தடைக்கல்லாக உள்ளது.

இந்துக்கள் பெரும்பான்மையினராக இருப்பதாலேயே, இந்து பெரும்பான்மையினர் கையில் இந்திய அரசை ஒப்படைப்பதற்கு இந்திய நிலைமைகளை அறிந்த எந்த அறிவுள்ள நபரும் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று காங்கிரஸ் எதிர்பார்க்க முடியாது. பாசிச மற்றும் நாஜிகளின் தத்துவத்தைப் போலவே இந்து இனமும் ஓர் அரசியல் தத்துவம் என்பதை காங்கிரஸ் மறந்துவிட விரும்புகிறது. அது முற்றிலும் ஜனநாயக விரோதமானது. இந்து இனத்தை அவிழ்த்து விட்டுவிட்டால் இந்து மதத்திற்கு வெளியில் உள்ளவர்களுக்கும், அதை எதிர்ப்பவர்களுக்கும் பெரும் ஆபத்தாக முடியும். இது முஸ்லீம்களின் கருத்துமட்டுமல்ல, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மற்றும் பிராமணர் அல்லாதவர்களின் கருத்தும் இதுதான்.

## அதிகாரத்தில் பங்கு அவசியம்

பிரிட்டிஷ் இந்தியாவின் தேசிய வாழ்வில் பல்வேறு வகுப்பினருக்கும் அரசியல் அதிகாரத்தை பகிர்ந்தளிக்க வகை செய்யும் அரசியலமைப்பு மட்டுமே இதற்கு மருந்தாகும். இந்தியாவில் ஜனநாயகம் பாதுகாக்கப்பட வேண்டுமென்றால் அதிகாரம் பிரிட்டிஷ் கைகளிலிருந்து இந்தியர்களுக்கு மாற்றப்படுவதற்கு முன்பு, அதிகாரத்தை நேரடியாகப் பகிர்ந்து கொள்ளும் வழிமுறை ஒன்று ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும். அரசியல் அதிகார மாற்றத்தைக் கோருவதற்கு முன்பு, அரசியல் அமைப்பு குறித்த தங்கள் வேற்றுமைகளுக்கு தீர்வுகாண வேண்டுமென்று பிரிட்டிஷ் அரசு இந்தியர்களிடம் கூறுவது முற்றிலும் நியாயமே.

நாட்டு நலனுக்காக காங்கிரஸ் கட்சி போராடுகிறது என்பது வெறும் பாசாங்கு. அதிகாரத்தை தனது கையில் எடுத்துக் கொள்ள அது போராடி வருகிறது. பேச்சு சுதந்திரத்திற்காக காங்கிரஸ் போராடுகிறது என்று கூறுவதும் அதே போன்று பசப்பு வார்த்தைகள்தான். ஒரு முழு ஆண்டாக இந்தியாவின் பாதுகாப்புச் சட்டம் அமலில் இருக்கிறது. அதன் நடவடிக்கைகளை சிவில் லிபர்ட்டிஸ் யூனியன் பட்டியலிட்டு தன் அறிக்கையில் வெளியிட்டுள்ளது. இந்தியப் பாதுகாப்புச் சட்டம் பேச்சு சுதந்திரத்திற்குக் குந்தகம் விளைவித்துள்ளது என்று திரு.காந்தி எண்ணினால், அந்தச் சட்டம் நிறைவேற்றப் பட்டவுடன் சட்டமறுப்பு இயக்கத்தை அவர் ஏன் ஆரம்பிக்க வில்லை? ஏன் ஓராண்டு காலம் காத்திருந்தார்? நாட்டிலுள்ள சிறுபான்மையினர் மற்றும் இதர கட்சிகளின் பிரதிநிதிகளின் உதவியுடன் அரசு செயல்படும் என்று வைஸ்ராய் அறிவித்த பிறகு ஏன் இந்தக் கிளர்ச்சி? இதற்குப் பதில் ஏதும் இல்லை. சிறுபான்மையினர் மற்றும் இதரர் அரசியல் அதிகாரம் பெறுவதைத் தடுக்கவும், வைஸ்ராயின் திட்டத்தை உடைத்தெறியவும் காங்கிரஸ் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளை மறைக்கவே, இந்திய பாதுகாப்புச் சட்டத்தினால் இன்னல் விளைந்ததாக நொண்டிச் சாக்குக் கூறப்படுகிறது.

## பிரிட்டிஷ் உதாரணம்

காங்கிரஸ் கட்சியின் நடவடிக்கைகளின் தோற்றுவாய்கள் இவைதான். இது ஒரு சாமர்த்தியமான நடவடிக்கைதான். காங்கிரஸ் கட்சி இதில் வெற்றி பெற்றால், இந்தியாவில் ஒரு பாராளுமன்ற

முறையிலான அரசை நிறுவியுள்ள பிரிட்டன், ஒரு ஜனரஞ்சகக் கட்சியின் தவறான அபிப்பிராயத்துக்கு இலக்காகும் ஆபத்தைத் தவிர்ப்பதற்கான மேலும் ஓர் ஆதாரமாகும். ஆனால் அது அரசியல் விவேகமா? இது சம்பந்தமாக 1923ல் திரு.அஸ்கித் எடுத்த நடவடிக்கை நினைவுக்கு வருகிறது. 1923 தேர்தலில் எந்த ஒரு கட்சிக்கும் பெரும்பான்மை கிடைக்கவில்லை. கன்சர்வேட்டிவ் கட்சி 255, தொழிலாளர் கட்சி 191, முற்போக்குக் கட்சி 158 இடங்களையும் பெற்றிருந்தன. முற்போக்குக் கட்சியின் தலைவர் என்ற முறையில் திரு. அஸ்கித் முன் மூன்று பாதைகள் இருந்தன: (1) கன்சர்வேட்டிவ்களை ஆதரிப்பது, (2) தொழிலாளர் கட்சியை ஆதரிப்பது, (3) கன்சர்வேட்டிவ் ஆதரவை நம்பி தாமே பதவிக்கு வருவது. டோரிகளுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு தொழிலாளர் கட்சி பதவிக்கு வருவதைத் தடுக்க வேண்டுகோள் விடுக்கப்பட்டது.

இந்த ஆலோசனைகளுக்கு செவிசாயாது இந்தச் சூழ்ச்சிக்கு திரு.அஸ்கித் பலியாகவில்லை. இது தேசிய நலனுக்கு மிகவும் ஆபத்தானது என்று அவர் கருதினார். இரண்டு மத்தியதர வகுப்பினர்களின் கட்சி ஒன்றிணைந்து தொழிலாளர் கட்சிக்கு வாய்ப்பளிக்க தவறுவதானது வர்க்கமோதலை தூண்டுவதாகும் என்று அவர் கருதினார். சிறுபான்மையினருக்குக் கிடைத்திருக்கும் வாய்ப்பை காங்கிரஸ் தட்டிப் பறித்தால், தன் வெற்றிக்கு அது பெரும் விலை கொடுக்கிறது என்பதை அவர்கள் உணர்வார்கள் என நம்புகிறேன். இப்பொழுது அவர்கள் இதை உணராவிட்டால், அரசியல் சட்டத்தை மறு பரிசீலனை செய்ய கட்சிகள் கூடும்போது அவர்கள் உணருவார்கள். காங்கிரசின் நடவடிக்கையால், இரு விஷயங்கள் மிகத் தெளிவாகிவிட்டன. முதலாவது, பிரிட்டிஷ் பாராளுமன்ற அரசு இந்த நாட்டிற்குப் பொருந்தாது. இரண்டாவது, ஓர் ஒப்பந்தத்தின் உத்தரவாதத்துக்கான முக்கியமான பாதுகாப்பை ஒருவர் தவிர்க்க முயல்வது, அவருக்கே ஆபத்தாக முடியும்.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்.''[1]**



1 : தி டைம்ஸ் ஆப் இந்தியா, செப்டம்பர் 24, 1940

# 15

# ஜனநாயகத்தின் வெற்றியில்தான் இந்தியாவின் எதிர்காலம் அடங்கியுள்ளது

''ஒரு குறிப்பிட்ட நிலையில் மாறாமல் நடந்து கொள்வார் என்று திரு.காந்தியிடம் எதிர்பார்க்க முடியாது. அவரிடம் பொறுப்புணர்வை எதிர்பார்ப்பது ஒவ்வொருவரின் உரிமையாகும். இது குறித்து எந்த சந்தேகமும் இருக்க முடியாது. மக்கள் இயக்கம் ஒன்றை தொடங்க திரு.காந்தியின் தற்போதைய முயற்சி பைத்தியக்காரத்தனமானதும், பொறுப்பற்றதுமாகும் என்பதில் எந்தவித சந்தேகமும் இருக்க முடியாது'' என்று திங்கள் மாலை டில்லி புறப்படுமுன் ''டைம்ஸ் ஆப் இந்தியாவின்'' நிருபரிடம் இந்திய அரசின் தொழிலாளர் துறை அமைச்சர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் தெரிவித்தார்.

எல்லாக் கட்சிகளுக்குமிடையேயான ஒற்றுமைக்கு திரு.காந்தி ஏன் முயற்சி செய்யவில்லை? பல்வேறு கட்சிகளின் கோரிக்கைகளை அறிந்து கொள்ளவும், அவர்களுக்கிடையே தகராறு ஏதாவது இருந்தால் அதைத் தீர்க்கவும் பல்வேறு கட்சித் தலைவர்களின் கூட்டத்திற்கு அவர் ஏன் முயலவில்லை?

இவை டாக்டர் அம்பேத்கரால் தொடுக்கப்பட்ட வினாக்கள். திரு. காந்தி தம் அச்சுறுத்தும் நடவடிக்கைகளைத் தொடங்கும் முன் அதைத் தடுத்து நிறுத்துவது அவருடைய இயக்கத்தில் நம்பிக்கை இல்லாதவர்களின் கடமையாகும் என்று மேலும் அவர் தொடர்ந்தார்.

இந்திய வரலாற்றிலேயே மிக நெருக்கடியான இக்கால கட்டத்தில், இவ்வளவு ஆபத்தான நடவடிக்கைகள் அவசியம் என்று திரு.காந்தி ஏன் நினைக்கிறார் என்பதைப் புரிந்து கொள்வது கஷ்டம்தான் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

''எனக்குச் சில விஷயங்கள் மிகவும் தெளிவாக இருக்கின்றன. இந்தியா தன் இலட்சியத்தை அடைவதைப் பொறுத்தவரையில், பிரிட்டிஷாரிடமிருந்து இந்தியாவுக்கு அதிகார மாற்றம்

தொடர்ந்து நடைபெறுவதுடன் அண்மையில் அதன் வேகம் அதிகரித்துள்ளது. சுதந்திரப் போர் வந்தால் பாதிக்கப்பட்டவர்கள் சிலரைத் தவிர மற்றவர்கள் இதை மறுக்க மாட்டார்கள். பிரிட்டிஷாரும் இந்தியரும் இறுதிக் களத்தில் சிக்கி மாட்டிக் கொள்வதை விரும்பாததுடன் இந்தியா தன் இறுதி இலட்சியத்தை அடைவதைத் தடுக்கவும் பிரிட்டிஷார் விரும்பவில்லை என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது. கிரிப்ஸ் செயல் குறிப்புகளே இதற்குச் சிறந்த உதாரணமாகும். காங்கிரசின் நீண்டநாள் கோரிக்கைகளான சுதந்திரம் மற்றும் அரசியல் நிர்ணயசபை அதில் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன.

கிரிப்ஸ் தீர்மானங்களுக்குப் பிறகு, பிரிட்டிஷார் இந்தியர்களுக்கு அதிகாரம் வழங்க மறுக்கின்றனர் என்ற காந்தியின் கூற்றை நம்புவது கடினந்தான். அது வேண்டுமென்று கூறப்படும் பச்சை பொய்யாகும்.

''கிரிப்ஸ் தீர்மானம் தோல்வியடைந்தாலும்கூட, டொமினியன் அந்தஸ்தை இந்தியர்கள் விரும்பினால், பிரிட்டிஷ் அரசு சுதந்திரம் அளிப்பதை அது பாதிக்காது என்றே தோன்றுகிறது.

## குறுகிய கண்ணோட்டம்

''சுதந்திரம் அளிப்பது, அரசியல் நிர்ணய சபை அமைப்பது ஆகியவைகள் அடங்கிய கிரிப்ஸ் தீர்மானங்களை காங்கிரஸ் கட்சி ஏன் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது என்பது யாருக்கும் புரியவில்லை. பாதுகாப்புத் துறையை மாற்றத் தவறியதே மக்கள் இயக்கத்தைத் துவக்கக் காரணம் எனில், இந்தக் குறுகிய கண்ணோட்டத்தை ஒரு சிலர் மட்டுமே ஆதரிப்பர் என்பது நிச்சயம். ஆரம்பத்தில் யுத்த லட்சியங்களைக் குறித்த அறிக்கை ஒன்றை மட்டுமே பிரிட்டிஷாரிடம் காங்கிரஸ் கட்சி கோரியது. யுத்த காலத்தில் அவை நிறைவேற்றப்பட வேண்டும் என்று காங்கிரஸ் கட்சி கோரவில்லை. இரண்டாவதாக, பாதுகாப்புத் துறையின் ராணுவ மற்றும் தொழில் நுட்பப் பிரிவுகளை நிர்வகிக்க திறமையான இந்திய அரசியல்வாதி எவரும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இந்தப் பொருளைக் கற்க இந்தியர்கள் அலட்சியம் செய்துவிட்டனர். இந்தச் சூழ்நிலையில் பாதுகாப்புத் துறையை இந்தியரின் நிர்வாகத்தில் கொண்டுவரக் கோருவது முட்டாள்தனமே. விவரம் தெரியாத ஒருவரிடம் நிர்வாகத்தை அளித்தால் அது பெயரளவுக்குத்தான் இருக்கும்.

மூன்றாவதாக கிரிப்ஸ் தீர்மானங்களில் கூறியபடி எல்லாத் துறைகளும் மாற்றப்பட்ட பிறகு, பாதுகாப்புத் துறை மட்டும் மாற்றப் படாதது குறித்து தகராறு செய்வது குழந்தைத் தனமான செயலே. மாற்றப்பட்ட துறைகள் வலியுறுத்தும் விஷயங்கள் மிகவும் அவசிய மானதெனின், ஒதுக்கப்பட்ட துறையை நிறுத்தி வைக்க முடியாது என்பது பொது அறிவுள்ள எவருக்கும் தெரிந்திருக்கும். 1937ல் காங்கிரஸ் பதவிக்கு வந்தவுடன் ஆளுநரின் சிறப்பதிகாரத்துக்கு இவ்வாறுதான் ஏற்பட்டது. இந்த விஷயத்தில் தனது சொந்த அனு பவத்தைக் காங்கிரஸ் மறந்திருப்பது ஆச்சரியத்தை அளிக்கிறது.

''குழப்பத்தை உண்டாக்க மேற்கொண்டுள்ள நடவடிக்கைக் காக காங்கிரஸ் கட்சியிடம் அனுதாபம் கொள்ளவேண்டும் என்று நான் கருதுகிறேன். நாட்டிற்குச் சேவை செய்ய கிடைத்த நல்ல வாய்ப்பை அது மறுத்துவிட்டது. இந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கை யில் திரு.காந்தி எடுத்துள்ள இந்த நடவடிக்கை எவ்வாறு நாட்டின் நலனுக்கானது என்று கருதப்படும் என்பது எனக்குப் புரியவில்லை. யுத்தம் ஆரம்பித்ததிலிருந்து காங்கிரசும், தாமும் இழந்த கௌர வத்தை மீட்கவே திரு.காந்தி முயற்சி செய்கிறார் என எனக்குத் தோன்றுகிறது.

''இந்த இரு வழிகளில் ஒன்றின் மூலம் தன் கௌரவத்தை காங்கிரஸ் காப்பாற்றிக் கொள்ள முடியும். நேரடி நடவடிக்கை என்ற கவர்ச்சியின் மூலமோ அல்லது பதவி அளிக்கும் கௌரவத்தின் மூலமோ காப்பாற்றிக் கொள்ள முடியும். ஆனால் பதவியைத் துறக்க வேண்டுமென்று திரு.காந்தி காங்கிரஸைக் கட்டாயப் படுத்தியதுடன் நேரடி நடவடிக்கையில் சேரவும் மறுத்துவிட்டார்.

காங்கிரஸ் செல்வாக்கின் வீழ்ச்சிக்கான எந்த நடவடிக்கை யும் கூடாது என்ற திரு.காந்தியின் கொள்கை, திரு.காந்திக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் பேரழிவை அளிப்பதாக உள்ளது. தம்முடைய நிலையைத் திரும்ப அடையவும், புகழின் உச்சியில் மடியவும் வேண்டுமென்பது காந்தியின் இந்த இறுதிக்கட்ட விளையாட்டு.

காங்கிரஸ் கட்சியின் முக்கிய நலன்களைக் காப்பாற்ற இந்த நடவடிக்கை சிறந்த வழியாக இருக்கலாம். ஆனால் நாட்டின் நலனுக்குச் சிறந்த வழியல்ல. இந்த காலகட்டத்தில் இப்படிப்பட்ட நடவடிக்கை மிகப்பெரும் முரண்பாடுகளை உருவாக்குவதுடன் நாட்டிற்குப் பெரும் தீங்கும் விளைவிக்கும். இந்த நாட்டின்

வேகமான அரசியல் முன்னேற்றத்திற்கு காங்கிரஸ் கட்சியின் முன் இரண்டு வழிகளே உள்ளன. ஒன்று , காங்கிரஸ் கட்சியின் நேரடி நடவடிக்கை. மற்றது, நாட்டின் தேசிய வாழ்வில் உள்ள பல்வேறு பிரிவினர்களை பிரதிநிதித்துவப்படுத்தும் எல்லாக் கட்சிகளின் ஒன்றுபட்ட கோரிக்கை. முதல் பொருள் குறித்து, காங்கிரஸும் திரு.காந்தியும் எப்பொழுதுமே ஆர்வமாக உள்ளனர். அது கையிலிருப்பிலுள்ள திட்டமாகும். ஒரு எல்லைக்கப்பால், அது வெற்றி பெற்றாலும்கூட பயனற்றதாகும் ஏனெனில், நாஜி அரசைப் போன்று, பிரிட்டிஷ் அரசு மிருகத்தனமான அடக்கு முறையைக் கையாளும் பழக்கமுடையதல்ல. நீதிக்கான போராட்டத்தை அநீதியான முறையில் அடக்காது. இதை திரு.காந்தி ஏற்றுக்கொள்ளமாட்டார். ஏனெனில், அவருடைய வெகுஜன சட்ட மறுப்பு இயக்கத்தை நாஜிகள் எவ்வாறு சந்தித்திருப்பர் என்பது குறித்து நல்ல காலமாக திரு.காந்திக்கு அனுபவமில்லை. திரு.காந்திக்கு குறுகிய காலத்திலேயே தீர்ப்பை நாஜிகள் அளித்திருப்பர் என்பதில் சந்தேகமில்லை. ஆரம்பத்திலேயே அவருடைய நேரடி நடவடிக்கைத் திட்டத்திற்கு முற்றுப்புள்ளி வைத்திருப்பர்.

## கட்சிகளுக்கிடையே ஒற்றுமை

''பின்வரும் கேள்விகள்தான் என் மனதை வாட்டி வதைக்கின்றன: பயனற்றது என்பது தெரிந்திருந்தும், காங்கிரஸ் கட்சி தனிமையாகவே நேரடி நடவடிக்கைகளில் இறங்குவதை திரு. காந்தி ஏன் விரும்புகிறார்? எல்லாக் கட்சிகளுக்குமிடையே ஒற்றுமையை உருவாக்கும் மாற்று வழியை ஏன் அவர் முயற்சிக்கவில்லை? பல்வேறு கட்சிகளின் எல்லாத் தலைவர்களின் மாநாட்டைக் கூட்டி அவர்களின் கோரிக்கைகளைத் தெரிந்து கொள்ளவும், அதைக் குறித்து தகராறு இருந்தால் தீர்த்து வைக்கவும் திரு.காந்தி முயற்சிக்காதது ஏன்? இது பரீட்சித்துப் பார்ப்பதற்கு தகுதியான பல்வேறு சமுதாய மக்களிடையே நிரந்தர அமைதியை உருவாக்கும் வழியுமாகும். ஆனால் திரு. காந்தி இவ்வகை முயற்சியில் இறங்கியதே கிடையாது. பிரச்சினையைத் தீர்ப்பதற்கான இந்த வழிமுறையைத் தவிர்ப்பதற்கான திரு.காந்தியின் காரணங்களை என்னால் ஒருபொழுதும் புரிந்து கொள்ள முடியவில்லை. பிரிட்டிஷார் இருக்கும்வரை எந்தவிதத் தீர்வும் ஏற்படாது என்ற கூற்று இருபொருளை குறிப்பிடுவதாக எனக்குத் தோன்றுகிறது. சிறுபான்மை மக்களின்

தலைவர்கள் பிரிட்டிஷாரின் கைப்பாவைகள் அல்லது பிரிட்டிஷார் சென்ற பிறகு வகுப்புகளுக்கிடையேயான பிரச்சினைகளுக்கு தீர்வு காண்பது பற்றிப் பேசுவதே சிறந்தது எனக் காங்கிரஸ் கருதுகிறது. ஏனெனில் சட்டம் ஒழுங்கை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்கும் காங்கிரஸ், சிறுபான்மையினருக்கு கட்டளையிடும் நிலையில் இருப்பதுடன் தனது நிபந்தனைகளின் அடிப்படையில் ஒரு தீர்வை அவர்கள் மீது திணிக்கவும் செய்யும். அது முதலில் குறிப்பிட்டதாக இருக்குமானால், சிறுபான்மை சமுதாயத்தின் தலைவர்களின் நடத்தை மீதான வேண்டுமென்றே கூறப்படும் அவதூறாகும். தாங்களே மிக நேர்மையானவர்கள் என்ற இந்தப் போக்கை காங்கிரஸ் கைவிட்டு, அவர்களிடமிருந்து வேறுபடுபவர்கள்கூட சிறந்த தேசபக்தர்கள் என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும். காங்கிரசும், அதன் பத்திரிகைகளும் சிறுபான்மைச் சமுதாயத் தலைவர்களுக்கு எதிராக அள்ளி வீசும் ஆதாரமற்ற முட்டாள்தனமான குற்றச்சாட்டுகளே வகுப்புகளுக்கிடையேயான பிரச்சினைகளின் தீர்வை மேலும் சிக்கலாக்குகிறது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். அது இரண்டாவதாகக் குறிப்பிட்டதாக இருக்குமானால் அது ஒரு ஏமாற்று நடடிக்கைதான். எவ்வகையிலும் திரு.காந்தியின் அரசியல் விவேகத்தின் வறட்சியை அது பறைசாற்றுகிறது.

''ஒரு விஷயத்தை காந்தி உணரவில்லை. அதை எவ்வளவு விரைவில் உணர்ந்து கொள்கிறாரோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. இந்து-முஸ்லீம் ஒற்றுமையை உருவாக்குவது, தீண்டத்தகாதவர்களுக்கு தொண்டு செய்வது ஆகியவைகளே அவரது அரசியல் பண்புகளாக பெரிதும் பறைசாற்றப்படுகிறது.

'20 ஆண்டுகள் கழிந்தும் முஸ்லீம்களோ, தீண்டத்தகாதவர்களோ திரு.காந்தியை நம்புவதில்லை. அவர் வாழ்வில் பெரும் துக்ககரமான விஷயம் இதுதான்.

''இதை எவ்வளவு விரைவில் உணர்ந்துகொள்கிறாரோ அவ்வளவுக்கு நல்லது. சிறுபான்மையினர்களின் தலைவர்களை இப்பொழுது கூட பேச்சுவார்த்தைக்கு திரு.காந்தி அழைக்கலாம். நிறைவேற்ற முடியாத கோரிக்கைகளை அவர்கள் முன்வைக்கிறார்கள் என்று கூறுவது பயனற்றது. ஏனெனில், பிரச்சினையை சர்வதேச நடுவர்மன்றத் தீர்ப்புக்குவிட எப்பொழுது வேண்டுமானாலும் திரு.காந்தி அவர்களைக் கேட்டுக் கொள்ளலாம்.

''தேவையற்ற இந்த நடவடிக்கையில் திரு.காந்தியை ஆதரிக்கப் பொதுமக்களுக்கு எந்த முகாந்திரமும் இல்லை. புதிய அரசியலமைப்புச் சட்டத்தில் வெளிப்படையாகவும் நேர்மையான முறையிலும் சிறுபான்மையினரின் பாதுகாப்புக்கும், பந்தோபஸ்த்துக்கும் உத்தரவாதம் அளிக்க மறுக்கும் திரு.காந்தியுடன் இணைந்து செயல்பட அவர்களுக்குக் காரணம் எதுவும் இல்லை.

''நாம் வாழும் இந்த ஆபத்தான காலத்தில் திரு.காந்தியுடனான நமது கருத்து வேற்றுமையை வெளிப்படுத்துவதுடன் நமது கடமை முடிந்துவிடவில்லை. அவருடைய இயக்கத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள் அது உருவாவதைத் தடுத்து நிறுத்த நடவடிக்கை எடுப்பதே கடமையாகும். 1930ல் நடைபெற்ற இயக்கத்தில் பங்கு கொள்ளாவிடினும், அது குறித்து ஓர் ஆதரவான நடுநிலைக் கண்ணோட்டமே கொண்டிருந்தனர். இப்பொழுதுள்ள நிலைமையை விட 1930ல் இருந்த நிலைமை முற்றிலும் மாறுபட்டது. 1930 ஆண்டு இயக்கத்தில் இரண்டு சாத்தியப்பாடுகளே இருந்தன. அரசியல் அதிகாரம் பிரிட்டிஷாரிடம் தொடர்ந்திருக்கும் அல்லது இந்தியர்களுக்கு மாற்றப்பட்டிருக்கும்.

''ஜப்பானியர்களோ, ஜெர்மனியர்களோ நுழைந்து இந்தியாவின் எஜமானர்களாகும் சாத்தியப்பாடு அப்பொழுது இல்லை. இந்தச் சாத்தியப்பாடு இப்பொழுது நம்மை முறைத்துப் பார்க்கிறது. பிரிட்டிஷாரைத் தோற்கடிப்பதோடல்லாமல், நம்மையும் நிரந்தர அடிமைகளாக வைத்திருக்கும் எண்ணத்துடன் நமது நுழைவாயிலில் காட்டுமிராண்டிகள் காத்துக் கிடக்கும்போது, சட்டம் ஒழுங்கை வலுவிழக்கச் செய்வது பைத்தியக்காரத்தனமாகும். 1930ல் நடைபெற்ற மக்கள் இயக்கத்திற்கும், திரு.காந்தி இன்று அச்சுறுத்தும் இயக்கத்திற்கும் இடையேயான மிகப்பெரும் வேறுபாடு இதுவே என்று எனக்குத் தோன்றுகிறது.

### தவறான உரிமை

''நாட்டின் சார்பாக பேசும் உரிமை தங்களுக்கே உரியது என்று காங்கிரசும், காந்தியும் நடந்து கொள்கின்றனர். அது

தவறாகக் கொண்டாடப்படும் உரிமை. ஆனால் அதை எதிர்க்க யாரும் அக்கறை கொள்ளவில்லை. ஏனெனில் நாட்டு நலனுக்கு எந்தத் தீங்கும் இழைக்காத வரையில், காங்கிரஸ் நாட்டின் சார்பாகப் பேசுவதாக உரிமை கொண்டாடினாலும், அல்லது கட்சியின் சார்பாகப் பேசுவதாகக் கூறினாலும் அது ஒரு சாதாரண விஷயமாகவே கருதப்பட்டது. ஆனால் ஒரு கட்சியாகச் செயல்படும் காங்கிரஸ், நாட்டின் பாதுகாப்பிற்கும் பத்திரத் தன்மைக்கும், ஏன் நாடு சுதந்திரம் பெறுவதற்கே ஆபத்து விளைவிக்கும் செயல் திட்டம் ஒன்றை ஆரம்பிக்க நினைக்கையில் மற்ற கட்சிகள் தங்கள் நடுநிலைக் கொள்கையை கைவிடுவதே கடமையாகும் என்பதுடன்; விரைவில் எட்டக் கூடியதாக உள்ள அரசியல் லட்சியத்தை அடைவதில் ஏமாற்றத்தையும் குழப்பத்தையும் விளைவிக்கும் காங்கிரசை எதிர்க்க வேண்டும். இரண்டு விஷயங்களை இந்தியர்கள் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று நான் விரும்புகிறேன். முதலாவது, நாஜிசத்தின் மீதான ஜனநாயகத்தின் வெற்றியுடன்தான் அவர்கள் விதி பிணைக்கப் பட்டுள்ளது. இரண்டாவதாக ஜனநாயகம் வெற்றி பெற்றவுடன், இந்தியர்கள் தங்களிடையே ஒற்றுமையைப் பாதுகாத்தால் இந்தியா சுதந்திரம் அடைவதை உலகில் எந்த சக்தியாலும் தடுக்க முடியாது. திரு.காந்தியின் நடவடிக்கை தேவையற்றது என்று நிச்சயமாகக் கருதுகிறேன்.

''ஜனநாயகம் வெற்றி பெற்றால், இந்தியா சுதந்திரம் அடைவதற்கு யாரும் குறுக்கே நிற்கப்போவதில்லை. இத்தருணத்தில் ஜனநாயகம் வெற்றிப் பெறுவதே இந்தியர்களின் மகத்தான கடமையாகும். இவ்வாறு அவர்கள் செயல்படுவது கொள்கைப் பிடிப்பினாலல்ல. நாட்டின் எதிர்காலத்திற்காக இவ்வாறு செயல் படுவது நமது கடமையாக உள்ளது. அவசரப்பட்டுக் கொண்டிருக்கும் வயதான மனிதர் திரு.காந்தி அவசர கோலத்தில் செயல் பட்டு பின் நிதானமாக வருந்தக் கூடாது என்பதில் இந்தியர்கள் கவனமாக இருக்க வேண்டும்.''

பம்பாயிலிருந்து புதுடில்லிக்கு திங்கள் இரவு டாக்டர் அம்பேத்கர் இரயிலில் புறப்பட்டுச் சென்றார். பம்பாய் சென்ட்ரல் இரயில் நிலையத்தில், ஷெட்யூல்டு வகுப்பினர், சுதந்திரத் தொழிலாளர் கட்சி, முனிசிபல் காம்கார் சங்கம் மற்றும் பல

*அமைப்புகளின் பிரதிநிதிகள், அவரது நண்பர்கள் அடங்கிய 400க்கும் மேற்பட்டவர்கள் அவரை அன்புடன் வழியனுப்பி வைத்தனர்.*[1]



*1. டைம்ஸ் ஆப் இந்தியா, ஜூலை 28, 1942.*

# 16

# இந்திய அரசியல் தேக்க நிலைக்கு எவ்வாறு முடிவுகட்டுவது

''இந்தியாவின் அரசியல் தேக்க நிலைக்கு முற்றுப் புள்ளி வைப்பதுடன் அதே நேரத்தில் பாகிஸ்தான் பிரச்சினை யால் எழுந்துள்ள கேள்விகளுக்கு விடை கண்டு யுத்த காலத்தில் ஒரு தேசிய அரசுக்கு வழிவகுக்கும் திட்டம் ஒன்றை இந்திய அரசின் தொழிலாளர் உறுப்பினர் மேதகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் சூசகமாக அறிவித்துள்ளார். புதனன்று* பம்பாயில் 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையின் பிரதிநிதிக்கு அளித்த பேட்டியில் இதைத் தெரிவித்துள்ளார்.

பாகிஸ்தான் பிரச்சினைதான் முதல்நிலை பிரச்சினை யாகக் கருதப்பட வேண்டும் என்று அவர் கூறினார். இந்தப் பிரச்சினைக்கு ஏதாவது தீர்வு காணாமல், அரசியலமைப்புத் தயாரிப்பில் எந்த நடவடிக்கையும் எடுக்க முடியாது. இந்தப் பிரச் சினை சம்பந்தமாக ஒரு முடிவுக்கு வர இதுவரை திரு.ஜின்னா மற்றும் திரு.காந்தி ஆகிய தலைவர்களை நம்பியிருந்தோம். ஆனால் அவர்கள் வெற்றி பெறவில்லை. இந்தப் பிரச்சினைக்கு மக்களே தீர்வு காணவேண்டும் என்ற கட்டம் வந்துவிட்டதாக எனக்குத் தோன்றுகிறது.

பிரிட்டிஷ் அரசால் தீர்க்கக் கூடியதாக பாகிஸ்தான் பிரச்சினையை நான் நினைக்கவில்லை. அதைச் செய்ய அவர் களைக் கேட்பது சரியாக இருக்காது. ஒரு முடிவை அவர்கள் அளிப்பதும் நியாயமாகாது. பாகிஸ்தான் பிரச்சினை ஒரு சுய நிர்ணயப் பிரச்சினையாக இருப்பதால், அதனால் பாதிக்கப்படும் மக்களால் மட்டுமே தீர்மானிக்கப்பட வேண்டும். இந்த நிலை ஏற்றுக் கொள்ளப்பட்டால் 'இந்திய அரசியலமைப்பு பூர் வாங்க முன்னேற்பாடு சட்டம்' ஒன்றை நாடாளுமன்றம் நிறைவேற்ற வேண்டும்.

---

★ மே 12, 1943

## முஸ்லீம்களிடையே பொதுஜன வாக்கெடுப்பு

பின்வரும் விஷயங்களுக்கு அந்தச் சட்டத்தில் வழி வகைகள் செய்யப்பட வேண்டும்.

(அ) முஸ்லீம்கள் பெரும்பான்மையாகவுள்ள பகுதிகளை இந்தியாவிலிருந்து பிரிக்க விரும்புகிறார்களா என்பதைத் தீர்மானிப்பதற்காக பாகிஸ்தான் பகுதியிலுள்ள முஸ்லீம்களிடம் கருத்துக் கணிப்பு நடத்துவது.

(ஆ) இந்துஸ்தானில் வசிக்க விரும்புகிறார்களா அல்லது பாகிஸ்தான் பகுதிக்கு செல்ல விரும்புகிறார்களா என்பதைத் தீர்மானிக்க பாகிஸ்தான் பகுதியில் வசிக்கும் முஸ்லீம் அல்லாதவர்களிடையே நடத்தப்படும் கருத்துக் கணிப்பு

(இ) முஸ்லீம் அல்லாதவர்களில் பெரும்பான்மையினர் பாகிஸ்தான் பகுதிக்குச் செல்ல விரும்பவில்லையென்றால், முஸ்லீம்கள் பெருவாரியாக உள்ள மாவட்டங்கள், முஸ்லீம்கள் அல்லாதோர் உள்ள மாவட்டங்களைப் பிரிக்க எல்லைக் கமிஷன் ஒன்றை நியமித்தல்.

முஸ்லீம்கள் பெரும்பான்மையாக உள்ள மாவட்டங்கள் என்று எல்லைக் கமிஷனால் அடையாளம் காணப்பட்ட மாவட்டங்களின் பட்டியல் கொண்ட அட்டவணை ஒன்றை தயாரித்தல். இந்தப் பட்டியல் மாவட்டங்களின் அட்டவணை என்று அழைக்கப்படவேண்டும்.

இது முடிந்த பிறகு, பின்வருவனவற்றில் ஏதாவது ஒன்றை கருத்துக் கணிப்பு மூலம் தீர்மானிக்க முஸ்லீம்களை அனுமதிக்க வேண்டும் என்பதே அடுத்த நடவடிக்கை: -

ஒன்றுபட்ட இந்தியாவின் பகுதியாக அட்டவணை மாவட்டங்கள் பத்தாண்டுகள் இருந்துவிட்டு இறுதியில் அட்டவணை மாவட்டங்கள் பிரிந்து பாகிஸ்தான் உருவாவதை ஆதரிப்பது, அல்லது உடனடியாகவே அட்டவணை மாவட்டங்கள் பாகிஸ்தான் என்ற தனிநாடாகப் பிரிவது, பத்தாண்டுகள்

கழித்து பாகிஸ்தானும் இந்துஸ்தானும் செய்து கொண்ட ஒப்பந் தத்தின் அடிப்படையில் இந்தியாவுடன் பாகிஸ்தான் இணைய கருத்துக் கணிப்பு நடத்துவது.

## இந்தியக் குழு

உடனடியாக பாகிஸ்தான் பிரிய வேண்டுமென்று முஸ்லீம்கள் தீர்மானித்தால் இந்திய ஆலோசனைக் குழு ஒன்றை நியமிக்க லாம். சம அளவில் இந்துஸ்தானும் பாகிஸ்தானும் உறுப்பினர் களைக் கொண்ட இந்தக் குழு இருவருக்கும் பொதுவான அக்கறையுள்ள விஷயங்களை விவாதிக்கும். இந்துஸ்தானத் துடன் பாகிஸ்தான் பத்தாண்டுகள் கழித்து இணையத் தீர்மானித் தால் இந்தக் குழு கலைக்கப்படும்.

தாம் முன்மொழிந்துள்ள சட்டம் பொது வாக்கெடுப்பின் மூலம் உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டியதில்லை என்று டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்தியுள்ளார். யுத்தத்திற்குப் பிறகு அதை எடுத்துக் கொள்ளலாம். இந்தச் சட்டத்தை நிறை வேற்றுவது இந்துக்கள் மற்றும் முஸ்லீம் மக்களின்மீது சாதக மான விளைவை ஏற்படுத்தும். ஏனெனில் எந்த அரசியலமைப்பு வந்தாலும், அது மக்களின் இசைவைப் பெற்றிருக்கும் என்பதை அவர்கள் அறிவர். விஷயங்களை இந்த நிலைக்குக் கொண்டு வந்தால், யுத்த காலத்தில் ஒரு தேசிய அரசை நிறுவ அது வழிவகுக்கும்.

''இம்மாதிரியான சட்டம் ஒன்றை எவ்வாறு தவிர்க்க முடியும் என்பது எனக்குப் புரியவில்லை'' என்று டாக்டர் அம்பேத்கர் இறுதியாகக் கூறினார். இப்பொழுதோ அல்லது சமாதானத்திற்குப் பிறகோ அரசியலமைப்புத் தயாரிப்புக்கு முன் அவசியம் அது நிறைவேற்றப்பட வேண்டும். முதல் கருத்துக் கணிப்பைப் பொறுத்தவரையில் அது முஸ்லீம்களைப் பொறுத்து, பாகிஸ்தான் மாகாணச் சட்டமன்றங்கள் பிரிவினை கோரி நிறைவேற்றும் தீர்மானங்களைப் பொறுத்து இருக்க வேண்டும்.''[1]



1. 'டைம்ஸ் ஆப் இந்தியா, 13 மே 1943.

# 17

# ஜின்னாவின் அச்சம் நீக்கப்பட வேண்டும்

*புதுடில்லி 12, ஜூலை 1944*

''மனநலம் திரும்பியதற்கு அறிகுறி'' என்று ராஜகோபாலாச்சாரியின் திட்டத்தை வரவேற்று இந்திய அரசின் தொழிலாளர் அமைச்சர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் பத்திரிகை ஒன்றுக்கு அளித்த பேட்டியில் கூறியுள்ளார். இருப்பினும் 1943ல் தாம் வெளியிட்டுள்ள திட்டத்தையே அவர் பெரிதும் விரும்புவதாகக் கூறினார். அதன்படி பத்தாண்டுகளுக்கு பாகிஸ்தான் பரீட்சார்த்தமாக பரிசீலிக்கப்படும். அந்தக் காலக் கெடுவிற்குப்பின் பாகிஸ்தானிலுள்ள முஸ்லீம்கள் இந்துஸ்தானுடன் இணைய விரும்பினால், அவ்வாறு தாராளமாக அவர்கள் செயல்படலாம்.

பிரிட்டிஷ் நாடாளுமன்றம் நிறைவேற்றும் ஒரு சட்டம், எல்லை நிர்ணயக் கமிஷன், இரண்டு கருத்துக் கணிப்புகள் - முதலாவது பிரிவினை வேண்டுமா என்பது குறித்து முஸ்லீம்கள் தீர்மானிப்பது, இரண்டாவது முஸ்லீம் அல்லாதோர் பாகிஸ்தானில் தங்குவதா அல்லது வெளியேறுவதா என்பதைத் தீர்மானிப்பது - ஆகியவை அவருடைய திட்டத்தில் மேலும் வலியுறுத்தப்பட்டுள்ளன.

### எல்லைக் கமிஷன்

முஸ்லீம் அல்லாதோர் பாகிஸ்தானில் தங்க விரும்பினால், தற்போதைய மாகாண எல்லைகளே பாகிஸ்தானின் எல்லைகளாக இருக்கும். ஆனால் முஸ்லீம் அல்லாதோர் பாகிஸ்தானில் தங்க மறுத்தால் முஸ்லீம்கள் அதிகமாக உள்ள மாவட்டங்களை முஸ்லீம் அல்லாதோர் அதிகமாக உள்ள மாவட்டங்களிலிருந்து பிரிக்க எல்லைக் கமிஷன் ஒன்று அமைக்கப்படும்.

எனினும் சுதந்திர நிர்ணய உரிமைக் கொள்கையை திரு. காந்தி ஏற்றுக் கொண்டதை டாக்டர் அம்பேத்கர் வரவேற்றார். ஆனால், இந்த ஆலோசனையை அவரே வழங்கியிருந்தால் சிறப்பாக இருந்திருக்கும் என்றும், முழு தேசிய அரசை நிறுவ

வேண்டும், சுதந்திரத்திற்கான கோரிக்கையில் சேர்ந்து கொள்ளப்பட வேண்டுமென்ற நிபந்தனைகள் இல்லாதிருந்தால் சிறப்பாக இருக்கும் என்றும் அவர் கருத்துத் தெரிவித்தார்.

## ஜின்னாவின் அச்சம்

இந்த ஆலோசனையை எந்த அடிப்படையில் திரு.ஜின்னா மறுக்கக்கூடும் என்பதை டாக்டர் அம்பேத்கரால் கண்டு கொள்ள முடியவில்லை. மக்கள் வாக்கெடுப்பில் பாகிஸ்தானுக்கு எதிராக வாக்களிக்க முஸ்லீம்கள் மீது இந்துக்கள் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தலாம் என்பதே திரு.ஜின்னா இந்த ஆலோசனையை மறுப்பதற்கு அடிப்படையாக இருக்கலாம். இந்த மாதிரியான ஒரு பிரச்சினைக்கு முடிவுகாண வெகுஜன வாக்கெடுப்பே ஒரே வழி எனலாம். வரலாற்றில் இந்த மாதிரியான ஒரு பிரச்சினை வாக்கெடுப்பின்றி தீர்க்கப்பட்டதாக டாக்டர் அம்பேத்கருக்குத் தெரியாது.

## முஸ்லீம்களை காங்கிரஸ் விலைக்கு வாங்குமா?

''மக்கள் வாக்கெடுப்பில் பல ஆபத்துகள் உள்ளன'' என்று டாக்டர் அம்பேத்கர் கருத்துத் தெரிவித்தார். இந்த ஆலோசனையைவிட அதற்குப் பின்னே உள்ள ஆத்மசுத்திதான் முக்கியம். தம்மை வலையில் விழவைக்க, காங்கிரஸும் திரு. ராஜகோபாலாச்சாரியும் முற்றிலும் வழக்கமான முறையில் இதை அளித்திருக்கும் அதே வேளையில், முஸ்லீம் வாக்குகளை விலைக்கு வாங்க வழிமுறைகளை உருவாக்கலாம் என்ற அச்சத்தில் இந்த ஆலோசனையை திரு.ஜின்னா மறுக்கக்கூடும். திரு.ராஜகோபாலாசாரிக்கு எதிரான மானநஷ்ட வழக்கில், முஸ்லீம்களுக்கு பாகிஸ்தானை அளித்துவிட்டு, அதை முறியடிக்க பாகிஸ்தானிலுள்ள முஸ்லீம்களை விலைக்கு வாங்குவது என்ற குற்றச்சாட்டில் ஏதாவது உண்மையிருக்கிறதா என்று திரு.ராஜகோபாலாசாரியிடம் திரு.ஜின்னா கேட்கலாம்.

இந்த ஆலோசனைக்குப் பின்னே உள்ள தமது ஆத்மசுத்தியை நிரூபிப்பதுடன், முஸ்லீம்கள் சுதந்திரமாக வாக்களிப்பதற்கு இந்துக்கள் தடையாக இருக்கமாட்டார்கள் என்பதற்கு திரு.காந்தி உத்தரவாதம் தரவேண்டும்.''[1]



1. ஃப்ரி பிரஸ் ஆஃப் இந்தியா, ஜுலை 13, 1944.

# 18

# மத்திய நீர்ப்பாசன மற்றும் நீர்வழிப் போக்குவரத்துக்கான ஆலோசனைக் குழுமம் குறித்த முதல் பிரேரணை

''மத்திய நீர்பாசான மற்றும் நீர்வழிப் போக்குவரத்துக் கான ஆலோசனைக் குழுமம் ஒன்றை உருவாக்குவது வரவேற் கத்தக்கது எனத் தொழிலாளர் துறை கருதுகிறது. தேவையான அதிகாரங்களுடன் கூடிய நிரந்தரமான குழுமம் ஒன்று தேவையென நாங்கள் விரும்புகிறோம். பின்வரும் விஷயங்களைக் கொண்ட தாக அந்தக் குழுமம் இருக்க வேண்டுமென்பதே எங்கள் கருத்து :

*தலைவர் :* இந்திய அரசுக்கான நீர்வழி மற்றும் நீர்பாசனத்துக் கான ஆணையர், இந்த அதிகாரிக்கு இந்தியாவில் நல்ல அனுபவம் இருந்திருக்க வேண்டும். எனவே இந்தியப் பொறியியலாளர் பணியின் மூத்த அதி காரியாக அவர் இருக்க வேண்டும். ஆனால், ஆலோசனைக் குழு என்ற முறையில் குழுமத்தின் பலம், அதன் கூட்டுசக்தியில்தான் உள்ளது, தனிப் பட்ட அதன் தலைவரின் திறமையில் இல்லை. (இந்திய நீர் வழிப் போக்குவரத்தின் ஆராய்ச்சி மையத்தின் நடவடிக்கைகளை தனிப்பட்ட முறையில் அவர் மேற்பார்வையிடலாம்)

**உறுப்பினர்கள் :** அதில் 3 நிரந்தர உறுப்பினர்கள் இருப்பார்கள் 1. நீர்வழிப் போக்குவரத்துக்கான உறுப்பினர், 2. நீர்ப்பாசனத் துக்கான உறுப்பினர், 3. நீர்மின் சம்பந்தமான உறுப்பினர்.

மேலும் சில பகுதி நேர உறுப்பினர்களும் இருப்பர் (உ-ம்) குறிப்பிட்ட மாகாணங்கள் சம்பந்தமாக பிரச்சினைகள் வரும்போது அந்த மாகாணங்களின் தலைமை பொறியிய லாளர்களும் மற்றும் விவசாயம் சம்பந்தமான பிரச்சினைகள் எழும்போது இந்திய அரசின் விவசாய ஆலோசகரும் பகுதிநேர

உறுப்பினராவர். குறிப்பிட்ட விஷயங்கள் சம்பந்தமாக உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க அதிகாரம் வழங்கப்படும்.

**குறிப்பு:** சொட்டு நீர் நீர்ப்பாசனம் சம்பந்தமாக குழுமத்தில் உறுப்பினர் சேர்க்கப்படவில்லை. ஆனால் தலைவருக்கு பெரும்பாலும் இதில் அனுபவம் இருக்கும்.

மத்திய நீர்பாசனம் மற்றும் நீர்வழிப் போக்குவரத்துக் குழுமத்தின் பொறுப்புகள் வருமாறு:

1. பின்வரும் காரணங்களுக்காக ஆறு மற்றும் நீர்வழிப் போக்குவரத்தை கட்டுப்படுத்தும் திட்டங்களை முன்மொழிவது, ஒருங்கிணைப்பது, செயல்படுத்துவது ஆகியவைகளில் பொதுவான பொறுப்புகள்.

    அ) வெள்ளத் தடுப்பு;

    ஆ) நில அரிப்புத் தடுப்பு;

    இ) நீர் தேங்குவதைத் தடுப்பது;

    ஈ) நீர்பாசனத்துக்காக தண்ணீரைக் கட்டுப்படுத்துவது;

    உ) மின்சார உற்பத்திக்காகத் தண்ணீரைக் கட்டுப்படுத்துவது;

    ஊ) நிலத்தடி நீரை குறைந்த மின் செலவில் நீர்ப் பாசனத்திற்கு உபயோகிப்பது;

    எ) தண்ணீர் தேங்கிய இடங்களிலிருந்து மின் சக்தி மூலம் நீரை வெளியேற்றுவது;

    ஏ) நீர்வழிப் போக்குவரத்துக்காக நீர் ஒழுக்கைக் கட்டுப்படுத்துவது.

2. மாகாண அரசுகளைக் கலந்தாலோசித்து எல்லாப் பெரும் நீர்வழிகளுக்கும் நீரொழுக்கைக் கட்டுப்படுத்தும் திட்டங்களுக்கான திட்ட அறிக்கைகளைத் தயாரித்தல்.

3. நீர்வழிகள் மற்றும் நிலத்தடி நீர் கட்டுப்பாடு சம்பந்தமான புள்ளி விவரங்களைச் சேகரிக்க ஏற்பாடு செய்தல்.

4. மாகாணங்களுக்கிடையேயான தகராறுகளைத் தீர்ப்பதற்கான கொள்கைகள் சம்பந்தமாக இந்திய அரசுக்கு ஆலோசனை அளித்தல்.

பின்வரும் விஷயங்களுக்கு குழுமத்திற்கு ஆலோசனை அளிக்கும் பொறியியலாளர்கள் தேவைப்படுகின்றனர்:

(i) அணை கட்டுதல்;
(ii) குறுக்கணை (barrage) கட்டுதல்.

எச்.ஸி.பிரையர்
செயலர்
31.8.44

நான் ஏற்றுக் கொள்கிறேன். மாகாணங்களை கலந்தாலோசிப்பது, அது காலதாமதத்தை ஏற்படுத்தாதா என்பதே என் ஒரே குறிப்புரை, பின் ஒரு கட்டத்தில் நாம் கலந்தாலோசிக்கக் கூடாதா?

பி.ஆர். அம்பேத்கர்[1]
9.9.1944''



1. துரோட், பக்கங்கள் 150-151.

# 19

# இருவருமே பெருந்தவறு செய்கின்றனர்

''வைஸ்ராயின் நிர்வாகக் குழுவில் தொழிலாளர் துறை அமைச்சரான மாண்புமிகு டாக்டர் பீமாராவ் ஆர்.அம்பேத்கர் செவ்வாய்க்கிழமை மாலையில் புனா விரைவு வண்டியில் விக்டோரியா இரயில் நிலையத்தில் வந்திறங்கியபோது அவருக்கு வரவேற்பளிக்க ஏராளமான தொண்டர்களும், அவரிடம் பெரு மதிப்பு வைத்துள்ளவர்களும் அங்கு கூடியிருந்தனர்.

நடைமேடையில் இறங்கிய டாக்டர் அம்பேத்கருக்கு, ஷெட்யூல்டு வகுப்பினர் மற்றும் இதர அமைப்புகளின் பிரதி நிதிகள் மாலையிட்டு கௌரவித்தினர்.

அவரைக் கௌரவிக்கும் வகையில் இரயில் நிலையத் திலிருந்து தாதர் ராஜ்கிரகா வரை ஊர்வலம் ஒன்று நடைபெற்றது.

காந்தி-ஜின்னா பேச்சுவார்த்தைகளில் தோல்வியைத்தான் எதிர்பார்க்க முடியும் என்று டைம்ஸ் ஆப் இந்தியாவின் செய்தி யாளருக்குப் புதன்கிழமை அளித்த பேட்டியில் மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் தெரிவித்துள்ளார். வெற்று மனதுடன் அவர்கள் சந்திக்கவில்லையென்றாலும் இருவருக்கும் திறந்த மனம் இல்லை என்பது உண்மைதான்.''

மற்ற காரணங்களுக்கிடையே, திரு.காந்தி மற்றும் திரு.ஜின்னாவின் பிடிவாதப் போக்கும், திரு.ராஜகோபாலாச்சாரி யின் திட்டத்தின் அடிப்படைத் தவறுகளுமே தோல்விக்கான காரணங்கள் என டாக்டர் அம்பேத்கர் கருதுகிறார். இந்தியப் பிரச்சினைக்கான எந்தத் தீர்வையும், ஷெட்யூல்டு வகுப்பினரின் ஒப்புதலின்றி முழுமையான தீர்வாகக் கருத முடியாது என மேலும் அவர் எடுத்துரைத்தார். திரு.காந்தியோ, திரு.ஜின்னாவோ அவர்கள் சார்பாகப் பேச முடியாது.

---

★ அக்டோபர் 3, 1944

★★ அக்டோபர் 4, 1944

1. பம்பாய் கிரானிக்கில், அக்டோபர் 4, 1944

வகுப்புகளுக்கிடையேயான பிரச்சினைகளுக்குத் தீர்வு காண திரு.காந்தியும், திரு.ஜின்னாவும் சந்திப்பதாக நான் நம்பவில்லை என்று டாக்டர் அம்பேத்கர் பேட்டியில் கூறியுள்ளார். பேட்டி காண வேண்டும் என்று ஜின்னா கேட்டபோது பேட்டி குஜராத்தி மொழியில்தான் இருக்க வேண்டும் என்று திரு.காந்தி கூறியது, பேச்சுவார்த்தை தோல்வியில்தான் முடியும் என்பதை எனக்கு உணர்த்தியது. கடிதத்தைப் பெற்றுக் கொண்ட பெரு மகிழ்ச்சியில் அதன் விளைவை அவர் உணரவில்லை. தமக்கே உரிய பாணியில் அதை எழுதிய காந்தி ஜின்னாவிடம் தாம் குஜராத்தியைத் தாய்மொழியாகக் கொண்ட ஒரு லோகானா (Lohana) என்று கூறினார்.

அதேபோன்று முஸ்லீம் லீகின் லாகூர் தீர்மானத்திலிருந்து திரு.ராஜகோபாலாச்சாரியின் திட்டம் மாறுபட்டது என்பது திரு.ஜின்னாவுக்குத் தெரியும். சொந்த முறையிலேயே திரு.காந்தி தம்மை சந்திக்கிறார் என்பதும் திரு.ஜின்னாவுக்குத் தெரியும். இந்துக்களின் பிரதிநிதியாகத் திரு.காந்தி வரவில்லை என்பதும் திரு.ஜின்னாவுக்குத் தெரியும்.

## தலைவர்களின் பிடிவாதப் போக்கு

''தோல்வி தவிர்க்க முடியாததாக இருந்தது. இருவரின் பிடி வாதப் போக்கினால் அது தவிர்க்க முடியாததாக இருந்தது மட்டுமின்றி, திரு.சி.ஆர்.-ன் திட்டத்தின் அடிப்படைத் தவறு களினாலும் அது தவிர்க்க முடியாததாக இருந்தது. சமூகப் பிரச்சினையை அரசியல் பிரச்சினையுடன் முடிச்சிட்டதே அது மோசமான திட்டம் என்பதற்கான காரணம். அரசியல் பிரச் சினைக்கு தீர்வில்லையென்றால் சமூகப் பிரச்சினைக்குத் தீர்வில்லை என்று திட்டம் கூறியது. அந்தத் திட்டம் எந்தத் தீர்வை யும் அளிக்கவில்லை. அது திரு.ஜின்னாவைப் பேரத்துக்கு அழைத்தது. அது ஒரு பேரமே - ''சுதந்திரம் பெற நீங்கள் உதவினால், பாகிஸ்தானுக்கான உங்கள் தீர்மானத்தை மகிழ்ச்சி யுடன் கவனிப்போம்.''

''உடன்பாடு ஏதாவது ஏற்படுமானால் அதைச் செயல் படுத்தும் அமைப்பு சம்பந்தமானதே திரு.ராஜகோபாலாச்சாரி யின் திட்டத்தின் இரண்டாவது தவறு எனலாம். தற்காலிக அரசே

அதற்கான அமைப்பாக திரு.ராஜகோபாலாச்சாரியின் திட்டத்தில் பரிந்துரைக்கப்பட்டிருந்தது.

''தற்காலிக அரசு ஒன்றை அமைக்க சம்மதிப்பதன் மூலம், சுதந்திரம் பெற காங்கிரசுக்கு உதவுவது என்ற தம் வாக்குறுதியை முஸ்லீம் லீக் நிறைவேற்றிவிடும். ஆனால் பாகிஸ்தானை உருவாக்குவது சம்பந்தமான காங்கிரஸின் வாக்குறுதி நிறைவேற்றப்பட வேண்டியதாக இருக்கும். வாக்குறுதிகள் ஒரே சமயத்தில் நிறைவேற்றப்பட வேண்டும் என்று வலியுறுத்தும் திரு.ஜின்னா, தம்மை இந்த நிலைக்குத் தள்ள ஒருபோதும் ஏற்றுக் கொள்ள மாட்டார். உடன்பாட்டில் இந்துக்கள் சம்பந்தமான பகுதியை நிறைவேற்ற தற்காலிக அரசு தவறுமானால் என்ன நேரும் என்பதைத் திரு.ராஜகோபாலாச்சாரி கவனத்தில் எடுத்துக் கொள்ளத் தவறியது இரண்டாவது சிக்கலாகும். அதை யார் நிறைவேற்றுவது? எந்த மேலதிகார அமைப்புக்கும் கட்டுப்படாத இறையாண்மை பெற்ற அரசாக தற்காலிக அரசு இருக்கும். உடன்பாட்டை நிறைவேற்ற அது விரும்பவில்லையென்றால், முஸ்லீம்களுக்குள்ள ஒரே வழி கலகம் செய்வதுதான். பாகிஸ்தானை உருவாக்க புதிய அரசியல் சாசனத்தை உருவாக்கும் அமைப்பாக தற்காலிக அரசு செயல்பட எவரும் சம்மதிக்க மாட்டார். அது ஒரு தீர்வு அல்ல, பொறிதான். பிரிட்டிஷ் இந்தியாவின் தேசிய வாழ்வில் உள்ள முக்கியப் பிரிவினர்கள் ஏற்றுக் கொள்ளும் விதிகளைக் கொண்டுள்ள நாடாளுமன்றச் சட்டத்தின் மூலமே அரசியல் சட்ட மாற்றங்களைக் கொண்டுவர முடியும். அதுதான் ஒரே வழி. வேறு வழி ஏதும் இல்லை.

''திரு.சி.ராஜகோபாலாச்சாரியின் திட்டத்தில் மூன்றாவதாக ஒரு தவறும் உள்ளது. வெளிநாட்டு உறவுகள், சுங்கவரி, பாதுகாப்பு ஆகிய பொதுவான விஷயங்களைக் கவனிக்க இந்தியாவிற்கும் பாகிஸ்தானுக்குமிடையே உடன்படிக்கைக்கான வழிமுறைகள் சம்பந்தமானது இது. மீண்டும் இதில் காணப்படும் இடர்ப்பாடுகளை திரு.ராஜகோபாலாச்சாரி புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை.

''பேச்சுவார்த்தைகள் தோல்வியடைந்தது குறித்து யாரும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. சில கேள்விகளுக்குத் தெளிவான பதிலளிக்காமல் பேச்சுவார்த்தை தோல்வியடைந்ததே வருத்தம் அளிப்பதாக இருக்கிறது. தனிப்பட்ட முறையில்

பேசும் போது இவை குறித்து ஜின்னா பேசினாலும், பொது மேடைகளில் இவை குறித்து ஆழ்ந்த மௌனம் சாதிக்கிறார்.

## விளக்கம் தேவைப்படும் வினாக்கள்

''கேள்விகள் வருமாறு :-

*(1) முஸ்லீம் லீகின் தீர்மானம் காரணமாக பாகிஸ்தானை ஏற்றுக் கொள்வதா?*

*(2) முஸ்லீம் லீகைத் தவிர்த்து, முஸ்லீம்கள் இந்த விஷயத்தில் ஏதாவது கூற முடியுமா?*

*(3) பாகிஸ்தானின் எல்லைகள் யாவை? தற்போதைய பஞ்சாப் மற்றும் வங்காளத்தின் நிர்வாக எல்லைகளா அல்லது மனித இன அடிப்படையில் எல்லைகள் இருக்குமா?*

*(4) தேவைப்படும் நிலப்பகுதி மாற்றங்களுக்குட்பட்டு என்று லாகூர் தீர்மானத்தில் வரும் சொற்றொடர்களின் பொருள் என்ன? எவ்வித நிலப்பகுதி மாற்றங்களை முஸ்லீம் லீக் கருத்தில் கொண்டுள்ளது?*

*(5) லாகூர் தீர்மானத்தில் கடைசிப் பகுதியில் வரும் 'இறுதியாக' என்ற சொல் எதைக் குறிக்கிறது? பாகிஸ்தான் சுதந்திரம் பெற்ற இறையாண்மையுடன் கூடிய நாடாக இல்லாத ஓர் இடைக்கால நிலையை லீக் கருத்தில் கொண்டுள்ளதா?*

*(6) கிழக்கு மற்றும் மேற்கு பாகிஸ்தானின் எல்லைகள் தற்போதைய நிர்வாக எல்லைகளே என்று திரு.ஜின்னாவின் தீர்மானம் இருக்குமானால் பஞ்சாப் மற்றும் வங்காளத்திலிருக்கும் ஷெட்யூல்டு வகுப்பினர் குறிப்பாக முஸ்லீம் அல்லாதோர் திரு.ஜின்னாவின் பாகிஸ்தானில் இருப்பதா என்பதை வாக்கெடுப்பு மூலம் முடிவு செய்ய அவர் அனுமதிப்பாரா? பஞ்சாப் மற்றும் வங்காளத்திலுள்ள முஸ்லீம் அல்லாத பிரிவினர்களின் பொதுவாக்கெடுப்பு முடிவுகளுக்கு கட்டுப்பட்டு நடக்க திரு. ஜின்னா தயாராக உள்ளாரா?*

*(7) மேற்குப் பாகிஸ்தானையும் கிழக்குப் பாகிஸ்தானையும் இணைக்க உ.பி மற்றும் பீஹார் வழியாக இடைவழி ஒன்றை ஜின்னா விரும்புகிறாரா? நேரடியான கேள்விகள் கேட்கப்பட்டு தெளிவான பதில்களை ஜின்னாவிடமிருந்து பெறுவது மிகப் பயனுள்ளதாக இருக்கும்.*

பாகிஸ்தான் பிரச்சினை வெறும் கருத்துப் பொருள் சம்பந்தப் பட்டது மட்டுமில்லை. அதைக் குறித்து விவாதங்கள் ஆரம்பிக்க வேண்டும். பாகிஸ்தான் குறித்த உடன்பாட்டிற்கு இந்துக்கள் மற்றும் முஸ்லீம்கள் மட்டுமே தேவையான இரு சரியான கட்சிகள் என்று திரு. ஜின்னாவும், திரு.காந்தியும் கருதுவதாக அவர்களுக்கிடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்திலிருந்து தெரிகிறது. தற்போதைய மாகாண எல்லைகளே பாகிஸ்தானின் எல்லைகளாக இருக்க திரு. ஜின்னா விரும்புவது, பாகிஸ் தான் பகுதியில் வசிக்கும் முஸ்லீம் அல்லாதோருக்கு இதில் கருத்துக்கூற எந்த வாய்ப்பும் இருக்காது என்பதும் தெரிகிறது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

இவ்வித அனுமானத்தின் அடிப்படையில் திரு.காந்தி மற்றும் திரு.ஜின்னா ஆகிய இருவரும் பெரும் தவறு செய்கின் றனர் என்று கூறக் கடமைப்பட்டுள்ளேன். இந்துக்கள் மற்றும் முஸ்லீம்கள் தவிர தேவையான மூன்றாவது கட்சி ஷெட்யூல்டு வகுப்பினராகும். இந்தப் பிரச்சினையில் அவர்கள் அவசியமான கட்சியாகும். திரு.காந்திக்கோ, காங்கிரஸுக்கோ, இந்து மகா சபைக்கோ அவர்கள் சார்பாக பேச உரிமை கிடையாது. இந்தப் பெரும் மக்கள் பிரிவினரை, அவர்கள் ஒப்புதல் இன்றி, திரு. ஜின்னா தன்னுடன் எடுத்துச் செல்ல அனுமதிக்கப்பட மாட்டார் என்பதை அவர் புரிந்து கொள்ள வேண்டும்.

ஷெட்யூல்டு வகுப்பினர்களை அவர்களின் வெளிப்படை யிலான ஒப்புதலின்றி பாகிஸ்தானின் மேற்குப் பகுதியிலோ கிழக்குப் பகுதியிலோ சேர்த்துக் கொள்ளக் கூடாது என்று பாகிஸ்தான் பிரச்சினையில் அக்கறை உள்ளவன் என்ற முறையில் என் நிலையைத் தெளிவுபடுத்துகிறேன். இந்த ஒப்புதல் வெளிப் படையாக தீர்மானமான முறையில் சுதந்திர வாக்கெடுப்பு மூலம் இருக்க வேண்டும்.''[1]

●●●

1. டைம்ஸ் ஆப் இந்தியா, அக்டோபர் 5, 1944.

# 20

# சப்ருவின் தவறு

*புதுடில்லி, டிசம்பர் 31, 1944*

சமரசக் குழுவுடன் ஷெட்யூல்டு வகுப்பினர் ஒத்தழைக்க வில்லை என்று ஸர் தேஜ் பகதூர் சப்ரு குறிப்பிட்டது சம்பந்தமாக டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் பின்வரும் அறிக்கையில் பதில் அளித்துள்ளார்:

''இந்தக் குழுவுடன் ஒத்துழைப்புத்தர மறுப்பதாக ஸர் தேஜ் பகதூர் சப்ரூ குறைபட்டுக் கொண்டதைக் கண்டு என்னால் ஆச்சரியப்படாமல் இருக்க முடியவில்லை. யாராவது குறை பட்டுக் கொள்ள வேண்டுமென்றால் அது நானாகத்தான் இருக்க முடியும். ஸர் தேஜ் பகதூர் சப்ரூ அல்ல.

''தம்முடைய அலுவல்களைத் தவறான முடிவிலிருந்து அவர் ஆரம்பித்துவிட்டார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. சமூகத் தகராறுகளில் சம்பந்தப்பட்ட பல்வேறு கட்சிகள், குழு வின் முன் ஆஜராக வேண்டுமென்று அவர் விரும்பினால், குழு உறுப்பினர்கள் குறித்து அவர்களுக்கு ஆட்சேபம் இருக்கிறதா என்று கேட்டிருக்க வேண்டும். இது விரும்பத்தக்கது என்பது மட்டுமல்ல அவசியமானதும்கூட. இவ்வாறு நடந்து கொள் ளாமல் தம் விருப்பப்படி உறுப்பினர்களை முடிவு செய்துவிட்டு, இறுதிப் பட்டியலைக் கட்சிகளுக்கு அளித்துள்ளார். சுருக்கமாகக் கூறுவதென்றால், ஒரு குழுவை நியமிப்பதில் அது பெரும் சூழ்ச்சி இல்லையென்றாலும் நேர்மையற்ற முறையாகும். மக்கள் அதில் நம்பிக்கை வைக்க வேண்டும் என்று எவ்வாறு எதிர்பார்க்க முடியும்.

## பெயர்கள் கொடுக்கப்படவில்லை

''ஸர் தேஜ் பகதூர் சப்ரூ என்னிடம் வந்தபோது குழு உறுப்பினர்கள் குறித்து அவர் எந்தக் குறிப்பும் எனக்கு அளிக்கவில்லை. நாங்கள் பொதுவான விஷயங்கள் குறித்து

விவாதித்தோம். அதாவது பல்வேறு வகுப்பினர்கள் முன்வைக்கும் பல்வேறு கோரிக்கைகளை மதிப்பீடு செய்து எந்தக் கோரிக்கைகள் நியாயமானவை, எவை நியாயமற்றவை என்பதை முடிவு செய்ய பாரபட்சமற்ற உறுப்பினர்களைக் கொண்ட அமைப்பொன்றை உருவாக்குவது விரும்பத்தக்கதல்லவா என்று விவாதித்தோம். அதன் பிறகு குழுவில் தாம் சேர்க்க விரும்பும் உறுப்பினர்களின் பெயர்களை எனக்கு நிச்சயமாகக் கூறுவார் என்று காத்திருந்தேன். ஆனால் அவ்வாறு அவர் நடந்து கொள்ள வில்லை.

''இந்தச் சூழ்நிலைகளில், குழுவின் உறுப்பினர்கள் குறித்து எனக்குத் திருப்தி இல்லை. எனவே குழுவுடன் ஒத்துழைக்க நான் தயாராக இல்லை என்று ஸர் தேஜ் பகதூரிடம் நான் கூறினால் அது என் தவறாகாது.

''என்னுடைய நடத்தை பொறுப்பற்றது என ஸர் தேஜ் பகதூர் எவ்விதத்திலும் கூற முடியாது. நாட்டு மக்களின் பொதுவான உணர்வுகளுக்கு தகுந்தவாறு சைமன் கமிஷன் உறுப்பினர்கள் இல்லை எனக் கூறி 1929ல் அதை எதிர்த்ததோடு அதனுடன் ஒத்துழைக்கக் கூடாது என்பதில் முன்னணியில் ஸர் தேஜ் பகதூரே இருந்தார் என்பது எல்லோருக்கும் தெரியும்.

''நான் ஒத்துழைக்க மறுத்ததைக் குறிப்பிட்ட ஸர் தேஜ் பகதூர் என்னுடைய கடிதத்தின் மறு பகுதியைக் குறிப்பிட வில்லை. எனக்குத் திருப்தி அளிக்கும் வகையில் குழுவை மாற்றியமைத்தால் அவருடன் ஒத்துழைக்க இன்னும் தயாராகவே உள்ளேன் என்று அதில் குறிப்பிட்டிருந்தேன். பல்வேறு வகுப்பினர்கள் தங்கள் கோரிக்கைகளை வலியுறுத்தி வெளியிடும் தீர்மானங்கள் மற்றும் வெளியீடுகளை ஆய்வு செய்து, பல வகுப்புகளைச் சேர்ந்த பலதரப்பட்ட நபர்களின் ஒத்துழைப்புடன் குழுவை நடத்திச் செல்லலாம் என்று அவர் நினைப்பதாகத் தெரிகிறது. நான் கூற வேண்டியதெல்லாம் என்னைப் பற்றி அவர் குறைபட்டுக் கொண்டதற்கு சந்தேகமின்றி எந்தவிதக் காரணமும் இல்லை என்பதுதான். அப்படி ஏதாவது காரணம் இருந்தால் அதற்கு அவரே முழுப் பொறுப்பாகும். -ஏபி''[1].



1. ஃபிரீ பிரஸ் ஆப் இந்தியா, ஜனவரி 1, 1945

# 21

# மிகவும் பயன்தரத்தக்க விதத்தில் மகாநதியைக் கட்டுப்படுத்திப் பயன்படுத்துங்கள்

## ஹிராகுட் அணை குறித்து தொழிலாளர் துறை அமைச்சர் **டாக்டர் அம்பேத்கரின் கடிதம்**

தொழிலாளர் துறை

அன்பார்ந்த வேவல் பிரபு அவர்களே!

ஜனவரி 22ம் தேதியிட்ட உங்கள் கடிதத்தின் இரண்டாவது பத்தியைக் காண்க. நிதித் துறையுடன் இணைந்து எங்கள் துறை இந்த விஷயம் குறித்துப் பரிசீலித்துள்ளது. மகாநதித் திட்டத்தின் பகுதியாகவே சம்பல்பூர் அணை நிச்சயமாக இருக்க வேண்டுமென்று கோசலா தெரிவித்துள்ளார். புவியியல் அறிக்கை திருப்திகரமாக உள்ளது. இந்த அணை அல்லது திட்டம் முழுவதற்குமான செலவு குறித்தும் அதிலிருந்து கிடைக்கும் வரவு குறித்தும் அவரால் இன்னும் மதிப்பீடு செய்ய முடியவில்லை. இருப்பினும், சம்பல்பூர் அணை மகாநதித் திட்டத்தின் பகுதியாகவே நிச்சயமாக இருக்கும் என அவர் கருதுகிறார். மார்ச் மாதத்திலேயே அடிக்கல் நாட்டப்பட வேண்டும் என அவர் கருதுகிறார். இம்மாதிரித் திட்டங்களை நிதி அமைச்சர் பெரிதும் ஆதரிப்பதுடன் அடிக்கல் நாட்டுவதால் எவ்விதக் குறிப்பிட்ட பொறுப்பும் எழப்போவதில்லை எனக் கருதுகிறார். அடிக்கல் நாட்ட முடிவு எடுக்கப்பட்டால், நாட்டின் சிறந்த நலனுக்காக மகாநதி கட்டுப்படுத்தப்பட்டுப் பயன்படுத்த அரசு தீர்மானித்துள்ளதை அறிவிக்க ஆளுநருக்கு அதிகாரம் அளிக்க வேண்டும் என என்னைப் போலவே நீங்களும் கருதுகிறீர்கள். மற்றும் ஆரம்ப தயாரிப்பு நிலையிலுள்ள திட்டத் தயாரிப்புகள் எதிர்பார்த்தபடி செயல்படுத்தத் தக்கது என்று கண்டால் இவ்விஷயத்தில் மத்திய அரசின் எல்லா ஆதரவும் மாகாண அரசுக்குக் கிட்டும்.

திரு. லூயி பொறுப்புகளை ஒப்படைக்கும் முன், அவரே அடிக்கல்லை நாட்டும் வகையில், விரைவில் முடிவை எடுக்க முயல்வோம் என உங்கள் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளீர். மேலே குறிப்பிட்ட நிபந்தனைக்குட்பட்டு மகாநதித் திட்டத்தைச் செயல்படுத்த ஒரிசாவுக்கு உதவுவோம் என்ற தீர்மானம் ஒன்றை நிறைவேற்றலாம் என நினைக்கிறேன். ஒரிசாவின் கண்ணோட்டத்தில், ஆளுநரே இதற்கு உறுதி அளிக்கத் தயாரானால், அடிக்கல் நாட்டும் நடவடிக்கைகள் எடுப்பதை இந்தத் தீர்மானம் நியாயப்படுத்தும் என நினைக்கிறேன்.

நிதித் துறைக்கு இந்தக் கடிதம் எங்கள் துறையால் காண்பிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

உங்கள் உண்மையான
பி.ஆர். அம்பேத்கர்
தொழிலாளர் துறை அமைச்சர்
பிப்ரவரி 1946''.

மேதகு ரைட் ஹானரபிள் இளங்கோமகர் வேவல்''

வைஸ்ராய் இளங்கோமகர் **வேவலின்** பின்வரும் கடிதத்திற்கான பதிலே டாக்டர் அம்பேத்கரின் மேலே கொடுக்கப்பட்டுள்ள கடிதம்.

வைஸ்ராய் இல்லம்,
ஜனவரி 20, 1946

அன்புள்ள டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்கு,

மச்குந்த் விஷயம் குறித்து, மெட்ராஸும் ஒரிசாவும் ஒரு முடிவுக்கு வந்தது மிகவும் திருப்தியளிக்கிறது. எவ்வளவு விரைவில் முடியுமோ, அவ்வளவு விரைவில் இந்த உடன்பாட்டை உறுதி செய்ய இரு ஆளுநர்களுக்கும் தந்தி அனுப்பியுள்ளேன்.

சம்பல்பூரில் அணை ஒன்றைக் கட்டுவதன் மூலம் மகாநதித் திட்டத்தை விரைவில் ஆரம்பிப்பதற்கான சாத்தியப்

1. துரோட், பக்கங்கள் 172-174.

*பாடுகள் குறித்து பேச்சுவார்த்தைகளின் போது குறிப்பிடப்பட்டதாக திரு.மேனனிடமிருந்து தெரிந்து கொண்டேன். ஒரிசா மிகவும் வறுமையில் வாடும் பின்தங்கிய மாகாணம். சம்பல்பூர் அணையைக் கட்டுவது தொழில்நுட்ப ரீதியில் சாத்தியமென்றால் ரௌலண்டு உடன்பாட்டிற்கு உட்பட்டு உடனே செயலில் இறங்கலாம். சாத்தியப்பாடுகள் குறித்து உடனடியாக நாமே முடிவுக்கு வர முடியும் என நினைக்கிறேன். நீர் கட்டுப்பாடு, நீர்ப்பாசனம் சம்பந்தமான விஷயங்களில் எனக்குள்ள ஈடுபாடு உங்களுக்குத் தெரியும். எனவே வேலையில் ஏற்படும் முன்னேற்றத்தை எனக்குத் தெரிவிக்கவும். (நாம் பணியைத் தொடர நினைத்தால்) திரு.ஹுயி மார்ச் 31ம் தேதி தம் பதவியை விட்டுச் செல்லுவதற்கு முன் அவரே அடிக்கல் நாட்டு விரைவில் முடிவெடுக்க நாம் முயல வேண்டும்.*

*உங்கள் உண்மையுள்ள,*
**வேவல்**

மேதகு
*டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்*



*1. தோரட், பக். 172-174.*

# 22

# எல்லாக் கட்சிகளுக்குமிடையே கூட்டுறவு உணர்வை உருவாக்க இந்தியாவில் நாம் பாடுபட வேண்டும்

*''லண்டன், அக்டோபர் 22, 1946 (ராய்ட்டர்)''*

*ராய்ட்டர் செய்தியாளருடனான நேர்காணலின் போது இந்திய அரசியல் சட்ட அமைப்பு நிலை குறித்து டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது:*

''நிச்சயமாக அவர்கள் நண்பர்கள் அல்ல. அவர்கள் பங்காளிகள்கூட அல்ல'' என்று மேலும் அவர் கூறினார். ''நண்பர்கள் இல்லாவிட்டாலும் பங்காளிகளாகவுள்ள மக்களைப் பார்த்திருக்கிறோம். ஆனால் முஸ்லீம் லீகும் காங்கிரஸ் கட்சியும் அரசியல் எதிரிகளாகச் சேர்ந்துள்ளன. நாம் இதிலிருந்து என்ன எதிர்பார்க்க முடியும்? அதை ஒரு கூட்டணி என்று கூறிவிட முடியாது. அது உண்மையில் ஒரு நாட்டின் இரண்டு தேசிய இனங்களின் அரசாகும்.

இந்தியாவில் கட்சி அரசுக்கு இது சரியான தருணமல்ல என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். ''நடைமுறையில் பார்த்தால் நாம் ஓர் உள்நாட்டுப் போரின் நடுவே இருக்கிறோம்'' என்று அவர் வலியுறுத்தினார். ''உள்நாட்டுப் போர் என்று அதைக் குறிப்பிட நீங்கள் விரும்பமாட்டீர்கள். ஆனால் அதன் பின்னே உள்ள உணர்வு அதுதான். போர்க் காலத்தில் பிரிட்டனில் செயல்பட்டதுபோல, இந்த நேரத்தில் மத்தியில் எல்லாக் கட்சிகளும் பங்குபெறும் ஓர் உண்மையான கூட்டணி அரசே இருக்க வேண்டும்.

''வரும் பத்தாண்டுகளே இந்தியாவின் தலைவிதியை நிர்ணயிக்கக்கூடிய காலகட்டம் என நினைக்கிறேன். எல்லாக் கட்சிகளும் ஒன்றுபட்டு செயல்பட்டாலொழிய நாம் விரும்பும் எந்தத் திசையிலும் அதைக் கொண்டு செல்ல முடியாது.

''இந்த உணர்வை இந்தியாவில் உருவாக்க வேண்டு மென்பதை நாம் ஞாபகத்தில் கொள்ள வேண்டும்'' என்று டாக்டர் அம்பேத்கர் மேலும் தொடர்ந்தார்.

''1935 ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தின் 93ஆவது பிரிவு போன்ற ஒன்று இனி இந்தியாவில் இருக்காது. மக்களால் பெருமளவு வெறுக்கப்பட்டாலும், 93 ஆவது பிரிவு உண்மை யிலேயே அராஜகத்துக்கெதிரான அரசியலமைப்புத் தடைக் கல்லாக இருந்தது'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். மேலும் அவர் தொடர்ந்தார்: ''பிரிட்டிஷ் ராணுவம் இனி இருக்கப் போவதில்லை. இந்தச் சூழ்நிலையின் அடிப்படையில் பார்த்தால், எல்லாக் கட்சிகளுக்கும் மக்களுக்குமிடையே ஒற்றுமையை உருவாக்கப் பாடுபடுவது மட்டுமே இந்தியாவின் எதிர்காலத் திற்கு நன்மை பயக்கும்.'' நிகழ்காலத்தைக் குறித்தும் எதிர் காலத்தைக் குறித்தும் கவலை கொண்டிருப்பதாக டாக்டர் அம்பேத்கர் தெரிவித்தார். ''நாம் சாதித்ததுதான் என்ன? எதிர்கால நிலை எவ்வாறு இருக்கிறது? என்ற கேள்விகளை எழுப்பி அவர் கூறினார்: ''நாட்டை இரண்டு தேசிய இனமக்களின் பகுதிகளாக வும் புவியியல் ரீதியில் மூன்று துண்டுகளாகவும் உடைத்தோம்.''

''எந்த வழியில்தான் நம்பிக்கை உள்ளது'', என்று டாக்டர் அம்பேத்கரிடம் கேட்டேன்.

''எனக்கு எவ்விதக் கருத்தும் இல்லை'' என அவர் பதி லளித்தார். ''ஆனால் விஷயங்கள் என் மேற்பார்வையில் இருந் திருந்தால், 1935 ஆம் ஆண்டு இந்திய அரசு சட்டத்தைத் திரும்பக் கொண்டுவரத் தீர்மானித்திருப்பேன்'' என்றார் அவர்.

அச்சட்டம் ஒன்றுபட்ட இந்தியாவைக் கருத்தில் கொண் டிருந்தது. போதிய பாதுகாப்பில்லை என்று கருதும் சில சிறுபான்மையினர் அதிகப் பாதுகாப்புப் பெறும் விதத்தில், வகுப்புகள் வகிக்கும் பங்கை நிலைமைகள் மாற்றியிருக்கும்.

''பத்தாண்டிற்கான ஒன்றுபட்ட அரசியல் அமைப்புச் சட்டத் திற்காக செயல்படுவோம் என்று கூறியிருப்பேன். பத்தாண்டு முடிவில், அரசியல் நிர்ணயசபை ஒன்றமைத்து, உங்கள் விருப்பப் படி நாட்டைப் பிரித்துக் கொள்ளலாம்.

''பிரிட்டிஷார் அதைச் செய்திருந்தால், இந்தியாவின் ஒற்றுமையே நம் பெருஞ்சாதனை என்றும், நாம் பல தவறுகள் செய்திருந்தாலும் நாம் அடைந்துள்ள ஒற்றுமை 150 ஆண்டு காலத் தவறுகளைப் பொருட்படுத்தத் தக்கவையல்ல என்று ஆக்கிவிட்டது என்றும், இந்த பரம்பரையை முழுமையாக விட்டுச் செல்ல விரும்புகிறோம் என்றும் அவர்கள் கூறியிருப்பார்கள்'' என்று டாக்டர் அம்பேத்கர் அறிவித்தார்.

''பிரதமர் கிளெமன்ட் அட்லி, திரு.வின்ஸ்டன் சர்ச்சில் மற்றும் பலரைக் காணும் அரசியல் பணியில் நான் இங்கு வந்துள்ளேன்'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். ''அமைச்சரவைத் தூதுக் குழுவும் தொழிலாளர் கட்சியும் ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்கு இழைத்த அநீதியைக் குறித்து என் கருத்தை எடுத்துரைக்க விரும்புகிறேன். இதில் நான் எவ்வளவு தூரம் வெற்றிபெறுவேன் என்று கூற முடியாது. அமைச்சரவைத் தூதுக் குழுவுக்குத் தவறான தகவல்கள் கொடுக்கப்பட்டுள்ளன என்பதே என் சொந்தக் கருத்து.

''ஷெட்யூல்டு வகுப்பினர்கள் தங்கள் சொந்தத் தாய்மார்களால் பாலூட்டி வளர்க்க அனுமதிக்கப்படாமல், அவர்கள் திரு. ஜின்னா, திரு.காந்தி ஆகிய இரு பாலூட்டும் தாதிகளின் பராமரிப்பில் விடப்பட்டுள்ளனர். அதாவது மறு சீரமைக்கப்பட்ட இந்தியத் தற்காலிக அரசில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அமைச்சரவையில் இரண்டு உறுப்பினர்களை அளிக்காது திரு.ஜின்னாவும் திரு.காந்தியும் சேர்க்கப்பட்டுள்ளனர்'' என்று முடித்தார் டாக்டர் அம்பேத்கர்.

ஷெட்யூல்டு வகுப்பினர்களின் கோரிக்கைகளை வலியுறுத்தி மனு ஒன்றை டாக்டர் அம்பேத்கர் தயாரித்துள்ளார். இது அச்சில் தயாரானவுடன் அரசியல் தலைவர்களை அவர் சந்திப்பார்''[1].



1. பம்பாய் கிரானிக்கில், அக்டோபர் 24, 1946.

# 23

# இந்த விஷயங்களை தெளிவுபடுத்தாமல் பிரிவினைப் பிரச்சினையில் எந்த முன்னேற்றமும் இருக்க முடியாது

*புதுடில்லி, ஏப்ரல் 27, 1947*

வங்காளம் மற்றும் பஞ்சாப் ஆகியவைகளின் பிரிவினை சம்பந்தமாக எந்த முடிவும் சம்மேளனம் எடுக்கவில்லை என்றும், இந்தப் பிரச்சினை குறித்து முன்கூட்டியே எந்த முடிவுக்கும் வரப்போவதில்லை என்றும் இன்று ஒரு நேர்காணலில் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

பிரிவினை வேண்டுமென்று இந்துக்கள் விரும்பினால் பின்வரும் விஷயங்களில் அவர்கள் ஷெட்யூல்டு வகுப்பினரை திருப்தி செய்ய வேண்டும் :

முதலாவதாக, ஷெட்யூல்டு வகுப்பினருக்கு முஸ்லீம் லீக் அளிக்கத் தயாராக உள்ள பாதுகாப்பைவிட இந்துக்கள் எவ்விதப் பாதுகாப்பு அளிக்கத் தயாராக உள்ளனர்? இரண்டாவதாக எல்லைக்கோடு எங்கே இருக்கும்? மூன்றாவதாக ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மக்களைக் குடியமர்த்துவதற்கான ஏற்பாடு உள்ளதா? நான்காவதாக, பிரிவினை காரணமாக முஸ்லீம் பகுதியில் விடப்பட்டுள்ள ஷெட்யூல்டு வகுப்பினருக்கும், மக்கள் பரிமாற்றத்தின் காரணமாக இந்துக்கள் பகுதியில் குடியமர்த்தப்படும் ஷெட்யூல்டு வகுப்பினருக்கும் பொருளாதாரச் சீரமைப்புக்கு என்ன ஏற்பாடுகள் செய்ய இந்துக்கள் தயாராக உள்ளனர்?

இந்த விஷயங்களைத் தெளிவுபடுத்தாவிடின், வங்காளம் மற்றும் பஞ்சாப் பிரிவினை குறித்து எவ்விதத் தெளிவான முன் முயற்சியையும் சம்மேளனம் எடுக்க முடியாது என்று மேலும் டாக்டர் அம்பேத்கர் கூறினார். - ஏ.பி . 1 ''[1]



---

1. தி டைம்ஸ் ஆப் இந்தியா, ஏப்ரல் 28, 1947.

# 24

# எந்த சமஸ்தானத்தையும் இறையாண்மை பெற்ற சுதந்திர அரசாக இந்திய அரசு அங்கீகரிக்காது

இந்தியாவை இறையாண்மை பெற்ற சுதந்திர அரசாக அறிவிக்க நடவடிக்கைகள் எடுக்கும்போது, மன்னர் ஆட்சி நடைபெறும் சமஸ்தானங்களின் நிலை என்ன என்ற கேள்வி எழுந்துள்ளது. பிரிட்டிஷ் அரசின் கீழிருப்பதால் தாங்களும் இறையாண்மை பெற்ற சுதந்திர நாடுகளாக அங்கீகரிக்கப் படுவோம் என சமஸ்தானங்கள் எண்ணின. திருவிதாங்கூரும் ஹைதராபாத்தும் முக்கிய சமஸ்தானங்களாக இருந்தன. இக்கருத்தை அமைச்சரவை தூதுக்குழுவும் ஆமோதித்துள்ளது. ஆனால் டாக்டர் அம்பேத்கர் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்ததோடு அமைச்சரவை தூதுக் குழுவின் கருத்து நாட்டிற்குப் பாதகமானது என்று விளக்கி அறிக்கை ஒன்றையும் வெளியிட்டுள்ளார். நாட்டின் இறையாண்மையைப் பாதுகாக்க எல்லா சமஸ்தானங்களும் இந்தியாவுடன் இணைக்கப்பட வேண்டும் என்று அவர் மேலும் வலியுறுத்தியுள்ளார். அவரது அறிக்கை வருமாறு : ஆசிரியர்கள்.

''இந்த சமஸ்தானங்கள் உச்சநிலை அதிகாரத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளும் ஒரே வழி இறையாண்மையை ஒன்றிணைப்பதுதான். இந்தியாவின் ஒரு பகுதியாக இந்திய சமஸ்தானங்கள் சேரும்போதுதான் இது சாத்தியமாகும். சில சமஸ்தானங்களின் சுதந்திரப் பிரகடனத்தை எதிர்த்து, வைஸ்ராயின் நிர்வாகக் குழுவில் முன்னாள் அமைச்சராக இருந்த பிரபல அரசமைப்பு வழக்கறிஞரான டாக்டர் அம்பேத்கர் ஓர் அறிக்கையில் இவ்வாறு கூறியுள்ளார். இந்திய சமஸ்தானங்கள் ஏற்கெனவே அவற்றுக்குரிய மேலாண்மையுடன் தொடர்ந்திருக்க முடியும். இந்தியா சுதந்திரம் பெற்றால் பிரிட்டிஷ் அரசின் மேலாண்மையில் அவை இருக்க வேண்டுமே தவிர, சுதந்திரம் பெற்ற நாடுகளாக ஆகமுடியாது என்று டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார். இறையாண்மை பெற்ற சுதந்திர நாடுகளாக அவர்கள் இருப்பது எந்தப் பயனும் அற்றது என்பதை

சமஸ்தானங்கள் உணர வேண்டும் என மேலும் அவர் கூறினார். அமைச்சரவைத் தூதுக்குழு 1946 மே 12ல் வெளியிட்டுள்ள அறிக்கையின் அடிப்படையில் தான் சமஸ்தானங்கள் அவற்றுக்குச் சுதந்திரம் கோர முன்வந்துள்ளன என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். எந்தச் சூழ்நிலையிலும் தன் உச்ச அதிகாரத்தை பிரிட்டிஷ் அரசு இந்திய அரசுக்கு மாற்றிக் கொடுக்கப் போவதில்லை என்று அந்த அறிக்கையில் கூறப்பட்டிருந்தது. அதாவது பிரிட்டிஷ் அரசுடனான அவர்கள் உறவுகளிலே உருவான எல்லா உரிமைகளும் இனி இருக்க மாட்டா என்பதுடன் உச்ச அதிகாரம் கொண்ட பிரிட்டிஷ் அரசிடம் சமஸ்தானங்கள் ஒப்படைத்திருந்த எல்லா உரிமைகளும் சமஸ்தானங்களுக்கே திரும்ப வரும்.

## விஷமத்தனமான கோட்பாடு

உச்ச அதிகாரத்தை இந்திய அரசுக்கு மாற்றம் செய்ய முடியாது என்ற கோட்பாடு விஷமத்தனமானது என்பதுடன் அது பிரச்சினையை முற்றிலும் தவறாகப் புரிந்து கொண்டதன் அடிப்படையிலுமாகும். வெஸ்ட்மினிஸ்டர் சட்டம் நிறைவேற்றப்பட்ட பின்பு, கனடா, ஆஸ்திரேலியா, தென் ஆப்பிரிக்கா மற்றும் அயர்லாந்து ஆகிய நாடுகள் டொமினியன் அந்தஸ்தைப் பெற்றன. குறிப்பிட்ட டொமினியன் அந்தஸ்துப் பெற்ற நாட்டின் அமைச்சரவையின் ஆலோசனைகளின் அடிப்படையிலேயே பிரிட்டிஷ் அரசு தனது உச்ச அதிகார உரிமைகளை செயல்படுத்தியது. அவ்வாறுதான் அவர்கள் செயல்பட வேண்டும். வேறு வழியில் செயல்பட முடியாது. இதே போன்று, இந்தியா டொமினியன் அந்தஸ்தை பெறும்போது, இந்திய அமைச்சரவையின் ஆலோசனைப்படியே பிரிட்டிஷ் அரசு தனது உச்ச அதிகார உரிமைகளைச் செயல்படுத்த வேண்டும். உச்ச அதிகாரம் மாற்றக் கூடியதல்ல என்ற கொள்கையை ஆதரிப்பவர்கள் 1833ஆம் ஆண்டு இந்திய அரசு சட்டத்தின் பிரிவு 239ன் விதிகள் 1935ஆம் ஆண்டு இந்திய அரசு சட்டத்தில் சேர்க்கப்படவில்லை என்பதையேக் காரணமாகக் கொண்டுள்ளன (1915-19 ஆண்டு இந்திய அரசு சட்டத்தின் 33வது பிரிவில் அவை சேர்க்கப்பட்டிருந்தன). அதன்படி இந்திய ராணுவ மற்றும் சிவில் அரசு (பிரிட்டிஷ் இந்திய ராணுவ மற்றும் சிவில் அரசிடமிருந்து வேறுபட்டு) ஆளுநரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. இந்திய அரசுக்கு உச்ச அதிகாரத்தை மாற்ற முடியாது என்ற முடிவுக்கு இந்த விதிகள் சேர்க்கப்படாததையே ஆதாரமாகக் காட்டி வாதிக்கின்றனர்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்ய அரசமைப்புச் சட்டப்படி ஒரு நாடு டொமினியன் அந்தஸ்து பெற்ற பிறகே பிரிட்டிஷ் அரசுக்கு ஆலோசனை கூறும் உரிமை கோர முடியும். டொமினியன் அந்தஸ்து பெறுவதற்கு முன்பு பிரிட்டிஷ் அரசு வேறு விதத்தில் ஆலோசனை பெறுவது அதன் கோரிக்கைக்குத் தடையாக இருக்க முடியாது. தன்னுடைய உச்ச அதிகாரத்தைச் செயல்படுத்த, ஆலோசனை கூற கடந்த காலத்தில் இந்திய அரசுக்கு அனுமதி அளிக்கப்படாவிடினும், ஆலோசனை கூறும் உரிமையை அரசமைப்புச் சட்டப்படி இழந்துவிட்டதாகக் கருத முடியாது.

## உச்ச அதிகாரம் ஒரு காலக்கெடுவுக்குள் தீர்ந்து விடுவதில்லை

இதுவரை, அமைச்சரவைத் தூதுக்குழுவின் அறிக்கையில் பிரிட்டிஷ் அரசு அதிகாரத்தை இந்திய அரசுக்கு மாற்ற முடியாது எனக் கூறும் பகுதியைக் குறித்தே விளக்கி வந்தேன். அமைச்சரவைத் தூதுக்குழுவின்படி உச்ச அதிகாரத்தின் காலக்கெடு முடிந்து போகும். இது மிகவும் அதிர்ச்சியூட்டும் அறிக்கையாக இருப்பதுடன், ஏற்கெனவே நிலவி வரும் அரசியலமைப்பு சட்டக் கொள்கை ஒன்றுக்கு முற்றிலும் முரணாகவும் உள்ளது. இந்தக் கொள்கைப்படி மன்னர் தமது உச்ச அதிகாரத்தை ஒப்படைக்கவோ, கைவிட்டு விடவோ முடியாது. பிரிட்டிஷ் உச்ச அதிகாரத்தை மாற்றம் செய்ய முடியாவிட்டால், அரசு அதை கைவிட்டுவிடவும் முடியாது. 1840ல் முடிவு செய்யப்பட்ட இராணியார் மற்றும் எடுல்ஜி பைராம்ஜி வழக்கில், எந்த சாசனத்தின் மூலமும் மன்னர் தமது உச்ச அதிகாரத்தை விட்டுவிட முடியாது என்கிற கொள்கையை அரசுப் பேரவை ஏற்றுக் கொண்டுள்ளது. (ப.294) மூரின் அரசுப் பேரவை வழக்குகள் 5 என்பதில் (பக்.276ல்) இது குறிப்பிடப் பட்டுள்ளது. எனவே மன்னர் உச்ச அதிகாரத்தைச் செயல்படுத்த மாட்டார் என்ற அமைச்சரவைத் தூதுக்குழுவின் அறிக்கை, பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் எந்த அரசியல் சட்டத்தால் ஆளப் படுகிறதோ அதற்கு முரணாக உள்ளது.

## இறுதியான ஒப்புதலளிப்பு

மேலும், உச்ச அதிகாரத்தைத் துறப்பதற்காக பிரிட்டிஷ் நாடாளுமன்றம் சட்டம் இயற்றுமானால் அது நியாயமற்றதாகும்.

இதற்கான காரணம் தெளிவானதே. உச்ச அதிகாரச் செயல்பாடுகளுக்கு இறுதியாக ஒப்புதலளிப்பது ராணுவந்தான். இது, இதுகாறும் பிரிட்டிஷ் இந்தியாவின் உதவியினால் வளர்க்கப்பட்ட இந்திய ராணுவந்தான். பிரிட்டிஷ் இந்தியாவின் பராமரிப்பிலும் வைஸ்ராய் மற்றும் இந்தியாவின் கவர்னர் ஜெனரலின் கீழ் இயங்கிவரும் சக்தி வாய்ந்த இந்திய ராணுவத்தின் உதவியின்றி, மன்னர் தம் உச்ச அதிகாரத்தைப் பாதுகாத்துக் கொள்ளவோ, செயல்படுத்தவோ முடியாது. இந்த அதிகாரங்கள் இந்திய மக்களின் நன்மைக்காக மன்னர் வைத்திருக்கும் அறக்கட்டளை போன்றது. அதை அழிக்க பிரிட்டிஷ் நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வருமானால் அது பெரும் அதிகாரத் துஷ்பிரயோகமேயாகும்.

இந்திய சமஸ்தானங்களின் விருப்பம் எதுவாகினும், இந்திய மக்களின் கடமை தெளிவாக உள்ளது என்று இறுதியாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். உச்ச அதிகாரத்தைத் துறப்பதற்கான சட்டம் எதையும் நிறைவேற்ற பிரிட்டிஷ் நாடாளுமன்றத்துக்கு உரிமை இல்லை என்றும், இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து வழங்க நிறைவேற்றப்படவுள்ள சட்டத்தில் இது போன்ற ஏதாவது பிரிவு இருந்தால் அது இந்தியாவின் இறையாண்மைக்கு எதிரானது என்று இந்திய மக்களால் கருதப்படும் என்றும் இந்திய அரசு ஒருபோதும் இந்திய சமஸ்தானங்களை இறையாண்மை பெற்ற சுதந்திர நாடுகளாகக் கருதாது என்றும் அவர்கள் சார்பாக மன்னர் அரசுக்கு அறிவிக்க வேண்டும்.[1]★



1. டைம்ஸ் ஆப் இந்தியா ஜூன் 18, 1947
மறுபதிப்பு கைர்மோட் தொகுதி 8, பக். 195-198.

★ அறிக்கை பற்றிய விமர்சனங்களை இணைப்பு IX,X ல் காண்க.

# பேரார் ஆகஸ்டு 15ல் நிஜாமுக்குத் திரும்பவும் வந்துவிடும்

## புதிய இந்திய மசோதா குறித்து டாக்டர் அம்பேத்கரின் விளக்கம்

மேன்மைதங்கிய மன்னர்பிரானின் இந்தியா மீதான மேலாதிக்க உரிமை ஆகஸ்டு 15ல் முடிவுக்கு வரும்போது பேராரை பிரிட்டிஷாருக்கு வழங்கிய உடன்படிக்கையும் முடிவுக்கு வந்து, அது நிஜாமுக்கு திரும்ப வந்து சேர்ந்துவிடும் என்று டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் கூறினார். கடந்த வாரம் டில்லியில் நடைபெற்ற பத்திரிகையாளர் கூட்டத்தில் சீர்திருத் தத்துக்கான ஆணையர் திரு.வி.பி.மேனன் அளித்த பதில்கள் குறித்தே மேற்கண்டவாறு கூறினார் டாக்டர் அம்பேத்கர்.

''திரு.மேனன் தெரிவித்த கருத்துகள் சரியாக இருக்கு மானால், புதிய திட்டத்தின்படி தங்கள் எதிர்காலம் எவ்வாறு இருக்கும் என்று அறிய ஆவலுடன் காத்திருக்கும் பேரார் மக்களுக்கு நிச்சயமாக மிகவும் மனநிறைவு தருவதாக இருக்கும் என்றார் அவர்.

கேள்வி இதுதான்: அவர் தெரிவித்த கருத்துகள் சரிதானா? மசோதாவின் கூறு 2 பிரிவு 7ல் உள்ள விதிகளைக் கணக்கி லெடுத்துக் கொண்டால் திரு.மேனன் தெரிவித்துள்ள கருத்துகள் குறிப்பிட்ட தேதியிலிருந்து அதாவது ஆகஸ்டு 15லிருந்து இந்தியா மீதான மேன்மைதங்கிய மன்னரின் மேலதிகாரம் பிரிவு 7ன் உட்பிரிவு 1 (பி) படி முடிவுக்கு வருவதுடன் ஒப்பந் தங்கள், வழக்கங்கள், சலுகைகள், இசைவுகள் அல்லது இதர விஷயங்களின் அடிப்படையில் மேன்மைதங்கிய மன்னர் செலுத்திவந்த அதிகாரங்கள் முடிவுக்கு வந்துவிடும். இந்த நிலையில் பேரார் சம்பந்தமான உடன்படிக்கை என்னவாகும்? பிரிட்டிஷாருக்கு பேராரை வழங்க அடிப்படையாக இருந்த உடன்படிக்கையும் நிச்சயமாக முடிவுக்கு வந்துவிடும்.

## கூறு 2 பேராருக்கும் பொருந்தும்

''இந்தக் கூறைக் குறித்த விளக்கம் சரியென்றால் ஆகஸ்டு 15ம் தேதி பேரார் நிஜாமிடம் திரும்ப ஒப்படைக்கப்படும். உட்பிரிவு (ஏ) ல் பேரார் தனிப்பட்ட முறையில் குறிப்பிடப் படவில்லை என்பதால் இந்தக் கூறு பேராருக்குப் பொருந் தாது என்று வாதிப்பது அதில் இல்லாத கட்டுப்பாட்டு விதியை இருப்பதாக நினைப்பதாகும். அந்த உட்பிரிவு மிகவும் பொதுவானதாக இருப்பதால் பேராரை அதில் விசேஷமாகக் குறிப்பிட வேண்டுமென்ற நோக்கமிருந்தால் மட்டுமே பேராரை விசேஷமாகக் குறிப்பிட்டிருக்க வேண்டும். இம்மாதிரி யான எந்த விதிவிலக்கும் இல்லாதிருப்பதால், பேரார் மற்றும் இந்திய சமஸ்தானங்களைச் சேர்ந்த எல்லாப் பகுதிகளிலும், ஒப்பந்தம் அல்லது உடன்படிக்கை எதன் மூலமாகவாவது பிரிட்டிஷ் இந்தியாவின் பகுதியாக உள்ள இடங்களிலும் உட் பிரிவு முழுவீச்சில் செயல்படும். பிரிவு 7ன் உட்பிரிவு 1 (பி)ன் உட்கருத்தை திரு.மேனன் காணத்தவறிவிட்டதால் பத்திரிகை யாளர்கள் கூட்டத்தில் அளித்த தமது பதில்கள் மூலம் ஒரு தவறான கருத்தை உருவாக்கிவிட்டார் என்றுதான் கூற வேண்டும்.

## நிலப்பரப்பு மாற்றங்கள்

நிஜாமுடன் புதிய ஒப்பந்தம் செய்து கொள்ளும் வரையில் பேராரின் நிலை மாறாது, அதே நிலையிலேயே இருக்கும் என்ற சர்தார் பட்டேலின் கூற்றும் அதே போன்று தவறானதுதான். ஏனெனில் நிலை விதியான பிரிவு 7ன் உட்பிரிவு 1ன் உட்கூறு (சி) நிலப்பகுதிகளின் மாற்றங்கள் குறித்த ஒப்பந்தங்கள், உடன்படிக்கைகள் ஆகியவைகளையும் சுங்கவரி, போக்குவரத்து, தகவல் பரிமாற்றம், தபால் தந்தி போன்றவைகளின் ஏற்பாடுகள் சம்பந்தமான விஷயங்களையும் வெவ்வேறு விதங்களில் பாதிக்கிறது. இரண்டாவதாகக் குறிப்பிட்ட விஷயங்கள் சம்பந்தமான ஒப்பந்தங்களுக்கு மட்டுமே அது விலக்களிக்கிறது. நிலப்பரப்பு மாற்றங்கள் சம்பந்தமான எந்த ஒப்பந்தத்திற்கும் அது விலக்களிக்கவில்லை. பேரார் சம்பந்தமான உடன்படிக்கை நிலப்பரப்பு மாற்றம் பற்றியதாகையால் பிரிவு 7ன் உட்கூறு 1 (பி) ன் பொதுவான விளைவுகளிலிருந்து விலக்களிக்கப் படவில்லை.

''பிரிவு 7 பற்றிய என் விளக்கம் தவறு என்று நிரூபிக்கப் பட்டால் என்னை விட மகிழ்ச்சியடையக்கூடியவர் யாரும் இருக்க முடியாது. இந்திய மக்களும் பேரார் மக்களும் பிரிவு 7ஐ அது எவ்வாறு உள்ளதோ அதே நிலையில் கவனத்தில் எடுத்துக் கொண்டு காமன்ஸ் சபையில் மசோதா விவாதத்திற்கு வரும்போது பிரதமர் திரு. அட்லியிடம் நேரடியான கேள்வியின் மூலம் இந்த விஷயத்திற்குத் தெளிவு பெறவேண்டும்.''எ.பி.[1]



1. டைம்ஸ் ஆப் இந்தியா, ஜுலை 8, 1947.

# 26

# எல்லைக்கோடு இயல்பான முறையில் வகுக்கப்படாவிட்டால் இந்திய மக்களின் பாதுகாப்பிற்கும், பத்திரத்திற்கும் பெரும் ஆபத்தாக முடியும்

*புது டில்லி, ஜுலை 20, 1947*

வங்காளம் மற்றும் பஞ்சாபின் பிரிவினை அம்மாகாண மக்களின் விருப்பத்திற்கு விட்டுவிடக்கூடிய பிரச்சினையல்ல. அது பாகிஸ்தான் மற்றும் இந்தியாவின் எல்லையை நிர்ணயிக்கும் விஷயம் என்று அவர் ஓர் அறிக்கையில் கூறியுள்ளார். முக்கியமாக பாதுகாப்பு மற்றும் நிர்வாக வசதிகளின் அடிப்படைகளைக் கருத்தில் கொண்டு அது நிர்ணயிக்கப்பட வேண்டும் என்றார் அவர்.

மேற்கு பஞ்சாப் மற்றும் கிழக்கு பஞ்சாப், மேற்கு வங்காளம் மற்றும் கிழக்கு வங்காளம் ஆகியவைகளுக்கிடையேயான எல்லைக் கோட்டை நிர்ணயிப்பது சம்பந்தமாக எழுந்துள்ள விவாதங்கள் குறித்து பத்திரிகை செய்திகளிலிருந்தும், முஸ்லீம்களும் இந்துக்களும் எல்லைக் கமிஷனுக்கு அளித்துள்ள மனுக்களிலிருந்தும் ஒரு விஷயம் தெளிவாகத் தெரிகிறது: அதாவது எல்லைக் கமிஷனின் முடிவு நாட்டிற்கு பேரழிவைக் கொடுக்கக் கூடும் என்பது தெரிகிறது.

''முதலாவது, பஞ்சாப் மற்றும் வங்காள மக்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுத் தங்களுக்குள்ளேயே முடிவு செய்து கொள்ளக்கூடிய ஸ்தல பிரச்சினையாக இது கருதப்பட்டு வந்துள்ளது. இரண்டாவதாக ஸ்தல மக்களால் நில அபகரிப்பு விஷயமாகவே இந்தப் பிரச்சினை கருதப்பட்டு வந்துள்ளது. இந்த நில அபகரிப்பு போட்டியில், முஸ்லீம்களற்ற பகுதிகளில் முஸ்லீம்கள் அல்லாதோர் வாழும் இடங்களைக் காணவும் வெறியுடன் தேடுதல் வேட்டை நடைபெற்றது. இதன் மூலம் தேசிய எல்லைக் கோட்டை முன்னுக்குப் பின்னுக்குத் தள்ளி

முஸ்லீமற்ற பகுதிகளுக்கு எவ்வளவு முஸ்லிமல்லாதோரை கொண்டுவர முடியுமோ அவ்வளவு கொண்டுவரவும் முஸ்லீம் பகுதிகளுக்கு எவ்வளவு முஸ்லீம்களைக் கொண்டு வர முடியுமோ அவ்வளவு முஸ்லீம்களைக் கொண்டுவரவும் முயற்சிகள் நடக்கின்றன. இந்த இருவிதப் போக்குகளுமே எனக்குத் தவறானவையாகத் தோன்றுகின்றன.

பாகிஸ்தானும் இந்துஸ்தானும் ஒரே மாதிரியான நாடுகள் என்றால் மக்கள் கூட்ட திட்டுக்களுக்கு ஏற்ப தேசிய எல்லை களை மாற்றியமைப்பது நியாயமானதாகக் கருதப்படலாம். இது பிரிவினையின் அடிப்படையல்ல என்பது காங்கிரஸோ அல்லது முஸ்லீம் லீகோ மக்களை இடம் மாற்றிக் குடியேற்ற வேண்டும் என்ற நிபந்தனையை விதிக்கவில்லை என்பதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. எவ்விதத்தில் தேசிய எல்லையை மாற்றி வெட்டித் திருத்தி அமைத்தாலும் கணிசமான எண்ணிக்கை யிலான முஸ்லீம் அல்லாதவர்கள் பாகிஸ்தானிலும் அதிக அளவிலான முஸ்லீம்கள் இந்தியாவிலும் தொடர்ந்து வசிப் பார்கள். எனவே தன் இனத்தவரை அதிக அளவில் கொண்டு வருவதற்காக எல்லையில் மாற்றம் செய்ய முயல்வது தவறான வழியில் செல்வதாகும்.

## பாது.காப்பு

இரண்டாவதாக, பாகிஸ்தானும், இந்தியாவும் இரண்டு சுதந்திரமான இறையாண்மைபெற்ற நாடுகளில்லையென்றால் இதை ஸ்தலப் பிரச்சினையாகக் கருதலாம். ஆக்கிரமிப்பு, படை யெடுப்பு என்ற நிலை ஏற்பட்டால் அவை ஒவ்வொன்றும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்ற உண்மையை மறந்துவிடக்கூடாது.

இந்த கண்ணோட்டத்தில் விஷயத்தை அணுகினால் பஞ்சாப் மற்றும் வங்காளத்தின் பிரிவினை ஓர் உள்ளூர் விவகாரமல்ல என்பதையும் பாகிஸ்தான் மற்றும் இந்தியாவின் எல்லையை நிர்ணயிக்கும் பிரச்சினை இதில் அடங்கியிருப்பதை யும் காணலாம். எனவே இது பாதுகாப்பு மற்றும் நிர்வாக வசதிகளுக்க சாதகமான முறையில் தீர்மானிக்கப்பட வேண்டு மென்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

இந்தக் காரணத்தின் அடிப்படையில் பாகிஸ்தான் அரசும் இந்திய அரசுமே எல்லைக் கமிஷன் முன் ஆஜராக வேண்டிய கட்சிகள் என்பது மட்டுமல்ல, அவை அவசியமான கட்சிகளுங்கூட. பாகிஸ்தானையும் இந்தியாவையும் பிரிக்கும் எல்லைக் கோடே இந்தியாவின் எல்லையாக உள்ளதால், எல்லைக் கமிஷனில் ராணுவ அதிகாரிகள் இருக்க வேண்டுமென்று இந்திய அரசின் பாதுகாப்புத்துறை வலியுறுத்தியிருக்க வேண்டும். இரண்டு நாடுகளின் எல்லைகளை முடிவு செய்வதில் இது வழக்கமாக கடைப்பிடிக்கப்படுகின்றது.

இந்திய அரசின் பாதுகாப்புத் துறை இதைச் செய்யத் தவறியதுடன் பாதுகாப்பு மற்றும் நிர்வாக விஷயங்களின் கண்ணோட்டத்தில் தங்களுடைய கருத்துகளை எல்லைக் கமிஷனின் முன்வைக்கக்கூட அக்கறை காட்டவில்லை. எல்லைகளைக் கண்காணிக்கும் பொறுப்பு கிழக்கு பஞ்சாபினுடையதோ அல்லது மேற்கு வங்காளத்துடையதோ அல்ல என்பதை அவர்கள் மறந்துவிட்டதாகத் தெரிகிறது. ஆரம்பத்திலிருந்து கடைசிவரை இந்திய அரசுக்கே அதிகப் பொறுப்புள்ளது. எல்லைகளை நிர்ணயிப்பதில் தன்னுடைய கருத்தை வலியுறுத்துவதில் பாதுகாப்புத் துறைக்கு அதிக அக்கறை உள்ளது.

## இயற்கையான எல்லைகள்

பாதுகாப்பு மற்றும் நிர்வாகக் கண்ணோட்டத்தில் பார்த்தால் பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் இடையேயான எல்லைகள் இயற்கையான எல்லைகளாக இருக்க வேண்டும். அதாவது ஒரு ஆறு செல்லும் வழியாகவோ அல்லது மலையாகவோ இருக்க வேண்டும். எல்லைக் கமிஷனுக்கு அளிக்கப்பட்டுள்ள மனுக்களில் எழுப்பப்பட்டுள்ள வாதங்களின் தன்மைகளைப் பார்த்தால் மேற்குறிப்பிட்ட காரணக் கூறுகள் அதற்குரிய கவனத்தைப் பெறாது என்பது தெளிவாகிறது.

அவை பொருட்படுத்தப்படாமல் விடப்பட்டதுமன்றி அவை குறிப்பிடப்படவுமில்லை. எல்லைக் கமிஷனின் முயற்சியில் உருவாகும் பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் இடையேயான எல்லை, அதனால் உடனடியாக பாதிப்புக்குள்ளாகும் மக்களுக்கு எவ்வளவு திருப்திகரமாக இருந்தாலும் இந்தியாவின் கண்ணோட்டத்தில் மிகவும் அதிருப்தி அளிப்பதாகவே இருக்கும்.

என்னுடைய அச்சம் உண்மையாகிவிட்டால், கமிஷன் தீர்மானிக்கும் எல்லை இயற்கையானதாக இல்லாதிருந்தால், அதைப் பராமரிப்பதற்கு இந்திய அரசு அதிக விலை கொடுக்க வேண்டுமென்பதுடன் இந்தியாவின் பாதுகாப்புக்கும் பந்தோபஸ்திற்கும் பெரும் ஆபத்தாக அது இருக்கும் என்பதைக் கூற தீர்க்கதரிசிகள் யாரும் வர வேண்டியதில்லை. எனவே காலம் கடந்துவிட்டாலும் பாதுகாப்புத்துறை விழித்தெழுந்து காலந்தாழ்த்தாது தன் கடமையைச் செய்யும் என நம்புகிறேன்.--ஏ.பி.ஐ.''[1]



1 : ஃபிரீ பிரஸ் ஜர்னல், ஜூலை 21, 1947.

# 27

# சட்டத்தின் முன் இந்திய மக்கள் அனைவரும் சமமே

## அலேன் கேம்பலுடன் டாக்டர் அம்பேத்கரின் நேர்காணல்

*''அரசு இல்லம், புது டில்லி*
*சனிக்கிழமை, ஏப்ரல் 24, 1948''*

''டில்லி ஜிம்கானா கிளப்பின் ஒளிவிளக்குகளின் பிரகாசத்தில் புல்வெளியில் அவர்களும் நானும் விருந்துண்டோம். எங்களுக்கு விருந்தளித்த, டில்லியில் பிரபலமாக உள்ள பத்திரிகையாளர் திரு.கிருஷ்ணா பல பிரமுகர்களை அழைத்திருந்தார். கடந்த இருபதாண்டுக் காலமாக இந்திய அரசியல் வானில் ஒளி நட்சத்திரமாக விளங்குபவரும், தீண்டத்தகாதவர்களின் தலைவரும், சட்டத் துறை அமைச்சருமான டாக்டர் அம்பேத்கர்தான் அன்றைய முக்கிய விருந்தினராவார். சட்டப் புத்தகங்களிலிருந்து தீண்டத்தகாதவர் என்ற இழி சொல்லை இறுதியாக நீக்க வந்துள்ள இந்தியாவின் புதிய அரசியல் சட்டத்தை உருவாக்குபவர்களில் முக்கியமானவர். தீண்டத்தகாதவரான அவர் தன்னுடைய விடுதலையின் பகுதியாக சமீபத்தில்தான் பிராமண வகுப்பைச் சார்ந்த பெண் மருத்துவர் ஒருவரை மணந்திருந்தார். நூற்றாண்டுக் கால பழக்கத்தை ஒரே நொடியில் மாற்ற முடியாதாகையால் இந்த நிகழ்ச்சி பெரும் புயலைக் கிளப்பியது. இந்த மாலைப் பொழுதில் அவர் மனைவி அவருடனே இருந்தார். எனினும் பல இந்திய பெண்களின் பழக்கத்தைப் போன்று இந்த மாதிரியான பொது நிகழ்வுகளில் அவர் ஒன்றும் பேசுவதில்லை.

டாக்டர் அம்பேத்கர் மிக விரிவான விளக்கம் அளித்தார். புதிய அரசியல் சட்டத்தின் சில அம்சங்களைக் குறித்து தெளிவான விளக்கமளித்தார். எடுத்துக்காட்டாக நீதித்துறைக்கு ஒதுக்கப்பட்டுள்ள சிறப்பதிகாரங்கள் அமெரிக்க உச்ச நீதிமன்றம் அனுபவித்து வரும் அதிகாரங்களைவிட அதிகமானவை என்று குறிப்பிட்டார். 1935 ஆம் ஆண்டுச் சட்டத்தின் நிலைத்து நிற்கும்

தன்மைக்கு சான்றாக அதிலிருந்து இருநூற்று ஐம்பது கூறுகள் புதிய அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டினார்.

அமைச்சரவை அரசு குறித்து விவாதித்தோம். தற்போதைய முறை இந்தியாவில் மிகவும் மெதுவாகச் செயல்படுவதாக உள்ள குற்றச்சாட்டைக் குறிப்பிட்டார். இரண்டு துறைகளை பாதிக்கும் கொள்கை விஷயங்களை சம்பந்தப்பட்ட அமைச்சர்கள் பேசி உடனடியாக முடிவு செய்துவிடலாம் என அவர் கருதினார். செடிஸ் பிரேரணைகள் மற்றும் துறைத் தலைவர்கள் குழு தங்கள் கீழ் பணியிலிருந்த துறைகளற்ற அமைச்சரவை தலைவர்களை வைத்துக்கொள்வது குறித்து விளக்கினார். புதிய அரசியல் சட்டம் இறுதியாக நிறைவேறுமுன் மவுண்ட்பேட்டன் பிரபு இந்தியாவை விட்டுச் செல்வது குறித்து அவர் வருத்தம் தெரிவித்தார். அரசியல் நிர்ணய சபைக்கு வெளியே காமன்வெல்த் பிரச்சினை முடிவு செய்யப்படலாம் என அவர் கருதினார்.

மவுண்ட்பேட்டன் பிரபு பதவியில் இருக்கையில் விரிவாக விவாதிக்கப்பட்டுத் தயாரிக்கப்பட்ட இந்திய அரசியல் சாசனம் மேற்கத்திய சுதந்திர சாசனங்களின் ஒரு கூட்டிணைப்பாகும். இந்த சாசனத்தின் கனவிற்கும் இந்திய வாழ்க்கையின் உண்மையான நிலைக்கும் இடையேயான இடைவெளி இந்தக் கனவுகள் சாத்தியமாகும் தன்மையை அழித்தவிடவில்லை. பிரிட்டிஷ் சிந்தனையின் சுதந்திர செல்வாக்கிற்கு ஒரு புகழாரமாக அது திகழ்கிறது. இன மற்றும் சாதி வெறி நோக்கங்களுக்கு எதிரான அடிப்படையான தாக்குதலைத் தொடுக்கிறது இந்த அரசியல் சாசனம். இந்து மத கோட்பாடுகளின் கீழ் தங்கள் நிழல்களினாலேயே உணவை அசுத்தப்படுத்திவந்த வெறும் தாழ்த்தப்பட்டவர்களாக இருந்த 80 கோடி தீண்டத்தகாதவர்களுக்கு இந்திய அரசியல் சாசனம் ஒரு புதிய நம்பிக்கையை அளிக்கிறது. இப்பொழுது அவர்கள் சட்டத்தின் முன் சம உரிமை உள்ள இந்தியக் குடிமக்கள். நேரு அரசின் முக்கிய உறுப்பினர், அரசியல் சாசனத்தை தயாரிப்பதில் முக்கிய பங்காற்றியவர், தீண்டத்தகாதவர்களின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் ஆவார்.''[1]



1. மவுண்ட்பேட்டனுடன் ஒரு சந்திப்பு, பக். 361, 362 அலேன் கேம்பல் ஜான்ஸன்
மறுபதிப்பு, கைர்மோட், தொகுதி 10, பக்கம் 36 - 38.

# 28

# மத்தியிலும் மகாகாணங்களிலும் ஒரே ஆட்சி மொழி

*பம்பாய், அக்டோபர் 15, 1948 (ஏபி)*

மொழிவாரி மாகாணங்களுக்கான ஆணையத்திடம் இந்தியாவின் சட்டத்துறை அமைச்சர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் அளித்த அறிக்கையில் மாகாணங்களை மொழிவாரி ரீதியில் மாற்றியமைக்கக் கோருவதை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும், ஒவ்வொரு மாநிலத்தின் ஆட்சி மொழியும் மத்திய அரசின் ஆட்சி மொழியாகவே இருக்க வேண்டும் என அரசியல் சட்டத்தில் வகை செய்யப்பட வேண்டும் என்றும் கூறியுள்ளார்.

இந்தியாவின் ஒற்றுமை சிதைந்துவிடாமலிருக்க அந்த அடிப்படையில்தான் தாம் மொழிவாரியாக மாகாணங்களைப் பிரிப்பதை ஏற்றுக் கொண்டுள்ளதாக டாக்டர் அம்பேத்கர் கூறியுள்ளார்.

மொழி அடிப்படையிலான மாகாணம் ஜனநாயகத்திற்குத் தேவையான சமூகச் சீரமைப்பை அளிக்கிறது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். மாறுபட்ட கூறுகளைக் கொண்ட சமூகத்தில் ஜனநாயகம் வெற்றிபெற முடியாததற்குக் காரணம் அதிகாரம் பாரபட்சமற்ற முறையில் உபயோகப்படுவதுற்குப் பதிலாக மற்றவருக்கு தீங்கு இழைப்பதற்காகப் பயன்படுத்தப்படுகிறது.

மகாராஷ்டிர மாநிலத்தின் பரப்பளவு மற்றும் மக்கட் தொகை சம்பந்தமான புள்ளி விவரங்களைக் குறிப்பிட்டு அந்த மாநிலம் நீடித்து நிலைக்கக்கூடிய மாநிலம் என்பது மட்டுமல்ல பரப்பளவு, மக்கள் தொகை, வருவாய் ஆகியவற்றில் வலுவான மாநிலமுமாகும். மகாராஷ்டிராவில் உள் மாகாணங்களை உருவாக்க வேண்டும் என்ற கருத்தை அவர் மறுத்ததுடன் சாதாரண நாட்களில் அது நிரந்தரமான பெரும் சுமையாக இருக்கும், நெருக்கடி நாட்களில் அது பலவீனமாகவும் இருக்கும் என்றார்.

வரப்போகும் மகாராஷ்டிர மாநிலத்தில் பம்பாயைச் சேர்ப்பதற்கு எதிராக எழுதப்பட்டுள்ள பத்திரிகைக் கட்டுரைகளுக்கு விரிவாகப் பதிலளித்து மகாராஷ்டிராவும் பம்பாயும் ஒன்றையொன்று சார்ந்திருப்பதோடல்லாமல் பிரிக்க முடியாத முழுமையான ஒன்று என்றும், அவை இரண்டும் பிரிக்கப்பட்டால் இரண்டுக்குமே அழிவுதான் என்றும் அவர் வாதிட்டுள்ளார். ''மகாராஷ்டிராவிலிருந்து பம்பாயைப் பிரிக்க வேண்டுமென்ற வாதத்தை கமிஷன் ஏற்றுக் கொள்ளுமானால் அது மேற்கு வங்காளத்திலிருந்து கல்கத்தாவைப் பிரிக்க வேண்டுமென்று சிபாரிசு செய்யத் தயாராக இருக்க வேண்டும். ''பம்பாயின் வர்த்தகத்திலும் தொழில் துறையிலும் முதலீடு செய்யாவிடினும் அதற்குத் தேவையான தொழிலாளர்களைக் கொடுத்ததை மகாராஷ்டிரர்கள் பெருமையாகக் கூறிக்கொள்ள முடியும். வங்காளிகள் இவ்வாறு கூற முடியாது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.''[1]



1 : சண்டே க்ரானிக்கில், அக்டோபர் 17, 1948.

# 29

# இந்தியாவும் பிரிட்டிஷ் காமன்வெல்த்தும்

நிதி அமைச்சர்
இந்தியா.

புது டில்லி, எண் 8195-ஆபி/48

நவம்பர் 19, 1948

அன்புக்குரிய அம்பேத்கர் அவர்களுக்கு,

இந்தியா மற்றும் பிரிட்டிஷ் காமன்வெல்த் குறித்த உங்கள் சிறுகுறிப்பினை எமக்கு அனுப்பித் தந்தமைக்கு மிக்க நன்றி. ஒரு சிக்கலான பிரச்சினை குறித்த திறமையான, தெளிவான ஆய்வை நான் மிகுந்த ஆர்வத்துடன் படித்தேன்.

அந்தக் குறிப்பு இத்துடன் திரும்ப அனுப்பப்பட்டுள்ளது.

உங்கள் உண்மையான
(கையொப்பம் தெளிவாக இல்லை)

மேதகு டாக்டர் அம்பேத்கர்
சட்டத்துறை அமைச்சர், இந்திய அரசு,
புதுடில்லி.

(மறுபக்கத்திலுள்ள குறிப்பைப் பார்க்கவும்)

---

இந்தத் தாளைப் பொறுத்தமட்டில், மகாராஷ்டிர மாகாணத்தின் நிர்வாக அதிகாரியிடமிருந்து 1979ல் அரசு பெற்றுள்ள ஆவணங்களில் இது காணப்பட்டதாக அன்றைய சிறப்புப் பணித்துறை அலுவலர் குறிப்பிட்டுள்ளார்.

'இந்தியாவும் பிரிட்டிஷ் காமன்வெல்த்தும்' என்ற குறிப்பு இந்தியாவின் நிதி அமைச்சருக்கு டாக்டர் அம்பேத்கரால் அனுப்பப் பட்டது. அது ஒரு உள்ளடக்க விளக்கக் கடிதத்துடன் திரும்ப அனுப்பப் பட்டது. ஆனால் கையெழுத்துத் தெளிவாக இல்லை. - ஆசிரியர்கள்.

# இந்தியாவும் பிரிட்டிஷ் காமன்வெல்த்தும்

## 1. தொடர்புக்கான அவசியம்

இந்தியாவுக்கும் பிரிட்டிஷ் காமன்வெல்த்துக்கும் இடையே தொடர்பு நிறுவுவது சம்பந்தமான பிரச்சினையை கவனிக்கையில் இரண்டு கேள்விகளைத் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது. முதலாவது, பிரிட்டிஷ் காமன்வெல்த்துடனான எல்லாத் தொடர்பு களையும் இந்தியா முறித்துக் கொண்டு இறையாண்மை பெற்ற சுதந்திர நாட்டு அந்தஸ்தைப் பெறவேண்டுமா? இரண்டாவதாக, பிரிட்டிஷ் காமன்வெல்த்துடனான எல்லாத் தொடர்புகளையும் துண்டிக்க வேண்டாமென்றால் இந்தியாவுக்கும் பிரிட்டிஷ் காமன்வெல்த்துக்குமிடையேயான உறவுகள் எப்படி இருக்க வேண்டும்?

2. முதலாவது கேள்வியைப் பொறுத்தவரையில் எந்த விதமான கருத்து வேற்றுமையும் இருக்க முடியாது. பிரிட்டிஷ் காமன்வெல்த்துடன் இந்தியாவுக்குள்ள தொடர்புகளை முறித்துக் கொள்ள சில தீவிரவாதிகளைத் தவிர பெரும்பான்மையினர் விரும்ப மாட்டார்கள். இந்தத் தொடர்புகள் தொடர வேண்டும் என்று இந்தியா மட்டுமன்றி காமன்வெல்த்தும் விரும்புகிறது. இந்தியா காமன்வெல்த்துடனான தொடர்புகளை முறித்துக் கொள்ளக்கூடாது. இந்தியாவுக்கும் காமன்வெல்த்துக்குமான தொடர்புகள் காமன்வெல்த்துக்கே மிகவும் இன்றியமையாதது. காமன்வெல்த்தின் பாதுகாப்பு இந்தியாவுடனான அதன் தொடர்பு களைச் சார்ந்துள்ளது. அதே நேரத்தில் இந்தியா அலட்சியப் போக்கைக் கைக்கொள்வது இந்தியாவுக்கு நல்லதல்ல. காமன் வெல்த்தின் தொடர்புகள் இல்லையென்றால் அதற்கும் நல்லதல்ல. வெளியிலிருந்து கட்டளைகள் ஏதுமின்றி சுதந்திரமான வழியில் தன் விதியைத் தீர்மானித்துக் கொள்ளும் ஒரு சுதந்திர நாடாக உலக விவகாரங்களில் அதன் குரல் ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இருப்பதற்கு இரண்டு விஷயங்கள் இந்தியாவுக்கு தேவைப் படுகின்றன. இந்த நிலையை அடையாவிட்டால் சுதந்திர இந்தியா சுதந்திரமாக இருக்க முடியாது. இந்தியா தொழில்மயமாக்கப் படுவதுடன் தற்காப்புக்கும் தாக்குதலுக்கும் தேவையான அளவு பாதுகாப்புத் துறையில் முன்னேற்றம் அடைந்தாலொழிய இந்த நிலையை அடைய முடியாது. இந்தக் குறிக்கோளை

அடைவதற்கு தன்னிடமில்லாத, வெளிநாட்டு உதவியின்றி பெறமுடியாத தொழில்நுட்ப உபகரணங்களை இந்தியா பெற வேண்டும். எந்த ஒரு தரப்பையும்விட காமன்வெல்த் நாடுகள் இந்த வெளிநாட்டு உதவியைத் தாராளமாக இந்தியாவுக்கு அளிக்கும். எனவே இந்தியா தனது சொந்த நலனுக்காக பிரிட்டிஷ் காமன்வெல்த்துடன் தொடர்புகளை வைத்துக் கொள்ள வேண்டும்.

## II. தேசிய அந்தஸ்தும் டொமினியன் அந்தஸ்தும்

3. இருப்பினும் இரண்டாவது கேள்விக்கான தீர்வு அவ்வளவு எளிதல்ல. அது பல கேள்விகளை எழுப்புகிறது. இந்தியா ஒரு தேசிய அந்தஸ்தைப் பெற்றுள்ளது. அதை டொமினியன் அந்தஸ்தாக மாற்ற வேண்டுமா? முதலாவது தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினை இதுதான். சாதாரணக் கண்ணோட்டத்தில் பார்த்தால் இதற்கு எந்தக் கஷ்டமும் இருக்க முடியாது. சாதாரண முறையில் தேசிய அந்தஸ்திற்கும் டொமினியன் அந்தஸ்திற்கும் இடையே எந்த வேறுபாடும் கிடையாது. டொமினியன் அந்தஸ்தை எந்த முறையிலும் தாழ்வான அந்தஸ்து எனக் கூற முடியாது. ஒவ்வொரு டொமினியனும் சுய ஆட்சி பெற்றவை; சுதந்திரமானவை; மற்றும் இதர டொமினியன் அந்தஸ்துக்கு சமமான அந்தஸ்துப் பெற்றவை. காமன்வெல்த் என்ற அமைப்பில் டொமினியன் நாடுகளில் பிரிட்டன் ஒன்றாகும். சமீபத்தில் நிகழ்ந்த இரண்டு நிகழ்வுகளிலிருந்து ஒவ்வொரு டொமினியனும் எவ்வளவு சுதந்திரமானவை, சுய ஆட்சி பெற்றவை என்பதைப் பார்க்கலாம். ஒன்று, தென் ஆப்பிரிக்கா சம்பந்தமானது. காமன்வெல்த்தின் மற்ற நாடுகளிலிருந்து எட்வர்டு மன்னர் VII பதவி நீங்கினாலும் இரண்டு நாட்கள் கழித்தே தென் ஆப்பிரிக்காவிலிருந்து தம் பதவியைத் துறந்தார். மற்றொன்று அயர்லாந்து சம்பந்தமானது. கடந்த போரில் எல்லா டொமினியன் நாடுகளும் யுத்தத்தில் ஈடுபட்டபோது அயர்லாந்து மட்டும் நடுநிலை வகிக்க தீர்மானித்தது. ஒவ்வொரு டொமினியன் நாட்டின் சுதந்திரமும் எவ்வளவு உண்மையானது, எவ்வளவு பயனளிக்கூடியது என்பதைக் காட்ட இதைவிட சான்று எதுவும் தேவையில்லை. தேசிய (குடியரசு) அந்தஸ்து சமமாகவே உள்ளது.

4. தேசிய அந்தஸ்தை பெற்றுள்ள இந்தியா டொமினியன் அந்தஸ்தை ஏற்றுக்கொள்ளலாமா என்பதே கேள்வி. இது முடியாது என்பதே என் கருத்து. இதற்கான காரணங்கள் தெளிவாக உள்ளன. அவை அரசியல் சட்ட அமைப்பு மற்றும் உளஇயல் புகள் சார்ந்தவையாகும். டொமினியன் அந்தஸ்தின் அடிப்படைக் கூறுகள் மூன்று. அவையாவன: . 1. அரசரிடம் பொதுவான விஸ்வாஸத்தை ஏற்றுக்கொள்வது, 2. தாம் நியமிக்கும் கவர்னர் ஜெனரல் மூலம் செயல்படும் மன்னரை டொமினியனின் தலைவராக ஏற்றுக் கொள்வது. 3. டொமினியன் நாடாளுமன்ற உறுப்பினர்கள் அரசர் மீது சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொள்வது. ஒவ்வொரு டொமினியனின் அரசியல் சட்ட அமைப்பை எடுத்துக் கொண்டாலும் இந்த மூன்று கூறுகளும் அதனுள் அடங்கியிருக்கும்.

5. சுதந்திர இந்தியாவுக்காக அரசியல் நிர்ணய சபை பரிசீலித்து வரும் வரைவு அரசியல் சாசனத்தில் இந்த மூன்றில் எந்தக் கூறும் அங்கீகரிக்கப்படவில்லை. வரைவு அரசியல் சாசனத்தின் முகப்புரையில் இந்தியாவை ஓர் இறையாண்மை பெற்ற சுதந்திரக் குடியரசாகக் குறிப்பிட்டுள்ளது. நாட்டின் தலைவராக மன்னரை ஏற்றுக்கொள்வது ''குடியரசு'' என்ற சொல்லைப் பயன்படுத்துவதற்கு எதிர்மறையானது. வரைவு அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி குடியரசுத் தலைவர் நாட்டின் தலைவராக இருப்பார்; அரசரல்ல. குடியரசுத் தலைவர் மன்னர் பிரானின் பிரதிநிதியல்ல. அவர் இந்திய மக்களின் பிரதிநிதி. இந்திய நாடாளுமன்ற உறுப்பினர்கள் எடுத்துக் கொள்ள வேண்டிய சத்தியப் பிராமாணம் மன்னர் மீதல்ல. இந்திய அரசியல் சாசனத்தின் மீதாகும். இவ்வாறு, டொமினியன் அரசியல் சாசனம் எப்படியிருக்க வேண்டுமோ அதற்கு முற்றிலும் அடிப்படையில் மாறுபட்டது வரைவு அரசியல் சாசனம். அதற்கு டொமினியன் அரசியல் சாசனத்திலுள்ள மூன்று கூறு களும் தேவைப்படுகின்றன. இந்தியா டொமினியன் அந்தஸ்தை ஏற்றுக் கொள்வதில் உள்ள கஷ்டங்களில் இது ஒன்றாகும். ஓடிக் கொண்டிருக்கும் காரை பின்னுக்குச் செலுத்துவது எப்பொழு துமே கஷ்டந்தான். அதுவும் அந்தக் கார் குன்றின் உச்சியிலிருந்து கீழே இறங்கி ஓடும்போது சாத்தியமற்றதுதான்.

6. மற்ற கஷ்டம் உளரீதியானது. ஒரு வேற்றுநாட்டு மன்னரை நம் தலைவராக ஏற்றுக் கொள்வதா? டொமினியன் அந்தஸ்து பெற்ற நாடுகளிலுள்ள மக்களுக்கும், இந்திய

மக்களுக்கும் இடையே கலாசார மற்றும் சமூக ரீதியில் பொதுவான அம்சங்கள் உள்ளனவா? பிரிட்டிஷ் காமன்வெல்த்திலிருந்து பிரிட்டிஷ் என்பதை எடுத்துவிட்டாலும் அதன் விசுவாசம் பிரிட்டனிடம் இருப்பதுடன் அது வெள்ளையர்களையே கொண்டுள்ளது. இந்த மாதிரியான காமன்வெல்த்தில் இந்தியா இயற்கையாக செயல்பட முடியுமா? காமன்வெல்த்துடன் தொடர்புகளை தொடர்ந்து வைத்துக் கொள்ள வேண்டுமென்று எவ்வளவுதூரம் விரும்பினாலும் இந்தியா காமன்வெல்த்தில் நிம்மதியாக இருக்க முடியாது.

## III. டொமினியன் அந்தஸ்தின் திருத்தப்பட்ட மாதிரி

7. இந்தியா டொமினியன் அந்தஸ்து பெறாது இந்தத் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள முடியாதென்றால் வேறு வழி என்ன உள்ளது? 1948 ஆம் ஆண்டு பிரிட்டிஷ் குடியுரிமைச் சட்டத்திலும் மற்றும் 1946 ஆம் ஆண்டு கனடா நாட்டு குடியுரிமைச் சட்டத்திலும் கொடுக்கப்பட்டுள்ள மாற்றுவழிதான் இதற்கு தீர்வாகும். அந்த சட்டத்தின் பிரிவு 1 பின்வருமாறு :

''குடியுரிமை என்ற முறையில் பிரிட்டிஷ் குடிமகன் என்பவர் -

(1) இந்தச் சட்டத்தின்படி பிரிட்டிஷ் கூட்டரசின் அல்லது காலனிகளின் குடிமகன்களும் அல்லது அடுத்து வரும் உட்பிரிவில் குறிப்பிட்டுள்ள நாடுகளின் நடைமுறையிலுள்ள ஏதாவது சட்டத்தின்படி அந்நாட்டின் குடிமகனாக உள்ள ஒவ்வொரு நபரும் அந்தத் குடியுரிமை காரணமாக பிரிட்டிஷ் குடிமகனாகிறார். மேற்குறிப்பிட்டுள்ள குடியுரிமை பெற்றுள்ளவர்கள் பிரிட்டிஷ் பிரஜை என்றோ அல்லது காமன்வெல்த் குடிமகன் என்றோ அழைக்கப்படலாம். எனவே இந்தச் சட்டத்திலும் அல்லது இந்தச் சட்டம் நடைமுறைக்கு வருவதற்கு முன்போ அல்லது பின்போ நிறைவேற்றப்பட்ட அல்லது தயாரிக்கப்பட்ட வேறு சட்டம் எதிலாவது அல்லது ஆவணத்திலாவது ''பிரிட்டிஷ் பிரஜை'' மற்றும் காமன்வெல்த் குடிமகன் என்பதும் ஒரே பொருளைக் குறிக்கிறது.

(2) மேலே குறிப்பிடப்பட்ட நாடுகள் வருமாறு - கனடா, ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து, தென்ஆப்ரிக்க யூனியன்,

நியூபவுண்ட்லேண்ட், இந்தியா, பாகிஸ்தான், தென் ரொடிஷியா, மற்றும் சிலோன் ஆகியவையாகும்.

இது சம்பந்தமான கனடா குடியுரிமை சட்டத்தின் பிரிவுகள் 4, 5 மற்றும் 26 ஆகும்.

**4. இந்தச் சட்டம் அமலுக்கு வருவதற்கு முன்பிறந்தவர்**

(அ) கனடாவிலோ அல்லது கனடா நாட்டுக் கப்பல் ஒன்றிலோ பிறந்து இந்தச் சட்டம் அமலுக்கு வரும்போது வெளிநாட்டவராக மாறாதவர்; அல்லது

(ஆ) கனடா நாட்டுக் கப்பல் தவிர கனடாவுக்கு வெளியே எங்கேயாவது பிறந்து தகப்பனார் அல்லது திருமணத்திற்கு வெளியே பிறந்திருந்தால் தாயார் -

(1) கனடா அல்லது கனடா கப்பலில் பிறந்திருந்து அவர் பிறந்த நேரத்தில் ஒரு வெளிநாட்டவராக ஆகாமலிருந்தால்,

(2) அந்த நபர் பிறந்த போது பிரிட்டிஷ் பிரஜையாக இருந்து கனடா நாட்டு குடியிருப்புரிமை பெற்றவராக இருந்தால்,

இந்தச் சட்டம் அமலுக்கு வரும்போது அந்த நபர் வெளிநாட்டவராக மாறாமலிருந்தால், கனடாவுக்குள் நிரந்தர குடிமகனாகச் சேர்க்கப்பட்டிருந்தால் அல்லது உரிய வயதை யுடையாதவராக இருந்தால்,

இந்தச் சட்டம் அமலுக்கு வருவதற்கு முன்பு பிறந்தவர் கனடாவின் பிறவிக் குடிமகனாவார்.

**''5. இந்தச் சட்டம் அமலுக்கு வந்த பிறகு பிறந்தவர் -**

(அ) அவர் கனாடாவிலோ கனடா கப்பலிலோ பிறந்திருந்தால், அல்லது

(ஆ) கனடா கப்பலைத் தவிர்த்து கனடாவுக்கு வெளியில் வேறு எங்காவது பிறந்திருந்தால், மற்றும்

(1) அந்த நபர் பிறந்த போது அவருடைய தகப்பனார் அல்லது திருமணமாகாதவருக்கு பிறந்திருந்தால், அவருடைய தாயார் கனடாவில் அல்லது கனடா கப்பலில் பிறந்ததால் கனடா பிரஜையாக இருந்தால் பிரஜை சான்றிதழ் வழங்கப்பட்டிருந் தால் அல்லது இந்தச் சட்டம் அமலுக்கு வரும்போது கனடா பிரஜையாக இருந்தால் மற்றும்

(2) அவருடைய பிறப்பு ஒரு துணைத்தூதரகத்திலோ அமைச்சகத்திலோ, பிறந்த இரண்டாண்டுக்குள் அல்லது விதி களின்படி அமைச்சகத்தால் நீட்டிக்கப்பட்ட காலக்கெடுவுக் குள்ளோ பதிவு செய்யப்பட்டிருந்தால்,

இந்தச் சட்டம் அமலுக்கு வந்த பிறகு பிறந்த ஒருவர் கனடாவின் பிறவி பிரஜையாக இருப்பார்.

''26 கனடா பிரஜை பிரிட்டிஷ் பிரஜையாவார் :

8. இருவித பிரஜைகளை உருவாக்குவதே இந்தச் சட்டங் களின் நோக்கமாக உள்ளது. (1) காமன்வெல்த்தின் பிரஜை (2) ஒரு குறிப்பிட்ட காமன்வெல்த் நாட்டின் பிரஜை ஆகியோ ருக்கு காமன்வெல்த்தின் குடிஉரிமை தானாகவே கிடைத்து விடுகிறது. ஒரு குறிப்பிட்ட காமன்வெல்த் நாட்டின் பிரஜை அந்தக் குடியுரிமை காரணத்தினாலேயே காமன்வெல்த்தின் பிரஜையாகி விடுகிறார். பிரிட்டிஷ் மற்றும் கனடா குடியுரிமை சட்டங்கள் வகை செய்திருந்தால் ஒரு குடியரசுகூட காமன் வெல்த்தில் உறுப்பினராக முடியும்.

9. இந்தத் தீர்மானத்தை ஏற்றுக் கொள்ளும்முன் மூன்று கண்ணோட்டங்களில் அதை ஆய்வு செய்ய வேண்டியிருக்கிறது. காமன்வெல்த்தில் நிலவி வரும் குடியுரிமை முறையில் மாற்றம் எதையாவது இது செய்கிறதா? இந்தத் தீர்மானத்தால் மாற்றம் ஏதாவது இருந்தால் அதனால் இந்தியாவுக்கு ஆதாயமா அல்லது நஷ்டமா? மூன்றாவதாக இந்தியா காமன்வெல்த்துடன் தொடர்பு கொள்ள வேண்டுமென்று விரும்பினால்கூட வரைவு அரசியல் சாசனத்தின் விதிகளுக்குப் பொருந்தும் வகையில் இந்தத் தீர்மானத்தை அது ஏற்றுக்கொள்ளுமா?

10. காமன்வெல்த் மூன்று குறைபாடுகளைக் கொண்டுள்ளது. வெளிநாட்டு விவகாரங்களை நடத்துவது சம்பந்தமானது ஒரு குறைபாடு. யுத்தத்துக்கு முக்கிய ஆதாரமாக வெளிநாட்டு விவகாரமே உள்ளது. ஆனால் யுத்தம் சம்பந்தமான விஷயங்கள் எல்லாம் டொமினியன்களின் பங்கு ஏதுமின்றி பிரிட்டிஷ் அரசால் முடிவு செய்யப்படுகிறது. டொமினியன் அரசுகளுக்கு நடுநிலை வகிக்க உரிமை இருக்கிறது. ஆனால் அது ஒரு பரிகாரமல்ல. ஏனெனில் காமன்வெல்த்தை சரிசெய்ய முடியாத அது, காமன்வெல்த்துக்கு முடிவு கட்டுகிறது. டொமினியன்களுக்கிடையேயான தகராறுகளுக்குத் தீர்வுகாண அதில் வகை செய்யப்படவில்லை. டொமினியன் நாடுகள் தங்களுக்கிடையேயான உறவுகளில் ஒன்றையொன்று வெளிநாடாகக் கருத முடியாது. எனவே அவை தமது தகராறுகளை சர்வதேச நீதிமன்றத்துக்கு எடுத்துச் செல்ல முடியாது. அவற்றுக்கிடையேயான தகராறுகளைத் தீர்த்துக்கொள்ள தீர்ப்பாயம் ஒன்றும் கிடையாது. காமன்வெல்த்தின் மூன்றாவது குறைபாடு, எல்லாவற்றிற்குமான பொதுவான குடியுரிமை கிடையாது. ஒரு டொமினியன் நாட்டின் பிரஜை மற்ற டொமினியன் நாட்டின் பிரஜையாக இருக்க முடியாது. உண்மையில் காமன்வெல்த் காமன்வெல்த்தின் குடியுரிமைக்கு எதிராக உள்ளது. ஒவ்வொரு டொமினியன் நாடும், யார் தமது நாட்டுப் பிரஜையாக இருக்கலாம் என்று நிபந்தனை விதிக்கவும் மற்ற டொமினியன் நாட்டுப் பிரஜையை தங்கள் நாட்டுப் பிரஜையாக ஏற்றுகொள்ளாமல் இருக்கவும் உரிமை பெற்றிருக்கிறது. நாம் இப்பொழுது மூன்றாவது குறைபாட்டில் அக்கறை கொண்டுள்ளோம். இத் தீர்மானம் இந்த அமைப்பில் மாற்றம் எதையாவது கொண்டு வருகிறதா? என் பார்வையில் எந்த மாறுதலும் காணப்படவில்லை. டொமினியன் நாடுகள், யார் யார் தங்கள் பிரஜைகளாக இருக்கலாம் என்று இன்று போல என்றும் முடிவு செய்யும் உரிமையைக் கொண்டிருப்பதுடன் முன்போலவே எதிர்காலத்திலும் அங்கு வசிக்கும் இந்தியர்களுக்கு குடியுரிமை தொடர்ந்து வழங்கப் போவதில்லை.

11. டொமினியன்களில் ஏற்படும் இம்மாற்றங்களினால் இந்தியாவுக்கு இலாபமோ, நஷ்டமோ இல்லை. மற்ற டொமினியன் நாடுகளைப் பற்றி இந்தியா அக்கறை கொள்ளத் தேவையில்லை. அவர்கள் ஒருபோதும் இந்தியர்களுக்குக் குடியுரிமை வழங்கப்போவதில்லை என்பதை நிச்சயமாக எடுத்துக் கொள்ளலாம். எனவே இந்தியாவும் அவர்களுக்குக் குடியுரிமை

அளிக்க அழைக்கப்படப்போவதில்லை. ஆனால் இந்தியா மற்றும் பிரிட்டிஷ் ஐக்கிய அரசின் விஷயம் மாறுபட்டது. அதன் குடியுரிமைச் சட்டத்தின்படி தனது குடிமக்களாக இந்தியர்களை ஏற்றுக் கொள்ள அது தயாராக உள்ளது. அதன் குடிமக்களை இந்தியக் குடிமக்களாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று அது எதிர்பார்க்கிறது. இந்தியா அவ்வாறு நடந்துகொள்ள முடியுமா? நிச்சயமாக இந்தியா அவ்வாறு நடந்து கொள்ள முடியாது. காரணங்கள் தெளிவானதே, இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் இடையே பொதுவான குடியுரிமை வழங்கப்பட்டால் இந்தியர்களையும் பிரிட்டிஷாரையும் வேறுபடுத்திப் பார்க்க முடியாது. ஏனெனில் இருவருமே குடிமக்களாக இருப்பர். பழைய 1936 இந்திய அரசாங்கச் சட்டத்தின் 111 லிருந்து 121 ஆவது பிரிவுகளிலுள்ள பிரிட்டிஷ் குடிமக்களுக்கும் மற்றும் இந்தியக் குடிமக்களுக்குமிடையே வேறுபாட்டைத் தடுக்க வேண்டும் என்று கூறும் விதிகளுக்குத் திரும்பச் செல்வோம். இந்த விதிகளிலிருந்து தான் நாம் தப்ப முயற்சிக்கிறோம். எனவே காமன்வெல்த் குடியுரிமை என்பது இந்தியாவை காமன்வெல்த்தின் உறுப்பினராகச் செய்யும் ஆபத்தான வழியாகும்.

12. இந்தத் தீர்மானத்தில் அடங்கியுள்ள ஆபத்துக்களைத் தவிர, நான் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ள வரைவு அரசியல் சாசனத்தில் அடங்கியுள்ள விதிகளுக்கு முரண்பாடின்றி அதை காமன்வெல்த்துடனான இந்தியாவின் தொடர்பாக இந்தியா ஏற்றுக் கொள்ள முடியுமா? மன்னரைக் குறிப்பிட வேண்டிய அவசியமில்லை என்பதுடன் குடியரசுகள்கூட காமன்வெல்த்தில் உறுப்பினராக இது வாய்ப்பளிக்கிறது என்ற அடிப்படையில் இந்த காமன்வெல்த்தின் பிரஜை என்ற தீர்வு முன்வைக்கப்படுகிறது. ஆனால் உண்மை நிலை என்ன? இந்தக் கேள்விக்குப் பதிலளிக்க காமன்வெல்த்தின் பிரஜை என்பதன் பொருள் என்ன என்பதை ஒருவர் கவனிக்கவேண்டும். உரிமைகளையும் கடமைகளையும் கொண்டதுதான் குடியுரிமை என்பது. காமன்வெல்த் நாட்டுப் பிரஜை ஒருவனின் உரிமைகள் என்ன என்று கேட்டால் எளிதாகப் பதிலளித்துவிடலாம். எந்த குறிப்பிட்ட காமன்வெல்த் நாட்டின் பிரஜையாக இருக்கிறானோ அந்த நாடு அவனுக்கு அளித்த உரிமைகள்தான் அவை. ஆனால் காமன்வெல்த் பிரஜையின் உரிமைகளும் கடமைகளும் என்ன? இது புதிய சாரமுள்ள கோட்பாடு என்றால் இதற்கான விடைகளை இரண்டு சட்டங்களில் குடியுரிமையை விளக்கும்

கனடா மற்றும் பிரிட்டிஷ் சட்டங்களில் காணமுடியும். இந்த காமன்வெல்த் பிரஜை என்பது ஆன்மாவும் சரீரமும் இல்லாத ஒரு போலி நபராவார்.

13. காமன்வெல்த் பிரஜை என்பது ஒரு வெற்றுச் சொற்றொடராகும். அதில் எந்த விதச் சட்ட உள்ளடக்கமும் கிடையாது. இதை ஒப்பிடுகையில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியுரிமை ஒரு மாகாணத்தின் குடியுரிமையிலிருந்து வேறுபட்டு உண்மையான தன்மை வாய்ந்தது. அதற்கு சில சலுகைகளும் சில விலக்குகளும் உள்ளன. ஒரு காமன்வெல்த் குடியுரிமைக்கு எந்தவித உரிமையோ கடமையோ நிர்ணயிக்கப்படவில்லை? ஏன் காமன்வெல்த் குடிமகன் என்ற சொற்றொடர் பயன்படுத்தப்படுகிறது? அது உண்மையிலேயே எதைக் குறிக்கிறது? ஏற்கெனவே நான் குறிப்பிட்டுள்ள பிரிட்டிஷ் குடியுரிமைச் சட்டத்தின் பிரிவு 1 அதைக் காலகாலமாகக் குறிப்பிடப்பட்டு வந்துள்ள ''பிரிட்டிஷ் பிரஜை'' என்பதற்கான மாற்றுச் சொற்றொடர் எனத் தெளிவுபடுத்துகிறது. இதைத் தெரிந்துகொண்ட இந்தியா இந்த தீர்வை ஏற்றுக் கொள்ள முடியுமா? காமன்வெல்த் பிரஜை என்பது பிரிட்டிஷ் பிரஜை என்பதற்கான மாற்றுச் சொல் என்றால் அவன் மன்னருக்கு விசுவாசம் செலுத்த வேண்டும். நான் ஏற்கெனவே விளக்கியபடி மன்னருக்கு விசுவாசமாக இருப்பது என்பது குடியரசு கொள்கைக்கு முரணானது. எனவே இந்த காமன்வெல்த் பிரஜை என்ற தீர்வு இந்தியா குடியரசாக இருக்க வேண்டுமென்றால் அது ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல.

## IV. புதிய அணுகுமுறை

14. தன்னுடைய அரசியல் சாசனத்தைக் கணக்கிலெடுத்துக் கொண்டால் காமன்வெல்த்தில் இருப்பதற்கு மன்னருக்கு விசுவாசம் செலுத்துவதோ அல்லது காமன்வெல்த் குடியுரிமை பெறுவதோ சரியான வழியல்ல. நாம் வேறு ஏதாவது வழியைப் பார்க்க வேண்டும். 1921 ஆம் ஆண்டு ஐரிஷ் பிரச்சினைக்குத் தீர்வுகாண திரு.டி.வேலரா மேற்கொண்ட வழிகளையே நாமும் கடைப்பிடிக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தத் தகராறுகளை நன்கு தெரிந்துள்ளவர்கள் காமன்வெல்த்தின் உறுப்பு நாடாக இந்தக் குறிப்பின் 4 ஆவது பகுதியில் கொடுத்துள்ள தகுதிகளுடன் அயர்லாந்து இருக்க வேண்டுமென்று திரு. டிவேலரா விரும்பவில்லை. காமன்வெல்த்தின் அங்க நாடாக

இல்லாமல் அதனுடன் இணை நாடாக அயர்லாந்து இருக்க வேண்டுமென்று டிவேலரா விரும்பினார். இணை நாடு என்ற கருத்தின் அவரது விளக்கத்தை ஐரிஷ் வரலாற்றில் ஆவணம் 2 என்று அறியப்படும் ஆவணத்தில் பார்க்கலாம்.

15. இணை நாடு என்பதை திரு.டிவேலரா எவ்வாறு பொருள்கொண்டார் என்பதைத் தெரிந்து கொள்ள அந்த ஆவணத்திலிருந்து சில பகுதிகளை கீழே கொடுத்துள்ளேன் :

1. அயர்லாந்தின் சட்டமியற்றுகின்ற, நிர்வாக, நிதி நிர்வாக அதிகாரங்கள் அயர்லாந்து மக்களிடமிருந்தே பெறப்படும்.

## இணைப்பிற்கான நிபந்தனைகள்

2. பொதுநலன்களுக்காக பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளான பிரிட்டன், கனடா டொமினியன், ஆஸ்திரேலியா காமன்வெல்த் நாடு, நியூஜிலாந்து டொமினியன், தென் ஆப்பிரிக்க யூனியன் ஆகிய நாடுகளுடன் அயர்லாந்து இணைந்து இருக்கும்.

3. இவ்வாறு இணை நாடாக செயல்படுகையில் அயர்லாந்தின் உரிமைகள் படிநிலை மற்றும் தனிச்சலுகைகள் பிரிட்டிஷ் காமன்வெல்த் உறுப்பு நாடுகளுக்குள்ளதைவிட எந்த விதத்திலும் குறைவாக இருக்காது.

4. பாதுகாப்பு, போரும் சமாதானமும், அரசியல் உடன்படிக்கைகள், பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் தற்போது பொதுநலவிஷயங்கள் என்று கருதப்படும் எல்லா விஷயங்கள், மற்றும் இந்த விஷயங்களில் ''அயர்லாந்துக்கும் பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளுக்குமிடையேயான'' பல அரசுகளும் தீர்மானிக்கும் பேச்சு வார்த்தையின் அடிப்படையிலான கூட்டான நடவடிக்கைகள் இந்தப் பொதுவான அக்கறையுள்ள விஷயங்களில் அடங்கும்.

5. பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளுடனான அயர்லாந்து நாட்டின் இந்த இணைப்பினால், இந்த உறுப்பு நாடுகளின் குடிமக்களுக்கு ஏற்படமுடியாத தகுதியின்மை அயர்லாந்து குடிமகனுக்கு இந்த உறுப்புநாடுகள் எதிலும் ஏற்படாது

என்பதுடன் இந்த உறுப்பு நாட்டு குடிமக்களுக்கும் அயர்லாந்தில் ஏற்படாது.

6. இந்த இணைப்பிற்காக மேன்மை தங்கிய மன்னர் பிரானை இந்த இணைப்பிற்கான தலைவராக அயர்லாந்து ஏற்றுக் கொள்ளும்.

காமன்வெல்த்துடன் தொடர்புகளை வைத்துக்கொள்ள ஒரு புதிய வழி 6, 5, 4 ஆகிய பத்திகள் ஆய்வு செய்யப்பட வேண்டியவை.

**பத்தி 6 :-** இந்த 6வது பத்தியை சுலபமாக விட்டுவிடலாம்; குடியேற்ற நாடுகளுக்கும் கூட்டாளி நாட்டுக்கும் இடையே இணைப்பை ஏற்படுத்த இது முற்றிலும் தேவையில்லை என்பதாலேயே இவ்வாறு கூறுகிறோம். 1936 ஆம் ஆண்டின் நிர்வாக அதிகார (வெளி உறவுகள்) சட்டத்தை இயற்றி இந்த ஆவணத்தின் அடிப்படையாக கோட்பாடுகளை நடைமுறைப்படுத்தியபோது டிவேலராவே இந்தப் பத்தியை விட்டுவிட்டார்.

**பத்தி 5:-** இப்போதைய வடிவத்தில் பத்தி 5ஐ நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. இந்தப் பத்தியை வைத்துக் கொள்வது அவசியம் என்று தெரிய வந்தால் அதன் மொழி நடையை நாம் கவனமாகத் திருத்தியமைக்க வேண்டும், ஆற்றல் இல்லாமை, சலுகைகள் இருந்தால் விதிவிலக்குகள் வழங்குதல் முதலியவற்றை நாம் பாகுபடுத்திப்பார்க்க வேண்டும். இந்தியாவிலுள்ள பல்வேறு காமன்வெல்த் நாடுகளது மக்களை எத்தகைய தகுதியின்மைகளுக்கும் உட்படுத்துவதில்லை என்பதை ஒப்புக்கொள்ளும் அதேசமயம் இந்தியப் பிரஜைகளுக்கு அனுமதிக்கப்படும் சலுகைகளையும் விதிவிலக்குகளையும் தங்களுக்கும் வழங்க வேண்டும் என்று அவர்கள் கோருவதற்கு நாம் இணங்கக்கூடாது.

**பத்தி 4:-** இந்த தஸ்தாவேஜின் இந்தப் பத்தி இத்தஸ்தாவேஜுக்கு மிக முக்கியமான பகுதியாகும். மேலும் இதுவே இத்தஸ்தாவேஜின் மிகச் சிறந்த பகுதியாகும். ஒரு கூட்டாளி நாடு என்றால் என்ன என்பதற்கு இதில் விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது; அது காமன்வெல்த்துடன் எவ்வாறு, எந்த அளவுக்குப் பிணைக்கப் பட்டிருக்கிறது என்பதை தெள்ளத் தெளிவாக இந்தப் பத்தி எடுத்துரைக்கிறது. நமது நோக்கத்துக்கு இது போதுமானது. காமன்வெல்த்துடன்

நெருங்கிய பிணைப்பு வைத்துக் கொள்வதை நமது அரசியல் சனம் நம்மை அனுமதிக்காது. காமன்வெல்த்துடன் தங்கு தடை ற பிணைப்பை வளர்த்துக் கொள்வதை நமது தேவைகள் னுமதிக்க மாட்டா.

இந்தியா பிரிட்டிஷ் காமன் வெல்த் நாடுகளில் ஓர் உறுப்பு ாடு என்று கருதப்படுவதற்கு இவ்வகையான தொடர்பு போது ானது என்பது ஏற்றுக்கொள்ளப்படுமா என்பதே இங்கு கேள்வி. 937ல் அயர்லாந்தின் அரசியல் சாசனம் மீண்டும் சட்டமாக்கப் பட்டபோது நான் ஏற்கெனவே கூறியதுபோல் தாஸ்தாவேஜ 2ன் வகையங்கள் அதில் சேர்க்கப்பட்டன. இந்த மாற்றங்களுடன் அயர்லாந்து பிரிட்டிஷ் காமன்வெல்த்தின் ஓர் உறுப்பு நாடாக நீடித்ததா என்ற கேள்வி எழுந்தது. இந்தக் கேள்விக்குப் பதில் அளித்துப் பிரிட்டிஷ் அரசாங்கம் 1939 டிசம்பர் 30 ஆம் தேதி பின்கண்ட அறிக்கையை வெளியிட்டது:-

''1937 ஜூனில் அயர்லாந்தின் சுதந்திர அரசாங்கத்தின் நாடாளுமன்றத்தால் அங்கீகரிக்கப்பட்டு டிசம்பர் 29 ஆம் தேதி நடைமுறைக்கு வந்த புதிய அரசியல் சாசனத்தால் தோன்றியுள்ள நிலைமையைப் பிரிட்டிஷ் அரசாங்கம் பரிசீலித்தது.

''சுதந்திர அயர்லாந்து அரசின் நிலைமையில் புதிய அரசியல் சாசனம் எத்தகைய அடிப்படை மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை என்பதை ஏற்றுக்கொள்ள அவர்கள் தயாராக உள்ளார்கள். புதிய அரசியல் சாசனத்தின்படி 'அயர்' அல்லது 'அயர்லாந்து' பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளின் ஓர் உறுப்பு நாடாக எண்ணப்படும்,

கனடாவிலுள்ள மேன்மைதங்கிய மன்னர் பிரானின் அரசு, ஆஸ்திரேலியக் காமன்வெல்த், நியுஸிலாந்து, தென் ஆப்பிரிக்க யூனியன் ஆகியவைகளும் புதிய அரசியல் சாசனத்தை அவ்வாறு ஏற்றுக்கொள்ள தயாராக இருப்ப தாக பிரிட்டிஷ் கூட்டரசின் மேன்மை தங்கிய மன்னர் பிரானின் அரசு உறுதிப்படுத்தியுள்ளது.

காமன்வெல்த்தில் அயர்லாந்தை உறுப்பினராக ஏற்றுக் கொண்டுள்ளதால், இந்தியாவை பொறுத்தமட்டில் பிரிட்டிஷ் அரசு அவ்வாறே நடந்துகொள்ள கடமைப்பட்டுள்ளது. குறிப்

பாக இரண்டு நிலைகளிலும் நிபந்தனைகள் ஒன்றாக இ
பதால் அவ்வாறு நடந்த கொள்ள வேண்டும். பிரிட்டிஷ் அர
அல்லது டொமினியன்களோ நம்மிடமிருந்து இணை உ
பினர் நிலையைக் கோரமுடியாது. இதுதான் நமக்கு வேண்டும்

## V. புதிய பிரேரணையின் தன்மையும் ஆதாயங்களும்

17. இந்தப் புதிய பிரேரணையின்படி காமென்வெல்
இரண்டு வகையான நாடுகளைக் கொண்டிருக்கும்: (1) உறுப்
நாடுகள், (2) இணை நாடுகள். முதலில் குறிப்பிடப்பட்டுள்
மன்னரைத் தலைவராக கொண்ட பழைய டொமினியன்கள்
பிந்தையதில் மன்னரைத் தலைவராக ஏற்றுக் கொள்ளா
இந்தியா போன்ற நாடுகள் அடங்கும். இந்தப் பிரேரணைக்கு
இரண்டு சாதகங்கள் உள்ளன. இந்தியா தான் உறுதிபூண்டுள்ளபடி
குடியரசாக இருப்பதை அது சாத்தியமாக்குகிறது. இரண்டு
நாடுகளுக்கும் கேந்திரமான விஷயங்களில் இந்தியாவும்
காமன்வெல்த் நாடுகளும் பரஸ்பரம் பயனடைய அது
உதவுகிறது. கடைசியாக, இந்தியா எதிர்த்துப் போராடிவந்த
கொள்கையான பிரிட்டிஷாருக்கும் இந்தியருக்கும் வர்த்தகம்,
வியாபாரம் ஆகிய துறைகளில் சம வாய்ப்புகள் அளிக்கப்பட
வேண்டும் என்ற நிபந்தனைகளைக் கொண்டு காமன்வெல்த்
குடிமகன் என்ற திட்டத்தை அங்கீகரிப்பதைத் தவிர்ப்பதற்கு
இது உதவுகிறது.

## VI. விளக்கம்

18. காமன்வெல்த்தில் இணை உறுப்பினராக இந்தியாவை
சேர்க்கையில் இரண்டு விஷயங்களைத் தெளிவுபடுத்தாமல்
விட்டுவிடக்கூடாது. காமன்வெல்த்தின் விருப்பத்தைச் சார்ந்து
தான் காமன்வெல்த்தில் உறுப்பினரா இல்லையா என்பதை
தீர்மானிக்கக் கூடாது. இதற்காக இந்தியா வெளியிடும் பிரகடனத்
தின் அடிப்படையில் இது இருக்கவேண்டும். மற்றொன்று,
இந்தியா காமன்வெல்த்தைவிட்டு வெளியேறுவதென்றால்
இதற்காக இந்தியா வெளியிடும் பிரகடனத்தின் அடிப்படையில்
அது தீர்மானிக்கப்பட வேண்டும். அயர்லாந்தின் வரலாற்றைப்
படித்தவர்கள் இந்த விளக்கங்களை நன்கு புரிந்து கொள்ள
முடியும். டொமினியன் அந்தஸ்து வேண்டாமென்று தன்
அரசியல் சாசனத்திலேயே அயர்லாந்து தெளிவாகக் குறிப்பிட்

டிருந்தாலும் அயர்லாந்து டொமினியனாகவே கருதப்பட்டது. ஓர் அயல்நாடு என்று மற்ற டொமினியன்கள் அயர்லாந்தை அங்கீகரிக்கவில்லை என்ற காரணத்தினால் காமன்வெல்த்தி லிருந்து அது வெளியேறுவதற்கு அனுமதிக்கப்படவில்லை.

19. முர்ரேக்கு எதிரான பார்க்ஸ் வழக்கில் (ஏ ஈ ஆர் 1942 தொகுதி 1.558) உயர்நீதிமன்றம் அண்மையில் அளித்த தீர்ப்பு இந்த விளக்கங்களின் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டுகிறது. அயர்லாந்து டொமினியனா இல்லையா என்பதே கேள்வி. மேதகு தலைமை நீதிபதி அயர்லாந்து டொமினியன் அல்ல என்று கூறி அதற்கு இரு காரணங்களையும் கொடுத்துள்ளார்.

(1) அயர்லாந்து பிரிந்து செல்லும் உரிமையை எப்பொழு தாவது வெளிப்படுத்தியுள்ளதா என்பதை அவர் அறிய மாட்டார்.

(2) அப்படி அது விரும்பியிருந்தாலும் மற்ற காமன்வெல்த் நாடுகள் அயர்லாந்தை வெளிநாடு என்று அங்கீகரிக்கும் வரை அதன் பிரிந்து செல்லும் உரிமை செல்லுபடி யாகுமா என்று கேள்வி உள்ளது.

இது ஒரு குறும்புத்தனமான தீர்ப்பாகும். சட்ட அம்சத்தை விட அதில் அரசியலே அதிகம் காணப்படுகிறது. எனவே காமன்வெல்த்தில் சேருவதும் அதிலிருந்து விலகுவதும் முற்றிலும் நம்மைச் சார்ந்தது என்பதுடன் காமன்வெல்த்தின் விருப்பமோ இசைவோ தேவையில்லை. அது சம்பந்தமற்றது என்பதில் நாம் எவ்வித ஐயப்பாட்டுக்கும் இடமளிக்கக் கூடாது.

## VII. செயல்படுத்துதல்

20. நிறைவேற்றுவது பற்றிய விஷயத்துக்கு வருவோம். இங்கே தீர்மானிக்க வேண்டிய கேள்விகள் இரண்டு உள்ளன. பிரகடனத்தின் மாதிரி வாசகங்களும் அதற்கு சட்ட அனுமதி கொடுப்பதும். பிரகடனத்தின் வாசகங்களைப் பொறுத்தவரை யில் பின்வரும் வரைவு பிரகடனத்தை அளிக்கிறேன்:

''பொதுவான அக்கறை உள்ள விஷயங்களில் அதாவது வர்த்தகம், தொழில், பாதுகாப்பு, போர், சமாதானம் ஆகியவை களில் கலந்தாலோசித்து சுதந்திரச் செயல்பாடு என்ற அடிப்படை

யில் கூட்டு நடவடிக்கைகள் எடுக்க ஓர் இணை உறுப்பினராகச் செயல்படும்போது காமன்வெல்த்திலுள்ள மற்ற நாடுகள் அனுபவிக்கும் உரிமைகள் சலுகைகள் அந்தஸ்துகள் எந்த விதத்திலும் குறைந்திருக்காது என்ற கருத்தில் இதன் மூலம் இந்தியா பிரிட்டிஷ் காமன்வெல்த்தின் இணை உறுப்பினராக பிரகடனப்படுத்துகிறது.

மேற்குறித்த விஷயங்களின் விளக்கங்களுடன் இப்படிப் பட்ட பிரகடனமே போதுமானது. இம்மாதிரியான பிரகடனம் வெளியிடப்படுமானால் முகப்புரையில் குடியரசு என்ற சொல்லை நாடு என்ற சொல்லாக மாற்ற வேண்டிய அவசியம் இருக்காது என்று எனக்குத் தோன்றுகிறது. குடியரசு என்ற சொல்லே தொடரலாம்.

21. அடுத்த கேள்வி யாதெனில் அதைச் செயல்படுத்து வதுதான், அதை இரு வகைகளில் நிறைவேற்றலாம். ஓர் உடன் படிக்கை மூலம் என்பது ஒரு வழி, மற்றொன்று அரசியல் சாசனத்தில் ஒரு பிரிவை சேர்த்துக் கொள்வதுதான். இரண் டாவது வழியையே நான் ஆதரிக்கிறேன்.

22. முகப்புரைக்கான திருத்தம் குறித்த என் ஆலோ சனைக்கு முரணாக இது தோன்றக்கூடும். என்னுடைய கண் ணோட்டத்தில் மாற்றம் ஏற்பட்டுள்ளது என்று சம்மதிக்கத்தான் வேண்டும். டொமினியன் அந்தஸ்துக்கு சிபாரிசு செய்யப் பட்டிருப்பது புதிய அடிப்படைதான். அதாவது காமன்வெல்த் குடியுரிமைதான் இந்த மாற்றத்திற்கான காரணம். யார் தங்கள் குடிமகன்களாக இருக்கலாம் என்று வரையறுக்க ஒவ்வொரு டொமினியனுக்கும் உரிமை இருப்பதால் நான் அதை ஆதரித் தேன். பொதுவான குடியுரிமை இந்தியாவின் பொருளாதார சுதந்திரத்துக்கு மிகவும் ஆபத்தானது. காமன்வெல்த் பிரஜை களிடமிருந்து தன்னுடைய பிரஜைகளை பாதுகாக்கும் சுதந் திரத்தை நாம் இழக்க நேரிடும். டொமினியன் அந்தஸ்தின் ஆரம்ப அடிப்படையான மன்னருக்கு விசுவாசமாக இருப்பது என்பது காமன்வெல்த் பிரஜை என்ற புதிய அடிப்படையை விட குறைந்த ஆபத்தை விளைவிப்பதாகும்.

●●●

# 30

# அரசியல் சாசனமும் அரசியல் சாசன அமைப்பு முறையும்

## இந்தியாவின் அரசியல் சாசனம்

### அதன் கோட்பாடுகள் பற்றிய ஒரு விளக்கம்



## பகுதி - I

### அரசியல் சாசன முறையின் அடிப்படையான கோட்பாடுகள்



## பகுதி - II

### அரசின் அங்கங்கள்



## பகுதி - III

### ஒன்றியமும் மாநிலங்களும்

# பகுதி - IV

## அரசும் குடிமகனும்



---

*நமக்குக் கிடைத்த கையெழுத்துப் பிரதியில் மேலே கண்டவாறு நூலின் அத்தியாய விவரங்களும் பின்வரும் இரண்டு முன்னுரைகளும் மட்டுமே இடம்பெற்றிருந்தன. - ஆசிரியர்கள்.*

# முன்னுரை

## அரசியல் சாசனத்தின் இயல்பும் அதன் எல்லைகளும்

பின்வரும் பக்கங்களில் அரசியல் சாசனப் பிரிவுகளின் வாசகத்தை நான் திரும்பத் தரவில்லை. அரசியல் சாசனப் பிரிவுகளையும் அதனடிப்படையில் உள்ள கோட்பாடுகளையும் பற்றி ஒரு முழுமையான கருத்தை ஏற்படுத்திக் கொள்ள விரும்புகிற ஒரு மாணவருக்கு இதனால் ஒரு பயனும் கிட்டாது என்பது என் அபிப்பிராயம். சில தலைப்புகளைத் தேர்ந்தெடுத்து அந்தத் தலைப்புகளுக்கு ஏற்ற அரசியல் சாசனப் பிரிவுகளை விவாதிப்பதற்காகவும் விளக்குவதற்காகவும் அவற்றைத் தொகுத்துள்ளேன். இத்தலைப்புகள் எவை என்பது உள்ளடக்க அட்டவணையைப் பார்த்தால் புரியும். அரசியல் சாசனத்தைப் பற்றிய ஒரு பகுப்பாய்வு இது. அரசியல் சாசனத்தைப் பற்றி ஒரு உண்மைச் சித்திரத்தை இது தரும். இத்துடன் மற்ற நாடுகளில் உள்ள அரசியல் சாசனப் பிரிவுகளுடன் இவற்றுக்குள்ள வேறுபாட்டையும் எடுத்துக் காட்டும்.

விவாதத்திற்கான தலைப்புகளை எந்த அடிப்படையில் நான் தேர்வு செய்தேன் என்று வாசகர் வினவலாம். இதற்கு எனது பதில் இந்தத் தலைப்புகள் அரசியல் சாசன எல்லைக்குப் பொதுவாக வருபவை என்பதே. எனினும் இந்த பதில் இதர பல கேள்விகளை எழுப்பும். அரசியல் சாசனம் என்பதன் பொருள் என்ன? அரசியல் சாசனச் சட்டத்தின் தன்மையும் எல்லையும் என்னென்ன? எனவே இது பற்றிய சில விளக்கங்கள் தவிர்க்க முடியாதவை. எனினும் இவ்விளக்கங்கள் வெகு சுருக்கமாக இருக்க வேண்டும்.

அரசியல் சாசனம் என்ற பதத்திற்கு என்ன பொருள்? சட்டச் சாயலில் அரசியல் சாசனம் என்பதன் பொருள், ஒரு அமைப்பை ஏற்படுத்துகிற செயல், அல்லது அச்செயலுக்கான தூண்டுதல் அல்லது ஒழுங்குமுறை அல்லது ஒரு விதிமுறை என்பதாகும். பேராசிரியர் மாக் II வெய்ன் சொல்லுகிறார்:

''மன்னரின் சட்டம் இயற்றுகிற செயலைக் குறிக்கிற நுட்பச் சொல்லாகத்தான் ரோமானிய சாம்ராஜ்யத்தில் இந்த லத்தீன் மொழிச் சொல்லுக்குப் பொருளாக இருந்தது. ரோமானியச் சட்டத்திலிருந்து இச்சொல்லை ஏற்றுக் கொண்ட கிருத்துவ திருச்சபை, மதகுருமார்களின் விதிமுறைகளுக்கு இச்சொல்லைப் பயன்படுத்தியது. திருச்சபையின் ஒட்டுமொத்த விதிமுறைகளுக்கோ, அல்லது குறிப்பிட்ட சில ஒழுங்குமுறைகளுக்கோ இது பொருந்துவதாகும். கிருத்துவத் திருச்சபையிலிருந்தோ, ரோமானிய சட்டப் புத்தகத்திலிருந்தோ இந்தப் பதம் மத்திய காலத்தின் பிற்பகுதிக்கு வந்து, அக்காலத்தின் மதச்சார்பற்ற சட்டமியற்றும் செயலைக் குறிப்பதாயிற்று.

அரசியல் சாசனம் என்ற சொல் பலநூற்றாண்டுகளாக ஒரு குறிப்பிட்ட நிர்வாகச் சட்டமியற்றுதலையே குறித்து வந்தது. ரோமானிய சட்ட வல்லுநர்களும் இப்படித்தான் இதைப் புரிந்து கொண்டிருந்தனர். இந்தக் குறிப்பிட்ட சட்டமியற்றுதலை பண்டைக் கால வழக்கத்திலிருந்து இது வேறுபடுத்திக் காட்டியது. 1610 ஆம் ஆண்டுதான் அரசியல் சாசனத்துக்கு நவீன காலப் பொருள் வந்தது. இதன்படி சட்டவிளக்கப்படி ஒரு குடிமக்கள் அரசாங்க அமைப்பை இது குறித்தது. வேறுமாதிரிச் சொல்வதானால் இது அரசாங்கத்தின் சட்ட அமைப்பு ஆகும்.

ஒரு நூறு ஆண்டுகளுக்குப் பிறகு அரசியல் சாசனம் என்ற சொல்லுக்கு கூடுதலான, சிறப்பான ஒரு பொருள் ஏற்பட்டது. இது அரசாங்க சட்ட அமைப்புக்கும் அப்பால் வெகுதூரம் சென்றது. போலிங்புரோக் இதனை நன்றாக எடுத்துச் சொன்னார். 1773 ஆம் ஆண்டு அவர் பின்வருமாறு கூறினார்:

''குறிப்பிட்ட பகுத்தறிவுக் கோட்பாடுகளுக்கு ஏற்றவாறு பெறப்பட்ட, நேர்மையும் கறார்த் தன்மையும் கொண்ட சட்டங்களின் தொகுப்பு, அமைப்புகள், வழக்கங்கள் ஆகியவை சேர்ந்த இது, பொது மக்களின் குறிப்பிட்ட குறிக்கோள்களை அடைவதற்கு ஏற்றவாறான, மக்கள் தாங்கள் ஆட்சி செய்யப்படுவதற்கு ஒத்துக் கொண்ட ஒரு பொதுவான ஆட்சி முறைமையை குறிக்கும்.''

இந்த விளக்கம் கூட அரசியல் சாசனம் என்ற சொல்லுக்கு நவீன காலத்தில் ஏற்பட்டுள்ள அர்த்தத்துக்கு வெகு தூரத்தில் உள்ளது. இன்றைய காலத்தில், அரசாங்கத்தின் பல்வேறு துறைகளின் அதிகாரங்களையும் கடமைகளையும் நிர்ணயிக்கிற அடிப்படைச்

சட்டம் என்று இச்சொல்லுக்கு பொருள் ஏற்பட்டுள்ளது. அரசியல் சாசனம் என்ற சொல்லுக்கு தாமஸ் பெய்ன் பின்வரும் விளக்கத்தைத் தந்தார்:

''அரசியல் சாசனம் என்பது அரசாங்கத்தின் செயல்பாடு அல்ல. மாறாக இது அரசாங்கத்தின் அங்கமாக இருக்கிற மக்களின் செயல்பாடு ஆகும். அரசியல் சாசனம் இல்லாத ஒரு அரசாங்கம் உரிமைகள் இல்லாத ஓர் அதிகார அமைப்பு ஆகும்''

அரசியல் சாசனம் என்ற சொல்லுக்கு இத்தகைய சரித்திரப் பின்னணி உண்டு.

அரசியல் சாசனச் சட்டத்தின் இயல்பும் எல்லையும் என்ன? அரசியல் சாசனச் சட்டத்தைப் புரிந்து கொள்வதற்கு ஒரு எளிய வழி அதன் எல்லையை அறிந்து கொள்வதுதான். எனவே அதன் எல்லையை விவரிப்பது பயன்தரும். அரசியல் சாசனச் சட்டஎல்லை என்பதற்கு உலகில் ஜனநாயகம் மேலோங்கியுள்ள நாடுகளில் கொள்ளப்படுகிற பொருள் குடிமக்களுக்கு எதிராக அரசாங்கம் தான் பெற்றுள்ளதாகக் கருதும் உரிமைகள் அனைத்தையும் பற்றியது. அதாவது (1) அனைவரையும் கட்டுப்படுத்துகிற சட்டம் இயற்றுதல் (2) சட்டத்தை அமலாக்குதல் (3) அரசுக்கு எதிராக குடிமக்களுக்கு உள்ள உரிமைகளை வியாக்கியானம் செய்தல். ஒரு சமஷ்டி அரசில், மேற்படி விஷயங்களுக்கும் கூடுதலாக, சமஷ்டி அரசை சட்ட பூர்வமானதாகவும் நிர்வாக சம்பந்தமாகவும் பொருளாதார விஷயங்களிலும் மத்திய ஆட்சியமைப்பையும் மற்ற அரசியலையும் பற்றிய விஷயங்களை அரசியல் சாசனம் எல்லையாகக் கொண்டிருக்கும்.

சட்டஇயலைப் பொருத்தவரை அரசியல் சாசனத்தின் பரப்பு எது, எல்லை எது? பேராசிரியர் ஹாலண்டு பொதுச் சட்டத்தின் ஒரு பகுதியே அரசியல் சாசனம் என்கிறார். இது சரியான கருத்துத்தான் என்பதை ஒருவரும் மறுக்கவியலாது. தர்க்கவியல் ரீதியாக அவரது வாதங்கள் அந்த முடிவுக்குத்தான் கொண்டுவரும். மனித நடத்தையை அமல்படுத்துகிற விதியாக அமைகிற சட்டம் மனித உரிமைகளுடன் சம்பந்தப்பட்டது. ஒரு மாநிலத்தின் குடிமக்களுக்கு உள்ள உரிமைகள் பற்றிய சட்டம், மாநிலச் சட்டம் என்று அழைக்கப்படும். இரண்டு வேறுவேறான மாநிலங்கள் சம்பந்தப் பட்ட சட்டம் சர்வதேசச் சட்டம் என்றழைக்கப்படும். மாநிலச்

சட்டம் என்பது இருவகைப்படும். ஒன்று தனியார் சட்டம், மற்றது பொதுச் சட்டம். ஒரு குடிமகன் மற்றொருவருக்கு எதிராக அமுல்படுத்தும் உரிமைகள் தனியார் சட்டம் ஆகும். குடிமக்களுக்கு எதிராக ஒரு அரசு அமல்படுத்துகிற உரிமைகள் பொதுச் சட்டம் எனப்படும். இதே போல சமஷ்டி அமைப்பில் மத்திய அரசு மாநிலங்களுக்கு எதிராக அமல்படுத்துகிற உரிமைகள் பொதுச் சட்டத்தின் வகைப்படும். எந்தக் காரணம் கொண்டும் அது தனியார் சட்ட வரம்பிற்குள் வராது. ஒரு மாநிலம் மற்றொரு மாநிலத்திற்கு எதிராகவும், குடிமக்கள் அரசுக்கு எதிராகவும் கோருகிற உரிமைகள் பற்றிய அரசியல் சாசனச் சட்டம் பொதுச் சட்டத்தின் ஒரு பிரிவாகவே கருதப்பட வேண்டும். அரசியல் சாசனச் சட்டத்தின் இயல்பையும் வரம்பையும் பற்றிய இந்த விளக்கம், சில தலைப்புகளை மட்டும் நாம் விவாதத்துக்கும் விளக்கத்துக்கும் ஏன் எடுத்துக் கொண்டோம் என்பதைத் தெளிவுபடுத்தும். அரசியல் சாசனம் இந்தியப் பொதுச் சட்டத்தின் சிறப்பு அம்சங்களை வெளிப்படுத்துகிறது என்பதைக் காட்டுகிற சிறந்த முறையாக விளங்கும் என்பதற்காகவே இத் தலைப்புகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.



# 31

# தமது அடிப்படை உரிமைகளை இந்திய மக்கள் தெரிந்து கொள்வார்கள்

இந்திய அரசின் சட்ட அமைச்சர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் ஹைதராபாத்துக்கு விஜயம் செய்தார். ஹைதராபாத் முற்போக்காளர் குழுவின் சார்பில் போட் கிளப்பில் நடத்த கூட்டத்தில் 24.5.1950 அன்று அவர் உரையாற்றினார். அரசியல் சாசனம், ஜனநாயகம், தீண்டாமை ஆகியன பற்றி பத்திரிகையாளர்களும் பார்வையாளர் களும் அவரிடம் சில கேள்விகள் கேட்டனர்.

## இந்தியாவில் நிலவும் நாடாளுமன்ற ஜனநாயகம்

இந்திய ஜனநாயகத்தின் எதிர்காலம் இருண்டு போயுள்ளது போல நான் அவ்வப்போது நினைப்பதுண்டு. அதே நேரத்தில் நாம் அனைவரும் ஒன்று சேர்ந்து ''அரசியல் சாசன ஒழுக்கத்தைக் கடைப் பிடிப்போம்'' என்று பிரமாணம் எடுத்துக் கொண்டால், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றைக் கொண்ட சரியானதொரு கட்சி அமைப்பு முறையை அமைத்திட முடியும் என்றுவேறு சில சமயங்களில் நான் நினைத்ததில்லை என்று சொல்லவும் மாட்டேன்.

## இந்திய அரசியல் சாசனத்தில் அடிப்படை உரிமைகளுக்கு உருவம் கொடுக்கப்பட்டுள்ளது

அடிப்படை உரிமைகள் குடிமக்களுக்கு வரம்பற்ற உரிமை களை வழங்குவதாக நினைப்பது தவறாகும். அரசின் பாதுகாப்பு கருதி அடிப்படை உரிமைகளுக்கு சில வரைமுறைகளை நாம் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியமாகிறது. அரசியல் சாசனத்தை வரையும் போது தனிநபர் சுதந்திரம் அனாவசியமாக பாதிக்கப்படக்கூடாது என்பதை அடிப்படை உரிமைகளுக்கு வரை முறை ஏற்படுத்தும் நேரத்தில் கவனத்தில் கொண்டோம்.

அடிப்படை உரிமைகளுக்கு சிறப்பான உத்தரவாதம், நாடாளு மன்றத்தில் ஒரு சிறந்த எதிர்க்கட்சி இருப்பதே ஆகும். இவ்வாறு எதிர்க்கட்சி இருந்தால் அரசாங்கம் சரியான முறையில் நடந்து கொள்ளும்.

அடுத்த பாதுகாப்பு, சட்டபூர்வமானது. உதாரணமாக, புலனாய்வுத் துறை கொடுத்த அறிக்கையைக் கொண்டு ஒருவரைக் கைது செய்து தடுப்புக் காவலில் வைப்பதற்கு ஓர் அமைச்சர் உத்தர விடுகிறார். இப்போது கேள்வி என்னவென்றால் புலனாய்வுத் துறையின் அறிக்கை உண்மையானதுதானா என்பதே. இந்தக் கேள்விக்கு பதிலிறுப்பது கடினமே.

இத்தகைய அறிக்கைகளின் அடிப்படையில் அமைச்சர் செயல்படுவதற்கு சில கட்டுப்பாடுகளை, சில வரைமுறைகளை வகுப்பதற்கு நமது சட்ட ஞானம் வகை செய்திருக்க முடியும் என்று நான் நினைக்கலாம். இவ்வாறானால் அறிக்கையின் உண்மைத் தன்மையில் ஆரோக்கியமான சாயல் கண்டு, போதுமான சான்றிருப் பதாகக் கொண்டு நிர்வாகச் செயல்பாடு அமையும். இப்படிச் செய்தால், அதன்பின் மேலும் பாதுகாப்புத் தருவதற்கு உச்சநீதி மன்றம் இருக்கிறது.

இந்தியா ஒரு மாறுகின்ற காலகட்டத்தில் உள்ளது. அமெரிக்க ஐக்கிய நாடுகள் தனது அரசியல் சாசனத்தை வரைந்து, அடிப்படை உரிமைகளை அதில் இணைத்தபோது, இந்த உரிமைகளின் இயல்பு, வரம்பு, வரையறைகள் என்ன என்று அதன் மக்களுக்குத் தெரிந்திருக்கவில்லை.

நீண்டகாலம் நடைபெற்ற உச்சநீதிமன்றத்தின் சட்டமுறைத் தீர்ப்புகளின் மூலம்தான் சிக்கல்கள் தீர்க்கப்பட்டன. அதன்பின்னரே அடிப்படை உரிமைகளின் இயல்பு, பரப்பு வரையறை ஆகியவை வகுக்கப்பட்டன. இதேபோல ஐந்து அல்லது 10 வருட காலத்தில், இந்திய மக்கள் தமது அடிப்படை உரிமைகளையும், அரசியல் சாசனம் அவர்களுக்கு என்ன தருகிறது என்பதையும் தெரிந்து கொள்வர்.

## வயது வந்தோர் வாக்குரிமை

கேள்வி : இந்தியாவில் வயது வந்தோருக்கு வாக்குரிமை படிப் படியாக அல்லாமல் ஏன் திடுமென அறிமுகப்படுத்தப் பட்டது?

பதில் : அதிகாரத்தில் உள்ள கட்சி வயது வந்தோருக்கு வாக்குரிமை வழங்க வேண்டும் என்ற கொள்கையில் மிகுந்த தீவிரம் காட்டியது. எனவே, இறுதியில், இதன் பயன்பாடு பற்றி

இக்கட்சிக்குச் சிறிது சந்தேகம் ஏற்பட்டபோதும், அவர்கள் பின்வாங்க முடியவில்லை.

வயது வந்தோர் வாக்குரிமை பற்றி எனக்கு தனிப்பட்ட முறையில் எந்த சந்தேகமும் இல்லை. பொதுமக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள வெகு சிலரில் நானும் ஒருவன். வயதுவந்தோர் வாக்குரிமை பற்றி தவறான கருத்துக்களோ, அது தவறாகப் பயன்படுத்தப்படும் என்றோ பயப்படத் தேவையில்லை என்றே நான் உணர்கிறேன். வயதுவந்தோர் வாக்குரிமை பற்றி நான் காண்கிற கஷ்டமெல்லாம், தளர்வான ஓர் அதிகார இயந்திரம் இந்நாட்டின் பெருந்தொகையான மக்கள் வாக்களிப்பதை சரியான படி நடத்துமா என்பதுதான். இந்தச் சிக்கலை எப்படித் தீர்க்கலாம் என்பது பற்றி என்னுடைய கருத்து என்னவென்றால், அனைத்துத் தொகுதிகளிலும் ஒரே நாளில் தேர்தல் நடத்தலாம். வாக்களிப்பை சில நாட்கள் பரவலாக நடத்துவதன் மூலம் அரசு இயந்திரம் திறமை யுடன் செயல்பட ஏதுவாகும் என்பதே.

கேள்வி : ஹைதராபாத்தில் நடந்த அரிஜனங்களின் கூட்டுச் செயல் கமிட்டிக் கூட்டத்தில் அரிஜனங்களைக் கொடுமைப்படுத்துவதை நிறுத்தி அவர்களின் உரிமைகளை ஜாதி இந்துக்கள் அங்கீகரிக்க வில்லை என்றால், இந்த விஷயத்தை ஐ.நா.சபைக்குக் கொண்டு செல்வோம் என்று ஜாதி இந்துக்களுக்கு இறுதி எச்சரிக்கை விடுக்கப் பட்டதா?

பதில் : அந்தக் கூட்டத்துக்கு நிகழ்ச்சி நிரல் இருக்கவில்லை, தீர்மானம் எதுவும் அங்கு நிறைவேற்றப்படவும் இல்லை.

எனினும், எனது நாட்டு மக்களின் எப்பிரிவினரும், தாம் ஒடுக்கப்பட்டுள்ளதாக உணர்ந்தால் மனித உரிமைக் கமிஷனை எப்போதும் அவர்கள் அணுகலாம்.

## தீண்டாமை

இந்தியாவில் உள்ள தீண்டாமை எனும் பிரச்சினை முன்பு இல்லாத வகையில் பொருளாதார அம்சம் ஒன்றையும் பெற்று வருகிறது.

தீண்டத்தகாதவர்களின் நிலைமை, ஐந்து அல்லது ஆறு வருடங்களுக்கு முன்பு இருந்ததை விட இப்போது பரவாயில்லை. எனினும் அவர்களின் பாதையில் தடைகள் மட்டுமே இல்லாமலிருந் திருந்தால் மேலும் சிறப்பாகவும் இன்னும் வேகமாகவும் அவர்கள் முன்னேறி இருக்க முடியும்.

## அனைத்துச் சமூகத்தினருக்கும் பொதுவான சிவில் சட்டம் பற்றி

கேள்வி : இந்தியாவிலுள்ள இந்துக்கள், முஸ்லீம்கள், கிறித்தவர்கள், பார்சிகள் போன்ற அனைத்து வகுப்பினருக்கும் பொதுவான ஒரு சிவில் சட்டம் இயற்றுவது சாத்தியமா?

பதில் : சாதி, மதம் பாராமல் அனைத்து வகுப்பினருக்கும் பொருந்தக்கூடிய பொதுவான சிவில் சட்டம் இயற்றுவது சுலபமல்ல. இந்தியாவிற்கு அப்பாலுள்ள சில நாடுகளி லிருந்து நீதித்துறைக் கொள்கைகளை நாம் புதிதாக இறக்குமதி செய்ய முடியாது என்பது தெள்ளத் தெளிவு. ஏதுமற்ற வெறும்பரப்பல்ல நமது சட்டத்துறை. இந்து சமயச் சட்டம், முஸ்லீம் சமயச் சட்டம், கிறித்துவர்களும் பிற வகுப்பினரும் கடைப்பிடிக்கும் சட்டங்கள் ஆகிய வற்றை எல்லாம் எடுத்துக் கொண்டு அவற்றிலிருந்து ஒரு பொதுச் சட்டத்தை உருவாக்க வேண்டும். சட்டம் ஒரே சீராக அனைவருக்கும் பொருந்த வேண்டும் என்பதை ஏற்றுக் கொள்ளும்படி ஒவ்வொரு வகுப்பின ரிடமும் நாம் எடுத்துக் கூறவேண்டும்.

முதலில், நம்முடைய சட்டம் எப்படிப்பட்டது என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். உதாரணத்துக்குச் சொல்வ தென்றால் இந்து சமயச் சட்டம் ஒரு ''அடர்ந்த காடு'' போன்றது. இதனை முதலில் ஒழுங்குபடுத்த வேண்டும். பொதுச் சட்டம் பற்றிப் பேசுவதற்கு முன்னால், தம்மை ஆட்சிசெய்கிற சட்டங்கள் என்ன என்பதை மக்கள் அறிந்து கொள்ள வேண்டும்.

● ● ●

# 32

# உறுதியுடனும் நேர்மையாகவும் இரு என்று நான் சொல்கிறேன்

*1951 ஆம் ஆண்டு அக்டோபர் 27ஆம் நாள் ஜலந்தர் நகரில் நடைபெற்ற பத்திரிகையாளரின் கூட்டத்தில், காஷ்மீர் பற்றி பத்திரிகையாளர்கள் சில கேள்விகள் கேட்டனர். காமன்வெல்த் துடன் இந்தியா கொண்டுள்ள உறவுகள் பற்றியும் சில கேள்வி கள் கேட்கப்பட்டன. டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரின் பதில்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன - ஆசிரியர்கள்*

**கேள்வி :** *காஷ்மீர் பிரச்சினை பற்றி உங்கள் கருத்து என்ன?*

**பதில் :** காஷ்மீரில் வாக்கெடுப்பு நடத்தினால் அதன் முடிவு இந்தியாவுக்கு எதிராக இருக்கும் என்று நான் நினைக்கிறேன். ஜம்மு, லடாக் பகுதிகளில் உள்ள இந்துக்கள், புத்தமதத்தினர் ஆகியோர் பாகிஸ்தானுக்குள் சென்று விடாமலிருப்பதற்காக ஜம்மு, லடாக், மற்றும் காஷ்மீர் ஆகிய பகுதிகளில் மண்டல வாரியாக வாக்கெடுப்பு நடத்தலாம்.

**கேள்வி :** *சர்ச்சில் எப்படி பிரிட்டனில் மீண்டும் ஆட்சிக்கு வந்தார்?*

**பதில் :** ஈரானிய எண்ணெயும், எகிப்துப் பிரச்சினையும் திடீரென்று தோன்றியதனால் தொழிற்கட்சி தோற்றுப் போயிருக்கலாம்.

தொழிற்கட்சி ஆட்சிக்கு வந்தால் திரு.பிவான் ஆதிக்கம் செலுத்துவார், அதன் மூலம் கிரேட் பிரிட்டனின் பாதுகாப்பு பலவீனப்பட்டு விடும் என்று பிரிட்டனின் வாக்காளப் பொது மக்கள் நினைத்திருக்கக் கூடும்.

**கேள்வி :** *கன்சர்வேடிவ் கட்சி ஆட்சிக்கு வந்தால் இந்தியாவிற்கு அதன் பாதிப்பு எப்படி இருக்கும்?*

**பதில் :** பவுண்ட் ஸ்டெர்லிங் சமநிலை குறித்து சர்ச்சில் கேள்வி

எழுப்பலாம் என்பதைத் தவிர வேறெந்தப் பாதிப்பும் இருக்காது என்று நினைக்கிறேன். பாகிஸ்தானுடன் அவர்களது உறவில் சில மாற்றங்கள் வரலாம். இந்தியாவிலுள்ள இந்துக்கள் மீது சர்ச்சிலுக்கு பாசஉணர்வு ஏதுமில்லை. எனவே பாகிஸ்தான் மீது இயல்பாகவே சர்ச்சில் அனுதாபம் காட்டுவார்.

**கேள்வி :** சர்ச்சில் ஆட்சியிலிருப்பதால், காமன்வெல்த்தில் இந்தியா தொடர்ந்து இருக்க வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

**பதில் :** நாம் காமன்வெல்த்தில் இப்போது இருக்கிறோமா? நமது பிரதம மந்திரியை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. டொமினியன் அந்தஸ்து வழங்குவதால் இந்தியா திருப்தி அடையாது என்று 1929ல் அவர் அடித்துச் சொன்னார். 1942ல் ''வெள்ளையனே வெளியேறு'' இயக்கம் துவக்கப்பட்டபோது அந்த இயக்கத்தை எதிர்த்தவர் அவர். லாகூரில் அவர் சொன்னதற்கு நேர்மாறான அணுகுமுறை இது. அரசியல் சாசனத்தை நான் வரைந்த போது இந்தியா டொமினியன் அந்தஸ்து பெறுவதை அவர் வன்மை யாக எதிர்த்தார். திடீரென்று பேச்சுவார்த்தைக்காக லண்டனுக்குச் சென்ற அவர், இந்தியா காமன்வெல்தில் இருக்க வேண்டும் என்று அறிவித்தார்.

**கேள்வி :** இப்போது இந்தியா என்ன செய்ய வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

**பதில் :** இதுபற்றி நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. இது ஒரு சிக்கலான பிரச்சினை. தனக்கு எது அனுகூலமானதோ அதைத்தான் இந்தியா செய்ய வேண்டும். காமன்வெல்தில் அங்கம் வகிப்பது தனக்கு அனுகூலம் எதையும் தராது என்று இந்தியா எண்ணினால் அது வெளியேறிவிட வேண்டும். உறுதியாகவும் நேர்மையுடனும் நடந்துகொள்ளுங்கள் என்றுதான் நான் சொல்கிறேன்.

● ● ●

# 33

# தாக்குதல் வலிமை இல்லாத சுதந்திரமான வெளிநாட்டுக் கொள்கையால் ஒரு பயனும் இல்லை

டாக்டர் அம்பேத்கருக்கு பத்திரிகையாளர்களைப் பிடிக்காது. பம்பாயில் சனிக்கிழமை[1] நடந்த சாதாரண முறைக் கூட்டத்தில் அவர் இதைச் சொன்னார். பத்திரிகைகள் ஒத்துழைப்புத்தர முன்வந்த போது அதை ஏற்க மறுத்தார் அவர்.

அவர் சொன்னவற்றில் பலவும் 'அச்சிடக் கூடாது' என்ற அடிப்படையில் அமைந்ததே. அழிவை நோக்கி இந்தியாவை வெகுவேகமாக நேரு இழுத்துச் செல்கிறார் என்று அவர் சொன்னார். மற்ற நாட்டு மக்களின் விஷயங்களில் மூக்கை நுழைப்பதை விட்டு விட்டு, நம்மை நாமே தனிமைப்படுத்திக் கொண்டு சரிந்து வரும் நமது பொருளாதார வல்லமையை மேம்படுத்த வேண்டும் என்றார் அவர். சீனா இந்தியா மீது தாக்குதல் தொடுக்கக் கூடும் என்ற அச்சம் அவருக்கு தொடர்ந்து இருந்து வந்தது. நமது வாசற்படியில் சீனா இருக்கிறது, நம்மை பாதுகாத்துக் கொள்ள நம்மால் முடியாது என்று அவர் கூறினார். தாக்குதல் தொடுக்கும் வல்லமை இல்லாத சுதந்திரமான வெளிநாட்டுக் கொள்கையினால் ஒரு பயனும் இல்லை.

டாக்டர் அம்பேத்கர் வெல்லற்கரிய அறிவாற்றல் மிக்கவர். அவருடைய கருத்துக்களை ஒருவர் கொஞ்சமும் ஒத்துக் கொள்ளாமல் போனாலும் அவர் மீது மதிப்புக் கொள்ளாமல் இருக்க முடியாது. தமது வாதங்களை அவர் தெளிவாக எடுத்துச் சொல்லுவார். கேள்விகள் எதற்கும் தயங்காமல் விடையளிப்பார். நையாண்டி செய்வதில் வல்லவர் அவர்''[1].



---

1. 1951 நவம்பர் 24.
   ''நேஷனல் ஸ்டேண்டர்ட்'' நவம்பர் 25, 1951.

# 34

# அமெரிக்கா பாகிஸ்தான் பக்கம் சாய்ந்துள்ளது

''அட்டவணைச் சாதியினரின் தலைவரும் முன்னாள் மத்திய சட்ட அமைச்சருமான டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், அமெரிக்காவின் கொலம்பியா பல்கலைக்கழகம் வழங்கிய சட்டத்துறை டாக்டர் என்ற கவுரவப்பட்டத்தைப் பெற்றுக் கொண்டு பம்பாய்க்கு சனிக்கிழமை* விமானம் மூலம் வந்து சேர்ந்தார்.

இந்திய அரசியல் சாசனத்தை இயற்றுவதற்கு டாக்டர் அம்பேத்கர் செய்துள்ள பங்களிப்புக்காக, ஜுன் 5 ஆம் தேதி ஒரு சிறப்புக் கவுரவப் பட்டமளிப்பு விழா நடத்தி அவருக்கு இப்பட்டம் வழங்கப்பட்டது.[1]

- பம்பாய் ஜுன் 14, 1951 (பி.டி.ஐ)

''அரிஜனங்களின் தலைவரான டாக்டர் அம்பேத்கர், அமெரிக்கப் பொதுமக்கள் இந்தியாவை விட பாகிஸ்தானின் கொள்கைகளால் கவரப்பட்டுள்ளனர் என்றார். பாகிஸ்தான் பக்கம் அவர்கள் அதிகம் சாய்கிறார்கள் என்று அவர் மேலும் சொன்னார்.

கவுரவப் பட்டம் பெற்றுக் கொள்வதற்காக அமெரிக்கா சென்றிருந்த டாக்டர் அம்பேத்கர், அங்கு பலதரப்பட்ட மக்களுடன் நடத்திய பேச்சுக்களின் அடிப்படையில் அமெரிக்கப் பொதுஜன அபிப்பிராயம் பற்றிய தமது கருத்துக்களை வெளியிட்டார்''[2]



1. 14 ஜுன் 1952 சண்டே ஸ்டவாண்டர்ட் 16 ஜுன் 1952.
2. பம்பாய் கிரானிகிள், ஜுன் 15, 1952

# 35

# எவ்வாறாயினும் ஆங்கிலத்தைத் தக்கவைத்துக் கொள்ளுங்கள்

*அவுரங்காபாத், ஜூலை 3, 1953*

முன்னாள் மத்திய சட்ட அமைச்சரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ''கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் போதனா மொழியாக ஆங்கிலத்தை எப்படியும் தக்க வைத்துக் கொள்ள வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

ஒரு நேர்காணலின்போது ஆங்கிலம் எல்லா மொழிகளை யும்விட வளமை வாய்ந்தது என்று குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர் ''பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் ஆங்கிலத்திற்கு பதிலாக இந்தி உட்பட எந்த ஒரு இந்திய மொழியையும் பயன்படுத்த முடியும் என்று நான் நினைக்கவில்லை'' என்றார்.

அவுரங்காபாத் நகரில் இயங்கும் ''மக்கள் கல்விக் கழகம்'' என்ற அமைப்பின் நிறுவனத் தலைவரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், அவுரங்காபாத் கல்லூரியில் இந்தியையோ அல்லது வேறொரு பிராந்திய மொழியையோ போதனா மொழியாக இருப் பதற்கு தாம் அனுமதிக்கப் போவதில்லை என்று தெரிவித்தார். ஆங்கிலம்தான் போதனா மொழியாக இருக்கும் என்று அவர் கூறினார்.

இந்திய மொழிகளைப் பற்றிப் பேசிய டாக்டர் அம்பேத்கர் இந்தியின் இடத்தை வேறெந்த மொழியும் பிடிக்க முடியாது என்றார். இந்தி மேலும் விரிவடையும் என்ற காரணத்தால்தான் அவர்கள் இந்தியைத் தேர்வு செய்தனர் என்று சொன்னார்.

ஆயினும், ஆங்கில மொழி கொண்டுள்ள ஆழமும் இலக்கிய வளமும் இந்தியில் இல்லை என்று அவர் கூறினார்.

இந்தி மொழியைச் செழுமைப்படுத்த இந்தி அகாதமி ஒன்று நிறுவவேண்டும். அதில் பிரபல வல்லுனர்கள் இடம் பெற்றிருக்க வேண்டும், சொல்லகராதி ஒன்று தயாரிக்க வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் சொன்னார். - யு.பி.ஐ.''[1]



1. தி நேஷனல் ஸ்டாண்டர்டு, ஜூலை 4, 1953

# 36

# ...பொதுவிஷயங்களில் தனியொருவரின் ஆட்சி

புனாவைச் சேர்ந்த 'கேசரி' மற்றும் 'மராத்தா' என்ற பத்திரிகைகளின் ஆசிரியர்கள் 5.7.1954 அன்று டாக்டர் அம்பேத்கருக்கு ஒரு கடிதம் எழுதினர். டாக்டர் அம்பேத்கர் 15.7.1954 அன்று பதில் எழுதினார். டாக்டர் அம்பேத்கரின் பதில் கீழே தரப்படுகிறது: - ஆசிரியர்கள்.

26, அலிப்பூர் சாலை
டில்லி
ஜூலை 15, 1954

ஆசிரியர், கேசரி மற்றும் மராத்தா அலுவலகம்,
புனா - 2.

அன்புடையீர்,

1954 ஜூலை 5, தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது, அதில் தாங்கள் கேட்டுள்ள சில கேள்விகளுக்கு நான் பதில் சொல்ல வேண்டும் என்று கேட்டுள்ளீர்கள். பம்பாயிலிருக்கும்போது கல்லூரி விவகாரங்களில் நான் ஈடுபட்டிருந்ததால் உடனடியாக தங்கள் கடிதத்துக்கு பதில் எழுத முடியாமல் போனதற்காக வருந்துகிறேன். அதன் பிறகு உடனே குன்னூருக்குச் சென்று அங்குள்ள ராணுவ அதிகாரிகள் கல்லூரியில் இந்திய அரசியல் சாசனம் பற்றி நான் உரை நிகழ்த்த வேண்டி வந்தது. நேற்றுத்தான் அங்கிருந்து திரும்பினேன்.

தனியொரு நபர் பொதுவிஷயங்களில் அதிகாரம் செலுத்தி வருவதால் வெளிநாட்டு விஷயங்களில் ஒருவர் அக்கறை கொள்வது

---

கைர்மோட், தொகுதி 11, பக். 69 மறுபதிப்பு

மிகவும் கடினம். பிரதம மந்திரியின் கருத்துக்களுக்கு மாறுபடும் எந்தக் கருத்துக்கும் செவிசாய்க்க நாடு தயாராக இல்லை. எனது நிலைமையும் ஏறக்குறைய இப்படித்தான் உள்ளது. ஒரு சமயத்தில் அந்நிய விவகாரங்களில் நான் செலுத்திவந்த அக்கறையை இப்போது நான் காட்டுவதில்லை என்று சொல்லுவேன். இந்த நிலைமையில் தாங்கள் எழுப்பியுள்ள கேள்விக்கு பதில் சொல்ல நான் தகுதியுள்ளவனாக உணரவில்லை.

அன்பான வாழ்த்துக்கள்,

தங்கள் உண்மையுள்ள,
(ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்



# 37

# வெள்ளக் கட்டுப்பாடு, அணுசக்தி பயன்பாடு

## டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்

இந்தியாவில் ஏற்படும் வெள்ளப் பெருக்குகளையும் அவற்றைக் கட்டுப்படுத்தும் முறை பற்றியும் நாம் அண்மையில் நிறைய் படிக்கிறோம், கேட்கிறோம். வைஸ்ராயின் நிர்வாகக் குழு உறுப்பினராயுள்ள நான், பாசனத்துறைக்கு பொறுப்பு வகித்து வருகிறேன். பாசனம் மற்றும் நீர்வழிப் போக்குவரத்துக் கமிஷன் ஒன்றை நான் ஏற்படுத்தினேன். இதற்குத்தான் நதிநீர் கட்டுப்பாட்டு வாரியம், மத்திய நீராற்றல் கமிஷன் என்றெல்லாம் பெயர் மாற்றம் செய்யப்பட்டுள்ளது என்று நான் அறிகிறேன்.

இந்த நிறுவனங்கள் வெள்ளக் கட்டுப்பாட்டுக்கு சில வழி முறைகளை முன்வைத்துள்ளன. இவை பத்திரிகைகளில் அடிக்கடி வெளிவருகின்றன. சில பயன்மிக்க வழிகளை இந்நிறுவனங்கள் கண்டுபிடிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆயினும், எத்தகைய வழிமுறைகள் முன்வைக்கப்பட்டபோதும், அவை செயல்படுத்தப் பட்டு வெள்ளப்பெருக்குகள் கட்டுப்படுத்தப்படவில்லை என்று நாம் பார்க்கிறோம். பிரம்மபுத்திரா வெள்ளத்தை எத்தகைய நட வடிக்கைகள் மூலம் கட்டுப்படுத்தலாம் என்பதை பொறியாளர் களே சொல்ல முடியாமல் தவிக்கிறார்கள் என்பதை ஷில்லாங்கி லிருந்து வரும் செய்திகள் தெரிவிக்கின்றன. ஒரு சோதனை முறையாக ஆற்றங்கரையில் 14 லட்சம் ரூபாயில் மேடு கட்டப்பட்டது. ஆனால் வெள்ளம் அதனை அடித்துச் சென்று விட்டது.

### கரையை மேம்படுத்தல்

ஆறுகளின் குறுக்கே அணைகள் கட்டி வெள்ளப்பெருக்கைக் கட்டுப்படுத்தலாம் என்கிற கருத்தை அரசாங்கம் கைவிட்டு விட்டதாக அறிகிறோம். காலாவதியாகிப் போன கறைகளை மேடாக்கும் திட்டத்தை மேற்கொள்ள முடிவெடுத்துள்ளது அரசு. இதன் மூலம் ஏராளமான வேலைவாய்ப்புகளை உருவாக்க அது திட்டமிடுகிறது.

இது தொடர்பாக பிரபல பொறியாளர் ஒருவர் முன்வைத்துள்ள ஒரு வழிமுறையை இந்திய அரசாங்கத்துக்கும் இப் பிரச்சினையில் தொடர்புடைய பொறியாளர்களுக்கும் நான் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். பம்பாய் பத்திரிகை ஒன்றில் 1954 செப்டம்பர் 10 ஆம் நாள் இது வெளியாகி உள்ளது ''பாதுகாப்புக்கு அணுசக்தி அறிவியல்'' என்ற இந்தக் கட்டுரையை 'அப்சர்வர்' என்ற பத்திரிகையில் ஒருவர் எழுதியுள்ளார்.

நான் கவனத்துக்கு கொண்டு வருகிற வழிமுறை எளிதான ஒன்றுதான். அதாவது வெள்ளக் கட்டுப்பாட்டுக்கு அணுசக்தியைப் பயன்படுத்தலாம் என்பதே இது. 'அப்சர்வரில்' இந்தக் கட்டுரையைப் படித்த நான் அதனால் பெரிதும் கவரப்பட்டேன். இந்தக் கட்டுரையின் ஆசிரியர் யார் என்று விசாரித்தபோது திரு.சி.எஸ்.பிள்ளை என்பவர் எழுதியது இக்கட்டுரை என்று கண்டேன். சிவில் இஞ்சினீயரிங் தொழில் துறையில் முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக அவர் ஈடுபட்டுள்ளார் என்றும் இத்தகைய வேலைகளில் அவருக்கு ஏற்கனவே சற்று அனுபவம் உண்டு என்றும் நான் அறிந்தேன். அணுசக்தித் துறை ஆராய்ச்சிகள் தற்போதைய நிலைக்கு வளர்ச்சியடையும் வரை கரையை மேடாக்குதல், அரண்கள் அமைத்தல் போன்ற சாதாரண வெள்ளக் கட்டுப்பாட்டு முறைகளே மேற்கொள்ளப்பட்டு வந்தன என்று கூறுகிறார் அவர். ஆண்டுதோறும் ஏராளமான துயரங்களை ஏற்படுத்தும் நதிகளைக் கட்டுப்படுத்துவதற்கு 'நதிப் பயிற்சி' என்ற ஒரு வழிமுறை மூலம் நதிகளைக் கட்டுப்படுத்தும் அறிவுத் திறனும் தொழில் நுட்பமும் நமக்குக் கிடைத்துள்ளன. இந்த வழிமுறைகளையும் தொழில் நுட்பத்தையும் ஒரு தற்காலிக ஏற்பாடாகவே வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் அவர் மேலும் கூறுகிறார். நிரந்தரத் தீர்வுகளுக்கு வேறு வழிகளைத்தான் தேட வேண்டும்.

வெள்ளப் பெருக்குகளைக் கட்டுப்படுத்தும் அவரது நிரந்தரத் திட்டம் பற்றி என்னிடம் எடுத்துக் கூறும்படி அவரிடம் நான் கேட்டுக் கொண்டேன். அவர் சொன்னதை நான் கீழே கொடுத்திருக்கிறேன்:

''அணு விஞ்ஞான வளர்ச்சி ஒரு நிரந்தரத் தீர்வை நமக்குத் தரும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. துயர்தரும் நதியை

நமது கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வந்து அதற்குப் பயிற்சியளித்துப் பழக்கி நமது தேவைகளுக்கு அதனைப் பயன்படுத்த முடியும். அணுப்பிளப்பு என்ற நுட்பத்தைப் பயன்படுத்தி இதனை நாம் செய்ய முடியும். நியூட்ரான்கள் செயல்படும்போது வளைவு வீச்சின் மீது பூரிதம், மின்னோட்டம், பிளவு ஆற்றலை வெளிப்படுத்தும் மின்னோட்டம் ஆகியவை பற்றிய ஓமின் விதி தெரிந்திருப்பவர்களுக்கு இந்த வழிமுறைச் செயல்பாடு சுலபமாகப் புரியும்.

ஓம் விதி எப்படி வேலை செய்கிறது? அணுவிஞ்ஞானத்துக்கும் இதற்கும் என்ன தொடர்பு?

## நியூட்ரான்கள்

அணுசக்தி விஞ்ஞானிகள் இந்தக் கேள்விக்கு முழுமையான விடையளிக்க முடியும். அணு உலைகளில் பெருவெள்ளமாக நியூட்ரான்களை உற்பத்தி செய்ய முடியும். இந்த நியூட்ரான் கூட்டங்களை நதிநீரின் அடியாழத்துக்கு நுழைத்துச் சென்று நதியின் நீர் மட்டத்தையும் நீர்பிடிப்புப் பகுதிகளையும் நாம் ஒழுங்குபடுத்த முடியும். இவ்வாறாக வெள்ளப் பெருக்கைக் கட்டுப்படுத்தி, ஒழுங்குக்குள் கொண்டுவந்து நீர்ப்பாசனம், மின்னுற்பத்தி ஆகியவற்றுக்கு அதனை பயன்படுத்திக் கொள்ள முடியும். மீதியுள்ள வெள்ள நீரை உடனடியாக ஆவியாக்கிவிடலாம்.

நியூட்ரான்கள் ஊடுருவிச் சென்று இத்தகைய பயன்களை எப்படி நமக்குத் தருகின்றன என்று கேட்கலாம். இதற்கு மிக எளிதாக பதில் சொல்லலாம். நியூட்ரான்களுக்கு மின் செறிவு இல்லை. அணுவின் மையக் கருவைச் சுற்றியுள்ள எதிர்மின் செறிவுடைய எலக்ட்ரான்களால் பாதிப்புறாத நியூட்ரான்கள் ஆழமான நீருக்குள் சென்று வண்டலையும் மணலையும் தூர்வாருவதுடன் பாறைகளைக்கூடச் சுரண்டி எடுக்கும். எத்தகைய ஆழத்திலும் இந்த வேலையைச் செய்து வாரப்பட்ட அனைத்துப் பொருள்களையும் நதியின் இரு கரைகளிலும் கொண்டு வந்துவிடும் அல்லது கடலுக்குக் கொண்டு சென்று கொட்டும். நமது விருப்பத்தைப் பொறுத்து இதனைச் சில நாட்களில் செய்து முடிக்கலாம். இந்த வேலையினால் நதிப் படுகைகள் பலப்படும். நதிக் கரைகளும் பலமடையும்.

வெள்ளப் பெருக்குகள் தொடர்ந்து வரும் ஒரு பிரச்னை. இதைவிட அழிவுண்டாக்கும் சக்தி வேறெதற்கும் இல்லை. இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதில் தமது அதிகாரிகளின் ஆற்றலையும் விஞ்ஞான அறிவையும் மட்டுமே அரசாங்கம் நம்பியிருக்கலாகாது.

எந்தத் தரப்பிலிருந்து எத்தகைய ஒரு ஆலோசனை வந்தாலும் தகுதிக்கு ஏற்ப அதனை ஆய்வு செய்து பார்ப்பது அவர்களது கடமை ஆகும். பற்பல வழிமுறைகள் பாதுகாப்பை உறுதிப்படுத்தும்.



# 38

# பூதாகரமான அரசுகளை உருவாக்குவதற்கு கடும் எதிர்ப்பு

*மொழிவாரி மாநிலங்கள் அமைப்பது குறித்து பண்டித ஜவஹர்லால் நேருவுக்கு டாக்டர் அம்பேத்கர் ஒரு தந்தி அனுப்பினார். அந்தத் தந்தி பின்வருமாறு : - ஆசிரியர்கள்*

*17.1.1956*

## தந்தி

பண்டித ஜவஹர்லால் நேரு,
புதுடில்லி

டில்லிக்கு நான் செல்லுவதற்கு மருத்துவர்கள் அனுமதி அளிக்காததால் நான் நாடாளுமன்றத்திற்கு வரவில்லை. மொழிவாரி மாநிலங்கள் பற்றிய எனது கருத்துக்களை நாடாளுமன்றத்தில் தெரிவிக்க எண்ணினேன். அது முடியாமல் போகவே எனது கருத்துக்களை இந்தத் தந்தியின் மூலம் தெரிவிக்கிறேன். நான் சம்மேளனத்தின் சார்பில் பேசுகிறேன். பம்பாய் போன்ற சமஷ்டி மகாராஷ்டிராவுடன் சேரலாம். பம்பாய் தனி மாநிலமாவதையும் நான் எதிர்க்கவில்லை. எனினும் பூதாகாரமாக உ.பி, பீகார், மகாராஷ்டிரா போன்ற மாநிலங்களை உருவாக்குவதை நான் வன்மையாக எதிர்க்கிறேன். இந்த அரசுகள் மத்திய அரசுக்கு ஆபத்தாக அமைவதுடன் சிறுபான்மையினருக்கும் அரிஜனங்களுக்கும் கூட ஆபத்தாக அமையும் என்று சம்மேளனம் கருதுகிறது. உ.பி, பீகார் மாநிலங்களை மூன்றாகப் பிரிக்க வேண்டும் என்று சம்மேளனம் விரும்புகிறது. மகாராஷ்டிராவையும் மூன்றாகப் பிரிக்க வேண்டும். அரிஜனங்களை மனிதர்களாக அங்கீகரிக்க மறுக்கும் பெரும்பான்மையினரைக் கொண்ட மாநிலத்தில் அரிஜனங்களுக்கு ஒருவிதமான

1. கைர்மோட் பாகம் - 10, பக் 56-57

பாதுகாப்பும் கிட்டாது. இந்தப் பிரச்னையில் தீவிர கவனம் செலுத்த வேண்டும் என்று நான் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். இல்லையேல் விளைவுகள் கடுமையாக இருக்கும் என்று அஞ்சுகிறேன். அரிஜனங்களுக்கு எத்தகைய அரசியல் பாதுகாப்பும் இப்போது இல்லை. நம்பிக்கை இழந்த நிலையில் அவர்கள் எத்தகைய வன்முறையையும் மேற்கொள்ளக் கூடும்.

- **அம்பேத்கார்**[1]



# 39

# மகாராஷ்டிராவின் முன்னேற்றத்திற்கு அம்பேத்கர் காட்டும் வழிமுறை

## மக்கள் குரல்

*மகாராஷ்டிரா-பம்பாய் பற்றிய பிரச்னை குறித்து ராஜ்ய சபையில் அண்மையில் நான் முன்வைத்த கருத்துக்கள் பற்றி மகாராஷ்டிரர்கள் கொஞ்சமும் திருப்திப்படவில்லை என்று எனக்கு வந்த கடிதங்கள் மூலம் தெரிந்து கொண்டேன். பம்பாய் நகரில் தமக்குப் பெரும்பான்மை இல்லாமல் போகும் என்று அவர்கள் அஞ்சுகிறார்கள்.*

*இதற்கு மாறாக, குஜராத்திகளோ, ஒரு நூறு உறுப்பினர் களைக் கொண்ட சபையில் 15 சதவீதம் மக்கள் தொகை கொண்ட அவர்களுக்கு இரண்டு முதல் நான்கு உறுப்பினர்கள் பதவி மட்டுமே கிடைக்கும் என்று கருதுகிறார்கள். இரு வகுப்பாருமே கையறு நிலையில் இருப்பர். ஒருவர் மீது ஒருவருக்கு வெறுப்புணர்வு உண்டா கும். எனவே, நான் வேறொரு ஆலோசனையை முன்வைக்கிறேன்.*

*மகாராஷ்டிரா மாநிலம் இரண்டு மாநிலங்களாகப் பிரிக்கப் பட வேண்டும். ஒரு மாநிலத்தில் 1) பம்பாய் பெருநகரம், 2) தாணா மாவட்டம், 3) கொலாபா, 4) ரத்னகிரி, 5) கோலாப்பூர் மற்றும் 6) சூரத், கார்வார், பெல்காம் ஆகிய மாவட்டங்களிலுள்ள மராத்தி மொழி பேசும் பகுதிகள் அடங்கும். மாநிலங்களைப் பிரிக்கும் எல்லையாக சயாத்ரி மலைகள் விளங்கும்.*

*இந்தப் பிரிவில் உள்ள அனுகூலங்கள் என்னவென்றால் 1) வடக்கு பம்பாய் இதில் இருப்பதால் பம்பாயில் அவர்களுக்குப் பெரும்பான்மை கிடைக்கும். 2) இது ஒரு தனி கலாசார அலகாக இருக்கும். 3) தனிப்பட்ட மொழிவாரி அலகாகவும் இது விளங்கும். 4) இதன் பரப்பளவு 19800 ச.மைல்களாக இருக்கும். ஜனத்தொகை 90,67,413 ஆகும். பெரிய மாநிலமாகவும் இது திகழும். கடல் சார்ந்த*

தாகவும் போருக்குகந்த மக்களைக் கொண்டும் இந்த மாநிலம் விளங்கும்.

ஒன்றுபட்ட மகாராஷ்டிரா வேண்டும் என்று ஏன் பிராமணர்கள் வற்புறுத்துகிறார்கள் என்று எனக்குப் புரியவில்லை. இருப்பினும் அதிகாரத்திற்கு இரண்டு பேர் போட்டியிலுள்ளனர். பி.எஸ்.ஹிராய், ராமராவ் எம்.தேஷ்முக் என்போரே அவர்கள். டாக்டர் பஞ்சாப்ராவ் தேஷ்முக்கும் தமது சொந்த அபிப்பிராயம் வைத்திருக்கலாம்.

மகாராஷ்டிராவின் இரண்டாவது பிரிவிற்கு தலைநகராக எதனைக் கொள்வது என்று ஒரு சிக்கல் வரலாம். டெக்கான் பகுதி பிராமணர்கள் புனாவைத் தலைநகராக்க வேண்டும் என்பர், தற்போதுள்ள மத்திய பிரதேசத்தைச் சேர்ந்த பிராமணர்களோ நாக்பூர்தான் தலைநகராக வேண்டும் என்பர். மற்றவர்களோ இந்த இரண்டு நகரங்களிலுமே சட்டப் பேரவைக் கூட்டங்கள் மாறிமாறி நடக்க வேண்டும் என்பார்கள். இந்த மூன்று கருத்துக் களையுமே நான் கண்டனம் செய்கிறேன். ஒன்றுபட்ட மகாராஷ்டிரா என்ற கோரிக்கையின் மூலம் பேஷ்வாவை நாம் திரும்ப ஏற்கக் கூடாது. எனவே ஒன்றுபட்ட மகாராஷ்டிராவின் தலைநகராக அவுரங்காபாத் இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன். இதற்கு அருகில்தான் முஸ்லீம்களால் நிர்மூலமாக்கப்பட்ட மகாராஷ்டிராவின் அப்போதைய தலைநகரான தவுலதாபாத் உள்ளது. இங்கு அருமையான பருவநிலை நிலவுகிறது.

இந்தப் பிரச்னை உடனடியாகத் தீர்க்கப்பட வேண்டும். காங்கிரஸ் மேலிடம் என்னதான் சொன்னாலும் மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த வேட்பாளருக்கு குஜராத்தி ஓட்டுப் போடுவதோ, குஜராத்தி வேட்பாளருக்கு மகாராஷ்டிரர்கள் வாக்களிப்பதோ நடக்கப் போவதில்லை.

- டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், (புதுடில்லி)[1]



1. பிரிபிரஸ் ஜர்னல், மே 31, 1956.

# 1

# பஹிஷ்கிரிட் ஹித்காரினி சபா

டாக்டர் அம்பேத்கர் மார்ச் 9 ஆம் தேதி பம்பாய் தாமோதர் ஹாலில் ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார், அரசாங்கத்திடம், தீண்டத்தகாதவர்களின் குறைகளை எடுத்துச் சொல்வதற்காக ஒரு மத்திய நிறுவனம் ஏற்படுத்தப்பட்டது. ''பஹிஷ்கிரிட் ஹிட்காரினி சபா'' என்று இந்த நிறுவனத்துக்குப் பெயரிடலாம் என்று அவர் தெரிவித்த கருத்தினை அனைவரும் ஒப்புக் கொண்டனர். ''பயிற்சியளித்தல், கிளர்ச்சி செய்தல், ஒழுங்கமைத்தல்'' என்பது நிறுவனத்தின் உறுதிமொழியாக முடிவு செய்யப்பட்டு அது ஏகமனதாக ஒத்துக்கொள்ளப்பட்டது.

பஹிஷ்கிரிட் ஹிட்காரினி சபாவின் தலைவராக சர் சிமன்லால் ஹரிலால் செதல்வாட் எல்.எல். டி. தேர்ந்தெடுக்கப்பட்டார். நேயெர் நிஸ்ஸிம் உபதலைவர் ஆனார். ருஷ்தம்ஜி ஜின்வாலா, சொலிசிட்டர், ஜி.கே.நரிமன், டாக்டர் ஆர்.பி.பராஞ்சிபே, டாக்டர் வி.பி.சவான், பி.ஜி.கேர், சொலிசிட்டர் ஆகியோர் கமிட்டி உறுப்பினர்கள். நிர்வாகக் கமிட்டியின் தலைவரானார் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர். எஸ்.என்.சிவதர்கார் செயலாளராகவும் என்.டி.ஜாதவ் பொருளாளராகவும் பதவி ஏற்றனர். பஹிஷ்கிரிட் ஹித்காரினி சபா 1924 ஆம் ஆண்டு ஜூலை 20 ஆம் நாள் ஏற்படுத்தப்பட்டது. 1860 ஆம் ஆண்டு சட்டப்பிரிவு XXI படி அது பதிவு செய்யப்பட்டது.

இந்த நிறுவனத்தின் சட்ட விதிமுறைகளை டாக்டர் அம்பேத்கர் வரைந்தார். அந்தச் சட்ட விதிமுறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. - ஆசிரியர்கள்.

## பஹிஷ்கிரிட் ஹித்காரினி சபா

(சொசைட்டி பதிவுச் சட்டப்படி பதிவு செய்யப்பட்டது)

## சட்ட விதிமுறைகளின் நியதிகள்

**1924 ஜூலை 24 ஆம் நாள்**
**நிறுவப்பட்டது**
**தலைமை அலுவலகம்**
தாமோதர் ஹால், பரேல்
பம்பாய் - 12

---

கோவாபரேடிவ் பிரிண்டிங் பிரஸ்சில் அச்சிடப்பட்டது
91-ஆ, பரேல் ரோடு, வீனஸ் சினிமா அருகில்
சின்ச்பொக்லி, பம்பாய் - 12

---

# பஹிஷ்கிரிட் ஹித்காரிணி சபா

## சங்கத்தைப் பற்றிய குறிப்புகள்

I கூட்டமைப்பின் பெயர் : -
**"பஹிஷ்கிரிட் ஹித்காரிணி சபா"**

II இதன் நடவடிக்கைகள் பம்பாய் மாகாணத்திற்குள் மட்டும் அடங்கும்.

III சபாவின் தலைமை அலுவலகம் பம்பாய் நகரில் இருக்கும்.

IV சபாவின் நோக்கங்களும் குறிக்கோள்களும் -

அ) விடுதிகள் திறப்பதன் மூலமும், தேவைப்படுகிற விதத்திலும் விருப்பப்படியும் இதுபோன்ற செயல்களில் ஈடுபட்டு தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு கல்வியளிப்பதை விரிவுபடுத்துவது.

ஆ) நூலகங்கள், சமுதாய மையங்கள், ஆராய்ச்சி மையங்கள் ஏற்படுத்தி தாழ்த்தப்பட்ட மக்களிடையே நல்லதொரு கலாசாரத்தைப் பரப்புதல்.

இ) தொழில் சார்ந்த, விவசாயம் சார்ந்த கல்விச் சாலைகளை ஏற்படுத்தி தாழ்த்தப்பட்ட மக்களின் பொருளாதார நிலைமைகளை மேம்படுத்துதல்.

ஈ) தாழ்த்தப்பட்ட மக்களின் குறைகளைப் பிரதிநிதிப்படுத்துதல்.

உ) தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் சமுதாய எழுச்சிக்காகவும், கல்வித் தெளிவு தரவும், பொருளாதார முன்னேற்றத்தையும் நோக்க மாகக் கொண்டு செயல்படுகிற மன்றங்கள், சங்கங்கள், ஆகியவற்றை ஏற்படுத்துவது அல்லது இத்தகைய அமைப்புகளுக்கு உதவுவது.

V மேற்படி நோக்கங்களின் தொடர்ச்சியாகவும் அவற்றை எட்டு வதற்காகவும் -

1) சபாவுக்கு தேவையான உரிமைகளையும் சலுகைகளையும் விலை கொடுத்து வாங்குவது, வாடகைக்குப் பெறுவது, அல்லது குத்தகைக்கு எடுப்பது.

2) சபாவுக்குத் தேவையான, வசதியான கட்டிடத்தையோ, கட்டிடங்களையோ எழுப்புவது, கட்டுவது, மாற்றியமைப்பது, செப்பனிடுவது.

3) சபாவுக்குச் சொந்தமான எந்தச் சொத்தின் பகுதியையும், உரிமைகளையும், சலுகைகளையும் விற்பது, மேம்படுத்துவது, விஸ்தரிப்பது, மாற்றிக்கொள்வது, குத்தகைக்கு விடுவது, அடமானம் வைப்பது, விற்றுவிடுவது, கணக்கு மாற்றுவது, நிர்வகிப்பது.

4) சபாவின் நோக்கங்களுக்கும் குறிக்கோள்களுக்கும் மாறு பாடில்லாத வகையில் சபாவின் பொதுவான அல்லது குறிப்பிட்ட செயல்பாடுகளுக்கு உகந்தவாறு நன்கொடைகளை, சொத்துக் களை ஏற்றுக்கொள்வது.

5) சபாவின் நோக்கங்களுக்கும் குறிக்கோள்களுக்கும் ஒத்த நோக்கங்களையும் குறிக்கோள்களையும் கொண்ட எந்த சொஸைட்டியையும் சங்கத்தையும் சபாவுடன் இணைத்துக் கொள்வது.

VI சபாவின் நிர்வாகம் கீழ்க்கண்டவற்றால் நடத்தப்படும்:

1) அறங்காவலர் குழு
2) நிர்வாகக் குழு
3) கட்டுப்பாட்டுக் குழு

இவை சபாவின் விதிகளுக்கேற்ப நியமிக்கப்படும்.

VII அறங்காலர் குழு, நிர்வாகக் குழு, கட்டுப்பாட்டுக் குழு ஆகிய வற்றின் எந்தவொரு கூட்டத்திலும் முறையே 10,7,15 உறுப் பினர்கள் குறைந்தபட்சமாகப் பங்கேற்க வேண்டும். ஒத்தி வைக்கப் பட்ட கூட்டத்திற்கு குறைந்தபட்ச உறுப்பினர் பங்கேற்பு தேவை யில்லை.

VIII அறங்காவலர் குழு, நிர்வாகக் குழு, கட்டுப்பாட்டுக் குழு ஆகியவற்றின் உறுப்பினர்கள் அறங்காவலர் குழு, நிர்வாகக் குழு, கட்டுப்பாட்டுக் குழு ஆகியவற்றில் உறுப்பினராக இருக்கின் றமைக்காக, சபாவின் சொத்துக்களிலிருந்தோ, நிதியிலிருந்தோ எத்தகைய பண உதவியும் பெறமாட்டார்கள்.

## விதிகள்

1. 18 வயதிற்கு மேற்பட்ட எந்தவொரு நபரும், ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும சபாவின் உறுப்பினராகும் தகுதி பெற்றவர் ஆவார்.

2. சபாவின் உறுப்பினராக விரும்பும் எவரும் இதற்கான படிவத்தில் விண்ணப்பிக்க வேண்டும்.

3. உறுப்பினராவதற்காகத் தரப்பட்ட எந்தவொரு விண்ணப் பத்தையும் நிராகரிப்பதற்கு நிர்வாகக் குழுவிற்கு அதிகாரமுண்டு.

4. சபாவின் நலன்களைப் பாதிக்கும் வகையில் மிகமோசமான நடத்தையில் ஈடுபடுகிற எந்தவொரு சபா உறுப்பினரையும் சபாவின் பொதுக்குழுக் கூட்டத்தில் கலந்து கொள்கிற 3/4 பங்கு உறுப்பினர்களின் வாக்களிப்பு மூலம் நீக்கிவிடும் உரிமை பொதுக் குழுவிற்கு உண்டு.

5. சபாவின் உறுப்பினர்கள் பின்வருமாறு வகைப்படுத்தப் பட்டுள்ளனர் :

I புரவலர்கள் : ஒரே தவணையில் ரூ.3000 அல்லது அதற்கு மேல் செலுத்துபவர்கள் அல்லது நிர்வாகக் குழு அனுமதிக்கிற தவணைகளில் இத்தொகையைச் செலுத்துபவர்கள்.

II ஆதரவாளர்கள் : ரூ.2000/- அல்லது அதற்கு மேற்பட்ட தொகையை ஒரே தவணையில் செலுத்துபவர்கள் அல்லது நிர்வாகக் குழு அனுமதிக்கிற தவணைகளில் இத்தொகையைச் செலுத்துவோர்.

III அனுதாபிகள் : ஒரே தவணையில் ரூ.1000/- அல்லது அதற்கு மேலான தொகையை செலுத்துபவர்கள் அல்லது இத்தொகையை நிர்வாகக் குழு அனுமதிக்கிற தவணைகளில் செலுத்துபவர்கள்.

IV ஆயுட்கால உறுப்பினர்கள் : ரூ.500/- அல்லது அதற்கு மேற் பட்ட தொகையை ஒரே தவணையில் செலுத்துபவர்கள் அல்லது நிர்வாகக்குழு அனுமதிக்கிற தவணைகளில் இத்தொகையைச் செலுத்துபவர்கள்.

V இணை உறுப்பினர்கள் : ரூ.200/- அல்லது அதற்கு மேற் பட்ட தொகையை ஒரே தவணையில் செலுத்துபவர்கள் அல்லது நிர்வாகக் குழு அனுமதிக்கிற தவணைகளில் இத்தொகையைச் செலுத்துபவர்கள்.

VI சாதாரண உறுப்பினர்கள் : இவர்கள் கீழ்வரும் வகையினர்

அ) ஆண்டுக்கு ரூ.25/- செலுத்துபவர்கள்
ஆ) ஆண்டுக்கு ரூ.10/- செலுத்துபவர்கள்
இ) ஆண்டுக்கு ரூ.5/- செலுத்துபவர்கள்
ஈ) ஆண்டுக்கு ரூ.3/- செலுத்துபவர்கள்
உ) ஆண்டுக்கு ரூ.1/ செலுத்துபவர்கள்

## அறங்காவலர் குழு

6. ஆயுட்கால அறங்காவலர்களாக 16 பேர் இருப்பார்கள். சபாவின் அசையாச் சொத்துக்களும், அசையும் சொத்துக்களும் மற்றும் சபாவின் நிதி, அவை எந்த வடிவத்தில் இருந்தாலும் இவர்கள் பொறுப்பில் இருக்கும். இந்த 16 பேரில் குறைந்தது 4 பேர் பம்பாய்வாசிகளாக இருத்தல் வேண்டும்.

7. ஆரம்பத்தில் அறங்காவலர்கள், சபாவின் பொதுக்குழு உறுப் பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இறப்பு, ராஜினாமா, செயலாற்ற இயலாமை, வெளிநாட்டுக்குக் குடியேறிவிடுதல் போன்ற காரணங்களால் அறங்காவலர் இடம் ஒன்று காலியானால்

இதன்பின் ஆறு மாதங்களுக்குள் கூடுகின்ற சபாவின் பொதுக்குழு கூட்டத்தில் கலந்து கொள்கிறவர்களில் 3/4 பங்கு வாக்களிப்பின் மூலம் அந்த இடம் நிரப்பப்படும்.

8. அறங்காவலர் குழுவில், எல்லா நேரங்களிலும், மஹர், சாம்பர், மாங்தேட் வகுப்பினரைச் சேர்ந்த உறுப்பினர்கள் ஒருவரோ, பலரோ இருப்பர். கொங்கன் பகுதியைச் சேர்ந்த நான்கு பேர், குஜராத்திலிருந்து இருவர், கனரா பகுதியிலிருந்து இருவர், பம்பாய் மாகாணத்தின் இதர பகுதிகளிலிருந்து 8 பேர் அங்கம் வகிப்பர்.

9. அசையும் சொத்துக்கள், அசையா சொத்துக்கள், நிதிகள் ஆகிய அனைத்தும் அறங்காவலர்களின் பெயர்களில்தான் இருக்கும.

10. நிர்வாகக் குழு வருடாந்திர உத்தேசச் செலவுகளுக்கான ஒரு பட்ஜெட்டை தேவையான பெருஞ்செலவுத் தலைப்புகள், சிறு செலவுத் தலைப்புகளில் தயாரித்து அளிக்கும். இதனை அறங்காவலர்கள் ஒப்புக் கொண்டபின் இது அமலுக்கு வரும். அந்த வருடத்தின் இடையில் நிர்வாகக் குழு கூடுதல் செலவின பட்ஜெட்டையும் தயாரித்து அளிக்கலாம்.

11. சபாவில் அதிகாரபூர்வ ஆண்டு முடிந்த மூன்று மாதத்திற்குள் ஆண்டுக்கு ஒரு முறையாவது அறங்காவலர் கூட்டம் நடைபெறும். இக்கூட்டம் அடுத்த ஆண்டுக்கான பட்ஜெட்டை நிறைவேற்றும். நிர்வாகக் குழு அழைப்பின்பேரில் கூடுதல் பட்ஜெட் பிரேரணைகளை நிறைவேற்றுவதற்காக தேவையான பொழுதெல்லாம் அறங்காவலர்கள் கூட்டம் நடைபெறும். அறங்காவலர் குழுக் கூட்டத்தில் பெரும்பான்மை வாக்குகளால்தான் எதையும் முடிவு செய்யும்.

12. அறங்காவலர் குழுவினரின் பட்ஜெட் கூட்டத்தில், சபாவின் தலைவர், பொதுச் செயலாளர், பொருளாளர் ஆகியோர் கூடுதல் உறுப்பினர்களாகக் கலந்து கொள்வர். இவர்கள் அறங்காவலர்களாக இருந்தாலொழிய வாக்களிக்கும் உரிமை இவர்களுக்கு இல்லை.

13. அறங்காவலர் குழுக் கூட்டத்துக்கும், அறங்காவலர் ஒருவரைத் தேர்வு செய்ய நடைபெறும் பொதுக்குழு உறுப்பினர்களின் ஒவ்வொரு கூட்டத்துக்கும் ஒரு மாத முன்னறிவிப்பு தர வேண்டும்.

*14.* அறங்காவலர்கள் ஒரு தீர்மானம் நிறைவேற்றுவதன் மூலம் தமது அதிகாரங்களை வேறு ஒரு உறுப்பினருக்கோ, பலருக்கோ தரமுடியும். இவர்கள் அந்த உறுப்பினர்களின் பெயரில் இருக்கும் சொத்துக்களையோ, நிதிகளையோ கையாளுவார்கள்.

*15.* பொதுச் செயலாளர் சார்பாக அனுப்பப்படும் சுற்றறிக்கையில் கண்டுள்ள பிரேரணை, பிரச்சினை பற்றி அறங்காவலர்களுக்கு வாக்களிக்கும் உரிமை உண்டு. இவ்வாறு சுற்றறிக்கையில் கண்டுள்ள விஷயங்கள் குறித்து நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் அனைத்தும் நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் பதிவு செய்யப்படும்.

*16.* அவ்வப்போது நடக்கும் அறங்காவலர் கூட்டங்களுக்கு தலைமை தாங்குவதற்கு தமக்குள் ஒருவரை அவர்கள் தேர்ந் தெடுப்பர். இவ்வாறு தேர்வு செய்யப்பட்ட தலைவர் கூட்டத்தின் நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் கூட்டம் கலைவதற்கு முன்பு கையொப்பம் இடுவார்.

*17.* சபாவின் செயலாளர், அறங்காவலர் குழுவின் அலுவல் சார்ந்த செயலாளராக இருந்து, அறங்காவலர் குழுவின் ஒவ்வொரு கூட்டத்துக்கும் நிகழ்ச்சி நிரலைத் தயாரிப்பார்.

## நிர்வாகக்குழு

*18.* நிர்வாகக் குழுதான் அதிகார பூர்வ ஆண்டில் சபாவின் நிர் வாகியாக இருக்கும். இருபது உறுப்பினர்களைக் கொண்ட இக் குழு பின்கண்டவாறு பிரதிநிதித்துவப்படும் :

i) பம்பாய் வாசிகளாக உள்ள, அறங்காவலர் குழுவில் உள்ள நான்கு பேர் ஒவ்வொரு ஆண்டும் அறங்காவலர் குழுவால் தேர்வு செய்யப்படுவார்கள்.

ii) ஒவ்வொரு ஆண்டும் பொதுக்குழு பன்னிரண்டு பேரைத் தேர்வு செய்யும்.

iii) மேற்படி 16 பேர் இன்னும் 4 பேரைத் தேர்ந்தெடுப்பர். இவர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினைச் சேர்ந்த சபா உறுப்பினர்களாக இருத்தல் வேண்டும்.

*19.* நிர்வாகக் குழுவில், இறப்பு, ராஜினாமா, செயல்திறமின்மை, மற்றும் வெளிநாட்டில் குடியேறுதல் ஆகிய காரணங்களால், ஏற்படும் காலியிடத்தை, நிர்வாகக் குழுவில் உள்ள இதர உறுப்பினர்கள், இதற்காக அமைக்கப்படும் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றி அக்காலியிடத்திற்கு வேறொருவரை தேர்வு செய்து நிரப்புவர்.

*20.* நிர்வாகக் குழுவிற்கு கீழ்க்கண்ட அதிகாரங்கள் இருக்கும்:

அ) சபாவின் அறங்காவலர்கள் சார்பாக சபாவின் நிதிகளையும் சொத்துக்களையும் சபாவின் நோக்கங்களுக்காக நிர்வகிப்பது.

ஆ) நிறுவனத்தின் ஆதாயத்திற்காகவும், சபாவின் நடவடிக்கைகளுக்காகவும் சபாவின் அறங்காவலர்கள் சார்பாக சொத்துக்களையோ, பொருள்களையோ வாடகைக்கு எடுப்பது, விலைக்கு வாங்குவது வேறு வழிகளில் ஏற்றுக்கொள்வது மற்றும் அந்தச் சொத்துக்களை பொருள்களை விற்பனை செய்வது.

இ) சபாவின் நோக்கங்களையும் குறிக்கோள்களையும் கருத்தில் கொண்டு எத்தகைய நடவடிக்கைகளுக்கும் ஏற்பாடு செய்வது, நிறுவனங்களைத் தொடங்குவது.

ஈ) எந்தவொரு நிறுவனத்தையும் நிரந்தரமாகவோ, தற்காலிகமாக நீக்கிவிடுவது. ஆனால் எந்தவொரு விடுதியும் அறங்காவலர்களில் 3/4 பங்கினரின் வாக்களிப்பு இல்லாமல் நிரந்தரமாகவோ, தற்காலிகமாகவோ நீக்கப்படாது.

உ) சபாவின் கிளைகளை, எங்கும் எப்பொழுதும், உசிதமானது என்று தோன்றினால், திறப்பது அல்லது மூடுவது.

ஊ) அவ்வப்போது அலுவலர்களையோ மற்ற வேலையாட்களையோ நியமிப்பது, அவர்களின் ஊதியத்தையும், வேலைக்கான நிபந்தனைகளை நிர்ணயிப்பது, அவர்களை தற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ பதவி நீக்கம் செய்வது.

எ) சபாவின் பலவித நடவடிக்கைகளையும் நிர்வாகத்தையும் முறைப்படுத்துவதற்காக, துணை விதிகளை வரைவது, மாற்றுவது, திருத்துவது. இவ்வாறு ஏற்றுக்கொள்ளப்பட்ட துணை விதிகள்,

விதிகளின் வலிமை பெற்றிருக்கும். கட்டுப்பாட்டுக் குழுவால் இந்த துணை விதிகள் திருத்தப்படுகின்ற அல்லது நீக்கப்படுகிற வரை இவ்வலிமை இருக்கும்.

ஏ) தொடர்ந்து நான்கு குழுக் கூட்டத்துக்கு வராத குழு உறுப்பினரின் இடம் காலியாகி விட்டதாக அறிவிப்பது.

ஐ) நன்கொடை வழங்குபவரின் பட்டியலை தொடர்ந்து பராமரிப்பது.

ஒ) சபாவின் பொதுக்குழுக் கூட்டம், அறங்காவலர் குழுக் கூட்டம், கட்டுப்பாட்டுக் குழுவின் கூட்டம் ஆகியவற்றுக்கு ஏற்பாடு செய்து அவற்றை நடத்துவது.

21. இக்குழு தனது முதல் கூட்டத்தில் தனது உறுப்பினர்களிடையிலிருந்து ஒரு தலைவர், ஒரு பொதுச் செயலாளர், ஒரு பொருளாளரைத் தேர்வு செய்யும். இவர்களைத் தவிர துணைச் செயலாளர்களாகவும், அமைப்புச் செயலாளராகவும் தனது உறுப்பினர்களில் ஒருவரையோ பலரையோ தேர்வு செய்யலாம். இத்தகைய அலுவல் பொறுப்புள்ளவர்களின் இடம் காலியானால், அடுத்து வரும் சாதாரண மாதாந்திரக் கூட்டத்தில், இதர உறுப்பினர்கள் ஒரு தீர்மானம் நிறைவேற்றி இந்த இடத்துக்கு வேறொருவரைத் தேர்வு செய்யலாம்.

22. சபாவுக்குச் சொந்தமான பணத்தை முறையாக வங்கிகளில் செலுத்துவதும் அங்கிருந்து எடுத்துக் கையாள்வதும், தலைவர், பொதுச் செயலாளர், பொருளாளர் ஆகியோரின் கூட்டுப் பொறுப்பாகும். குழுவினால் நிர்ணயிக்கப்பட்ட வங்கியில் அல்லது வங்கிகளில் சபாவின் அறங்காவலர்களின் பெயரில் பணத்தை செலுத்த வேண்டும்.

23. வங்கிகளிலிருந்து பணம் எடுப்பது பட்ஜெட்டிற்கு கண்டிப்பாக ஏற்றபடி இருத்தல் வேண்டும். சபாவின் தலைவர், பொதுச் செயலாளர் மற்றும் பொருளாளர் ஆகியோரின் கூட்டுக் கையெழுத்தின் மூலம்தான் பணத்தை எடுக்க வேண்டும்.

24. குழுவின் கூட்டம் சாதாரணக் கூட்டமாகவோ சிறப்புக் கூட்டமாகவோ இருக்கலாம்.

25. எல்லாப் பண வரவுகளையும், வங்கியிலிருந்து எடுக்கப்பட்ட பணத்தின் கணக்குகளையும் சபாவின் அடுத்த சாதாரண மாதாந்திரக் கூட்டத்தில் சமர்ப்பிக்க வேண்டும்.

26. குழுவின் சாதாரணக் கூட்டம் மாதத்தின் 15ம் தேதி அல்லது அதையொட்டி நடக்கும்.

27. கோரம் இல்லாமல் ஒத்தி வைக்கப்படுகிற கூட்டம், தலைவரோ அவரில்லாத நேரத்தில் பொதுச் செயலாளரோ நிர்ணயிக்கிற தேதியில், 5 நாட்கள் முன்னறிவிப்புச் செய்து நடத்தப் படும்.

28. குழுவின் சாதாரணக் கூட்டம் நடைபெற ஏழு நாட்கள் முன்னறிவிப்புச் செய்ய வேண்டும். இந்த அறிவிப்புடன் கூட்டத்திற்கான நிகழ்ச்சி நிரலும் இணைக்கப்பட்டிருக்க வேண்டும்.

29. குழுவின் சாதாரணக் கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் கீழ்க்கண்ட விஷயங்கள் அடங்கும்.

அ) கடைசியாக நடந்த கூட்டத்தின் நிகழ்ச்சிக் குறிப்பேட்டைப் படித்தல்.

ஆ) சபாவின் நிறுவனங்கள், கிளைகள் ஆகியவற்றின் அறிக்கைகளையும் மாதாந்திரக் கணக்குகளையும் ஏற்றுக் கொள்ளுதல்

இ) செயலாளர்களுக்கு வந்துள்ள கடிதங்கள், ஆலோசனைகள் மற்ற தகவல்களைப் பற்றி முடிவெடுத்தல்

ஈ) சபாவின் பொது நிர்வாக விஷயங்கள் பற்றி முடிவெடுத்தல்

உ) செலவுக் கணக்குகளையும் பில்களையும் ஏற்றுக் கொள்ளுதல்

ஊ) தலைவரின் அனுமதியுடன் வேறு விஷயங்கள் பற்றி அலசுதல்

## நிர்வாகக் குழுவின் சிறப்புக் கூட்டங்கள்

30. நிர்வாகக் குழுவின் தலைவரோ, செயலாளரோ 3 நாட்கள் முன்னறிவிப்பு செய்து ஒரு சிறப்புக் கூட்டத்தை கூட்டலாம்.

31. நிர்வாகக் குழுவின் ஏதாவது நான்கு உறுப்பினர்கள் பொதுச் செயலாளருக்கு எழுத்து பூர்வமாக வேண்டுகோள் விடுத்து சிறப்புக்

கூட்டம் ஒன்றைக் கூட்டலாம். இத்தகைய சிறப்புக் கூட்டத்தை வேண்டுகோள் வந்த பத்து நாட்களுக்குள் பொதுச் செயலாளர் கூட்டுவார்.

32. வேண்டுகோள் கடிதத்தில் சிறப்புக் கூட்டம் நடத்த வேண்டியதன் நோக்கம் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். முன்னறிவிப்பில் இந்த நோக்கம் சுற்றுக்கு விடப்படும்.

33. சிறப்புக் கூட்டத்துக்கான கோரம் விதி சாதாரண கூட்டத்துக்கான விதிகளைப் போன்றதே ஆகும்.

## தலைவர்

34. நிர்வாகக் குழுத் தலைவர் பின்கண்டவாறு செயல்படுவார்:

அ) நிர்வாகக் குழுவின் எல்லாக் கூட்டங்களுக்கும் இவர் தலைமை தாங்குவார். வாக்களிப்பின் போது இருசாராருக்கும் சம அளவில் வாக்குகள் கிடைக்கும் பட்சத்தில் தனக்குள்ள உறுப்பினர் வாக்கைத் தவிர சமநிலை முறிக்கும் இன்னொரு வாக்கை அளிப்பார்.

நிர்வாகக் குழுக் கூட்டத்தில் தலைவர் கலந்து கொள்ளாத போது, குழுவின் இதர உறுப்பினர்கள் ஒரு கூட்டத் தலைவரைத் தேர்ந்தெடுப்பர். கூட்டத்தை நடத்துவதற்குத் தலைவருக்கு அளிக்கப்பட்ட அதே அதிகாரங்கள் இவருக்கும் உண்டு.

ஆ) கூட்டத்திற்கு வந்துள்ள பிரச்சினைகளை வரிசைக் கிரமம் செய்து விவாதிப்பது, கூட்டத்தின் நடைமுறையை தீர்மானிப்பது ஆகிய விஷயங்களில் தலைவரின் முடிவே இறுதியானதாகும்.

இ) பற்றுச்சீட்டுகளில் கையெழுத்திடுவது.

ஈ) சபாவின் வெளிநாட்டுக் கடிதப் போக்குவரத்தை மேற்கொள்வது.

உ) நிர்வாகக் குழுவின் சாதாரணக் கூட்டத்திலும் மற்றும் சிறப்புக் கூட்டத்திலும் மேற்கொள்ளப்பட்ட பணிகள் குறித்து தலைவர், துணைத் தலைவர்கள் ஆகியோருக்கு நிகழ்ச்சிக் குறிப்பேட்டை அனுப்பி வைப்பது.

## பொதுச் செயலாளர்

35. நிர்வாகக் குழுவின் பொதுச் செயலாளர் பின்கண்ட பணிகள் செய்வார்:

அ) சபாவின் அனைத்து ஆவணங்களையும் கைவசம் வைத்திருப்பது, அவற்றுக்கு பொறுப்பாளராக இருப்பது.

ஆ) சபாவின் விதிகளுக்கு ஏற்ப நிர்வாகக்குழு, அறங்காவலர் குழு, கட்டுப்பாட்டுக் குழு ஆகியவற்றின் கூட்டங்களை தேவைப் படும்போது கூட்டுவது, கூட்ட நடவடிக்கைகளை நிர்வாகக் குறிப் பேட்டில் பதிவு செய்வது.

இ) சபாவின் நிறுவனங்கள், கிளைகள் ஆகியவற்றின் மாதாந்திர அறிக்கைகளையும் கணக்குகளையும் கேட்டுப் பெறுதல், அவற்றின் கூட்டங்களின் நடவடிக்கைகளை நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் பதிவு செய்தல்.

ஈ) சபாவின் கடிதப் போக்குவரத்தை கவனித்துக் கொள்ளல்

உ) சபா உறுப்பினர்களைப் பற்றியும் அவர்களது முகவரியை யும் ஒரு பதிவேட்டில் பதிவு செய்து வைத்தல்.

ஊ) சபாவின் பொதுக் கூட்டங்கள் பற்றி ஆண்டறிக்கை சமர்ப் பித்தல்.

## பொருளாளர்

36. பொருளாளர் கீழ்க்கண்ட பணிகளைச் செய்வார்:

அ) சபாவின் சார்பில் சந்தா வசூலித்தல், நன்கொடை பெறுதல், அவற்றிற்கு ரசீதுகள் தருதல்.

ஆ) கணக்குகளைச் சரியாக வைத்திருத்தல்.

இ) பணம் கொடுக்க வேண்டியவருக்கு பட்டுவாடா செய்தல்.

ஈ) சபாவின் வருமானம், செலவுகள் பற்றி ஒவ்வொரு ஆண்டும் அறிக்கை தயாரித்து நிர்வாகக் குழுவிடம் சமர்ப்பித்தல். இதில்

சபாவின் நிறுவனங்களின் தனித்தனிக் கணக்குகளும் இருத்தல் வேண்டும். முந்தைய/ ஆண்டுப் பொதுக் குழுக் கூட்டத்தில் நியமிக்கப்பட்ட தணிக்கையாளரால் இக்கணக்குகள் தணிக்கை செய்யப்பட்டு, இத்தணிக்கை அறிக்கையை, சபாவின் ஆண்டறிக்கையுடன் இணைப்பதற்காக செயலாளருக்கு அனுப்பி வைத்தல்.

## கட்டுப்பாட்டுக் குழு

கட்டுப்பாட்டுக் குழு சபாவின் ஒரு கூட்டமைப்பாக இருக்கும். இக்குழுவில்

அ) சபாவின் அறங்காவலர்கள்

ஆ) சபாவின் ஊழியர்கள்

இ) புரவலர்கள்

ஈ) ஆயுட்கால உறுப்பினர்கள்

உ) அனுதாபிகள்

ஊ) இணை உறுப்பினர்கள்

எ) சபாவின் ஒவ்வொரு கிளையிலும் இருந்து ஒரு பிரதிநிதி

ஏ) சபாவின் தலைவர், துணைத் தலைவர்கள், பொதுச் செயலாளர்,துணைச் செயலாளர்கள், அமைப்புச் செயலாளர்கள் மற்றும் பொருளாளர் ஆகியோர் இருப்பர்.

38. நிர்வாகக் குழுவினால் நிர்வகிக்கப்படும் சபாவின் நடவடிக்கைகள் விதிகளின்படி இருக்கின்றனவா என்று கட்டுப்பாட்டுக் குழு கண்காணிக்கும். கடுமையான விதிமீறல்கள் இருந்தால் சபாவின் தலைவரோ, துணைத் தலைவர்களோ குழுத்தலைவரை அழைத்து விளக்கம் கோரலாம்.

39. சபாவின் தலைவர் தனது விருப்பப்படியோ, சபா உறுப்பினர்களில் 10 பேர் தரும் எழுத்துப்பூர்வ வேண்டுகோளின்படியோ, கட்டுப்பாட்டுக் குழுவின் கூட்டத்தை கூட்டுமாறு செயலாளரிடம் கூறலாம். இதன்படி தலைவரிடமிருந்து கடிதம் வந்த 45 நாட்களுக்குள் இக்கூட்டம் கூட்டப்பட வேண்டும். கூட்டத்தில் பங்கெடுத்துக் கொள்வோரில் 2/3 பங்கு வாக்குகளின் மூலம் பிரச்சினை பற்றி நிறைவேறும் தீர்மானம் நிர்வாகக் குழுவைக் கட்டுப்படுத்தும்.

*40. கட்டுப்பாட்டுக் குழுவின் ஒவ்வொரு கூட்டமும் நடைபெற ஒருமாத முன்னறிவிப்புச்செய்ய வேண்டும்.*

*41. சபாவின் தலைவர், கட்டுப்பாட்டுக் குழுக் கூட்டம் ஒவ்வொன் றிற்கும் தலைமை வகிப்பார். சபாவின் தலைவர் இல்லாத போது, கூட்டத்திற்கு வந்திருக்கிற துணைத் தலைவர்களில் ஒருவரை வாக்கெடுப்பு மூலம் கூட்டத்தலைவர் ஆக்கலாம்.*

*42. விதிமுறைகளின்படி விலக்களிக்கப்பட்டுள்ள விஷயங்கள் தவிர மற்ற அனைத்து விஷயங்களையும் கட்டுப்பாட்டுக் குழுக் கூட்டங்களில் பெரும்பான்மை வாக்கே முடிவு செய்யும்.*

*43. சபாவின் பொதுச் செயலாளர் கட்டுப்பாட்டுக் குழுவின் அலுவல் சார்ந்த செயலாளராக இருப்பார். கூட்டங்களின் நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் கூட்ட நடவடிக்கைகளை இவர் பதிவு செய்வார். இந்தக் குறிப்பேட்டில், கூட்டம் கலைவதற்கு முன் தலைவர் கையொப்பம் செய்வார்.*

## சபாவின் பொதுக்குழு

*44) சபாவின் பொதுக்குழு உறுப்பினர்களின் கூட்டம் ஒவ்வொரு ஆண்டும் பிப்ரவரி மாதம் நடைபெறும்.*

*45) சபாவின் அதிகாரபூர்வ ஆண்டு டிசம்பர் 31ல் முடிவடையும். முந்தைய அதிகார பூர்வ ஆண்டு முடிந்த இரண்டு மாதத்திற்குள் வருடாந்திர பொதுக்குழுக் கூட்டம் நடைபெறும்.*

*46) தங்கள் சந்தாத் தொகையைச் செலுத்திவிட்ட உறுப்பினர்கள் மட்டுமே வாக்களிக்க அனுமதிக்கப்படுவர்.*

*47) சபா உறுப்பினர்களின் பொதுக் குழுக் கூட்டம் நடப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்னால் அறிவிப்புச் செய் ய வேண்டும்.*

*48) சபாவின் தலைவர் சபாவின் வருடாந்திரக் கூட்டத்துக்குத் தலைமை வகிப்பார். தலைவர் இல்லாதபோது துணைத் தலைவர் களில் ஒருவர் கூட்டத் தலைவராக வாக்கெடுப்பு மூலம் தேர்வு செய்யப்படுவார்.*

49) வருடாந்திரப் பொதுக் குழுக் கூட்டத்தில் கீழ்க்கண்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்:-

அ) கடந்த ஆண்டில் ஆண்டறிக்கையைப் படிக்கக் கேட்டு ஏற்றுக்கொள்ளல்

ஆ) அடுத்த ஆண்டுக்காக 12 நிர்வாகக் குழு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தல்

இ) அடுத்த ஆண்டுக்கு ஒரு தணிக்கையாளரை நியமித்தல்

ஈ) அடுத்த ஆண்டுக்கு ஒரு தலைவரையும், ஆறுக்கு மேற்படாத துணைத் தலைவர்களையும் தேர்வு செய்தல்.

50) சங்க விதிகளையும் சட்ட விதிமுறைகளையும், விசேஷமாக அழைக்கப்பட்ட கூட்டத்தில் கலந்து கொள்ளும் உறுப்பினர்களில் 4/5 பங்கு வாக்குகளின் அடிப்படையில் மாற்றலாம், திருத்தலாம் அல்லது நீக்கிவிடலாம். இத்தகைய மாற்றம், திருத்தம் அல்லது நீக்கம் சபாவின் அறங்காவலர்களில் 3/4 பங்கினர் ஏற்றுக் கொண்டால் மட்டுமே அமலுக்கு வரும்.



# 2

# தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நிறுவனம்

*1930 ஆம் ஆண்டு லண்டனில் நடந்த முதல் வட்டமேசை மாநாட்டில் டாக்டர் அம்பேத்கர் கலந்து கொண்டார். அங்கு அவர் தங்கியிருந்த போது தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நிறுவனத்தின் சார்பாக வேண்டுகோள் அறிக்கை ஒன்று தயாரித்தார். இவ்வறிக்கையில் தீண்டத்தகாதவர்களின் மேம்பாட்டுக்காக இந்திய மன்னராட்சிப் பகுதிகளிலிருந்து நிதி உதவி கோரப்பட்டது. இதன் விளைவாக பண உதவி அவருக்குக் கிடைத்தது. இந்தப் பணியை கடுமையாக அவர் செய்தார். இதே போல இரண்டாவது வட்டமேசை மாநாடு 1931 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் நடந்த போதும் ஒரு வேண்டுகோள் அறிக்கை தயாரித்து விநியோகித்தார். அந்த வேண்டுகோள் அறிக்கை கீழே கொடுக்கப்பட்டுள்ளது :*

## தாழ்த்தப்பட்ட
## வகுப்பினர் நிறுவனம்
## சார்பாக ஒரு வேண்டுகோள்

*தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நிறுவனம் என்பது தாழ்த்தப்பட்ட மக்களுக்கான ஓர் அமைப்பு ஆகும். இந்த அமைப்பின் பணிகள் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக தாழ்த்தப்பட்ட வகுப்பினராலேயே நடத்தப்படுகிறது. தாழ்த்தப்பட்ட வகுப்பினரை, அவர்களின் இன்றைய ஒடுக்கப்பட்ட நிலையிலிருந்து, இந்திய சமூகத்தில் சமூக, அரசியல் சமத்துவ நிலைக்கு உயர்த்தி அவர்களின் பொருளாதார நிலைமைகளை மேம்படுத்துவதே இந்நிறுவனத்தின் நோக்கமாகும்.*

*இந்த நிறுவனம் 1925 ஆம் ஆண்டு துவக்கப்பட்டு இன்று வரை செயல்பட்டு வருகிறது. இந்தியா முழுதும் கிளைகள் கொண்டு இயங்கும் ஓர் அகில இந்திய அமைப்பாக இது உருப்பெறும். ஆயினும் வசதியின்மை காரணமாக இந்நிறுவனத்தின் பணிகள் இப்போது பம்பாய் மாகாணத்தில் மட்டும் நடைபெறுகிறது. தாழ்த்தப்பட்ட மக்களின் நிலைமைகளை மேம்படுத்துவதற்கு உழைப்பதாக உறுதிமொழி ஏற்றுக் கொண்ட சமூக ஊழியர்களைக்*

கொண்டு இந்நிறுவனம் இயங்கிவருகிறது. இந்த ஊழியர்கள் பெரும்பாலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினைச் சேர்ந்தவர்கள். பம்பாய் மாகாணத்தின் பல்வேறு மாவட்டங்களிலிருந்து வந்தவர்கள் இவர்கள். இந்த சமூக ஊழியர்களின் பணிகளை, பம்பாயிலுள்ள இந்நிறுவனத்தின் தலைமையகத்திலிருந்து, தாழ்த்தப்பட்ட வகுப்பினரைச் சேர்ந்த பிரமுகர்களைக் கொண்ட ஒரு நிர்வாகக் குழு வழி நடத்துகிறது, ஒருங்கிணைக்கிறது.

## நிறுவனத்தின் பணிகள்

இந்நிறுவனம் தோன்றிய ஐந்தாண்டுகளில் அது அடைந்துள்ள பெரு வளர்ச்சியைப் பற்றி இந்தக் கையேட்டில் சுருக்கமாகச் சொல்லுவது கூட சிரமம் ஆகும். தனது குறிக்கோளான தாழ்த்தப் பட்ட மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துகிற முயற்சியில் இந்நிறுவனம் என்னென்ன பணிகளைச் செய்து வருகிறது என்பதை இங்கு குறிப்பிடலாம். இந்தப் பணிகளைப் பின்கண்ட தலைப்பு களின் கீழ் தரலாம் :

**1) பிரச்சாரம் .** 'ஜனதா' (மக்கள்) என்ற பெயர் கொண்ட செய்திப் பத்திரிகையை நிறுவனம் வெளியிடுகிறது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அவர்கள் எதிர்கொள்ளும் தனிப் பிரச்சினைகளையும், அன்றைய பொதுப் பிரச்சினைகள் அவர்களை எப்படிப் பாதிக்கிறது என்பது பற்றியும் அவர்களுக்கு அறிவொளியூட்டுவது இதன் நோக்கம். தங்கள் சிவில் உரிமைகளை அவர்கள் அறிந்து கொள்ளச் செய்வதும், தங்கள் குறைகளை அவர்கள் எடுத்துச் சொல்லவும் இவற்றை விரைவாக நிவர்த்தி செய்வதற்காக பொதுக் கருத்தை உருவாக்கவும் இப்பத்திரிகை முயற்சி செய்கிறது. சமத்துவம் என்ற கொள்கையே பத்திரிகையின் கொள்கை. கடந்த மாதம் வரை பத்திரிகை மாதமிருமுறை வெளிவந்தது. தற்போது வாராந்திரப் பத்திரிகை ஆகியுள்ளது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கல்வியறிவு தரும் பொருட்டு அவ்வப்போது நிறுவனம் பிரசுரங்களையும் வெளியிட்டு வருகிறது.

**2. சிவில் உரிமை இயக்கம்.** தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சிவில் உரிமைகளை வழங்குவதற்கு வகை செய்யும் சட்டங்கள் பல இருந்த போதிலும், தாழ்த்தப்பட்டோர் இச்சட்டங்களால் பயனடைவதற்கு மக்களிடையே உள்ள பழக்கங்கள் தடையாக உள்ளன. தமது சிவில் உரிமைகளை தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் பெற்றுத் தருவது

நிறுவனத்தின் நோக்கமாக இருப்பதால், சட்டம் எங்கெல்லாம் குறுக்கிடாதோ அந்த விஷயங்களிலெல்லாம் நிறுவனம் செயல்படுகிறது. பெரும்பான்மை இந்துக்கள், இந்தச் சட்டங்கள் தமது கவுரவத்துக்கு இழுக்கு உண்டாக்குவதாகவும், இந்திய சமுதாயம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு மரபுகள் மூலம் விதித்துள்ள சமுதாய அந்தஸ்தை அவை மீறுகின்றன என்றும் கூறி அவர்கள் தமது உரிமைகளை அடையவிடாமல் தடுக்கின்றனர்.

தமது உரிமைகளுக்கு இடையூறுகள் உண்டாக்கப்படுவது பற்றி தாழ்த்தப்பட்ட மக்கள் நிறுவனத்திடம் அளித்துள்ள புகார்கள் ஏராளமானவை. இவை பற்றி நிறுவனம் செய்துள்ள பரிகாரப் பணிகளை விவரிக்க இயலாது. பள்ளிகளில் தாழ்த்தப்பட்ட குழந்தைகளுக்கு இடம் மறுப்பது, பேருந்துகள், படகுகள், சாலையோர உணவு விடுதிகள் இவை எதிலும் அவர்கள் நுழைய அனுமதி மறுப்பது என்று தாழ்த்தப்பட்ட மக்கள் படும் இன்னல்கள் ஏராளம். தனித்தனி மனிதர்கள் சிவில் உரிமை மறுப்புக்கு ஆளாவது பற்றிய விஷயங்களை கவனிப்பதுடன் தாழ்த்தப்பட்ட மக்களுக்குச் சில விஷயங்களில் உள்ள சட்டபூர்வ நிலை என்ன என்பதை சோதனையாக சில சம்பவங்களைக் கவனிப்பதன் மூலம் நிலைநாட்ட முயல்கிறது.

மூன்றாண்டுகளுக்கு முன்னால், பொது நீர் நிலைகளை பயன்படுத்த தாழ்த்தப்பட்ட மக்களுக்கு உள்ள உரிமைகள் பற்றி, ஏராளமான பொருள் செலவில் ஒரு சிவில் வழக்கு தொடரப்பட்டது. முதல் முறையாக தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குச் சாதகமாக அப்போது நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது. இந்தத் தீர்ப்புக்கு எதிராக மேல்சாதி இந்துக்கள் மேல்முறையீடு செய்துள்ளனர். இது நீதிமன்றத்தில் நிலுவையில் உள்ளது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கோயில்களில் வழிபடும் உரிமை கோரி கிளர்ச்சி செய்து வருகிறது நிறுவனம். ஒரு சோதனை முயற்சியாக நீதிமன்றத்தில் இந்தப் பிரச்சினையைத் தீர்க்க வழக்குத் தொடுக்கவும் நிறுவனம் முடிவு செய்துள்ளது.

**3. குறைகளைக் களைதல்:** அரசாங்கத் துறைகள் மேற்கொள்ளும் நிர்வாகச் செயல்கள்தான் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் படும் அவதிகளுக்குக் காரணமாகிறது. இந்தியப் பொதுப் பணிகளில் உள்ளோரில் மிகப் பெரும்பான்மையினர் மேல்சாதி இந்துக்களே என்பதை மனதில் கொள்ள வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பினர்

மீது காட்டப்படும் வெறுப்பு அபரிமிதமானது. மேல்சாதி இந்துக் களுக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் இடையில் ஏற்படுகிற வழக்குகளில், நிர்வாகத்தினரும் நீதிபதிகளும் கூட மேல்சாதி இந்துக்களுக்கு ஆதரவாகச் செயல்படுவது அடிக்கடி நிகழ்கிறது. இந்த விஷயத்தில் நிறுவனம் சிறப்பு கவனம் செலுத்துகிறது. அரசாங்கத் துறை தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு எதிராக அநியாய மான உத்திரவுகள் பிறப்பித்தால் இவர்களின் சார்பாக அரசாங்கத் துக்கு விண்ணப்பிப்பதற்கு விசேஷ அமைப்பு ஒன்றை நிறுவனம் ஏற்படுத்தியுள்ளது. தாழ்த்தப்பட்டவருக்கு எதிராக தவறாக வழங்கப் பட்டுள்ள கீழ் நீதிமன்றங்களின் தீர்ப்புகள் பொது முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும்போது, இதனை எதிர்த்துப் போராடுவது தனியொருவரின் வசதிகளுக்கு அப்பாற்பட்டதாக இருக்கும். அப்போதெல்லாம் மேல் நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்கிற பணியை நிறுவனம் தன் பொறுப்பாக எடுத்துக் கொள்ளும். அல்லது தனிப்பட்ட ஒருவருக்கு மேல் முறையீடு செய்வதற்கு உதவிகள் வழங்கும்.

**4. நலப் பணிகள்:** தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் தீவினை அவர் களது வறுமை. எனினும் அவர்களின் வறுமைக்குக் காரணம் தீண்டாமை. இதனால் தொழில் வாய்ப்பு வழிகள் அனைத்தும் அவர்களுக்கு மூடப்பட்டுள்ளன. இந்நிறுவனம் ஆரம்பத்தி லிருந்தே தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பொருளாதார நிலை மேம் பாட்டுக்காக தீவிர முயற்சிகள் மேற்கொண்டு வருகிறது. இது தொடர் பாக வழியடைக்கப்பட்டுள்ள அரசுத் துறைகளில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரை சேர்க்கும் பணியில் நிறுவனம் தீவிரமாகப் போராடி வருகிறது. நிறுவனத்தின் முயற்சிகள் குறிப்பிடத்தக்க வெற்றிகளை ஈட்டியுள்ளன. பல்வேறு அரசுத் துறைகளில் தாழ்த்தப்பட்ட வகுப் பினர் நிறையப்பேர் பணியில் சேர்ந்துள்ளதுடன், தீண்டாமை காரணமாக வழியடைக்கப்பட்டிருந்த துறைகளிலும் இப் பிரிவினர் வேலைவாய்ப்புக்கள் பெற்றுள்ளனர். காவல்துறையில் கிடைத்துள்ள வேலைவாய்ப்புகளை இதற்கு ஒரு உதாரணமாகச் சொல்லலாம். தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பொருளதார நிலையை மேம்படுத்துவதற்காக நிறுவனம் மேற்கொண்ட இன்னொரு முயற்சி, தனிப்பட்ட விவசாயிகளாக பாடுபடுவதற்கு அவர்களுக்கு விவசாய நிலம் பெற்றுத் தந்ததுதான், பம்பாய் மாகாணத்தில் பல பகுதிகளில் தரிசு நிலங்கள் ஏராளமாக உள்ளன. விவசாயம் செய் வதற்குத் தயாராக உள்ள எவருக்கும் இந்த நிலத்தை குத்தகைக்கு அரசு தருகிறது.

நிறுவனம் துவங்கப்படுவதற்கு முன்னால், சாதி இந்துக் களுக்குத்தான் இந்த நிலம் முழுவதும் வழங்கப்பட்டு வந்தது. நிலம் வழங்கும் அதிகாரம் படைத்த வருவாய்த் துறை அதிகாரிகள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் விண்ணப்பிக்கும் போது, ஒரு துண்டு நிலம் கூட அவர்களுக்குக் கொடுக்கவில்லை. இந்த நிலத்தில் ஒரு கணிசமான பகுதியை தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஒதுக்க வேண்டுமென்பதற்காக இந்த அமைப்பு போராடி வந்துள்ளது. இந்த நிலத்தை வழங்குவது பற்றி அரசு வகுத்துள்ள கொள்கையை மாற்றியமைத்து தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் நிலம் கிடைக்க இது வழிசெய்தது. முன்னர் விவசாயக் கூலிகளாக இருந்து தமது வாழ்க் கையை ஓட்டி வந்த தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த குடும்பத் தினர் பலர் நிறுவனத்தின் பெருமுயற்சியால் சொந்த நிலத்தில் விவசாயம் செய்யும் உழவர்களாக மாறியுள்ளனர்.

## நிறுவனத்தின் தேவைகள்

நிறுவனத்தின் பிரதான தேவைகள் மூன்று, முதல் தேவை அச்சக அமைப்பை பெரிதுபடுத்துவது. பாரத் பூஷண் அச்சகம் என்ற பெயர் கொண்ட ஒரு அச்சகத்தை நிறுவனம் பராமரித்து வருகிறது. தனக்குச் சொந்தமாக ஓர் அச்சகம் வைத்துக் கொள்ள வேண்டும் என்பதில் இரண்டு நோக்கங்கள் இருந்தன. நிறுவனம் வெளியிடும் 'ஜனதா' பத்திரிகையையும் அவ்வப்போது வேறு பிரச்சார இலக் கியங்களை வெளியிடுவதில் சிரமம் இருக்கக் கூடாது என்பது முதல் நோக்கம். அடுத்ததும் முக்கியமானதுமான நோக்கம் நிறுவனத்தின் பணிகளுக்கு ஒரு வருமானம் ஈட்டுவதற்கு ஓர் ஆதாரமாக அது விளங்கும் என்பதே.

ஆனால், நிறுவனத்திற்கு பொருளீட்டித் தருவதற்கு பதிலாக அச்சகம் நிறுவனத்திற்கு ஒரு சுமையாக ஆகிவிட்டது. சிறிய இயந் திரங்களே அச்சகத்தில் உள்ளதால், போட்டி விலையில் சிறுஅச்சு வேலைகளையோ, புத்தகம் அச்சிடும் வேலையையோ நிறுவனம் மேற்கொள்ள முடியவில்லை.

அச்சகத்தில் பெரிய இயந்திரங்களை நிறுவ வேண்டும் அல்லது அச்சகமே இல்லாமல் போகவேண்டும். அச்சகத்தை விட்டுவிடுவது சாத்தியமில்லை. ஏனென்றால் இன்றைய நிலைமை

களில் சாதி இந்துக்களான அச்சக உரிமையாளர்கள், ஒரு சாதியின் மூலம் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் செய்திப் பத்திரிகையை அச்சிட மறுக்கும் வாய்ப்பு எப்போதும் உண்டு. நிறுவனத்தின் இரண்டாவது தேவை தலைமையகம் பம்பாயில் செயல்பட ஒரு கட்டிடம் தேவை என்பதாகும். நிறுவனம் தற்போது ஒரே கட்டிடத்தில் இல்லை. அதன் அலுவலகங்கள் ஆங்காங்கு உள்ளன. பலவிதப் பணிகளைச் செய்துவரும் ஊழியர்களின் தனி வீடுகளில் அவை இயங்கி வருகின்றன. வாடகைக் கட்டிடங்களில் நிறுவனம் செயல்படுவதில் பல சிரமங்கள் உள்ளன. வாடகைக்கு ஆகும் செலவை நிறுவனம் தாங்க முடியாமல் இருப்பது இச்சிரமங்களில் ஒன்று. அடுக்குமாடிக் குடியிருப்புகளில், தீண்டாமை வழக்கம் காரணமாக, வாடகைக்கு இடம் பிடிப்பது, அப்படியே இடம் கிடைத்தாலும் அண்மையில் குடியிருக்கும் பழமைவாத இந்துக்களின் ஆட்சேபணை காரணமாக நிறுவனத்தை காலி செய்யும்படி கோரலாம். இவற்றின் காரணமாக நிறுவனத்துக்கு நல்ல இடம் கிடைப்பது கஷ்டமாகிறது. அலுவலகங்கள் பல இடங்களில் பரவலாக உள்ளதால் பற்பல வேலைகளை ஒன்றுபடுத்துவது கஷ்டமாக இருக்கிறது. இதன் காரணமாக நிறுவனத்தின் பணிகளில் சுணக்கம் ஏற்படுகிறது.

நிறுவனத்தின் மூன்றாவது தேவை, நிறுவனத்தின் பணிகளை நிறைவேற்ற முழுநேர ஊழியர்கள். தற்போது பகுதிநேர ஊழியர்களே நிறுவனத்தில் இருக்கின்றனர். இவர்கள் தமது ஓய்வு நேரத்தை சமுதாய முன்னேற்றத்துக்காக செலவிடுகிறார்கள். இவர்கள் அன்பின்பாற்பட்ட சேவையாக தமது உழைப்பைத் தருகின்றனர். இதற்கெல்லாம் காரணம் என்னவென்றால் முழுமையான சம்பளம் கொடுத்து ஊழியர்களைப் பணியமர்த்த நிறுவனத்தால் இயலாமலிருப்பதே. இதுதான் நிறுவனத்தின் மிகப்பெரிய பலவீனம். தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு நிவாரணம் வழங்குவதற்கு நிறுவனம் செய்கிற பணிகளுக்கு குந்தகமாக இது விளங்குகிறது. நிறுவனத்தின் பணிகள் இவர்களுக்குக் கணிசமாகத் தேவைப்படுகின்றன. நிறுவனத்தின் பணியாளர்கள் அனைவரும் பகுதிநேர ஊழியர்களாக இருப்பதால் இப்பணியில் பெருமளவு தொய்வு ஏற்படுகிறது. சமுதாயப் பணிகளுக்குத் தமது நேரம் முழுவதையும் செலவிடுகிற, முழுமையாக சம்பளம் பெறுகிற பணியாளர்களைக் கொண்டுதான் இந்த பலவீனத்தைப் போக்க முடியும்.

## 40,000 பவுன்கள் தேவை

நிறுவனத்தின் மூன்று தேவைகளான 1) அச்சக நிதி, 2) கட்டிட நிதி, 3) பராமரிப்பு நிதி ஆகியவற்றுக்கு 40,000 பவுன்கள் வேண்டும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் வாழ்க்கையை மேம்படுத்த வேண்டுவது அவசரத் தேவை. ஆனால் இதை விட குறைந்த அவசரத் தேவையும் மனிதாபிமானமும் கொண்ட நோக்கங்களுக்காக ஏராளமான தொகை இந்தியாவில் செலவிடப்படுகிறது என்பது அனைவரும் அறிந்ததே. கருணை யுள்ளம் கொண்டுள்ள பொதுமக்கள் ஆதரவுடன் இத்தொகையை வசூலிப்பது அசாத்தியமானதல்ல என்று நிறுவனம் நம்புகிறது. இருண்ட சக்திகளுக்கு எதிரானப் போராட்டம் தேக்கமடைந்து கதியற்றிருக்கும் மக்களின் வாழ்வில் நம்பிக்கையையும் ஒளியை யும் ஏற்றுவதற்கு செய்யப்படும் இந்த முயற்சி மனித குலத்தின் எத்தனையோ முயற்சிகளில் ஒன்றுதான். ஆனால் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் வாழ்க்கையை மேம்படுத்தும் செயல் நோக்கத்தின் ஒரு அம்சம் என்னவென்றால் இம்மக்கள் ஒரு அவல நிலையில் உள்ளனர் என்பதே. வாய்ப்புக்களைத் தவறாகப் பயன்படுத்துகிற காரணத்தால் மனிதகுல நோக்கங்கள் கவிதையாக்கப்படுவ தில்லை. எதிராளிகளால் அடித்து வீழ்த்தப்பட்ட மனிதகுலக் குறிக்கோள்கள் விடாப்பிடியாக இழிவான நிலைக்குத் தள்ளப் பட்டுள்ளன. எழுந்து நிற்க இவர்கள் செய்யும் முயற்சிகளை பழமைவாத இந்துத்துவம் ஈவிரக்கமின்றி தொடர்ந்து முறியடித்து வருகிறது.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நலன்களுக்காக விடுக்கப் படும் இந்த வேண்டுகோள் இந்துக்களுக்கோ இந்தியர்களுக்கோ மட்டுமல்ல. தாழ்த்தப்பட்ட வகுப்பினரை மேம்படுத்தும் பிரதான பொறுப்புடைமை கொண்ட பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் உறுப் பினர்கள் அனைவருக்கும் இந்த வேண்டுகோள் விடுக்கப்படு கிறது. கீழே விழுந்துள்ள, இன்னும் சரியாகச் சொன்னால் கீழே தள்ளப்பட்டுள்ள மக்களிடம் நட்புக் கொள்ளவும் அவர்களை முன்னேற்றவும் செய்வது தமது கடமை என்று கருதுகிற அனை வருக்கும் விடுக்கப்படும் வேண்டுகோள் இது. இந்த வேண்டு கோள் வீண்போகாது என்று நிறுவனம் நம்புகிறது. தேவையான தொகை கணிசமானதுதான். ஆயினும் இந்தச் சுமையைப் பலரும் பகிர்ந்து கொண்டால் அவர்களால் இது ஆகக் கூடியதே.

கடந்த ஆண்டு விடுக்கப்பட்ட இந்த வேண்டுகோளுக்கு குறைந்த காலத்தில் பின்கண்ட நன்கொடைகள் வந்தன:

| | | |
|---|---|---|
| 1. | துகாஜிராவ் ஹோல்கர், முந்நாள் இந்தூர் மகாராஜா | 360 பவுன் |
| 2. | போபால் நவாப் | 200 பவுன் |
| 3. | ஆகாகான் | 175 பவுன் |
| 4. | பரோடா மகாராஜா | 150 பவுன் |
| 5. | பிகானீர் மகாராஜா | 100 பவுன் |
| 6. | காஷ்மீர் மகாராஜா | 100 பவுன் |
| 7. | பாட்டியாலா மகாராஜா | 100 பவுன் |
| 8. | சர் . கவாஸ்ஜி ஜெஹாங்கீர் | 75 பவுன் |
| 9. | தர்பங்கா மகராதிராஜ் | 50 பவுன் |
| 10. | சாங்க்லி தலைவர் | 25 பவுன் |

இந்த நன்கொடைகள் அனைத்தும் நன்றியுடன் பெற்றுக் கொள்ளப்பட்டன. கடந்த முறை கிடைத்த ஆதரவை விடவும் தாராள மான ஆதரவு இந்த முறை கிட்டும் என்று நம்புகிறேன்.

**பி.ஆர்.அம்பேத்கர்,**
தலைவர், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நிறுவனம்
நிரந்தர முகவரி:
**தாமோதர் ஹால்,**
**பரேல்,**
**பம்பாய் - 12,**
**இந்தியா**

**நவம்பர், 1931.**



★ வீடேல் அச்சகம், 26, கோர்டோன் தெரு, லண்டன் W.C.I மற்றும் பெட்போர்ட் வெளியிட்ட கையேட்டிலிருந்து மறுஅச்சிடப்பட்டது.

# 3

# சுதந்திரத் தொழிற்கட்சி

தனது நண்பர்களுடன் கலந்து விவாதித்த டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் சுதந்திரத் தொழிற்கட்சி என்ற பெயரில் ஒரு கட்சியைத் தொடங்கினார், நிலமில்லாதவர்கள், ஏழைக் குத்தகைதாரர்கள், மற்றும் விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோரின் பிரச்சினைகளையும் குறைகளையும் தீர்ப்பதில் முழு கவனம் செலுத்தும் நோக்கத்துடன் இக்கட்சி துவக்கப்பட்டது. இதன் பின்னணியில் ''டைம்ஸ் ஆப் இந்தியா'' பத்திரிகை அவரைப் பேட்டி கண்டது. அப்போது கட்சியின் நோக்கங்கள், குறிக்கோள்கள் பற்றி அவர் விளக்கினார்.

## சுதந்திரத் தொழிற்கட்சியின் பிரதான அம்சங்கள்

## சுதந்திரத் தொழிற்கட்சி

## அதன் தொடக்கம் மற்றும் நோக்கங்கள்

**(டைம்ஸ் ஆப் இந்தியாவின் ஆகஸ்ட் 15, 1936 இதழிலிருந்து மறுபதிப்புச் செய்யப்பட்டது)**

சுதந்திரத் தொழிற்கட்சி
வெளியீடு
எண் - 1

பம்பாய் மாகாண சட்டசபையின் இரு அவைகளுக்கும், புதிய சட்ட விதிகளின்படி போட்டியிடுவது என்ற நோக்கத்துடன் பம்பாயில் ஒரு புதிய அரசியல் கட்சி தோற்றுவிக்கப்பட்டுள்ளது. ''சுதந்திரத் தொழிற்கட்சி'' என்று பெயர் கொண்ட இக்கட்சியை தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் தலைவரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் துவக்கியுள்ளார்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக பிரத்யேகமாக ஒரு கட்சி தொடங்குவது என்றுதான் ஆரம்பத்தில் டாக்டர் அம்பேத்கர் நினைத்தார் என்று தெரிகிறது. இந்த வகுப்பினரின் தேவைகளைப் பூர்த்தி செய்கின்ற வகையில்தான் கட்சியின் வேலைத் திட்டம் வரையப்பட்டிருந்தது. ஆனால் மற்ற வகுப்பினரிடையே இருந்த அவரது நண்பர்களின் விருப்பத்தின்படி, கட்சிக்கு ஒரு பொதுவான பெயர் வைக்க இசைந்து அதன் வேலைத்திட்டத்தை பொதுவான வார்த்தைகளால் வரைந்துள்ளார். தேர்தலில் கட்சியின் சார்பில் போட்டியிட விருப்பம் கொண்டு, சட்டசபையில் அதன் வேலைத் திட்டத்திற்கு ஏற்ப செயல்பட விருப்பமுள்ள எவரும் கட்சியில் சேரலாம்.

## பொதுவான வேலைத் திட்டம்

''டைம்ஸ் ஆப் இந்தியா'' பத்திரிகை நிருபருக்கு பேட்டி யளித்த டாக்டர் அம்பேத்கர், இந்தக் காலத்தில்/வகுப்புவாரியாக கட்சிகளை அமைக்கக் கூடாது என்ற எண்ணத்தில், தனது நண்பர் களின் விருப்பத்திற்கு ஏற்ப, கட்சியின் பெயரையும் அதன் வேலைத் திட்டத்தையும் விரிவுபடுத்தி, மற்ற வகுப்பினரும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் இணைந்து செயல்பட வழி செய்திருப்பதாகக் கூறினார். கட்சியின் மையக் கருவாக தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் 15 உறுப்பினர்கள்தான் இருப்பர். ஆனால் மற்ற வகுப்பினரைச் சேர்ந்தவர்களும்/கட்சியில் சேரலாம்.

தமக்காக ஒதுக்கப்படாத தொகுதிகளிலும் தாழ்தப்பட்ட வகுப்பினரின் வாக்குகள் பெருமளவு இருக்கின்றன. எனவே தமது கட்சியில் சேர விரும்பும் எந்த வேட்பாளருக்கும் அந்த வாக்குகள் அளிக்கப்படும் என்று டாக்டர் அம்பேத்கர் தெரிவித்தார்.

கட்சி உறுப்பினர் பதவி எல்லா வகுப்பினருக்கும் திறந்தே இருக்கிறது என்று டாக்டர் அம்பேத்கர் தெளிவுபடுத்தி, பொது வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் வாக்குகள் இத்தகைய வேட்பாளர்களுக்கு அளிக்கப்படும் என்று கூறினார். மற்ற வகுப்பிலிருந்து சில நபர்கள் இக்கட்சியில் சேர விருப்பம் தெரிவித்துள்ளனர். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிற மற்றவர்கள் கட்சி அலுவலகத்தில் உள்ள கட்சிச் செயலாளருடன் தொடர்பு கொள்ளலாம்.

சுதந்திரத் தொழிற்கட்சி எப்படி ஒன்றிணைந்து செயல்படும் என்று கேட்டபோது டாக்டர் அம்பேத்கர், சட்டசபை உறுப்பினர்கள் பலதரப்பட்டவர்களின் கூட்டுக் கலவையாக இருக்காது என்றும் தமது முயற்சிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட நபர்கள் அனைவரும் ஒருவருக்கொருவர் நண்பர்களாகி ஒருமுகமாக வாக்களிக்க ஒத்துக்கொள்வார்கள் என்றார். வாக்காளர்கள் மத்தியில் வேர் கொண்டுள்ள கட்சி உறுப்பினர்கள் அதனடிப்படையிலேயே போட்டியிடுவார்கள்; தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ள வேலைத் திட்டத்தை ஆதரிப்பதாக வாக்காளர்களுக்கு அவர்கள் உறுதிமொழி அளித்துள்ளார்கள். அவர்கள் கட்சி வகுத்துள்ள ஒழுக்க விதிகளுக்குக் கட்டுப்பட்டிருப்பர்.

## கட்சியின் கதவுகள் அனைவருக்கும் திறந்தே உள்ளன

குறிப்பாக இந்தப் பெயரை கட்சிப் பெயராக ஏன் தேர்ந்தெடுத்தீர்கள் என்று டாக்டர் அம்பேத்கரிடம் கேட்டபோது அவர் சொன்னார். மற்ற அரசியல் அமைப்புகளிடமிருந்து இக்கட்சி சுதந்திரமாகச் செயல்படும் என்றும், ஆயினும் எங்கெல்லாம் ஒத்துழைப்பது சாத்தியமோ அங்கெல்லாம் தனது கட்சி மற்ற கட்சிகளுடன் ஒத்துழைக்கும் என்றார். உழைக்கும் மக்களின் நல்வாழ்க்கையை முன்னேற்றுவதே தனது வேலைத் திட்டமாகக் கொண்டுள்ளது என்ற பொருளில் இக்கட்சி தொழிலாளர் மக்கள் கட்சி ஆகும். உழைப்பு என்பது தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு மிகவும் பொருந்துவதால் தொழிற் கட்சி என்ற பெயர் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கட்சி என்பதற்கு பதிலாக பயன்படுத்தப்படுகிறது.

## கட்சியின் குறிக்கோள்கள்

### அரசியல் சாசனம் குறைபாடுள்ளது என்றாலும் அதன்படி வேலை செய்வது

கட்சியின் வேலைத் திட்டத்தை விளக்கிப் பேசிய டாக்டர் அம்பேத்கர் நெடிய சிந்தனைக்குப் பின்னரும், இக்கட்சியின் வேலைத் திட்டத்தில் ஆர்வம் கொண்ட மற்றவர்கள் அனைவரையும் கலந்தாலோசித்த பிறகுமே இது வரையப்பட்டிருக்கிறது என்று கூறினார்.

புதிய அரசியல் சாசனம் ஏராளமான குறைபாடுகளைக் கொண்டுள்ளது என்றும், முழுமையான பொறுப்பு வாய்ந்த அரசாங்கம் இதன் மூலம் சாத்தியமல்ல என்றும் கட்சி உணர்கிறது. அரசியல் சாசனத்தின் பல அம்சங்களை கட்சி எதிர்க்கிறது. குறிப்பாக இரண்டாவது சபையை ஏற்படுத்துவதை கட்சி ஒத்துக் கொள்ளவில்லை. அரசியல் சாசனத்தின்படி செயல்படத் தயாராக உள்ள கட்சி, ஆளுநர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அவசரகால அதிகாரங்களும், தனிப்பட்ட அதிகாரங்களும், பொறுப்புள்ள அரசாங்கம் என்ற அமைப்பைக் குலைத்து விடாமல் பார்த்துக்கொள்ளும்.

பொருளாதார பிரச்னைகளைப் பற்றி :

1) விவசாய உற்பத்தித் திறனை அதிகரிக்கும் வகையில் நில அடமான வங்கிகள், விவசாய உற்பத்தியாளர்களின் கூட்டுறவு சொசைடிகள், மார்க்கெட்டிங் சொசைடிகள் ஆகியன ஏற்படுத்தப்படும்.

2) நிலங்கள் துண்டுதுண்டாக இருப்பதால், முதலீடுகள் செய்வதும், மேம்படுத்தப்பட்ட விவசாய முறைகளைக் கையாள்வதும் முடியாமலிருக்கிறது. வறுமையில் உழல இது ஒரு நேரடிக் காரணமாக இருக்கிறது என்று கட்சி கருதுகிறது.

### மக்கள் தொகைப் பிரச்சினை

நிலவுடைமைகள் துண்டுதுண்டாக இருப்பதும் அதன் காரணமாக விவசாயிகள் வறுமையில் உழல்வதும் மக்கள் தொகைப் பெருக்கத்தின் காரணத்தால்தான் என்று கட்சி கருதுகிறது.

எனவே நிலத்தை நம்பி இருக்கும் ஜனத்திரளின் அளவைக் குறைத்தாலொழிய நிலங்கள் துண்டுபடுவது தொடரும், அதனால் விவசாயிகளின் வறுமைநிலை இன்றுள்ளது போலவே தொடரும். விவசாயிகளுக்கு உதவி செய்வதற்கும் விவசாய உற்பத்தித் திறனை உயர்த்துவதற்கும் செய்ய வேண்டிய பிரதான வேலை மாநிலத்தை தொழில் மயப்படுத்துவதுதான். எனவே, பழைய தொழிற்சாலைகளைச் சீரமைத்து, மாநிலத்திலுள்ள இயற்கை வளத்துக்கு புதிய தொழில்கள் தொடங்கவும் கட்சி முயற்சி செய்யும்.

3) மக்களின் திறமையையும் அவர்களது உற்பத்தித் திறனையும் மேன்மைப்படுத்தும் நோக்கோடு தொழில்நுட்ப பயிற்சிகளை பெருமளவுக்கு அளிக்க வேண்டும் என்று கட்சி கருதுகிறது.

4) மக்களின் நலன்களுக்காக அரசாங்கம் தொழில்கள் நடத்துவதையும் அவற்றை நிர்வகிப்பதையும் கொள்கை அளவில் கட்சி ஒத்துக்கொள்கிறது.

5) மக்களின் எந்தவொரு வகுப்பினருக்கோ அநீதி இழைக்கும் பொருளாதார முறைமையை மாற்றியமைக்கவோ, திருத்தவோ நீக்கிவிடவோ எமது கட்சி முயலும்.

6) குத்தகை விவசாயிகளிடம் நிலச் சொந்தக்காரர்கள் அதீதக் குத்தகைத் தொகை வசூலிப்பதையும் அவர்களை நிலத்தை விட்டு வெளியேற்றுவதையும் எதிர்த்து கட்சி சட்டம் கொண்டுவரும். குறிப்பாக அ) கோடி முறை ஆ) தலுக்தாரி முறை ஆகியவற்றில் அல்லல்படும் குத்தகைதாரர்களுக்கு நிவாரணம் வழங்கப்படும்.

7) விவசாயத் தொழிலாளர்களுக்கும், தொழில்துறைத் தொழிலாளர்களுக்கும் அவர்கள் சுமாரான வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையான குறைந்தபட்ச ஊதியம் வழங்குவதற்கு கட்சி முயலும்.

8) தொழில்துறை தொழிலாளர்களுக்கு, வேலைவாய்ப்பு, வேலை நீக்கம், பதவி உயர்வு, அதிகபட்ச வேலைநேரம், சரியான கூலி கொடுத்தல், சம்பளத்துடன் கூடிய விடுப்பு, முடிந்த அளவுக்கு வாழ்க்கை வசதிகள் செய்தல், போனஸ் வழங்குதல் வயது காரணமாகவோ, இயலாமை காரணமாகவோ ஓய்வு பெறுபவர்களுக்கு ஓய்வூதியமும் மற்ற சலுகைகளும் கிடைக்கச் செய்தல்

ஆகிய அனைத்தையும் முறைப்படுத்த வகை செய்யும் சட்டம் கொண்டுவர கட்சி பாடுபடும். தொழிலாளர்கள் நோய்வாய்ப் பட்டாலோ, வேலையை இழந்தாலோ, விபத்துக்குள்ளானாலோ அவர்களுக்கு நிவாரணம் கொடுக்கும் வகையில் சமுதாய காப்பீடு திட்டம் ஒன்றை கட்சி அறிமுகப்படுத்தும். குறைந்த செலவில் ஆரோக்கியமான குடியிருப்புகள் உழைப்பாளர்களுக்கு கிடைக்க கட்சி பாடுபடும்.

9) தொழிலாளர்களுக்கு என்னென்ன சலுகைகள் கிடைக்க வேண்டுமென்று கட்சி முயற்சி செய்யுமோ அதே சலுகைகள் விவசாயத் தொழிலாளர்களுக்கும் கிடைப்பதற்கு கட்சி பாடுபடும். இதில் சூழ்நிலைமைகளுக்கு ஏற்றவாறு சில மாறுதல்கள் செய்ய நேரலாம்.

10) வேலையில்லாத் திண்டாட்டத்தை போக்குவது அரசின் கடமை என்ற கொள்கையை கட்சி ஒத்துக் கொள்கிறது. எனவே நிலச் சீர்திருத்தங்கள் செய்தும் பொது வேலைகளை உரு வாக்கியும் வேலையில்லாதவர்களுக்கும் நிலமற்ற விவசாய உழைப்பாளர்களுக்கும் வேலைவாய்ப்பு நல்கும் திட்டத்தை கட்சி அறிமுகப்படுத்தும்.

11) கடன் பட்டுள்ளோரை பாதுகாக்கும் விதமாக, அதீத வட்டிகள், கந்து வட்டிகள், மோசடி வரவு செலவுகள், ஆகியவற்றில் ஈடுபடும் கடன் கொடுப்பவர்களுக்கு எதிராக சட்டம் கொண்டுவரக் கட்சி முயலும்.

12) தொழில் மையங்களிலும், நகரங்களிலும் மாநகரங் களிலும் வசிக்கும் கீழ்மட்ட, மத்திய தர மக்களுக்கு நியாயமான வாடகையில் வீடு கிடைப்பதற்கு ஏற்ப சட்டமியற்ற கட்சி முயலும்.

## வரிவிதிப்பு பிரச்சினை

வரிவிதிப்பு பற்றிய கட்சியின் கொள்கை என்னவென்றால், மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதற்காக, ஒவ்வொரு அரசும் பெருமளவிலான நிர்மாணப் பணிகளில் ஈடுபட வேண்டும். இந்த நிர்மாணப் பணிகளை மேற்கொள்வதற்கு அரசாங்க கஜானா வில் பணம் இருக்க வேண்டும் என்று கட்சி கருதுகிறது. மக்களின் மீது வரி விதிப்பதன் மூலமே இந்தப் பணம் கிடைக்கும். வளமிக்க ஒரு அரசுதான் சரியான நிர்வாகம் செய்ய முடியும்.

வரிவிதிப்பைக் குறைக்க வேண்டும். இது தேசநிர்மாணப் பணிகளை பாதிக்கும் வகையில் இருந்தாலும் இதுவே மக்களுக்கு உகந்தது என்று மக்களிடையே எடுத்துச் சொல்வது மக்களைத் திசை திருப்புகின்ற, அவர்களை ஏமாற்றுகிற வேலை என்று கட்சி கருது கிறது. இப்படிச் சொல்வதன் மூலம் இப்போதுள்ள வரிவிதிப்பு முறையை அப்படியே வைத்துக் கொள்ள வேண்டும் என்று கட்சி கருதுவதாக அர்த்தமில்லை. மாறாக தற்போது அமலிலுள்ள வரி விதிப்பு முறைக்கு கட்சி பெரும் எதிர்ப்பு தெரிவிக்கிறது. தற்போதைய வரிவிதிப்பு முறை அநியாயமானது என்றும் ஏழைமக்களையே இது பெரிதும் பாதிக்கும் வகையில் இருக்கிறது என்றும் கட்சி கருதுகிறது. பொது வரிவிதிப்பு முறையில் உள்ள இந்த சமநிலை யின்மையை திருத்துவதற்கு கட்சி முயலும். இப்போதைய நில வரிவிதிப்புக்கு கட்சி கடும் எதிர்ப்புத் தெரிவிக்கிறது. இந்த வரி விதிப்பை மேலும் சமநிலைப்படுத்தி நீக்குப் போக்குள்ளதாக எமது கட்சி செய்யும்.

## சமூக சீர்திருத்தம் :
### சட்டமியற்றும் திட்டங்கள்

சமூக சீர்திருத்தம் பற்றி கட்சியின் கருத்துக்கள்:

1) தேவையான சமூக சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதற்கு சட்டமியற்ற கட்சி நடவடிக்கை எடுக்கும் (i) சமூக சீர்திருத்த வாதி களை பழைமைவாதிகள் புறக்கணிப்பதை தடுக்கும் வகையில் சட்டம் கொண்டுவரப்படும். (ii) பயங்கரவாதத்தை எதிர்த்தும், தனி நபர்களோ, சில வகுப்புகளோ சட்டத்தின் மூலம் பெற்றுள்ள சுதந் திரத்தையும் உரிமைகளையும் அவர்கள் அனுபவிப்பதைத் தடுப் பதை எதிர்த்தும் சட்டம் கொண்டுவரப்படும்.

2) தர்ம ஸ்தாபனங்களின் நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தும் சட்டம் கொண்டுவருவதற்கு கட்சி முயற்சி மேற்கொள்ளும். இந்த ஸ்தாபனத்துக்கு வருகின்ற நன்கொடைகளை தவறான வழியில் நிர்வகிப்பதையோ, கையாடல் செய்வதையோ இச்சட்டம் தடுக்கும். இங்கு அதிகப்படியாக இருக்கும் பணத்தை மதச் சார்பற்ற கல்வி வழங்குதல் போன்ற நோக்கங்களுக்காக உபயோகப்படுத் தலாம்.

3) பிச்சைக்காரர்கள் மற்றும் கதியற்றவர்கள் பற்றிய பிரச்சினையைச் சமாளிக்கும் விதத்தில் சட்டமியற்றப்படும்.

## கிராமிய மறுசீரமைப்பு

கிராமிய மறுசீரமைப்பு பற்றிய கட்சியின் அணுகுமுறை பின்வருமாறு :

1) மக்களுக்குத் தேவையான வசதிகள் அனைத்தையும் வழங்கி கிராமிய வாழ்க்கையை மகிழ்ச்சி நிறைந்ததாக மாற்ற கட்சி முயலும்.

2) நகரமைப்புத் திட்டம் போன்ற ஒரு கிராம அமைப்புத் திட்டம் தீட்டி கிராமத்தின் சுகாதாரத்தையும் குடியிருப்பு வசதிகளையும் மேம்படுத்த சட்டமியற்றப்படும்.

3) கிராம நூல்நிலையம், கிராம மண்டபம், கிராம வானொலி மையம், நடமாடும் சினிமா தியேட்டர்கள் போன்றவற்றை ஏற்படுத்தி கிராமத்தின் வாழ்க்கையே நவீனமயமாக்கி அங்குள்ளவர்களை முற்போக்குவாதிகளாக மாற்றும் வகையில் கட்சி பாடுபடும்.

## கல்வி

கல்வி வழங்கல் பற்றிய கட்சியின் கருத்துக்கள் :

1) இலவச, கட்டாய ஆரம்பக் கல்வித் திட்டத்தை கட்சி அமல்படுத்தும்

2) முதியோர் கல்வித் திட்டம் கொண்டுவந்து எல்லா மக்களையும் படிப்பறிவு பெற்றவர்களாக்கும் திட்டத்தைக் கட்சி கொண்டு வரும்.

3) தொழிற்கல்விக்கு சிறப்பு முக்கியத்துவத்தை கட்சி அளிக்கும்.

4) கல்வியில் பின்தங்கியுள்ள வகுப்பாரிடமிருந்து வரும் தகுதியுள்ள நபர்களுக்கு இந்தியாவிலும் வெளிநாட்டிலும் உயர்கல்வி அளிக்க அரசு உதவி நல்கும் வகை செய்யப்படும்.

5) மண்டல வாரியாக பல்கலைக் கழகங்கள் ஏற்படுத்தி, போதிக்கும் பல்கலைக் கழகங்களாக அவற்றை ஆக்குவதன் மூலம் பல்கலைக் கழகக் கல்வியை பம்பாய் மாகாணத்தில் அங்கீகரிக்கும் வகையில் சட்டமியற்ற கட்சி முயலும்.

6) மாணவர்களின் அறிவுத் திறனையும் முயற்சியையும் முறியடிக்கும் விதத்தில் அமைந்துள்ள தேர்வு முறையை நீக்கு வதற்கு இது ஒன்றே வழி என்று கட்சி நம்புகிறது.

## நிர்வாகம்

நிர்வாகம் பற்றிய கட்சியின் கருத்துக்கள்:

1) நிர்வாகம் நல்லதாகவும், திறமையுள்ளதாகவும், ஊழலற்ற தாகவும் இருக்குமாறு கட்சி பார்த்துக் கொள்ளும்.

2) நல்ல, திறமையான நிர்வாகம் அமைவதற்காக (i) நிர்வாகம், நீதிமன்றம் இரண்டும் தனித்தனி அதிகாரம் கொண்டதாக செய்யப் படும். (ii) ''வாதன்'' முறையை மாற்றி நிர்வாகம் நவீன காலத்துக்கு பொருந்துவதாக ஆக்கப்படும்.

3) ஒரு தனிப்பட்ட சாதியோ, வகுப்போ, நிர்வாகத்தில் ஆதிக்கம் செலுத்துவதை கட்சி தடுக்கும். நிர்வாகத் திறமையைக் கருத்தில் கொண்டு மாகாணத்தின் நிர்வாகத்தில் பல்வேறு வகுப்பினரும் சாதியினரும் பங்கு கொள்ள வகை செய்யப்படும்.



# 4

# சுதந்திரத் தொழிற்கட்சிக்கு பரவலான ஆதரவு

## அமைப்பின் நோக்கம் பற்றி டாக்டர் அம்பேத்கர்

''லாயிட் டிரிஸ்டினோ ஸ்டீமர், கன்டே வெர்டே'' என்ற கப்பலின் மூலம் புதன்கிழமை ஜினீவாவுக்கு கிளம்புவதற்கு முன்பு ''டைம்ஸ் ஆப் இந்தியா'' பத்திரிகை நிருபருக்கு அளித்த பேட்டியில் கட்சியின் வளர்ந்துவரும் செல்வாக்கையும், பம்பாய் மாகாணத்திலும் வெளியிலும் முற்போக்கு சக்திகளிடமிருந்து அது பெற்றுவரும் பரவலான ஆதரவையும் டாக்டர் அம்பேத்கர் கோடிட்டுக் காட்டினார்.

மாநில சட்டமன்றத்துக்கு நடைபெறவுள்ள தேர்தல்களில், பம்பாயில் அண்மையில் துவக்கப்பட்ட சுதந்திர தொழிற்கட்சிக்கு பிரகாசமான வாய்ப்புக்கள் இருப்பதாக கட்சியைத் துவக்கிய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் தலைவரான டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் குறிப்பிட்டார்.

வெகுஜனங்களின் நலன்களைக் காங்கிரஸ் பாதுகாக்கும் என்று சொல்லப்படுவதை டாக்டர் அம்பேத்கர் ஏளனம் செய்தார். ''காங்கிரசில் உள்ள சுரண்டல் பேர்வழிகள் கட்சியை வெகுஜனங் களுக்காக பணிசெய்ய அனுமதிக்கமாட்டார்கள்'' என்று அவர் அழுத்தந் திருத்தமாகச் சொன்னார்.

கட்சியின் எதிர்காலத் திட்டம் பற்றி ஏராளமான விசாரணை கள் வருவது பற்றிக் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர் ''சுதந்திர தொழிற்கட்சியின் நோக்கங்கள், குறிக்கோள்கள் ஆகியன பற்றி பத்திரிகைகளில் செய்தி வெளியானதைத் தொடர்ந்து, பொதுமக்கள் மத்தியில் எழுந்துள்ள கணிசமான ஆர்வம் பற்றி நான் மகிழ்ச்சியும் ஆச்சரியமும் கொண்டேன்'' என்றார்.

## மத்திய மாநிலங்களில் கட்சிக் கிளைகள்

மத்திய மாநிலங்களில் ஒரு கட்சிக் கிளை ஏற்கெனவே தொடங்கப்பட்டுள்ளது என்று டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்டார். பம்பாய் மாகாணத்தில், வேறுபட்ட வகுப்பினரும் பிரிவினரும் பெருமளவில் கட்சியில் சேர்ந்துள்ளனர்.

''கட்சியின் பொருளாதார வேலைத் திட்டமும், மற்றும் அதன் சமூக, கல்வித் திட்டமும், கட்சி வகுப்பு அடிப்படையில் அமைக்கப்படவில்லை என்ற உண்மையும் மக்களால் பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. கட்சி இன்னமும் குழந்தைப் பருவத்திலேயே உள்ள போதிலும் மாகாணத்தின் முற்போக்கு சக்திகளிடமிருந்து மிகப் பரவலான ஆதரவைப் பெற்றுள்ளது.

## அடிப்படை வேறுபாடுகள்

காங்கிரஸ் கட்சிக்கும் சுதந்திரத் தொழிலாளர் கட்சிக்கும் இடையில் இரண்டு அடிப்படை வேறுபாடுகள் உள்ளன. சட்டப் பேரவைகளைக் கைப்பற்றி அரசியல் சாசனத்தை அழித்துவிட காங்கிரஸ் விரும்புகிறது. மாறாக சுதந்திரத் தொழிற்கட்சி சட்டப் பேரவைகளில் நுழைந்து அரசியல் சாசனத்தை பயன்படுத்தி பணி செய்ய விரும்புகிறது.

காங்கிரஸ் கட்சி பொதுமக்களின் நலன்களைப் பாதுகாக்கும் போவதாகச் சொல்லுகிறது, சுதந்திரத் தொழிற் கட்சியும் அதையே கூறுகிறது. ஆனால், காங்கிரஸ் கட்சியின் உள்ளடக்கமே மக்களுக்கு சேவை செய்ய அது லாயக்கற்றது என்று காட்டுகிறது என்று சுதந்திரத் தொழிற்கட்சி கருதுகிறது என்றார் டாக்டர் அம்பேத்கர். சுரண்டல் காரர்களையும் சுரண்டப்படுபவர்களையும் கொண்ட கூட்டுக் கலவை காங்கிரஸ். எனவே வெகுஜனங்களுக்காக சேவை செய்ய காங்கிரஸை சுரண்டல்காரர்கள் அனுமதிக்க மாட்டார்கள்.

சுரண்டல்காரர்களையும் சுரண்டப்படுபவர்களையும் கொண்ட ஒரு கூட்டுக் கதம்பம் அரசியல் சுதந்திரத்தை அடைவதற்குத் தேவையாக இருக்கலாம். ஆனால் சுரண்டுபவர்களையும் சுரண்டப் படுபவர்களையும் கொண்ட ஒரு கட்சி சமுதாய மறுசீரமைப்பை கொண்டு வரும் என்று சொல்லுவது மக்களை ஏமாற்றும் ஒரு மோசடி என்று தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் தலைவர் கூறினார்.

## கட்சியின் உறுப்பினர் நிலை

சட்டப் பேரவையில் தனது உறுப்பினர்களின் எண்ணிக்கையை உயர்த்திக் கொள்ளுவதற்காக எவரை வேண்டுமானாலும் கட்சியில் சேர்த்துக் கொள்ள சுதந்திரத் தொழிற்கட்சி விரும்பவில்லை என்று டாக்டர் அம்பேத்கர் கருதினார். முரண்பட்ட சக்திகளின் கலவையாக கட்சி ஆகிவிடுவதைத் தவிர்க்க வேண்டும்.

''கட்சியின் வேலைத் திட்டங்களை தயக்கமின்றி ஒத்துக் கொள்பவர்களை மட்டும் உறுப்பினராக்குவது, வேறு கட்சிகளின் மீது பற்றுக் கொண்டவர்களைத் தவிர்த்து, வருகின்ற தேர்தல் களில் குறைந்த எண்ணிக்கையிலேயே வேட்பாளர்களை நிறுத் துவது என்று கட்சி முடிவு செய்துள்ளது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

சட்டப்பேரவையில் இருந்து செய்ய வேண்டிய வேலைகள் ஏராளமாக இருக்கின்றன என்றபோதும், வெளியில் செய்ய வேண்டிய முக்கியமான வேலைகளும் உள்ளன. மக்களுக்கு அரசியல் அறிவு புகட்டுதல், சரியான கொள்கைகளை அவர்கள் முன்வைத்து சட்டப் பேரவையின் மூலம் அரசியல் பணிகளைச் செய்ய அவர்களைத் தயார்படுத்துவது போன்ற வேலைகள் இவை.

## பொதுமக்களுக்கு ஒரு வேண்டுகோள்

சுதந்திரத் தொழிற்கட்சியைப் போன்ற ஒரு கட்சி தேவை என்று கூறி, தொழிலாளர்கள், விவசாயிகள், கீழ்வகுப்பு, மத்திய வகுப்பினர் பெருமளவில் கட்சியில் சேர்ந்து அதை ஒரு வெகுஜன இயக்கமாக ஆக்கிட வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் அவர் களுக்கு வேண்டுகோள் விடுத்தார். மக்களுக்கு அரசியல் அறிவூட் டவும், பிரச்சாரம் செய்யவும் எட்டுப் பேர் கொண்ட ஒரு கமிட்டி அமைக்கப்பட்டுள்ளதாக அவர் கூறினார்.

அரிஜனங்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகுதிகள் தவிர பம்பாய் சட்டப்பேரவையின் மற்ற தொகுதிகளில் தற்போதைக்கு கீழ்க்கண்டவர் சுதந்திரத் தொழிற்கட்சியின் சார்பில் போட்டியிடு வார்கள் என்று கட்சி முடிவு செய்துள்ளது:- ஏ.வி.சித்ரே (வடக்கு ரத்னகிரி, எஸ்.வி.பருலேகர் (ரத்னகிரி, தெற்கு), எஸ்.ஜி.திப்னிஸ் (கொலாபா), வி.ஏ.கத்காரி (பூனா, கிழக்கு) சி.டி.ரணதிவே (தாணா தெற்கு), பி.வி.பிரதான் (கந்தேஷ் கிழக்கு)

# 5

# கல்லூரி அமைப்பதற்கு பம்பாயை நான் தேர்ந்தெடுத்ததற்கு மூன்று காரணங்கள்

பம்பாயில் ஒரு கல்லூரி நிறுவுவதற்கு இந்திய அரசாங்கத்திடம் கடன் கோரி டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் ஒரு விண்ணப்பம் அளித்தார். அந்த விண்ணப்பத்தின் வாசகம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

- ஆசிரியர்கள்

பெறுநர்,

மேதகு சர்தார் சர். ஜோகேந்திர சிங்,
கல்வித்துறை உறுப்பினர் - பொறுப்பாளர்,
சுகாதாரம் மற்றும் நிலங்கள், புதுடில்லி.

ஐயா,

பம்பாயில் ஒரு கல்லூரி நிறுவுவதற்காக வட்டியில்லாத கடனாக ரூ.6,00,000 (ரூபாய் ஆறு லட்சம் மட்டும்) கேட்டு இந்திய அரசாங்கத்துக்கு விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்கிறேன். இந்தக் கல்லூரி அரிஜனங்கள் மத்தியில் கல்வியறிவை பெருக்குவதற்கு துணை செய்யும். எனவே இவ்விண்ணப்பத்தை ஆதரவுடன் பரிசீலிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

2. இந்தியாவில் கல்வியறிவு எத்தகைய நிலையிலுள்ளது, பல்வேறு வகுப்பினரிடையில் அது எப்படிப் பரவியுள்ளது என்பதைக் கண்டறிய 1930 ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட ஹர்தோக் கமிட்டி தனது அறிக்கையில் அரிஜனங்கள் மத்தியில் கல்வியறிவு எந்த அளவுக்குப் பரவியுள்ளது என்பதை கீழ்வரும் அட்டவணையில் தந்துள்ளது. அறிக்கையின் 220 ஆம் பக்கத்திலிருந்து இது எடுக்கப்பட்டது :

## அட்டவணை - XCIV

மாநிலவாரியாகவும், கல்விமட்ட வாரியாகவும், கல்வி பெற்றுவரும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த பையன்கள், பெண்கள்

| மாகாணம் (1) | ஆதார நிலை (2) | நடுநிலை (3) | உயர்நிலை (4) | கல்லூரி நிலை (5) |
|---|---|---|---|---|
| மதராஸ் | 2,24,873 (a) | 2647 (b) | | 47 |
| பம்பாய் | 58561 (a) | 730 (c) | | 9 |
| *வங்காளம் | 31,398 | 8797 | 5996 | 1670 |
| ஐக்கிய மாகாணங்கள் | 88383 | 1367 | 42 | 10 |
| பஞ்சாப் | 14284 | 914 | 110 | இல்லை |
| பீகார், ஒரிஸ்ஸா | 24574 | 52 | 7 | இல்லை |
| மத்திய மாகாணங்கள் | 33123 | 1022 | 59 | 10 |

a) ஆரம்பப் பள்ளிகளில் உள்ளோர் எண்ணிக்கை

b) மத்திய மற்றும் உயர்நிலைப் பள்ளிகளில் உள்ளோர் எண்ணிக்கை

c) மேல்நிலைப் பள்ளிகளில் உள்ள ஆரம்ப, மத்திய உயர்நிலைகளில் உள்ளோர் எண்ணிக்கை

★ வங்காளத்துக்கான புள்ளி விபரங்களைத் தரும்போது, தாழ்த்தப்பட்டோர் வகுப்பைச் சாராதவர்களின் எண்ணிக்கையும் இதில் சேர்க்கப்பட்டுள்ளது என்று கமிட்டி சுட்டிக் காட்டியது.

## அட்டவணை - XCV

கல்விமட்ட வாரியாகவும் மாநில வாரியாகவும் நிறுவனங்களில் பயிலும் தாழ்த்தப்பட்ட வகுப்புப் பெண்கள்

| மாகாணம் (1) | ஆரம்ப நிலை (2) | நடுநிலை (3) | உயர்நிலை (4) | கல்லூரி நிலை (5) |
|---|---|---|---|---|
| மதராஸ் | 7276 | 230 | 14 | 2 |
| பம்பாய் | 5739 (a) | 159 (a) | 1 (a) | இல்லை |
| வங்காளம் | 28086 | 49 (b) | 5 (b) | 3 (b) |
| ஐக்கிய மாகாணங்கள் | 2204 | 8 | 1 | இல்லை |
| பஞ்சாப் | 398 | 2 | இல்லை | இல்லை |
| பீகார் & ஒரிஸ்ஸா | 2210 (c) | இல்லை | இல்லை | இல்லை |
| மத்திய மாகாணங்கள் | 521 (c) | 3 (c) | இல்லை | இல்லை. |

a) தொன்மைக்குடியினர், மலைவாழ் மக்கள், மற்றும் குற்றப் பின்னணி ஆதிவாசிகள் ஆகியோரை உள்ளடக்கியது.

b) அனைத்துப் பின்தங்கிய வகுப்பினரையும் உள்ளடக்கியது.

c) ஆண்கள் பள்ளியிலும், பெண்கள் பள்ளியிலும் உள்ள பெண்களின் எண்ணிக்கை

*3) இது மிகவும் கண்டனத்துக்குரிய நிலைமை. 1929க்குப் பிறகு சில முன்னேற்றம் இருந்திருக்கலாம். ஆனால் முன்னேற்றத்தின் அளவைத் தெரிந்து கொள்ள புள்ளிவிவரங்கள் இல்லை.*

1943 ஆம் ஆண்டு இந்திய அரசு மேற்கொண்ட தீர்மானத்தின்படி அரிஜனங்களுக்காக ஒதுக்கீடு செய்யப்பட்ட 8½ சதவீத இடங்களைக் கூட நிரப்ப தகுந்த நபர்கள் கிடைக்கவில்லை என்ற காரணம் காட்டி, அரசுத் துறை நிறைவு செய்யவில்லை என்கிற உண்மையே, 1929 ஆம் ஆண்டு இருந்ததாகக் கூறப்படும் நிலைமைகளைவிட அரிஜனங்களின் நிலை இப்போது உண்மையில் மாறவில்லை என்பதையே காட்டுகிறது.

அரிஜனங்களின் நிலைமைகளை உயர்த்த வேண்டும் என்று கருத்துப்படியும், அவர்களிடம் விரோதம் கொண்டுள்ள சக்திகளிடமிருந்து அவர்களுக்கு சமுதாயப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்ற கருத்துப்படியும் பார்க்கும்போது, ஆரம்பக் கல்வியை விட கல்லூரிக் கல்வியே அவர்களுக்கு மிகவும் முக்கியம் என்று ஆகிறது. அனுதாபமுள்ளதாக விளங்க வேண்டுமானால், இத்துறையில் பல்வேறு வகுப்பினரும் குறிப்பாக அரிஜன வகுப்பினர் இடம் பெற்றிருக்க வேண்டும். மேலும், பொதுத்துறைச் சேவையில் அரிஜனங்களின் மேம்பாட்டுக்கு அமைச்சர் பதவிகளில் இவர்கள் எத்தனை பேர் இருந்தாலும் அதனால் பயனில்லை.

அரிஜன வகுப்பைச் சேர்ந்த தனிநபர்களுக்கு தரும் ஆதாரக் கல்வியும் மேல்நிலைக் கல்வியும் அவர்களின் வேலைவாய்ப்புக்கு முக்கியம்தான். ஆனால் அது அரிஜன வகுப்பினரின் பதவிகளுக்கு மாறாக, நிர்வாகப் பதவிகளில் இருந்தால்தான் அரிஜன வகுப்பாரின் நிலை மேன்மையடையும், நிர்வாகப் பதவிகளின் மூலம் அரசாங்கத்துக்கு ஒரு புதிய வழிமுறையைக் காட்ட முடியும் என்பதால் இப்பதவிகள் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவை. நிர்வாகப் பதவிகளைப் பெறுவதற்கு உயர்ந்த தரமுள்ள கல்வி தேவை என்பது தெளிவு. எனவே அரிஜனங்களுக்கு கல்விதரும் பிரதான நோக்கம் என்னவாக

இருக்க வேண்டும் என்றால், அரிஜன மாணவர்கள் கல்லூரி வரை சென்று அப்படிப்பை முடிப்பதன் மூலம் நிர்வாகப் பதவிகளுக்கு அவர்கள் தகுதி பெறச் செய்வதே.

5. கல்லூரி வரை செல்கிற அரிஜன வகுப்பு மாணவர்கள் ஏன் படிப்பை விட்டுவிடுகிறார்கள் என்பதற்கு பல காரணங்கள் இருக்கின்றன. அதற்கு முதற்பெரும் காரணம் வறுமைதான். இரண்டாவது காரணம் கல்லூரியில் இடம் பெறுவதில் அவர்களுக் குள்ள கஷ்டங்கள், மூன்றாவது காரணம் விடுதியில் இடம் கிடைக் காமல் போவது. இந்தப் பிரச்சினைகள் சிலவற்றை அரசாங்கம் பொருளாதார உதவி நல்குவதன் மூலம் தீர்க்கலாம். ஆனால், பொரு ளாதார உதவி மூலம் தீர்க்கப்பட முடியாத ஒரு பிரச்சினை உள்ளது. கல்லூரியில் இடம் பெறுகிற பிரச்சினைதான் அது. கல்லூரிகளில் இடம் பெறுவோரின் எண்ணிக்கையை பல்கலைக் கழகமோ அரசோ தான் நிர்ணயிக்கின்றன. குறிப்பிட்ட எண்ணிக்கையில்தான் மாண வர்கள் கல்லூரிகளில் சேர்க்கப்படுகிறார்கள். கல்லூரிப் படிப்பை மேற்கொள்ள விரும்புகிற அரிஜன வகுப்பு மாணவர்களுக்கு இது மிகுந்த சிரமத்தைத் தருகிறது. இதுதான் ஒரு பேரிடராகத் தோன்று கிறது. மற்ற வகுப்பாரைவிட அரிஜன வகுப்பு மாணவர்கள்தான் இதனால் பெரும் பாதிப்புக்கு உள்ளாகிறார்கள். இதற்குப் பிரதான காரணம் பெரும்பாலான கல்லூரிகள் தனியார் அமைப்பால் நடத்தப் படுவதும், அமைப்பு ரீதியாகவும் அலுவலர் ரீதியாகவும் இந்த அமைப்புகள் வகுப்புவாதத் தன்மை கொண்டிருப்பதுமே ஆகும். எனவே, இதன் காரணமாக கல்லூரியின் நோக்கமே வகுப்புவாதத் தன்மை கொண்டதாகிறது. இந்த வகுப்புவாதத் தன்மை மாணவர் சேர்க்கையிலும் பிரதிபலிக்கிறது. இதனால் உயர் வகுப்பினர் அட்மிஷனில் முன்னுரிமை பெறுகிறார்கள். அரிஜன வகுப்பைச் சேர்ந்த மாணவர்களுக்கு அட்மிஷன் முடிந்து விட்டதாகக் கூறி இடம் மறுக்கப்படுகிறது. அல்லது வெகுசில இடங்களே மீதமிருக்கும் போதுதான் அரிஜனங்களின் அட்மிஷன் எடுத்துக் கொள்ளப்படு கிறது. பெரும்பாலான கல்லூரிகள் அமைந்துள்ள பெரிய நகரங் களில் வெளியிலிருந்து ஏராளமானோர் குடியேறுவதால் அரிஜனங் களின் நிலை இன்னும் மோசமாகி விடுகிறது. கல்லூரியில் சேர விரும்பும் மாணவர்களின் எண்ணிக்கை கணிசமாக உயர்ந்துள்ள தால் கல்லூரிகளில் அட்மிஷன் பெறுவது முன்பு இருந்ததை விட மேலும் சிரமமாகிறது.

6) இந்த நிலைமை தொடருவதற்கு அனுமதிக்க முடியாது. இது உடனே சரிசெய்யப்பட வேண்டும். தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் கல்வி கொடுக்க வேண்டும் என்பதை முக்கியக் குறிக்கோளாகக் கொண்டு, தேர்வு செய்யப்பட்ட மையங்களில் கல்லூரிகளைத் தொடங்குவதுதான் இதற்கு சிறந்த பரிகாரம் ஆகும். மற்ற வகுப்பினர் இப்போட்டியை ஆட்சேபிக்க மாட்டார்கள், ஏனென்றால் பல வகுப்பினரும் தத்தமக்கு கல்லூரிகளைக் கொண்டிருக்கிறார்கள். இதே போல மற்ற சிறுபான்மை வகுப்பினரான, சீக்கியர், முஸ்லீம்கள், இந்தியக் கிறித்தவர்கள், ஆங்கிலோ இந்தியர்களும், தத்தமது வகுப்பாருக்கு முன்னுரிமை தருவதற்காக பற்பலக் கல்லூரிகளை தமது கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறார்கள்.

ஆனால், தீண்டத்தகாதவர்கள் தமக்காக கல்வி நிறுவனம் எதுவும் இல்லாததால் அட்மிஷனுக்கு நடக்கும் போட்டியில் பாதிக்கப்படுகிறார்கள். பம்பாயில் ஒரு கல்லூரியைத் துவக்கி இதில் ஓர் ஆரம்பம் செய்வதற்கு நான் முயல்கிறேன். தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்கு அட்மிஷனில் முன்னுரிமை கொடுத்து அவர்கள் மேற்கல்வி பெறச் செய்வது இதன் நோக்கம். என்னுடைய கணக்குகளின்படி ஒரு கல்லூரி தொடங்க ரூபாய் ஆறு லட்சம் தேவை ஆகும். போருக்கு முந்தைய காலத்தில் இதற்காக குறைவான தொகை தேவைப்பட்டிருக்கலாம். ஆனால் தற்பொழுது நிலவும் பொருள்களின் விலையைக் கணக்கில் கொண்டால் இந்தத் தொகைக்கும் குறைவான பணச் செலவில் ஒரு கல்லூரி தொடங்க முடியும் என்று நான் நினைக்கவில்லை. இந்தியாவிலேயே மிகவும் ஏழ்மைப்பட்ட பிரிவினரான அரிஜன வகுப்பினரிடமிருந்து இந்தத் தொகையைத் திரட்ட முடியும் என்று நினைக்க முடியாது. எனவேதான், வட்டியில்லாத சுலபத் தவணைகளில் செலுத்தத்தக்க கடனாக இத்தொகையை இந்திய அரசாங்கத்திடம் நான் கோருகிறேன். இந்தக் கடனுக்கு ஈட்டுறுதியாக வரவிருக்கும் கல்லூரியின் சொத்துகள் அடமானமாக வைக்கப்படும்.

7. இந்தக் கல்லூரி எவ்வாறு செயல்படும் என்று காட்டுவதற்காக சில முக்கிய விபரங்களைக் கீழே கொடுத்துள்ளேன் :

I தர்மஸ்தாபன சொசைடிகளின் சட்டப்படி பதிவு செய்யப்பட்ட ஒரு குழுவினால் இக்கல்லூரி நிர்வகிக்கப்படும்.

II கலைப் பிரிவு, அறிவியல் பிரிவு, என்ற இரு பிரிவுகள் இங்கிருக்கும்.

III. கல்லூரி வகுப்புவாதத் தன்மையின்றி இயங்கும். அதாவது,

i) எல்லாச் சாதியினருக்கும், பிரிவினருக்கும் கல்லூரி அட்மிஷன் வழங்கும். அரிஜன வகுப்பு மாணவர்களின் நலனைக் கருத்தில் கொண்டு அவர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.

ii) ஆசிரியர்கள் எல்லா வகுப்பினரையும் சேர்ந்தவர்களாக இருப்பர், இதில் இன, மத, வகுப்பு வேறுபாடுகள் ஒரு தடையாக இருக்காது.

iii) இந்தியப் பல்கலைக் கழகங்களின் விதிமுறைகள் அனுமதித்தால் எந்தவிதப் பாகுபாடுமின்றி அனைத்து மாநிலங்களையும் சேர்ந்த அரிஜன வகுப்பு மாணவர்கள் இங்கு சேர்த்துக் கொள்ளப்படுவர்.

8) கல்லூரி நிறுவ பம்பாயை நான் தேர்ந்தெடுத்ததற்கு மூன்று காரணங்கள் உள்ளன. முதலாவதாக இந்தக் கல்லூரியின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள விரும்புகிறேன். நான் இப்போது சுமந்துள்ள பொறுப்புகளிலிருந்து விடுபட்டவுடன் கல்லூரியில் போதிக்கவும் நான் விரும்புகிறேன். ஆரம்பகட்டத்தில் இந்தப் பொறுப்புக்களை நான்தான் எனது தோள்களில் சுமக்க வேண்டும் என்று நினைக்கிறேன். கல்லூரி பம்பாயில் இருந்தால் இந்தப் பணியை நான் சிறப்பாகச் செய்ய முடியும்.

இரண்டாவதாக, பம்பாய்க்கு வந்து சேர்ந்துள்ள ஏராளமான மாணவர்கள் ஏற்கெனவே இருக்கிற கல்லூரிகளில் இடம் கிடைக்காமல் திண்டாடுகிறார்கள். இவர்களுக்குக் கல்லூரிக் கல்வி அளிப்பதற்கு கல்லூரிகள் இன்னும் தேவைப்படுகின்றன. பம்பாய்ப் பல்கலைக்கழகத்தின் செனட்டில் 10 கல்லூரிகள் திறப்பதற்கான விண்ணப்பங்கள் நிலுவையில் உள்ளன என்று பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. இதிலிருந்து கல்லூரியில் சேர விரும்புகிறவர்களின் எண்ணிக்கை எவ்வளவு பெரியது என்று புரிந்து கொள்ளலாம். மேலும் சைடென்ஹாம் வணிகக் கல்லூரியில் பேராசிரியராகவும், பம்பாய் அரசு சட்டக் கல்லூரியில் முதல்வராகவும், பம்பாய் பல்கலைக் கழகத்தின் சிண்டிகேட், செனட் உறுப்பினராகவும் இருந்த எனக்கு வேறு மாநிலத்திலுள்ள பல்கலைக் கழகத்தை விட பம்பாய் பல்கலைக் கழகத்தில் வரவிருக்கும் கல்லூரிக்கு அங்கீகாரம் பெறுவது சுலபமாக இருக்கும் என்று கருதுகிறேன்.

*9. சுமார் ஆறு ஏக்கர் பரப்புள்ள ஒரு இடத்தை கல்லூரிக்காக நான் தேர்வு செய்துள்ளேன். இது பம்பாய் நகரசபைக்குச் சொந்தமான இடம். கல்லூரிக்கு பம்பாயில் ஏற்ற இடம் இது ஒன்று தான். இந்த இடம் எனக்குக் கிடைக்காமல் போனால் எனது கல்லூரித் திட்டத்தை நான் கைவிட வேண்டி வரும். அரிஜன வகுப் பாருக்கு இது ஒரு பேரிழப்பாக முடியும். இந்திய அரசு கல்லூரி நிறுவத் தேவையான தொகையைக் கடனாகக் கொடுக்கும் என்ற உறுதி எனக்குக் கிடைத்தால்தான் நிலம் பற்றிய பேச்சுவார்த்தை யில் நான் இறங்க முடியும். இந்தப் பணத்தை நான் உடனடியாக எடுக்க மாட்டேன். இந்தத் தொகை இந்திய அரசிடமே இருக்கும். தேவை ஏற்படும் போது மட்டுமே இக்கணக்கிலிருந்து பணம் எடுக்கப்படும்.*

*பிப்ரவரி 1, 1945* — *தங்கள் உண்மையுள்ள*
*22, பிருதிவிராஜ் சாலை,* — *(ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்.*
*புதுடில்லி.*



## 6

# ஜுலை 8, 1945-ல் நிறுவப்பட்ட
# மக்கள் கல்வி சொசைட்டி - மும்பை

### அமைப்பு பொது அறிக்கை
### (Memorandum of Association)

*(துவக்கம்: ஜுலை 8, 1945)*

**நிறுவனர் :**

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்,**
*எம்.ஏ.பி.ஹெச்.டி.எஸ்.சி.,எம்.எல்.டி.,(கொலம்பியா) டி.லிட்.,*
*(உஸ்மானியா) பாரிஸ்டர் அட் லா*

**தலைமை அலுவலகம் :**

ஆனந்த பவன்,
டாக்டர் தாதாபாய் நவரோஜி சாலை
துறைமுகம், மும்பை - 400 023.

*சொசைட்டியின் 1860 ஆம் ஆண்டு பதிவுச் சட்டம் XXI-ன் கீழ்*
*பதிவு செய்யப்பட்டது. பதிவு எண் : 1945-46 ஆம் ஆண்டின் 1370*
*தேதி : ஜுலை 9, 1945, பம்பாய் பொது அறக்கட்டளைச் சட்டம் 1950*
*(1950-ல் பம்பாய் XXIXI-ன் கீழும் பதிவு செய்யப்பட்டது.*
*பதிவு எண் : எப்.303-(பம்பாய்) தேதி : ஜுன் 2, 1953.*

## மக்கள் கல்விச் சொசைடி, மும்பை

### அறக்கட்டளை உறுப்பினர்கள் குழு (Board of Trustees)

1. *திரு. கே.பி. தல்வால்கர் (அறக்கட்டளை உறுப்பினர்)*
2. *மாண்புமிகு திரு. கே.ஹெச். ரங்கநாத் (அறக்கட்டளை உறுப்பினர்)*
3. *திரு. எஸ்.எஸ். ரெஜ் (அறக்கட்டளை உறுப்பினர்)*

### ஆளுமைக்குழு (Governing Body) உறுப்பினர்கள்

1. *டாக்டர் எஸ்.பி.கெய்க்வாத், ஜி.சி.ஏ.எம் (சேர்மன்)*
2. *திரு. எஸ்.எஸ். ரெஜ், பி.ஏ (உதவிச் சேர்மன்)*
3. *திரு. கே.பி. தல்வாத்கர், எம்.ஏ.எல்.எம்.எஸ்.இ.எம்*
4. *டாக்டர் பி.டி. போரேல், பி.ஏ.எல்.எல்.பீ.பி.ஹெச்.டி (சட்டம்)*
5. *திரு. எம்.எஸ். மோரே, பி.ஏ.எல்எல்.எம்*
6. *பேராசிரியர் எஸ்.கே.மோஹகோவன்கர், எம்.காம்.*
7. *மதிப்புக்குரிய கே.ஹெச். ரங்கநாத், பி.எஸ்சி.பி.எல்.*
8. *பத்மஸ்ரீ டாக்டர் எம்.எல்.ஷஹாரே, எம்.எஸ்சி.பி.ஹெச்.டி*
9. *பேராசிரியர் எஸ்.எல்.காட், எம்.ஏ., எல்எல்.எம்*
10. *பேராசிரியர் அருண் எம்.தோண்டே, எம்.ஏ., எல்எல்.பி., முன்னாள் எம்.எல்.சி*

### செயலாளர்

*பிரின்ஸ்பல் டி.ஜே. காங்குர்டே, எம்.காம்., எம்.எல்.எம்.*

## மக்கள் கல்விச் செசைட்டி (The People's Education Society) மும்பையின் அமைப்பு பொது நிலை அறிக்கை (Memorandum of Association)

### சொசைட்டியின் பெயரும் நோக்கங்களும்

1) இந்தச் சொசைட்டி மக்கள் கல்விச் சொசைட்டி என்று அழைக்கப்படும் புத்த மதத்தினரால் நிர்வகிக்கப்படும்; நிர்வாகம் செய்யப்படும்.

2) சொசைட்டியின் அலுவலகம் பம்பாயில் அல்லது அவ்வப் போது தீர்மானிக்கப்படும். இது போன்ற ஏனைய இடங்களில் இருக்கும்.

3) சொசைட்டியின் நோக்கங்களும் இலக்குகளும் வருமாறு.

a) மேல்நிலைப் பள்ளி, கல்லூரி, தொழில்நுட்ப மற்றும் உடற்பயிற்சி படிப்புகளுக்கான வசதிகளை அளிப்பது

b) மகாராஷ்டிராவிலும் நாட்டின் ஏனைய பகுதிகளிலும் உள்ள பொருத்தமான இடங்களில் பள்ளிகள், கல்லூரிகள், புத்த மடாலயங்கள், விடுதிகள், நூல் நிலையங்கள், விளையாட்டு மைதானங்கள், புத்தமத மையங்கள் போன்ற கல்வி மற்றும் புத்த மத அமைப்புகளைத் தொடங்குவது, அமைப்பது, நடத்துவது மற்றும் அவைகளுக்கு உதவி அளிப்பது.

c) ஏழை மற்றும் புத்த மதத்தினருக்கு கல்வி வசதிகளை அளிப்பது.

d) தாழ்த்தப்பட்ட ஜாதிகள் (Scheduled Castes) மற்றும் தாழ்த்தப்பட்ட ஜாதிகளிலிருந்து மாறிய புத்த மதத்தினர் ஆகியோருக்கு கல்வியில் பொதுவான ஆர்வங்களை ஏற்படுத்துவது மற்றும் வளர்ப்பது. குறிப்பாக அவர்களுக்கு உயர்கல்வி அளிக்க சிறப்பு வசதிகள், ஸ்காலர்ஷிப்புகள் மற்றும் இலவச உதவிகளை அளிப்பது.

e) அறிவியலையும் புத்தமத மற்றும் ஏனைய இலக்கி யங்களையும் சிறந்த கலைகளையும் மேம்படுத்துவது, மதம் சம்பந்த மான ஒப்பீட்டு ஆய்வுகளில் பயனுள்ள அறிவை அளிப்பது.

f) சொசைட்டிக்கான சொத்துக்களை வாங்குவது இல்லை யெனில் கட்டுக் குத்தகை அடிப்படையில் எடுப்பது மேலும்

அவ்வப்போது தீர்மானிக்கப்படும் முறையில், சொசைட்டியின் பணத்தை முதலீடு செய்து தொழில் நடத்துவது.

g) வீடுகள், புத்தமத மடாலயங்கள் (Vihars) மற்றும் கட்டிடங்களை கட்டுவது, பராமரிப்பது, மறு கட்டுமானம் செய்வது, பழுது பார்ப்பது, மாற்றி அமைப்பது, மாற்றீடு செய்வது, அல்லது புதுப்பிப்பது அல்லது சொசைட்டியின் நலன்களுக்கான பணத் திட்டங்களை செயல்படுத்துவது.

h) சொசைட்டியின் அனைத்துச் சொத்துக்களை அல்லது ஏதாவதொரு சொத்தை விற்பது, கைவிடுவது (disposet off), மேம்படுத்துவது, பரிமாற்றம் செய்வது, குத்தகைக்கு விடுவது, அடகு வைப்பது, அல்லது அவசியமெனில் வேறு உடமைகளுக்காக மாற்றுவது.

i) சொசைட்டியின் குறிப்பாக புத்த மதத்தினரின் நோக்கங்கள் மற்றும் இலக்குகளை மென்மேலும் முன்னெடுத்துச் செல்லும் நோக்குடன் சொசைட்டி அல்லது சொசைட்டியால் நடத்தப்படும் அல்லது சொசைட்டிக்குச் சொந்தமான எந்தவொரு நிறுவனம் அல்லது நிறுவனங்கள் பிறவற்றுடன் ஒத்துழைப்பது அல்லது பிறவற்றுடன் இணைவது.

j) சொசைட்டியின் நோக்கங்கள், இலக்குகள் ஆகியவற்றில் ஏதாவதொன்றினை செயல்படுத்துவதற்காக சொத்து ஈட்டுடன் அல்லது சொத்து ஈடு இல்லாமல் பணம் திரட்டுவது.

k) இந்தியாவில் ஏதாவதொரு மாநிலத்தில் பதிவு செய்யப்படுவதற்கு அல்லது அங்கீகரிக்கப்படுவதற்கு முயற்சி செய்து சொசைட்டியை ஏற்படுத்துவது.

l) மேலே கூறப்பட்ட நோக்கங்கள், இலக்குகள் ஆகியவற்றில் ஏதாவதொன்றை அடைதலுக்கு தற்செயலாக நிகழ்கிற அல்லது அதற்கு ஏற்ற அனைத்துச் சட்டப்பூர்வ காரியங்களையும் நடவடிக்கைகளையும் மேற்கொள்வது.

## II - சந்தாதாரர்களும் காப்பாளர்களும்

4) சொசைட்டிக்கு சந்தாவாக ஆண்டுக்கு ரூ.10 வீதம் அளிக்கும் எந்தவொரு நபரும் சொசைட்டியின் சந்தாதாராக பதிவு செய்யப்பட்ட தகுதியானவராக இருப்பார்; அவர் ஒரு சந்தாதாரருக்குரிய உரிமைகளைப் பெறத் தகுதி படைத்தவராகுவார்.

*5) சொசைட்டிக்கு ரூ 500 அல்லது அதற்கு அதிகமாக ஒரு மொத்தத் தொகையை நன்கொடையாக கொடுக்கும் எந்த வொரு நபரும் சொசைட்டியின் காப்பாளராக ஆகுவதற்கு தகுதியானவ ராவார். அவர் காப்பாளரின் உரிமைகளைப் பெறுவதற்கு உரிமை பெற்றவராக இருப்பார்.*

## III - கட்டுப்பாடும் நிர்வாகமும்

*6) சொசைட்டி கீழ்க்கண்டவற்றை கொண்டிருக்கும்.*

i) *ஆளுமைக் குழு* (Governing Body)

ii) *அறக்கட்டளை உறுப்பினர்கள் குழு* (Board of Trustees)

iii) *ஒரு பொதுக்குழு (இதுதான் உண்மையிலேயே நிர்வகிக்கும் குழுவாகும்)* (General Council).

iv) *ஒவ்வொரு கல்லூரிக்கும், புத்தமத மடாலயத்திற்கும்* (Vihar), *பள்ளிக்கும் அல்லது ஏனைய நிறுவனத்திற்கு அல்லது ஒரு குழுமத்திற்கு ஒரு நிர்வாகக் குழு அதன் விளைவாக ஆளுமைக் குழு என்ற முறையில் தன் னுடைய பணி விவகாரங்களின் நிர்வாகத்தை தீர்மானிக் கலாம்.*

*7) ஆளுமைக்குழு பதினொறு உறுப்பினர்களை கொண் டிருக்கும். அவர்களில் 7 பேருக்கு குறையாதவர்கள் தாழ்த்தப் பட்ட வகுப்புகளிலிருந்து புத்த மதத்திற்கு மாற்றப்பட்டவர்களாக இருப்பார்கள்.*

7. (a) *ஆளுமைக் குழுவின் அலுவல் சார்பான உறுப்பினர் களை* (Ex-officio members) *நியமிக்க வகை செய்யும் சிறப்புத் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்ட நோக்கங்களுக்காக ஆளுமைக் குழு, அந்த உறுப்பினர் பதவிக்கு எந்தவொரு நபரை அல்லது நபர்களை அழைப்பதற்கு ஆளுமைக் குழுவிற்கு அதிகாரம் உண்டு. அத்தகையதொரு நபர் நியமிக்கப்பட்டதன் இலக்கிற்கும் நோக்கத்திற்கும் அப்பாற்பட்ட எந்தவொரு பிரச்னை மீதும் வாக்களிக்க அவருக்கு உரிமை இல்லை.*

*அவர் நியமிக்கப்பட்டதன் நோக்கத்திற்கும் இலக்கிற்கும் உட்பட்டதாக அந்தப் பிரச்னை உள்ளதா என்பது குறித்து ஏதாவ தொரு பிரச்னை ஏற்படும் பட்சத்தில் சேர்மனின் முடிவே இறுதியான தாக இருக்கும்.*

*8) அறக்கட்டளை உறுப்பினர்கள் குழு, 3 பேர்களைக் கொண்டது; அவர்கள் ஆளுமைக் குழுவால் அதனுடைய உறுப்பினர்களிடமிருந்து நியமிக்கப்படுவார்கள். அவர்களில் குறைந்த பட்சம் 2 பேர் தாழ்த்தப்பட்ட வகுப்புகளிலிருந்து புத்த மதத்திற்கு மாறியவர்களாக இருப்பார்கள்.*

*9) ஏதாவதொரு வழியில் அனுமதிக்கப்பட்டால் மட்டுமே சொசைட்டியின் அனைத்துச் சொத்துக்களும் நிதிகளும் அறக்கட்டளைக்கு சொந்தமாகும்.*

*9.*(a) *சொசைட்டியின் சொத்துக்கள் மற்றும் நிதிகள் சம்பந்தமாக சோசைடி சார்பாக வழக்குத் தொடர அறக்கட்டளை உறுப்பினர்கள் குழுவிற்கு அதிகாரம் உண்டு; சொசைடி சார்பாக அறக்கட்டளை உறுப்பினர்கள் குழு மீது வழக்கிடப்படலாம்.*

*10. (1) சொசைட்டியின் அனைத்து நிறுவனங்களின் பணியை மேற்பார்வையிடவும் ஒருங்கிணைக்கவும் ஒரு பொதுக்குழு* (General council) *இருக்கும். அந்தக் குழுவில் ஆளுமைக் குழுவால் நியமிக்கப்பட்ட 15-க்கும் குறையாத உறுப்பினர்கள் இருப்பார்கள். இந்த 15 பேரில் 11 பேர் ஆளுமைக் குழுவிலிருந்து நியமிக்கப் படுவார்கள்; இந்த 11 பேரில் 8 பேர் தாழ்த்தப்பட்ட வகுப்புகளி லிருந்து புத்த மதத்திற்கு மாறியவர்களாக இருபார்கள். மீதிப்பேர் சந்தாதாரர்களிலிருந்தும் காப்பாளர்களிலிருந்தும் வந்தவர்களாக இருப்பார்கள்.*

*2) வேறு நிலைமையில் ஆளுமைக் குழு உரிய ஏற்பாடுகளை செய்து தராவிட்டால் நிறுவனத்தின் தலைவர் பொதுக்குழுவின் அலுவல் சார்பான உறுப்பிராக இருப்பார்.*

*3) பொதுக் குழுவின் தீர்மானங்கள் பரிந்துரையானதாக மட்டும்தான் இருக்கும்.*

*11) ஆளுமைக்குழு முடிவு செய்யலாம் என்பதால் சொசைட்டியின் ஒவ்வொரு கல்லூரிக்கும் புத்தமடாலயத்திற்கும் அல்லது நிறுவனத்திற்கும் அதிலிருந்து ஒரு நிர்வாகக் குழு இருக்கும். நிர்வாகக் குழு 5 பேருக்கும் குறையாமல் 7 பேருக்கு அதிகமில்லாத உறுப்பினர்களை கொண்டிருக்கும்; அந்த உறுப்பினர்கள் ஆளுமைக் குழுவால் நியமிக்கப்படுவார்கள். அவர்களில் ஒருவர் கல்லூரியின்*

அல்லது பள்ளியின் அல்லது நிறுவனத்தின் டீனாகவோ அல்லது பிரின்சிபலாகவோ இருப்பார். ஒருவர் நிறுவனத்தின் பதிவாளராக இருப்பார். அந்த உறுப்பினர்களில் 2 பேருக்கு குறையாமல் தாழ்த்தப்பட்ட வகுப்புகளிலிருந்து புத்த மதத்திற்கு மாறியவராக இருபார்கள். ஒருவர், ஆளுமைக் குழுவின் கருத்தில் கல்வி நிபுணராக இருப்பார்.

*12)* ஆளுமைக் குழுவின் சேர்மன், புத்த மதத்தவராக இருப்பார்; அவர் அறக்கட்டளை உறுப்பினர்கள் குழு பொதுக்குழு, நிர்வாக குழு ஆகியவற்றின் அலுவல் சார்பு உறுப்பினராகவும் சேர்மனாகவும் இருப்பார். மேலே கூறப்பட்ட விதிகளில் கூறப்பட்டுள்ள எண்ணிக்கையில் உள்ள உறுப்பினர்களுடன் சேர்ந்து இந்தக் குழுக்களின் உறுப்பினர்களுடன் சேர்ந்து இந்தக் குழுக்களின் உறுப்பினராகவும் இருப்பார்.

12. (a) *(1)* சொசைட்டியின் நிர்வாக அதிகாரக் குழு சேர்மனுக்கு உரிய அதிகாரங்களை அளிக்கும்.

*(2)* சொசைட்டியால் அல்லது சொசைட்டி சார்பாக நிறைவேற்றப்பட வேண்டிய அனைத்துச் சட்ட ரீதியான ஒப்பந்தங்கள், ஆவணங்கள், உறுதிமொழிகள் சேர்மனால் மட்டுமே நிறைவேற்றப்படும். அது சொசைட்டியை கட்டுப்படுத்துவதாக இருக்கும்.

*13)* சொசைட்டி அதனுடைய நிறுவனங்கள் அதனுடைய சொத்துக்கள் மற்றும் நிதிகள் மீதான கட்டுப்பாடும் ஆளுமை அதிகாரமும் ஆளுமைக் குழுவிடம் அளிக்கப்படும்.

*14)* ஆளுமைக் குழுவின் முதல் உறுப்பினர்கள் வருமாறு

*(1)* மதிப்பிற்குரிய டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் எம்.ஏ., பி.ஹெச்.டி, டி.எஸ்சி., பாரிஸ்டர் அட் லா, புதுடெல்லி.

*(2)* ராவ்பகதூர், என்.சிவராஜ் பி.ஏ.பி.எல்., எம்.எல்.ஏ., சென்னை

*(3)* தவுலதிராவ்குலாஜி ஜாதவ் , பி.ஏ.எல்எல்.பீ, பம்பாய்

*(4)* ராஜாராம்போலே, பி.எஸ்சி., எல்எல்.பீ., புனா.

*(5)* ஜே.ஹெச்.சுப்பையா, பி.ஏ., செகந்திராபாத்

*(6)* ஹிரிஜிபாய் குஷால்பாய் படேல், பி.ஏ.எல்எல்.பீ, பம்பாய்

*(7)* ஜி.டி.மெஷ்ராம், புதுடெல்லி.

*(8)* ராவ் பகதூர் எஸ்.கே.போலே, மும்பை.

*(9) எம்.வி.டோண்டோ பி.ஏ.பிரின்ஸ்பால், கோகலே கல்வி சொசைடியின் உயர்நிலைப் பள்ளி, பம்பாய்*

*(10) எஸ்.சி.ஜோஷி, எம்.ஏ.எல்எல்.பீ, புதுடெல்லி*

*(11) எம்.பீ.சமர்த், பாரிஸ்டர் அட்லா*

*ஆளுமைக் குழுவின் முதல் சேர்மனாக மதிப்பிற்குரிய டாக்டர் பீ.ஆர்.அம்பேத்கர் இருப்பார். அவருக்குப் பிறகு எப்போதும் ஒரு புத்த மதத்தவரே சேர்மனாக இருப்பார்.*

*15. ஆளுமைக் குழு மற்றும் அறக்கட்டளை உறுப்பினர்கள் குழுவின் உறுப்பினர் பொறுப்பு, மரணத்தாலோ, திறனின்மையாலோ பதவி விலகலாலோ நீக்கத்தாலோ முடிவடையலாம்.*

*16. பொதுக் (உண்மையிலேயே நிர்வகிக்கும்) குழுவின் உறுப்பினர்கள் மற்றும் டீன் அல்லது பிரின்ஸ்பால், பதிவாளர் ஆகியோரைத் தவிர்த்த நிர்வாகக் குழுவின் உறுப்பினர்கள் ஆகியோரின் பொறுப்புக்காலமானது மரணம், திறனின்மை, பதவி விலகல் மற்றும் நீக்கத்தால் முடிவடையாவிட்டால் அந்தப் பொறுப்புக் காலம் 3 ஆண்டுகளாகும். பதவிப் பொறுப்புக் காலம் முடிவடைந்த ஒருவர் மீண்டும் நியமிக்கப்பட தகுதியானவராவார். டீன் அல்லது பிரின்ஸ்பால் பதிவாளர் ஆகியோர் டீனாகவோ அல்லது பிரின்ஸ்பாலாகவோ பதிவாளராகவோ பதவியில் இருக்கும் காலம் வரை அவர்கள் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக இருப் பார்கள்.*

*17. ஆளுமைக்குழு, அறக்கட்டளை உறுப்பினர்கள் குழு, பொதுக் குழு நிர்வாகக் குழு ஆகியவற்றிலிருந்து எந்தவொரு உறுப்பினரையும் நீக்கும் அதிகாரம் ஆளுமைக்குழுவிற்கு உண்டு; ஆனால் இந்த நோக்குடன் காட்டப்பட்ட ஆளுமைக் குழுவின் சிறப்புக் கூட்டத்தில் கலந்து கொள்வோரில் நான்கில் மூன்று பேர் அவருடைய நீக்கத்திற்கு ஆதரவாக வாக்களிக்க வேண்டும்.*

*18. ஆளுமைக்குழுவின் தற்போதைய தலைவர், தனக்குப் பிறகு அந்தப் பொறுப்புக்கு வருபவரை நியமிப்பார் அல்லது அந்தப் பொறுப்புக்கு வேட்பாளரை தெரிவிப்பார்.*

*19. தற்போதைய தலைவருக்குப் பிறகு அந்தப் பொறுப்புக்கு செல்லத்தக்க நியமனம்* (Valid Nomination) *இல்லாதபட்சத்தில்*

அல்லது அந்தப் பொறுப்புக்கு நியமனம் செய்யப்பட்ட நபர் அந்தப் பொறுப்பை ஏற்க மறுக்கும் பட்சத்தில் அல்லது பொறுப்பை ஏற்கத் தவறும் பட்சத்தில் அந்தப் பொறுப்பில் நீடிப்பதை என்ன காரணத்தினாலோ நிறுத்திக் கொள்ளும் பட்சத்தில் ஆளுமைக் குழுவின் தலைவர், அக்குழுவின் மீதி உறுப்பினர்களால் தேர்ந் தெடுக்கப்படுவார்.

20. இதில் உள்ளடங்கியுள்ள விதியைப் பொறுத்து, ஆளுமைக் குழு அறக்கட்டளை உறுப்பினர்கள் குழு, பொதுக் குழு, செயற்குழு, ஆகியவற்றின் ஏனைய உறுப்பினர்களின் அலுவலகத்தில் உள்ள காலியிடங்கள் ஆளுமைக் குழுவால் நிரப்பப்படும்; ஆனால் தாழ்த்தப்பட்ட வகுப்பிலிருந்து மதம் மாறிய புத்த மதத்தவருக்கான ஒரு காலி இடம், தாழ்த்தப்பட்ட வகுப்பிலிருந்து புத்த மதத்தவராக மாறிய ஒருவரால் மட்டுமே நிரப்பப்படும் என்ற நிபந்தனைக் குட்பட்டு காலி இடங்கள் நிரப்பப்படும்.

21. ஆளுமைக் குழுவின் சேர்மன்தான் அந்தக் குழுவின் நிர்வாக அதிகாரியாவார்; அவர், பொதுவான கொள்கை மற்றும் நிதி விவகாரங்களில் ஆளுமைக் குழுவின் உறுப்பினர்களுடன் கலந்தாலோசித்து செயல்படுவார்.

22. (i) சேர்மன், தாம் இல்லாத நேரத்தில் உதவிச் சேர்மனாக செயல்பட ஆளுமைக் குழு உறுப்பினர் ஒருவரை உதவிச் சேர்மனாக நியமிக்கலாம். சேர்மன் முடிவு செய்தால் தன்னுடைய அளவிலான அதிகாரத்தில் செயல்பட குறிப்பிட்ட காலத்திற்கு அந்த உதவிச் சேர்மனுக்கு தனது அதிகாரத்தை அளிக்கலாம்.

(ii) சொசைட்டியின் செயலாளராக ஒரு நபரை சேர்மன் நியமிக்கவும் செய்யலாம்; மேலும் அவர், செய லாளரின் கடமைகள், அவருடைய சம்பளம் அவ ருடைய பதவிக் காலம் ஆகியவற்றை எழுத்து மூலம் அளிக்கலாம்.

(iii) ஆளுமைக் குழுவானது, சொசைட்டியின் பொதுச் செயலாளராகச் செயல்பட அந்தப் பொறுப்புக்கு ஒருவரை நியமிக்கவும் செய்யலாம். பொதுச் செய லாளரின் பதவிக் காலம் 3 ஆண்டுகளாகும்.

23) ஆளுமைக் குழுவானது, தனது பணிகளை செயல் படுத்தவும் தன்னுடைய நிறுவனங்களை நடத்தவும் தேவையான

ஊழியர்களை நியமிக்கலாம். அந்த ஊழியர்களின் சம்பளத்தையும், பணி வசதிகளையும் தீர்மானிக்கலாம், மேலும் ஊழியர்களுக்கும் அதிகாரிகளுக்கும் சொசைட்டியின் குழுக்களுக்கும் வழிகாட்டுவதற்கான நிரந்தர உத்திரவுகளையும் விதிகளையும் வரையறுக்கலாம். மேலும் ஊழியர்கள் அதிகாரிகள் மற்றும் குழுக்களின் செயல்பாடுகளையும் அதிகாரங்களையும் கடமைகளையும் வரையறுக்கும் ஒழுங்கு விதிகளையும் ஆளுமைக் குழு தயாரிக்கலாம்.

24) ஒவ்வொரு கல்லூரிக்காகவும் புத்த மடாலயத்திற்காகவும் அல்லது நிறுவனத்திற்காகவும் அல்லது இவை சேர்ந்த குழுமத்திற்காகவும் ஆளுமைக்குழு முடிவு எடுக்கலாம் என்பதால் ஆளுமைக் குழு ஒரு பதிவாளரை நியமிக்கலாம்.

25) சேர்மனின் கண்காணிப்பு மற்றும் கட்டுப்பாட்டைப் பொறுத்து அந்தப் பதிவாளர், நிறுவனத்தின் தலைவரின்கீழ் பணிபுரிவார். சொசைட்டியின் நிரந்தர விதிகள் மற்றும் ஒழுங்கு முறைகளுக்கு ஏற்ப அன்றாட நிர்வாகம் சம்பந்தமான அனைத்துக் கடமைகளையும் பதிவாளர் செய்வார்.

## IV - சொசைட்டியின் நிதிகள்

26) சொசைட்டியின் நிதிகள் என்பது அவ்வப்போது பெறப்படும் மானியங்கள், நன்கொடைகள், சந்தாக்கள், கட்டணங்கள், பரிசுகள் ஆகியவற்றைக் கொண்டதாகும்.

27) செயலாளர், சொசைட்டியின் முறையான கணக்குப் புத்தகங்களையும் சொசைட்டியின் வரவு-செலவு பற்றிய ஆவணங்களையும் கவனித்து பராமரிப்பார். சொசைட்டியின் கணக்குகள், இந்திய கம்பெனிச் சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்டு, ஆளுமைக் குழுவால் நியமிக்கப்பட்ட ஆடிட்டர்களால் தணிக்கை செய்யப்படும்.

28) பொதுக்குழு, நிர்வாகக் குழு ஆகியவற்றின் உறுப்பினர்களிலிருந்து ஒரு செயலாளரை ஆளுமைக் குழு நியமிக்கும்; அவர் பொதுக்குழு மற்றும் நிர்வாகக் குழுவின் பொதுவான வேலைகளை மேற்கொள்வார். செயலாளரின் பதவிக் காலம் 3 ஆண்டுகளாகும்.

29) சொசைட்டியின் வரவு-செலவுகள் பற்றிய ஆண்டு அறிக்கை ஒன்று, சொசைட்டியின் செயலாளரால் தயாரிக்கப்படும்,

சொசைட்டியின் அலுவலகத்தில் இணைக்கப்பட்ட அறிக்கை (Consolidated Statement) ஒன்று வைக்கப்பட்டு ஆளுமைக் குழு, அறக்கட்டளை உறுப்பினர்கள் குழு, பொதுக்குழு, நிர்வாகக் குழு ஆகியவற்றின் உறுப்பினர்களும் காப்பாளர்களும் சந்தாதாரர்களும் பார்வையிடுவதற்கான நிலைமையில் எப்போதும் இருக்கும்.

## V. பொதுவானவை

30. ஆளுமைக் குழுவும் ஏனைய குழுக்களும் இந்த பொதுநிலை அறிக்கையின் பட்டியல் ஏ-யில் இணைக்கப்பட்டுள்ள விதிகளுக்கு ஏற்ப தங்களுடைய கடமைகளை ஆற்றுகிறார்கள்; தங்களுடைய அதிகாரங்களையும் செயல்பாடுகளையும் நிறை வேற்றுகிறார்கள்.

31. ஏற்கெனவே கூறப்பட்ட விதிகளை சூழ்நிலைமை காரணமாக அவசியப்பட்டால் மாற்றம் செய்யவும் திருத்தம் செய்யவும் விரிவாக்கம் செய்யவும் புதுப்பிக்கவும் ஆளுமைக் குழுவிற்கு அதிகாரம் உண்டு; ஆனால், இத்தகைய மாற்றங்களும் திருத்தங்களும் விரிவாக்கங்களும் புதுப்பித்தல்களும் இந்தப் பொதுநிலை அறிக்கையின் விதிகளுக்கு முரண்பட்டதாக இருக்காது என்றால் மட்டுமே இவற்றை ஆளுமைக்குழு மேற்கொள்ளும்.

32. இந்தப் பொதுநிலை அறிக்கையை மாற்றியமைக்கவும் திருத்தவும் விரிவுப்படுத்தவும் புதுப்பிக்கவும் ஆளுமைக்குழு விற்கு அதிகாரம் உண்டு; ஆனால், இந்த நோக்கத்திற்காக விசேஷ மாக காட்டப்பட்ட ஆளுமைக் குழுக் கூட்டத்தில் உள்ள உறுப் பினர்களில் நான்கில் 3 பங்கினர் பொதுநிலை அறிக்கையில் இத்தகைய மாற்றியமைப்பு செய்வதற்கோ திருத்தம் செய்வதற்கோ, சேர்ப்பதற்கோ, சிறிது புதுப்பிப்பதற்கோ ஆதரவாக வாக்களிக்க வேண்டும்; ஆனால், அந்த அறிக்கையில் ஆளுமைக் குழு அறக் கட்டளை உறுப்பினர்கள் குழு பொதுக் குழு ஆகியவற்றின் கூட்டு ஆக்க இசைவு (Composition) சம்பந்தமான விதி, அத்தகைய குழுக் களில் தாழ்த்தப்பட்டோரிடையே புத்த மதத்திற்கு மாறியவர்களின் சரிவிகித பிரதிநிதித்துவம் சம்பந்தமான விதி முதல் சேர்மனின் பதவிக் காலம் மற்றும் சேர்மனின் ஏனைய குழுக்களின் அலுவல் சார்பான உறுப்பினர் எண்ணிக்கை ஆகியவை சம்பந்தமான விதி ஆகியவை திருத்தப்பட முடியாது; ஆளுமைக் குழுவில் திருத்தப் பட முடியாத இந்த அம்சங்கள் 7, 8, 9, 10, 11, 12, 14, 20, 21 ஆகிய பிரிவுகளில் உள்ளடங்கியுள்ளன.

கையொப்பமிட்டவர்கள்:

பி.ஆர். அம்பேத்கர்
எஸ்.கே. போலே
எம்.வி. தோண்டே
எஸ்.சி. ஜோஷி
எம்.பி. சமர்த்
டி.ஜி. ஜாதன்
ஹெச்.கே. படேல்

*ஜூலை 9, 1945.*

## பட்டியல் "A"

## மக்கள் கல்வி சொசைட்டியின் நிர்வாகம் மற்றும் செயலாட்சிக்கான விதிகள்

1) இந்த விதிகள், மக்களின் கல்விச் சொசைட்டியின் விதிகள் என்று அழைக்கப்படும்

2) ஆளுமைக்குழு, தன்னுடைய கட்டுப்பாட்டின் கீழ் உள்ள அனைத்து நிறுவனங்கள் மற்றும் குழுக்களிடமிருந்து அறிக்கை களைப் பெற்று பரிசீலனை செய்ய ஒவ்வொரு 6 மாதங்களுக்கு ஒருமுறை கூடும் ஏனைய குழுக்கள் 3 மாதங்களுக்கு ஒருமுறை தங்களுடைய கூட்டத்தை நடத்தும்; இந்தக் குழுக்களானது சொசைட்டி மற்றும் இதன் நிறுவனங்கள் நடத்தும் தொழில்களின் கொடுக்கல் வாங்கல்கள் குறித்து விவாதிக்க அவசியம் ஏற்பட்டால் நிலைமைக்கு ஏற்ப அவ்வப்போது அடிக்கடி கூடும்.

3) ஆளுமைக்குழு ஒவ்வொரு ஆண்டும் சாதாரணமாக ஏப்ரல் மாதத்தில் ஆண்டுப் பேரவைக் கூட்டம் (Annual General Meeting) என அழைக்கப்படும் கூட்டத்தை நடத்தும்; அக்கூட்டத்தில் சொசைட்டியின் பொதுச் செயலாளர் தனது ஆண்டுக் கணக்கு அறிக்கையையும் சொசைட்டியின் பணிகள் மற்றும் செயல்பாடுகள் பற்றிய ஒரு அறிக்கையையும் தாக்கல் செய்வார்.

4) ஆளுமைக் குழுவின் சேர்மன், தன்னுடைய விருப்ப உரிமையத்தில் (discretion) அல்லது ஏதாவதொரு மூன்று உறுப்பினர்களின் வேண்டுகோளின் (Requisition) பேரில் ஆளுமைக் குழு அறக்கட்டளை உறுப்பினர்கள் குழு, பொதுக் குழு அல்லது நிர்வாகக் குழுவின் சிறப்புக் கூட்டத்திற்கு அழைப்பாணை விடுப்பார்; இதனை அவருக்கோ அல்லது அவர்களுக்கோ அவசியம் எனத் தென்படும் ஏதாவதொரு காரணத்திற்காக நிலைமைக்கேற்ப இந்த நடவடிக்கையை சேர்மன் மேற்கொள்வார்.

5) ஒவ்வொரு கூட்டத்திற்கும் - அது சாதாரணமான கூட்டமாக இருந்தாலும் சிறப்புக் கூட்டமாக இருந்தாலும் அல்லது கூட்ட ஒத்திவைப்பானாலும் -ஒவ்வொரு உறுப்பினருக்கும் சாதாரணமாக கூட்டத் தேதிக்கு ஒரு வாரத்திற்கு முன்னதாக தபால் மூலம் எழுத்து மூலமான முன்னறிவிப்புகள் அனுப்பப்படும். ஆனால் ஒத்திவைக்கப்பட்ட கூட்டத்தைப் பொறுத்தவரையில் கூட்டம் நடத்த தீர்மானிக்கப்பட்ட தேதிக்கும் ஒத்திவைக்கப்பட்ட தேதிக்குமிடையேயான கால அவகாசம் அனுமதிப்பதைப் பொறுத்து முன்னறிவிப்பு கொடுக்கப்படலாம். ஒரு கூட்டத்திற்கான முன்னறிவிப்பில் பொதுவாகக் கூட்டம் நடைபெற உள்ள மாநிலம், இடம், தேதி, நேரம், அதில் நடைமுறைப்படுத்தப்பட வேண்டிய பணிகள் ஆகிய விவரங்கள் தெரிவிக்கப்படும். சிறப்புக் கூட்டத்திற்கான ஒரு முன்னறிவிப்பு, அக்கூட்டத்தில் விவாதிக்கப்படவிருக்கும் குறிப்பிட்ட விஷயம் குறித்து கூடுதல் தகவலாக தெரிவிக்கப்படும்.

6) கூட்டத்தை கூட்டுவதற்கு தேவைப்படும் உறுப்பினர்களின் குறைந்தபட்ச எண்ணிக்கை (Quorum) தற்சமயத்திற்கு ஒவ்வொரு குழுவிலிருந்தும் 4 ஆக இருக்கும்.

கூட்டத்தை கூட்டுவதற்கு தேவைப்படும் உறுப்பினர்களின் குறைந்தபட்ச எண்ணிக்கை தற்சமயணத்திற்கு ஒவ்வொரு குழுவின் மொத்த எண்ணிக்கையில் பாதியாக இருக்கும்.

6. (a) ஆளுமைக் குழுவின் ஒவ்வொரு உறுப்பினரும் அல்லது சொசைட்டியின் ஒரு நிறுவனத்தின் ஒரு குழுவினுடைய ஒவ்வொரு உறுப்பினரும் ஆளுமைக் குழு கூட்டும் ஒவ்வொரு கூட்டத்திலும் அல்லது நிலைமைக்கேற்ப கூட்டப்படும் குழுவின் கூட்டத்திலும் கலந்து கொள்வார்கள்; அப்படியொரு கூட்டத்தில் ஒரு உறுப்பினர் கலந்து கொள்ள இயலாத பட்சத்தில்

அவர் கூட்டத்தில் கலந்து கொள்ளாமல் இருப்பதற்கான அனுமதியை எழுத்து மூலமாக கேட்டுக்கொள்வார்.

7. கூட்டத்தை கூட்டுவதற்கான குறைந்தபட்ச எண்ணிக்கை உறுப்பினர்கள், கூட்டத்தை தொடங்குவதற்கு நிர்ணயிக்கப்பட்ட நேரத்திற்கு அரைமணி நேரத்திற்கு பிறகும் கூடாவிட்டால், வந்திருக்கும் உறுப்பினர்கள் அல்லது உறுப்பினர் அக்கூட்டத்தை ஒத்தி வைக்கலாம். இதன் பொருட்டான தீர்மானம் நிறைவேற்றப்பட்டதன் பேரில் ஒரு கூட்டம் சேர்மனால் ஒத்தி வைக்கப்படலாம். இத்தகைய ஒத்திவைக்கப்பட்ட கூட்டத்திற்கு குறைந்தபட்ச எண்ணிக்கை உறுப்பினர்கள் வராத நிலைமையில் வந்திருக்கும் உறுப்பினர்கள், குறைந்தபட்ச எண்ணிக்கையாக எடுத்துக்கொள்ளப் படும்.

8. அந்தக் குழுக்களின் கூட்டத்திற்கு ஆளுமைக் குழுவின் தலைவர் தலைமை வகிப்பார். ஒவ்வொரு குழுவும் ஏப்ரல் மாதத்தில் நடத்தும் தன்னுடைய முதல் கூட்டத்தில் ஒரு துணைச் சேர்மனை தேர்ந்தெடுக்கும்; அவர் சேர்மன் வருகை அளிக்காத பட்சத்தில் கூட்டத்திற்கு தலைமை தாங்குவார். சேர்மனும் உதவிச் சேர்மனும் வராதபோது, உறுப்பினர்கள் கூட்டத்திற்கு தலைமை வகிக்க ஒரு சேர்மனை தேர்ந்தெடுப்பார்கள்.

9. வேறு நிலைமையில் பொது அறிக்கையில் அனுமதிக்கப் படாத பட்சத்தில் கூட்டத்திற்கு வருகை அளித்துள்ள உறுப்பினர்கள் வாக்களித்து பெரும்பான்மையினரால் ஒவ்வொரு பிரச்னையும் தீர்மானிக்கப்படும். ஒரு பிரச்சினை மீது சேர்மன் முன்னதாக வாக் களித்திருப்பார் என்றாலும் இல்லையென்றாலும் அதே பிரச்னை மீது எதிரெதிரானவர்கள் வாக்கு அளித்துள்ள நிலைமையில் இறுதி முடிவைத் தீர்மானிக்கும் வாக்கை (Casting Vote) சேர்மன் அளிப்பார்; ஆனால் எந்தவொரு உறுப்பினரும் ஒன்றுக்கு அதிக மான வாக்கை அளிக்க முடியாது.

10. ஆளுமைக்குழு, பொதுக் குழு அல்லது நிர்வாகக் குழுவால் நிறைவேற்றப்பட்ட எந்தவொரு தீர்மானமும் அவ்வப் போது ரத்துசெய்யப்படலாம் அல்லது மாற்றி அமைக்கப்பட லாம்; இதனை சம்பந்தப்பட்ட குழுவின் வேறு ஏதாவதொரு கூட்டத் தில் செய்ய முடியும்.

11. எந்தவொரு தொழில் தொடர்பு பிரச்னை மீதும் விசாரணை நடத்தவோ அல்லது அதனை செயல்முறைப்படுத்தவோ ஒரு நபரையோ அல்லது ஒரு குழுவையோ ஆளுமைக்குழு அதன் ஏதாவதொரு கூட்டத்தில் நியமிக்கலாம்; ஆனால் அந்த நபரின் அல்லது குழுவின் ஒவ்வொரு நடவடிக்கையும் செயலும் அங்கீகாரம் பெறுவதற்காக ஆளுமைக் குழுவின் கூட்டத்தில் தெரிவிக்கப்பட வேண்டும். ஆளுமைக் குழுவால் அங்கீகரிக்கப்படாத வரையில் அந்த நடவடிக்கையும் செயலும் சொசைட்டியை கட்டுப்படுத்தாது.

12. ஒவ்வொரு குழுவும் நிகழ்ச்சி நிரல் பதிவு புத்தகத்தை பராமரிக்கும்; அலுவலகத்திற்கு ஒரு உறுப்பினரின் வருகையும், குழுக்களின் கூட்ட நடவடிக்கைகளும் அந்தப் புத்தகத்தில் பதிவு செய்யப்படும். கூட்டத்தின் முடிவில் அந்தப் புத்தகத்தில் கூட்டத்தின் சேர்மன் கையெழுத்திடுவார் அல்லது உறுப்பினர்களின் வருகை மற்றும் கூட்ட நடவடிக்கைகள் உறுதிப்படுத்தப்படவிருந்தால் அடுத்த கால சிறிது காலத்திற்குப் பிறகு கையெழுத்திடுவார்.

13. முழுக் கணக்கும் முறையான கணக்குப் புத்தகங்களில் பதிவு செய்யப்படும்; சொசைட்டியின் கணக்கிலும் அதனுடைய நிறுவனங்களின் கணக்கிலும் பெறப்பட்ட மற்றும் கொடுக்கப்பட்ட பணங்களின் பயன்பாட்டு நோக்கங்களுக்காகவே அந்தக் கணக்குப் புத்தகங்கள் கொடுக்கப்பட வேண்டியவையாகும்; இத்தகைய கணக்குப் புத்தகங்கள் ஒவ்வொரு ஆண்டும் தயாரிக்கப்படும்; அவை தகுதி வாய்ந்த தணிக்கையாளர்களால் முறையாக தணிக்கை செய்யப்படும். பின்னர் சந்தாக் கணக்குகளை அடுத்துவரும் ஆண்டில் நடைபெறும் சாதாரணக் கூட்டத்தில் ஆளுமைக் குழுவில் பரிசீலிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்படும்; அல்லது இந்த நோக்கத்திற்காகவே நிர்ணயிக்கப்பட்ட வேறொரு கூட்டத்தில் அங்கீகரிக்கப்படும்; அதன் பேரில் கூட்டத்தின் சேர்மனால் கையெழுத்திடப்படும்.

14. சொசைட்டியின் சந்தாதாரர்கள் மற்றும் காப்பாளர்களின் பட்டியல் ஒன்று பராமரிக்கப்படும்.

15. சொசைட்டியின் நோக்கங்களுக்காக ஆளுமைக் குழுவால் தேர்வு செய்யப்பட்ட வங்கியில் கணக்கு ஒன்று தொடங்கப்பட்டு பராமரிக்கப்படும். சொசைட்டியின் கணக்கில் பெறப்பட்ட ஒவ்வொரு

பணத்தொகையும் காரணமற்ற தாமதமின்றி அந்தக் கணக்கில் போடப்படும். ஏதாவதொரு காரணத்தினால், குறிபிட்ட நோக்கத்திற்காக சேர்மனால் உத்திரவிடப்படாவிட்டால் இது உடனடியாக செய்யப்படும்.

16. அனைத்துச் செக்குகளும் மணியார்டர்களும் ஆளுமைக் குழுவின் சேர்மனாலோ அல்லது ஆளுமைக் குழுவில் அதன் சார்பில் நியமிக்கப்பட்ட நபராலோ அல்லது நபர்களாலோ கையெழுத்திடப்படும்.

இது, விதிகளின் சரியான நகல் என்பதற்கு சான்று அளிக்கப்படுகிறது.

பி.ஆர். அம்பேத்கர்<br>
டி.ஜி. ஜளதாவ்<br>
எஸ்.சி. ஜோஷி

• • •

# 7

# ஒரு வேண்டுகோள்

*மக்கள் கல்வி சொசைட்டி சார்பாக*
**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்,** *எம்.ஏ., பி.ஹெச்.டி., டி.எஸ்சி., பார் அட் லா மற்றும் கவர்னர்- ஜெனரலின் நிர்வாகக் குழு உறுப்பினர் அவர்களால் விடுக்கப்பட்டது.*

*தீண்டத்தகாதவர்கள் என்று பொதுவாக அறியப்பட்டுள்ள தாழ்த்தப்பட்ட ஜாதியினரின்* (Scheduled Castes) *எண்ணிக்கை சுமார் 5 கோடி என்பது சமீபத்தில் மக்கள் தொகை கணக்கெடுப்பு அறிக்கையிலிருந்து தெளிவாகியுள்ளது. தாழ்த்தப்பட்ட ஜாதியினரின் கல்வி வாசனை தற்போது இந்தியா முழுவதும் மிகவும் பின்தங்கிய நிலைமையில் உள்ளது என்பதுவும் உயர் கல்வியைப் பொறுத்த வரையில் உயர் வகுப்பினருக்குப் பின்னால் தொலை தூரத்தில் உள்ளனர் என்பதும் நன்கு அறியப்பட்ட உண்மைகளாகும். இந்தியா முழுவதும் பட்டியலிடப்பட்ட ஜாதிகளின் சமூக, பொருளாதார நிலைமை கவலை அளிக்கத்தக்கதாக உள்ளது என்பதும்கூட ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரு உண்மைதான். தாழ்த்தப்பட்ட ஜாதியினர் ஏன் தங்களுடைய சிரமங்களையும், இயலாமைகளையும் வெல்ல திறனற்றவர்களாக இருக்கிறார்கள் என்பதற்கான காரணங்களில் ஒன்று அவர்களிடையே கல்வி இல்லை என்றும் அனைவராலும் உணரப்பட்டுள்ளது. இந்த உண்மைகளிலிருந்து தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் இந்தப் பிரச்சனைக்கு தீர்வு காண்பதற்கு இந்தக் குறிப்பிட்ட பணிக்கு அர்ப்பணிக்கும் ஒரு தனி அமைப்பு தேவை என்பது முழுமையாக ஏற்றுக்கொள்ளப்படும்.*

*அத்தகையதொரு அமைப்பு இதுவரை இல்லை என்பதால் ''மக்கள் கல்வி சொசைட்டி''யை* (The People's Education Society) *அமைக்க முடிவு செய்யப்பட்டது. இந்தச் சொசைட்டி 1860 ஆம் ஆண்டின் சொசைட்டிகள் பதிவுச் சட்டம்* XXI - *ன் கீழ் பதிவு செய்யப்பட்டு இந்திய அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இந்தியா முழுவதும் தாழ்த்தப்பட்ட ஜாதிகளிடையே உயர் கல்வியை மேம்படுத்துவது சொசைட்டியின் பிரதான நோக்கமாகும். இது, சொசைட்டியின் அமைப்பு விதிகளில் காணப்படும்.*

இந்தச் சொசைட்டியானது, கலை,விஞ்ஞானம் ஆகிய 2 பிரிவுகளிலும் பட்டப்படிப்புக்காக முழுத் தகுதிபெற்ற கல்லூரி மிக விரைவில் மும்பையில் திறப்பதற்கு யோசனை கொண்டுள்ளது. இந்தக் கல்லூரி, தனித்து ஒதுங்கும் (Sectarion) நிறுவனமாக இருக்கப் போவதில்லை. இந்தக் கல்லூரி, எல்லா மாகாணங்களையும் மாநிலங்களையும் சேர்ந்த அனைத்து வகுப்புகளையும் அனைத்துக் கோட்பாடுகளையும் சேர்ந்த மாணவர்களுக்குரியதாக இருக்கும். கல்லூரியின் பணியாளர்கள், சாத்தியமான அளவிற்கு பரந்த உலகு கண்ணோட்டம் கொண்டவர்களாக (Cosmopolitan) இருப்பார்கள். தாழ்த்தப்பட்ட ஜாதிகளைச் சேர்ந்த மாணவர்களுக்கு குறிப்பான கவனம் செலுத்தப்படும் என்பது இந்தக் கல்லூரியின் சிறப்பான அம்சமாக இருக்கும்; அவர்களுக்கு மாணவர் சேர்க்கை, இலவச உதவிகள், ஸ்காலர்ஷிப்புகள், விடுதிகளில் இடமளித்தல் ஆகிய விஷயங்களில் வசதிகள் அளிக்கப்படும். உயர் கல்வி அளிப்பதற்கான ஒரு முன்மாதிரி நிறுவனமாக இந்தக் கல்லூரியை ஆக்க வேண்டும் என்பது மக்கள் கல்வி சொசைட்டியின் ஆளுமைக் குழுவின் விருப்பமாகும். பம்பாயில் கல்லூரி தொடங்கும் இத்திட்டத்திற்கு இந்திய அரசாங்கத்தின் அனுமதி கிடைத்துள்ளது என்ற உண்மை காரணமாக மிருந்த ஊக்கமடைந்துள்ளதாக சொசைட்டி கருதுகிறது. மேலும் கல்லூரிக்கான ஆரம்ப செலவுகளுக்கு மிகக் கணிசமான உதவி அளிக்க இந்திய அரசாங்கம் கருணை உள்ளம் காட்டியுள்ளது. சொசைட்டிக்கு ரூ.6 லட்சம் - இதில் பாதி மானியமாகவும் மீதிப்பாதி வட்டியில்லாத கடனாகவும் அளிக்க அரசாங்கம் ஒப்புக்கொண்டுள்ளது.

நிலம், கட்டிடச் சாமான்கள், விஞ்ஞானக் கருவிகள் மற்றக் கருவிகள் ஆகியவற்றின் அசாதாரணமான விலை காரணமாக, இந்தத் தொகை உண்மையில் தேவைப்படும் தொகைக்கு குறைவாகவே இருக்கும். கல்லூரிக்கு ரூ.15 லட்சமாவது தேவைப்படும். எனவே, இந்திய அரசாங்கத்தால் கொடுக்கப்பட்ட பணத்தை கணக்கில் எடுத்துக் கொண்டு இன்னும் தேவைப்படும் பெருந்தொகையான ரூ. 9 லட்சம் நன்கொடை மூலம் திரட்டப்பட வேண்டும் என்பது கவனிக்கப்படும். எனவே, சொசைட்டியானது, ஏனைய வட்டாரங்களிலிருந்து கணிசமான உதவியை கேட்க வேண்டியுள்ளது. சொசைட்டி தன்னுடைய திட்டத்தை வெற்றிகரமாக செயல்படுத்துவதற்கு நிதி உதவி கோரி விடுக்கும் வேண்டுகோளுக்கு பொதுவாக கல்வியிலும் குறிப்பாக தீண்டத்தகாதவர்களின் கல்வியிலும் அக்கறை கொண்டவர்கள் அனுதாபமாக கவனிப்பார்கள் என்று உயர்ந்த அளவில் நம்பிக்கை கொண்டுள்ளது.

சில மாநிலங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்த மக்கள் அதிக அளவில் உள்ளனர்; எனவே, இந்த விஷயத்தில் தாராளமாக உதவுமாறு மாநில ஆட்சியாளர்களுக்கு மக்கள் கல்விச் சொசைட்டி வேண்டுகோள் விடுக்கிறது. சொசைட்டியானது தாழ்த்தப்பட்ட ஜாதிகளைச் சேர்ந்த மாணவர்களுக்கும் அதேபோல் தாழ்த்தப்பட்ட ஜாதிகள் அல்லாத மாணவர்களுக்கும் கல்லூரியில் சிறப்பு முன்னேற்பாடுகள் செய்ய வேண்டும் என்பதில் மக்கள் கல்வி சொசைட்டி மிகுந்த மகிழ்ச்சி அடையும். முக்கியமாக கீழ்க்கண்ட நடவடிக்கைகளை ஒப்புக்கொள்வதில் மிகுந்த மகிழ்ச்சி அடையும். சில மாநிலங்களில் தாழ்த்தப்பட்ட ஜாதிகளைச் சேர்ந்த மக்களின் எண்ணிக்கை பெரிய அளவில் உள்ளது; எனவே, மக்கள் கல்வி சொசைட்டியானது மாநிலங்களின் ஆட்சியாளர் களுக்கு விடுத்த வேண்டுகோளில் இந்த விஷயத்தில் தாராளமாக உதவி அளிக்குமாறு கேட்டுக் கொண்டுள்ளது. மேலும், அந்தக் கல்லூரியில் மாநிலங்களிலிருந்து வந்து படிக்கும் தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் மாணவர்களுக்கும் தாழ்த்தப்பட்ட ஜாதிகள் அல்லாத மாணவர்களுக்கும் சிறப்பு ஏற்பாடுகளை மேற்கொள்ள மகிழ்ச்சி அடையும், குறிப்பாக கீழ்க்காணும் வசதிகளை செய்து தர ஒப்புக் கொள்ளும்.

1) கல்லூரியின் பல்வேறு வகுப்புகளில் கலை, விஞ்ஞானம் ஆகிய 2 பகுதிகளிலும் குறிப்பிட்ட சதவீத இடங்களை ஒதுக்குவது.

2) கல்லூரி கட்டிடத்தின் ஒரு பகுதியாக கட்டபபடவிருக்கும் விடுதிகளில் இட ஒதுக்கீடு செய்வது.

3) இலவச உதவிகள் மற்றும் ஷ்காலர்ஷிப்புகளில் குறிப் பிட்ட எண்ணிக்கையை ஒதுக்குவது.

நன்கொடை அளிக்கும் ஒரு தனி அரசு (State) யோசனை யாக கூறும் எந்தவொரு நியாயமான நிபந்தனையையும் ஏற்றுக் கொள்ள சொசைட்டி தயாராக உள்ளது.

இத்தகைய நிதி அளிப்புகளிலிருந்து கணிசமான உதவிகளை கல்லூரி பெறும் அதே சமயத்தில் தனி அரசு கல்லூரியிலிருந்து பெரும் பலனை அடையும்; அந்த வகையில் தனி அரசுகளின் தாழ்த்தப்பட்ட ஜாதியினர் அவர்களின் கல்வியில் சிறப்பு அக்கறை எடுத்துக்கொள்ளும் கடமை உணர்வுடன் அறிவு கற்றுக் கொடுக்கும்

சிறப்பு ஏற்பாட்டை இந்தக் கல்லூரியில் காண்பார்கள் என்று சொசைட்டி தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறது.

எனவே, இந்திய தனி அரசுகளின் ஆட்சியாளர்களுக்கு* இந்த உள்ளார்வமிக்க வேண்டுகோளை சொசைட்டி விடுக்கிறது; மேலும், இந்தக் கல்லூரித் திட்டம் நிறைவேறவும் அதன் மூலம் இந்தியாவில் உள்ள தாழ்த்தப்பட்ட ஜாதி குறிப்பாக தாழ்த்தப் பட்ட ஜாதிகளில் கீழ்நிலைமையில் உள்ளவர்களுக்கு மிகவும் தேவைப்படும் உயர்கல்வி வசதிகளை அளிக்கவும் தாராளமான நிதி உதவிகளை அளித்து உதவுமாறு சொசைட்டி வேண்டுகோள் விடுக்கிறது. இது சம்பந்தமாக தேவைப்படும் எந்தவொரு தகவலையும் அளிப்பதற்கு சொசைட்டி மகிழ்ச்சி அடையும்.

**பி.ஆர். அம்பேத்கர்.**

*26-11-1945*
*22, பிரித்வி ராஜ் சாலை,*
*புதுடெல்லி.*

* ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள் பயனடையும் வகையில் பம்பாயில் ஒரு கல்லூரி கட்டுவதற்கு நிதி உதவிகோரி பரோடா மகாராஜ் மீண்டும் அணுகப்பட்டார். அது சம்பந்தமாக அவருக்கு டாக்டர் அம்பேத்கர் சார்பில் கே.ஏ.கெலுஸ்கரால் ஒரு வேண்டுகோள் விடுக்கப்பட்டது - பிறசேர்க்கை XIII-ஐ பார்க்கவும்.

# 8

# பம்பாயில் தீண்டத்தகாதவர்களுக்காக ஒரு சமூக மையம்

*டாக்டர் பீ.ஆர்.அம்பேத்கர், தீண்டத்தகாதவர்கள் இயக்கத்திற்கான நிதியைத் திரட்டுவதற்கு தொடர்ந்து முயற்சிகளை மேற்கொண்டு வந்தார்; இந்திய மக்களுக்கு சமூகச் சமத்துவம் என்ற கண்ணோட்டத்தில் மனித கண்ணியத்தை கொண்டு வரவே அவர் அவ்வாறு செய்து வந்தார். தாழ்த்தப்பட்டோர்களுக்கான நடவடிக்கைகளை செயல்படுத்தும் பொருட்டும் கண்காணிக்கும் பொருட்டும் ஒரு மையத்தைத் தொடங்க அவர் திட்டமிட்டுக் கொண்டிருந்தார். அவர் அநேகமாக 1949-ல் இளவரசர்களுக்கும் இந்திய மக்களுக்கும் வேண்டுகோள் விடுத்தார் - ஆசிரியர்.*

*இந்திய இளவரசர்களுக்கும் இந்திய மக்களுக்கும் ஒரு வேண்டுகோள்*

*பம்பாயில் தீண்டத்தகாதவர்களுக்கான ஒரு சமூக மையம்*

*இத்திட்டத்திற்கு ரூ. 3,25,000 தேவை*

*நீங்கள் உதவ மாட்டீர்களா?*

*மதிப்பிற்குரிய டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், எம்.ஏ.பி.ஹெச்டி., டி.எஸ்சி., பார்-அட்-லா.*

*கவர்னர்-ஜெனரலின் நிர்வாகக் கவுன்சில் உறுப்பினர் விடுக்கும் ஒரு வேண்டுகோள்.*

### தீண்டத்தகாதவர்களிடையே புதிய இயக்கம்

இந்திய மக்கள் தொகையில் தீண்டத்தகாதவர்களின் எண்ணிக்கை 7 கோடியாகும். அவர்கள் கொடுமைக்கு உள்ளாக்கப்பட்டு இழிவுபடுத்தப்படும் நிலைமை இந்தியாவின் பிரதான பிரச்னைகளில் ஒன்றாக இருந்து வருகிறது. அவர்களை மற்ற வகுப்பினர் அளவிற்கு உயர்த்தும் பணி, கடந்த காலத்தில் ஏராளமான இந்து சீர்திருத்தவாதிகளின் கவனத்தை கவர்ந்துள்ளது. ஆனால், தங்களுடைய தலைவிதியை மேம்படுத்தும் பொறுப்பை தீண்டத்தகாத

வர்களே முனைந்து முயற்சிக்கும் நடவடிக்கை முற்றிலும் புதிய ஒன்றாகும். இது, சமத்துவத்திற்காக நடத்தும் அவர்களின் சொந்தப் போராட்டமாகும். இது, 25 ஆண்டுகளக்கு முன்புதான் தொடங்கியது.

இந்தப் போராட்டம், பல கட்டங்களை கடந்துள்ளது, திரும்பத் திரும்ப அவமானங்களும் தொடர்ந்து எதிர்ப்புகளும் நிகழ்ந்த போதிலும் இந்த இயக்கம் வலுவடைந்துள்ளது. சுய சார்பு என்ற செய்தி, மிகக் கீழ்மட்டம் வரைகூட சென்றுள்ளது; வெளித் தொடர்பே இன்றி தனித்துவிடப்பட்ட கிராமங்கள் தனிமையான குக்கிராமங்கள் வழிப்படையச் செய்யப்பட்டிருக்கின்றன. ஒரு காலத்தில் பெருமளவிலான மூட நம்பிக்கையும் அப்பட்டமான சுய தாழ்வுப் போக்கும் எல்லையற்ற அறியாமையும் ஆட்சி செய்துவந்த தூங்கு மூஞ்சித்தனமான பள்ளத்தாக்குகள் இப்போது புதிய வாழ்க்கையால் அதிர்ந்து கொண்டிருக்கின்றன. மிகச் சரியான உத்வேகம் காணப்பட்டுள்ளது; ஒரு உண்மையான இயக்கம் தொடங்கப்பட்டுள்ளது. சுயமரியாதை, சுயசார்பு ஆகியவற்றின் அடிப்படையில் இந்த இயக்கம் திறமையுடன் அமைக்கப்பட்டால் தீண்டத்தகாதவர்களின் அந்தஸ்தையும் இந்த நாட்டின் அந்தஸ்தையும் உயர்த்துவதற்கான பூதாகரமான சக்தி கிளப்பப்பட முடியும். இந்த சமூக இயக்கத்தின் சார்பில் நான் இந்த வேண்டுகோளை விடுக்கிறேன்.

என்னுடைய நடவடிக்கைகளை நெருக்கமாக தெரிந்திராதவர்கள் ஒரு சமூக இயக்கத்தின் சார்பிலான என்னுடைய இப்போதைய நடவடிக்கையால் வியப்படையலாம். அவர்கள், என்னை ஒரு அரசியல் வாதியாகவே பார்ப்பதற்கு தலைப்பட்டுள்ளனர். உண்மையில் அரசியல் என்னை ஆட்டிப் படைத்ததில்லை. அது, அவ்வப் போது என்னுடைய நடவடிக்கையாக இருந்திருக்கிறது. எவ்வாறாயினும், ஒரு சமூதாய மறுமலர்ச்சியில் முக்கியமான அரசியல் சக்திகள் இருக்க முடியும்; சமூக, பொருளாதார, தார்மீக சக்திகள் மிகுந்த முக்கியத்துவமானவை; மக்களின் சமூக, பொருளாதார, தார்மீக மறுமலர்ச்சிக்கு அரசியல் சக்திகள்தான் வழிவகையாக இருக்கின்றன என்ற கருத்தின்பால் வரலாற்று மாணவன் என்ற முறையில் நான் மிகவும் கவரப்பட்டுள்ளேன். நான் ஆரம்பத்திலிருந்தே, ஒரு சமூக இயக்கத்திற்கே அதிக முக்கியத்துவம் அளித்திருக்கிறேன். என்னுடைய 25 ஆண்டுகால பொது வாழ்க்கையின் பெரும்பகுதி, தீண்டத்தகாதவர்களின் சமூக அந்தஸ்து உயர்வுக்கே பிரதானமாக அர்ப்பணிக்கப்பட்டுள்ளது. நான் ஒரு அரசியல்வாதி

மட்டுமே என்ற கருத்தை மாற்றுவதற்காகவே நான் இதை குறிப்பிடுகிறேன். ஏனென்றால், இது ஒரு தவறான கருத்து. இந்தப் புதிய இயக்கத்திற்கு ஒரு உந்து விசை அளிப்பதிலும் இதனை ஊட்டி வளர்த்ததிலும் நான் அற்பமான பங்கு ஆற்றவில்லை என்று பொதுமக்களுக்கு உணர்த்த விரும்புகிறேன். என்னுடைய இந்தக் கூற்றுக்கு ஆதரவாக காங்கிரசுக்காரரும் முன்னாள் பம்பாய் பிரதமருமான திரு.பி.ஜி,கெர் பேசிய பேச்சை மேற்கோள் காட்டுவதைவிட அதிகமாக நான் எதுவும் செய்துவிட முடியாது; அமைச்சர்கள் சம்பள மசோதா மீது பம்பாய் சட்டமன்றத்தில் நான் ஆகஸ்ட் 23, 1937-ல் ஆற்றிய என்னுடைய உரைக்கு திரு.கெர் ஆற்றிய பதில் உரையை மேற்கோள் காட்டுகிறேன். அதில் திரு. கெர் கூறியதாவது.

''மேலும் (டாக்டர் அம்பேத்கர்) பெரும் செயல்திறனைக் காட்டியுள்ளார், இதில் இரண்டு கருத்துக்கள் இருக்க முடியாது. இந்த அமைச்சரவையில் உள்ளவர்களின் திறன்களை மதிப்புக்குரிய உறுப்பினர் (அம்பேத்கர்) குறிப்பிட்டதற்காகவும் இதில் நமக்கு அவருடைய உண்மையான கருத்தை தெரிவித்ததற்காகவும் நான் அவருக்கு கடமைப்பட்டுள்ளேன். அவருடைய திறமை குறித்து நான் மிக உயர்வான கருத்து கொண்டுள்ளேன். அவர் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களுக்காக யாரும் செய்திருக்க முடியாத சேவையை செய்து கொண்டிருக்கிறார் என்பது எனக்குத் தெரியும் (பலத்த ஆரவாரம்). இந்தச் சேவைக்காக அவர் என்ன சம்பளம் பெறுகிறார் என்ற மதிப்பிற்குரிய உறுப்பினரிடமிருந்து நான் தெரிந்து கொள்ளலாமா? ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் நியாயங்களுக்காக அவர் செய்து கொண்டிருக்கும் சேவையை எவ்வளவு பணம் கொடுத்தும் வாங்க முடியாது என்று எனக்குத் தெரியும் (பலத்த ஆரவாரம்) மதிப்பிற்குரிய உறுப்பினர் தன்னுடைய சமுதாயத்தின் நியாயத்திற்காக செய்து கொண்டிருப்பதை எந்தப் பணத் தொகையாலும் அளக்க முடியாது. திறமை என்பது ஒருவர் பெறக்கூடிய சம்பளத்தை பொறுத்ததல்ல. என்னுடைய நண்பர் மதிப்பிற்குரிய உறுப்பினர் தன்னுடைய சமுதாய மக்களுக்காக ஆற்றும் திறன்மிக்க சேவைக்காக அவர் பெறும் பணவகை ஆதாயம் என்ன? நான் அறியலாமா?''*

என்னைப் பற்றி காங்கிரஸ் வட்டாரத்திலிருந்து கிடைத்த இந்த பாராட்டுத் தகவல் நம்பகத் தன்மை கொண்டது என்பதால் நான் மகிழ்ச்சியடைகிறேன். இது, கடந்த கால்த்தில் பிரதானமாக

---

* பம்பாய் சட்டமன்ற விவாதங்கள், 1937 தொகுப்பு 1, பக்கம் 272.

சமூகப் பணிக்கே என்னை அர்ப்பணித்துக் கொண்டேன் என்பதையே காட்டுகிறது.

## ஒரு சமூக மையத்திற்கான தேவை

என்னுடைய விருப்பம் என்னவென்றால் திரு.கெர் குறிப்பிட்ட புனிதமான பணி, ஒரு நிரந்தரமான அடித்தளத்தில் பொறிக்கப்பட வேண்டும் என்பதுதான். அதுவே, தீண்டத்தகாதவர்களின் நலனில் அக்கறை அனைவரின் கருத்தாக இருக்க வேண்டும் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன். இந்த இயக்கம் வெற்றி பெறுவதாக இருந்தால் இது, மூன்று விஷயங்களில் அதாவது, ஒரு மயை தலைமை அலுவலகம், 2) நன்கு பயிற்சி பெற்ற அர்ப்பணிப்புக் கொண்ட தொண்டர்கள் குழு 3) நிதித் திட்டம் ஆகியவற்றில் வலுவாக இருக்க வேண்டும் என்பதில் இரண்டு கருத்துக்கள் இருக்க முடியாது இந்த 3 வழிவகைகளில்தான் இந்த இயக்கம் ஒரு வலுவான, நிரந்தரமான முறையில் காலூன்ற முடியும்.

இந்த மூன்றில், முக்கிய தலைமை அலுவலகமாக சமூக மையம் ஒன்றை நிறுவுவது என்பது, மிகவும் அடிப்படையானதாக கருதப்பட வேண்டும். ஏனெனில், ஒரு சமூக மையம் நிறுவப்பட்டுவிட்டால், அது நான் தயாரித்துள்ள திட்டத்தின்கீழ் இயக்கத்தை தொடர்ந்து இட்டுச் செல்வதற்குத் தேவையான சமூக நடவடிக்கைகள் அனைத்தையும் ஒருங்கிணைத்துக் கொண்டு செல்ல உதவும். மேலும் சமூக நடவடிக்கைகளை நடத்துவதற்கான செலவுகளை சமாளிக்கவும் முழு நேர சம்பள அடிப்படையில் அர்ப்பணிப்புள்ள ஊழியர்கள் குழுவை பராமரிக்கவும் வருமானத்தை பெற்றுத்தரும்.

## பம்பாயின் பொருத்தம்

ஒவ்வொரு மாகாணத்தின் தீண்டத்தகாதவர்களுக்கும் ஒரு சமூக மையத்தை கொண்டிருக்க வேண்டும் என்பதில் சந்தேகம் இல்லை. ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒரு சமூக மையத்தை அமைத்துத்தர வேண்டும் என்பதுதான் என் திட்டமாகும். எனினும் இதன் தொடக்கம் ஏதாவதொரு இடத்தில் இருந்ததாக வேண்டும்; தொடக்கம் சிறப்பாக செய்யப்படும் இடம் பம்பாய்தான் என்ற முடிவுக்கு நான் வந்துள்ளேன் பம்பாய்தான் இந்த இயக்கத்தின் ஈட்டி முனையை அளித்தது. ஆகவேதான், ஒரு முறைப்படுத்தப்பட்ட, நிரந்தர இயக்கத்திற்கான அடித்தளம் பம்பாயில் போடப்பட

வேண்டும் என்பது நிலைமை சரியாக உள்ளது என்பதாகும். இந்தக் காரணங்களுக்காகவே நான் பம்பாயை தேர்வு செய்தேன். பம்பாய், தீண்டத்தகாதவர்களின் உயர்வுக்கான சமூக, பொருளாதார மற்றும் கல்வி நடவடிக்கைகளுக்கு ஒரு முன்மாதிரியாக செயல்படும்; அதுமட்டுமின்றி புதிய கருத்துக்களை பரப்பும் ஒரு மையமாகவும் பல்வேறு வகையான நடவடிக்கைகளை ஒரு இணக்கமான தொகுப்பாக ஒருங்கிணைக்கும் மையமாகவும் செயல்படும்; எனவே, பம்பாயில் சமூக மையம் ஒன்றை நிறுவுவதான குறிக்கோளிடப் பட்டது.

குறிக்கோளிடப்பட்ட சமூக மையத்திட்டம் - இது பற்றிய விளக்கக் குறிப்பு ந்த வேண்டுகோளின் பகுதியில் அளிக்கப்பட் டுள்ளது - ஒரு விஷயத்தைக் காட்டும்; அது என்னவெனில் அத் திட்டம், தீண்டத்தகாதவர்களுக்காக ஒரு பிரபலமான வாசஸ்தல மாக (Resort) சமூக மையத்தை ஆக்குவதற்கு தேவையான அனைத்து அம்சங்களையும் கொண்டுள்ளது என்பதுதான். மேலும் அந்த வாசஸ்தலம், மேற்கத்திய நாடுகளில் கட்டப்பட்டு இருக்குமு சமூக குடியிருப்புகளின் அடிப்படையில் அமைக்கப்படும். தீண்டத்தகாத வர்களின் பழக்க வழக்கங்களிலும் வாழ்க்கையைப் பற்றிய அவர் களின் பொதுவான கண்ணோட்டத்திலும் கிட்டத்தட்ட ஒரு ஒட்டு மொத்த மாற்றத்தை கொண்டுவந்து அவர்களுடைய சமூக, கலாச்சார வாழ்க்கையை உயர்த்துவதற்கே வாசஸ்தலம் அமைக்கப் படும் என்றும் அத்திட்டம் கூறுகிறது. இந்த வாசஸ்தலம், அவர்களின் இலக்கு மற்றும் செயல் இடையே ஒற்றுமையை ஏற்படுத்தும்; சமூக மறுமலர்ச்சிக்கான பணியை ஒரு நிரந்தரமான அடித்தளத்தில் நிறுத்தும். பம்பாயில் தற்போது தீண்டத்தகாதவர்கள் அவர்களாகவே மேற்கொண்டுவரும் பிரதான நடவடிக்கைகளை மொத்தமாக இந்த மையத்திற்கு கொண்டு வரமுடியும். மேலும் தீண்டத்தகாத வர்களின் பிரதான நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு பொருத்த மான இடம் தேடப்பட வேண்டியுள்ளது; இந்தச் சிரமத்தால் ஏற் பட்டுள்ள கடுமையான தடங்கல், இத்தகையதொரு மையத்தால் போக்கப்படும்.

## மையம் ஒரு பொது அறக்கட்டளையாக இருக்கும்

இந்த மையத்தின் செயல் எல்லை மற்றும் பணிகள், ஒரு பதிவு செய்யப்பட்ட அறக்கட்டளை ஆவணத்தால் (Registered Trust Deed) நிர்வகிக்கப்படும் ஒரு அறக்கட்டளை உறுப்பினர்கள் குழுவால் மையத்தின் நிதிகள் நிர்வகிக்கப்படும்.

மையத்தின் நோக்கங்களும் இலக்குகளும் கீழே கொடுக்கப் பட்டவையாக இருக்கும்.

(a) துயரம் மற்றும் வறுமையிலிருந்து நிவாரணம்.

(b) கல்வியில் முன்னேற்றம்

(c) கொடுங்கோன்மை மற்றும் ஒடுக்கு முறையிலிருந்து நிவாரணம்

(d) சமூக உரிமைகளையும் சிறப்புரிமைகளையும் பெறுவதும் காப்பதுவும்

(e) சமூகக் கொடுமைகள் ஒழிப்பு

(f) மூடத்தனமான நடைமுறைகளையும் மூடத்தனங்களை யும் ஒழிக்கும் நோக்குடன் பொது அறிவையும் அறிவொளி யையும் பரப்புவது.

(g) சமூக மற்றும் மத வாழ்க்கையைப் பெற்று முன்னேற்றுவது

(h) சமூக மற்றும் பொருளாதார மேம்பாட்டுக்கான அமைப்பு ரீதியான முயற்சியை அதிகரிப்பது.

(i) சிவில், சமூக, பொருளாதார, மதச் செயல்களுக்கான தடங்கல்கள், பாரபட்சம் ஆகியவற்றை நீக்கும் நடவடிக்கை களுக்கு சட்ட ரீதியான அனுமதி

(j) தீண்டாமை ஒழிப்பு

## மையத்தின் செயல்பாடுகளும் நடவடிக்கைகளும்

தீண்டத்தகாதவர்களின் நலன்களுக்காக தங்களை அர்ப் பணித்துக் கொண்ட ஊழியர்களை பராமரிப்பதற்கு மையம் குறிக் கோளிட்டுள்ளது; அவர்களுடைய நடவடிக்கைகள் மையத்தின் நோக்கங்கள் மற்றும் இலக்குகளுக்கு முழு வலுவளிக்கும் வகையில் திட்டமிடப்படும். குறிக்கோளிடப்பட்ட மையத்தின் நடவடிக்கை கள் பற்றி ஒரு விவரக் குறிப்பு கீழே கொடுக்கப்படுகிறது.

### 1) அலுவலகம்

பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டுவரும் ஊழியர் கள், இதுவரையிலும் வாடகை கட்டிடங்களிலோ அல்லது தங்க ளுடைய சொந்த குடியிருப்புகளிலோ சந்தித்து தங்களுடைய பணி களை செயல்முறைப்படுத்தி வருகின்றனர். இந்த நடவடிக்கை களுக்கு வசதிகள் அளிக்கும் நோக்குடனும் இந்த நடவடிக்கைகளை

ஒரு மைய இடத்தில ஒருங்கிணைக்கும் பொருட்டும் அத்தகைய நிறுவனங்களின் அலுவலகங்களுக்கு மையத்தில் இடமளிக்கப்படும்.

## 2. மையத்தின் ஊழியர்களுக்கு குடியிருப்புகள்

சுய நலமற்ற தன்னார்வ ஊழியர்கள் குழாம் ஒன்று இந்நேரம் வரை இருக்கிறது. அவர்கள், அவர்களுடைய ஓய்வு நேரங்களில் இயக்க நடவடிக்கைகளில் ஈடுபடுத்தப்படுகின்றனர். இத்தகைய ஊழியர்களை ஒன்றாக ஒருங்கிணைக்க வேண்டும்; அவர்களுடைய நேரத்தையும், சக்தியையும் தீண்டத்தகாதவர்களின் நலன்களுக்கும் அந்த மக்களின் குறைகளையும் தடைகளையும் நீக்கவும் அர்ப்பணிக்க வேண்டும்; இதன் பொருட்டு அந்த ஊழியர்களை ஒன்றாக ஒருங்கிணைப்பதற்கு இப்போது ஆலோசிக்கப்படுகிறது.

## 3) பொது அரங்கம்

தீண்டத்தகாதவர்களுக்கென ஒரு பொது அரங்கம் வேண்டும் என்ற அவசியம் இப்போது மிக முக்கியமான பிரச்னையாக உள்ளது. கிட்டத்தட்ட 2500 பேர் அமரக்கூடிய ஒரு பெரிய அரங்கத்தை நல்ல முறையில் கட்டுவதற்கு நோக்கிடப்பட்டுள்ளது. அந்த அரங்கம், பொதுக்கூட்டங்களுக்கும் பெண்களுடைய கூட்டங்களுக்கும் மாணவர்களுடைய கூட்டங்களுக்கும் கேளிக்கை, கல்வி மற்றும் மற்ற சமூக நிகழ்ச்சிகளுக்கும் பயன்படுத்தப்படும்.

## 4) நூலகம் மற்றும் படிப்பறை

கருத்துக்கள், கலை, பரந்த மனித நலன்கள் ஆகியவற்றை புரிந்துகொள்ளும் உணர்வுத்திறனை தீண்டத்தகாதவர்களிடையே ஏற்படுத்த வேண்டும்; இந்த நோக்குடன் அவர்களுடைய சிந்தனைகளை மேம்பாடு டையச் செவதற்காக அதற்கான வசதிகளை அவர்களுக்கு அளிப்பது அவசியமாகும். அவர்களின் சலிப்பூட்டுகின்ற, துயர் மிகுந்த வாழ்க்கையில் மிக உயரிய மற்றும் சிறப்பு வாய்ந்த விஷயங்கள் அளிக்கப்பட வேண்டும்; இதன் பொருட்டு அவர்கள் ஓய்வு நேரங்களில் அத்தகைய விஷயங்கள் மீது அவர்களுடைய கவனங்களைத் திருப்புவதற்கான வழிமுறைகளை அவர்களுக்கு ஏற்படுத்தித்தர வேண்டும். இந்த நோக்கத்திற்கு உதவுவதற்கு தீண்டத்தகாதவர்களின் குடியிருப்புகளில் நூலகங்கள் நிறுவுவதைக் காட்டிலும் பயனுடையதாக எதுவும் இருக்க முடியாது. இது, மையத்தின் மிக முக்கியமான நடவடிக்கைகளில் ஒன்றாக இருக்கும்.

இத்துடன் தீண்டத்தகாதவர்களின் பிரச்சினைகளை ஆய்வு செய்ய விரும்பும் மாணவர்களுக்கான மைய நூலகம் ஒன்றை ஏற்படுத்தவும் குறிக்கோளிடப்பட்டுள்ளது. வரக்கூடிய பல ஆண்களில் பலரின் சக்தியையும் கவனத்தையும் பயன்படுத்தும் அளவிற்கு தீண்டத் தகாதவர்களின் பிரச்னை மிகப் பரந்து கிடக்கிறது. ஆனாலும், இந்தப் பிரச்சினையை இதனுடைய முறையான கண்ணோட்டத்திலும் இதனுடைய பல்வேறான விளைவுகள் பற்றியும் ஆராய்வதற்கு தற்போது எந்த வசதியும் இல்லை. எனவே, குறிக்கோளிடப்பட்டுள்ள மையத்தில் நல்ல வசதிகளுடன் கூடிய நூலகத்தையும் படிப்பகத்தையும் ஏற்படுத்துவதன் மூலம் அத்தகைய ஆய்வுக்குத் தேவையான நூல்களைத் திரட்டுவதற்கு திட்டமிடப்பட்டுள்ளது.

## 5. புத்தக வெளியீட்டுப் பிரிவு

தீண்டத்தகாதவர்கள், அறியாமையிலும் மூடநம்பிக்கையிலும் மூழ்கிப்போயுள்ளனர். அவர்களால் செய்யப்படும் கேடுமிக்க பழக்க வழக்கங்களும் மரபு நடைமுறைகளும் அதிர்ச்சி அளிக்கின்றன. இந்தக் கேடான பழக்க வழக்கங்களிலிருந்து மரபு நடைமுறைகளிலிருந்தும் அவர்களை விடுவிப்பது மிக அவசரமான தேவைகளில் ஒன்றாகும். இதற்கு மிகச் சிறந்த வழி, பகுத்தறிவு அமைப்புகளால் வெளியிடப்பட்டுள்ள இலக்கியங்களையும் புத்தகங்களையும் அவர்களுக்கு வழங்குவதுதான். இந்த நோக்கத்திற்காக ஒரு சிறு அச்சகம் ஒன்றை நிறுவி பராமரிக்க குறிக்கோளீட்டப்பட்டுள்ளது.

## 6. தொண்டர்கள் அமைப்பு

நாடு முழுவதும் குறிப்பாக பம்பாய் பிரஸிடென்சியிலும் மத்திய மாகாணங்களிலும் தீண்டத்தகாத இளைஞர்கள்; ஆயிரக்கணக்கானவர்கள் சமதா சைனிக் தலம் எனப்படும் அமைப்பு ரீதியான தொண்டர்கள் குழாம்களை தன்னியல்பாக தங்களை இணைத்துக் கொண்டுள்ளனர். இந்த இயக்கத்தின் நோக்கம் கட்டுப்பாட்டு உணர்வை தீண்டத்தகாதவர்களின் மனதில் நிலை நிறுத்தவும் புதிய சகாப்தம் குறித்த செய்தியை அவர்களிடையே பரப்புவதுவும்தான். இந்த முக்கியமான நடவடிக்கையை மையப்படுத்துவதற்கும் நாட்டின் ஏனைய பகுதிகளுக்கு பரப்புவதற்கும் திட்டமிடப்பட்டுள்ளது.

## 7. பிரச்சாரச் சாதனைகள்

சமதா சைனிக் தலம் விஷயத்தில் கண்டதைப்போல, பம்பாய் பிரெஸிடென்சியில் எண்ணற்ற தீண்டத்தகாத இளைஞர்கள் கூட்டுக் குழுக்களையும் மேடை நாடக சாதனைகளையும் ஏற்படுத்தியுள் ளனர்; இவற்றை திருமண விழாக்களிலும் ஏனைய மத மற்றும் சமூக நிகழ்ச்சிகளிலும் நடத்தியுள்ளனர். ஜல்ஸா மண்டல்கள் என்று அவர்களால் அழைத்துக் கொள்ளப்பட்ட இவை, அமைச்சூர் நாடக குழுக்களாகும்; இவை, நச்சுத்தனமான சமூக பழக்க வழக்க கேடுகளை விளக்கிக் காட்டும் நோக்குடனான நாடகங்களை இந்த நாடகக் குழுக்களே சுயமாக தயாரித்து படிப்பறிவற்ற கிராமத் தினர் முன்பு திடீரென்று ஏற்பாடு செய்யப்பட்ட மேடைகளில் நடத்துகின்றனர். பழைய கருத்துக்களை விரட்டி புதிய கருத்துக் களை ஏற்கச் செய்வதற்கான இந்த மிகுந்த பயனுள்ள பிரச்சார நடவடிக்கையை மக்களிடையே வலுவான முறையில் கொண்டு செல்லவும் இந்த நடவடிக்கைக்கு வழிகாட்டவும் இதனை இன்னும் அதிகமான பயனுள்ளதாக்கவும் திட்டமிடப்பட்டுள்ளது.

### மையம் அமைப்பதற்கான செலவு

குறிக்கோளிடப்பட்ட திட்டத்தின்படி மையம் கட்டுவதற்கான தேவைகள் கீழே விபரிக்கப்பட்டுள்ளன.

I நிலம் - 156' X 132' - கிட்டத்தட்ட
2280 சதுர அடிகள்.
மதிப்பு (ஏற்கெனவே குத்தகைக்கு
எடுக்கப்பட்டுள்ளது) ரூ. 37,000
ஆண்டுக்கு தரை வாடகை ரூ. 2200

II கட்டிட அமைப்புகள்
1. பொது அறை -கீழ் தளம் மற்றும் 2 மேல்
தளங்களைக் கொண்ட கட்டிடம்
கீழ்தளம் :- பொது அறை 120' X 62'
(உட்பக்கம் 10 அடி அகல வராண்டா மற்றும்
கேலரியுடன் சுமார் 2500 பேர் உட்கார வசதி)
தோராயச் செலவு - ரூ. 75000

2. மேல்தளங்கள் :- ஒவ்வொரு தளத்திலும்
32 தனி அறைகள் 16 குடியிருப்புகள் - ரூ. 75000

| | | |
|---|---|---|
| 2. | கிழக்குப் பகுதிக் கட்டிடம் :- ஒரு கீழ்தளம் மற்றும் 2 மேல் தளங்கள் ஒவ்வொரு தளத்திலும் 3 இரட்டை அறை குடியிருப்புகள் வீதம் 9 குடியிருப்புகள் | ரூ. 26500 |
| 3) | மேற்குப் பகுதி கட்டிடம் : ஒரு கீழ்தளம் 2 மேல் தளங்கள் ஒவ்வொரு தளத்திலும் 3 இரட்டை அறை குடியிருப்புகள் வீதம் 9 குடியிருப்புகள் | ரூ. 26500 |
| 4) | முன் கட்டிடம் :- ஒரு கீழ்தளம் 2 மேல் தளங்கள் - கீழ்தளம் :- அச்சகம், உடற்பயிற்சிக் கூடம் ம ற்றும் அலுவலகம். 3 மேல் தளங்கள் :- முதல் தளத்தில் அலுவலகங்கள், மற்ற 2 தளங்கள் ஒவ்வொன்றிலும் 13 இரட்டை அறை குடியிருப்புகள் | ரூ. 85,000 |
| | மொத்தம் | ரூ. 2,88,000 |
| | நில விலை | ரூ. 37,000 |
| | ஆக மொத்தம் | ரூ. 3,25,000 |

மையம் கட்டுவதற்கான செலவு ரூ. 3,25,000 என மதிப்பிடப் பட்டுள்ளது. இந்த மதிப்பீடு சுமூகமான காலங்களில் நிலவும் விலையை அடிப்படையாகக் கொண்டதாகும்.

இந்தக் கட்டிட அமைப்புகள், 3 நோக்கங்களுக்கு பயன்படும் நோக்குடன் வரையப்பட்டுள்ளன. இவற்றில் தீண்டத்தகாதவர் களின் நல்வாழ்க்கையை உயர்த்துவதற்கான அனைத்து நடவடிக்கை களுக்கும் ஒரு கூரையின்கீழ் இடமளிப்பது முதல் நோக்கமாகும். இது ஒருங்கிணைப்பை கொண்டு வரும் பொருட்டும் முயற்சி வீணாவதை தடுக்கும் பொருட்டும் மேற்கொள்ளப்படுகிறது. இரண் டாவது நோக்கம், தீண்டத்தகாதவர்களின் அறிவுக்கும் உள்ளார்வ கொள்கைக்குமான மையமாக அவர்களுக்கு பயன்படக்கூடிய ஒரு இடத்தை அளிப்பதாகும். அந்த இடம், தீண்டத்தகாதவர்கள் தங்களுடைய கருத்துக்களை பரிமாறிக் கொள்ளவும் சமூக, மத நிகழ்ச்சிகளை மேற்கொள்வதற்கும் அவர்கள் பெருமை கொள்ளத் தக்க அவர்களுடைய கலாச்சாரத்திற்கான மையமாக பயன்படுத்து வதற்குமான ஒரு கூட்ட மைதானமாக இருக்கும். 3-வது நோக்கம் மிக முக்கியமான நோக்கமாகும். மையம் தன்னை பராமரித்துக்

கொள்ளவும் தன்னுடைய நடவடிக்கைகளை தொடர்ந்து நடத்தவும் தேவையான நிரந்தர நிதியாதாரங்களை மையத்திற்கு அளிப்பது தான் 3-வது நோக்கமாகும். இதன் பொருட்டு கட்டிடங்களின் பெரும் பகுதி வாடகைக்கு விடப்பட திட்டமிடப்பட்டுள்ளது. இதன் மூலம் கிடைக்கும் வாடகை, மையம் தனது செயல்பாடுகளை தொடரவும் சொந்தக் காலில் நிற்கவும் உதவும்.

## இந்திய சிற்றரசர்களுக்கும் மக்களுக்கும் ஒரு வேண்டுகோள்

மனிதாபிமான கண்ணோட்டத்தில் நோக்கும் போது தீண்டத் தகாதவர்களின் தற்போதைய நிலைமையானது இந்து கலாச்சாரத்தின் மீதான மிகக் கடுமையான கறையாகும். இந்த உண்மை அனைவராலும் அங்கீகரிக்கப்பட்டதாகும். இது, இந்திய தேசத்தின் அனைத்துத்துறை முன்னேற்றத்திற்கு மிகப்பெரும் முட்டுக்கட்டைகளில் ஒன்றாக அமைந்துள்ளது. இந்தப்பிரச்னைக்கு தீர்வுகாண, தேவைப்படுவது, துணிச்சல், மதிநுட்பம், சம்பந்தப்பட்ட தரப்பினரின் ஒன்றுபடுத்தும் சக்தி ஆகிய அனைத்தும் ஆகும். சமூக சீர்திருத்தவாதிகளும் அரசியல்வாதிகளும் முயற்சிகள் எடுத்த போதிலும், இதுநாள்வரையும் திருப்திகரமான முன்னேற்றம் ஏற்படவில்லை. உண்மையில், இந்தப் பிரச்னையின் விளிம்பு மட்டும் தான் இதுவரை தொடப்பட்டிருக்கிறது என்று வேண்டுமானால் பாதுகாப்பாக சொல்லிக் கொள்ளலாம். பெருந்திரளாக இருப்பதாக கருதப்படும் தீண்டத்தகாதவர்கள் எப்போதும் போலவே பின் தங்கியே உள்ளனர். சமூக, பொருளாதார, கல்வி மற்றும் அரசியல் முன்னேற்றத்திற்கான அவர்களது விருப்பங்கள் ஒவ்வொரு அடியிலும் குலைக்கப்படுகின்றன.

அவர்கள் வெளி உதவியையே சார்ந்திருக்கும் பழக்கம் அவர்களிடம் நயவஞ்சகமாக வளர்க்கப்பட்டுள்ளது; இந்தப் பழக்கம் அவர்கள் தங்களுடைய சொந்தப் போரை நடத்துவதற்கு அவர்களை தகுதியற்றவர்களாக்கி விடுகிறது. அவர்களுடைய பாதையிலிருந்து அனைத்து தடைகளையும் தகர்த்தெறியவும் அவர்களது நீண்ட நெடியகால அடிமைத்தனத்திலிருந்து அவர்களை வடுதலை பெறச் செய்யவும் கூடிய சக்தி அவர்களுக்குள்ளிருந்து மட்டும்தான் வரமுடியும் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன். ஏனென்றால், தீண்டத்தகாதவர்களின் இந்தப் புதிய இயக்கம் அவர்களுக்குள்ளிருந்து வரக்கூடிய ஒரு இயக்கம். இது அவர்களுக்கு உதவும் என்று நான் உறுதியாகக் கருதுகிறேன்.

தீண்டத்தகாதவர்கள் தங்களுடைய மீட்புக்கான பணியை மேற்கொள்வதில் அவர்கள் ஆர்வமாக இருந்தால் அதற்கு நிதி அளிக்கும் பொறுப்பையும் அவர்கள் ஏற்க வேண்டும். இங்கே நான் ஒரு விஷயத்தைச் சொல்ல மகிழ்ச்சியடைகிறேன். அதாவது பம்பாயைச் சேர்ந்த தீண்டத்தகாதவர்கள் தங்களுடைய இயக்கத்தினைப் பற்றிய இந்த அணுகுமுறை குறித்து உணர்வு ஊக்கத்துடன் உள்ளனர். அவர்கள் சமூக மையம் கட்டுவதற்கு ஒவ்வொருவருக்கு இவ்வளவு சந்தா என்ற முறையில் நிதி திரட்டுவதற்கு ஏற்கனவே முன்வந்துள்ளனர். இந்த மிகப் பெரும் காரணத்திற்காக தங்களுடைய பங்கீட்டை அளிக்க ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தயாராக உள்ளனர். ஏற்கெனவே சிலர் கொடுத்து விட்டனர்; ஏராளமானவர்கள் விரைவில் கொடுக்க உள்ளனர். அதே சமயத்தில் தங்களுடைய சொந்த சொத்துக்களை இழந்துவிட்ட தீண்டத்தகாதவர்கள் முழுத் தொகையையும் திரட்ட இயலாது என்பது உண்மையாகும். அவர்கள் அவர்களையே சார்ந்து இருக்க வேண்டும் என்று அவர்களை கேட்பது என்பது மிகக் கொடூரமானதாக இருக்கும். அவர்களுக்கான சமூக மையத்தை கட்டும் பணி சிற்றரசர்கள் மற்றும் இந்திய மக்களின் உதவி இல்லாமல் வெற்றி பெறாது. தீண்டத்தகாதவர்கள் தங்களுடைய சுமையை தாங்களே தாங்கிக் கொள்ள வேண்டுமென சொல்வது சரியானதாக இருக்கலாம். ஆனால், அது அன்பான ஆதரவுடையதாகுமா? தீண்டத்தகாதவர்களின் பரிதாபகரமான தலைவிதிக்கு இளவரசர்களும் இந்திய மக்களும் பொறுப்பில்லையா? அவர்கள் பொறுப்பாளிகள்தான் என்றால், தீண்டத்தகாதவர்கள் தங்களுடைய மீட்புக்கான பணியை தங்கள் இளவரசர்கள் மற்றும் மக்கள் மீதே உயர்த்தி பிடிக்க விரும்புகிறார்கள் என்ற காரணத்தைக் கூறி அவர்களுக்கு உதவ மறுக்க வேண்டும் என்பது சரியா? இந்திய இளவரசர்களும் இந்திய மக்களும் தீண்டத்தகாதவர்களின் சுயமரியாதை எழுச்சி குறித்து நல்ல மதிப்பு வைத்துள்ளனர் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன். மேலும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு பெருமளவு இழைக்கப்படும் கொடுமைகளுக்கு எதிராக நியாயமான கண்டனத்தை தெரிவிக்கும் மிகக் கூர்மையான உணர்வு சிற்றரசர்களிடமும் இந்திய மக்களிடமும் உள்ளது என்பதிலும் நான் உறுதியாக உள்ளேன்; மேலும் இந்தக் கொடுமைகளை தீண்டத்தகாதவர்கள் வெல்வதற்கு இயலும் வகையில் அவர்களுக்கு வழிவகை அளிக்கவும் இளவரசர்களுக்கும் இந்திய மக்களுக்கும் ஆழ்ந்த ஆர்வம் உள்ளது என்பதிலும் நான் உறுதியாக உள்ளேன்.

தீண்டத்தகாதவர்களை உயர்த்துவது என்பது ஒரு கூட்டுப் பணியாகத்தான் இருக்க வேண்டும்; இதில் இயக்கத்திற்கான

தீர்மானத்தையும் உள்ளார்வ கொள்கைகளையும் வேர்வை சிந்தும் கடும் உழைப்பையும் தீண்டத்தகாதவர்கள் வழங்குவார்கள்; இயக்கத்திற்கு தேவைப்படும் பணத்தை இந்திய மக்கள் சமுதாயம் வழங்க வேண்டும். இந்த நோக்கத்திற்காகத்தான் இயக்கத்திற்கான நிதி உதவியை அளிக்குமாறு இளவரசர்களுக்கும் இந்திய மக்களுக்கும் நான் வேண்டுகோள் விடுக்கிறேன்.

தீண்டத்தகாதவர்கள் உயர்நிலை அடைந்தால் அது எவ்வளவு பேராற்றல் மிக்க வெல்ல முடியாத சக்தியை தேசிய மறுமலர்ச்சிக்கும் இந்தியாவின் மறுசீரமைப்புக்கும் அளிக்கும் என்பதை உணர சிற்றரசர்களும் இந்திய மக்களும் தவறமாட்டார்கள் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன்; தீண்டத்தகாதவர்கள், சமூக ரீதியாகவும் கலாச்சார ரீதியாகவும் அவர்களது தற்போதைய மட்டத்திற்கு மேலே உயர்க்கூடியவர்களாக இருப்பார்கள், மனித வாழ்க்கை அந்தஸ்தை அடைவார்கள். இந்திய மக்கள் சமுதாயத்தின் மீதிப் பகுதியினருடன் சமூக சமத்துவமாக வாழ்வார்கள் என்ற நோக்குடன் தான் அவர்களை சமூக மையம் அணிதிரட்டும். ஆனால் அது, சமூக மையத்தின் நடவடிக்கைகளிலிருந்து கிடைக்கும் அனுகூலம் அது மட்டும் அல்ல. அவர்களை, சமூக மையம் செயலூக்கியுமுள்ள உண்மையான, தேசபக்தி கொண்ட குடிமகன்களாக ஆக்கும்

இந்தக் காரணங்களின் அடிப்படையில்தான், சமூக மையத்தை கட்டுவதற்கு எனக்கு உதவுமாறு அனைவருக்கும் வேண்டுகோள் விடுத்துக் கொண்டிருக்கிறேன். தீண்டத்தகாதவர்களை உயர்த்தாமல் நாடு உயர முடியாது என்பது உண்மைவாதமாகும்; அவர்களுடைய மீட்பில்தான் நாட்டின் மீட்பு உள்ளது. உண்மையாக விளக்கங்களை திரும்பத் திரும்பச் சொல்வதில் நான் களைத்துப்போய் விட்டேன். உண்மையான விளக்கங்களை உணர்ச்சியுடன் உரையாற்றுவதற்கான தருணம் போய்விட்டது. செயலுக்கான தருணம் வந்துவிட்டது. வார்த்தைகள் அல்ல, செயல்கள்தான் தேவை. சிற்றரசர்களுக்கும் இந்திய மக்களுக்கும் என்னுடைய வேண்டுகோள் மெய்யார்வத்துடன் விடப்பட்டதாகும்; இதற்கு அவர்கள் பெரும் இதயபூர்வமான தாராளத்துடன் உள்ளுணர்ச்சியை வெளிக்காட்டுவார்கள் என்று நம்புகிறேன்.

(கையொப்பம்) பி.ஆர். அம்பேத்கர்

22, பிரித்விராஜ் சாலை
புதுடெல்லி

● ● ●

# 9

# அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் அமைப்பு விதிகள்

அனைத்து இந்திய ஒடுக்கப்பட்டோர் வர்க்க மாநாடு, (All india Depressed class conference), நாக்பூரில் 1942, ஜுலை 17 முதல் 20-வரை நடைபெற்றது. இந்த மாநாட்டில் டாக்டர்.பீ.ஆர்.அம்பேத்கர் கலந்துகொண்டார். அதில் ஜுலை 19 ஆம் தேதி ஒரு தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. அத்தீர்மானத்தில் ''அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனம்'' (All India Scheduled Castes Federation) அமைக்க தீர்மானிக்கப்பட்டது. அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனமும் அதனுடைய அமைப்பு விதிகளும் செப்டம்பர் 7, 1942-ல் வெளியிடப்பட்டது.*

இந்த அமைப்பு விதிகள் திருத்தப்பட்டடு இறுதியாக ஜனவரி 1955-ல் கீழே உள்ளபடி வெளியிடப்பட்டது. - ஆசிரியர்கள்.

## **அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனம்

## அமைப்பு விதிகள்

**தலைவர்:**

**பீ.ஆர். அம்பேத்கர்,**

எம்.ஏ.பி.ஹெச்.டி., எல்எல்.டி., டி.லிட்., பாரிஸ்டர் -அட்-லா,

உறுப்பினர், மாநிலங்கள் குழு

முகவரி:
26, அலிப்பூர் சாலை,
சிவில் லைன்ஸ்,
டில்லி.

ஜனவரி 1955

---

★ ஒடுக்கப்பட்ட வர்க்க மாநாட்டு அறிக்கை. 1942, ஜுலை 18,19,20 தேதிகளில் நாக்பூர் அமர்வுகள், 3-வது அமர்வு நடைபெற்றன. அறிக்கை செப்டம்பர் 7, 1942-ல் வெளியிடப்பட்டது. இணைப்பு எண் 4 பக்கம் 109-121.

★★ தாக்கர் அச்சகம், ஒக்லேன், துறைமுகம் பம்பாயில் கே.எஸ்.அரோராவால் அச்சடிக்கப்பட்ட புத்தகத்திலிருந்து மறு அச்சடிப்பு செய்யப்பட்டது.

## உள்ளடக்கங்கள்

## பகுதி I

### அமுலுக்கு வரும் தேதி

### விதி 1

1. இந்த அமைப்பு விதிகள், அனைத்து இந்திய தாழ்த்தப் பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் அமைப்பு விதிகள் என்று அழைக்கப்படும்.

2. இது, பகுதிகள் IX மற்றும் X-ல் குறிப்பிடப்பட்டதைத் தவிர மே 1, 1957-ம் தேதி அமுலுக்கு வரும்.

## பகுதி II

### நோக்கங்கள், இலக்குகள், அதிகாரங்கள்

### விதி II

1. சம்மேளனத்தின் நோக்கங்கள் மற்றும் இலக்குகள் வருமாறு.

i) இந்தியாவின் தாழ்த்தப்பட்ட ஜாதியினரை அணிதிரட்டுவது, அவர்களை கல்வி கற்கச் செய்வது, அவர்களுடைய சமூக பொருளாதார மற்றும் அரசியல் சுதந்திரத்திற்காக இயக்கம் நடத்துவது, அவர்களுடைய நல்வாழ்க்கைக்காக வும் முன்னேற்றத்திற்காகவும் அவர்களை கடுமையாக உழைக்கச் செய்வது.

ii) அவர்களுக்கு சமவாய்ப்புகளை பெறுவது அதன் மூலம் வாழ்க்கையின் அனைத்துப் பகுதிகளையும் சேர்ந்த சக குடிமக்களுடனான சம அந்தஸ்தை சாதிக்கும்படி செய்வது.

iii) விவசாயிகள், நிலமற்ற விவசாயத் தொழிலாளர்கள், ஆலைத் தொழிலாளர்கள் ஏனைய கூலி உழைப்பாளிகளை அணி திரட்டுவதில் சம்மேளனம் ஈடுபடுவது.

iv) அவர்களுக்கு பள்ளிகள் தொடங்கியும் கலைகள் மற்றும் கைவினைத்தொழில்கள் கற்றுத் தந்தும் இவைபோன்ற கல்வி நடவடிக்கைகள் அனைத்திலும் ஈடுபடுவது

v) தாழ்த்தப்பட்ட ஜாதியினரின் தார்மீக மற்றும் சிந்தனை உயர்வுக்கான அனைத்து நடவடிக்கைகளையும் மேற் கொள்வது.

vi) நாட்டின் பல்வேறு பகுதிகளில் தாழ்த்தப்பட்ட ஜாதிகள் மீது மேற்கொள்ளப்பட்ட கொடுமைகள் மற்றும் ஒடுக்கு முறைகள் பற்றிய வழக்குகள் அனைத்தையும் பதிவு செய்வது.

2. சம்மேளனத்தின் அதிகாரங்கள் வருமாறு

i) சம்மேளனத்திற்கான சொத்துக்களை விலைக்கு வாங்குவது, குத்தகைக்கு எடுப்பது இல்லையெனில் முயற்சி செய்து அடைவது அவ்வப்போது எடுக்கப்படும் முடிவின்படி, சம்மேளனத்தின் பணங்களை முதலீடு செய்வதும் அதனைக் கொண்டு வர்த்தகம் செய்வதும்

ii) சம்மேளனத்தின் அனைத்துச் சொத்தை அல்லது ஏதாவ தொன்றை விற்பது, ஏதாவதொரு முடிவுக்கு கொண்டு வருவது, வளப்படுத்துவது, நிர்வகிப்பது இல்லையெனில் மாற்றுவது, வர்த்தகம் செய்வது.

iii) சம்மேளனத்தின் நோக்கங்கள் மற்றும் இலக்குகளில் ஏதேனும் ஒன்றை மேற்கொள்வதற்காக கடனீட்டுப் பத்திரம் கொண்டோ அல்லது அது இல்லாமலோ பணம் திரட்டுவது.

iv) இந்தியாவின் எந்தவொரு பகுதியிலும் சம்மேளனத்தை பதிவு செய்யச் செய்வது அல்லது அங்கீகரிக்கச் செய்வது.

v) சம்மேளனத்தின் நோக்கங்கள் மற்றும் இலக்குகளில் ஏதேனும் ஒன்றை அடைதலுக்கு தற்செயலாக நிகழ்கின்ற அல்லது பொருத்தமான அனைத்து சட்டப் பூர்வ காரியங் களையும் நடவடிக்கைகளையும் செய்வது.

## பகுதி III

## அமைப்பு : லோகல்

## விதி *III*

I உள்ளூர் அமைப்பு

1) அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதி சம்மேளனத்தின் தாழ்த்தப்பட்ட ஜாதிகளை அணி திரட்டும் நோக்கத்திற்காக கீழ்க்கண்ட லோகல் அமைப்புகள் அமைக்கப்படும்.

i) கிராம சம்மேளனக் குழு
ii) தாலுகா சம்மேளனக் குழு
iii) மாவட்ட சம்மேளனக் குழு
iv) மாநில சம்மேளனக் குழு

விளக்கம் : 2 லட்சத்திற்கும் அதிகமான மக்களைக் கொண்ட நகரங்களில் சம்மேளனக் குழுக்கள் மாவட்ட சம்மேளனக்குழு அந்தஸ்தை கொண்டிருக்கும்.

2. ஒரு மாவட்டம் என்பது மாநில சட்டமன்றத் தொகுதியில் உள்ளடங்கியுள்ள பகுதி என்பதாகும்.

II. மைய அமைப்பு

1. அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் மைய அமைப்பில் இருக்கக் கூடியவை வருமாறு

i) சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு
ii) சம்மேளனத்தின் மத்திய நிர்வாகக் குழு
iii) சம்மேளனத்தின் பொது அமர்வு அல்லது சிறப்பு அமர்வு

2. அனைத்து லோகல் அமைப்புகளும் மத்திய அமைப்புகளும் சம்மேளனத்தின் முக்கியப் பகுதிகளாகும்.

விதி IV

1. இங்கே கீழே உள்ள விளக்கத்தைப் பொறுத்து பட்டியலிடப்பட்ட ஜாதியைச் சேர்ந்த எந்தவொரு நபரும்

i) வாக்காளர் பட்டியலில் பெயர் சேர்க்கப்பட்டவர்.

ii) இந்த அமைப்பு விதிகளை ஏற்றுக் கொள்பவர், இந்த சம்மேளனத்தின் உறுப்பினராவார்; சம்மேளனத்தின் தொகுதி குழுக்களின் எந்தவொரு தேர்தலிலும் ஒழுங்கு விதிகளால் அனுமதிக்கப்பட்டபடி வாக்களிக்க உரிமை கொண்டிருப்பார்.

விளக்கம் : 1) தாழ்த்தப்பட்ட ஜாதியைச் சேர்ந்தவராக இருந்து சம்மேளனத்தின் மத்திய நிர்வாக குழுவினால் அங்கீகரிக்கப்படாத நோக்கங்களையும் இலக்குகளையும் கொண்டுள்ள வேறு எந்தவொரு அரசியல் அமைப்பையோ அல்லது சமூக அமைப்பையோ அல்லது மத அமைப்பையோ சேராதவரும்

சம்மேளனத்தின் உறுப்பினராக இருப்பதற்கு வார்த்தையாலோ அல்லது நடத்தையாலோ மறுக்காதவரும் சம்மேளனத்தின் உறுப்பினராகுவதற்கும் இதன் அரசியல் விதிகளை ஏற்றுக்கொள்வதற்கும் ஒப்புக்கொண்டதாக கருதப்படுவார்.

2) வாக்காளர் பட்டியல் என்றால் ஒரு மாநில சட்டமன்றத் தொகுதிக்கு, மாநில அரசால் தயாரிக்கப்பட்ட வாக்காளர்களின் பட்டியலாகும்.

3) தாழ்த்தப்பட்ட ஜாதி என்றால் அவ்வாறு இந்திய அரசியல் சாசனத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஜாதி என்பதாகும்.

2. சம்மேளனத்தின் இணை உறுப்பினர் பொறுப்புகளை ஏற்படுத்த விதிகளால் ஏற்பாடு செய்யப்படும். ஒரு இணை உறுப்பினர் தாழ்த்தப்பட்ட ஜாதியை சேர்ந்தவராக இருக்கத் தேவையில்லை.

## விதி V

1. ஒரு மாநிலத்தின் சட்டமன்றத் தேர்தலுக்கான பட்டியலிட்ட ஜாதி வாக்களர்களின்பட்டியல், சம்மேளனத்தின் உறுப்பினர் பதிவேடாக இருக்கும்; அதனடிப்படையில் சம்மேளனத்தின் தொகுதி குழுக்களுக்கான தேர்தல் நடைபெறும்.

2. இத்தகைய நபர் ஒருவர் சம்மேளனத்தின் எந்தவொரு விதியாலோ அல்லது சம்மேளனத்தின் அதிகாரக் குழுவாலோ தகுதியற்றவராக்கப்படாவிட்டால், அவர், சம்மேளனத்தின் தேர்தலில் வாக்களிக்க தகுதி பெற்றவராக இருப்பார்; மேலும் தேர்தலில் போட்டியிடவும் தகுதி பெற்றவராக இருப்பார்.

## விதி VI

1. ஒரு மாநிலமாக இந்திய அரசியல் சாசனத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஒவ்வொரு மாநிலத்திற்கும் தற்காலிகமாக ஒரு மாநில சம்மேளனக்குழு இருக்கும். அதனுடைய தலைமையகம் மாநிலத் தலைநகரில் அமைந்திருக்கும்.

2. அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் ஆரம்பக் கிளையாக சம்மேளனத்தின் கிராமக் குழுவாக இருக்கும்.

3. ஆரம்ப சம்மேளனக் குழுவானது கிராமத்தில் உள்ள தாழ்த்தப்பட்ட ஜாதி வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் களையும் சம்மேளனத்தின் உறுப்பினர்களையும் கொண்டிருக்கும்.

4. தாலுகா சம்மேளனக் குழுவானது, தாலுகாவிற்குள் உள்ள கிராம சம்மேளனக் குழு உறுப்பினர்களால் தேர்வு செய்யப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டிருக்கும்; இந்த உறுப்பினர்கள், ஒவ்வொரு தாலுகாவின் மொத்த தாழ்த்தப்பட்ட ஜாதி மக்கள் தொகைக்கு ஒவ்வொரு கிராமத்தின் தாழ்த்தப்பட்ட மக்கள் தொகையின் விகிதாச் சாரத்தில் மாநில காரியக்குழுவால் நிர்ணயிக்கப்பட்ட ஒதுக்கீட் டிற்கு ஏற்ப தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

5. ஒவ்வொரு மாவட்டத்தின் மொத்தப் தாழ்த்தப்பட்ட ஜாதியைச் சேர்ந்த மக்கள் தொகைக்கு ஒவ்வொரு தாலுகாவின் தாழ்த்தப்பட்ட ஜாதி மக்கள் தொகையின் விகிதாச்சாரத்தில் மாநில காரியக்குழுவாய் நிர்ணயிக்கப்பட்ட ஒதுக்கீட்டிற்கு ஏற்ப ஒவ்வொரு மாவட்டத் திற்குள்ளும் தாலுகா சம்மேளனக் குழு உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களை மாவட்ட சம்மேளனக் குழு கொண்டிருக்கும்.

6. மாநில தாழ்த்தப்பட்ட ஜாதி மக்கள் தொகைக்கு ஒவ்வொரு மாவட்ட தாழ்த்தப்பட்ட மக்கள் தொகையின் விகிதாச்சாரத்தில் மாநில காரியக்குழுவால் நிர்ணயிக்கப்பட்ட ஒதுக்கீட்டிற்கு ஏற்ப மாநிலத்திற்குள் மாவட்ட சம்மேளக்குழு உறுப்பினர்களால் தேர்வு செய்யப்பட்ட உறுப்பினர்களை மாவட்ட சம்மேளனக் குழு கொண் டிருக்கும்.

7. கிராமச் சம்மேளன குழு, தன்னுடைய உறுப்பினர் களிடையே ஒருவரை சேர்மனாக தேர்ந்தெடுப்பார்கள். அந்தச் சேர்மன் காரியக்குழு அமைக்க கிராம சம்மேளனக் குழு உறுப்பினர் களை நியமிப்பார். காரியக்குழு உறுப்பினர்களிலிருந்து செயலாள ராக செயல்பட ஒரு உறுப்பினரையும் பொருளாளராகச் செயல்பட ஒருவரையும் சேர்மன் நியமிப்பார்.

8. தாலுகா சம்மேளனக்குழு, தன்னுடைய உறுப்பினர் களிடையே இரந்து ஒரு சேர்மனை நியமிக்கும். அந்தச் சேர்மன், தாலுகாவிற்கான காரியக் குழுவை அமைக்க தாலுகா சம்மேளனக் ழு உறுப்பினர்களை நியமிப்பார். செயலாளராகச் செயல்பட காரியக்

குழு உறுப்பினர்களிலிருந்து ஒரு உறுப்பினரையும் பொருளாள ராகச் செயல்பட வேறோருவரையும் சேர்மன் நியமிப்பார்.

9. மாவட்ட சம்மேளனக் குழு, தன்னுடைய உறுப்பினர் களிடையேயிருந்து ஒரு சேர்மனை தேர்ந்தெடுக்கும். அந்தச் சேர்மன் மாவட்டத்திற்கான நிர்வாகக்குழு ஒன்றை அமைக்க குழு உறுப்பினர்களை நியமனம் செய்வார். செயலாளராக செயல்பட ஒருவரையும் பொருளாளராகச் செயல்பட மற்றொருவரையும் குழு உறுப்பினர்களிலிருந்து சேர்மன் நியமனம் செய்வார். மாவட்ட சம்மேளனம் இல்லாத நிலைமையில் மாவட்ட விவகாரங்கள் மாநிலச் செயற்குழுவால் நிர்வகிக்கப்படும்.

10. மாநில சம்மேளனக் குழு, தன்னுடைய உறுப்பினர் களிடையேயிருந்து ஒரு சேர்மனை தேர்ந்தெடுக்கும். அந்தச் சேர்மன் மாநில காரியக்குழு ஒன்றை அமைப்பதற்கு குழுவின் உறுப்பினர்களை நியமனம் செய்வார். மேலும் அவர், செயலாள ராகச் செயல்பட ஒருவரையும் பொருளாளராகச் செயல்பட மற்றொருவரையும் குழு உறுப்பினர்களிலிருந்து நியமிப்பார்.

## பகுதி IV

### அமைப்பு மையம்

விதி VII

1. சம்மேளனத்தின் மைய அமைப்பு கீழ்க்கண்டவற்றை உள்ளடக்கியதாக இருக்கும்.

i) சம்மேளனத்தின் தலைவர்

ii) சம்மேளனத்தின் பொதுச்செயலாளர்

iii) பொருளாளர்

iv) சம்மேளனத்தின் அகில இந்தியக் குழு

v) சம்மேளனத்தின் மைய நிர்வாகக் குழு

vi) சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு

vii) சம்மேளனத்தின் மாநாடு அல்லது சிறப்பு மாநாடு

## விதி VIII

1. சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழுவானது மாநில சம்மேளன குழுக்கள் தங்களுடைய உறுப்பினர்களிலிருந்து தேர்ந்தெடுத்த நபர்களைக் கொண்டிருக்கும்; அந்த உறுப்பினர்கள் மத்திய நிர்வாகக் குழுவால் தீர்மானிக்கப்பட்டபடி இந்தியாவில் உள்ள தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் மொத்த மக்கள் தொகைக்கு ஏற்ப ஒவ்வொரு மாநிலத்தில் உள்ள தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் மக்கள் தொகையின் விகிதாச்சாரத்திற்கு ஏற்ப தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

2. சம்மேளனத்தின் ஒரு மாநாடு (Session) ஒவ்வொரு 2 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும். கூட்டத் தலைவர் மாநில சம்மேளனக் குழுக்களின் தலைவர்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்.

3. சம்மேளனத்தின் தலைவர் தன்னுடைய விருப்பத்தினாலோ அல்லது மாநில சம்மேளனக் குழுக்களின் உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பகுதியினரின் வேண்டுகோளின் பேரிலோ சம்மேளனத்தின் சிறப்பு மாநாட்டை கூட்டுவார்.

4. சம்மேளனக் மாநாட்டிற்கு தலைவர் தலைமை வகிப்பார்.

5. சம்மேளனத்தின் மைய நிர்வாகக் குழுவை அமைப்பதற்கு ஒவ்வொரு மாநில சம்மேளனக் குழுவிலிருந்து ஒருவர் வீதம் தேர்வு செய்வார்.

6. சம்மேளனத்தின் பொதுச் செயலாளராகச் செயல்படுவதற்கு சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு உறுப்பினர்களிலிருந்து ஒருவரை நியமனம் செய்வார்.

7. சம்மேளனத்தின் பொருளாளராக செயல்படுவதற்கு சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு உறுப்பினர்களிலிருந்து ஒருவரை தலைவர் தேர்ந்தெடுப்பார்.

## விதி IX

1. சம்மேளனத்தின் தலைவரும் சம்மேளனத்தின் மாநிலக் குழுக்களின் உறுப்பினர்களும் சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழுவை அமைப்பார்கள்.

2. சம்மேளனத்தின் தலைவரே சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழுவின் தலைவராகவும் இருப்பார்.

3. சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழுவானது சம்மேளன கூட்டத்தால் முன்னைக்கப்பட்ட வேலைத் திட்டத்தை அமுல்படுத்துவதற்கான ஏற்பாடுகளை மேற்கொள்ளும். மேலும் தன்னுடைய பதவிக்காலத்தில் எழக்கூடிய விவகாரங்கள் மற்றும் நிலைமைகள் குறித்து நடவடிக்கை எடுக்கவும் அதற்கு அதிகாரங்கள் உண்டு.

4. சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழுவானது இந்த அமைப்பு விதிகளுக்கு முரணாக இல்லாத விதிகளை தயாரிக்க அதிகாரம் கொண்டிருக்கும்; சம்மேளனத்தின் அனைத்து துணைக் குழுக்களையும் கட்டுப்படுத்தும்; சம்மேளனத்துடன் சம்பந்தப்பட்ட அனைத்து விவகாரங்களை ஒழுங்குபடுத்த சம்மேளனத்தின் அனைத்து இந்தியக்குழு விதிகளை தயாரிக்கும்.

5. சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழுவானது நிர்வாகக்குழு அவசியம் எனக் கருதினாலும் 50 க்கு குறையாத உறுப்பினர்கள் மைய நிர்வாகக் குழுவுக்கு விடுக்கும் கூட்டு வேண்டுகோளின் பேரிலும் சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு அடிக்கடி கூடும்; சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழுக் கூட்டத்தை கூட்டுமாறு வைக்கப்படும் இத்தகைய வேண்டுகோளில் எந்த நோக்கத்திற்காக கூட்டம் கூட்டப்பட வேண்டும் என்பதை கூட்டத்தை கூட்ட விருப்பம் தெரிவிப்பவர்கள் குறிப்பிட வேண்டும். வேண்டுகோள் பேரிலான கூட்டம், வேண்டுகோள் கிடைத்த 2 மாதங்களுக்குள் கூட்டப்படும். வேண்டுகோளின் பேரில் கூட்டப்படும் எந்தவொரு கூட்டத்திலும் பரிசீலனைக்காக, மைய நிர்வாக குழுவால் கூடுதல் விஷயங்கள் கொண்டு வரப்படலாம்.

6. வேண்டுகோளின் பேரில் கூட்டப்படும் கூட்டங்களைத் தவிர்த்து ஏனைய அனைத்து இந்தியக் குழுக் கூட்டங்களிலும், அனைத்து இந்திய சம்மேளனக் குழுவின் சார்பில் குறிப்பிடப்பட்டுள்ள விதிகளுக்கு ஏற்ப அதன் உறுப்பினர்களால் முன்னறிவிப்பு கொடுக்கப்பட்ட பிரச்னைகளை விவாதிப்பதற்கு சாத்தியமான அளவிற்கு 4 மணி நேரம் ஒதுக்கப்படும்.

7. சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழுவின் கூட்டம் கூடுவதற்கு தேவையான குறைந்தபட்ச உறுப்பினர்களின் எண்ணிக்கை (Quorum) உருவாக 25 உறுப்பினர்கள் வருகை போதுமானது.

விதி X

1. சம்மேளனத்தின் பொது மாநாடு (General Session) சாதாரணமாக 2 ஆண்டுகளுக்கு ஒரு முறை நடத்தப்படும். அந்த மாநாட்டிற்கான இடம் சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழுவால் அல்லது மத்திய நிர்வாகக் குழுவால் தீர்மானிக்கப்படும்.

2. சம்மேளனத்தின் பொது மாநாட்டில் பங்கேற்பவர்கள் வருமாறு :

i) சம்மேளனத்தின் தலைவர்

ii) சம்மேளனத்தின் முன்னாள் தலைவர்

iii) சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு உறுப்பினர்கள்

iv) மத்திய நிர்வாகக்குழு உறுப்பினர்கள்

v) கிராம சம்மேளனத்தின் தாலுகா சம்மேளனம், மாவட்ட சம்மேளனம், மாநில சம்மேளனம் ஆகியவற்றின் காரியக் குழுக்களின் உறுப்பினர்கள்.

3. i) பொருள் ஆய்வுக் குழுவால் தொடக்கத்தில் பரிந்துரைக்கப்பட்ட தீர்மானங்களை மாநாடு பரிசீலனை செய்யும்.

ii) அதன்பிறகு 1)-ல் சேர்க்கப்படாத தனியான ஏதாவதொரு முக்கியமான தீர்மானக் கோரிக்கை யை மாநாடு எடுத்துக் கொள்ளும். ஆனால், அத்தகைய தீர்மானக் கோரிக்கையை மாநாட்டில் முன்வைக்க அனுமதிகோரி 40 பிரதிநிதிகள் மாநாடு தொடங்குவதற்கு முன்பு எடுத்து மூலம் தலைவருக்கு வேண்டுகோள் விடுத்திருக்க வேண்டும். அதற்கு பொருள் = ஆய்வுக்குழுவில் ஆஜராகியிருக்கும் உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பகுதியினராயினும் ஆதரவு அளிக்க வேண்டும்; ஆனால் அத்தீர்மானக் கோரிக்கை முன்னதாக பொருள் ஆய்வுக் குழுவில் விவாதிக்கப்பட்டிருக்காவிட்டால் அனுமதியளிக்கப்பட மாட்டாது.

4. எந்த மாநிலத்தில் சம்மேளனத்தின் மாநாடு நடைபெறுகிறதோ அந்த மாநில சம்மேளனக் குழு மாநாட்டை நடத்துவதற்குத் தேவையான ஏற்பாடுகளை செய்யும்; இந்த நோக்கத்திற்காக அது வரவேற்புக்குழு ஒன்றை அமைக்கும். வரவேற்புக் குழு

மாநில சம்மேளனக் குழுவின் பொதுவான வழிகாட்டுதலின் கீழ் செயல்படும் வரவேற்புக் குழு மாநில சம்மேளனக் குழுவின் பொதுவான வழிகாட்டுதலின் கீழ் செயல்படும் வரவேற்புக் குழு அதில் உறுப்பினராக இல்லாதவர்களையும் தனது பணிக்கு சேர்த்துக் கொள்ளலாம்.

5. வரவேற்புக் குழு, தன்னுடைய உறுப்பினர்களிடையே ஏனைய அலுவலக நிர்வாகிகளையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்.

6. மாநாட்டின் செலவுகளுக்கான நிதிகளை வரவேற்புக் குழு திரட்டும்; மேலும், பிரதிகளை வரவேற்று இருத்திடத் தேவையான ஏற்பாடுகள் அனைத்தையும் செய்யும். மேலும் மாநாட்டு பார்வையாளர்களுக்குத் தேவையான ஏற்பாடுகளையும் மேற் கொள்ளும்.

7. வரவேற்புக் கமிட்டியின் வரவுகளும் செலவுகளும் சம்பந்தப் பட்ட மாநில சம்மேளனக் குழுவால் நியமிக்கப்பட்ட ஆடிட்டரால் அல்லது ஆடிட்டர்களால் பரிசீலிக்கப்படும். அதன் அடிப்படை யிலான ஆடிட் அறிக்கையுடன் வரவு-செலவு கணக்கு அறிக்கை மத்திய நிர்வாக குழுவிடம் மாநில சம்மேளனக் குழுவால் அளிக்கப் படும்; மாநாடு நடந்த 6 மாதகாலத்திற்குள் இதனைச் செய்து முடிக்கப்பட வேண்டும். ஏதாவது, உபரி நிதி இருக்குமானால் அது அகில இந்திய சம்மேளனக் குழுவும் மாநில சம்மேளனக் குழுவும் சமமாக பங்கிட்டுக் கொள்ளும்.

## விதி XI

1. சம்மேளனத்தின் அகில இந்தியக்குழு, மாநாட்டிற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு பொருள் ஆய்வுக்குழுவாக தலைவரின் தலைமை யில் கூடும். மத்திய நிர்வாகக் குழுவோ அல்லது புதிய தலைவர் மாநாட்டுக்கு முன்னதாக தேர்ந்தெடுக்கப்பட்டு அவரால் நியமிக்கப் படும் மத்திய நிர்வாகக்குழுவின் செயல்பாடு இல்லாதபட்சத்தில் அவரால் நியமிக்கப்பட்ட வழிகாட்டும் குழுவோ சம்மேளனத் தின் மாநாட்டிற்கான முன் வரைவுத் தீர்மானங்கள் உட்பட வேலைத் திட்டங்களை பொருள் ஆய்வுக் குழு முன்பு தாக்கல் செய்யும். முன் வரைவுத் தீர்மானங்களை தயாரிப்பதில் மாநில சம்மேளனக் குழுவால் பரிந்துரைக்கப்பட்ட தீர்மானங்களும் சம்மேளனத்தின் அனைத்து இந்தியக்குழு உறுப்பினர்களால் முன்னறிவிப்பு கொடுக்கப் பட்ட தீர்மானங்களும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும்.

2. பொருள் ஆய்வுக் குழுவானது வேலைத்திட்டம் மீதான விவாதத்தை நடத்தி மாநாட்டில் தாக்கல் செய்யப்படுவதற்கான தீர்மானங்களை தயாரிக்கும். மாநில சம்மேளக் குழுக்களாலும் சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு உறுப்பினர்களாலும் முறையான முன்னறிவிப்பு கொடுக்கப்பட்ட விவாதத்திற்குரிய பிரிச்னைகளுக்கு மாநாட்டில் சாத்தியமான அளவிற்கு 4 மணி நேரம் ஒதுக்கப்படும்.

## விதி XII

1. சம்மேளனத்தின் அனைத்து இந்தியக்குழு தீர்மானிக்கும் பட்சத்திலோ அல்லது பெரும்பாலான குழுக்கள் தங்கள் தீர்மானங் கள் மூலமோ சம்மேளனத்தின் சிறப்பு மாநாட்டை கூட்டுமாறு சம்மேளனத்தின் தலைவரை கேட்டுக் கொள்ளும் பட்சத்திலோ சம்மேளனத்தின் சிறப்பு மாநாடு ஒன்று நடத்தப்படும்.

2. அத்தகைய சிறப்பு மாநாடு, அந்த மாநாட்டை நடத்து வதற்காக தேர்வு செய்யப்பட்ட மாநில சம்மேளனக் குழுவால் நடத்தப்படும்.

## விதி XIII

1. தலைவர் தேர்தலை நடத்த தேர்தல் அதிகாரியாகச் செயல்பட, சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு உறுப்பினர் களில் ஒருவரை தேர்தல் அதிகாரியாக மத்திய நிர்வாகக் குழு நிய மிக்கும்.

தலைவர் பதவிக்கான வேட்பாளராக பொதுச் செயலாளர் இருக்கும்பட்சத்தில் அத்தகைய நியமனத்திற்கு அவர் தகுதியற்றவ ராக்கப்படுவார்.

2. சம்மேளனத்தின் தலைவர் தேர்தலுக்கு சம்மேளனத்தின் எந்தவொரு உறுப்பினரும் எந்தவொரு உறுப்பினரையும் முன் மொழியலாம். அந்த முன்மொழிவு, மற்ற 3 உறுப்பினர்களால் வழி மொழியப்பட வேண்டும். இத்தகைய முன்மொழிவு மத்திய நிர்வாகக் குழுவால் நிர்ணயிக்கப்பட்ட தேதி அன்றோ அல்லது அதற்கு முன்பாகவோ தேர்தல் அதிகாரியிடம் சென்றடைய வேண்டும்.

3. முன்மொழியப்பட்ட அனைத்து நபர்களின் பெயர்களையும் தேர்தல் அதிகாரி வெளியிடுவார்; அவ்வாறு முன்மொழியப்பட்ட பெயருக்குரியவர் எவர் ஒருவரும் தாம் போட்டியிலிருந்து விலகிக் கொள்வது பகிரங்கமானதாகும்; ஆனால் அதற்கு அவர் முன் மொழியப்பட்ட பெயர்கள் வெளியிடப்பட்ட 7 நாட்களுக்குள் தேர்தல் அதிகாரிக்கு எழுத்து மூலம் தெரிவிக்க வேண்டும்.

4. போட்டியிலிருந்து விலகியவர்களின் பெயர்கள் நீக்கப் பட்ட பிறகு மீதமுள்ள வேட்பாளர்களின் பெயர்களை தேர்தல் அதிகாரி வெளியிடுவார்; மேலும் மாநில சம்மேளனக் குழுக் களுக்கு சுற்றறிக்கை மூலம் சம்மேளனக் குழுக்களுக்கு சுற்றறிக்கை மூலம் தெரிவிப்பார். நீக்கத்திற்கு பிறகு ஒரேயொரு வேட்பாளர் மட்டும் மீதமிருந்தால் சம்மேளனத்தின் அடுத்த மாநாட்டுத் தலைவராக முறையாக அறிவிக்கப்படுவார்.

5. தலைவர் பதவிக்கு போட்டியிடும் வேட்பாளர்களின் பெயர்கள் இறுதியாக வெளியிடப்பட்ட பிறகு 7 நாட்களுக்கு குறை யாமல் மத்திய நிர்வாகக் குழுவால் நிர்ணயிக்கப்பட்டிருக்கும் தேதி அன்று, தலைவர் பதவிக்கான தேர்வில் பங்கெடுக்க தகுதி பெற்ற ஒவ்வொரு நபரும் தேர்தலில் தன்னுடைய வாக்கை பதிவு செய்ய உரிமை அளிக்கப்பட்டவராவார். தலைவர் தேர்வில் அவர் வாக்களிக்க வேண்டிய முறை வருமாறு.

(a) வேட்பாளர்களின் பெயர்களைக் கொண்ட வாக்குச் சீட்டில் அந்த வாக்களார் தனது வாக்கை பதிவு செய்ய வேண்டும்.

(b) ஒவ்வொரு வாக்காளருக்கும் ஒரு வாக்கு உண்டு.

(c) தலைவர் தேர்வுக்கு ஒரு கொஞ்சப் பெரும்பான்மை (Simple Majority) போதுமானது.

(d) மாநில சம்மேளனக் குழுக்கள் உடனடியாக வாக்குப் பெட்டியை சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு அலுவலகத்திற்கு அனுப்பி வைக்கும்.

(e) வாக்குப் பெட்டிகள் வந்த பிறகு முடிந்தளவு வெகு விரைவில் ஒவ்வொரு வேட்பாளருக்கும் பதிவு செய்துள்ள வாக்குகளை தேர்தல் அதிகாரி எண்ணுவார்; பெரும் பாலான வாக்குகளை பெற்ற வேட்பாளர் ஒருவர் தலைவ ராக தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்படுவார்.

(f) மேலே கண்டவாறு தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரின் மரணம் அல்லது பதவி விலகல் போன்ற ஏதாவதொரு காரணத்தால் எழும் ஏதாவதொரு எதிர்பாராத அவசர சம்பவத்தால், மேலே கூறப்பட்டவாறு தலைவர் தேர்தலுக்கான தேதியொன்றை மத்திய நிர்வாகக் குழு நிர்ணயிக்கும். இத்தகைய நடைமுறை சாத்தியமில்லாமல் போகும் பட்சத்தில் ஒரு புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்க சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு கூட்டத்தை மத்திய நிர்வாகக்குழு கூட்டும்.

g) தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகும் அவருடைய பதவிக்காலத்திலும் சம்மேளனத்தின் மாநாடுகளுக்கு அவர் தலைமை தாங்குவார். மத்திய நிர்வாகக் குழுக் கூட்டம் நடைபெறாதபோது அதன் அதிகாரங்கள் அனைத்தையும் அவர் பயன்படுத்துவார்.

## பகுதி V

## அலுவலக நிர்வாகிகளின் கடமைகளும் செயல்பாடுகளும் அதிகாரங்களும்

### விதி XIV

1. சம்மேளனத் தலைவர் மற்றும் அவரால் நியமிக்கப்பட்ட பொருளாளரும், பொதுச் செயலாளரும் உட்பட 20 உறுப்பினர்களை மத்திய நிர்வாகக் குழு கொண்டிருக்கும் சாதாரணமாக மத்திய நிர்வாகக்குழு உறுப்பினர்கள் சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு உறுப்பினர்களிலிருந்து நியமிக்கப்படுவார்கள்; ஆனால், தனிச் சிறப்பான விஷயங்களில் சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு உறுப்பினராக இல்லாத ஒருவர் நியமிக்கப்படலாம்; எனினும் அவ்வாறு நியமிக்கப்பட்ட ஒருவர் அவருடைய நியமனத்திற்குப் பிறகு 6 மாதங்களுக்குள் அனைத்து இந்தியக்குழு உறுப்பினராக தேர்ந்தெடுக்கபடாவிட்டால் அவர் மத்திய நிர்வாகக்குழு உறுப்பினராக இருக்க முடியாது.

2. மத்திய நிர்வாகக் குழுக் கூட்டத்திற்கான குறைந்தபட்ச உறுப்பினர்களின் எண்ணிக்கை 7 ஆகும்.

*3. மத்திய நிர்வாகக் குழுதான் சம்மேளனத்தின் மிக உயர்ந்த நிர்வாக அதிகாரக் குழுவாகும்; அது சம்மேளனத்தாலும் சம்மேள னத்தின் அகில இந்தியக் குழுவாலும் முன்வைக்கப்படும் கொள்கை களையும் வேலைத்திட்டத்தையும் செயல்படுத்தும் அதிகாரத்தைக் கொண்டிருக்கும். இந்த அமைப்பு விதிகள் சம்பந்தமான அனைத்து விஷயங்களுக்கு விளக்கம் அளிப்பதற்கும் அவற்றை செயல்படுத்து வதற்கும் அதுதான் அதிகாரம் பெற்ற குழுவாகும்.*

*4. சம்மேளனத்தின் அனைத்து இந்தியக்குழுவின் ஒவ்வொரு கூட்டத்திலும் அனைத்து இந்தியக் குழுவின் முந்தைய கூட்டத்தைத் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் குறித்து அறிக்கை யொன்றை மத்திய நிர்வாகக் குழு தாக்கல் செய்யும். மேலும் கூட்டத் தில் விவாதிக்கப்பட வேண்டிய நிகழ்ச்சி நிரல் ஒன்றையும் மத்திய நிர்வாகக்குழு தாக்கல் செய்யும் மேலும் சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழு சார்பில் குறிப்பிடப்பட்டுள்ள விதிகளுக்கு ஏற்ப அக்குழு உறுப்பினர்கள் முறையான முன்னறிவிப்பு கொடுத்து அளித்த தனிநபர் தீர்மானங்களை விவாதிக்கவும் மத்திய நிர்வாகக் குழு நேரம் ஒதுக்கும்.*

*5. சம்மேளனம் மற்றும் அமைப்புகளின் அனைத்து குழுக் களது பதிவுகளையும் கணக்குப் புத்தகங்களையும் ஆய்வு செய்ய மத்திய நிர்வாகக் குழு ஒன்று அல்லது கூடுதலான தணிக்கையாளர் களை அல்லது மேற்பார்வையாளர்களை அல்லது ஏனைய அதிகாரி களை நியமிக்கலாம். தணிக்கையாளர்களுக்கோ மேற்பார்வை யாளர்களுக்கோ அல்லது ஏனைய அதிகாரிகளுக்கோ தேவையான தகவல்கள் அனைத்தையும் தரவேண்டியது சம்மேளனம் மற்றும் அமைப்புகளின் பொறுப்பாகும்; அனைத்து அதிகாரிகளிடமும் கணக்குகளையும் பதிவுகளையும் அளிக்க வேண்டும்.*

*6. மத்திய நிர்வாகக் குழு கொண்டிருக்கும் அதிகாரங்கள் வருமாறு:*

i) *சம்மேளனத்தின் முறையான செயல்பாடுகளுக்கான விதிகளை தயாரிப்பது. அத்தகைய விதிகளை சம்மேளனத் தின் அகில இந்தியக்குழு பரிசீலனை செய்வதற்கு சாத்திய மான வரையில் வெகு சீக்கிரமாக அவற்றை அக்குழு முன்பு வைப்பது.*

ii) அனைத்து விவகாரங்களிலும் அமைப்பு விதிகளுக்கும் ஒழுங்கு விதிகளுக்கும் முரணில்லாத அறிவுரைகளை வழங்குவது.

iii) லோகல் குழுக்களையும் துணை குழுக்களையும் அதே போல வரவேற்பு குழுவையும் கண்காணிப்பது, வழி காட்டுவது, கட்டுப்படுத்துவது.

iv) சரி எனக்கருதும் பட்சத்தில் சேர்மனுக்கும் எதிராகவோ அல்லது சம்மேளனத்தின் அனைத்து இந்திய குழுவை தவிர்த்த ஒரு குழுவிற்கு எதிராகவோ குறிப்பிட்ட முறை யிலான ஒழுங்கு நடவடிக்கை எடுப்பது.

V) எந்தவொரு விசேஷமான நிலைமையை எதிர்கொள்வ தற்கு சரி என கருதும் பட்சத்தில் சம்மேளனத்தின் நலன் பொருட்டு குறிப்பிட் முறையிலான நடவடிக்கை எடுக்க மத்திய நிர்வாகக் குழுவிற்கு அதிகாரம் உண்டு; எனினும் இந்த அமைப்பு விதியில் வரையறுத்தப்படி, மத்திய நிர்வாகக் குழுவின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்டதாக இருக்கும்பட்சத்தில் அனைத்து இந்தியக் குழுவின் சம்மதத்தை பெறுவதற்காக அதனிடம் சாத்தியமானவரை மிக விரைவில் அந்நடவடிக்கை பற்றி தெரிவிக்க வேண்டும்.

vi) சம்மேளனத்தில் கட்டுப்பாட்டை பராமரிக்கவும் உறுப்பினர் களின் வாக்குரிமையை பறிக்கவும் வழங்கவும் விதிகளை உருவாக்குவது.

7. சிக்கல்கள் மிகுந்த விசேஷமான விவகாரங்களில் இந்த அமைப்பு விதிகளின் பயன்பாட்டை தளர்த்துவதற்கு மத்திய நிர்வாகக் குழுவிற்கு அதிகாரம் உண்டு; ஆனால் அமைப்பு விதியை மீறி விடாமல் இதனைச் செய்ய வேண்டும்.

8. சம்மேளனத்தில் அகில இந்தியக் குழுவின் கணக்குகளை மத்திய நிர்வாகக் குழு வைத்திருக்கும்; அந்தக் கணக்குகள் அகில இந்தியக் குழுவால் நியமிக்கப்படும் ஒரு தணிக்கையாளர் அல்லது தணிக்கையாளர்களால் ஒவ்வொரு ஆண்டும் தணிக்கை செய்யப் படும்.

# பகுதி VI

## லோகல் அமைப்புகளுக்கும் மத்திய நிர்வாக குழுவுக்குமிடையேயான தொடர்பு

### விதி XV

1. தலைவரின் பொதுவான கட்டுப்பாட்டைப் பொறுத்து, பொதுச் செயலாளர் சம்மேளனத்தின் அனைத்து இந்தியக் குழவின் அலுவலகப் பொறுப்பாளியாக இருப்பார்.

2. சம்மேளனத்தின் மாநாட்டு நடவடிக்கைகள் குறித்து தணிக்கை செய்யப்பட்ட கணக்குகள் உள்ளடங்கிய அறிக்கையை தயாரித்து வெளியிடுவதில் பொதுச் செயலாளர் கூட்டுப் பொறுப்பு வகிப்பார்; மாநாடு முடிந்த பிறகு சாத்தியமானவரை மிக விரைவில் அறிக்கையை வெளியிடுவார்.

3. தணிக்கை செய்யப்பட்ட கணக்குகள் உட்பட சம்மேளனத்தின் அனைத்து இந்தியக்குழு, மத்திய நிர்வாகக்குழு ஆகியவற்றின் வேலை அறிக்கை ஒன்றை பொதுச் செயலாளர் தயாரிப்பார்; இதே போன்றதொரு அறிக்கையை முன்பு தாக்கல் செய்ததிலிருந்த காலத்திற்கான இந்த அறிக்கையை தயாரித்து ஏற்கெனவே செய்தது போலவே, சம்மேளனத்தின் மாநாட்டுக்கு முன்பு நடைபெறும் அனைத்து இந்தியக் குழுவின் முதல் கூட்டத்தில் தாக்கல் செய்வார்.

### விதி XVI

1. சம்மேளனத்தின் மத்திய அமைப்பு சார்பில் சம்மேளனத்திற்காக பெறப்பட்ட பணம் அனைத்தும் தலைவரிடம் கொடுக்கப் படும்; அந்தப் பணம் சம்மேளனத்தின் பயன்பாட்டுக்காக அவரால் வைத்திருக்கப்படும்.

2. ஏற்றுக்கொள்ளப்பட்ட நோக்கத்திற்கான நிதியை தலைவரிடமிருந்து பொருளாளர் பெற்றுக்கொள்ளலாம்.

3. பொருளாளரோ அல்லது சம்மேளனம் சார்பில் ஏதாவது செலவு செய்யும் யாரேனும் ஒருவரோ அவருடைய கையில் இருக்கும் எந்தவொரு நிதியிலிருந்து அவரால் ஒவ்வொரு செலவுக்கும் பெற்றுச் சீட்டு வாங்கி வைத்திருப்பார்.

### விதி XVII

1. மத்திய நிர்வாகக் குழவின் கட்டுப்பாட்டைப் பொறுத்து, ஒவ்வொரு மாநில சம்மேளனக் குழுவும் சாதாரணமாக மாவட்ட சம்மேளனக் குழுக்கள் மூலம் செயல்படும்.

2. சம்மேளனத்தின் அனைத்து இந்திய குழுவின் மேற்பார்வை மற்றும் கட்டுப்பாட்டைப் பொறுத்து மாநில சம்மேளனக்குழு, தன்னுடைய சொந்த மாநிலத்திற்குள் உள்ள சம்மேளனக் குழுக் களின் விவகாரங்களைகவனிக்கும் பொறுப்பில் இருக்கும்.

3. சம்மேளனத்தின் லோகல் அமைப்புகளால் செய்யப்பட்ட வேலைகள் குறித்து ஆண்டறிக்கையொன்று மத்திய நிர்வாகக் குழு விற்கு சம்மேளனத் தலைவரால் தாக்கல் செய்யப்படும். அந்த அறிக்கையில் இருப்பு நிலை கணக்கு ஏடும் (Balance Sheet) உள் ளடங்கும்

4. அமைப்பு விதிப்படியோ அல்லது மாநில சம்மேளனத் தின் உத்திரவுக்கு ஏற்பவோ செயல்படத் தவறினால் மாநிலச் சம்மேளனமானது இருக்கக்கூடிய குழுவை தற்காலிக நீக்கம் செய்து மாநிலத்தில் சம்மேளனத்தின் பணிகை மேற்கொள்ள இடைக்காலக் கமிட்டியொன்றை அமைக்கும்.

## பகுதி VII

## நிதி

### விதி XVIII

1. சம்மேளனத்திற்கு ஆண்டுதோறும் கொடுக்கப்பட ஒரு தொகை சம்மேளனத்தின் கிராமக் குழுவிடமிருந்து வசூலிக்கப் படும்.

2. அந்தத் தொகை, சம்மேளனத்தின் உறுப்பினராக கிரா மத்தில் ஒப்புக்கொண்ட தாழ்த்தப்பட்ட ஜாதி மக்கள் தொகைக்கு ஏற்ப மாநில சம்மேளனத்தின் காரியக்குழுவால் நிர்ணயிக்கப்படும்.

3. மாநில சம்மேளனக் குழுவின் தலைவருக்கு கணக்கு அறிக்கையை அனுப்புவது சம்மேளனக் குழுவின் தலைவரது கடமையாகும்.

4. மாநில சம்மேளனக் குழுவில் திரட்டப்படும் தொகை கீழ்க்கண்டவாறு பங்கிடப்படும்.

1) எட்டில் ஒன்று கிராமச் சம்மேளனக் குழுவுக்கு ஒதுக்கப் படும்.
2) எட்டில் ஒன்று தாலுகா சம்மேளனக் குழுவுக்கு ஒதுக்கப் படும.
3) எட்டில் ஒன்று மாவட்ட சம்மேளனக் குழுவுக்கு ஒதுக்கப் படும்.
4) பதினாறில் ஐந்து மாநில சம்மேளனக் குழுவுக்கு ஒதுக்கப் படும்.
5) பதினாறில் ஐந்து மையத்திற்கு ஒதுக்கப்படும்.

5. மத்திய நிர்வாகக் குழு உறுப்பினர் ஒவ்வொருவரும் அனைத்து இந்தியக் குழு உறுப்பினர் ஒவ்வொருவரும்- தேர்ந் தெடுக்கப்பட்டவர்களாயினும் சரி - பணி சார்பானவராயினும் சரி இணை உறுப்பினராயினும் சரி அல்லது நியமிக்கப்பட்டவராயினும் சரி சம்மேளனத்திற்கு ஆண்டுக் கட்டணம் ரூ. 10 வீதம் ஆண்டு தோறும் கொடுக்க வேண்டும்.

6. கிராமக் குழு, தாலுகாக் குழு, மாவட்டக் குழு, மாநிலக் குழு ஆகியவற்றின் காரியக் குழு உறுப்பினர் ஒவ்வொருவரும் தங்க ளுடைய குழுக்களுக்கு ஆண்டுக் கண்டணம் ரூ.5 வீதம் ஆண்டு தோறும் கொடுக்க வேண்டும்.

7. மத்திய நிர்வாகக் குழு உறுப்பினர்களிடமிருந்து கிடைக் கும் உரிய கட்டணங்கள் சம்மேளனத்தின் நிதி வருவாயின் ஒரு பகுதியாக இருக்கும். கிராமக் குழு உறுப்பினர்களின் உரிய கட்டணம், கிராமக் குழுவின் நிதி வருவாயின் பகுதியாகவும் தாலுகாவின் காரியக் குழுவிலிருந்து கிடைக்கும் கட்டணம் தாலுகா குழுவிற்கும் மாவட்ட காரியக் குழுவிலிருந்து கிடைக்கும் கட்டணம் மாவட்ட குழுவிற்கும் மாநில காரியக் குழுவிலிருந்து மாநிலச் சம்மேளன குழுவிற்கும் கிடைக்கும்.

8. உறுப்பினர்கள் தங்களுடைய கட்டணத்தை கொடுக்கத் தவறினால், அவர்கள் உரிமையளிக்கப்பட்டிருந்த எந்தவொரு நட வடிக்கையிலும் பங்கேற்க அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

# பகுதி VIII

## தேர்தல்

### விதி XIX

*1. கிராமச் சம்மேளனக் குழுக்கள், தாலுகாக் குழுக்கள், மாவட்டக் குழுக்கள், சேர்மன் பதவிகள் ஆகியவற்றிற்கு நடைபெறும் தேர்தல் எளிய பெரும்பான்மையை கொண்டிருக்கும்.*

*2. சம்மேளனத்தின் அகில இந்தியக் குழுவுக்கான தேர்தலும் தலைவர் பதிவிக்கான தேர்தலும் எளிய பெரும்பான்மையை கொண்டிருக்கும்.*

### விதி XX

*1. இந்த அமைப்பு விதியின் கீழ் அமைக்கப்பட்ட எந்தவொரு குழு அல்லது வாரிய அல்லது தீர்ப்பாய உறுப்பினர் ஒருவரின் பணி அவரது பதவி விலகல், நீக்கம் அல்லது மரணத்தால் காலி செய்யப்படும்.*

*2. காலியிடங்களை நிரப்ப வேறுவழியில் சாத்தியமில்லை என்றால் அவை அனைத்தும் காலியாகும் உறுப்பினர் எந்த முறையில் தேர்வு செய்யப்பட்டவரோ அதே முறையில் நிரப்பப்படும்; அப்படி தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்கள் காலி செய்யப்பட்ட அந்த இடத்தில் காலாவதியாகாத காலத்திற்கு அந்தப் பொறுப்பில் இருப்பார்கள்.*

*3. எதிர்பார்ப்புக்கு எதிர்மாறாக எந்த ஏற்பாடும் இல்லாத பட்சத்தில் ஒரு தடவை முறையாக அமைக்கப்பட்டிருந்தால் அத்தகைய குழுவோ வாரியமோ அல்லது தீர்ப்பாயமோ ஏதாவதொரு இடம் காலி விழுந்தது என்ற காரணத்தினால் செல்லாததாகி விடாது.*

### விதி XXI

*ஒவ்வொரு குழுவின் ஒவ்வொரு நிர்வாகக் குழுவின், அவற்றின் அலுவலக நிர்வாகிகளின் பதவிக் காலம் 2 ஆண்டாகும்.*

# பகுதி IX

## தேர்தல் தாவாக்கள்

### விதி XXII

1. மாநில சம்மேளனக் குழு, தனது முதல் பேரவைக்கூட்டத்தில் கலந்து கொண்டவர்களில் குறைந்தபட்சம் நான்கில் மூன்று பெரும்பான்மையுடன் வாக்களித்து ஒரு மாநில தேர்தல் தீர்ப்பாயத்தை நியமிக்கும்; அதில் 3 பேருக்கு குறையாமல் 5 பேருக்கு மிகாமல் இருப்பார்கள்.

2. மேலே கூறப்பட்ட முறையில், ஒரு தேர்தல் தீர்ப்பாயத்தை நியமிக்கத் தவறினால் மாநில காரியக் குழு, அந்த மாநிலத்திற்கான தேர்தல் தீர்ப்பாயத்தை நியமிக்கும்.

3. ஒவ்வொரு மாநில தேர்தல் தீர்ப்பாயமும் சாதாரணமாக இரண்டு ஆண்டுகள் பதவியில் இருக்கும்; ஆனால் ஏதாவதொரு சம்பவத்தில் அது, புதிய தீர்ப்பாயம் நியமிக்கப்படும் வரை செயல்படும்.

4. தேர்தல் தீர்ப்பாயம் ஒன்றின் உறுப்பினர் ஒருவர், அப்படி அவர் உறுப்பினராக இருக்கும் சமயத்தில் சம்மேளனத்தில் தேர்ந்தெடுப்புக்குரிய ஏதாவதொரு பதவியை வகிக்கவோ அந்தவொரு தேர்தலிலும் போட்டியிடவோ கூடாது.

5. மாநில தேர்தல் தீர்ப்பாயத்தின் மீது மத்திய நிர்வாகக் குழு கண்காணிப்பு வைத்திருக்கும்.

6. தேர்தல் தீர்ப்பாயங்கள் தங்களுடைய பணிகளைச் செய்வதற்கான வீதிகளை மத்திய நிர்வாகக்குழு ஏற்படுத்தும் ஒரு மாநிலத் தேர்தல் ஆணையம் தன்னுடைய ஒழுங்குமுறையை காரியக் குழுவின் ஒழுங்கு விதிகளுக்கு முரணில்லாத வகையில் ஏற்படுத்திக் கொள்ளலாம்.

### விதி XXIII

1. ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒரு தேர்தல் தீர்ப்பாயம் இருக்கும்.

2. அந்தத் தீர்ப்பாயம் சார்பில் ஏற்படுத்தப்பட்ட விதிகளுக்கு ஏற்ப ஒரு தொகுதிக்குட்பட்ட எந்தவொரு வேட்பாளரும் அத்தொகுதியில் நடந்த ஏதாவதொரு தேர்தல் சம்பந்தமாக தேர்தல்

முடிவு அறிவிக்கப்பட்ட 15 நாட்களுக்குள் மாநிலத் தேர்தல் தீர்ப்பாயத்திடம் புகார் செய்யலாம் அந்தப் புகார் மீது மாவட்டத் தேர்தல் தீர்ப்பாயம் முடிவு செய்யும்; அந்த முடிவை சம்பந்தப் பட்டத் தரப்பினருக்கு சாத்தியமான வரை துரிதமாகத் தெரிவிக்கும்.

3. ஒரு தேர்தலை தேர்தல் தீர்ப்பாயம் தள்ளுபடி செய்யும் வரை தேர்ந்தெடுக்கப்பட்ட நபர் முறையாக தேர்ந்தெடுக்கப் பட்டதாக கருதப்படுவார்.

4. ஏதாவதொரு தேர்தல் சம்பந்தமாகவோ பதிவு மற்றும் உறுப்பினர்கள் பெயர் பட்டியல்களை பராமரித்தல் சம்பந்த மாகவோ தவறான புகார் அளித்தது சம்பந்தமாகவோ அல்லது வேண்டுமென்றே ஆட்சேபணை செய்தது சம்பந்தமாகவோ குற்றம் செய்ததாக கண்டுபிடிக்கப்பட்ட ஒருவர் தேர்தலில் வேட்பாளராக நிற்பதற்கு தகுதியற்றவர் என்றோ அவரை ஒரு குறிப்பிட்ட காலத் திற்கு சம்மேளனத்திலிருந்து நீக்குவதற்கோ மாநிலத் தேர்தல் தீர்ப்பாயத்திற்கு அதிகாரம் உள்ளது; அது தனது சொந்த தீர்மானத் தின் பேரிலோ அல்லது மாநில சம்மேளனக் குழுவின் கோரிக்கை யின் பேரிலோ அல்லது சம்பந்தப்பட்ட தரப்பின் கோரிக்கையின் பேரிலோ இத்தகைய நடவடிக்கைகளை எடுக்க அத்தீர்பாயத்திற்கு இந்த அதிகாரம் உள்ளது.

5. எங்காவது மோசடித்தனமான தேர்தல் நடந்ததாக புகார் அளிக்கப்பட்டாலும் சம்பந்தப்பட்ட காரியக்குழு, இத்தகைய புகார்கள் மீது விசாரணை செய்யலாம்; தேவை என்று கருதினால் குறித்த முறையிலான நடவடிக்கை எடுக்கலாம்.

## விதி XXIV

1. மாநில சம்மேளனக் குழு, ஒவ்வொரு ஆண்டும் ஜூன் மாதத்திற்கு பிறகு நடைபெறும் முதல் கூட்டத்தில் கலந்து கொள்ளும் உறுப்பினர்களில் குறைந்தபட்சம் நான்கில் மூன்று என்ற பெரும் பான்மையுடன் வாக்களித்து மாநிலத் தேர்தல் அதிகாரியொருவரை நியமிக்கும்.

2. மேலே கூறப்பட்டவாறு ஒரு மாநிலத் தேர்தல் அதிகாரியை நியமிக்க ஏதாவதொரு மாநிலச் சம்மேளனக் குழு தவறினால் மத்திய நிர்வாகக் குழு, ஒரு தேர்தல் அதிகாரியை நியமிக்கும்.

3. மாநிலத் தேர்தல் அதிகாரி, அந்த மாநிலத்தில் சம்மேளனத்தின் அனைத்து பகுதி அமைப்புகளுக்கும் தேர்தல் நடத்தவார். அவர் மாநிலத்தில் முறையான தேர்தல்களை நடத்துவதற்காக மாநில சம்மேளனத்தின் நிர்வாகிகளுடனும் மாவட்ட சம்மேளன குழுக்களுடனும் கலந்தாலோசித்து மாவட்ட தேர்தல் அதிகாரிகளையும் தாலுகா அதிகாரிகளையும் கிராமத் தேர்தல் அதிகாரிகளையும் இத்தகைய மற்ற அதிகாரிகளையும் நியமிப்பார். மேலும், அவ்வப்போது மத்திய நிர்வாகக் குழுவால் அவருக்கு ஒதுக்கப்பட்ட இத்தகைய ஏனைய செயல்பாடுகளையும் மேற்கொள்வார்.

# பகுதி X

## வேட்பாளர்கள் தேர்வு

### விதி XXV

1. மத்திய நிர்வாகக் குழுவானது சம்மேளனத்தின் தலைவர் மற்றும் 5 உறுப்பினர்களைக் கொண்ட ஒரு குழுவை (Board) அமைக்கும்; அந்த வாரியத்தின் சேர்மனாக சம்மேளனத்தின் தலைவர் இருப்பார்; இந்தக் குழுவின் நோக்கம் நாடாளுமன்றத்திற்கும் மாநில சட்டமன்றங்களுக்குமான வேட்பாளர்களை தேர்வு செய்வதாகும். இதன் பொருட்டு அந்தக் குழு அதன் சார்பில் ஒழுங்கு விதிகளை தயாரிக்கும்.

2. இந்தத் தேர்தல் குழு வேட்பாளர்களுக்கான பெயர்களை முன்வைக்குமாறு சம்மேளனத்தின் உள்ளூர் குழுக்களுக்கு அழைப்பு விடுக்கும். அது மேலும் உரிமை அடிப்படையிலும் வேட்பாளர்களுக்கு கிடைத்த ஆதரவின் அடிப்படையிலும் வேட்பாளர் பட்டியல் ஒன்றைத் தயாரிக்கும்.

3. இந்தக் குழு வேட்பாளர் தேர்வை மேற்கொள்வதில் வேட்பாளர் பெற்ற ஆதரவுக்கு முக்கியத்துவம் அளிக்கும். ஆனால் முதலில் குறிப்பிடப்பட்டவரை தேர்ந்தெடுக்க அந்தக் குழு கட்டுப்படுத்தப்பட மாட்டாது.

4. மத்திய தேர்தல் குழுவானது வேட்பாளர் தேர்வு உட்பட உள்ளாட்சி அமைப்புகளுக்கான தேர்தல்கள் குறித்து செயல்பட ஒவ்வொரு மாநிலத்திற்கும் தேர்தல் கமிட்டி ஒன்றை அமைக்கும். அக்கமிட்டிக்கான விதிகளையும் தயாரிக்கும்.

5. மாநிலத் தேர்தல் கமிட்டி, நாடாளுமன்ற, சட்டமன்றத் தேர்தல்களுக்கான வேட்பாளர்களை மத்திய தேர்தல் குழுவிற்கு பரிந்துரை செய்யும்.

## பகுதி XI

### பல்வேறு அம்சங்கள் (Miscellaneous)

### விதி XXVI

1. சம்மேளனத்தின் கொடி, செவ்வகமாக வெட்டப்பட்ட நீலநிறத் துணியில் நட்சத்திரங்களை கொண்டிருக்கும்.

2. சம்மேளனத்திற்குள் 2 அமைப்புகளில் ஒருவர் ஒரே சமயத்திலும் அதே சமயத்திலும் உறுப்பினராக இருக்கக் கூடாது.

3. ஒரு சம்மேளனக்குழு தன்னுடைய அதிகாரங்களில் ஏதேனும் ஒன்றை சிறு குழுவிடமோ அல்லது ஒரு தனிப்பட்டவரிடமோ கொடுக்கலாம்.

4. கடைசியாக கிடைக்கும் மக்கள் தொகை கணக்கெடுப்பில் தெரிவிக்கப்பட்டுள்ள நாட்டு மக்கள் தொகை பற்றிய விவரங்கள் சம்மேளனத்தின் நோக்கங்களுக்கு உரியதாக எடுத்துக் கொள்ளப்படும்.

5. சம்மேளனத்தின் கிளைகள் பற்றிய மதிப்பு சம்பந்தமான பிரச்சனை ஏற்படுமானால் ஒரு கிளை உறுப்பினர்களின் எண்ணிக்கை உரிய எண்ணிக்கையாகவோ இருந்தால் அது ஒன்றாகவும் பாதிக்கு குறைவாக இருந்தால் ஒரு கிளைக்குரிய மதிப்பறறதாகவும் கருதப் படும்.

6. இந்த அமைப்பு விதியில் வாக்கு (Vote) என்ற வார்த்தை இருந்தாலும் அல்லது அதில் சில எழுத்துக்கள் சேர்க்கப்பட்டாலும் அதன் அர்த்தம் ஒரு செல்லுபடியான வாக்கு என்பதைக் குறிப்ப தாகும்.

7. இந்த அமைப்பு விதியில் உள்ள ஒழுங்கு விதிகள், உள்ளடக் கங்கள் அல்லது நடைமுறை விதிகள் சம்பந்தமாகவோ உறுப்பினர் களுக்கிடையே அல்லது குழுக்களுக்கிடையே ஏற்படும் ஏதாவ தொரு பிரச்னை அல்லது தாவா குறித்தோ, இந்த அமைப்பு விதியில் குறிப்பிடப்பட்டுள்ள அதிகாரம் படைத்தவரால் அல்லது அதிகாரம் படைத்தவர்களால் முடிவு செய்யப்படும். அப்படி எந்தவொரு

அதிகாரம் படைத்தவரும் அமைப்பு விதியில் குறிப்பிடப்படாவிட்டால் அது, மத்திய நிர்வாகக் குழுவால் முடிவு செய்யப்படும். இத்தகைய அதிகாரத்தின் முடிவு இறுதியானதாகவும் பட்டியலிடப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் குழுக்களையும் கட்டுப்படுத்தக் கூடியதாகவும் இருக்கும்; ஆனால் அந்த முடிவு குறித்து நீதிமன்றத்தில் எவர் ஒருவராலும் கேள்வி எழுப்புவதற்கு அது சட்டத்திற்கு உட்பட்டதல்ல.

# பகுதி XII

## அமைப்பு விதியில் திருத்தம்

### விதி XXVII

1. இந்த அமைப்பு விதி, திருத்தப்படலாம், மாற்றியமைக்கப்படலாம் அல்லது புதிதாக சேர்க்கப்படலாம்; ஆனால் இதனை சம்மேளனத்தின் அனைத்து இந்தியக்குழுவின் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையினாலும் மாநிலச் சம்மேளனங்களில் பெரும்பான்மையாய் ஏற்றுக்கொள்ளப்பட்டாலும் மட்டுமே செய்ய முடியும்.

2. மாற்றியமைத்தோ அல்லது புதிதாகச் சேர்த்தோ செய்யப்படும் திருத்தம். முன்னதாக ஒவ்வொரு மாநிலச் சம்மேளனக் குழுவின் தலைவருக்கும் சுற்றுக்கு விடப்பட்டு இந்த விஷயத்தில் அவர்களுடைய முடிவு பெறப்படும்.

3. இந்தப் பிரச்சனையை குறைந்த பெரும்பான்மையில் குழுக்கள் முடிவு செய்யலாம்.

4. மாநிலக் குழுக்களின் முடிவுகளை கிடைக்கப்பட்டதன் பேரில் அந்தத் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்றோ நிராகரிக்கப்பட்டது என்றோ சேர்மன் அறிவிப்பார்.

# பகுதி XIII

## ஒழுங்கு கட்டுப்பாட்டு விதிகள்

### விதி XXVIII

1. கீழே கொடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகளில் எது ஒன்றிலும் ஈடுபடும் எந்தவொரு உறுப்பினரும் ஒழுங்கு கட்டுப்பாட்டின்மை (Indiscipline)க் குற்றம் புரிந்தவர் ஆவார்.

i) சம்மேளனத்தால் பிரகடனம் செய்யப்பட்ட கொள்கைக்கு எதிராகச் செயல்படுவது

ii) சம்மேளனத்தின் கொள்கைகளை வெளிப்படையாகவும் பகிரங்கமாகவும் விமர்சிப்பது.

iii) சம்மேளனத்தின் எந்தவொரு உறுப்பினரையும் பகிரங்க மாகவும் வெளிப்படையாகவும் விமர்சிப்பது.

iv) சம்மேளனத்தில் அமைப்பு விதி ரீதியாக தேர்ந்தெடுக் கப்பட்ட தலைவரின் அதிகாரத்தை எதிர்க்கும் நோக் குடன் எந்தவொரு உறுப்பினரும் சம்மேளனத்திற்குள் கோஷ்டியை உருவாக்குவது.

V) எந்தவொரு உறுப்பினருக்கும் எதிராக தீங்கான உணர்ச்சி களை பரப்புவது அல்லது எந்தவொரு அவதூறு இயக் கத்தையும் மேற்கொள்வது.

vi) சம்மேளனத்தின் அல்லது சம்மேளனத்தில் இணைக்கப் பட்ட எந்தவொரு அமைப்பின் குழுவின் பணியை தடுப்பது.

vii) சம்மேளனத்தின் நிதிகளை கையாடல் செய்வது.

viii) சம்மேளனத்தால் அங்கீகரிக்கப்படாத எந்தவொரு கட்சி யிலுமோ அல்லது கோஷ்டியிலோ சேர்வது.

ix) சம்மேளனத்தின் பதவியில் இருப்பவர் பதவி அதிகாரங் களைத் தவறாகப் பயன்படுத்துவது அந்தப் பதவி அதிகாரங்களை பயன்படுத்தாமல் நிராகரிப்பது இதன் மூலமாக சம்மேளனத்திற்கு தோல்வியை ஏற்படுத்துவது.

x) சம்மேளனத்தின் இலக்குகளுக்கும் நோக்கங்களுக்கும் அதிகாரங்களுக்கும் அப்பாற்பட்ட ஏதாவதொரு நட வடிக்கையில் ஈடுபடுவது

xi) ஏதாவதொரு தேர்தலில் சம்மேளனத்தால் நிறுத்தப் பட்டுள்ள அதிகாரபூர்வ வேட்பாளரை எதிர்ப்பது.

2. எந்தவொரு கட்டுப்பாடற்ற செயலில் குற்றம் புரிந்த எந்த வொரு உறுப்பினரும் மாநிலச் சம்மேளனத் தலைவரால் தண்டிக்கப் பட கூடியவராவார். ஆனால் அவர் அந்த தண்டனையை எதிர்த்து மத்திய காரியக் குழுவிடம் மேம் முறையீடு செய்ய முடியும்; மத்திய காரியக் குழுவின் முடிவு இறுதியானதாகும்.

3. கட்டுப்பாடின்மைக்கான தண்டனை கீழ்க்கண்டவாறு இருக்கும்.

i) சம்மேளனத்திலிருந்து நீக்கம்; இது நிரந்தரமானதாக இருக்கலாம்.

ii) சம்மேளனத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு தற்காலிக நீக்கம்

iii) பதவியிலிருந்து நீக்கம்

iv) சம்மேளனப் பதவியில் இருக்க தகுதியற்றவர் என அறிவிக்கப்படுவது

## பகுதி XIV

### இடைக்கால ஒழுங்குவிதிகள்

### விதி XXIX

அமைப்பு விதிகளின் எந்த விதி உடனடியாக செயல்படுத்தப் பட வேண்டும் என்று முடிவு செய்வது தலைவரின் அதிகாரம் ஆகும்.

விளக்கம்: இந்தப் பகுதியில் தலைவர் என்பது தற்போது சம்மேளனத்தின் தலைவராக இருப்பவர் என்பதாகும்.

### விதி XXX

ஏதாவது சிரமமான நிலைமையை அகற்றும் நோக்கத்திற்காக குறிப்பாக தற்போதைய ஏற்பாட்டிலிருந்து அமைப்பு விதியின் ஒழுங்கு விதிகளுக்கு மாறுவது தொடர்பாக வழிகாட்டுவதற்கு சம்மேளனத் தலைவருக்கு அதிகாரம் உண்டு; அது என்னவெனில், ஒரு புதிய நிலைமைக்கு மாறிக்கொள்ளும் காலத்தல் அமைப்பு விதிகள் நல்ல பலனை கொண்டிருக்கின்றன; அது, அவர்(தலைவர்) அவசியம் என்றோ அல்லது அவசரம் என்றோ கருதும் போது, இத்தகைய புதிய நிலைமையை ஏற்றுக் கொள்வதை சிறு அளவில் புதுப்பித்தோ அல்லது சேர்த்தோ அல்லது நிராகரித்தோ - பொறுத் திருக்கிறது என்பதாகும். தலைவரின் அதிகாரத்தில் பதவியில் இருப்பவரை நீக்குவதுவும் அந்த இடத்திற்கு வேறொரு வரை நியமிப்பதுவும் உள்ளடங்கும்.

## விதி XXXI

*கொஞ்சம் முன்னதாக, பகுதி 10-ன் ஒழுங்கு விதிகளில் கூறப்பட்டுள்ள பொதுவான கருத்துக்கு பங்கம் இல்லாமல் தலைவர், தற்காலிக நீக்கம் செய்யப்பட்ட அல்லது முறையாக செயல்படவில்லை எனக் கண்டுபிடிக்கப்பட்ட மாநில சம்மேளனத்தை உடனடியாக மாற்றி அமைப்பார்.*

● ● ●

# 10

# இந்திய புத்தமத சொசைட்டி

இந்திய புத்தமத சொசைட்டி டாக்டர் பி.ஆர். அம்பேத்கரால் மே 4, 1955-ல் மும்பையில் கம்பெனிகள் பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்யப்பட்டது.

''புத்தமதப் பிரச்சாரத்திற்காக இந்த சொசைட்டி அமைக்கப் பட்டதை பம்பாயில் நாரே பூங்காவில் மே.8, 1955-ல் நடைபெற்ற நிகழ்ச்சியொன்றில் அவர் முறைப்படி அறிவித்தார்'' அந்த சொசைட்டியின் அமைப்பு விதிகள் வருமாறு: ஆசிரியர்கள்.

## இந்திய புத்த மதச் சொசைட்டியின் அமைப்பு விதிகள்

(டாக்டர் பீ.ஆர். அம்பேத்கரால் பதிவு செய்யப்பட்டது போன்று)

மே 4, 1955-ல் பதிவு செய்யப்பட்டது கையொப்பம் -
கம்பெனிகள் பதிவாளர்,

மும்பை

அமைப்பு பொதுநிலை அறிக்கை

1. சொசைட்டியின் பெயர்: இந்திய புத்தமத சொசைட்டி
2. சொசைட்டியின் நோக்கங்கள்:

   சொசைட்டியின் நோக்கங்களும் இலக்குகளும் வருமாறு:

   1. இந்தியாவில் புத்தமதத்தை பரப்புவதை தொடங்குவது
   2. புத்தமத வழிபாட்டுக்கான கோவில்களை ஏற்படுத்துவது.
   3. மதமற்றும் விஞ்ஞான பாடங்களுக்கான பள்ளிகளையும் கல்லூரிகளையும் நிறுவுவது.
   4. அனாதை இல்லங்களையும் மருத்துவமனைகளையும் நிவாரண மையங்களையும் ஏற்படுத்துவது.

---

1. ஜனதா: மே 14, 1955

5. புத்தமதத்தை பரப்புவதற்கான ஊழியர்களை தயார்ப்படுத்துவதற்கான புத்த மதக் கருத்தரங்குகளை தொடங்குவது.
6. அனைத்து மதங்களையும் ஒப்பிடும் ஆய்வைத் தொடங்குவது.
7. புத்தமதத்தைப் பற்றிய உண்மையான புரிதலை மக்களுக்கு அளிப்பதற்காக புத்தமத இலக்கிய வெளயீட்டை மேற்கொள்வது - பிரசுரங்களை அளிப்பது.
8. செய்தாக வேண்டும் என்று அவசியம் ஏற்பட்டால் புத்த சாமியார்களின் புதிய நடைமுறையை ஏற்படுத்துவது.
9. புத்தக வெளியீட்டு பணிகளுக்காக ஒரு அச்சகம் அல்லது அச்சகங்களை அமைப்பது.
10. பொதுவான நடவடிக்கைகளுக்காக இந்திய புத்தமதத்தினரின் கூட்டங்களையும் மாநாடுகளையும் நடத்துவது- கூட்டு இணக்க வாழ்வு முறையை ஏற்படுத்துவது.

3. சொசைட்டியின் விவகாரங்களை கவனிக்கும் செயல்பாடு ஒப்படைக்கப்பட்டுள்ள தலைவரின் பெயர், முகவரி, தொழில் வருமாறு:

| பெயர் | முகவரி | தொழில் |
|---|---|---|
| டாக்டர் பீமாராவ் ராம்ஜி அம்பேத்கர் | 26, அலில்பூர் சாலை, சிவில்லைன்ஸ், டெல்லி | பாரிஸ்டர் அட்-லா |

சொசைட்டியினுடைய உறுப்பிர்களின் பெயர்களும் அவர்களது முகவரிகளும் தொழிலும் வருமாறு

| பெயர் | முகவரி | தொழில் |
|---|---|---|
| (ஒ-ம்) பீமாராவ் ராம்ஜி அம்பேத்கர் | 26, அலிபூர்சாலை, சிவில் லைன்ஸ், டெல்லி | பாரிஸ்டர் அட்-லா |
| (ஒம்) மாதவ். ஜி. மால்வர்கர் | 68, ஹூக்ஸ் சாலை, பம்பாய்-7 | மருத்துவ ஆலோசகர் |
| (ஒம்) சி.எஸ்.பிள்ளை | மொரான் கட்டிடம், 2-வது தளம், சர். பி. மேதா சாலை, பம்பாய்-28 | கட்டிட நிபுணர் |

| பெயர் | முகவரி | தொழில் |
|---|---|---|
| (ஓம்) பாலச்சந்திரா கே.கபீர் | 59, போர்த்துக்கீசிய ஆலயம், தாதர், பம்பாய்-28 | சேவை |
| (ஓம்) பகவந்த சாயாஜி கெய்க்வாத் | மனை எண் 10, சாலை எண் 19, பம்பாய்-21 | சேவை |
| (ஓம்)எஸ்.டி.கெய்க்வாத் | சித்தார்த் கல்லூரி, அனந்தபவன் டாக்டர் டி.நவரோஜி சாலை, பம்பாய்-1 | சேவை |
| (ஓம்) காஷிராம் விஷ்ரம் சவாத்கார் | பீ.டி.டி.சால், எண்.15 'பீ' அறை, நெய்காவும், பம்பாய்-14 | சேவை |

## இந்திய புத்தமத சொசைட்டி

சொசைட்டியின் அமைப்பு விதிகளை ஆளுமை செய்யும் ஒழுங்கு விதிகளும் ஒழுங்கு முறைகளும் :

I. சொசைட்டியின் பெயர் : இந்திய புத்தமத சொசைட்டி என்றிருக்கும்.

II. சொசைட்டியின் பதிவு செய்யப்பட்ட அலுவலகம் பம்பாயில் அமைக்கப்பட்டிருக்கும்.

III. சொசைட்டியின் இலக்குகள் வருமாறு :

1) இந்தியாவில் புத்த மதத்தை பரப்புவதை தொடங்குவது.

2) புத்தமத வழிபாட்டுக்காக கோவில்களை நிறுவுவது.

3) மத மற்றும் விஞ்ஞானப் பாடங்களுக்கான பள்ளிகளையும் கல்லூரிகளையும் நிறுவுவது.

4) அனாதை இல்லங்களையும் மருத்துவமனைகளையும் நிவாரண மையங்களையும் நிறுவுவது.

5) புத்தமதத்தை பரப்புவதற்கான ஊழியர்களை தயார் படுத்துவதற்கான கருத்தரங்குகளை தொடங்குவது.

6) அனைத்து மதங்களையும் ஒப்பிடும் ஆய்வை மேம் படுத்துவது.

7) புத்த மதத்தைப் பற்றிய உண்மையான புரிதலை மக்களுக்கு அளிப்பதற்காக புத்தமத இலக்கிய வெளியீட்டை மேற்கொள்வது - பிரசுரங்களை அளிப்பது.

8) செய்தாக வேண்டும் என்று அவசியம் ஏற்பட்டால் புத்த சாமியார்களின் புதிய நடைமுறையை ஏற்படுத்துவது.

9) புத்தக வெளியீட்டு பணிகளுக்காக ஒரு அச்சகம் அல்லது அச்சகங்களை அமைப்பது.

10) பொதுவான நடவடிக்கைகளுக்காக, இந்திய புத்த மதத்தினரின் கூட்டங்களையும் மாநாடுகளையும் நடத்துவது- கூட்டிணக்க வாழ்வு முறையை ஏற்படுத்துவது.

IV. சொசைட்டியின் அதிகாரங்கள் வருமாறு :

1) சொசைட்டிக்காக நன்கொடைகள் பெறுவது, நிதிகளைத் திரட்டுவது.

2) புத்த சாமியார்களை பராமரிப்பது.

3) சொசைட்டியின் நலனுக்காக சொசைட்டியின் சொத்துக்களை விற்பது - அடமானம் வைப்பது.

4) சொத்துக்களை சொந்தமாக்கி வைத்திருப்பது.

5) சொசைட்டிக்காக சொத்துக்களை வாங்குவது, கூட்டுக் குத்தகைக்கு எடுப்பது அல்லது வேறுவழி இல்லையேல் முயற்சி செய்து பெறுவது. அவ்வப்போது தீர்மானிக்கிறபடி சொசைட்டியின் பணங்களை முதலீடு செய்வது.

6) சொசைட்டியின் நோக்கங்களுக்காக கட்டிடங்களை அல்லது தொழில்களை கட்டுவது, பராமரிப்பது மீண்டும் கட்டுவது, சரிசெய்வது, மாற்றி அமைப்பது, மாற்றீடு செய்வது அல்லது பழைய நிலைமைக்கும் கொண்டு வருவது.

7) சொசைட்டியின் அனைத்து சொத்துக்களையும் அல்லது ஏதாவதொரு சொத்தை விற்பது, ஏதாவதொரு வழி வகையில் ஒழுங்குபடுத்துவது, மேம்படுத்துவது, நிர்வகிப்பது, மாற்றுவது அல்லது வியாபாரத்தில் ஈடுபடுத்துவது.

8) சொசைட்டியின் நோக்கங்களையும் மென்மேலும் முன்னோக்கிக் கொண்டு செல்லும் நோக்குடன் சொசைட்டியை அல்லது சொசைட்டியால் நடத்தப்படும் ஏதாவதொரு நிறுவனத்தை அல்லது நிறுவனங்களை வேறு ஏதாவதொரு நிறு

வனத்துடன் அல்லது வேறு ஏதாவதொரு சொசைட்டியுடன் ஒத்துழைப்பது, ஒன்றுபடுத்துவது அல்லது இணைப்பது.

9) சொசைட்டியின் நோக்கங்கள் மற்றும் இலக்குகள் ஆகியவற்றின் ஏதாவதொன்றை மேற்கொள்வதற்காக சொத்து ஈட்டை வைத்தோ வைக்காமலோ பணம் திரட்டுவது.

10) மேலே கூறப்பட்ட நோக்கங்களில் ஏதேனும் ஒன்றை அடைவதற்கு இயல்பானதாகவோ பொருத்தமானதாகவோ இருக்கக் கூடிய ஏனைய சட்டரீதியான விஷயங்களை அல்லது நடவடிக்கைகளை மேற்கொள்வது.

## V. சொசைட்டியின் உறுப்பினர் நிலைமை :

சொசைட்டியின் உறுப்பினர்களின் பிரிவுக்ள் கீழ்க்கண்டவாறு இருக்கும்

1) உறுப்பினர்கள்

2) இணை உறுப்பினர்கள்

1) உறுப்பினர் நிலைமைக்கான நிபந்தனைகள்:

சொசைட்டியால் குறிப்பிடப்பட்டுள்ளதுபோல் தம்மாதிக்ஷா என்னும் சடங்கை மேற்கொள்ளக்கூடியவரும் தன்னுயை ஆண்டுச் சந்தாவை கொடுத்திருப்பவரும் உறுப்னராகுவதற்கு தகுதியானவர்களாவார்கள்.

2) இணை உறுப்பினர் நிலைமை

சொசைட்டியின் நோக்கங்களையும் இலக்குகளையும் ஒப்புக் கொள்கிறவரும் புத்த மதத்தின்பால் குரோதம் இல்லாத வருமான ஒருவர் ஆண்டுச் சந்தா கொடுத்து சொசைட்டியின் இணை உறுப்பினராகலாம்.

3) உறுப்பினர் நிலைக்கான வரையறை :

சொசைட்டியின் எந்த ஒரு உறுப்பினரும் தம்மசிதிக்ஷா என்னும் சடங்கை மேற்கொண்டிருந்தபோதிலும் அவர் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஒரு தற்காலிக உறுப்பினராக இருப்பார் என்று எந்தவொரு குறிப்பிட்ட விஷயத்திலும் சொசைட்டியின் தலைவர் முடிவெடுக்கலாம்.

4) ஒரு தற்காலிக உறுப்பினரும் ஒரு இணை உறுப்பினரும் ஆலோசனைக் குழுவிலும் பொதுக் குழுவிலும் உறுப்பின ராகத் தகுதி உள்ளவர்களாக மாட்டார்கள்; அவர்களுக்கு வாக்குரிமையும் இல்லை.

VI. விளக்கம்

சொசைட்டியின் உறுப்பினர்களாவதற்கு கழகங்களையும், நிறுவனங்களையும் அமைப்புகளையும் தலைவர் அனுமதிக் கலாம்.

VII. உறுப்பினர் நிலைக்கான கட்டணம்:

ஒவ்வொரு உறுப்பினரும்-அவர் உறுப்பினரானாலும் சரி இணை உறுப்பினரானாலும் சரி-ஆண்டுக்கு குறைந்தபட்சம் ரூ.1 வீதம் கட்டணம் செலுத்த வேண்டும். அதனை உரிய நேரத் தில் கொடுக்கத் தவறும் பட்டசத்தில் அந்தளவிற்கான தண்டனையை தலைவர் கைவிடாவிட்டால் அந்த உறுப்பினர், உறுப்பினர் நிலையையும் அதேபோல் வாக்களிக்கும் உரிமையையும் இழக்க நேரிடும்.

VIII. தலைவர்

1) சொசைட்டி ஒரு தலைவரை கொண்டிருக்கும். அவர், அவரது வாழ்க்கைக் காலம் முழுமைக்கும் தலைவராக இருப்பார்.

2) சொசைட்டியின் முதல் தலைவராக பீ.ஆர்.பீமாராவ் ராம்ஜி அம்பேத்கர் எம்.ஏ.,பி.ஹெச்.டி., டி.எஸ்.சி., பாரிஸ்டர் அட்-லா இருப்பார்.

3) சொசைட்டியின் பொருளாளரையும் செயலாளரையும் தலைவர் நியமிப்பார். அவர்களது பதவிக் காலத்தை குறிப்பிட அவருக்கு அதிகாரம் உண்டு.

4) தலைவரின் அதிகாரங்கள் வருமாறு:

i) சொசைட்டியின் நோக்கங்களை செயல்படுத்துவதற்கு தேவைப் படுமானால், அதற்கான பதவிகளை உருவாக்குவது.

ii) அவைகளுக்கு தகுதியானவர்கள் என்று அவர் கருதும் பட்சத்தில் அவர்களையே நியமிப்பது

iii) சொசைட்டியின் நிர்வாகத்தை மேற்கொள்ளும் நபர்களுக்கு கடமைகளையும் செயல்பாடுகளையும் நிர்ணயிப்பது.

5. சொசைட்டியின் பணியை மேற்கொள்வதற்கான மையங்களை இந்தியாவில் பல்வேறு இடங்களில் திறப்பதற்கும் அவற்றிற் கான ஊழியர்களையும் நிர்வாகிகளையும் நியமிப்பதற்கு தலைவருக்கு அதிகாரம் உண்டு.

IX. செயலாளர் மற்றும் பொருளாளரின் கடமைகள்

1) சொசைட்டியின் சார்பாக கடிதப் போக்குவரத்தை மேற் கொள்வது செயலாளரின் கடமையாகும்.

2) சொசைட்டியின் கணக்குகளை வைத்துக் கொள்வது பொரு ளாளரின் பொறுப்பாகும்.

X. சொசைட்டிக்கு சொந்தமான பணம் அனைத்தும் ஒரு வங்கியில் வைப்புத் தொகையாக போடப்படும். சொசைட்டியின் நோக்கங் களுக்காக தலைவரால் பணம் எடுக்கப்படும்.

XI. நிர்வாகம்

1) சொசைட்டியின் விவகாரங்கள் தலைவரால் நிர்வகிக்கப் படும்.

2) நிர்வாக அதிகாரங்கள் அனைத்தும் தலைவரிடத்தில் அளிக்கப் படும்.

3) அவருடைய கடமையை அவர் நிறைவேற்றுவதற்கு உதவி செய்ய ஒரு ஆலோசனைக்குழு (Avisory council) அமைக்கப் படும்.

4) ஆலோசனைக் குழுவில் 10 உறுப்பினர்கள் இருப்பார்கள். அவர்கள், ஒவ்வொரு 5 வது ஆண்டிலும் சொசைட்டியின் உறுப்பினர்களால் தேர்வு செய்யப்படுவார்கள்.

5) ஆலோசனைக் குழுவின் முதல் 5 உறுப்பினர்கள் தலைவரால் நியமிக்கப்படுவார்கள்

6) தலைவர் விரும்பும் போது ஆலோசனைக்குழு கூடும்.

7) கூட்டத்திற்கான நிகழ்ச்சி நிரல் தலைவரால் தயாரிக்கப்படும்.

8) நிகழ்ச்சி நிரலுக்கு அப்பாற்படாத தலைவர் அனுமதித்தால் எந்தவொரு உறுப்பினரும் எழுப்பி கேட்கலாம்.

9) ஆலோசனைக் குழுவின் தீர்மானங்கள் பரிந்துரையாகவே இருக்கும்.

## XII. பொதுக்குழு

1) சொசைட்டியின் பொதுக்குழு ஒன்று இருக்கும். ஒவ்வொரு உறுப்பினரும் பொதுக் குழு உறுப்பினராவதற்கு உரிமை அளிக்கப்பட்டவர்கள். ஒவ்வொரு இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கூடும். அதில் குழுவினால் ஆற்றப்பட்ட வேலைகள் குறித்து அறிக்கையொன்றை தலைவர் தாக்கல் செய்வார். குழுவின் பேரவைக் கூட்டத்தில் சொசைட்டியின் உறுப்பின ராக உள்ள ஒவ்வொரு வரும் தற்காலிக உறுப்பினர் அல்ல-கலந்துகொள்ள உரிமை உள்ளவர்கள் ஆவர்.

2) தலைவர் பணக் கையாடல் செய்த குற்றவாளி என்றோ நிர்வாகச் சீர்கேடு செய்ததாகவோ நீதிமன்றத்தால் கண்டுபிடிக்கப்பட்ட பின்னணியில் அவரை தலைவர் பதவியிலிருந்து நீக்க பொதுக் குழுவிற்கு அதிகாரம் உண்டு.

## XIII. அமைப்பு விதிகளில் திருத்தங்கள்

1. கீழ்க்காணும் அம்சங்கள் நிறைவேற்றப்பட்டால் அரசியல் அமைப்பு விதிகள் திருத்தப்படும்.
   a) திருத்தத்திற்கான புதிய திட்டம், அலோசனைக்குழ உறுப் பினர்களில் மூன்றில் 2 பங்கு பெரும்பான்மையினரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது என்பது.
   b) குறிக்கோளிடப்பட்ட திருத்தத்தின் வாசகம், கூட்டத்தை கூட்டுவதற்கான முன்னறிவிப்புடன் உறுப்பினர்களுக்கு அனுப்பப்பட்டது என்பது.
   c) முன்னறிவிப்பு காலம் 3 மாதங்களுக்கு குறையாதது என்பது.
2. கூட்டத்திற்கு வருகை அளிக்கும் உறுப்பினர்களில் மூன்றில் 2 பங்கினர் திருத்தத்திற்கு ஆதரவாக வாக்களிக்காவிட்டால் அத்திருத்திம் ஏற்றுக்கொள்ளப்பட்டதாக கருதப்பட மாட்டாது.

சொசைட்டியின் ஒழுங்கு வசதிகள், ஒழுங்குமுறைகளின் உண்மையான நகல் என்று சான்று அளிக்கப்படுகிறது.

கையெழுத்துக்கள்

(ஒப்பம்) 1. பீ.ஆர்.அம்பேத்கர்
(ஒப்பம்) 2. மா தவ் ஜி.மால்வாங்கர்
(ஒப்பம்) 3. சி.எஸ்.பிள்ளை

● ● ●

# இணைப்பு -1

# அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர்கள் சம்மேளனம்

# அமைப்பு விதிகள்

## பெயர்

விதி I

a) அமைப்பின் பெயர் ''அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர்கள் சம்மேளனம் (ALL INDIA SCHEDULED CASTES STUDENT'S FEDERATION) *(ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்)*

b) அமைப்பின் சுருக்கப்பட்ட பெயர் ஏ.ஐ.எஸ்.சி.எப் என்று இருக்கும்.

c) அனைத்து கிளை அமைப்புகளும் அவ்வாறாகவும் தாழ்த்தப் பட்ட ஜாதி மாணவர்கள் சம்மேளனம் என்பதாகவும் அழைக்ககப்பட வேண்டும்.

விதி II

ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்-பின் தலைமை இருப்பிடம் பொதுச் செய லாளரையொட்டி இருக்கும்.

## நோக்கங்களும் இலக்குகளும்

விதி III

ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப் - பின் நடவடிக்கைகள் கீழ்க்காணும் நோக்கங்கள் மற்றும் இலக்குகளுக்கான நோக்குடன் வழிகாட்டப் படும்.

a) இந்தியத் தாழ்த்தப்பட்ட மாணவர்களை ஒருங்கிணைந்த அமைப்பாக அணிதிரட்டுவது.

b) அவர்களிடையே கூட்டான வாழ்க்கையை வளர்ப்பது, அவர்களிடையே ஜாதி உணர்வை அதிகப்படுத்தும் நட வடிக்கைகள் செயல்கள் அனைத்தையும் கைவிடச் செய்வது.

c) இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர்களின் நலன்களை பாதுகாப்பது.

d) ஒழுக்கம் மற்றும் அறிவு மேம்பாடு சம்பந்தமான கல்வியை அவர்களிடையே ஊக்கப்படுத்தியும் தற்காலத்திய கலாச்சார மற்றும் அரசியல் இயக்கத்துடன் தொடர்பு ஏற்படுத்தி யும் அவர்களுக்கிடையே கலாச்சார சூழ்நிலைமை ஒன்றை உருவாக்குவது.

e) தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர்களின் ஆரோக்கியத்தை யும் உடல் கட்டுக்கோப்பையும் முன்னேற்றும் நோக்குடன் உடல் சார்ந்த அறிவு வளர்ச்சியை ஊக்கப்படுத்துவது.

f) தாழ்த்தப்பட்ட ஜாதி மக்களின் நலன்களை பாதுகாப்பது.

g) தாழ்த்தப்பட்ட ஜாதி மக்களின் நலனுக்காகவும் நாட்டின் நலனுக்காகவும் பட்டியலிடப்பட்ட ஜாதி மாணவர்களின் நடவடிக்கைகளை ஒருங்கிணைப்பது.

h) பட்டியலிடப்பட்ட ஜாதியினரின் இயக்கத்திற்கு ஆதரவாக பொது மக்களின் கருத்தை உருவாக்குவது.

i) இத்தகைய விவகாரங்களை தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் களின் வாழ்க்கையின் சமூக அந்தஸ்துக்கு உரியதாக உள்ள இத்தகைய அனைத்து விவகாரங்களையும் காரியக் குழு வின் அனுமதியைப் பொறுத்து மேற்கொள்ள வேண்டும்.

## அமைப்பின் ஒருங்கிணைப்பு

விதி IV

ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்-பில் உள்ளடங்கிய பிரிவுகள் வருமாறு.

a) ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்பின் ஆண்டு மற்றும் சிறப்பு மாநாடு

b) ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்பின் குழு

c) ஏ.ஐ.எஸ்.சி.எப் பின் காரியக் குழு

d) ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்- உடன் இணைக்கப்பட்ட மாகாண தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனம்.

e) ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப் - உடன் இணைந்த இந்திய இயல்பு கொண்ட மாநில தாழ்த்தப்பட்ட மாணவர் சம்மேளனம்.

f) நிலைமைக்கு ஏற்ப, மாகாண தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனத்துடனும் இந்திய இயல்பு கொண்ட மாநில தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனத்துடனும் இணைக்கப்பட்ட கிளை அமைப்புகள்.

## உறுப்பினர் நிலை

விதி V

a) ஒவ்வொரு தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவரும் ஏ.ஐ.எஸ்.சி. எப்.பின் உறுப்பினராக அங்கீகரீக்கப்படுவார்.

   i) ஒரு மாணவரோ அல்லது மாணவியோ நிர்ணயிக்கப் பட்ட உறுப்பினர் கட்டணத்தை கொடுத்து ஏ.ஐ.எஸ். சி.எப்புடன் இணைக்கப்பட்ட கிளை அமைப்புகளின் ஏதேனும் ஒன்றின் ஒரு உறுப்பினராகிறார்.

   ii) 12 வயது முடிந்த மாணவர் அல்லது மாணவி அல்லது இடைநிலைப் பள்ளியில் படிக்கும் மாணவர் அல்லது மாணவி.

   iii) ஏ.ஐ.எஸ்.சி.எப்பின் நோக்கங்களிலும் இலக்குகளிலும் நம்பிக்கை கொண்டும் ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்பின் ஒழுங்கு விதிகளுக்கும் ஒழுங்கு முறைகளுக்கும் கட்டுப் படுவதாகவும் எழுத்து மூலம் பிரகடனம் செய்ய வேண்டும்.

b) இத்தகைய உறுப்பினர் ஒருவர் சாதாரண உறுப்பினராக கருதப்படுவார்.

விதி VI

இந்த அமைப்பு விதியின் செயல் நோக்கத்திற்காக ஒரு ''மாணவர்'' என்பது கீழ்க்கண்ட அம்சங்களை கொண்டிருக்கும்.

a) ஏதாவதொரு அங்கீகரிக்கப்பட்ட அல்லது தொடர்ந்து இருந்து வரும் கல்வி நிறுவனம் ஏதாவதொன்றின் தாழ்த்தப் பட்ட ஜாதி மாணவர்.

b) பகுதிக்கூறு VI-ன் துணைப் பிரிவு "A' யின் அர்த்த்திற்குட் பட்ட மாணவராக இல்லாத யாராவது ஒருவர், ஆனால் சம்மேளனத்தின் நோக்கங்களுக்கு மிக உயரிய உதவிகளை யும் சேவைகளையும் அளிக்கும் பட்சத்தில் அவர் விதி 5-ன்

பிரிவுகள் i), ii), iii) ஆகியவற்றிற்கு ஏற்ப ஆண்டுச் சந்தா ரூ.5 மட்டும் அளிக்கும் பட்சத்தில் அவர், ஒரு உறுப்பின ராக தகுதியானவராவார்.

c) இத்தகைய ஒரு உறுப்பினர் ''இணை உறுப்பினர்'' என்று அழைக்கப்படுவார்; அவர் ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்.பின் மாமன்றம் மற்றும் காரியக் குழுவின் கூட்டத்தில் கலந்து கொள்ள உரிமையளிக்கப்படுவார். ஆனால் அவருக்கு வாக் களிக்கும் உரிமை இல்லை; மேலும் பொருளாளர் பதவியைத் தவிர வேறு எந்தப் பதவிக்கு அனுமதிக்கப்பட மாட்டார்.

விதி VII

ஏ.ஐ.எஸ்.சு.எஸ்.எப்.-பின் ஏதாவதொரு நிர்வாகியாகவோ அல்லது உறுப்பினராகவோ இருப்பவர் சம்மேளனத்தின் ஏதாவதொரு அதிகாரபூர்வ மாநாட்டின் போது மாணவராகவோ அல்லது மாணவியாகவோ இருப்பது முடிந்துவிட்டால் அந்த மாநாடு முடியும் வரையில் அவர் அப்படியே தொடர்வதற்கு உரிமை படைத்தவராவார்.

**உறுப்பினர் கட்டணம்**

விதி VII

a) ஒரு சாதாரண உறுப்பினருக்கான உறுப்பினர் கட்டணம், மாகாண, அல்லது இந்தியாவைச் சேர்ந்த மாநில தாழ்த்தப் பட்ட ஜாதி மாணவர் சம்மேளனத்தின் ஆரம்ப நிலை கிளையில் கொடுக்கப்படும்; அந்தக் கிளையில் உறுப்பின ராக இருக்கும் ஒரு மாணவர் அல்லது மாணவிக்கான சந்தா ஆண்டுக்கு 4 அணாக்கள் மட்டுமே.

b) ஒவ்வொரு குழு உறுப்பினரும் ஆண்டுக்கு ரூ.2 வீதம் சந்தா செலுத்த வேண்டும்.

c) குழு உறுப்பினர் கட்டணம் தவிர மாணவரானாலும் சரி, மாணவியானாலும் சரி, ஒவ்வொரு காயக்குழு உறுப்பினரும் ஆண்டுக்கு ரூ. 3 வீதம் மட்டும் கொடுக்க வேண்டும்.

d) ஒவ்வொரு இணை உறுப்பினரும் ஆண்டுச் சந்தாவாக ரூ.5 மட்டும் கொடுக்க வேண்டும்.

e) ஒவ்வொரு பிரதிநிதியும் ரூ.3 கொடுக்க வேண்டும்.

f) வரவேற்றுபுக்குழு உறுப்பினர் ஒவ்வொருவரும் கட்டணமாக ரூ. 3 மட்டும் கொடுக்க வேண்டும்.

g) மாணவரானாலும் மாணவியானாலும் ஒவ்வொரு உறுப்பினரும் தன்னுடைய வாக்குரிமையை செயல்படுத்துவதற்கு முன்பு உரிய உறுப்பினர் சந்தாவை கொடுக்க வேண்டும்.

விதி IX

a) ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப். உடன் மாகாண மற்றும் இந்திய இயல்பான மாநிலங்கள் (Indian Native States) தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனம் மட்டுமே நேரடியாக இணைக்கப்பட்டதாகும்.

b) எது சம்மேளனத்தின் ஆரம்பக் கிளையை அமைக்கும் என்பதையும் எது மாகாண மற்றும் இந்தியாவைச் சேர்ந்த மாநிலங்கள் தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனத்தின் கிளை அமைப்புடன் இணைப்பு கொடுக்க எதற்கு அதிகாரம் அளிக்கப்படும் என்பதை மாகாண அல்லது இந்தியாவைச் சேர்ந்த மாநில தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனம்தான் முடிவு செய்யும்.

### நிர்வாகம்

விதி X

a) ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப் - பின் ஒவ்வொரு கிளைச் சம்மேளனமும், உறுப்பினர் பலத்தின்படி 100 பேருக்கு ஒருவர் என்றவிகிதத்தில் சம்மேளனத்தின் கவுன்சிலுக்கு தனது பிரதிநிதியை அனுப்பும், ஆனால் பிரதிநிதிகளின் எண்ணிக்கை எந்தவொரு கிளைச் சம்மேளனத்தின் விஷயத்திலும் 15-க்கு மேல் இருக்கக்கூடாது.

விதி XII

a) கவுன்சில் உறுப்பினர்கள் ஒரு ஆண்டுக்கு இந்தப் பொறுப்பில் இருப்பார்கள். ஆனால் அவர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட தகுதியானவர்கள் ஆவர்.

b) ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்-பின் ஆண்டறிக்கையையும் கணக்குகளையும் கவுன்சில் முன்பு காரியக்குழு தாக்கல் செய்யும்; அதுதான் சம்மேளனத்தின் கொள்கைகள் மற்றும் நடவடிக்கைகளுக்கு பொறுப்பாகும்.

விதி XIII

a) கவுன்சில், குறைந்தபட்சம் ஆண்டுக்கு இருமுறை கூடும்; முன்னுரிமையாக முதல் கூட்டம் கவுன்சில் அமைக்கப் பட்டவுடன் நடைபெறும்; கடைசிக் கூட்டம் ஏ.ஐ.எஸ். சி.எப்- பின் மாநாட்டின் இறுதியில் வருடாந்திர மற்றும் சிறப்பு மாநாட்டுக்கு கொஞ்சம் முன்பு நடைபெறும்.

b) கவுன்சிலின் முதல் கூட்டத்தை தவிர, அடுத்தடுத்து காட்டப்படும் கூட்டங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒருமாத முன்னறிவிப்பு அவசியமாகும்.

c) கவுன்சிலின் கூட்டத்தைக் கூட்டும் பொறுப்பு பொதுச் செயலாளருடையதாகும். அவர் அவ்வாறு செய்யத் தவறும் பட்சத்தில் அந்தப் பொறுப்பு இணைச் செயலாளர்களைச் சாரும்.

விதி XIV

a) காரியக்குழு 15 முதல் 17 உறுப்பினர்களைக் கொண் டிருக்கும். இவற்றில் 3 இடங்கள் பெண்களுக்கும் 3 இடங்கள் பூர்வீக மாநிலங்களுக்கும் ஒதுக்கப்படும். சம்மேளனத்தின் தலைவரும் பொதுச் செயலாளரும் அலுவல் சார்பு உறுப்பினர்களாவர்.

b) காரியக்குழு உறுப்பினர்கள் 5 பேர், கூட்டம் கூடுவதற்கான குறைந்தபட்சத் தேவையாகும்.

c) காரியக்குழு உறுப்பினர்கள் கவுன்சிலால் அதன் முதல் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

d) சாதாரண கூட்டத்திற்கு 20 நாட்கள் முன்னறிவிப்பும் அவசரக் கூட்டத்திற்கு 7 நாட்கள் முன்னறிவிப்பும் போது மானது என்று கருதப்படுகிறது.

விதி XV

a) இந்த அமைப்புக்கு ஒரு தலைவர் (President) 2 துணைத் தலைவர்கள், ஒரு பொதுச் செயலாளர், 2 இணைச் செய லாளர்கள் (இவர்களில் ஒருவர் பெண்), ஒரு பொருளாளர் ஆகியோர் அலுவலக நிர்வாகிகளாக இருப்பார்கள். மேலே கூறப்பட்ட காரியக்குழு உறுப்பினர்கள் தவிர மேலும் 8 உறுப்பினர்கள் இருப்பார்கள்.

விதி XVI

தேவைப்படும்பட்சத்தில், காரியக்குழு, ஏதேனும் ஒரு உறுப்பினரை அல்லது இரண்டுக்கு மிகாத உறுப்பினர்களை தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமை அளிக்கப்பட்டதாகும்.

விதி XVII

ஒரு துணைக்குழு அவசியம் என்ற நிலைமை ஏற்பட்டால் உறுப்பினர்களல்லாதவர்களை அக்குழுவின் உறுப்பினர்களாக நியமிக்க காரியக் குழுவுக்கு உரிமை அளிக்கப்படும்.

விதி XVIII

அனைத்து கிளை அமைப்புகளும் தங்களுடைய நடவடிக்கைகள் பற்றி காலாண்டு அறிக்கைகளை தங்களுக்கு அடுத்த மேலான பட்டியலிடப்பட்ட ஜாதி மாணவர் சம்மேனத்திடம் தாக்கல் செய்யும்.

விதி XIX

மாநாட்டின்போது காரியக் குழுவில் உள்ள காலி இடங்கள் அக்குழுவால் நிரப்பப்படும்.

விதி XX

அமைப்பின் தெளிவான நிர்வாகத்திற்கு காரியக் குழுவே பொறுப்பாகும்.

## இணைப்பு

விதி XXI

a) மாகாண மற்றும் இந்திய இயல்பான மாநில தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனங்கள் ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்பால் 'இணைப்பு' (Affiliation) கொடுக்கப்படும்.

b) அனைத்து ஆரம்பக் கிளைகள் மற்றும் மற்ற உயர் அமைப்புகளுக்கு அந்தந்த மாகாண மற்றும் இந்திய இயல்பான தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனத்தின் அமைப்பு விதிகளுக்கு ஏற்ப இணைப்பு அளிக்கப்படும்.

c) இணைப்புத் துண்டிப்பு பற்றிய விஷயத்தில் கவுன்சிலுக்கு மாமன்றத்திற்கு தெரிவிக்காமலும் அதனுடைய தெளிவான அனுமதி இல்லாமலும் காரியக்குழுவால் எதுவும் தீர்மானிக்கப்பட முடியாது.

## இணைப்புக் கட்டணம்

விதி XXII

மாகாண மற்றும் இந்திய இயல்பான மாநில பட்டியலிடப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனங்கள், ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்பிற்கு ஆண்டுக்கு ரூ.15 வீதம் மட்டும் இணைப்புக் கட்டணமாக கொடுக்க உள்ளனர்; அகில இந்திய குழுவுக்கு பங்குக் கட்டண மாக ரூ. 25 வீதம் கொடுத்தாக வேண்டும்.

## மாநாடு

விதி XXIII

a) ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப் ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் மாதம் கடைசி வாரத்தில் ஒரு மாநாட்டை நடத்தும்.

b) இந்த மாநாட்டிலும் ஆண்டுப் பேரவை அமர்விலும் பிரதி நிதிகள் வாக்களித்து கவுன்சில் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக் கப்படுவார்கள்.

c) மாநாடு நடைபெறவிருக்கும் பகுதியைச் சேர்ந்த மாணவர் களால் வரவேற்புக்குழு அமைக்கப்படும்.

d) மாநாடு நடைபெறுவதற்கான இடம் காரியக் குழுவால் நிர்ணயிக்கப்படும்.

விதி XXIV

ஒவ்வொரு மாகாண மற்றும் இந்திய இயல்பான மாநில தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனமும் மாநாட்டிற்கு பிரதிநிதிகளை அனுப்ப உரிமை அளிக்கப்படும்.

விதி XXV

ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்பின் பணம் அனைத்தும் ஏ.ஐ.எஸ்.சி. எஸ்.எப்-பின் கணக்கில் பொருளாளர் மூலம் டெபாசிட் செய்யப்படும்.

விதி XXVI

சாதாரணமாக, செலவுகளுக்கு முன்னதாக காரியக் குழுவால் அனுமதி அளிக்கப்பட்டிருக்க வேண்டும்; ஆனால் அவசர விஷ யங்களில் பொதுச் செயலாளரோ அவர் இல்லாவிட்டால்

இணைச் செயலாளரோ அல்லது இணைச்செயலாளர்களோ முன் அனுமதி இல்லாமல் ரூ.30 வரை ஏதாவதொரு தொகை மட்டும் செலவழிக்கலாம்; அந்தச் செலவுக்கு அதன் பிறகு அவர் அல்லது அவர்கள் காரியக் குழுவின் அனுமதியை பெற்றுக்கொள்ள வேண்டும்.

விதி XXVII

பொதுச் செயலாளர் அல்லது அவர் இல்லாத நிலைமையில் இணைச் செயலாளர்கள் பொருளாளரிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம்.

## ஒழுங்குக் கட்டுப்பாடு (Discipline)

விதி XXVIII

a) ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்-பின் உறுப்பினர் எவரும், அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தைத் தவிர வேறு எந்தவொரு அரசியல் அமைப்பில் எந்த வகை உறுப்பினராகவும் இருக்க அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

b) காரியக்குழு, தன்னுடைய அதிகார எல்லைக்குட்பட்டு கீழ்க்கண்ட காரணங்களுக்காக எந்தவொரு உறுப்பினருக்கு எதிராகவும் ஒழுங்கு நடவடிக்கை எடுக்க அதிகாரம் கொண்டுள்ளது.

   i) நிர்ணயிக்கப்பட்ட சந்தாவைத் தரத் தவறுதல்.

   ii) சம்மேளனத்திற்கும் கவுன்சில் அல்லது காரியக் குழு வின் நடவடிக்கைகளுக்கு துரோகம் இழைத்தல்

   iii) ஏ.ஐ.எஸ்.சி.எஸஅ.எப்-பின் ஒழுங்கு விதிகளையும் ஒழுங்குமுறைகளையும் வேண்டுமென்றே மீறுவது.

   iv) இந்த விதிகளால் விசேஷமாக அனுமதிக்கப்படாத வேறு எந்த பகட்டார்வங்களும் ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்-பின் ஒழுங்கு அல்லது கட்டுப்பாட்டுக்கு தொல்லை கொடுப்பதாக இருக்கும்.

## அமர்வுகள் (Sessions)

விதி XXIX

வருடாந்திர மற்றும் சிறப்பு அமர்வுகளுக்கான தலைவர், ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்-பின் கவுன்சிலால் தேர்ந்தெடுக்கப்படுவார்.

இந்த நோக்கத்திற்காக மாமன்றக் கூட்டம் ஒன்றை கூட்டுவதற்குப் பதிலாக உறுப்பினர்களிடமிருந்து எழுத்து மூலமாக தலைவரின் பெயரை காரியக்குழு பெறும்.

பகுதிக்கூறு XXX

மாகாண மற்றும் இந்திய இயல்பான மாநில தாழ்த்தப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனங்கள் தங்களுடைய சொந்த அமைப்பு விதிகளை கொண்டிருக்கும். ஆனால் இந்த அமைப்பு விதிகள், ஏ.ஐ.எஸ்.சி.எஸ்.எப்-பின் அமைப்பு விதிகளில் அடங்கியுள்ள ஒழுங்கு விதிகளுக்கும் ஒழுங்கு முறைகளுக்கும் எதிரான எது ஒன்றையும் கொண்டிருக்கக்கூடாது.

## வரையறுக்கப்படாத அதிகாரங்கள்

பகுதிக்கூறு XXXI

அமைப்பு விதிகளில் வரையறுக்கப்படாத அதிகாரங்கள் காரியக் குழுவிடம் ஒப்படைக்கப்படுகின்றன; அவை அமைப்பு விதிகளில் வழிகாட்டப்படாத விவகாரங்கள் சம்பந்தமாக காரியக் குழுவின் கவனமான முடிவுகளில் பயன்படுத்தப்படும்.

பகுதிக்கூறு XXXII

அமைப்பு விதிகள், கவுன்சில் உறுப்பினர்களில் மூன்றில் 2 பகுதிப் பெரும்பான்மையினாலும் அல்லது வெளிப்படையான அமர்வுகளில் தெளிவான பெரும்பான்மையினாலும் மட்டும் மாற்றப்படக் கூடியதாகும்.[1]

1. 1946, டிசம்பர் 25,26,27 ஆகிய தேதிகளில் நாக்பூரில் நடைபெற்ற 2-வது அமர்வின் அனைத்து இந்திய பட்டியலிடப்பட்ட ஜாதி மாணவர் சம்மேளனத்தின் அறிக்கை வி. டி.சாஹேறந்தேயால் ஜூன் 2, 1947-ல் வெளியிடப்பட்டது.

# இணைப்பு - II

## ''இந்து மதத்திலும் புத்த மதத்திலும் பெண்களின் நிலைமை''

*(''ஈவ்ஸ் வீக்லி'' என்ற வாரப் பத்திரிக்கையில் ஜனவரி 21, 1950-ல் ''நமது புதிய குடியரசு'' என்ற தலைப்பில் வெளியான கட்டுரை ஒன்றுக்கு பதில்)*

***லாமா கோவிந்தா***

*''இந்தியாவில் பெண்கள், ஆட்சிக் கலைக்கு பயன்படுத்தப் பட்டிருக்கிறார்கள். இதனை ஐரோப்பாவில் அவர்கள் செய்வதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே இந்தியாவில் செய்திருக்கிறார்கள். இத்தகைய உதாரணங்கள் ராமாயணம் மற்றும் மகாபாரதம் முழுவதிலும் நிறைந்துள்ளன''. இந்த வாசகம் ஜனவரி 21, 1950 ஆம் தேதிய ''ஈவ்ஸ் வீக்லி''யில் பிரசுரிக்கப்பட்டுள்ள கட்டுரை ஒன்றில் பிரதானமாக காட்டப்பட்டுள்ளது.*

*அந்தக் கட்டுரையை எழுதிய கற்றறிந்த கட்டுரையாளர், உண்மை யிலேயே ஒரு விஷயத்தை குறிப்பிடுவாரா? அந்த விஷயம் என்ன வென்றால், மகாபாரதத்தின் முதல் முக்கிய பெண் பாத்திரமான திரவுபதி அவருடைய கணவனால் அல்லது சரியாக கூறுமிடத்து கணவர்களால் (ஏனென்றால் அவளுக்கு 5 கணவர்கள்) சூதாட்டப் பொருளாக வைத்து விளையாடப்பட்டாள் என்பதுவும் ராமா யணத்தில் சீதை தன்னைக் கடத்திய ராவணனின் ஆசை நாட்டங் களையெல்லாம் நிராகரித்தும் அவளுக்கு அவளுடைய கற்பு மீதான அவநம்பிக்கையும் சந்தேகமும் பரிசாக அளிக்கப்பட்டு நெருப்பில் இறங்கும் சோதனைக்கு உள்ளாக்கப்பட்டு காட்டுக்கு விரட்டப் பட்டாள் என்பதுவும்தான்.*

*அந்த நாட்களில் பெண்களின் நிலைமை மேலே குறிப்பிடப்பட்ட கட்டுரையை எழுதியவர் எதை நம்மை நம்பச் செய்ய விரும்புகிறாரோ அப்படி இருந்திருக்குமானால் பிறகு நமக்கு ஒரு ஆச்சரியம் ஏற்பட் டிருக்கும். அது என்னவென்றால், திரவுபதிக்கு அவருடைய 5 கணவன்களையும் பிணையப் பொருளாக வைத்து சூதாட்டம் ஆட ஏன் ஒரு சந்தர்ப்பம் கொடுக்கவில்லை என்பதுவும் சீதைக்கு*

அவளை அவதூறாகப் பேசியவர்களையும் சந்தேகப்பட்டவர்களை யும் ஏன் வேள்வி நெருப்புக்குள்ளும் காட்டுக்குள்ளும் அனுப்ப ஒரு சந்தர்ப்பம் கொடுக்கவில்லை என்பதுவும்தான்.

அந்தக் காலத்தில் இந்தியப் பெண்கள், ஆட்சிக் கலையில் (Statescraft) பயன்படுத்தப்பட்டிருக்கிறார்கள் என்று இது தொடர்பாக சொல்வதுதான் நிச்சயமாக சரியானதாக இருக்கும்.

ஐரோப்பிய பெண்களைப் பொறுத்தவரையில் இது சம்பந்தமாக அவர்கள் தங்களுடைய இந்திய சகோதரிகளைவிட பின்தங்கி இருந்தார்களா என்றெல்லாம் நான் சொல்ல முடியாது; ஆனால் நான் ஒரு விஷயத்தில் முற்றிலும் உறுதியாக இருக்கிறேன்; அது என்னவென்றால் அவர்களில் சிலருக்கு ஆட்சி விவகாரத்தில் தலையிட சந்தர்ப்பம் கிடைத்தபோது அதனை பயன்படுத்திக் கொள்வதற்கு அவர்கள் மிக வேகமாக செயல்பட்டிருக்கின்றனர்.

ராணி எலிசபெத் மட்டும் திரவுபதியின் இடத்தில் இருந்திருந் தால், அவர் தன்னுடைய துரதிருஷ்டவசமான காதலன் லார்டு எஸ்ஸெக்ஸிற்கு மரண தண்டனை கொடுத்து தண்டித்ததைப் போல அவர் தன்னுடைய 5 கணவன்களையும் மரண தண்டனை கொடுத்து தண்டித்திருப்பாள். ஆனால் என்னுடைய கருத்தில், ஆட்சிக் கலையில் இல்லாத திரவுபதி, அரசியல் அதிகாரமும் சூழ்ச்சித் திறனும் கொண்ட ராணி பெஸ்ஸியைவிட மிகவும் நேசிக்கத் தக்கவளாக இருந்தாள்.

ஐரோப்பிய வரலாற்றில் மற்றொரு முக்கியமான பெண் இருக் கிறாள்; அவளை மேன்மையாக குறிப்பிடலாம்; அவள். ஆஸ்திரியா நாட்டு சக்கரவர்த்தினி மரியதெரஸா; அவள், பல குழந்தைகளின் அன்புக்குரிய தாயாகவும் ஒரு திறமையான ஆட்சியாளராகவும் இருந்தாள். ஐரோப்பாவின் ஆரம்பகால வரலாற்றினை ஆராய விரும்பினால் பைஸான்டியம்மின் சக்கரவர்த்தினி தியோடோரா, மிகவும் கருத்தை கவரும் ஒரு உதாரணப் பெண்ணாக உள்ளாள். மிகமிகக் கீழ்நிலைமையில் இருந்த அவள் மிக உயர்ந்த அதிகாரத் திற்கு உயர்ந்தவள்; ஒரு விலைமாதாக வாழ்க்கையைத் தொடங்கிய அவள். ஒரு சக்கரவர்த்தினியாக வாழ்க்கையை முடித்தவள்.

இதுவெல்லாம், இந்தியப் பெண்மையின் உயரிய லட்சியமாக இருக்கும் என்று நான் நினைக்கவில்லை; அதுபோலத்தான் ஒரு

பெண்ணின் கண்ணியத்தை அவளது ஆட்சிக் கலை ஒரு அங்குலம் உயர்த்துகிறது என்றும் நான் நினைக்கவில்லை.

ஐரோப்பாவில் நிகழ்வதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே இந்தியாவில் ஆட்சிக்கலையில் பெண்கள் பயன்படுத்தப்பட்டார்கள் என்பது உண்மையாக இருந்தாலும்கூட இதற்கு வரலாற்று ரீதியாக ஜான்ஸி ராணி, ராணி சாந்த் பீபி ஆகியோருக்கு முந்தைய காலத்திற்கான தெளிவான எடுத்துக்காட்டுகளை நம்முடைய கட்டுரையாளர் தெளிவாக காண முடியாதவராக இருக்கிறார். ஆனால், திறனாய்வு செய்யப்படும் அந்தக் கட்டுரையில் மிகவும் வியப்பளிக்கும் கூற்று ஒன்று என்னவென்றால் ''ஐயகோ' புத்தமதக் கோட்பாடுதான் முதலில் பெண்களை இருட்டுக்குள் தள்ளியதாகத் தோன்றுகிறது'' என்பதுதான்.

அந்தக் ''கோட்பாடு'' என்ன என்பது கற்றறிந்த கட்டுரையாளரால் வெளிப்படுத்தப்படவில்லை; நான் புத்தமத புனித வாசகங்களையும் அவற்றின் போதனைகளையும் அலசி ஆராய்ந்த போதிலும், அவற்றில் பெண்களைப் பற்றி விசேஷமான கோட்பாடு எதையும் காணவில்லை. ஆனால் பொதுவாக மனித இனத்தைப் பற்றி மட்டும் காணமுடிந்தது. புத்தமதத்தின் நான்கு புனித உண்மைகள், சூழல் சார்ந்த தொடக்கத்தின் வழிமுறை, விடுதலைக்கான எட்டுமடிப்பு பாதை ஆகியவை ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையே எந்த வேறுபாட்டையும் ஏற்படுத்தவில்லை.

புத்தமத வரலாறு முழுவதும், ஒரு சிறப்பு அம்சம் உள்ளது; அது என்னவென்றால் பெரும்பாலான புத்தமதமல்லாத நாடுகளைக் காட்டிலும் புத்தமத சமுதாயத்தில் பெண்கள் மிக அதிக அளவில் தங்களுக்கு சாதகமான ஒரு நிலைமையில் இருந்தார்கள் என்பதுதான். ஆண்-பெண் இடையே அடிப்படையான சமத்துவம் என்பது புத்தமதத்தினுடைய வழிகாட்டும் நட்சத்திரமாக (Lode Star) அதனுடைய தொடக்க காலத்திலிருந்து இருந்து வந்திருக்கிறது.

புத்தமத நாடுகளில் - அது இலங்கையானாலும் சரி, பர்மாவானாலும் சரி, இந்தோ-சைனாவானாலும் சரி திபெத் என்றாலும் சரி- பெண்களின் அந்தஸ்து வியப்பளிக்கத் தக்க வகையில் உயர்வாக இருந்தது. ஏனென்றால், புத்தமதத்தைச் சேர்ந்த ஒரு மனைவி, தனது கணவனை ஒரு கடவுளாகப் பார்ப்பதில்லை; அவர், தன்னுடைய கணவன் சாப்பிட்ட பின்பே சாப்பிட வேண்டும் என்று எதிர்பார்க்கப்

படுவதில்லை அல்லது கணவனுடைய மரணத்திற்குப் பிறகு கடுமை யான மனச்சோர்வுக்கும் வறுமைக்கும் மாற்றாக தீக்குளித்துச் சாக வேண்டும் என்றும் மனைவி எதிர்பார்க்கப்படுவதில்லை. அதற்கு மாறாக, அவர் தன்னுடைய கணவனுடன் வாழமுயாது என்று உணர்ந் தால் கணவனைவிட்டு விலகிக்கொள்ள ஒரு பெண் சுதந்திரம் கொண்டுள்ளார்; ஒரு பெண், அவருடைய கணவனுடைய மரணத் திற்குப் பிறகு அவர் சமூகத்திலிருந்து ஒதுக்கி வைக்கப்பட்டவராக மாட்டார்; அவர் விரும்பினால் மறு மணம் செய்து கொள்ள முடியும். பெண்கள் தங்களுடைய சொந்தக் காரியங்களை மேற்கொள்ளலாம்; உண்மையில் பர்மாவிலும் அதேபோல திபெத்திலும் (இந்த இரு நாடுகளைப் பற்றி தனது சொந்த அனுபவத்தில் கூற முடியும்) பெண்கள் சமூக நீதியிலும் தொழில் விவகாரங்களிலும் முற்றிலும் சமமாக உள்ளனர்; அவர்கள் சிக்கலான காரியங்களில் ஆண்களைக் காட்டிலும் விடாமுயற்சியையும் திறனையும் காட்டுகிறார்கள்; ஆண்களும் அந்தக் காரியங்களை தங்களுடைய பெண்களிடம் மகிழ்ச்சியுடன் விட்டுவிடுகிறார்கள்.

இங்கு திறனாய்வு செய்யப்படும் கட்டுரையை எழுதியவர் உறுதிபடக் கூறுவது போல ''பெண்களுக்கு எதிராக புத்த மதம் வெறுப்பு கொண்டிருக்கிறது; அவர்களிடம் எச்சரிக்கையாக இருக்கு மாறு ஆண்களை எச்சரித்துக் கொண்டிருக்கிறது'' என்றால் மேலே கூறப்பட்டது போன்றதொரு நிலைமை பெண்களுக்கு புத்தமத சமுதாயத்தில் இருந்திருக்க சாத்தியமே இல்லை.

கடந்த காலத்தின் மிகப் பெரிய போதகர்களில் புத்தர், மிகவும் பரந்த மனம் கொண்டவர்; மிகவும் தராளமனப்பான்மையும் சகிப்புத் தன்மையும் கொண்டவர்; இதன் காரணமாகத்தான் அவர், இந்தியாவின் மகன்களில் மற்றவர்களைப் போலல்லாமல் இந்தியா வின் கட்டுப்பாடுகளுக்கு அப்பால் சென்றும் பாராட்டப்பட்ட இப்போதும் பராட்டப்படுகின்ற புத்தரை குற்றஞ்சாட்டுவது - இத்தகைய போதகருக்கு கேடுவிளைவிக்கும் வகையில் அவர் மீது குற்றஞ்சாட்டுவது தவறான முடிவின் அசாதாரணமான வியப்பூட்டும் செயல்தான். இந்தியாவின் பெரும் சாதுக்களில் அனைவரிலும் உலக அளவில் ஆகர்ஷிக்கும் சக்தி கொண்டவர் புத்தர் மட்டும் தான் என்றால் இதற்குக் காரணம் முற்றிலும் எந்தவொரு தீங்கான எண்ணமும் அவரிடம் இல்லாததும் (இல்லையென்றால் எப்படி அவர் ஞான ஒளிபெற்றவர் என்று பாராட்டப்பட்டு அங்கீகரிக்கப் பட்டிருக்க முடியும்?) அவரது பார்வையின் பரந்த நோக்கும் ஜாதி,

நிறம், பால் ஆகியவற்றில் எதையும் பொருட்படுத்தாது மனித இயல்பு பற்றிய அவரது ஆயுதமான புரிதலும்தான்.

நமது கற்றறிந்த கட்டுரையாளர் ஒப்புக்கொள்வதுபோல் மனுதர்மத்தின் கீழ் மிகமோசமானதொரு நிலைமையில் இருந்த பெண்களின் விடுதலைக்கு உண்மையில் அடித்தளம் போட்டவரே புத்தர்தான். மனுதர்மத்தில் மோசமான நிலைமையை ஒப்புக் கொண்ட கட்டுரையாளர், பெண்களை இருளுக்குள் முதலில் தள்ளியவர்கள் புத்த மதத்தினர்தான் என்று கூறியதன் மூலம் தனது முந்தைய கூற்றை முரண்பட்டுக் கொண்டிருக்கிறார். மனிதனைப் போலவே சன்னியாசி வாழ்க்கையை அடைவதற்கு பெண்களுக்கும் பெரும் வாய்ப்பு உள்ளது என்று எந்தத் தவறும் இல்லாத வார்த்தைகளில் பிரகடனம் செய்தவரும் புத்தர்தான்.

ஆரம்பகால புத்த மதத்தின் இந்த அணுகுமுறை ஒரு உண்மைச் சம்பவத்தால் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. ஒரு சமயம் சிற்றரசர்களிடமிருந்து வந்த ஒரு அழைப்பை ஏற்க புத்தர் மறுத்துவிட்டார். ஏனென்றால் அதே நாளைக்கு ஒரு விலை மாது அளித்திருந்த அழைப்பை அவர் ஏற்கெனவே ஏற்றுக் கொண்டு விட்டார். இதனால், அம்ரா பாலி போன்ற கேவலமான பெண், இப்படியெல்லாம் புத்தரால் கவுரவிக்கப்பட வேண்டுமா என்று இளவரசர்கள் அதிர்ச்சியடைந்தனர்; அவர்கள் அவரது மனதை மாற்ற முயன்றனர். ஆனால் புத்தர் தன்னுடைய வார்த்தையில் உறுதியாக இருந்தார். அமராபாலி என்ற அந்தப் பெண், புத்தரால் பெரிதும் பாராட்டப்பெற்ற பெண்களிலும் அவரது சீடர்களிலும் ஒருவரானார். 'புத்தர். பெண்களுக்கு எதிராக ஏதாவதொரு வெறுப்புக்கு இடம் கொடுப்பவராக இருந்திருந்தால் அதனை காட்டுவதற்கு அமராபாலி விஷயத்தில் ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கும். பெண்களைப் பற்றி எச்சரிக்கையாக இருக்குமாறு ஆண்களை எப்போதும் புத்தர் வலியுறுத்திக் கொண்டிருந்தார் என்பது அரைகுறை உண்மைகளில் ஒன்றாகும்; இது, புத்தருடைய வார்த்தைகளை அவற்றின் மூலப்பாடத்தை (Text) படிக்க முயற்சிக்காதவர்களுக்கு தவறான கருத்தை கொடுக்கக் கூடியதாகும்.

''இந்த விஷயத்தில் ''ஆண்களை'' புத்தர் வற்புறுத்தவில்லை, ஆனால் புத்த மடத்துறவிகளை வற்புறுத்தினார், அவர்கள், புத்த மதத்தினராலும் இந்துக்களாலும் ஒருங்கே ஒப்புக் கொள்ளப்பட்ட ஆதிகால இந்திய சன்னியாசி விதிக்கேற்ப சுயகட்டுப்பாட்டை (Chastity) கடைப்பிடிக்க சூளுரை எடுத்துக் கொண்டவர்கள். அதே

போல ஆண்கள் பற்றி எச்சரிக்கையாக இருக்குமாறு சன்னியாசினிகளும் புத்தரால் வற்புறுத்தப்பட்டனர். எனவே புத்தரின் வற்புறுத்தல் என்பது பெண்களுக்கு எதிரான வெறுப்பின் காரணமாக அல்ல, ஆண்களிடமும் பெண்களிடமும் சரியொப்பாகவே உள்ள மனித பலவீனத்தைப் பற்றிய அறிவு ஞானம் காரணமாகத்தான்.

இந்தியாவில் முதல் முறையாக மத இலக்கியத்திற்கு கணிசமான அளவிலும் சுயேச்சையாகவும் விஷயதானம் அளித்தவர்கள் புத்த மதப் பெண்கள்தான்; அவர்கள்தான் அவர்களுடைய காலத்தில் மிகச் சிறந்த நூல் படைப்பாளிகளுக்கு இணையாக அங்கீகரிக்கப்பட்டார்கள். இது, ஒரு உண்மையான விபரத்தின் மூலம் காட்டப்பட்டுள்ளது; அது என்னவெனில், புத்தமதச் சகோதரிகள் (''தெரிகாதர்'' என்ற தலைப்பில்) எழுதிய பாடல்கள், விதி முறைகளுக்கு உட்பட்ட திருமறை நூல்கள் என்று சிறப்புடன் கவுரவிக்கப்பட்டு அவை, புத்தர் மற்றும் அவருடைய மிகப்பிரதான சீடர்களின் நூல்களுக்கு பக்கத்தில் வைக்கப்பட்டுள்ளன என்பதுதான்.

இந்துமதமும் புத்தமதமும் மகத்தான பெண்களை உருவாக்கியுள்ளன, கடந்த காலத்தின் பழக்க வழக்கங்களிலும் போதனைகளிலும் தங்களுக்கு செவிமெடுத்தவர்களின் புரிதல் திறனுக்கும் தங்களுடைய காலத்தின் தேவைக்கும் ஏற்ப தங்களை தெரியப்படுத்திக் கொண்ட சாதுக்களின் பழக்க வழக்கங்களிலும் போதனைகளிலும் குறைகாண முயற்சிக்க கூடாது; அதற்குப் பதிலாக, நாம் செய்ய வேண்டிய தென்ன? இந்தியப் பெண்களிடையே தோன்றிய அந்த மகத்தான ஆன்மாக்களை முன்னுதாரணமாகக் கொள்ள நாம் கடும் முயற்சி செய்ய வேண்டும்; அவர்களுடைய புகழ் பல வலுவான சாம்ராஜியங்களிலும் நிலைத்திருந்திருக்கிறது; அவர்களுடைய சிந்தனைகள், ஆட்சிக் கலையைக் காட்டிலும் உயர்வானவை; அவர்களுடைய இதயங்கள், மன்னர்களின் சக்தியைவிட வலுவானவை. சாவித்ரியின் ஆழ்ந்த அன்பும் அறிவும் எமனையே முறியடித்தன. அவளுடைய சிறப்பியல்பு பெண்குலத்தின் மிகப் புனிதமான குணங்களின் சின்னமாக எப்போதும் நிலைத்து நிற்கும். மைத்ரேயி மற்றும் கார்ஜியின் குரல், உபநிஷத்துகளின் சாகாத் தன்மை கொண்ட வசனங்களில் எப்போதும் கேட்டுக் கொண்டிருக்கின்றன. புனிதமான புத்தமதச் சகோதரிகளின் பாடல்கள் இந்தியப் பெண்களின் மனங்களில் மீராபாய் மற்றும் பத்மினியின் அர்ப்பணிப்பான பாடல்கள் போன்று எப்போதும் வாழும்.''[1]

1. ''இந்துப் பெண்ணின் எழுச்சியும் வீழ்ச்சியும் : இதற்கு பொறுப்பு'' என்ற தலைப்பில் வெளியிடப்பட்ட பிரசுரத்திற்கான இணைப்பு.

# இணைப்பு - III

## அமைச்சரவைக்குழு

*பிப்ரவரி 19, 1946 அன்று, அதாவது கலவரம் வெடித்த மறுநாள், பெத்திக் லாரன்ஸ் பிரபு, பிரிட்டிஷ் பிரபுக்கள் சபையில் ஒரு அறிவிப்பை வெளியிட்டார்; அதில் அவர் இந்தியாவுக்கும் பிரிட்டிஷ் காமன்வெல்த்துக்கும் மட்டுமின்றி உலக அமைதிக்கும் இந்தியர்களின் நன்மதிப்புக்குரிய தலைவர்களுடனான விவாதங் களில் ஒரு வெற்றிகரமாக முடிவு ஏற்படுவது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது என்ற கண்ணோட்டத்தில் கேபினட் அமைச்சர்கள் குழு ஒன்றை இந்தியாவுக்கு பிரிட்டிஷ் அரசாங்கம் அனுப்பும்; அந்தச் சிறப்புக்குழுவில் இந்தியாவுக்கான வெளி விவகாரத்துறைச் செயலாளர் (பெத்திக் லாரன்ஸ் பிரபு) வர்த்தக வாரியத் தலைவர் (சர் ஸ்டாப்போர்டு கிரிப்ஸ்) கடற்படை நிர்வாகக் குழுவின் முதல் தலைவர் (ஒ.வி.அலெக்சாண்டர்) ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். இந்த விவகாரத்தில் (கலவர விவகாரத்தில்) கவர்னர்-ஜெனரலுடன் இணைந்து செயல்படுவதற்கே இந்தக் குழுவை பிரிட்டிஷ் அர சாங்கம் அனுப்புகிறது என்று கூறியிருந்தார். இது போன்றதொரு அறிக்கை பொதுச் சபையில் திரு.கிளெமென்ட் அட்லியால் தாக்கல் செய்யப்பட்டது.*

*இந்தியாவில் ஏற்பட்ட பிரச்னைக்கு ஒரு தீர்வு காண்பதற்கு மார்ச்.23, 1946 அன்று பெத்திக்லாரன்ஸ் தலைமையிலான அமைச் சரவைக்குழு இந்தியாவை வந்தடைந்தது. அதன் செயல்பாடு களையும் தொடர் நிகழ்ச்சிகளையும் ஒரு பின்னணியில் புரிந்து கொள்ள முடியும்; அதாவது ''அதிகாரத்தை ஒப்படைப்பதற்கான மிகச் சிறந்த சாத்தியமான ஏற்பாடுகளை செய்து முடித்த பிறகு இந்தியாவிலிருந்து வெளியேற பிரிட்டிஷ் தொழில் கட்சி அரசாங்கம் எடுத்துள்ள உறுதியான முடிவின் பின்னணியில்''[1] புரிந்து கொள்ள முடியும். அரசியல் கட்சித் தலைவர்களுடன் குழு நடத்திய பேச்சு வார்த்தைகள் இரு தரப்பும் கற்றுக்கொள்ளக் கூடியதொரு தீர்வை ஏற்படுத்தவில்லை. மே 16, 1946-ல் குழு, தன்னுடைய சொந்த*

---

1. இந்திய அரசியல் சாசனம் பற்றிய உரைகள் மற்றும் ஆவணங்கள், தொகுதி 1. சர்மாரிஸ்வைர் மற்றும் ஏ. அப்பாதுரையால் தொகுக்கப்பட்டது.

திட்டம் ஒன்றைக் கொடுத்தது. அதன்படி பாகிஸ்தான் பிரச்னையை ஆய்வு செய்தபிறகு அக்குழு ஒரு முடிவுக்கு வந்தது; அதில் அது, பெரிய அல்லது சிறியதொரு தனி சுயாதிபத்திய பாகிஸ்தான் நாடு, வகுப்புவாத பிரச்னைக்கு ஏற்கக்கூடிய ஒரு தீர்வை அளிக்காது என்று கூறியிருந்தது; நிர்வாகம், பொருளாதாரம், ராணுவம் மற்றும் தகவல் தொடர்புகள் சம்பந்தமானவை. இந்தியாவில் இருந்த தனி அரசுகள் ஆகியவற்றின் முக்கியத்துவத்தின் கண்ணோட்டத்தில் இந்த முடிவுக்கு வந்தது; மேலும் பாகிஸ்தானை உருவாக்குவதற்கு பரிந்துரைக்க முடியாது என்ற முடிவையும் அக்குழு தெரிவித்தது. ஆனால் தங்களுடைய கலாச்சாரம் அரசியல் மற்றும் சமூக வாழ்க்கை யானது இந்துக்களால் மேலாதிக்கம் செய்யப்படும் என்று ஏற்பட்ட முஸ்லீம்களின் அச்சங்கள் அலட்சியப்படுத்தப்பட முடியாது. இந்தியாவில் இருந்த தனி நாடுகள் சம்பந்தமாக பிரிட்டிஷ் அமைச் சரவைக் குழுவின் கருத்தானது பிரிட்டிஷ் இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைத்தால் தனிநாடுகள் மீதான ஆதிக்கத்தை பிரிட்டிஷ் முடியாட்சி யால் தொடர்ந்து கொண்டிருக்கவும் முடியாது; புதிய அரசிடம் ஒப்படைக்கவும் முடியாது என்றும் இருந்தது. எனினும் புதிய இந்தியா வின் வளர்ச்சிஎன்ற கண்ணோட்டத்தில் ஒத்துழைப்பதற்கு தனி நாட்டரசுகள் முன்வந்து கொண்டிருந்தன. அவைகளின் ஒத்துழைப்பு எடுத்த இந்த துல்லியமான வடிவம். புதிய அரசியல் சாசனத்திற் கான அடித்தளத்தை அமைக்கும்போது பேச்சுவார்த்தைக்குரிய விஷயமாக இருக்க வேண்டும். அதே சமயத்தில் புதிய அரசியல் சாசனத்திற்கான அடித்தளம், அனைத்து தனிநாட்டரசுகளுக்கும் ஒரே மாதிரியானதாக இல்லாமல் போகக்கூடும் என்றும் பின்னர் அமைச்சரவைக் குழுவானது அனைத்து தரப்பினரின் அத்தியா வசிய உரிமைக் கோரிக்கைகளுக்கு மிக நெருக்கமானதாக இருக்கக் கூடியதும் இந்தியா முழுமைக்கும் ஒரு திடமான நடைமுறைச் சாத்தியமான ஒரு அரசியல் சாசனத்தின் வடிவத்தை கொடுக்கக் கூடியதுமான ஒரு தீர்வின் தன்மையை தெரிவித்தது. அது, அரசியல் சாசனமானது கீழ்க்காணும் அடிப்படையான வடிவத்தை கொண் டிருக்கும் என்று பரிந்துரை செய்தது. (1) இந்தியாவையும் தனித்தனி அரசுகளையும் இணைக்கும் ஒரு இந்திய யூனியன் இருக்க வேண்டும்; அது கீழ்க்காணும் துறைகளை கவனிக்க வேண்டும்- வெளிவிவகாரத் துறை, பாதுகாப்பு, தகவல் தொடர்பு; மேலும் மேற்கண்ட துறை களுக்கு தேவையான நிதிகளை திரட்டுவதற்கு அதற்கு அதிகாரம் கொண்டிருக்க வேண்டும். (2) இந்திய யூனியன் பிரிட்டிஷ் இந்தியா மற்றும் தனி நாட்ட்ரசுகளின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு நிர்வாக அமைப்பும் சட்டம் இயற்றும் மன்றமும் (Legislature)

அமைக்கப்பட்டிருக்க வேண்டும். சட்டம் இயற்றும் மன்றத்தில் ஒரு பெரும் வகுப்புவாத பிரச்னையை கிளப்பும் ஏதாவதொன்று எழுந்தால் அதற்குத் தீர்வு காண்பதற்கு அந்த மன்றக் கூட்டத்தில் கலந்து கொண்டு வாக்களிக்கும் 2 பிரதான வகுப்பு பிரதிநிதிகளில் ஒவ்வொரு வகுப்பு பிரதிநிதிகளிலும் பெரும்பான்மையினரும் அதேபோல கூட்டத்தில் கலந்து கொண்டு வாக்களிக்கும் உறுப்பினர்களில் பொரும்பான்மையினரும் தேவைப்படும். (3) இந்திய யூனியன் கவனிக்கும் துறைகளை தவிர்த்த எல்லாத் துறைகளும் ஏனைய மீதமுள்ள அதிகாரங்களும் மாகாணங்களிடம் ஒப்படைக்கப்படும். (4) யூனியனுக்கு ஒப்புக்கொள்ளப்பட்ட துறைகளைத் தவிர்த்த எல்லாத் துறைகளையும் அதிகாரங்களையும் மாநிலங்கள் தொடர்ந்து தங்கள் வசம் வைத்துக் கொள்ள வேண்டும். (5) நிர்வாக அமைப்புகள் மற்றும் சட்டமன்றங்களைக் கொண்டு குழுக்களை அமைக்க மாநிலங்கள் சுதந்திரம் கொண்டிருக்க வேண்டும்; ஒவ்வொரு குழுவும் பொதுப்பட்டியலில் சேரக்கப்பட வேண்டிய மாகாணத் துறைகளை முடிவு செய்யும். (6) இந்திய யூனியன் மற்றும் குழுக்களின் (Groups) அரசியல் சாசனங்கள் ஒரு விதியை கொண்டிருக்க வேண்டும்; அது என்னவென்றால், முதல் 10 ஆண்டுகளுக்குப் பிறகும் அதன் பிறகு ஒவ்வொரு 10 ஆண்டு இடைவெளியிலும் அரசியல் சாசனத்தின் உள் அம்சங்கள் (Terms) எந்தொரு மாகாண சட்டமன்றத்தின் வாக்கெடுப்புக்கு விடப்பட வேண்டும்; அதில் பெரும்பான்மை மூலம் மறுபரிசீலனை செய்ய கேட்டுக் கொள்ள வேண்டும்; இத்தகைய மறுபரிசீலனை முதலில் 10 ஆண்டுகளுக்கு பிறகும் அதன் பின்பு 10 ஆண்டுகால இடைவெளிகளிலும் செய்யப்பட வேண்டும். இதற்கு வகை செய்யும் விதியை யூனியன் மற்றும் குழுக்களின் அரசியல் சாசனம் கொண்டிருக்க வேண்டும் என்பதுதான்.

ஒரு புதிய அரசியல் சாசனத்தை தயாரிப்பதற்கு வகைசெய்யும் ஏற்பாடுகளை மேற்கொள்ளும் கீழ்க்காணும் அரசியல் சாசனத் தயாரிப்பு முறையை அமைச்சரவைக்குழு குறிக்கோளிட்டது. ஒரு புதிய அரசியல் சாசனத்திற்கான அடித்தளத்தை தீர்மானிப்பதற்காக ஏதாவதொரு பேரவையை (Assembly) அமைப்பதில் முதலில் ஏற்பட்ட பிரச்னை என்னவென்றால் சாத்தியமான அளவிற்கு பரந்த அளவிலும் துல்லியமாகவும் ஒட்டுமொத்த மக்கள் தொகையின் பிரதிநிதித்துவத்தை பெறுவதுதான். இதில் மிகவும் திருப்திகரமான முறை ஐயத்திற்கிடமின்றி வயது வந்தோரின் வாக்குரிமை அடிப்படையிலான தேர்தல் மூலம்தான் இருக்கும். ஆனால் இப்போது

அத்தகையதொரு நடவடிக்கையை கொண்டுவருவதற்கான எந்த வொரு முயற்சியும் புதிய அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் கொஞ்சம்கூட ஏற்றுக்கொள்ள முடியாத தாமதத்திற்கு இட்டுச் செல்லும். எனவே நடைமுறைச் சாத்தியமான நடவடிக்கை சமீபத் தில் தேர்ந்தெடுக்கப்பட்ட மாகாண சட்டமன்றங்களை அந்தப் பேரவையை தேர்ந்தெடுக்கும் அமைப்புகளாக பயன்படுத்துவது தான். எனினும், இதனைச் சிக்கலாக்கிய 2 காரணிகள் இணைந்து நின்றன. அவற்றில் முதலாவது, மாகாண சட்டமன்றங்களின் எண்ணிக்கைப் பலங்கள் ஒவ்வொரு மாகாணத்திலும் இருந்த அதன் மொத்த மக்கள் தொகைக்குரிய விகிதத்தை கொண்டிருக்க வில்லை. இரண்டாவது, வகுப்புவாத விருது மூலம் சிறுபான்மை யினருக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவம் காரணமாக, ஒவ்வொரு மாகாண சட்டமன்றத்திலும் பல சமுதாயங்களின் பலங்கள், அந்த மாநிலத்தில் அவர்களுடைய எண்ணிக்கைக்குரிய விகிதத்தில் இருக்க வில்லை. இந்தப் பிரச்னைகளை சரி செய்யக்கூடிய பல்வேறு வழிமுறைகளை மிகக்கவனமாக பரிசீலித்த பிறகு மிகவும் நியா யமான, நடைமுறைச் சாத்தியமான ஒரு திட்டம் உறுதியானது. அது வருமாறு: a) ஒவ்வொரு மாநிலத்திற்கும் அதன் மக்கள் தொகைக்கு சரிசம விகித அளவில் மொத்த ஜாதிகளின் எண்ணிக் கையை ஒதுக்குவது. b) ஒவ்வொரு மாநிலத்திலும் அதன் மக்கள் தொகைக்கு சரிசம விகிதத்தில் பிரதான சமுதாயங்களுக்கிடையே யான இடங்களை ஒதுக்கீடு செய்வது. c) ஒரு மாகாணத்தில் ஒவ்வொரு சமுதாயத்திற்குள் ஒதுக்கப்பட்ட பிரதிநிதிகள், சட்டமன்றத் தேர் தலில் அந்தச் சமுதாயத்தின் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பதற்கான ஏற்பாடுகளை செய்வது. இந்த நோக்கங் களுக்காக இந்தியாவில் உள்ள 3 முக்கிய சமுதாயங்களை மட்டும் அங்கீகரிப்பது போதுமானதாக இருந்தது. அவை, பொதுவான சமுதாயம், முஸ்லீம் சமுதாயம் மற்றும் சீக்கிய சமுதாயம் ஆகும்; பொதுவான சமுதாயம் என்பது முஸ்லீம் மற்றும் சீக்கியரல்லாத அனைவரையும் உள்ளடக்கியதாகும். மிகச்சிறிய சிறுபான்மையின ருக்கு மக்கள் தொகை அடிப்படையில் பிரதிநிதித்துவம் அளிக்கப் படவில்லை; அவர்களுக்கு சட்டமன்றத்தில் இடங்கள் ஒதுக்குவதை உறுதிப்படுத்தும் அவர்களுடைய முக்கியத்துவத்தை இழக்க நேரிடும் என்பதால் அவர்களுக்கு பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை. எனவே, சிறுபான்மையினருக்கு சிறப்பு முக்கியத்துவம் வாய்ந்த அனைத்து பிரச்னைகளிலும் அவர்களுக்கு முழுப் பிரதிநிதித் துவம் அளிப்பதற்கு சில ஏற்பாடுகள் முன்வைக்கப்பட்டன. எனவே

அமைச்சரவைக்குழு ஒரு யோசனையை முன்வைத்தது; அதன்படி கீழ்க்காணும் எண்ணிக்கையில் பிரதிநிதிகள், ஒவ்வொரு மாகாண சட்டமன்றத்தாலும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் - இதனை, சட்டமன்றத்தின் ஒவ்வொரு பிரிவும் (பொது, முஸ்லீம், சீக்கியர்) ஒற்றை மாற்றுவாக்கு முறையுடன் (Single Transferable vote) கூடிய விகிதாச்சார பிரதிநிதித்துவ முறை (Proportional Representation) மூலம் தன்னுடைய சொந்தப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று அமைச்சரவைக் குழு தனது யோசனையில் தெரிவித்தது.

பிரதிநிதித்துவப் பட்டியல்

பிரிவு - அ

| மாகாணம் | பொது | முஸ்லீம் | மொத்தம் |
|---|---|---|---|
| மெட்ராஸ் | 45 | 4 | 49 |
| பம்பாய் | 19 | 2 | 21 |
| ஐக்கிய மாகாணங்கள் | 47 | 8 | 55 |
| பீகார் | 31 | 5 | 36 |
| மத்திய மாகாணங்கள் | 16 | 1 | 17 |
| ஒரிசா | 9 | 0 | 9 |
| மொத்தம் | 167 | 20 | 187 |

பிரிவு - ஆ

| மாகாணம் | பொது | முஸ்லீம் | சீக்கியர் | மொத்தம் |
|---|---|---|---|---|
| பஞ்சாப் | 8 | 16 | 4 | 28 |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 0 | 3 | 0 | 3 |
| சிந்து | 1 | 3 | 0 | 4 |
| மொத்தம் | 9 | 22 | 4 | 35 |

பிரிவு - சி

| மாகாணம் | பொது | முஸ்லீம் | மொத்தம் |
|---|---|---|---|
| பெங்கால் | 27 | 33 | 60 |
| அசாம் | 7 | 3 | 10 |
| மொத்தம் | 34 | 36 | 70 |
| பிரிட்டிஷ் இந்தியாவுக்கான மொத்தம் | | | 292 |
| இந்திய தனிநாட்டரசுகள் | | | 93 |
| ஆக மொத்தம் | | | 385 |

தலைமை கமிஷனர்களுடைய மாகாணங்களை பிரதிநிதித்துவப்படுத்தும் பொருட்டு மத்திய சட்டமன்றத்தில் டெல்லியை பிரதிநிதித்துவம் செய்யும் உறுப்பினரும் மத்திய சட்டமன்றத்தில் அஜ்மெர்மெர் வராராவை பிரதிநிதித்துவம் செய்யும் உறுப்பினரும் கூர்க் சட்ட மேலவையால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய பிரதிநிதியும் பிரிவு-A-யில் சேர்க்கப்பட வேண்டும். பிரிவு-B-க்கு பிரிட்டிஷ் பலுச்சிஸ்தான் பிரதிநிதி ஒருவர் சேர்க்கப்பட வேண்டும். நிதி அரசியல்சாசன சபையில் தனி அரசுகளுக்கு உரிய பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும்; எனினும் இந்தப் பிரதிநிதித்துவம், பிரிட்டிஷ் இந்தியாவில் எடுக்கப்பட்ட மக்கள் தொகையின் அடிப்படையில் 93-க்கு மிகக் கூடாது. ஆனால், பிரதிநிதிகளை தேர்வு செய்யும் முறை, கலந்தாலோசித்து தீர்மானிக்கப்படும். தனி அரசுகள், ஆரம்பக் கட்டத்தில் ஒரு பேச்சுவார்த்தைக் குழுவால் பிரதிநிதித்துவம் செய்யப்படும்.

பிறகு, அமைச்சரவைக் குழுவானது தாம் முன்வைத்த யோசனையில், இவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள், சாத்தியமான அளவிற்கு விரைவில் டில்லியில் கூடவேண்டும் என்று கூறியது அது. மேலும் கூறியதாவது: ''அந்தப் பிரதிநிகளின் பூர்வாங்கக் கூட்டம் நடத்தப்படும். அந்தக் கூட்டத்தில் பொதுவான பணி ஒழுங்குமுறை (General order of Business) முடிவு செய்யப் படும். ஒரு சேர்மன் மற்றும் மற்ற அதிகாரிகள் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். மேலும், குடிமக்கள், சிறுபான்மையினார், பழங்குடியினர், மற்றும் விடப்பட்ட பகுதியனரின் உரிமைகள் பற்றிய

ஆலோசனைக் குழு அமைக்கப்படும். அதன் பிறகு மாகாணப் பிரதிநிதிகள், பட்டியலில் காட்டப்பட்டது போன்று A, B, C என்று 3 பிரிவுகளாக பிரிக்கப்படுவார்கள். இந்தப் பிரிவுகள் ஒவ்வொரு பிரிவிலும் உள்ளடங்கியுள்ள மாகாணங்களுக்குரிய மாகாண அரசியல் சாசனங்களை அமைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளும்; மேலும் அந்தப் பிரிவுகள் அந்த மாகாணங்களுக்கு ஏதாவதொரு தொகுதி அரசியல் சாசனத்தை (Group constitution) பயன்படுத்தத் தொடங்குவதா என்பதையும் அப்படியானால் அந்தத் தொகுதி, எந்தெந்த மாகாணத் துறைகளை கையாள்வது என்பதையும் முடிவு செய்யும். தொகுதி அரசியல் சாசனங்களில் தேவையானதை தெரிவு செய்து கொள்ள மாகாணங்களுக்கு அதிகாரம் இருக்க வேண்டும். புதிய அரசியல் சாசன ஏற்பாடுகள் செயல்பாட்டுக்கு வந்தவுடன் எந்தவொரு மாகாணமும் அது இருக்க வைக்கப்பட்டுள்ள எந்தவொரு தொகுதி அரசியல் சாசனத்திலிருந்தும் வெளியேறுவதற்கு முடிவு செய்யலாம். இத்தகைய தொரு முடிவை, புதிய அரசியல் சாசனத்தின்கீழ் முதல் பொதுத் தேர்தல் நடைபெற்ற பிறகு மாகாண சட்டமன்றத்தால் எடுக்கப்பட வேண்டும். பிரிவுகள் மற்றும் இந்தியத் தனி அரசுகளின் பிரதிநிதிகள், இந்திய யூனியன் அரசியல் சாசனத்தை நிலைப்படுத்தம் நோக்கத்திற்காக மீண்டும் கூடவேண்டும். இந்திய அரசியில் சாசன சபையின் தீர்மானங்களில் மேலே குறிப்பிடப்பட்ட அரசியல் சாசனத்தின் அடிப்படை வடிவம் (Basic Form) தொடர்பான விதிகளை வேறுபடுத்துவதற்கும் பிரதான வகுப்புவாதப் பிரச்னைகளை கிளப்புவதற்கும் 2 முக்கிய சமுதாயங்கள் ஒவ்வொன்றிலிருந்தும் வந்து கூடி வாக்களிக்கும் பிரதிநிதிகளில் பெரும்பாலானவர்களின் ஆதரவு தேவை. பேரவையின் சேர்மன், எந்தத் தீர்மானங்கள் பிரதான வகுப்புவாத பிரச்னையை கிளப்பின என்பதை முடிவு செய்வார்; மேலும், அவ்வாறு அவர், பிரதான சமுதாயங்களில் ஏதேனும் ஒன்றின் பிரதிநிதிகளில் பெரும்பாலானோரால் கேட்டுக் கொள்ளப் பட்டால் அவர் தனது முடிவை அளிக்கும் முன்பு பெடரல் நீதிமன்றத்தை றகலந்தாலோசிப்பார்.

அமைச்சரவைக்குழு இப்படியெல்லாம் முன்வைத்த தனது யோசனையில் மேலும் கூறியிருப்பதாவது : குடிமக்கள், சிறுபான்மையினர், பழங்குடியினர் மற்றும் விடுவிக்கப்பட்ட பகுதியினரின் உரிமைகள் பற்றிய ஆலோசனைக் குழுவானது, பாதிக்கப்பட்டவர்களின் நலன்களுக்கு உரிய பிரதிநிதித்துவத்தை கொண்டிருக்கும்; அதனுடைய செயல்பாடானது அடிப்படை உரிமைகளின் பட்டியல்

பற்றியும் சிறுபான்மையினரை பாதுகாப்பதற்கான சட்ட விதிகள் பற்றியும் பழங்குடியினர் மற்றும் விடுவிக்கப்பட்ட பகுதியினருக்கான நிர்வாகத் திட்டம் பற்றியும் அரசியல் சாசன நிர்ணய சபைக்கு தகவல் அளிப்பதாக இருக்கும். மேலும் இந்த உரிமைகள், மாகாண அரசியல் சாசனத்திலோ அல்லது தொகுதி அரசியல் சாசனத்திலோ அல்லது யூனியன் அரசியல் சாசனத்திலோ சேர்க்கப்பட வேண்டும் என்று அந்த ஆலோசனைக்குழு அறிவுரை அளிக்கும். இவ்வாறு அமைச்சரவைக்குழு தமது யோசனையில் கூறியுள்ளது.

அமைச்சரவைக்குழு, தாம் முன்வைத்த யோசனையில் கடைசியாக, மாகாண சட்டமன்றங்கள் தங்களுடைய பிரதிநிதிகளை தேர்ந்தெடுப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறும் தனி அரசுகளும், ஒரு பேச்சுவார்த்தைக் குழுவை அமைக்குமாறும் அவைகளுக்கு கவர்னர்-ஜெனரல் வேண்டுகோள் விடுப்பார் என்றும் கூறியிருந்தது.[1]

● ● ●

## இணைப்பு - IV

## அமைச்சரவைக் குழுவுடன் ஜெகஜீவன்ராம், ராதா நாத்தாஸ் மற்றும் பிருத்விசிங் சந்திப்பு

'ஜக ஜீவன்ராம். ராதாநாத்தாஸ், பிருத்வி சிங், ஆஸாத் ஆகியோர் ஒன்றாக அனைத்து இந்திய ஒதுக்கப்பட்ட வர்க்கங்களின் லீகின் (All India Depressed Classes' League) பிரதிநிதிகளாக பிரிட்டிஷ் அமைச்சரவைக் குழுவைச் சந்தித்தனர். அப்போது அவர்கள் நாட்டின் ஒருமைப்பாட்டை காயப்படுத்தும் எந்தவொரு யோசனையையும் லீக் கடுமையாக எதிர்க்கிறது என்று கூறினர்; லீகின் கண்ணோட்டத்தில் பாகிஸ்தான், இந்துஸ்தான் என்று இந்தியாவைப் பிரிப்பது, சிறுபான்மையினரின் பிரச்னைக்கு ஒரு தீர்வு அளிக்காது, ஆனால் புதிய பிரச்னைகளை ஏற்படுத்தும்; ஒன்றுக்கு அதிகமான அரசியல் சாசன சபைகளை அமைப்பதற்கு லீக் எதிர்ப்பு தெரிவிக்கிறது என்றும் கூறினர். மேலும் ஒன்றுக்கு அதிகமான அரசியல் சாசன நிர்ணய சபைகளை அமைக்கவும் லீக் எதிர்ப்பு தெரிவிப்பதாகவும் அவர்கள் தெரிவித்தனர். புதிய அரசியல் சாசன மானது சிறுபான்மையினரின் மொழி, கலாச்சாரம் ஆகியவற்றை யும் தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் உரிமைகளையும் நலன்களையும் காப்பதற்கான விதிகளை கொண்டிருக்க வேண்டும். இடைக்கால அரசாங்கம் சம்பந்தமாக, ஏதாவதொரு சமுதாயத்திற்கு முக்கியத் துவம் கொடுப்பதையும் இதனை வேறொரு சமுதாயத்தின் சட்டப் பூர்வமான உரிமைப் பங்குகளை பறித்துச் செய்வதையும் ஒடுக்கப் பட்ட வர்க்கங்களின் லீக் எதிர்க்கிறது; ஆனால் முக்கியத்துவம் கொடுக்க முடிவு செய்யப்பட்டால் தாழ்த்தப்பட்ட ஜாதிகளுக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும். நாட்டின் சட்டமியற்றும் குழுமத்திற்கு (Legislature) இடைக்கால அரசே பொறுப்பானதாக இருக்க வேண்டும்; பாதுகாப்பு, வெளிவிவகாரம், நிதி ஆகிய துறைகள் அமைச்சரவையிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்; அந்த அமைச்சரவையின் உறுப்பினர்கள் பல்வேறு மாகாணச் சட்ட மன்றங்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். மாகாணச் சட்ட மன்றங்களில் சிறுபான்மையினருக்கு பிரதிநிதித்துவம் அளிப்பதற் கான சிறப்பு விதிகள் இயற்றப்பட வேண்டும். மத்திய அரசாங்கத் தில் சேர்ப்பதற்கான வாக்குரிமை அளிக்கப்பட்டோர் குழுவை (Electoral College) மாகாணச் சட்டமன்றங்களில் உள்ள தாழ்த்தப்பட்ட நபர்களை தேர்வு செய்ய வேண்டும் என்று கூறினர்.

அமைச்சரவைக்குழுவிடம் ஜெகஜீவன்ராம் (டாக்டர் அம்பேத்கர் தலைமையிலான) தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் சம்மேளனத்திற்கும் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் லீகிற்குமிடையேயான வித்தியாசத்தை தெரிவித்தார். அப்போது அவர் அம்பேத்கர் தலைமையிலான சம்மேளனமானது தாழ்த்தப்பட்ட ஜாதியினர் இந்துக்கள் இல்லை; அவர்கள் மதச் சிறுபான்மையினர் என்ற நிலைபாட்டைக் கொண்டுள்ளதாகவும் ஆனால் லீகானது, தாழ்த்தப்பட்ட ஜாதி மக்கள் தங்களை இந்துக்களாகவே கருதுகின்றனர். அவர்கள் இந்து மதத்திற்காக பெரும் தியாகம் புரிந்துள்ளனர் என்ற நிலைபாட்டைக் கொண்டுள்ளதாகவும் கூறினார். தாழ்த்தப்பட்ட ஜாதியினர் நாட்டின் ஏனையோரின் அளவிற்கு தங்களை உயர்த்திக் கொள்ள இயலும் பொருட்டு சட்டம் இயற்றும் குழுமத்திலும் பணிகளிலும் அவர்களுக்கு சிறப்பு பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டுமென ஒடுக்கப்பட்டவர்க்கங்களின் லீக் தரப்பில் வலியுறுத்தப்பட்டது.

*(இந்தியாவில் அதிகார மாற்றம், பக்கம் 244-45)*

● ● ●

# இணைப்பு - V

# புனா சத்தியாக்கிரகம்

## சத்தியாக்கிரகிகள் கைது செய்யப்பட்டனர்

பம்பாயில் உள்ள தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் ஆதரவாளர்கள் இன்று புனாவில் தங்களுடைய வன்முறையற்ற சத்தியாக்கிரகத்தைத் தொடங்கினர்; அவர்கள் தங்களுக்கு பிரிட்டிஷ் அமைச்சரவைக் குழுவால் இழைக்கப்பட்ட அநீதிக்கு எதிராகவே இந்தப் போராட்டத்தைத் தொடங்கினர்; இந்த அநீதி, காங்கிரஸ் கட்சியின் சூழ்ச்சிகளின் விளைவாகும்.

ஆறு சத்தியாக்கிரகிகளைக் கொண்ட முதல் குழு - இவர்களில் 3 பேர் பெண்கள், 3 பேர் ஆண்கள் - புனா மாவட்ட மாஜிட்டிரேட்டின் உத்திரவை மீறி கவுன்சில் ஹாலுக்கு முன்பு ஆர்ப்பாட்டம் செய்ததற்காக அந்த ஹாலுக்கு எதிரே இன்று காலை கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்களில் தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் காரியக்குழு உறுப்பினர் திருமதி சாந்தாபாய்தானி - இவர் நாசிக் நகரைச் சேர்ந்தவர் - சம்மேளனத்தின் பம்பாய்க் கிளைத் தலைவர் திரு. பீ.கே.கெய்க்வாத்தின் மனைவி திருமதி கீதாபாய் கெய்க்வாத் ஆகியோர் உள்ளடங்குவர்.

சட்டமன்றம் கூடுவதற்கு சற்று முன்பு இந்த 6 அறப் போராட்டத்தினரும், நுழைவுவாயிலில் காவல் காத்துக் கொண்டிருந்த போலீசாரை மீறிக் கொண்டு கவுன்சில் ஹால் வளாகத்திற்குள் நுழைந்தனர்; உள்ளே நுழைந்த உடனே தங்களுடைய பாக்கெட்டுகளில் இருந்த கருப்புக் கொடிகளை எடுத்து உயர்த்திப் பிடித்தவாறு, ''பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஒழிக'', ''காங்கிரஸ் கட்சி ஒழிக'' ''புனா உடன்பாட்டை கிழத்தெறி'' என்று முழக்கமிட்டனர்.

எட்டுப் பெண்களையும் 6 ஆண்களையும் கொண்ட மேலும் 2 குழுக்கள் வளாகத்தின் நுழைவு வாயிலில் பிற்பகல் 1 மணி அளவில் கைது செய்யப்பட்டனர்.

அநேகமாக அதே சமயத்தில் கவுன்சில் ஹாலுக்கு சென்று மாஜிஸ்டிரேட்டின் உத்திரவை மீறப்போவதாக தங்களுடைய ஆர்ப்பாட்டத்தையும் தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் மிகப் பெரும்

ஊர்வலத்தையும் நடத்திய ''சத்தியாக்கிரகிகளின்'' முதல் குழு, யுத்த நினைவுச் சின்னம் அருகில் அதாவது கவுன்சில் ஹாலிலிருந்து அரை மைல் தூரத்தைக் குறிப்பதற்கு வரையப்பட்ட வெள்ளைக் கோட்டையொட்டி ஸ்டேஷன் சாலையில் தடுத்து நிறுத்தப்பட்டது. மாவட்ட மாஜிஸ்டிரேட்டின் உத்திரவின்படி, கவுன்சில் ஹாலிலிருந்து 2 மைல் தொலைவில் உள்ள பகுதியில் எந்த ஊர்வலமும் அனுமதிக்கப்படவில்லை.

ஊர்வலமானது பாபாஜேன்சோக்கில் உள்ள ''சத்தியாக்கிரக'' முகாமிலிருந்து காலை 10 மணி அளவில் புறப்பட்டது. 4 பேராகவும் 5 பேராகவும் ஒன்றன் பின் வரிசையாக அணிவகுத்தது. இந்த ஊர்வலத்திற்கு பம்பாய் மாகாண தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத் தலைவர் திரு.பீ.கே.கெய்க்வாத், சம்மேளனப் பொதுச் செயலாளர் திரு.பி.என்.ராஜ்போஜ், முன்னாள் பம்பாய் சட்டமன்ற உறுப்பினர் திரு.ஆர்.ஆர்.போலே, ஆகியோர் தலைமை வகித்தனர்; முன்வரிசையில் பெண்களும் இளம் பெண்களும் கறுப்புக் கொடிகளையும் சம்மேளனக் கொடியையும் ஏந்தி வந்தனர். இந்த ஊர்வலம், சுமார் ஒன்றரை மைல் தூரமுள்ள சற்று வளைவான பாதையில் மெதுவாக நடந்து சென்று, யுத்த நினைவுச் சின்னம் அருகில் இருந்த ''எல்லைக் கோடு'' அருகில் 11 மணி அளவில் அடைந்தது.

தடிகளை ஏந்திய போலீசார் 100-க்கும் அதிகமானவர்கள் - இவர்களில் துணைக் கண்காணிப்பாளர் திரு. இ.ஏ. தோத்வெல், உதவிக் கண்காணிப்பாளர் திரு.ஜே.கிரோன், திரு.எப்.டி.ரோச் உள்ளடங்குவர் - அங்கு காத்துக் கொண்டிருந்தனர்; ஊர்வலம் அங்கு வந்தடைந்ததும் அதனை உடனடியாக தடுத்து நிறுத்தினர்.

ஊர்வலத்தினர், தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனம் வாழ்க என்றும் ஏனைய கோஷங்களையும் முழங்கியவாறு தரையில் அமர்ந்தனர். அப்படியே சுமார் 2 மணிநேரம் இருந்துவிட்டு அவர்கள் சத்தியாக்கிரக முகாமிற்குத் திரும்ப முடிவு செய்து முகாமிற்கு பின்புறமுள்ள வெல்லெஸ்லி சாலை வழியாக அணிவகுத்தனர்.

முகாமை அடைந்தவுடன் ஊர்வலத்தினர் ஒரு கூட்டம் நடத்தினர்; அப்போது அவர்கள் போலீசாரால் கைது செய்யப் பட்டவர்களை வாழ்த்தினர்.

அந்தக் கூட்டத்தில் பேசிய திரு.பி.என்.ராஜ்போஜ், தாழ்த்தப் பட்ட ஜாதிகளின் ''சுதந்திரப் போராட்டம்'' இன்று தொடங்கி யுள்ளது என்று கூறினார். தாழ்த்தப்பட்ட ஜாதிகள் முழுமையாக விழிப்படைந்துள்ளன. தங்களுடைய நோக்கத்தை சாதிக்கும் வரை ஓய்வடைய மாட்டார்கள் என்றும் இன்றைய சத்தியாக்கிரகம் நாடு தழுவிய இயக்கம் ஒன்றின் தொடக்கம் என்றும் கூறினார்.

திரு. பீ.கே. கெய்க்வாத் பேசுகையில், அறப்போராட்டத் தினரின் ஊர்வலம் நாளையும் அதன் பிறகு ஒவ்வொரு நாளும் நடத்தப்படும் என்றும் அறிவித்தார்.

இன்று புனா மாவட்ட மாஜிஸ்டிரேட் ஒரு உத்திரவை பிறப் பித்தார்; அதில் அவர் தடிகள், கத்திகள், கற்கள் போன்றவற்றை புனா நகராட்சி, புனா புறநகராட்சி, புனா கன்டோன்மென்ட் வாரியம் ஆகியவற்றிற்கு உட்பட்ட பகுதிகளில் எடுத்துச் செல்வதற்குத் தடை விதித்திருந்தார். இந்த உத்திரவு ஜூலை 15 முதல் 1 வாரத் திற்கு அமுலில் இருக்கும்.

மேலே கூறப்பட்ட முன்னெச்சரிக்கை நடவடிக்கையானது, தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் சத்தியாக்கிரக இயக்கம் காரணமாக. எந்தவொரு விரும்பத்தகாத சம்பவங்களும் அமைதி மற்றும் ஒழுங்குமீறல்களும் நிகழாமல் தவிர்ப்பதற்காக எடுக்கப் பட்டிருப்பதாகத் தெரிகிறது.

தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளன (எஸ்.சி.எப்) சத்தியாக் கிரகிகள் சிறையிலடைப்பு: நேற்று கைது செய்யப்பட்ட எஸ்.சி.எப். சத்தியாக்கிரகிகள் 114 பேர் இன்று சிறைக்கு அனுப்பப்பட் டனர் இதன் மூலம். சத்தியாக்கிரக தொடக்க நாளிலிருந்து சிறை யிலடைக்கப்பட்ட சத்தியாக்கிரகிகளின் மொத்த எண்ணிக்கை 124 ஆனது.

இன்றைய சத்தியாக்கிரக் குழுவில் 13 பெண்கள் உட்பட 114 பேர் இருந்தனர் அந்தப்பெண்கள், ரூ.25 அபராதம் கட்ட வேண்டும். கட்டத் தவறினால் 15 நாள் சிறைவாசம் மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்பட்டனர். சிறைக்குச் செல்லவே அந்தப் பெண்கள் முடிவு செய்தனர்.

101 ஆண் சத்தியாக்கிரகிகளில் 37 பேருக்கு ரூ.30 வீதம் அபராதம் அல்லது அதைக் கட்டத் தவறினால் 1 மாதச் சிறை என்றும்

மீதமுள்ள 64 பேருக்கு ரூ.50 வீதம் அபராதம் அல்லது அதைக் கட்டத் தவறினால் 2 மாதச் சிறை என்று விதிக்கப்பட்டது. அவர்கள் அனைவரும் அபராதம் கொடுக்க மறுத்து விட்டனர்.

இந்த விசாரணை, ஆர்ப்பாட்டக்காரர்கள், காவலில் வைக்கப் பட்டிருந்த எரவாடா சிறையில் நடைபெற்றது.

இந்த விசாரணையின்போது கைது செய்யப்பட்டவர்கள் சார்பில், நீதிமன்றத்தில் அறிக்கையொன்று வாசிக்கப்பட்டது; அதில், தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் நலன்களுக்கு பிரிட்டிஷ் அரசாங் கமும் காங்கிரசும் துரோகம் இழைத்துவிட்டதாக குற்றஞ்சாட்டப் பட்டது.

அந்த அறிக்கை மேலும், தன்னைத்தானே ஒரு ஜனநாயக அமைப்பாக பாவித்துக் கொண்ட காங்கிரஸ் கட்சி, புனா உடன் பாட்டின்போதும் கிரிப்ஸ் திட்ட யோசனைகள் மற்றும் அமைச் சரவைத் திட்டங்கள் ஆகியவற்றின் போதும் கூட, தாழ்த்தப்பட்ட ஜாதிகளுக்கு துரோகம் இழைத்துவிட்டது என்று குறிப்பிட்டுள்ளது. புனா உடன்பாட்டினால் ஒப்புக்கொள்ளப்பட்ட கூட்டு வாக்காளர் முறையின் (Joint Electorotes) முடிவுகள் ஒரு விஷயத்தை நிரூபித் துள்ளன; அது என்னவெனில் சமீபத்தில் நடைபெற்ற மாகாணச் சட்டமன்றத் தேர்தலின்போது தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் பிரதான மான ஆதரவைப் பெற்றிருந்த வேட்பாளர்கள் தோற்கடிக்கப் பட்டனர். காங்கிரஸ் கட்சியின் ''பொம்மைகள்'' உயர் ஜாதி இந்துக் களின் வாக்குகளால் வெற்றி பெற்றனர்.

சத்தியாக்கிரக அமைப்பாளர்கள் பாபாஜேன் சோக்கிப் உள்ள சத்தியாக்கிரக முகாமிலிருந்து ஊர்வலமாகச் சென்றனர். அந்த ஊர்வலம் கவுன்சில் ஹாலிலிருந்து அரை மைல் தொலைவில் வெல்லெஸ்லி சாலையில் உள்ள ரயில்வே சரக்குக் கிட்டங்கியில் போலீசாரால் தடுத்து நிறுத்தப்பட்டது.

அப்போது ஊர்வலத்தினரிடையே திரு.ஜி.ஹெச்.கேலே எம்எல்ஏ. (பம்பாய்) உரையாற்றினார்; அப்போது அவர், போராட்டம் வெற்றி பெறும் வரை இயக்கத்தை தொடர்ந்து மேற்கொள்ளுமாறு அவர்களை வலியுறுத்தினார். அவர்களுடைய கோரிக்கைகளுக்கு தம்முடைய முழு ஆதரவையும் தெரிவித்தார்.

## மேலும் அதிகமான கைதுகள்

தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தால் தொடங்கப்பட்ட ''சத்தியாக்கிரக'' இயக்கம் இன்று 3-வது நாளாக தொடர்ந்து கொண்டிருக்கிறது. 5 பேரும் 10 பேருமாக கொண்ட குழுக்கள் கவுன்சில் ஹால் எதிரே கோஷங்களை முழங்கிக் கொண்டும் கறுப்புக் கொடிகளை அசைத்தவாறும் காணப்பட்டன; இந்த இயக்கம் மாவட்ட மாஜிஸ்டிரேட் உத்திரவை மீறி நடத்தப்பட்டது.

இன்று சட்டமன்றக் கூட்டம் தொடங்கியபோது பிற்பகல் 2 மணி அளவில் அவர்களை போலீசார் கைது செய்தனர்.

## 5-வது நாள் சத்தியாக்கிரக இயக்கம்

## எஸ்.சி.எப். தொண்டர்கள் கைது

## சிவில் உரிமை மீதான கட்டுப்பாட்டுக்கு கண்டனம்

சத்தியாக்கிரக இயக்கத்தின் 5-வது நாளான இன்று கவுன்சில் ஹால் எதிரே பட்டியலிடப்பட்ட ஜாதியினரால் ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது. ஒரு மணி நேரத்திற்குள்ளாக 70 தொண்டர்களை கவுன்சில் ஹால் நுழைவு வாயிலில் காவல் பணியில் இருந்த போலீசார் கைது செய்தனர். கொட்டும் மழையில் 4 பேராகவும் 5 பேராகவும் கொண்ட குழுக்களாக வந்த தொண்டர்கள் கவுன்சில் ஹால் வளாகத்திற்கு வெளியே கோஷமிட்டனர்.

தடையை மீறியதற்காக நேற்று கைது செய்யப்பட்ட அறப் போராட்டத்தினர் 122 பேர் அவர்கள் அடைக்கப்பட்டிருந்த எரவாடா சிறையில் விசாரிக்கப்பட்டனர். அப்போது கூடுதல் மாவட்ட மாஜிஸ்டிரேட் அவர்கள் அனைவருக்கும் ரூ.25 முதல் 50 வரை அபராதம் அல்லது அதைக் கட்டத்தவறினால் 15 நாள் முதல் 2 மாதம் வரை சிறை என்று தண்டனை விதித்தார். பெண் தொண்டர்கள் 13 பேர் குறைந்த தண்டனை பெற்றனர்.

புனா மாவட்ட மாஜிஸ்டிரேட் நேற்று கூட்டிய கூட்டம் ஒன்றில் புனா சம்மேளனத் தலைவர்கள் திரு.பீ.கே.கெய்க்வாத், திரு.பி.என்.ராஜ்போஜ், திரு.ஆர்.ஆர் போலே ஆகியோர் தங்களுடைய சத்தியாக்கிரகத்தை மேற்கொள்வதற்கு நிபந்தனை அடிப்படையிலான எந்தவொரு அனுமதியையும் ஏற்க முடியாது என்று கூறிவிட்டனர். மேலும் தங்களுக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தால்

இழைக்கப்பட்ட அநீதிக்கெதிராகவும் தாங்கள் ஊர்வலம் நடத்தவும் கவுன்சில் ஹாலிலிருந்து அரை மைல் தொலைவில் உள்ள பகுதியில் ஆர்ப்பாட்டங்கள் நடத்தவும் காங்கிரஸ் ஆட்சியால் விதிக்கப்பட்ட தடைக்கு எதிராகவும் தங்களுடைய போராட்டம் தொடரும் என்றும் கூறினர். மேலும் இந்தத் தடையானது மக்களால் பெரிதும் மதிக்கப் பட்ட சிவில் உரிமைகள் மீதான கெடுபடி என்றும் கூறினர்.

சத்தியாக்கிரக அமைப்பாளர்களின் தகவலின்படி சத்தியாக் கிரகத்தில் பங்கு கொள்வதற்கு முன்வந்த புதிய தொண்டர்களின் குழுக்கள், புனாவிற்கு சென்று கொண்டிருக்கின்றனர். அவர்கள், சத்தியாக்கிரகத்திற்கான தொண்டர்களுக்கு பஞ்சமே இருக்காது என்றும் தங்களுடைய நோக்கம் நிறைவேறும் வரை தங்களுடைய போராட்டத்தைத் தொடரத் தயாராக இருப்பதாகவும் கூறினர்.

## மத்திய மாகாண சட்டமன்றத்திற்கு வெளியே ஆர்ப்பாட்டங்கள்

மத்திய மாகாண சட்டமன்றத்திற்கு வெளியே பிரதானமாக தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் உறுப்பினர்கள் 500 பெண்கள் உட்பட 10 ஆயிரம் பேர் இன்று ஆர்ப்பாட்டம் நடத்தி னார்கள். அரசியல் சாசன நிர்ணய சபைக்கு தனது பங்கு (Quota)ப் பிரதிநிதிகள் 17 பேரை தேர்ந்தெடுப்பதற்காக சட்டமன்றம் இன்று கூடியபோது இந்த ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. அப்போது ஆர்ப் பாட்டக்காரர்கள் ''அரசியல் சாசன நிர்ணய சபையை புறக்கணி'' ''காங்கிரஸ் அமைச்சரவை ஒழிக'' ''தாழ்த்தப்பட்ட எம்.எல்.ஏ-க்களை புறக்கணி'' புனா உடன்பாட்டை ரத்து செய்'' என்று கோஷமிட்டனர்.

பிரிட்டிஷ் அமைச்சரவைக்குழு முன் வைத்த யோசனை களுக்கு எதிர்ப்பு தெரிவிக்கவே இந்த ஆர்ப்பாட்டம் நடைபெற்றது; கறுப்புக் கொடியை ஏந்திய ஆர்ப்பாட்டக்காரர்கள் அமைதியாக ஆர்ப்பாட்டம் செய்தனர்.

## ''இந்தியாவின் வாதத்திற்கான காலச்சூழல்''

அரசியல் நிர்ணய சபையானது ஒரு ஆலோசனைக் குழுவை நியமிக்கும்; அக்குழுவின் முன்பு, சிறுபான்மையினரின் நலன்கள் நியாயமான முறையில் எடுத்துரைக்கப்படுவதை உறுதி செய்ய பிரிட்டன், தன்னுடைய அதிகாரம் அனைத்தையும் பயன்படுத்த

முடியும்; பயன்படுத்த வேண்டும்; ஆனால், சொல்லாற்றல் மிக்க வேண்டுகோளை நேற்று சர்ச்சில் விடுத்திருந்த போதிலும், சிறுபான்மையினரின் உரிமைக்கோரிக்கையான நியாயம் மீதான முடிவு எடுக்கும் பொறுப்பு இனிமேல் இந்த நாட்டினை (பிரிட்டனை) சார்ந்ததல்ல. எனினும், பிரிட்டிஷ் வெளி விவகாரத்துறைச் செயலாளரும் ஏனைய பிரச்சாரகர்களும் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களை பிரதிநிதித்துவப்படுத்தும் அமைப்பை ஒத்ததாக கருதுகின்றனர்; மேலும் அந்நலன்கள்பால் தாராளமனப்பான்மையுடன் நடந்து கொள்வதற்கான ஏற்பாடுகளையும் செய்துள்ளனர்; எனவே, அந்த நிலைபாட்டினை வலியுறுத்துவதற்கு அரசியல் மேதைகள் தகுதியளிக்கப்பட்டவர்களாவர். ஆனால், இந்தப் பிரச்னையையும் இதுபோன்ற ஏனையப் பிரச்னைகளையும் தீர்ப்பதற்கான பொறுப்பு இப்போது இந்தியர்களையே சார்ந்துள்ளது என்பதுதான் இந்தியர்களுடைய புதிய அந்தஸ்தின் சாராம்சமாகும்.

## அமைச்சரவை பிரதிநிதிகள் குழுவின் அக்கறையின்மை

தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்பந்தமாக பொதுச் சபையில் சர் ஸ்டாப்போர்டும், திரு. அலெக்சாண்டரும் தெரிவித்த கருத்து குறித்து நான் ஆச்சரியமடைந்தேன்'' என்று அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் தலைவர் என்.சிவராஜ் கூறுகிறார். மேலும் அவர் கூறுகிறார் : ''அவர்கள் இருவரும் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் முதுகில் குத்துவதிலும் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களை அரசியல் ரீதியாக முற்றிலுமாக அழித்தொழிப்பதிலும் காங்கிரஸ் கட்சியுடன் சேர்ந்து சதி செய்த குற்றத்தை செய்தனர்; இந்தக் குற்றத்தை செய்துவிட்டு இதனை மூடி மறைப்பதற்கும் விரும்புகிறார்கள்; இதன் பொருட்டு அவர்கள் தாழ்த்தப்பட்ட ஜாதிகளில் பெரும்பாலானவை காங்கிரஸ் கட்சியுடன் இருக்கின்றன என்று உண்மைக்கு மாறான அறிக்கை ஒன்றை பிரிட்டிஷ் நாடாளுமன்றத்திற்கும் பிரிட்டிஷ் பொது மக்களுக்கும் அளித்த தவறான வழிகாட்டும் குற்றத்தையும் செய்கிறார்கள். ஆனால், தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் பாதையில் உயர் ஜாதி இந்துக்கள் பல தடைகளை ஏற்படுத்திய போதிலும் அவற்றின் ஆதரவைப் பெறுவதில் தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் சம்மேளனம் மட்டுமே முன்னிலை வகிக்கிறது என்பது ஆரம்பத் தேர்தல்களில் நிரூபிக்கப்பட்டுள்ளது. காங்கிரஸ் கட்சியை சமாதானப் படுத்தவும் தங்களுடைய சொந்த நோக்கங்களுக்காக காங்கிரஸ் கட்சியை தங்கள் பக்கம் இழுக்கவும் தங்களுக்குள்ள ஆர்வம் காரணமாக அமைச்சரவை

பிரதிநிதிகள் தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் காலைவாரித் தள்ளி விட்டனர்; இப்படிச் செய்த அவர்கள்தான் தாழ்த்தப்பட்ட ஜாதிகளுக்கு பாதுகாப்பும் அளிக்கப்போவதாக இத்தனை ஆண்டு காலமாக உறுதி அளித்து வந்தனர். தாழ்த்தப்பட்ட ஜாதிகள் டாக்டர் அம்பேத்கரை பின்பற்றுகிறார்களா அல்லது திரு.காந்தியை பின்பற்றுகிறார்களா என்பது குறித்து எந்தவொரு பாரபட்சமற்ற சர்வதேச தீர்ப்பாயத்தால் நடத்தப்படும் எந்தவொரு விசாரணைக்கு முன்பும் எடுத்துரைக்க நான் தயாராக உள்ளேன். பேங்கி குடியிருப்புகளில் தங்கி இருந்து சமீபத்தில் திரு.காந்தி நடத்திய பகட்டு வித்தைக்கு அமைச்சரவை பிரதிநிதிகள் நிச்சயமாக பலிகடாவாக வில்லை. இந்த அற்பத்தனம் முழுவதும் காந்திக்கும் அமைச்சரவை பிரதிநிதிகளுக்கும் குறிப்பாக சர்ஸ்டாபோர்டு கிரிப்சுக்கும் இடையேயான ஒரு முன் தயாரிப்புக் காரியம் ஆகும்''

## II

## நாக்பூர் சத்தியாக்கிரகம்

### ''ஜெய்-பீம்'' எனது பெயர்

### ''எஸ்.சி.எப்'' என்னுடைய ஜாதி

### ''தலிஸ்தானம்'' என்னுடைய இருப்பிடம்

### மத்திய மாகாண சத்தியாக்கிரகிகளின் உணர்ச்சிகரமான பதில்கள்

மத்திய மாகாண பட்டியலிடப்பட்ட ஜாதிகளின் சம்மேளனத்தின் உறுப்பினர்கள் 6 பெண்கள் 9 சிறுவர்கள் உட்பட 243 பேர் 1946, செப்டம்பர் 12-ல் கைது செய்யப்பட்டனர். மாகாண பட்ஜெட்டை விரிவாக விவாதிக்க மத்திய மாகாண சட்டமன்றக் கூட்டம் கூடிய போது ஆர்ப்பாட்டம் நடத்தியதைத் தொடர்ந்து ஆர்ப்பாட்டக் காரர்கள் கைது செய்யப்பட்டனர். அவர்கள் மீது குற்றப்பத்திரிக்கை களை தயார் செய்தபோது போலீஸ் அதிகாரிகளால் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு பதில் அளிப்பதில் புதுமையான முறைகளை ஆர்ப்பாட்டக்காரர்கள் கடைப்பிடித்தார்கள். அப்போது அவர்கள் ' 'ஜெய் பீம்'' தங்களுடைய பெயர் என்றும் ''தாழ்த்தப்பட்ட ஜாதிகளின்

மேளனம்'' (எஸ்.சி.எப்) தங்களுடைய ஜாதி என்றும் ஸ்தானம்'' தங்களுடைய வீடு என்றும் கூறினர்.

## அதிகரித்துவரும் கைதுகள்

தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் ஆர்ப்பாட்டங்ள் தொடர்பாக, 13ஆம் தேதியன்று 262 பேர் கைது செய்யப்பட்டனர். தைானவர்களில் 14 பெண்களும் 9 சிறுவர்களும் உள்ளடங்தவர். ஒரு ஆர்ப்பாட்டக்காரர் போலீஸ் தடைகளை மீறினார். ஆனால் அவர் பின்னர், சந்தேகத்திற்குரிய முறையில் சுற்றிக்கொண்டிருந்தபோது சட்டமன்றக் கட்டிடத்தின் வெளிவராண்டாவில் கைது செய்யப்பட்டார்.

## செப்டம்பர் 4-ல் 203 பேர் கைது

நாக்பூரில் தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் உறுப்பினர்கள், செப்டம்பர் 4-ல் 2-வது நாளாக தங்களுடைய சத்தியாக்கிரத்தை சி.பி.சட்டமன்றக் கட்டிடத்திற்குச் செல்லும் 7 சாலைகளில் நடத்தினர். அன்று அவர்கள் சட்டமன்றக் கட்டிடத்தின் பிரதான நுழைவுவாயில்களை நோக்கிச் செல்லும்போது, மாஜிஸ்ரேட்கள் மற்றும் போலீஸ் அதிகாரிகளால் தடுத்து நிறுத்தப்பட்டு 203 ஆண்களும் 20 பெண்களும் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்ட ஆண்களும் பெண்களும் இந்திய குற்றவியல் சட்டத்தின் 144-வது பிரிவின் கீழான உத்திரவை மீறியதற்காக விசாரிக்கப்படுவார்கள்; ஏனெனில் முன் அனுமதி இல்லாமல் ஊர்வலம் செல்லுவதை தடை செய்யும் அந்தப் பிரிவு நாக்பூரில் அமுலில் உள்ளது. இந்தச் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொண்ட 18 சிறுவர்கள் விடுவிக்கப்பட்டனர். கைது செய்யப்பட்ட ஆண்களில் சிலர், சிறையில் பயன்படுத்துவற்காக சிறு படுக்கைகளை எடுத்துச் சென்றிருந்தனர். கைது செய்யப்பட்ட ஆண்களில் பெரும் பாலானோர், பிரிட்டிஷ் அரசாங்கமும் காங்கரஸ் அமைச்சரவையும் பட்டியலிட்ட ஜாதிகளுக்கு துரோகம் இழைத்துவிட்டதாகவும் நம்முடைய தலைவர் டாக்டர் அம்பேத்காரை[1] பாராட்டியும் கோஷமிட்டனர்.

1. ஜெய்பீம், 16 செப்டம்பர் 1946, பக்கம் 7.

# III

## லக்னோ சத்தியாக்கிரகம்

### உ.பி. தாழ்த்தப்பட்ட ஜாதியினர் உரிமைக்காக போராடுகிறார்கள். சத்தியக்கிரகிகள் மீது போலீஸ் தடியடி.

### ராஜ்போஜ் மற்றும் திலக்சந்த் கைது

உ.பி. பட்டியலிடப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தா லக்னோவில் சத்தியாக்கிரகம் தொடங்கப்பட்டது; அப்போது தீண்ட தகாத பெண் சத்தியாக்கிரகிகளிடம் உயர் ஜாதி போலீசார், அநாகரி மாக நடந்து கொண்டதால் சத்தியாக்கிரகம் பரபரப்படைந்தது பொதுவாக சத்தியாக்கிரகிகள் மீது அதிகாரத்தில் உள்ள காங்கிர அமைசச்சரவையால் நடத்தப்பட்ட மனிதத் தன்மையற்ற செய களைத் தொடர்ந்து, சத்தியாக்கிரக இயக்கத்திற்கான தலைமை பொறுப்பை அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளன தின் பொதுச் செயலாளர் திரு.ராஜ்போஸ் ஏற்றுக் கொண்டார் அவர் ஏப்ரல் 18-ல் கைது செய்யப்பட்டார். உத்திரப் பிரதேச தாழ்த்த பட்ட ஜாதிகள் சம்மேளனத் தலைவர் திலக்சந்த குரீலும் கைது செய்யப்பட்டார். இந்தச் சத்தியாக்கிரகம் பற்றி சுருக்கமான செய்தி அறிக்கை இங்கே தரப்படுகிறது.

**ஏப்ரல் 14, 1947**

தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளன காரியக் கமிட்டி உறுப்பினர் தாதா சாஹேப் ஃபுள்ளிதாஸ்ஜி, கேவ்ன்பூர் நகராட்சி ஆணையர் திருமதி ஃபுல்லிதாஸ், தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத் தலைவர் திரு தோதாராம் ஆகிய 3 தலைவர்களுடன் 148 சத்தியாக்கிரகிகள் கைது செய்யப்பட்டனர். பெண் சத்தியாக் கிரகிகள், சட்டமன்றக் கட்டிடத்திற்குள் நுழைந்து, 15 நிமிடங் களுக்கு மேலாக சட்டமன்றப் பணியை நடக்க விடாதபடி செய்தனர். அந்தப் பெண்களை அவர்கள் வெளியேற்றுவதற்காக அவர்களை உயர்ஜாதி இந்துப் போலீசார் அவமானப்படுத்தினர். அவர்களை போலீசார் முஷ்டியால் தாக்கினர். இதில் அந்தப் பெண்களின் வளையல்கள் உடைந்தன. தங்களை அவமானப்படுத்திக் கொண் டிருந்த வேற்றவர்கள் சிலரின் கன்னத்தில் ஆத்திரமடைந்த பெண்கள் அறைந்தனர். சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்ள பெண்கள், தங்களுடைய தோள்களில் இருந்த குழந்தைகளுடன் சென்றனர்.

இந்தச் செய்தியை லக்னோவில் உயர் ஜாதி இந்துக்களின் பத்திரிக்கை கள் முற்றிலும் இருட்டடிப்பு செய்துவிட்டன. சத்தியாக்கிரகத்தின் போது ஏற்பட்ட மோதலில் 2 பெண்கள் காயமடைந்தனர்.

*சத்தியாக்கிரகிகளிடையே திரு. ராஜ்போஸ் உரையாற்றினார்.*

*1947 ஏப்ரல் 17*

*உ.பி. தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் சத்தியாக் கிரகம் இன்று 4-வது நாளாக நடைபெற்றது. நூறுபேர்களாகக் கொண்ட ஒரு பெரிய குழுவில், ஜான்சி, ஆக்ரா, ஹாமிபூர், லக்னோ உள்ளிட்ட பல்வேறு மாவட்டங்களைச் சேர்ந்தவர்கள் இடம் பெற்றிருந்தனர். தங்களுடைய தோள்களில் குழந்தைகளை சுமந்து வந்திருந்த 20 பெண்கள் உட்பட அனைத்து சத்தியாக்கிரகிகளும் சட்டமேலவையை நோக்கிச் சென்றபோது உஸேன்கான்ஜில் தடுத்து நிறுத்தப்பட்டனர், பின்னர் அவர்கள் கைது செய்யப்பட்டனர்.*

*சத்தியாக்கிரகத்தை தொடங்குவதற்கு முன்பு, திலக் சந்த் குரியல் தலைமையின் கீழ் அஹியா காஞ்சில் உள்ள சத்தியாக்கிரக முகாமில் சத்தியாக்கிரகிகளிடையே திரு.பி.என்.ராஜ்போஸ் உரை யாற்றினார். அவர் தனது பேச்சின்போது இந்துக் கிராமங்களில் அப்பாவிகளும் நீண்ட நெடிய காலமாக கொடுமைப்படுத்தப் பட்டவர்களுமான தாழ்த்தப்பட்ட ஜாதியினர் மீது உயர் ஜாதி இந்து காங்கிரஸ் அமைச்சரவையின் நேரடி தலையீட்டின்கீழ் உயர் ஜாதி இந்துக்கள் இழைத்த சமூக அநீதிகள் பற்றி இதயத்தைப் பிழியும் சோகக் கதைகளை விபரித்தார். மனிதத் தன்மையற்ற சம்பவங்களை மேற்கோள்காட்டிப் பேசிய அவர், அலிகார் மாவட் டத்தில் 4 பேர் உயிருடன் தீயிட்டு கொளுத்தப்பட்டனர். மீரட் மாவட்டத்தில் தாழ்த்தப்பட்ட ஜாதியினர் 12 பேர் சுட்டுக் கொல்லப்பட்டனர். ஹார்டோய் மற்றும் ஜால்டோன் மாவட்டங் களில் எணணற்ற வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டன என்று தெரி வித்தார். இந்த துரதிருஷ்டவசமான தாழ்த்தப்பட்ட ஜாதி மக்கள், உயர்ஜாதி இந்துக்களால் தாக்கப்படாமல் அல்லது கொல்லப்படாமல் ஒரு நாள் கூட இருந்ததில்லை. ஆனால் இது குறித்து தங்களுடைய சொந்த சமூக மக்களை பிரதிநிதித்துவப்படுத்துவதாக கூறிக் கொள்ளும் தீண்டத்தகாதவர்களின் எம்.எல்.ஏ.களில் ஒருவர்கூட இன்னும் சட்டமன்றத்தில் குரல் எழுப்பவில்லை. அவர்களின் நாக்குகள் நிரந்தரமாக அடக்கப்பட்டுவிட்டன. தீண்டத்தகாதவர் களைப் போன்ற ஒரு அடிமை, தங்களுடைய சொந்த உயர் ஜாதி இந்து*

எஜமானர்களுக்கு எதிராக எப்படிப்பேச முடியும்? அப்படி ஏதாவது ஒரு வார்த்தையை பேசினால் அது, பிராமணிய சொர்க்கத்தில் அவர்களுக்குள்ள இடத்தை பறித்துவிடக்கூடுமே! தீண்டத்தகாத எம்.எல்.ஏ-க்கள் 20 பேர் உள்ளனர். இதுவரை அவர்கள், உயர்ஜாதி இந்துக்களின் மனிதத்தன்மையற்ற செயல்பாடு குறித்து ஒரு வார்த்தைகூட பேசவில்லை. ஒருநாள் சட்டமன்ற சபாநாயகர் உத்திர விட்டார், தாழ்த்தப்பட்ட ஜாதிகளைச் சேர்ந்த பெண்கள், இந்துக் காங்கிரஸ் அமைச்சரவை போலீசாரால் அவமானப்படுத்தப்பட்டு வெளியே தூக்கி எறியப்பட்டனர். அவர்களில் பலர் காயமடைந் தனர். இந்தச் சம்பவம் பற்றிய செய்தி உயர்ஜாதி இந்துக்களின் பத்திரிகைகளில் வெளிவரவில்லை. அந்தப் பெண்களை தாக்கியவர் களுக்கு எதிராக உயர் அதிகாரிகளால் எந்த நடவடிக்கையும் எடுக்கப் படவில்லை. ஒடுக்கப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த ஒரு எம்.எல்.ஏ கூட, சட்டமன்றத்தில் ஏதாவதொரு வகையில் ஒரு ஒத்திவைப்புத் தீர் மானத்தை கொண்டுவரவில்லை. ''பூனா உடன்பாட்டின்'' விளை வெல்லாம் இதுதான்; இந்த உடன்பாடுதான், 1932-ல் திரு.எம்.கே. காந்தியின் கேலிக்கூத்தான சாகும்வரை உண்ணா விரதத்திலிருந்து அவரது உயிரைக் காப்பாற்றிய தாழ்த்தப்பட்ட ஜாதிகளுக்கான தனி வாக்காளர் முறைக்குப் பதிலாக கூட்டு வாக்காளர்முறையை கொண்டு வந்தது. காலம் என்பது மக்த்தான காரணியாகும். அது, கற்றறிந்த உலகத்தின் முன்பு நீதியை நிலைநாட்டும் உயர்ஜாதி இந்துப்பெண் ஒருவர் அதே போலீசால் தாக்கப்பட்டிருந்தால் உயர் ஜாதி இந்துப் பத்திரிக்கைகள் ஒரு பெரும் குழப்பத்தையே ஏற்படுத்தி யிருக்கும். அவை, வானத்திற்கும் பூமிக்கும் குதித்திருக்கும்.

உத்திரப் பிரதேச மக்கள் தொகையில் தாழ்த்தப்பட்ட ஜாதியினர் 33 சதவீதத்திற்கும் அதிகமாகும். ஆனால், உத்திர பிரதேசத்தில் எந்தவொரு அரசுப் பணிகளிலும் அவர்களுக்கு பிரதி நிதித்துவம் அளிக்கப்படவில்லை. நிர்வாகத்திலும் சரி, நீதித்துறை யிலும் சரி, கல்வித் துறையிலும் சரி அவர்களுக்கு ஒரு பிரதி நிதித்துவம் காட்டவில்லை. இந்தியாவில் தாழ்த்தப்பட்ட ஜாதி யினரின் நிலைமையானது அமெரிக்காவில் உள்ள நீக்ரோக்கள், ஜெர்மனியிலும் பாலஸ்தீனத்திலும் உள்ள யூதர்கள் ஆகியோரின் நிலைமையைவிட மோசமாக உள்ளது. இந்தப் பிரச்னை, ஒரு சிலர் மட்டுமே சம்பந்தப்பட்டதல்ல, இந்தியாவில் தீண்டத்தகாத மக்கள் கோடிக்கணக்கானவர்கள் சம்பந்தப்பட்டதாகும் என்று திரு.ராஜ்போஜ் கூறினார். அவர் தனது உரையின் இறுதியில் டாக்டர் அம்பேத்கரின் செய்தியை மேற்கோளிட்டார். அப்போது அவர்

எதிர்கால சுதந்திர இந்தியாவில் ஆளும் இனமாக இருக்க வேண்டு மென தாழ்த்தப்பட்ட ஜாதிகள் முடிவு செய்ய வேண்டும். ஒரு எடுபடிப் பங்கை ஆற்றுவதை தொடர்வதற்கோ அல்லது எஜமானர் களின் வேலைக்காரர்களாக நடத்தப்படக்கூடிய ஒரு நிலைமையை ஏற்பதற்கோ அவர்கள் மறுக்க வேண்டும் என்று அக்கூட்டத்தில் விளக்கினார்.

## திலக்சந்த், ராஜ்போஜ் கைது

***1947, ஏப்ரல் 18***

இன்று சத்தியாக்கிரகம் 15-வது நாளாக நடைபெற்றது. அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் பொதுச் செயலாளர் திரு.ராஜ்போஜ், 75 சத்தியாக்கிரகிகளுடன் கைது செய்யப்பட்டு நீதிமன்றத்தில் ஆஜர்படுத்தப்பட்டார்; அந்த சத்தியாக் கிரகிகள், ஆக்ரா, அலிகார், காவன்பூர், துண்டலா, லக்னோ ஆகிய நகரங்களைச் சேர்ந்தவர்கள் ஆவர். தலைமைத் தளபதி (Chief Dictetor) திலக்சந்தி குரியல், சத்தியாக்கிரக முகாமிற்கு முன்பு நேற்று இரவு அரசாங்கத்தால் கைது செய்யப்பட்டார்; இது, லக்னோவிலும் மாகாணம் முழுவதிலும் உள்ள பட்டியலிடப்பட்ட ஜாதியினருக்கு உற்சாகம் அளித்தது. எனவே, சட்டமன்றத்திற்கு முன்பு கைதாகு வதற்கு லக்னோவிற்குள் நூற்றுக் கணக்கானவர்கள் குவிந்து கொண் டிருக்கின்றனர். இதில் பெண்களும், ஆண் சத்தியாக்கிரகிகளும் பின்தங்கியவர்களாகிவிடவில்லை. சத்தியாகிரகத்தில் கைதாகு வதற்கு பட்டியலிடப்பட்ட ஜாதி தாய்மார்கள் தங்களுடைய மகன்களையும் சகோதரிகள் தங்களுடைய சகோதரர்களையும் அனுப்புகின்ற சம்பவங்கள் நடக்கின்றன.

ராஜ்போஜ் கைதாகுவதற்கு முன்பு, லக்னோவில் நடைபெறும் உத்திரபிரதேச சத்தியாக்கிரகத்தின் 2-வது தளபதியாக காவ்ன்பூரைச் சேர்ந்த பதலூராம் சொங்கரை நியமித்தார்.

சட்டமன்றம் முன்பு கைதாகுவதற்கு புறப்படும் முன்பு அவர், குறிப்பாக உத்திரபிரதேசத்திலும் ஜாதியினருக்கும் பொதுவாக இந்தியா முழுவதும் உள்ள பட்டியலிடப்பட்ட ஜாதியினருக்கு கீழ்க்காணும் செய்தியை அளித்தார்.

''நான் சொல்வது என்னவென்றால் ஆஸ்திரேலிய காட்டு மனிதர்களுக்கு காலனி ஆட்சியாளர்களாலும் அமெரிக்காவில்

கலுக்லக்ஸ் கிளானைச் சேர்ந்தவர்களால் நீக்ரோக்களுக்கும் ஜெர்மனியில் யூதர்களுக்கு நாஸிகளாலும் இழைக்கப்படும் துயரங்கள், இந்தியாவில் மதத்தின் பெயராலும் ஜாதியின் பெயராலும் இவை போன்ற ஏனையவற்றின் பெயராலும் இந்துக்களால் பட்டியலிடப் பட்ட ஜாதியினருக்கு இழைக்கப்படும் துயரங்களைவிட குறைவான கொடூரமானவைதான். இது, நமக்கு கொஞ்சம் கொஞ்சமாக விஷம் ஊட்டுவதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை.

எதிர்காலத்தில் ஒவ்வொன்றுக்கும் நாம் நம்முடைய சொந்த பலத்தையும் ஆதாரங்களையும் தைரியத்தையும்தான் சார்ந்திருக்க வேண்டும் என்ற படிப்பினை இப்போது நமக்கு தெளிவாகிறதல் லவா? நாம் நம்முடைய போராட்டத்தை தனித்தே நடத்த வேண்டியுள்ளது; அடிக்கடி இது பட்டியலிடப்பட்ட ஜாதிகளுக்கும் ஏனைய ஜாதிகளுக்குமிடையேயான மோதல் விவகாரமாக இருக்கலாம். நாம் கேட்டோம், பலமுறை கேட்டோம்; ஆனால் கேட்டது கொடுக்கப் படவில்லை. நாம் தட்டினோம், பலமுறை தட்டினோம்; ஆனால் கதவு திறக்கப்படவில்லை. ஆகையினால் நாம் கதவுகளை உடைத்து திறந்து நாம் விரும்புவதை நமக்கு உரியதை எடுக்க வேண்டியுள்ளது. இப்படியாக மிககஷ்டமான நேரங்கள் நமது மக்களுக்கு முன்பாக உள்ள என்று நான் கணிக்கிறேன்.

இதனை எதிர்கொள்வதற்கு நாம் ஒற்றுமைப் படுத்தப்பட வேண்டும், ஒரே சிந்தனையாகவும் ஒரே குரலாகவும் வலுவடைய வேண்டும். நம்முடைய சகோதரர்கள் அனைவருக்கும் நம்மிட மிருந்து விலகி நிற்பவர்களுக்கும் நான் வேண்டுகோள் விடுக்கிறேன். ஒரு கூரையின் கீழ் ஒன்றுபடுவோம், வாருங்கள்; ஒரே குரலில் கோரிக்கை விடுப்போம், வாருங்கள்; ஒரே பதாகையின் கீழ் ஒன்று பட்டு போராடுவோம் வாருங்கள்.

நாம் அணிதிரள வேண்டும், ஒன்றுபட வேண்டும், நாம் கட்டாயம் போராடடியாக வேண்டும், நாம் போராடுவோம், தளத்தின் ஒவ்வொரு அங்குலத்திற்கும் போராடுவோம், ஒரே வரிசையில் நின்று போராடுவோம், நம்முடைய வழியில் குறுக்கே நிற்பவை களை எதிர்த்தும் பேராடுவோம்.

உத்திர பிரதேசத்ல் இப்போது நடைபெறும் இந்தப் போராட் டம், இந்தியாவின் அரசியலிலும் சமூகத்திலும் பொருளாதாரத் திலும் சமமான மனித உரிமைகளை கொண்டிருப்பதற்கான

போராட்டமாகும். உத்திரபிரதேச பட்டியலிடப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தின் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் பங்கெடுக்கும் எண்ணம் எனக்கு இருந்ததில்லை. ஆனால், இந்து காங்கிரஸ் அமைச்சரவைக்கு முன்பு நம்முடைய பெண் சத்யாகிரகிகளுக்கு இழைக்கப்பட்ட மனிதத் தன்மையற்ற செயல்களும் அவமானமும் இந்தப் புனிதமான போராட்டத்தில் பங்கெடுப்பதற்கு என்னைக் கட்டாயப்படுத்திவிட்டன. இந்த அவமானகரமான பழிவாங்கல் நடைபெறும் வரை எந்தவொரு பட்டியலிடப்பட்ட ஜாதி மக்களும் அமைதியாக இருக்க மாட்டார். இப்போது நமது புனித டாக்டர் அம்பேத்கர் தலைமையின்கீழ் நாம் நமது இறுதி லட்சியத்தை அடைய மடிய வேண்டும். அல்லது நம்மால் முடியக்கூடியது எது வானாலும் அதைச் செய்யவேண்டும் என்பதற்கான தருணம் வந்து விட்டது. சத்யாகிரகிகள் தங்களுடைய நடவடிக்கைகளில் வன்முறை யில்லாத முறையை தொடருமாறு நான் வேண்டுகோள் விடுக்கிறேன்.

இறுதியில் நான் பட்டியலிடப்பட்ட ஜாதிகள் சம்மேளனத் தின் கிளைகள் அனைத்திற்கும் ஒரு வேண்டுகோள் விடுக்கிறேன்; இந்தச் சத்தியாகிரகப் போராட்டம், உ.பி.சட்டமன்றத்தின் நடப்புக் கூட்டத்தை தொடர் வரை மட்டுமே நடக்கும் என்பதால் உ.பி.பட்டிய லிடப்பட்ட ஜாதிகள் சம்மேளனத்தைத் தவிர வேறு எந்த மாநிலக் கிளையும் சத்யாகிரகிகளை அனுப்ப வேண்டாம். இந்த சத்யாகிரகப் போராட்டத்தை இறுதிவரை நடத்துவதற்கு உ.பி. பட்டியலிடப் பட்ட ஜாதிகள் சம்மேளனம் போதுமான பலத்துடன் விளங்குகிறது''

*1947, ஏப்ரல் 19*

*சத்யாகிரகத்தின் 16-வது நாள்*

பல்வேறு பகுதிகளிலிருந்து வந்திருந்த 4 குழுக்கள் கைதாயின. முதல் மற்றும் இரண்டாவது குழுக்கள் லொன்டா பூங்கா மற்றும் அமீனா பாத்திற்கு அருகில் கைது செய்யப்பட்டன. மூன்றாவது, நான்காவது குழுக்கள் - இவற்றில் 4 பெண்களும் இருந்தனர். கெய்சர்பாக் அருகில் கைது செய்யப்பட்டன. இந்தக் குழுக்களுக்கு ஜோஹரிலால், செவாராம், கோபிச் சந்த், பிஜிபாத் ராம்ஜீ பாஸ்தி ஆகியோர் தலைமை வகித்தனர். 'ஹரிஜன்' அமைச்சர் திரு.கிர்தாரி லால், நகர மாஜிஸ்டிரேட் பின்தொடர வந்திருந்தார்; அவர், சத்தியா கிரகத்தை நிறுத்துமாறு சத்யாகிரகிகளை கேட்டுக் கொண்டார்;

ஆனால் அவர் தன்னுடைய சமூகத்தை சேர்ந்த மக்களிடம் எந்த ஆதரவையும் தாம் பெற முடியாது என்பதை விரைவிலேயே அறிந்து கொண்டார்.[1]

## உ.பி.யில் பட்டியலிடப்பட்ட ஜாதிகள் சத்யாகிரகம் தொடர்கிறது

***ஏப்ரல் 21, 1947***

*சத்யாகிரகம் இன்று 27-வது நாளாக நடைபெறுகிறது. இந்த நேரம் வரையிலும் 1285 சத்யாகிரகிகள் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். சூ மாகாணத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து குவிந்து கொண்டிருக்கின்றனர். ஆக்ரா, அலிகார், காவ்ன்பூர் ஆகிய நகரங்கள் முன்னணியில் உள்ளன.*

*கேசரலால் தலைமையில் ஆக்ராவிலிருந்து வந்துள்ள 25 பேர் கொண்ட முதல் குழு சாக்பஜார் அருகில் கைது செய்யப்பட்டது. இக்குழுவில் 17 பெண்கள் உள்ளனர். சத்யாகிரகிகள் சாக்பாஜாரை அடைந்த போது அவர்களை விட இருமடங்கு அதிகமாகவிருந்த போலீசார், வன்முறை அல்லாத, அமைதியான சத்யாகிரகிகள் மீது தடியடி நடத்தினர்; இதன் விளைவாக குழுத் தலைவர் கேசர்லாலும் அவருடைய மகளும் பலத்த காயமடைந்தனர். மற்றொரு சத்யாகிரகி பாபூலால் என்பவரும் அவருடைய தலைமையில் கடுமையான காயம் அடைந்தார் அவர் தரையில் விழுந்து மயக்கமுற்றார். அந்த நிலைமையிலும் அவரை அருகில் உள்ள போலீஸ் நிலையத்திற்கு கொண்டு சென்றது. அடுத்து சர்வானந்தன்ஜி தலைமையிலான 46 பேராரைக் கொண்ட குழு கெய்சர்பாக் அருகில் கைது செய்யப்பட்டது. 25 பேர் வீதம் கொண்ட 3-வது குழுவும் 4-வது குழுவும் அமினாபாத் அருகில் கைதாயின. இந்தக் குழுக்களுக்கு ராஜாராமும் ராம்ஜிலாலும் தலைமை வகித்தனர் 5-வது குழுவைச் செர்ந்த 23 பேர் லோதுச்சே சாலை அருகில் கைது செய்யப்பட்டனர். இக்குழுவிற்கு திரு. வால்சந்திஜி தலைமை வகித்தார்.*

*போலீசாரின் தடியடி பற்றி பட்டியலிடப்பட்ட ஜாதியினரிடையே பெரும் கோபம் உள்ளது.*

---

1. *ஜெய்பீம், 27, ஏப்ரல் 1947, பக்கம் 1 மற்றும் 7.*

அனைத்து இந்திய பட்டியலிடப்பட்ட ஜாதிகள் சம்மேளன பொதுச் செயலாளர் திரு.ராஜ்போஜ், உ.பி. பட்டியலிடப்பட்ட ஜாதிகள் சம்மேளனத் தலைவர் திரு.திலக்சந்த் குரியல் ஆகியோரும் மற்றும் கோபிச்சந்த் (ஆக்ரா) ஃபுள்ளிதாஸ் (காவ்ன்பூர்) போன்ற தலைவர்களும் மோசமாக நடத்தப்பட்டது குறித்துமு அவர்களை சிறையில் 'சி' வகுப்பில் அடைத்திருப்பதும் பற்றிய செய்தி மாகாணத்தின் தீண்டத்தகாதவர்களிடையே ஆத்திரத்தையும் கோபத்தையும் ஏற்படுத்தியுள்ளது. எதிர்கால ராமராஜியத்தில் தீண்டத்தகாதவர்கள், உயர் ஜாதி இந்துக்களின் உண்மையான அடிமை இருப்பார்கள் என்று அந்த ராஜியத்தைப் பற்றி அவர்கள் கற்பனை செய்து கொண்டிருக்கின்றனர்.

### ஏப்ரல் 22, 1947

முந்தைய நாள் சாக் அருகில் சத்யாகிரகிகள் மீது போலிஸ் நடத்திய தடியடிகாரணமாக இன்று பட்டியலிடப்பட்ட ஜாதியினரிடையே பெரும் கொந்தளிப்பு இருந்தது. 3 நாட்கள் ஒத்திவைப்புக்குப் பிறகு இன்று மீண்டும் சட்டப்பேரவை தொடங்கப்பட்டது. நகரத்தில் ஆர்ப்பாட்டம் செய்வதற்குப் பதிலாக இன்று பட்டியலிடப்பட்ட ஜாதிகள் சத்யாகிரகிகள் இன்று சட்டமன்றம் முன்பு ஆர்பாட்டம் செய்தனர். திரு.ஜோதராம் தலைமையில் காவ்ன்பூரைச் சேர்ந்த 7 பெண்கள் உள்பட 30 பேர்களைக் கொண்ட முதல் குழு, வழியில் நிறுத்தப்பட்டு கைது செய்யப்பட்டது. ஆக்ராவைச் சேர்ந்த 32 பேர்களைச் கொண்ட இரண்டாவது குழு சட்டமேலவை முன்பு கைது செய்யப்பட்டது. இக்குழுவிற்கு சுவாமி ஹரினான்ந்த்ஜி தலைமை வகித்தார். 3-வது குழுவில் இடம்பெற்றிருந்த 4 பெண்கள் உட்பட 40 பேர் ஹஜரத்கான்ஜ் அருகில் கைது செய்யப்பட்டனர். சத்யாகிரகிகள் கீழ்க்கண்ட பிரதான கோஷங்களை முழங்கினர்.

1) உயர்ஜாதி இந்து காங்கிரஸ் ஒழிக!
2) பேகர் முறை ஒழிக!
3) செய் அல்லது மடி, தனிவாக்காளர் முறை கட்டாயம் வேண்டும்!
4) பந்த் அமைச்சரவை ஒழிக!
5) உ.பி.சட்டப் பேரவையில் உள்ள ஹரிஜன் எம்.எல்.ஏ.க்கள் ஒழிக!

நம்முடைய சத்யாகிரக இயக்கம் பற்றிய முக்கியச் செய்தியை உயர்ஜாதி இந்துக்களின் பத்திரிக்கைகள் வெளியிடாதது மிகவும் புதிராக உள்ளது. தன்னுடைய கைதுக்கு முன்பு அனைத்து இந்திய பட்டியலிடப்பட்ட ஜாதிகள் சம்மேளனப் பொதுச் செயலாளர் திரு. ராஜ்போஜ் அளித்த அறிக்கைகூட வெளியிடப்படவில்லை. எல்லாத் தலைவர்களும் சிறையில் 'சி' வகுப்பில் அடைக்கப்பட்டனர். அவர்கள் செய்திப் பத்திரிக்கைகளைகூட படிக்க அனுமதிக்கப் படுவதில்லை. உயர் ஜாதி இந்துக்களின் பத்திரிக்கைகள், சத்யாகிரகச் செய்திகளை வெளியிடாத தன் மூலம் தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் உத்வேகத்தை தடுத்துவிட முடியாது என்பதை அந்தப் பத்திரிகை கள் உணர்ந்து கொள்ளட்டும். இந்த வழியை கடைப்பிடிப்பதன் மூலம் அவர்கள் தங்களையும் தங்களுடைய சொந்த மக்களையும் மட்டுமே ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள். இந்தியா முழுவதும் தாழ்த்தப்பட்ட ஜாதிகளிடையே ஏற்படும் மிகக் கடுமையான விழிப்புணர்வை பார்க்கும்போது பொதுவான இந்து மக்கள் குழப் பத்திற்குள் தள்ளப்படும் நாள் வெகுவேகமாக நெருங்கிக் கொண் டிருக்கிறது.

இன்றுவரை கைதானவர்களின் மொத்த எண்ணிக்கை 1387 ஆகும். இன்று மட்டும் கைதானவர்களின் எண்ணிக்கை 102 ஆகும்.[1]

## உ.பி. தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளன சத்யாகிரகம்

திரு. பி.என். ராஜ்போஜிற்கு 6 மாத கடுங்காவல் தண்டனை

லக்னோ, சனிக்கிழமை

அனைத்து இந்திய தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளன பொதுச் செயலாளர் பி.என்.ராஜ்போஜ், நகர மாஜிஸ்டிரேட் திரு. சேன்வாலால் 6 மாத கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்; ஊர்வலங்களை தடை செய்து மாவட்ட மாஜிஸ்டிரேட் பிறப்பித்த உத்திரவை மீறியதாகவும் அமைதிக்கு பங்கம் ஏற்படுத்தியதாக வும் குற்றஞ்சாட்டப்பட்டு இந்திய குற்றவியல் சட்டம் 138-ன் கீழ் அவருக்கு இந்தத் தண்டனை விதிக்கப்பட்டுள்ளது.

1. ஜெய்பீம், மே 4, 1947, பக்கம் 2

மற்றொரு தலைவர் கோபிச்பி பாலும் அதே குற்றச்சாட்டுகளின் பேரில் மாதங்கள்* கடுங்காவல் தண்டனை விதிக்கப் பட்டார்.

உ.பி. தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சம்மேளனத் தலைவர் திரு. திலக்சந்த் குரில், ரூ.500 வீதம் 2 பிணையத் தொகைகளை அளிக்க வேண்டுமென மாஜிஸ்டிரேட் உத்திரவிட்டார்.

லக்னோவில் சத்தியாகிரகப் போராட்டத்தில் கைது செய்யப் பட்ட 60 பெண்களையும் குழந்தைகளையும் எச்சரித்துவிட்டு அவர்களை விடுவித்தார். - ஏ.பி.ஐ.''[1]

• • •

1. ஜெய்பீம், மே 25, 1947, பக்கம் 2.

★ எத்தனை மாதங்கள் என்ற விபரம் காணப்படவில்லை - எடிட்டர்கள்

# இணைப்பு - VI

## புனா உடன்பாட்டை கட்டாயப்படுத்தி தீண்டத்தகாதவர் களின் வாக்குரிமையை காந்தி காலி செய்தார்

### காந்தியின் தந்திரங்களுக்கு பிரிட்டிஷ் தலைவர்கள் கடும் விமர்சனம்

பிரிட்டிஷ் நாடாளுமன்ற பொதுச் சபையில் ஜூலை 16-ல் இந்திய சுதந்திர மசோதா மீது நடைபெற்ற விவாதத்தின்போது தாழ்த்தப்பட்ட ஜாதிகளின் அந்தஸ்து பற்றி லார்டு வின்டெர்டன் பேசினார்; அப்போது அவர், இந்தியாவுக்கு திரு.காந்தி ஏராளமான தீய காரியங்களைச் செய்துள்ளார்; அவற்றில் ஒன்று புனா உடன் பாட்டை நடைமுறைக்கு கொண்டுவருவதில் அவர் வெற்றி பெற்றி ருக்கிறார் என்பதுதான்'' என்று கூறினார். காந்தியின் இந்த நட வடிக்கை நிகழ்ந்திருக்காவிட்டால் இவர்கள் (தாழ்த்தப்பட்ட ஜாதியினர்) இன்று கொண்டிருப்பதைக் காட்டிலும் மிகுந்த நல்ல முறையிலான வாக்குரிமையை அனுபவித்திருந்திருப்பார்கள், ஆனால் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாக திரு. காந்தி மிரட்டினார். ஆட்சிமாற்றத்திற்கு பிறகும் அவர் சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாக மிரட்டினால் அது, பிரிட்டிஷ் அரசாங்கம் கவனிக்க வேண்டிய விவகாரமல்ல'' என்றும் வின்டெர்டன் கூறினார்.

அவர் மேலும், இந்தியாவை பிரிட்டன் ஒரு யுத்த அரங்க மாக்கிவிட்டது என்று சொல்லப்படுகிறது. இந்தியாவை ஒரு யுத்த அரங்கமாக்குவதற்கு காந்தி செய்ததைக் காட்டிலும் அதிகமாக ஒரு சிலரே செய்திருக்கிறார்கள் என்றும் கூறினார். ஒரு பக்கத்தில் பிரிட்டனாலும் மறுபக்கத்தில் திரு ஜின்னாவாலும் நேருவாலும் சாதிக்கப்பட்ட பணிகள் குறித்து இந்தக் கடைசி நேரத்தில்கூட காந்தி பாராட்டுவது வருத்தத்திற்குரியது என்றும் வின்வெர்டன் குறிப்பிட்டார்.

மற்றொரு பிரபலமான கன்சாவேடிவ் கட்சித் தலைவர் திரு. பச்செர் இந்தியாவில் சிறுபான்மையினரின் பிரச்னைகள் பற்றிப் பேசினார். அப்போது அவர், சிறுபான்மையினர் மீது குறிப்பாக கமிட்டி மட்டத்தில் அற்பமான கவனமே செலுத்தப்பட்டது. அவர் களுடைய பிரச்னையை இப்போது எழுப்புவது நிச்சயமாக

சாத்தியமில்லை. ஏனென்றால் இப்போது சுயாதிபத்திய உரிமையை யும் (Soverignty) அதிகாரத்தையும் இந்தியர்களிடம் ஒப்படைப்பது பற்றி இன்று நாம் விவாதித்துக் கொண்டிருக்கிறோம்'' என்று கூறினார்.

''இந்தியாவின் உண்மையான அரசியல் சாசனத் தயாரிப் புக்கு முன்பே இந்தியா சுதந்திரம் அடையும் என்பதை நாம் விவா தித்துக் கொண்டும் இருக்கிறோம். இதன் அர்த்தம் என்னவெனில், அரசியல் நிர்ணய சபை, அரசியல் சாசனத்தை உருவாக்கும் அதிகாரத்தை கொண்டுள்ளது. அந்த அரசியல் சாசனத்தின் கீழ்தான் சிறுபான்மையினர் வாழவேண்டியதிருக்கும்'' என்றும் பச்செர் கூறினார்.

சுய அரசாங்கம் கிடைக்க தன்னளவில் பணி செய்த தாழ்த்தப் பட்ட ஜாதிகளின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் தன்னுடைய சமூகத்தினருக்கு சில பரிந்துரைப்பு (Reference) செய்யப்பட முடிந்தால் அது உதவிகரமாக இருக்கும் என்று என்னிடம் கூறினார்'' என்றும் அவர் தெரிவித்தார்.

''எனவே, நான், சொல்வதென்னவென்றால், புதிய அரசியல் சாசனம் உருவாக்கப்படும்போது, தாழ்த்தப்பட்ட வகுப்புகளின் நிலைபாடு குறித்து முழுக் கவனம் கொடுக்கப்படும் என்று நான் நம்புகிறேன்.

''அவர்களுக்கு பிரிட்டன் போதுமானவற்றை செய்யவில்லை என்று சில சமயங்களில் சொல்லப்படுகிறது. மதம் மற்றும் மக்களின் பழக்க வழக்கங்களில் தலையிடாது பற்றிய ராணி விக்டோரியா வின் ஒரிஜினல் பொது அறிவிப்பு, பிரிட்டிஷார் தங்கள் இஷ்டம் போல் செயல்படுவதிலிருந்து அவர்களை தடுத்தது என்பது எல்லோருக்கும் நன்கு தெரிந்ததாகும்''.

ஆனால் பிந்தைய ஆண்டுகளில் பல்வேறு வழிகளில் தாழ்த்தப் லிடப்பட்ட ஜாதிகளை வழிகளில் தாழ்த்தப்பட்ட ஜாதிகளை முன்னேற்றவும் தீண்டாமைக் கொடூரங்களை தடுக்கவும் நாம் முயற்சி செய்திருக்கிறோம்.

வாக்குரிமைக் குழுவானது தாழ்த்தப்பட்ட ஜாதிகள் தங்க ளுடைய சொந்த விவகாரங்களை கவனிப்பதற்கான ஒரு வாய்ப்பு அளிக்கக்கூடிய ஒரு வாக்காளர் முறையை பரிந்துரைத்தது.

## புனா உடன்பாடு

''துரதிருஷ்டவசமாக வாக்குரிமைக் குழுவின் முடிவுகள், திரு.காந்தியின் நீண்டநாள் உண்ணாவிரதத்தால் ஏற்படுத்தப் பட்ட புனா உடன்பாட்டால் அழித்தொழிக்கப்பட்டன.''

''அரசியல் சாசனத்தை உருவாக்கும் குழுவில் செல்வாக்கு செலுத்துவது இப்போது என்னால் முடியாது, ஆனால், ஒரு விஷயம் தெளிவாக உள்ளது; தாழ்த்தப்பட்ட ஜாதியினரின் கருத்துக் களை பிரதிநிதித்துவப்படுத்தும் தங்களுடைய உத்திரவாதமான பிரதிநிதிகளை தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வாய்ப்பை அவர்கள் புனா உடன்பாட்டின் காரணமாக பெற முடியவில்லை''

''இந்தியாவின் ஒரு பகுதியில் அல்லது பகுதிகளில் அவர் களுக்கு உண்மையிலேயே ரொம்பவும் பொருத்தமாக இருக்கக் கூடிய ஒரு தேர்தல் முறையை காண்பது ஒரு வேளை சாத்தியமாக இருக்கலாம் என்று நான் நம்புகிறேன்''

ஏனைய சிறுபான்மையினரையும் குறிப்பிட்ட திரு.பட்லர் பின்னர், ''சிறுபான்மையினரும் இந்தியாவில் தங்கும் ஐரோப்பியர் களும் எதிர்கால இந்தியாவில் சுதந்திரமான, நேர்மையான வாய்ப்பை யும் மகிழ்ச்சியும் அடைவார்கள் என நாங்கள் நம்புகிறோம்'' என்று கூறினார். ''ஆனால் மேலும் பல கருத்துகளுடைய பிரிவினர் உள்ள னர் - அவர்கள் முஸ்லீம்களிடையே உள்ள சிறுபான்மையினர் மற்றும் விவசாயிகள் ஆவர். இவர்கள் அரசியல் வாழ்க்கையில் கலக்காதவர்கள் அரசியலில் கூப்பாடு போடுவதில்லை; பங்கெடுப் பதில்லை. ஆனால் சில சமயங்களில் அவர்களுடைய கருத்துக்கள் மற்றவர்களுடைய வெற்றியை தனதாக்கிக் கொண்டு வெளிச்சம் போட்டுக்காட்டிக் கொள்பவர்களின் கருத்துகளுக்கு முற்றிலும் ஒத்ததாக இருக்கவில்லை''

## மக்களுக்காக ஆழ்ந்த கவனம்

நவம்பர் 12, 1933-ல் லண்டனில் பிரபுக்கள் சபையின் ராயல் கேலரியில் நடைபெற்ற வட்டமேஜை மாநாட்டின் தொடக்க விழா வில் அரசரின் பேச்சில் கீழ்க்கண்ட வாசகம் உள்ளடங்கியிருந்தது.

''பெரும்பான்மையினர் மற்றும் சிறுபான்மையினர் ஆண்கள் மற்றும் பெண்களின் நியாயமான உரிமைக் கோரிக்கைகளையும்

நகரத்தில் வாழ்வோர், நிலத்தில் உழுபவர்கள், நிலப்பிரபுக்கள் மற்றும் குத்தகைதாரர்களின் நியாயமான உரிமை கோரிக்கை களையும் வலுவானவர்கள், பலவீனமானவர்கள், பணக்காரர்கள், ஏழைகள், இனங்கள், ஜாதிகள், தனி ஆட்சி அமைப்பவர்களும் ஒப்புக் கொண்டுள்ள முறைகள் ஆகியவற்றின் உரிமைக் கோரிக்கை களையும் நான் எனது சிந்தனையில் கொண்டுள்ளேன். இந்த விவ காரங்களுக்காக நான் ஆழ்ந்த கவனம் செலுத்துகிறேன்''

திரு.பட்லா முடித்து வைத்துப் பேசினார். அப்போது அவர் கூறியதாவது:

இந்த மக்களுக்காகவும் இந்த விஷயங்களுக்காகவும் நாங்கள் ஆழ்ந்த கவனம் செலுத்துகிறோம். அவர்கள் எங்களுடைய உடனடி கவனிப்பிலிருந்து அப்பால் சென்று கொண்டிருக்கிறார்கள். இந்த சமயத்தில் நாங்கள் புதிய நிலைமைக்கு மாற்றப்பட்டுள்ளோம். அரசாங்கத்தையும் இந்திய மக்களின் நலன்களுக்கான பொறுப்பை யும் ஏற்றுக்கொண்டிருப்பவர்கள் வெற்றி பெற வாழ்த்துகிறோம்.

• • •

## இணைப்பு - VII

## இந்தியாவில் அடிநிலை மக்கள் ஒடுக்குவோரிடம் விற்கப்பட்டனர்

### அமைச்ரவையின் திட்டம் பொதுச்சபை விவாதத்தில் அம்பலமானது

திரு. சர்ச்சில், தன்னுடைய பேச்சின்போது, சமீபத்திய லண்டன் பேச்சுவார்த்தைக்கு பிந்தைய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அறிக்கையை குறிப்பிட்டுப் பேசினார். அப்போது அவர் பேசிய தாவது : பிரிட்டிஷ் அரசின் அறிக்கை இந்த நீண்டநெடிய பயணத் தில் ஒரு முக்கியமான மைல்கல்லாக இருக்கிறது என்று எனக்கு தோன்றுகிறது.''

''இந்தியாவில் மோதல்களில் ஈடுபட்டுள்ள சக்திகளில் பெரும்பாலானவையாக இடம்பெற்றுள்ள 9 கோடி முஸ்லீம்களுக் கும் 4 கோடியிலிருந்து 6 கோடிவரையான தீண்டித்தகாதவர்களுக் கும் சிறப்பு பாதுகாப்பு அளிக்க பிரிட்டிஷ் அரசாங்கம் கடமைப் பட்டது. அவர்கள். இந்தப் பிரச்னையில் அவர்கள் கெட்டிக்காரத் தனமாக தோற்கடிக்கப்பட்டுவிட்டார்கள். அவர்கள், பரந்த இந்து சமுதாயத்தில் ஒரு சிறு பகுதி என்றும் இந்திய வாழ்க்கையில் ஒரு சிறுபான்மை சமுதாயமாக கருதப்பட உரிமை அளிக்கப்படாதவர்கள் என்றும் ஒரு தவறான கருத்தோட்டம் முன்வைக்கப்பட்டது''

''இந்தக் குறிப்பிட்ட அம்சம் குறித்து அரசாங்கத்தின் கருத் தையும் நோக்கங்களையும் விளக்குமாறு நான் பிரதமரை கேட் கிறேன். தீண்டத் தகாதவர்கள், சிறுசிறு மக்கள் பகுதிகள் என்ற கருத்துக்கு தங்களைத் தாங்களே உட்படுத்தி கொண்ட சிறு பகுதி யினராக கருதப்பட உள்ளனரா? அல்லது அவர்கள், (தீண்டத்தகாத வர்கள்) தங்களை ஒடுக்குபவர்கள் என யாரை கருதுகிறார்களோ அவர்களது எண்ணிக்கை அளவை பெரிதுபடுத்துவதற்கு பயன் படுத்தப்பட மட்டும் உள்ளனரா?''

### அரசியல் நிர்ணய்சபை

அரசியல் நிர்ணய சபையின் (Constituent Assembly) உள் ளடக்கம் (Character) குறித்து சர்ச்சில் பேசியபோது, அது (அரசியல்

நிர்ணய சபை) இந்தியாவிற்கான ஒரு குடியரசை ஏற்படுத்துவதற்கு செயல்பட உள்ளது என்பது தெளிவானது என்று கூறினார். மேலும் அவர், ''ஒரு பெரும் பகுதியினர், பிரதிநிதித்துவம் கூட அளிக்கப் படாதபோது அவர்கள் (அரசியல் நிர்ணய சபை) அனைத்து இந்தியர்களின் நல்வாய்ப்புக்கான செயல்பாடுகளை மேற்கொண் டிருக்கின்றனர்'' என்றும் கூறினார்.

திரு.வில்லியம் கோவ் (குறுக்கிட்டு) திரு. சர்ச்சில், வாக் குரிமையை விஸ்தரிக்க வேண்டும் என்பதற்கு ஆதரவாக உள்ளாரா?

திரு. சர்ச்சில் : ''ஆமாம், நிச்சயமாக'' (திரு.கோவ் பலமாக சிரிக்கிறார்) நான் எப்போதுமே வாக்குரிமை விஸ்தரிப்பை ஆதரித்து வந்திருக்கிறேன். நான் மக்களின் விருப்பத்தில் நம்பிக்கை வைத்திருக்கிறேன். ஆனால் காரிய நோக்குடன் அணிதிரட்டப்பட்டு ரகசிய நோக்குடன் தயார் செய்யப்பட்டுள்ள சிறு பகுதியினர் பலப் பிரயோகத்தால் அல்லது மோசடியால் அல்லது ஏமாற்றுச் செயல் களால் அதிகாரத்தை கட்டுப்படுத்திக் கொண்டு முன்னோக்கிச் செல்வார்கள்; அவர்கள் யாருடன் பெருந்திரளான மக்களுடன் நீண்டகாலமாக அனைத்து ஆக்கப்பூர்வமான தொடர்புகளையும் இழந்துவிட்டவர்கள்; ஆனால் அந்தப் பெருந்திரளான மக்களின் பெயரில் அந்த அதிகாரத்தைப் பயன்படுத்துவார்கள்; அத்தகைய சிறுபகுதி மக்களது விருப்பத்தின் ஏறுக்குமாறான போக்கில் எனக்கு நம்பிக்கை இல்லை.

ஆனால், அரசியல் நிர்ணயசபை அமைப்பதற்கு அமைச் சரவை குழு மே மாதத்தில் ஒரு யோசனையை இந்தியாவின் பிரதான அரசியல் கட்சிகள் கூட வேண்டும், தங்களுடைய பிரதி நிதிகள் மூலம் உத்தேச அரசியல் சாசனத்தை தீர்மானிக்க முயற்சிக்க வேண்டும் என்ற அந்த யோசனை அத்தியாவசயமான ஒன்றாக இருந்தது.''

தொடர்ந்து பேசிய திரு.சர்ச்சில், ''அரசியல் நிர்ணய சபை குறித்து அந்தக் கட்சிகளின் உத்தேச மாநாடு தொடங்கியுள்ளது என்று பெருமைமிகு அரசரின் அரசாங்கம் கருதுகிறதா என்பதை அரசாங்கம் தெரிந்துகொள்வது இப்போதும் ஏற்புடையதாக உள்ளது'' என்று கூறினார்.

மேலும் அவர் கூறியதாவது : ''ஒரு திட்டவட்டமான தீர்வு என்பதை எதிர்மறையான வார்த்தைகளின் நான் வலியுத்துவேன்

என்றபோதிலும் அந்தத் தீர்வு ஏற்படுவது நிச்சயம் என நான் உணர்கிறேன்.'' (அரசுத் தரப்பு உறுப்பினர்கள் பலமாக சிரித்தனர்)

''நீண்டநெடிய ஆண்டுகளாக இந்தியாவின் பிரச்னைகளை ஆய்வு செய்திருப்பவர்கள் எதிர்பார்த்திருக்க கூடிய இந்தக் குழப்பம், உறுதியற்ற தன்மை மற்றும் பெருகிவரும் கொந்தளிப்பு நிலவும் நிலைமையில் 3 வாய்ப்புகள் தான் - சந்தேகத்திற்கு இடமற்ற 3 வாய்ப்புகள்தான் - தற்போது நாடாளுமன்றம் முன்பு உள்ளன.

''ஒன்று, இந்தியாவில் என்ன நடந்தாலும் கவலை இல்லை என்று அங்கிருந்து வெளியேறும் கரடுமுரடான வழியை மேற்கொள்வது, இரண்டாவது, இப்போது உடனடியாக ஏற்படக்கூடிய நிலைமையில் இல்லாத ஒரு உடன்பாட்டின் சிறப்பைப் பற்றி கவலைப் படாமல் விட்டுவிட்டு நாடாளுமன்றத்தால் நியமிக்கப் பட்ட ஒரு நிர்வாகத்தை அமைக்க வேண்டும்; அது, இப்போது துயரத்திலும் குழப்பத்திலும் அச்சத்திலும் உள்ள கோடிக்கணக்கான மக்களுக்கு அவர்களின் வாழ்க்கை, சுதந்திரம், மகிழ்ச்சிக்கான நடவடிக்கை ஆகிய அடிப்படையான உத்திரவாதங்களை பாதுகாக்க வேண்டும். மூன்றாவது, இந்திய சமூகங்களை அவற்றின் தனித்தனி வழிகளில், பிரிட்டிஷ் காமன்வெல்த்திற்குள்ளேயோ அல்லது வெளியேயோ அவைகளின் இஷ்டப்படி செல்ல, என்ன நடந்தாலும் சரி என்று விட்டுவிட வேண்டும்.

## உயர்ஜாதி இந்துக்களின் மேலாதிக்கம்

எனினும், என்ன நடந்தாலும் நாம் செய்யக்கூடாத ஒரு விஷயம் உள்ளது; இந்தியாவில் உள்ள 9 கோடி முஸ்லீம்கள் மற்றும் 6 கோடி தீண்டத்தகாதவர்கள் மீது உயர்ஜாதி இந்துக்கள் மேலாதிக்கம் செய்வதற்கான ஏஜன்ஸிகளாகவும் கருவிகளாகவும் ஆகிவிட இந்திய ராணுவத்தில் உள்ள பிரிட்டிஷ் படையினரையும் அதிகாரிகளையும் நாம் அனுமதிக்கக் கூடாது, பிரிட்டிஷ் அதிகாரம் அஸ்தமித்தால்கூட, அதன் செல்வாக்கோ அல்லது அதிகாரமோ, கடுமையானதாகவும் கவலைக்குரியதாகவும் ஏற்பட்டுள்ள 2 பிரிவுகளில் எந்தவொன்றுக்கம் ஆதரவாக அவர்களை பயன்படுத்தப்படக் கூடாது. ஏனென்றால், லட்சோப லட்சக்கணக்கான சிறுபான்மையினர் மீது மத ரீதியான, மற்றும் கட்சி ரீதியான வெற்றியை வன்முறை மூலம் சுமத்துவதற்கு இத்தகைய போக்கு பயன்படுத்தப்படும்; இந்த நிலைமை அனைத்துக் கொள்கைகளின் மோசமான விளைவு

களையும் இணைத்து விடுவதாக இருக்கும், மேலும் நமக்கு நம் முடைய சுமைகளிலிருந்து விடுவிப்போ அல்லது தார்மீக பொறுப்பி லிருந்தும் உண்மை நிலவர பொறுப்பிலிருந்தும் துயரத்துடன் பெறப் படும் விடுதலையையோ நமக்கு கொடுக்காமல் நம்மை சோகத்தில் நிரந்தரமாகவும் ஆழமாகவும் ஆழ்த்திவிடும்.

ஆகையினால்தான், இந்தப் பிரச்னைகள் தயவு தாட்சண்ய மின்றியும் வெளிப்படையாகவும் பிரிட்டிஷ் மற்றும் இந்திய மக்கள் முன்பு வைக்கப்பட வேண்டும், இதை அவர்களுடைய (மக்க ளுடைய) தற்போதைய மனத்துயரங்கள் மற்றும் குழப்பங்களுக்கு மிடையேயும் செய்தாக வேண்டும் என்று நாம் கருதுகிறோம்; இதன் மீது விவாதம் நடத்துமாறு அவர்களை கேட்பது நம்முடைய கட்டாயக் கடமையாகும் என்று நாங்கள் நினைக்கிறோம்'' (எதிர்க் கட்சிகள் பலத்த ஆரவாரம்)

## கன்சர்வேடிவ் கட்சி (டோரி)யின் நிலையை திரு. பட்லர் விளக்குகிறார்

இந்தியா சம்பந்தமான முன்னாள் பிரிட்டிஷ் செயலாளர் திரு.ஆர்.ஏ.பட்லர், இந்தியா பற்றி எதிர்க்கட்சிகளின் நிலைமையை விளக்கிப் பேசினார். அப்போது அவர் இந்திய அரசியல் வல்லுநர் களை சந்திக்கும் வாய்ப்பு தனக்கு கிடைத்ததாகவும் அவர்களுடன் செய்த பணியில் உலகத்திலேயே உயர்தரம் வாய்ந்த அரசியல் வல்லுநர்கள் இல்லை என்ற உறுதியான நம்பிக்கையை அந்தச் சந்தர்ப்பங்கள் தனக்கு ஏற்படுத்தின என்று கூறினார். ''எனவே, நாம் நிர்ணியித்துக் கொண்டிருக்கும் இலக்கு பற்றி கருத்துவேறுபாடு இல்லை. நாங்கள் (எதிர்க்கட்சி) கடந்த காலத்தில் எப்போதுமே ஒரு விஷயத்தை சொல்லி வந்திருக்கிறோம்; அதாவது, இந்தியா விற்கான சுயாட்சி (Self Governement) இந்திய மக்களால் தயாரிக்கப் பட்ட ஒரு அரசியல் சாசனம் அல்லது அரசியல் சாசனங்களின்கீழ் மட்டுமே நிறைவேற்றப்பட முடியும், அதற்கு இந்தியத் தேசிய வாழ்க்கையில் உள்ள பிரதான சக்திகள் ஒப்புதல் அளிக்க வேண்டும். எங்களுடைய இரண்டாவது நிலைபாடு, இந்தியா மீதான நம்முடைய இறுதியான கட்டுப்பாட்டை திறனுடன் செயல்படும் ஒரு அரசாங்கத் திடமோ அல்லது அரசாங்கங்களிடமோ கைமாற்ற வேண்டும். இந்தியாவை அரசாங்கமே இல்லாத அராஜகமான நிலைமைக்கோ அல்லது ஒரு உள்நாட்டு யுத்தத்ததிற்கோ தள்ளிவிட்டு விட முடியாது. இந்திய நிலைமை பற்றிய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கடைசி அறிக்கை

யானது, இந்தக் கடமைகளில் முதலாவதை ஒப்புக் கொள்வதற்கான ஆதாரமாக உள்ளது என்றும் பட்லர் கூறினார்.

பட்லர் மேலும் கூறுகையில் ''நான் அரசாங்கத்தின் கடைசி அறிக்கையை அதுவும், எந்தவொரு அரசியல் சாசனத்தையும் ஏற்க மறுக்கும் இந்தியப் பகுதிகள் மீது அது திணிக்கப்படுவதற்கு திட்டமிடப்படவில்லை என்று இந்த அறிக்கையின் கடைசிப் பகுதியில் கூறப்பட்டுள்ளதை வரவேற்கிறேன். எனினும் நான் ஒன்று அல்லது இரண்டு விஷயங்கள் சம்பந்தமாக விளக்கம் பெறவிரும்புகிறேன். அந்த அறிக்கையானது இந்தியாவின் பொதுவான பகுதிகளில் வசிக்கும் மக்கள் தொகையின் பெரும் பகுதியினர் பற்றி குறிப்பிடுகிறது. இந்த வார்த்தைகள் இந்தியாவின் விவகாரங்களை எங்களில் நன்கு தெரிந்தவர்களுக்கு புதிதாக உள்ளது. சர்ஸ்டாஃபோர்டு கிரிப்ஸ், விவாதத்தில் கலந்து கொண்டு பேசிய போது பெருமளவிற்கு வித்தியாசமான வார்த்தைகளை பயன்படுத்தினார்; அது அதனுடைய அர்த்தத்தில் மிகக் குறுகியதாக இருக்கிறது, இந்தப் பிரச்னை தெளிவுபடுத்தப்படாவிட்டால் குழப்பம் ஏற்படலாம்.''

''அரசியல் நிர்ணய சபைக்குள் வருவதற்கு முஸ்லீம் லீக்கை ஒப்புக் கொள்ளுமாறு செய்யாவிட்டால் பிறகு, அவர்கள் இந்தியாவில் பெரும்பான்மையாக உள்ள பகுதிகளை இறுதியில் ஒரு கட்டுக்குள் கொண்டுவர கட்டாயப்படுத்த முடியாது என்று சர். ஸ்டாஃபோர்டு கூறினார். முஸ்லீம் லீக் அளவிற்குள் அரசாங்கம் தன்னைத்தானே முழுமையாக கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று நான் (பட்லர்) நினைக்கவில்லை. ஒட்டுமொத்தமாக முஸ்லீம்கள் என்ற கருத்தை பயன்படுத்துவது மிகச் சரியானதாகும்; இன்று பதிலளிக்கவிருக்கும் அமைச்சர் தற்போது இருக்கக்கூடிய புரிதலையும் பரிசீலனையில் உள்ள சமூகங்களையும் சக்திகளையும் உறுதிப்படுத்துவார் என்று நம்புகிறேன்''

பட்லர் மேலும் பேசுகையில் முஸ்லீம் சமுதாயத்தை மட்டும் எதிர்க்கட்சிகள் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை என்றும் ஏற்கெனவே நாடாளுமன்றத்தில் முன்வைக்கப்பட்ட மீண்டும் வைக்கப்பட உள்ள ஏனைய சிறுபான்மையினரின் பிரச்னைகளையும் சிந்தித்துக் கொண்டிருக்கின்றன'' என்றும் கூறினார்.

பிரிட்டனின் பணி சிறப்பாக இருக்க வேண்டும், நேர்மையாகவும் வெற்றிகரமாகவும் முடிக்கப்பட வேண்டும்; இந்த

நோக்குடன், நாடாளுமன்றத்திற்கும் இந்திய மக்களுக்குமிடையே முறையான புரிதல் இருக்க வேண்டும் என்பது அத்தியவசியமானது ஆகும் என்ற நிலைமை ஏற்பட்டது. பேச்சுவார்த்தையில் அனைத்து கருத்தம் சங்களும் முன்வைக்கப்பட வேண்டும் எந்த விபரங்களும் விவாதிக்கப்படாமல் விட்டுவிடுப்படக் கூடாதது என்பதற்கு அனைத்து காரணங்களும் உள்ளன'' என்று பட்லர் கூறினார்.

அரசியல் நிர்ணயசபைக்குள் பட்டியலிடப்பட்ட ஜாதிகளின் பிரதிநிதித்துவம் கொண்டு வரப்பட்டுள்ளது; இதில் கடைப்பிடிக்கப் பட்ட முறையில் போதிய கவனம் செலுத்தப்படவில்லை என்பதைக் காட்டிலும் சர்ஸ்டாஃபோர்ட்டு கிரிப்ஸின் பேச்சில் எந்தவொரு பகுதியும் குறைவான நம்பிக்கையூட்டக்கூடியதாகவே அதிகமாக கண்டிக்கதக்கதாகவோ இருக்கவில்லை என்றும் பட்லர் குறிப் பிட்டார். இந்தியாவில் அடித்தட்டு ஏழை மக்கள் மற்றும் மிகவும் ஒடுக்கப்பட்ட மக்களின் நலன்கள் புறக்கணிக்கப்பட்டுள்ளன, அவை அவர்களுடைய நீண்ட கால ஒடுக்குமுறையாளர்களுக்கு விற்கப்பட்டுவிட்டன, இதற்கான பேரத்தில் பிரதமரே உதவக் கூடியவராக இருந்திருக்கிறார் என்பது தனக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியுள்ளது; இந்நிலைபாட்டுக்க தொழிலாளர் இயக்கம் அளித்துள்ள அமைதியான ஒப்புதலை தாம் புரிந்துகொள்ள முடிய வில்லை என்றும் இந்த நிலைபாடுகளை அரசங்காம் ஒருபோதும் ஏற்றுக் கொண்டிருக்கக்கூடாது என்றும் பட்லர் கூறினார்.

அப்போது குறுக்கிட்டுப் பேசிய திரு.அலெக்சாண்டர், ''இந்தியாவில் நடைபெற்ற மகாணத் தேர்தல்களில், திரு. பட்லர் குறிப்பிடுகிற 2 பிரிவுகள் அல்லாமல் தாழ்த்தப்பட்ட ஜாதிகளைச் சேர்ந்த சுயேச்சை வேட்பாளர்கள் ஏராளமானவர்கள் தேர்ந்தெடுக் கப்பட்டுள்ளனர் என்பதையும் இதனால் அவசர கவனிப்புக்கான நிலைமையில் செயல்பட வேண்டிய முறையில் நாம் செயல்பட நேர்ந்தது என்பதையும் திரு.பட்லர் உணர்வாரா? என்று கேட்டார்.

திரு.அலெக்சாண்டர் தொடர்ந்து பேசுகையில், வாக்குரிமை என்பது புனா உடன்பாடு மட்டுமல்ல, அது 1935-ம் ஆண்டில் அரசாங்கம் கொண்டு வந்தது என்றும் கூறினார்.

''மூன்றாவதாக புதிய வாக்குரிமை என்ற முற்றிலும் புதிய அடிப்படையையும் இந்தியா அளவிலான திரட்டப்பட்டுள்ள விபரங்களையும் நாம் அலசி ஆராய வேண்டும் என்றும் சாத்திய

மான புதிய தீர்வை ஒரு நீண்ட காலத்திற்கு தள்ளிப்போட வேண்டும் என்றும் அவர் (பட்லர்) யோசனை கூறுகிறாரா? அந்த விபரங் களையெல்லாம் நாம் இப்போது எதிர்கொள்ளவில்லையா? என்று அலெக்சாண்டர் கேட்டார்.

## பட்டியலிடப்பட்ட ஜாதிகளின் பிரதிநிதித்துவம்

திரு.பட்லர் : சுயேச்சை உறுப்பினர்கள் பற்றிய முதல் அம்ச மானது நிச்சயமாக சரியானதுதான். இந்த அம்சத்தை அலசி ஆராய்ந் ததில் நான் சேகரிக்க முடிந்த அனைத்துக் கருத்துகளிலிருந்தும் ஒரு விஷயம் சந்தேகத்திற்கு இடமின்றி உள்ளது; அது என்ன வெனில், காங்கிரஸ் கட்சியின் கண்டிப்பு முறையால் (Discipline) தாழ்த்தப்பட்ட ஜாதிகள் ரொம்பவே அச்சுறுத்தப்படுத்தப்பட்டிருக் கின்றன; இதனால் தேர்தலில் அவர்களில் பலர் காங்கிரஸ் கட்சி யின் சின்னத்தில் போட்டியிடுவதைக் காட்டிலும் சுயேச்சைகளாக போட்டியிடவே முடிவு செய்தனர்.

பட்லர் மேலும் பேசுகையில், தாழ்த்தப்பட்ட ஜாதிகள் சட்டப்பேரவையில் காங்கிரஸ் கட்சியின் பிரதிநிதிகளால் பிரதிநிதித் துவப்படுத்தப்பட வேண்டும் என்பது சரியானது என தாம் நினைக்க வில்லை என்றும் கூறினார். அரசாங்கம் சிறுபான்மையினருக்கான நீதியை பெறுவதற்கான தன்னுடைய பெரும்பகுதி நம்பிக்கையை ஆலோசனைக்குழு மீது வைத்துக் கொண்டிருந்தது என்றும் குறிப் பிட்டார். சிறுபான்மையினரரைப் பற்றிய கமிட்டியின் முடிவுகள் அரசியல் சாசனத்தில் சேர்க்கப்படுமா என்றும் கேட்டார்.

''சமரசம், விட்டுக்கொடுப்பது ஆகியவற்றிற்கான ஒரு மனநிலை இந்தியாவில் இல்லை; எனவே, ஒரு கடுமையான நிலைமையை அரசாங்கம் சந்திக்க நேரிடும் என்று கூறிய பட்லர், இத்தகைய நிலைமையில் ஏதேனும் ஒரு நிலை குலைவு ஏற்பட்டால் அரசாங்கம் மேற்கொண்டு ஒரு ஊக்க முனைப்பைக் காட்டும் என்று தாம் நம்புவதாகவும் குறிப்பிட்டார். ஒரு புது முன்முயற்சி அவசியம் என்று உறுதிப்படுத்தப்பட்டால், அது செயல்திட்டத்தை சிக்கலற்ற தாக்குவது சம்பந்தமானதாகவும் பேச்சுவார்த்தைகளின் வெற்றி கரமான விளைபயன்களுக்கு முந்தைய காலத்தில் பிரிட்டிஷ் பொறுப்பு களை மிக்க தெளிவுபட ஏற்பதுவுமாக இருக்க வேண்டியதிருக்கும், கடந்த காலத்திலும்கூட, முறைப்படியான தீர்வுக்கு ஒரு வாய்ப்பு இருந்தது, ஆனால், அது அரசாங்கம் எந்த அளவிற்கு உறுதியானதாக

இருந்தது, இருக்கும் என்பதையும் நிலைமையின் அபாயங்களை அரசாங்கம் எந்தளவிற்கு தெளிவாகப் பார்த்தது என்பதையும் பொறுத்திருந்தது. ''நாம் நம்முடைய கடமைகளை இந்தச் சமயத்தில் ஒதுக்கித்தள்ளிவிட முடியாது. அவை (அந்தக் கடமைகள்) தொடர்ந்து இருக்கின்றன, அவற்றை போதுமான வரையில் நிறைவேற்றுவதைப் பொறுத்தே இந்திய மக்களின் எதிர்கால மகிழ்ச்சி இருக்கும்'' என்று பட்லர் தனது பேச்சை முடித்தார்.

## விவாதத்திற்கு அலெக்சாண்டர் பதில்

பிரிட்டிஷ் நடாளுமன்றத்தில் நடந்த விவாதத்திற்கு தற்காப்புத் துறை அமைச்சராக பதவி நியமனம் செய்யப்பட்டுள்ள திரு.ஏ.வி. அலெக்சாண்டர் பதிலளித்துப் பேசினார்; அப்போது அவர், 1935 ஆம் ஆண்டுச் சட்டத்தில் ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள் (Depresseed classes) தனியொரு அரசியல் சக்தியாக நடத்தப்பட்டன என்றும் அந்த வகையிலான எந்தவொரு தனி நிலைமையும் புதிய சட்டமன்றத்திலும் அளிக்கப்பட வேண்டுமா அல்லது வேண்டாமா என்பது அரசியல் சாசன நிர்ணயசபை கவனிக்க வேண்டிய விவகாரமாகும் என்றும் அலெக்சாண்டர் கூறனார். இதனை விரும்பத்தக்கதாகவோ அல்லது அந்த விஷயத்தில் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் நலன்களுக்காக அந்த விஷயத்தில் அவர்கள் சட்டமன்றத்தை தங்களுடைய செல்வாக்கிற்குள் கொண்டுவர முயற்சிக்க வேண்டுமென்று அரசாங்கம் கருதவில்லை என்றும் அலெக்சாண்டர் பிரகடனம் செய்தார். அரசியல் சாசனத்தின் விதிகள்தான், சிறுபான்மை சக்திகளின் உரிமைகளுக்கு பாதுகாப்பு முறைகளாகும் என்பதே அரசாங்கத்தின் கண்ணோட்டமாகும் என்றும் கூறினார்.

இது குறித்து அமைச்சரவை குழு, கூறியதை நாடாளுமன்றத்திற்கு நினைவுபடுத்திய அலெக்சாண்டர், அதாவது, அரசியல் நிர்ணயசபை தனது பணிகளை முடித்துவிடும் சமயத்தில் பிரிட்டிஷ் அரசாங்ம் நாடாளுமன்றத்திற்கு ஒரு பரிந்துரையை அளிக்கும், அதில் 2 விஷயங்கள் தொடர்பாக செயல்பாட்டுக்கு வருமாறு நாடாளுமன்றத்தை கேட்டுக் கொள்ளும். இந்த இரண்டில் ஒன்று, சிறுபான்மையினரின் பாதுகாப்புக்கு ஏற்ற விதி ஏற்படுத்தப்பட வேண்டும் என்பதாகும் என்று குறிப்பிட்டார். பிரதான கட்சிகள் இரண்டும், அத்தகைய பாதுகாப்புக்குரிய முறையான விதியை அரசியல் சாசனத்தில் உருவாக்கும் நோக்கம் கொண்டுள்ளதாக பிரகடனம் செய்துள்ளன என்றும் அரசியல் நிர்ணய சபை அவ்வாறு

செய்யும் என்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் சந்தேகிக்க வேண்டிய தில்லை என்றும் அலெக்சாண்டர் கூறினார்.

சிறுபான்மையினருக்கான பாதுகாப்பு, அரசியல் சாசனத்தில் அளிக்கப்பட வேண்டும் என்பது அரசாங்கத்தின் நோக்கமாகும் என்று ஹக்மோல்சன் (கன்சர்வேடிவ் கட்சி) தெரிவித்த கருத்துடன் தான் உடன்படுவதாகவும் அலெக்சாண்டர் கூறினார். அவர் மேலும் பேசுகையில், ''அதற்காக டாக்டர் அம்பேத்கர், கிரிப்ஸ் குழுவிடம் பலமாக வாதாடினார் என்பதை நான் புரிந்துகொள்கிறேன். நாங்கள் கடந்த வாரம் தயாரித்து வெளியிட்ட எங்களுடைய அறிக்கையின் கடைசிப் பத்தியில், விருப்பமற்ற சமுதாயம் ஒன்று மீது அது விரும்பாத ஏதேனும் ஒன்றை கட்டாயமாகத் திணிக்கும் சிந்தனை எங்களிடம் இல்லை என்பதை தெளிவுப்படுத்தியிருக்கிறோம். காங்கிரஸ் கட்சியும் அதனை ஒப்புக்கொள்கிறது. மே.25 ஆம் தேதிய எங்களுடைய அறிக்கையில், சிறுபான்மையினருக்கு உரிய பாதுகாப்பை நாம் பெறும்பட்சத்தில் அரசியல் சாசனத் தயாரிப்பை இந்தியர்களிடமே விட்டுவிட நாம் ஒப்புக்கொண்டேயிருக்கிறோம். இந்திய மக்களுக்கு அளித்த நம்முடைய உறுதி மொழிகளை நாம் நிறைவேற்றுவோம்''[1] என்று அலெக்சாண்டர் கூறினார்.

---

1. *ஜெய்பீம், ஜனவரி 1, 1947*

# இணைப்பு - VIII

**ரகசியம்**

*1934/34 எஸ்.பீ*
*மெமோ நம்பர்*
*39-பீகார்-37**

## பீகார் மாகாண ஒடுக்கப்பட்ட வர்க்க லீக்

*பீகார் மாகாண ஒடுக்கப்பட்ட வர்க்க லீகின் தலைவர் ஜெகஜீவன்ராம் பாட்னாவிலிருந்து டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு ஒரு கடிதத்தை அவரது முகவரியான, ராஜ்கிரகா, தாதார், பம்பாய்க்கு ஒரு கடிதம் அனுப்பியுள்ளார் என்பது நம்பகமான முறையில் அறியப்பட்டுள்ளது. அக்கடிதத்தின் உள்ளடக்கங்கள் கீழே கொடுக்கப்படுகின்றன.*

**''ஒன்றுபடுவோம் அணிதிரள்வோம்''**

*பேங்கிப்பூர், பாட்னா,* *மார்ச் 8, 1937*

*எண். 41*

*என் அன்புள்ள டாக்டர் சாகேப்,*

*நான் உங்களுடைய 3-ந் தேதிய கடிதத்தை பெற்றுக் கொண்டேன். உங்களுடைய சிறு விபரப் புத்தகம் (Brochure) அச்சடிக்கப்பட்டுவிட்டால் அதனை மொழியாக்கம் செய்வதை தொடங்கும் வகையில் ஒரு புத்தகத்தை தயவு செய்து அனுப்பி வையுங்கள்.*

*நீங்கள் விரும்பியதைப் போலவே, நான் தேர்தலில் போட்டியிடுவோரின் பட்டியலை அனுப்பி வைக்கிறேன். நாங்கள் காங்கிரசுடன் ஒரு உடன்பாட்டை செய்தோம் என்பதையும் அந்த உடன்பாட்டின் விளைவாக லீகைச் சேர்ந்த 9 பேர் திருப்பி அனுப்பப்பட்டார்கள் என்பதை நான் ஒப்புக் கொள்ள வேண்டும். அவர்கள் லீக்*

---

★ *பீகார் சி.ஐ.இலாகா தனிப்பிரிவு, பாட்னா, 10, மார்ச், 1937 தேதியிட்டது. தனி அதிகாரியின் அறிக்கையின் நகல், மார்ச் 9, 1937 தேதியிட்டது.*

உறுதிமொழியிலும் கையெழுத்திட்டார்கள், சில குறிப்பிட்ட கருத்து வேறுபாடுகளுடன் காங்கிரஸ் உறுதி மொழியிலும் கையெழுத்திட்டனர். பீகாரில் காங்கிரஸ் கட்சியைத் தவிர அணிதிரட்டப்பட்ட கட்சி எதுவும் இல்லை என்பதை அநேகமாக நீங்கள் அறிவீர்கள். உள்ளாட்சித் துறை அமைச்சர் சர் கணேஷ்தத் சிங், அவருடைய கட்சியை உருவாக்க முயற்சித்துக் கொண்டிருந்தார்; ஆனால் அவர் அதனை அமைக்க முடியவில்லை. நாங்கள், கடைசி நேரத்தில் அதாவது நவம்பர். 3, 1936-ல் காங்கிரஸ் கட்சியுடன் உடன்பாடு செய்து கொண்டோம். ஒடுக்கப்பட்ட வர்க்கங்களாகிய நாங்கள், எங்களுடைய இயக்கத்தை மிகத் தாமதமாக தொடங்கியுள்ளோம், ஒரு சின்ன அமைப்பை ஏற்படுத்தியுள்ளோம். ஆனால் சமீபத்திய தேர்தலில் நாங்கள் அடைந்த அனுபவம் ஒரு விஷயத்தை காட்டுகிறது; அது என்னவெனில் நாங்கள் எங்களுடைய வேலைகளை அடுத்து வரும் 5 ஆண்டுகளுக்கு மேற்கொண்டால் அடுத்த தேர்தலில் சுயேச்சையாகவும் வெற்றியுடனும் நாங்கள் போட்டியிட முடியும்.

அலகாபாத்தைச் சேர்ந்த திரு.பால் தியோ பிரசாத் ஜெய்ஸ்வால் என்பவரை நீங்கள் அறிவீர்கள். அவர் பாட்னாவிற்கு வந்திருக்கிறார், அவர் அனைத்து இந்திய மாநாடு ஒன்றை நடத்த விரும்புகிறார். இது பற்றிய செய்தி இங்கு அவரால் பத்திரிக்கைகளுக்கு கொடுக்கப்பட்டுள்ளது. அதில் மாநாட்டுக்கு திவான் பகதூர் ஸ்ரீநிவாசன் தலைமை தாங்குவார் என்றும், நீங்கள் (அம்பேத்கர்) மாநாட்டிலில் கலந்து கொள்வீர்கள் என்றும் கூறப்பட்டுள்ளது. எனக்கு உண்மை என்ன என்பதுவும் தெரியாது. அந்த மனிதரை நம்பவும் முடியாது. கடந்த ஆண்டு லக்னோவில் ஒரு மாநாடு நடத்தப்பட்டது. ஜெய்ஸ்வால்தான் அந்த மாநாட்டை கூட்டுவதில் காரண கர்த்தாவாக செயல்பட்டவர். நான் உங்களை பார்ப்பதற்கு மட்டும் லக்னோவிற்கு வந்தேன், ஆனால் ஏமாற்றமடைந்தேன். இப்போது அவர் என்னுடைய உதவியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். ஆனால் நான் வெளிப்படையாக அவருக்கு உதவ முடியாது. நீங்கள் மாநாட்டில் கலந்து கொள்வீர்கள் என்பது எனக்குத் தெரியாவிட்டால் நான் அவருக்கு எந்த உதவியும் அளிக்க முடியாது. இந்த மாநாடு, 1937, ஏப்ரல் 9, 10, 11 ஆகிய தேதிகளில் நடத்தப்பட உள்ளது. பீகாரில் அவருடன் யாரும் இல்லை. அவர் அவருடைய அலுவலகத்தை இங்கே கத்தோலிக்க ஆலயம் அருகில் அமைத்

துள்ளார். ஒவ்வொரு விஷயமும் மிஷனரிகளால் மறைவுத் திட்டம் மூலம் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் லீகின் (Depressed classes League) காரியக் கமிட்டி, பாட்னாவில் ஒரு மாகாண மாநாட்டை ஏப்.15-க்கும் மே.15-க்குமிடையே நடத்த முடிவு செய்துள்ளது. அதற்கு உங்களை அழைக்கவும் அது முடிவு செய்துள்ளது. ஜெய்ஸ்வால் நடத்தும் இந்த மாநாட்டில் - இந்த மாநாடு நடக்குமா என்ற சந்தேகமும் எனக்கு உள்ளது - கலந்து கொள்ள நீங்கள் வரும் பட்சத்தில் நம்முடைய சந்திப்புக்கான தேதியை ஏப்ரல் 12-ந் தேதியையொட்டி நாம் நிர்ணயித்துக் கொள்வோம். ஜெய்ஸ்வாலால் கூட்டப்படும் இந்த மாநாட்டில் நீங்கள் கலந்து கொள்வீர்களா என்பதை இந்தக் கடிதம் கிடைத்தவுடன் எனக்குத் தெரிவிப்பீர் களா? ஒரு விஷயம், அவர் (ஜெய்வால்) 100 ஒடுக்கப்பட்ட வகுப்பு களைக் காட்டிலும் அதிகமாக திரட்ட முடியக்கூடியராக இருக்க மாட்டார்.உண்மையில் அவர் லக்னோவில் செய்ததைப்போல, ஆயிரக்கணக்கான முஸ்லீம்களையும் கிறிஸ்தவர்களையும் அவர் அழைக்க முடியும். இந்த வழிமுறைக்கு என்னுடைய கடும் ஆட்சேபணையை தெரிவிக்கிறேன். நாம் நியாயமான ஒடுக்கப் பட்ட வகுப்புகள் மாநாட்டை நடத்த வேண்டும். வெகுவிரைவில் உங்களின் தகவலை எனக்குத் தெரிவியுங்கள்.

மிக்க மரியாதையுடன்

உங்கள் உண்மையுள்ள
(ஒப்பம்) ஜகஜீவன்ராம்.

## பீகார் மாகாண சட்டப் பேரவைத் தேர்தலில் போட்டியிட்ட வேட்பாளர்கள் பட்டியல்

| | பெயரும் முகவரியும் | டிக்கட் | பதிவான வாக்குகள் |
|---|---|---|---|
| 1. | ஜெகஜீவன் ராம், சாந்த்வா அராவர் | டி.சி.லீக் காங்கிரஸ் | போட்டி இல்லை |
| 2. | ரம்பாபொவான் ரபிதாஸ், கோபால் கான்ஞ், சாரான் | ,, | ,, |
| 3. | பால்கோவிந்த்பகத், பேட்டையா சாம்ப்ரான் | ,, | ,, |
| 4. | ஷெயோ நந்தன் ராம், வி.மன்சூர்பூர் சாம்ப்ரான் P.O. மார்வான், முஜாப்பூர் மாவட்டம் | ,, | ,, |
| 5. | டாக்டர்.ரகுநாதன் சர்தார் மருத்துவமனை மோங்கீர் | ,, | ,, |
| 6. | காருராம், ஆசிரியர் செயின்ட் கொலம்பஸ் கல்லூரி, ஹஸாரிபாக் | ,, | ,, |
| 7. | ராம்பாராஸ்தாஸ் (பாரசு சமார்), பெல்த்து கிராமம், பகல்பூர் மாவட்டம் | ,, | 754 |
| 8. | மகா பீர்தாஸ் லாலுசாக் P.O. மிர்ஜானாத் | அமைச்சரவை | 1700 |
| 9. | பிஷுவன்சரண்தாஸ் ரபிதாஸ், கூட்டுறவு சொசைட்டி மான்பூர் மாவட்டம் | புருவியா லீக் காங்கிரஸ் | 1964 |
| | இவரை எதிர்த்து போட்டியிட்ட குலுதோயா, மாமூர் ஜோர் கிராமம் சார்ந்தவர் | அமைச்சரவை | 2300 |

| பெயரும் முகவரியும் | டிக்கட் | பதிவான வாக்குகள் |
|---|---|---|
| 10. ஜிதுராம்,<br>பான்ஸ் திஹ் கிராமம்<br>P.O. லெஷிகான்ச்<br>பாலமாவு மாவட்டம் | லீக்-காங்கிரஸ் | 2744 |
| இவரை எதிர்த்து போட்டி<br>யிட்ட பாகுனிராம், கிளர்க்,<br>மாவட்ட போர்டு,<br>தால்தன் கான்ஞ்,<br>பாலமாவு மாவட்டம் | அமைச்சவை<br>சார்ந்த | 532 |
| 11. ராம்பிரசாத், பொதுச்<br>செயலாளர், டி.சி.லீக்,<br>பாட்னா | லீக் காங்கிரஸ் | 1473 |
| இவரை எதிர்த்து போட்டியிட்ட<br>கலார்துஸாத் சார்ந்தவர் | அமைச்சரவை | 511 |
| 12. சுந்தர்பாஸி,<br>கெய்டா கிராமம்,<br>தர்பாங்கா மாவட்டம் | காங்கிரஸ் | போட்டி<br>இல்லை |
| 13. கேஷ்வார் பாஸ்வான்<br>பிஹ்தா கிராமம்<br>P.O. பேனிப்பட்டி<br>தர்பங்கா மாவட்டம் | ,, | ,, |
| 14. சுகாரிபாசி சகாந்த் P.O<br>காயா மாவட்டம் | ,, | ,, |
| 15. புந்திபாசி P.O. வார்சாலி<br>கான்ஞ், காயா மாவட்டம் | ,, | 3555 |
| இவரை எதிர்த்து போட்டியிட்ட<br>தலிப் துசாத் சார்ந்தவர். | அமைச்சரவை | 487 |
| 16. ஜாக்லால் சவுத்ரி<br>ஸ்வராஜ் ஆசிரமம்<br>P.O. திக்காப்பட்டி புர்னியா | காங்கிரஸ் | 4789 |
| இவரை எதிர்த்து போட்டியிட்ட<br>ஜாக்துப் மாசுஹார்<br>சார்ந்தவர் | அமைச்சரவை | 1769 |

## இணைப்பு - IX

### இந்தியத் தனி அரசுகள் பற்றி என்ன?

இந்தியாவில் உள்ள தனி அரசுகளுக்கும் இடைக்கால அரசாங்கத்திற்கும் டாக்டர் அம்பேத்கர் ஒரு உரிய நேரத்தில் எச்சரிக்கை விடுத்துள்ளார். தனி அரசுகள், இந்திய யூனியனிலிருந்து துண்டித்து இருக்க முடியாது.

அவர், எந்தவொரு தனி அரசையும் சுயாதிபத்தியமான சுயேச்சை அரசாக இந்திய மக்கள் ஒருபோதும் அங்கீகரிக்க மாட் டார்கள் என்பதை பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் சொல்லி விடுமாறு இந்தியாவின் இடைக்கால அரசாங்கத்தை கேட்டுக் கொள்ளும் போது ஒரு அரசியல் சாசன நிபுணர் என்ற முறையில் கம்பீரத் துடன் டாக்டர் அம்பேத்கர் பேசுகிறார்.

அம்பேத்கர் மேலும் பேசியதாவது : ஆனால் தனி அரசுகளின் ஆட்சியாளர்களது முட்டாள்தனமான செயலிலிருந்து அவர்களை தடுக்கவும் அதன் தொடர் விளைவுகளிலிருந்து மக்களைத் தடுக்க வும் சட்டத்தின் வார்த்தைகளைக் காட்டிலும் ஒரு கொஞ்சம் தெளிவான நடவடிக்கை தேவையாகும்.

தனி அரசுகளின் திட்டவட்டமான நிலைபாடு சம்பந்த மாக இடைக்கால அரசாங்கம் அனுமதிக்கக்கூடியவை என்ன? அப்படி அனுமதிக்கக்கூடியவை நான்கு உள்ளன. அவை இந்திய மக்களின் விருப்பம், தனி அரசுகளின் ம்க்களது விருப்பம், தற்போதைய ஜனநாயகத்தின் செல்வாக்கு, ஆட்சியாளர்களின் கண்மூடித்தனமான சர்வாதிகாரம் ஆகியவையாகும்.

எல்லா ஆட்சியாளர்களும் ஜனநாயகத்திற்கு விரோதமாக இருக்கவில்லை, ஆனால் இந்திய யூனியனை விரும்புகிறார்கள் என்பது உண்மை.

சர் சி.பி.ராமஸ்வாமி ஐயர், பெரும் சவடலாக ''என்னுடன் இருக்காதவர்கள் எனக்கு எதிரானவர்களே'' என்று கூறுகிறார்.

இதுவே, இந்திய யூனியன் ஆட்சிக்கு வழிகாட்டும் விதியாக இருக்க வேண்டும்.

சர். சி.பி.ராமஸ்வாமி ஐயர், திருவாங்கூர் வழியாகச் செல்லும் ஒரு பிரயாணிதான் அவர், எங்கும் போகாமல் ஒரு ஆண்டோ இரண்டாண்டோ அல்லது 5 ஆண்டுகளோ இருக்கலாம். ஆனால் எப்படியும் போய்த்தான் ஆக வேண்டும். அவர், திருவாங்கூர் சார்பாக பேசுவதற்கு அவர் வைக்கும் உரிமைக் கோரிக்கை மிகவும் பலவீன மானதாகும். இந்த கொச்சி மகாராஜாவின் முதிர்ச்சியடைந்த விவேகம் அவருடைய பங்குதார தனி அரசான திருவாங்கூர் அரசுடன் சேர்ந்து சுமையை சுமக்க வேண்டும் என்பது நெருங்கிவந்து கண்டிருக்கிறது.

இந்தியாவின் மையத்தில் பரந்து கிடக்கும் ஹைதராபாத் தின் மிரட்டல்தான் மிகக் கடுமையாக உள்ளது, அங்கு இந்தியப் பிரதமர் செல்ல வேண்டியதில்லை. ஆனால் இந்திய யூனியனுக்குள் நுழைவதற்கு ஹைதராபாத் சிற்றரசர் தனக்குத்தானே தடை விதித்துக் கொள்கிறார். நிஜாம், ஜனநாயகத்தின் அனைத்து உரிமைக் கோரிக்கைகளையும் நிராகரித்து வருகிறார்; அவருடைய தன்னாட் சிக்குரிய பகுதிகளில் அவர் அமைத்துள்ள பிரதிநிதித்துவ நிறுவனங் கள்கூட, ஜனநாயகத்திற்கு எதிர்மறையாக உள்ளன. அருவருக்கத் தக்க வகுப்புவாத சக்திகள் திட்டமிட்டு முறையாக பிரதிநிதித் துவம் மேற்கொண்டன; இப்படி கறைபடிந்த பிரதிநிதித்துவத்தால் சட்டமன்றம் செயல்திறன் இழந்தது. அதிகாரம் படைத்தவர்களாலும் மன்னர் நிஸாமின் விருப்பப்படியும் முதலமைச்சர் நியமிக்கப் படுகிறார்; நீக்கப்படுகிறார்.

இந்த விஷயங்கள், கடந்த காலத்தின் மீதான தடைகளாக இருந்திருக்கின்றன; மேலும் அடுத்துவரக்கூடிய எதிர்காலத்தில், இந்திய யூனியனுடன் இணைவதற்குரிய ஹைதராபாத் மக்களின் பாதையில் பெருமளவிலான தடைகள் உள்ளன.

காங்கிரஸ் கட்சித் தலைவர்கள், தங்களளவில் தனி அரசு களின் நிலைமை பற்றி தேவையான அளவிற்கும் தேவைக்கு அதிக மாகவும் பேசியுள்ளனர். அவர்கள் இந்த அல்லது அந்த திவானுடன் ஒன்றுபடுத்தும் பேச்சுவார்த்தைகளால் எந்தப் பலனும் ஏற்பட வில்லை.

காங்கிரஸ் தலைவர்கள், அவர்களுடைய வாக்குறுதிகளை செயல்படுத்தும் பணியில் வலுவான, தீர்மானகரமான நடவடிக்கை மூலம் தங்களை ஈடுபடுத்திக்கொள்ள வேண்டும். தனி அரசுகள்,

இந்தியாவிலிருந்து பிரிக்க முடியாதவையாகும். அவைகள், தனித் தீவுகளாக இருக்க இந்திய யூனியன் அனுமதிக்க முடியாது.

தனி அரசுகளின் மக்கள், இந்திய யூனியனில் ஒன்றுபட்டிருக்கப்போவதாக பிரகடனம் செய்துள்ளனர். இந்த முடிவுக்கு உடனடியாக வடிவம் கொடுக்கப்பட வேண்டும். மறு ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கு பிரிட்டிஷ் வைஸ்ராய் மீதோ அல்லது இந்திய சிற்றரசர்கள் (Princes) மீதோ சார்ந்திருக்கத் தேவை இல்லை. மிகுந்த பயன்முனைப்பான காரியமாக இருப்பினும் காங்கிரஸ் கட்சித் தலைவர்கள், தங்களுடைய அதிகாரத்தை ஏற்படுத்துவற்கு தங்களுக்கு உதவி அளிக்கப்பட வேண்டுமென அவர்கள் கருதியதால் அது, பலவீனத்தால் ஏற்பட்ட குழப்பமாக இருக்கும்.

அரசியல் சாசன நிர்ணய சபை கூடும்போது, அது இந்தியாவிலுள்ள அரசுகள் பெரும்பாலானவற்றை தன் கட்டுப்பாட்டில் எடுத்துக் கொள்ளும். இது, சிற்றரசர்கள் குழாம் (Chamber of Princes) அமைக்கப்பட்ட பிறகு ஏற்பட்ட ஒரு முனைப்பான அம்சமாகும்; ஏனெனில், இது சிற்றரசர்கள் மரபு (Princely Order) என்று அடிக்கடி தவறாக அழைக்கப்பட்ட தனி அரசுகளை இந்திய யூனியனுடன் இருக்க விரும்பியவை, அதற்கு எதிரானவை என்று முதல் தடவையாக பிரிக்கிறது.

காங்கிரஸ் கட்சித் தலைவர்களும் ஏனையத் தேசியவாதிகளும் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, அடிபணிய மறுக்கும் சிற்றரசர்கள் மீது நடவடிக்கை எடுப்பதற்குத் தேவையான பலத்தை பெருக்க வேண்டும்.

எதிர்காலத்தில் உருவாகும் என எதிர்பார்க்கப்படும் பாகிஸ்தான் நாட்டுப் பிரச்னை பெரிதாகி அச்சுறுத்திக் கொண்டிருப்பதனால் இப்போது உடனடி நடவடிக்கை தேவையாக உள்ளது. திரு.ஜின்னா, தனது காலடியில் எந்தப் புல் பூண்டையும் வளர விடமாட்டார்; மற்றவர்களின் காலடியிலும் வளர அனுமதிக்க மாட்டார்.

இந்தியாவில் உள்ள தனி அரசுகளின் சுயாதிபத்தியம் (Sovereignity) குறித்து திரு.ஜின்னா வெளியிட்டுள்ள அறிக்கையானது, அடுத்தவர்களது விஷயத்தில் அவரது தேவையற்ற தலையீட்டின் ஒரு சிறு பகுதியாகும்.

இந்தியாவிலிருந்து பிரிந்து தனியாக பாகிஸ்தான் நாடு வேண்டும் என்று ஜின்னா கேட்டார்; அதை அவர் பெற்றுக்கொண்டு விட்டார்; அதன் பிறகு, வேறு எந்தவொரு வெளிநாட்டு ஆட்சி யாளருக்கும் உள்ள உரிமைக்கு அதிகமாக இந்தியா யூனியன் விவ காரங்கள் குறித்து பேசுவதற்கு ஜின்னாவிற்கு உரிமை இல்லை.

இந்தியாவின் அரசுகளில் இடர்பாடுகளை கிளப்பிவிட ஜின்னா மேற்கொள்ளும் முயற்சியானது, ஒரு அகில இந்திய தலைவர் அந்தஸ்தை பெறுவதற்கான கொய்த்-இ-அஸமின் பேராசையி லிருந்து வேறுபட்ட நிகழ்ச்சி அல்ல. ஜின்னாவின் ஆதரவாளர் ஒருவர் அளித்த தகவலின்படி, மாப்ளஸ்தான் அளைக்கும் நோக் கத்திற்கு ஜின்னா ஆதரவளிக்கிறார், என்ன காரணங்களினால் அவர் அப்படிச் செய்கிறார் என்பது அவருக்கே வெளிச்சம்.

திரு. ஜின்னா, அரசியல் சாசன விவகாரங்களில் ஒரு நிபுணர் என்பதைப் போல பேசுகிறார். அரசியல் சாசன சிக்கல்கள் குறித்து அவருடைய சிறப்பு அறிவு ஞானத்தை அவர் தக்கவைத்துக் கொண்டால் அது பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபையில் உள்ள சிக்கல்களை அவிழ்க்க தேவைப்படும் என்று அவருக்கு அறிவுறுத்த வேண்டும்.

திரு. ஜின்னா, ஒரு முடிவுக்கு வர வேண்டியுள்ளது. அவர் பாகிஸ்தானின் வருங்கால வாழ்க்கையை தீர்மானிக்கும் தலைவ ராகவும் செயல்படுகிறார், இந்திய யூனியனுக்காக உழைக்கும் பொறுப்பையும் மேற்கொள்கிறார்.

ஜின்னாவிற்கு சம்பந்தமில்லாத எந்தெந்த விஷயங்களில் அவர் தலையிடலாம் என்பதற்கான பட்டியல் எதுவும் அவருக்கு கொடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இந்திய யூனியனில் நீடித் திருப்பதற்கான அவரது கட்சியின் முயற்சி இன்மை, தனிநாட்டுப் பிரிவினையை பெற்றுள்ளது. இனிமேல் அந்தக் கட்சி இந்தியாவின் ஏனையப் பகுதிகளில் விஷ வித்துக்களை விதைப்பதை தொடங்க முடியாது.

காங்கிரஸ் கட்சி விரைவாகச் செயல்பட வேண்டும். பேச்சு வார்த்தை நடத்துவதற்கான காலம் பின்பு வரும் என்னும் காங் கிரஸ் கட்சியின் அதீத நம்பிக்கைவாதம் அதற்கு கவலைகளையே அதிகரித்துள்ளது என்று அக்கட்சி உணருமானால், அது சோக மானதாக இருக்கும்.

# இணைப்பு X

## இந்திய யூனியனில் இணையுமாறு தனி அரசுகளை அம்பேத்கார் வலியுறுத்துகிறார்

### ஹைதராபாத் அரசின் நடவடிக்கை இந்தியாவை சிதறடித்துவிடும் என்கிறார்

*பம்பாய், ஜூன் 17, 1947 (ஏ.பி.ஐ)*

*இந்தியாவில் உள்ள தனி அரசுகள், தங்களை பாராமவுன்ட்சியிலிருந்து விடுவித்துக் கொள்வதற்கான ஒரே வழி, சுயாதிபத்தியத்தையோ அல்லது வெளிவிவகாரத்தை நிர்வகிப்பதையோ இந்திய யூனியனுடன் ஒரு இணைப்புக்கு கொண்டு வருவதுதான் இது. இந்திய யூனியனுடன் தனி அரசுகள் இணையும்போதுதான் நிகழ முடியும் என்று வைஸ்ராய் நிர்வாகக் குழுவின் முன்னாள் உறுப்பினரும் ஒரு முன்னணி அரசியல் சாசன சட்டநிபுணருமான டாக்டர் பீ.ஆர். அம்பேத்கர் கூறியுள்ளார். சில குறிப்பிட்ட இந்தியத் தனி அரசுகள் தங்களுக்கிடையே சார்ந்து இருப்பது பற்றி அவை வெளியிட்டுள்ள பிரகடனத்திற்கு (Declaration of Dependence) எதிர்ப்பு தெரிவித்து 2000 வார்த்தைகள் அடங்கிய ஒரு அறிக்கையொன்றை அவர் வெளியிட்டுள்ளார்.*

*அதில் டாக்டர் அம்பேத்கர், அந்த அரசுகள் சுயாதிபத்திய அரசுகளாக நீடிப்பது, 5 ஆண்டுகளுக்குக்கூட நீடிக்காது என்பதை அவை உணர வேண்டும். தனித்தனி மன்னர்கள், இந்திய யூனியனில் இணைய வேண்டும்; அரசியல் சாசன ரீதியான மன்னர்களாக வேண்டும் என்பது அவர்களுடைய நலனுக்கானதாகும் என்று பிரகடனம் செய்கிறார்.*

*சுயேச்சையாக இருப்பதுவும் ஐக்கிய நாடுகள் அமைப்பிடமிருந்து அங்கீகாரமும் பாதுகாப்பும் பெறுவதென்று நம்புவதும் அவரவர் சொந்த கற்பனையான சொர்க்கத்தில் வாழ்வதாகும் என்றும் அம்பேத்கார் கூறுகிறார். அவர்கள் மீதான இந்தியாவின் வெளிநாட்டு விவகார கட்டுப்பாட்டைப் புறக்கணித்துவிட்டு இந்தியத் தனி அரசுகளுக்கு ஐக்கிய நாடுகள் அமைப்பு அங்கீகாரம் அளிக்குமா என்றும் தனது அறிக்கையில் அம்பேத்கார் சந்தேகம் கிளப்புகிறார்.*

*அது நிகழ்ந்தால்கூட, முதலில் மக்கள் பிரதிநிதித்துவத்தைத் கொண்ட அரசாங்கத்தை கொண்டு வருமாறு அந்தத் தனி அரசுகளை கட்டாயப்படுத்தாமல் ஒரு அரசு மீதான வெளிநாட்டு ஆக்கிரமிப்புக்கும் உள்குழப்பங்களுக்கும் எதிராக எந்த ஒரு உதவியையும் ஐக்கிய நாடுகள் அமைப்பு அளிக்காது என்றும் அம்பேத்கார் உறுதிபடக் கூறுகிறார்.*

*அம்பேத்கார் தனது அறிக்கையின் இறுதியில் ''இந்தியத் தனி அரசுகள் எடுக்கும் முடிவு எதுவானாலும் இந்திய மக்களின் கடமை தெளிவானதாகும். அவர்கள் சார்பாக இடைக்கால அரசாங்கம், பெருமைமிகு பிரிட்டிஷ் மன்னராட்சிக்கு ஒரு விஷயத்தை தெளிவுபட தெரிவிக்க வேண்டும்; அது என்னவெனில், பாரா மவுன்ட்சியை ஒரு முடிவுக்கு கொண்டு வரும் எந்தவொரு சட்டத்தையும் நிறைவேற்றுவதற்கு பிரிட்டிஷ் நாடாளுமன்றத்திற்கு எந்த உரிமையும் இல்லை. அதற்கு வகைசெய்யும் சட்ட விதியை, இந்தியாவிற்கு தன்னாட்சி உரிமை அந்தஸ்தை அளிக்க விரைவில் வரவிருக்கிற சட்டத்தில் இடம்பெறச் செய்தால் அதனை தங்களுடைய சுயாதிபத்தியத்தின் மீதான வெறுக்கத்தக்க தாக்குதலாகும் என்றும், எனவே அது செல்லாததது என்றும் இந்திய மக்கள் பாவிப்பார்கள். எந்தவொரு இந்தியத் தனி அரசையும் சுயாதிபத்தியமான சுயேச்சை அரசாக இந்திய அரசாங்கம் ஒரு போதும் அங்கீகரிக்காது என பிரகடனம் செய்ய வேண்டும்'' என்பதுதான்.*

*அம்பேத்கார் தனது அறிக்கையில் மேலும் கூறியிருப்பதாவது :*

*இந்தியா, 1947, ஆகஸ்ட் 15-ல் சுதந்திரமடையும்போது, தங்களைத் தாங்களே சுயேச்சையான சுயாதிபத்திய அரசுகளாக பிரகடனம் செய்து கொள்ளப் போவதாக திருவாங்கூரும் ஹைதராபாத்தும் அறிவித்துள்ளன; இதுவும் அந்த இரு அரசுகளையும் முன்மாதிரியாகக் கொண்டு அவற்றை பின்பற்ற ஏனைய அரசுகளும் ஒப்புதல் அளித்துள்ளதும் ஒரு புதுப்பிரச்சனையை உருவாக்கியுள்ளது; அதாவது, இந்த நிலைமை, இந்து-முஸ்லீம் பிரச்னையை விட மோசமானதாக மாறலாம்; ஏனெனில், இந்தப் பிரச்னை நிச்சயமாக இந்தியாவை மேலும் துண்டு துண்டாக்குவதில் முடிவடைவதாகும்.*

## உரிமைக் கோரிக்கையின் அடிப்படை

இந்தியத் தனி அரசுகள் தங்களைத் தாங்களே சுதந்திர மானவைகளாக பிரகடனம் செய்வதற்கான உரிமையை அந்த அரசுகள் மேற்கொள்வதற்கான அடிப்படை, பிரிட்டிஷ் அமைச்சரவைக் குழுவால் மே, 12, 1946-ல் வெளியிடப்பட்ட அறிக்கையில் உள்ளது. அதில், பிரிட்டிஷ் அரசாங்கம் எந்தச் சூழ்நிலைமையிலும் பாராமவுன்ட்சியை ஒரு இந்திய அரசாங்கத்திடம் கைமாற்றம் (Transfer) செய்யமுடியாது; ஏனெனில் அப்படிச் செய்தால் பிரிட்டிஷ் மன்னராட்சியுடன் தனி அரசுகள் கொண்டுள்ள உறவுகளிலிருந்து தொடரக்கூடிய அந்த அரசுகளுக்கான உரிமைகள் எதிர்காலத்தில் இருக்காது; மேலும் அந்த அரசுகளால் உயர் தலைமை அதிகாரத் திடம் (Paramount Power) அதாவது ஒரு இந்திய அராங்கத்திடம் ஒப்படைக்கப்படும். உரிமைகள் அனைத்தும் அந்தத் தனி அரசு களுக்கு திரும்பாது என்று கூறப்பட்டுள்ளது.

பாராமவுன்ட்சியை மன்னர் கைமாற்றம் செய்ய முடியாது என்ற அமைச்சரவைக் குழுவின் அறிக்கை, ஒரு அரசியல் கொள்கை அடிப்படையிலான அறிக்கை அல்ல என்பது மிகத் தெளிவான தாகும். அது, ஒரு சட்ட விளக்கம் (Statement of Law) என்பதால் எழக்கூடிய கேள்வி என்னவென்றால் ''தனி அரசுகளுக்கு செயல் படுத்தப்பட்ட இது ஒரு சரியான சட்ட விளக்கம்தானா?'' என்பதாகும்.

''அமைச்சரவைக் குழுவால் வெளியிடப்பட்ட யோசனை யில் ஒரிஜினல் எதுவும் இல்லை. இது, பிரிட்டிஷ் மன்னராட்சிக்கும் இந்திய அரசுகளுக்குமிடையேயான உறவுகளை பரிசீலிப்பதற்கு 1929-ல் நியமிக்கப்பட்ட பட்லர் குழுவால் முன்வைக்கப்பட்ட கருத்தினை திரும்பக் கூறுவதுதான்''.

பாராமவுன்சி ஒரு இந்திய அரசாங்கத்திடம் கைமாற்றம் செய்யப்பட முடியாது என்ற கோட்பாடானது ஒரு விஷமத்தனமான கோட்பாடாகும்; மேலும்,சம்பந்தப்பட்ட பிரச்சனைகளைப் பற்றி முற்றிலும் தவறான புரிதலை அடிப்படையாகக் கொண்டதாகும்.

## பாராமவுன்ட்சி வரையறுக்கப்பட்டது

அமைச்சரவைக் குழு, பராமவுன்ட்சி சம்பந்தமாக எடுத்த நிலைபாட்டுக்கு எதிரான விஷயத்தை கீழ்க்காணும் கருத்துக்களில் விபரிக்க முடியும்.

பாராமவுன்ட்சி எதைக் குறிக்கிறது என்பதை பெரும் பாலானோர் புரிந்து கொள்வதில்லை; இதன் காரணமாக பாரா மவுன்ட்சியை பெருமளவு புதிர் சூழ்ந்திருக்கிறது. பாராமவுன்ட்சி என்பது மன்னராட்சியின் முன்னுரிமை என அழைக்கப்படுவதன் மற்றொரு பெயர்தான். மன்னராட்சியின் முன்னுரிமை என்ற முறையில் பாராமவுன்ட்சி, மன்னராட்சியின் சாதாரண முன்னுரிமை யிலிருந்து 2 வகைகளில் வேறுபடுகிறது.

a) மன்னராட்சியின் சாதாரண முன்னுரிமையின் அடித்தளம், எழுத்து வடிவச் சட்டத்திலிருந்து (Statute Law) வேறு படுத்தப்பட்டதாக பொதுச் சட்டத்தில் (common Law) இருக்கிறது; அதே சமயத்தில் பாராமவுன்ட்சியிலிருந்து தோன்றும் முன்னுரிமையின் அடிப்படையானது மரபு வழக்கால் வழங்கப்பட்ட உடன்பாடுகளில் இருக்கிறது.

b) மன்னராட்சியின் பொதுச் சட்ட முன்னுரிமையானது மன்னர் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் வாழும் மன்னராட்சிக்குட் பட்ட மக்களுக்கும் அங்கு தற்காலிகமாக வாழும் மற்ற நாட்டு மக்களுக்கும் விரிவடைகிறது; அதே சமயத்தில் பாராமவுன்ட்சி என்பது இந்தியத் தனி அரசுகள் மீது மட்டும் பரவுகின்ற மன்னராட்சியின் முன்னுரிமையாகும். இந்த வேறுபாடுகள் இருந்தபோதிலும் பாராமவுன்ட்சி யானது மன்னராட்சியின் முன்னுரிமை என்பது உண்மை யாகும்.

II. மன்னரின் முன்னுரிமையாக பாராமவுன்ட்சி இருப்பதால் பாராமவுன்ட்சியின் அதிகாரப் பயன்பாடு சர்வதேச சட்ட விதிகளை பொறுத்ததல்ல. மாறாக, அரசியல் சாசனச் சட்டம் எனப்படும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய முனிசிபல் சட்டத்தில், அது தொடர்பான பகுதியைப் பொறுத்ததாகும்; இது பொதுவான கருத்துக்கு மாறான தாகும். பாராமவுன்ட்சி, மன்னரின் முன்னுரிமையாக இருப்பதால், பாராமவுன்ட்சியின் செயல்பாடு (Exercise) பொதுவான கருத்துக்கு மாறாக, சர்வதேச சட்டவிதிகளுக்கு கட்டுப்பட்டதாக இருக்க வில்லை, ஆனால் அரசியல் சாசனச் சட்டம் (Law of Constitution) எனப்படும் பிரிட்டிஷ் சாம்ராஜிய முனிசிபல் சட்டத்திற்கு கட்டுப் பட்டதாக உள்ளது.

III. பிரிட்டிஷ் சாம்ராஜிய அரசியல் சாசன சட்டக் கொள்கை யின்படி அரசரின் முன்னுரிமையானது அரசருக்கு அதிகாரத்தை

கொடுக்கிறது; அதே சமயம் இதற்கு மாறாக, அவர் தன்னுடைய முன்னுரிமையை பயன்படுத்துவதற்கு அவருக்கு விருப்ப உரிமை (Direction) இல்லை. மன்னர் தனது முன்னுரிமையை, தன்னுடைய அமைச்சர்களின் ஆலோசனையின்றி சுயேச்சையாக செயல்படுத்த முடியாது, அவருக்கு அமைச்சர்கள் அளிக்கும் ஆலோசனைக்கு ஏற்பத்தான் அவர் செயல்பட முடியும்.

## பாராமவுன்ட்சியின் கைமாற்றம்

பாராமவுன்ட்சியை ஒழுங்குபடுத்ததுவதற்கான பல்வேறு வழிமுறைகள் 1833-க்கும் 1935-க்குமிடையே பிரிட்டிஷ் நாடாளு மன்றத்தில் இந்திய அரசாங்கம் சம்பந்தமாக நிறைவேற்றப்பட்ட பல்வேறு சட்டங்களில் ஏற்கப்பட்டன; அவை, பாராமவுன்ட்சியை பயன்படுத்துவதில் மன்னருக்கு ஆலோசனை கூறுவதற்கான இந்திய மக்களின் உரிமைக் கோரிக்கையை எந்த வழியிலும் பாதிக்கவும் இல்லை; பாதிக்கவும் முடியாது. ஆனால், சாம்ராஜிய அரசியல் சாசன சட்டத்தின்கீழ், ஒரு நாடு ஒரு சுயாட்சிப் பகுதியாக (Dominion) ஆகும் போதுதான், அது மன்னராட்சிக்கு ஆலோசனை கூறும் உரிமையைக் கோர முடியும்; அந்தநாடு சுயாட்சிப் பகுதியாகுவதற்கு முன்பு மன்னராட்சி வெவ்வேறு விதமாக ஆலோசனை கூறப்பட்டது என்ற உண்மை ஒரு தடையல்ல. ஏனெனில் 1935 ஆம் ஆண்டு சட்டத்தின் கீழ் இந்தியாவுக்கு மக்கள் பிரதிநிதித்துவம் வாய்ந்த அரசாங்கம் (Responsible Government) அனுமதிக்கப்படவில்லை.

ஒரு இந்திய அரசாங்கத்திற்கு பாராமவுன்ட்சியை மன்னராட்சி கைமாற்றம் செய்யாது என்று அவர்கள் அவர்களுடைய அறிக்கையின் மற்றொரு பகுதியில் கூறுகின்றனர்; அந்தப் பகுதி பரிசீலனைக்காக உள்ளது. அமைச்சரவைக்' குழுவின்படி, பாராமவுன்ட்சி காலாவதியாகப் போகிறது. இது, மிக அதிக அளவில் அதிர்ச்சியூட்டும் அறிவிப்பாகும்; மேலும் இது சிறப்பாக நிருபிக்கப் பட்டுள்ள மற்றொரு அரசியல் சாசன சட்டக் கொள்கைக்கு மாறானதாகும். இந்தக் கொள்கையின்படி, மன்னர் தன்னுடைய முன்னுரிமைகளை ஒப்படைக்கவோ அல்லது கைவிடவோ முடியாது. மன்னராட்சியானது, பாராமவுன்ட்சியை கைமாற்றம் செய்ய முடியாவிட்டால் அதனை கைவிடவும் முடியாது.

ஒரு கேள்வி கேட்கப்படலாம்: இந்தியா சுதந்திரமடையும் நேரத்தில் என்ன நடக்கிறது? மன்னராட்சி மறைந்து விடுகிறது;

ஆகவே, மன்னராட்சிக்கு ஆலோசனை கூறும் பிரச்னையே இருக்கப் போவதில்லை. சுதந்திர இந்தியா, மன்னரின் முன்னுரிமைகளை மரபுரிமையாகப் பெறுவதற்கு முடியுமா? இந்தக் கேள்விக்கான ஒரு பதிலுக்காக, அரசுகளிடையேயான மரபுரிமை (Succession) சம்பந்தமாக சர்வதேச சட்ட விதிகளை பார்க்க வேண்டும். அடுத்து வருகிற அரசு, அதற்கு முந்தைய அரசிடமிருந்து குறிப்பிட்ட உரிமைகளை மரபுரிமையாகப் பெறமுடியும் என்று ஆப்பென் ஹெய்ம் ஒப்புக் கொள்கிறார். ஹாலின் சர்வதேச சட்டத்திலிருந்து ஒரு விஷயம் தெரிகிறது; அது என்னவென்றால் அடுத்து வரவிருக்கும் அரசுக்கு பாதுகாக்கப்பட்ட எஞ்சிய பொருட்கள், சொத்து மற்றும் அனுகூலங்கள் ஒரு உடன்பாட்டின் மூலம் அதன் மரபுரிமைச் சொத்துக்களாக்கப்பட முடியும். இந்தியா அடுத்துவரவிருக்கும் அரசு ஆகும். இதற்காக, சிற்றரசர்களுடனான (Princes) உடன் பாட்டால் பாதுகாக்கப்பட்டிருக்கும் சொத்தாக பாராமவுன்ட்சி உள்ளது. எனவே பாராமவுன்ட்சியை தன்னுடைய மரபுரிமைச் சொத்தாக அளிக்குமாறு சுதந்திர இந்தியா, நியாயமான கோரிக்கை வைக்க முடியும்.''[1]

1. பம்பாய் கிரானிகில், ஜூன் 18, 1947.

# இணைப்பு - XI

# பம்பாயில் பஹிஷ்கிரித் ஹிதாகரினி சபா மேற்கொண்ட நடவடிக்கைகள்

## I

## பஹிஷ்கிரித் ஹிரிதாகரினி சபா செய்த பணிகள் குறித்த ஆய்வு

*பஹிஷ்கிரித் ஹிரிதாகரினி சபா, ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் மேம்பாட்டுக்கான ஒரு சொசைட்டி ஆகும்; அதனுடைய வருடாந்திர பொதுப் பேரவைக் கூட்டம் 18 ஆம் தேதியன்று அதனுடைய தலைமை அலுவலகமான தாமோதர் தாக்கெர்சேவரால், பேரெல், பம்பாயில் நடத்தப்பட்டது. 1925-ஆம் ஆண்டுக்கான வேலை அறிக்கை, சபாவின் வேலை 3 மடங்காக அதிகரித்துள்ளதாக காட்டியது. ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் கல்வி விஷயத்தில், சபாஷோலாப்பூர் அருகில் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களைச் சேர்ந்த, உயர்நிலைப் பள்ளிப்படிப்பு மாணவர்கள் 15 பேருக்காக ஒரு ஹாஸ்டல் ஒன்றை ரூ.2669-0-8 செலவில் நடத்தி வருகிறது. அவர்கள் ஹாஸ்டலில் முற்றிலும் இலவசமாக தங்க வைக்கப்பட்டுள்ளனர். ஹாஸ்டலின் முதல் ஆண்டில் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் கலாச்சார மற்றும் பொருளாதார மேம்பாட்டுக்காக சபா அதிகமாகச் செய்ய முடியவில்லை. எனினும், நாசிக் மாவட்டத்து கிராமங்களின் மஹார்கள் வாதாந்தரி பிரச்னைகளில் நிவாரணம் பெறுவதற்கு சபா உதவி செய்தது. சபாவின் ஆண்டு நிதி அறிக்கையானது, ரூ.3,169-1-0 வருமானத்தையும் ரூ.2938-13-6 செலவையும் காட்டியுள்ளது.*

### செய்யப்பட்ட வேலை

*சபாவானது ஒடுக்கப்பட்ட வர்க்கங்களுக்காக, ஒரு நூலகத்தையும் படிப்பறையையும் பைகுல்லாவில் உள்ள மேம்பாட்டு அறக்கட்டளை (Improvement Trust) குடியிருப்பில் திறந்துள்ளது. பேரெல் அருகில் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களைச் சேர்ந்த இளைஞர்களுக்காக ஹாக்கிகிளப் ஒன்று சபாவால் அமைக்கப்பட்டுள்ளது.*

---

1. பம்பாய் ஆவணத் தொகுப்பு, ஜூன் 18, 1947 தேதியிட்டது.

ஒடுக்கப்பட்ட வர்க்க மாணவர்களுக்கென ஒரு முக்கியமான அமைப்பு ஒன்று சபாவால் அமைக்கப்பட்டுள்ளது. அது, பஹிஷ்கிரித் வித்யார்த்தி சம்மேளனம் என அழைக்கப்படுகிறது. இந்த அமைப்பு ஒடுக்கப்பட்ட வர்க்க மாணவர்களின் சகோதர இயம் (Brotherhood) வகைப்பட்ட ஒரு அமைப்பாகும்; இது, ''வித்யா விலாஸ்'' என்னும் மாதப் பத்திரிக்கையை நடத்துகிறது; அந்தப்பத்திரிக்கைக்கு ஒடுக்கப் பட்ட வர்க்கங்களைச் சேர்ந்த மாணவர்கள் கட்டுரைகள் போன்ற வற்றை எழுதிக் கொடுக்கிறார்கள். பொருளாதார செயற்களத்தைப் (Economic Sphere) பொறுத்த வரையில், ஒடுக்கப்பட்ட வர்க்கங் களுக்காக மூன்று கூட்டுறவுக் கடன் சொசைட்டிகளை சபா, அமைத் துள்ளது. 1926 ஆம் ஆண்டுக்கான திட்டச் செலவு ரூ.25 ஆயிரம் முதல் ரூ.30 ஆயிரம் வரை இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. - A.P

பி.எஸ்.ஜி-யின் அலுவலகமானது ஒடுக்கப்பட்ட வர்க்க மையத்திலிருந்து வந்த விண்ணப்பச் செய்தியை கவனத்தில் கொள் கிறது. 1926 ஆம் ஆண்டின் P.P.case எண் 34/6 கீழே கொடுக்கப் பட்டுள்ளது:-

செயல் அதிகாரம் பெற்ற குழுவிற்கு (Deputation) துண்டுச் சீட்டு D-யில் ஹெச். இ-யின் பதில் அளிக்கப்பட்டுள்ளது; அதில் A குறிக்கப்பட்ட பகுதிக்கு கவனம் அளிக்குமாறு கேட்டுக் கொள்ளப் பட்டுள்ளது.

(ஒப்பம்) M.C.B

இந்தக் கடிதத்தில் 2 வேண்டுகோள்கள் விடுக்கப்பட்டுள்ளன.

1) ஒடுக்கப்பட்ட வர்க்கங்களைப் பாதிக்கும் அனைத்து விஷயங்களிலும் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் மையம், ஒரு மத்திய அமைப்பு என்ற கண்ணோட்டத்தில் அது அரசாங்கத்தால் கலந் தாலோசிக்கப்பட வேண்டும்.

2) மையத்தின் கவுரவ தாளாளராகுவதற்கு ஹெச்.இ. ஏற்றதாக கருதப்படலாம்.

இந்த வேண்டுகோள்கள், தலைமைச் செயலாளரின் ஆலோ சனைக்காக அவரது பார்வைக்கு அனுப்ப வேண்டும்.

(ஒப்பம்) J.C.K

ஜுலை 1''[1]

1. பம்பாய் கிரோனிகில், ஏப். 29, 1926

## II

*ஜுலை.26, 1926 ஆம் தேதியிட்ட*
*யு.ஓ.ஆர். எண்ணுக்கு கீழ்*
*பொது இலாகாவிலிருந்து*
*அறியப்பட்டது.*

*சி.ஐ.டி.*
*ஜுலை 27, 1926*

*1) சபாவின் அமைப்பு விதிகள தயாரிக்கப்பட்டுவிட்டதா? அப்படியானால் அதன் ஒரு பிரதியை (Copy) எடுத்து வைக்கவும்.*

*2) ஒடுக்கப்பட்ட வர்க்கங்களைச் சேர்ந்த அலுவலக நிர்வாகிகள் எத்தனை பேர்?*

*3) சந்தா மற்றும் உறுப்பினர் நிலைமை என்ன?*

*4) தயவு செய்து கிலேர்க் சாலையில் உள்ள நூலகத்தை பார்த்து அதற்கு வழங்கப்பட்ட இலக்கியப் புத்தகங்களின் எண்ணிக்கை, வகை, அவை ஒடுக்கப்பட்ட வர்க்கங்களால் எந்த அளவிற்கு உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது குறித்து தெரிவிக்கவும். அந்த நூலகம் எல்லோருக்கும் பொதுவானதா? அல்லது சபாவின் உறுப்பினர்களுக்கு மட்டுமானதா?*

*(ஒப்பம்)**

## III

*''ஐயா,*

*பொதுவான இலாகாவிலிருந்து ஜுலை.26, 1926 தேதியிட்ட யு.ஓ.ஆர்.எண் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது, அது சம்பந்தமாகவும் அதன் மேலான டி.சி.பி-யின் ஆலோசனைகள் சம்பந்தமாகவும் கீழ்க்கண்டவாறு அறிவிப்பதற்கு விழைகிறேன்:-*

1. *ஆதாரம், தொகுப்பு 1, பக்கம் 10.*

1) பஹிஷ் கிரித் ஹித்கரனி சபாவின் அமைப்பு விதிகள் அச்சடிக்கப்பட்ட பிரசுரத்தில் கூறப்பட்டுள்ளன. அதனுடைய பிரதி (Copy) ஒன்று இணைக்கப்பட்டுள்ளது.

2) தலைவர் மற்றும் துணைத் தலைவர்கள் (ஆண்டறிக்கையில் B-யில் குறிக்கப்பட்டுள்ளனர்) ஒடுக்கப்பட்ட வர்க்கங்களைச் சேர்ந்தவர்கள் அல்ல. டாக்டர் அம்பேத்கரை சேர்மனாகக் கொண்ட நிர்வாகக் குழுவில் (Council of Managemement) உள்ளவர்கள் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களைச் சேர்ந்தவர்களாவர்.

3) சந்தா

A. பிரிவு - ஆண்டுக்கு ரூ.25-ம் அதற்கு மேலும் தருபவர்கள்
B பிரிவு - ஆண்டுக்கு ரூ.10-ம் அதற்கு மேலும் கொடுப்பவர்கள்
C பிரிவு - ஆண்டுக்கு ரூ.5-ம் அதற்கு மேலும் கொடுப்பவர்கள்
D பிரிவு - ஆண்டுக்கு ரூ.3-ம் அதற்கு மேலும் கொடுப்பவர்கள்
E பிரிவு - ஆண்டுக்கு ரூ.1-ம் அதற்கு மேலும் கொடுப்பவர்கள்

அதிகமாக உள்ள E பிரிவு உறுப்பினர்களின் எண்ணிக்கை கிட்டத்தட்ட 200 ஆகும். ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் நலன்களுக்காக ரூ.200 வீதம் கொடுத்த இணை உறுப்பினர்கள் 10 பேர் உள்ளனர். அவர்கள் ஒப்பந்ததாரர்கள் பிரிவைச் (Contractors Class) சேர்ந்தவர்கள்.

4) ஒரு நூலகம் 4 மாதங்களுக்கு முன்பு ரூ.7.3.0 வாடகை கொண்ட ஒரு சிறிய அறையில் திறக்கப்பட்டுள்ளது, இந்த நூலகம், கிளார்கே சாலையில் உள்ள பம்பாய் இம்ப்ரூவ்மென்ட் அறக்கட்டளையின் ஒரு வீட்டில் 2-வது மாடியில் உள்ளது. அந்த அறை ஒரு உடைந்த பெஞ்சுடனும் புத்தகங்கள் இல்லாத உடைந்த சுவர் அலமாரியுடனும் ஒரு மேஜை மற்றும் ஒரு நாற்காலியுடனும் உள்ள அழுக்குப் படிந்த அறையாகும். மேஜை மீது, பழைய செய்திப் பத்திரிக்கைகளின் சில தொகுப்புகள் மோசமான நிலைமையில் உள்ளன. அவற்றில் உள்ள 64 புத்தகங்களில் பெரும்பாலானவை மராத்தி புத்தகங்களாகும்; அவற்றில் சில புத்தகங்கள் உறுப்பினர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ளன, மற்றவை, சமூக சேவை லீகிற்கு சொந்தமான 2 தகரப் பெட்டிகளில் வைக்கப்பட்டுள்ளன.

சமூக சேவை லீக், 200 புத்தகங்களை வழங்கியுள்ளது; அந்தப் புத்தகங்கள் சுமார் 100 புத்தகங்கள் வீதம் கொள்ளும் இரும்புப்

பெட்டிகளில் வைக்கப்பட்டுள்ளன. நூலகத்தில் உள்ள புத்தகங்களில் பெரும்பாலானவை மராத்திய மொழியில் மதம் மற்றும் சமூகம் சம்பந்தமானவையாகும், சுதந்திரம் (அரசியல்) பற்றிய சில புத்தகங்களும் உள்ளன. ஒடுக்கப்பட்ட வர்க்கத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள் சுமார் 10 முதல் 12 பேர் வரை தினசரி நூலகத்திற்கு வருகின்றனர். இந்த நூலகம் எல்லோருக்கும் பொதுவானதுதான். ஆனால், ஒடுக்கப்பட்ட வர்க்கங்களைத் தவிர மற்றவர்கள் ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள் வாழும் இந்த இடத்திற்கு பொதுவாக வருவதில்லை. சுருக்கமாகச் சொன்னால், நூலக அறைக்கு ஏதாவதொரு வெளியாள் வருவதாக இருந்தால், அவருக்கு அது பற்றி சொல்லப்படாவிட்டால் அது ஒரு நூலகமாக பயன்படுத்தப்படுகிறது என்பதையே அவர் கவனிக்க மாட்டார்.

5) குறிப்பிடத்தக்க பணித்திட்டம் எதுவும் செயல்படுத்தப்படவில்லை. ஒரு மாணவர் ஒரு பத்திரிக்கையை எழுதி சுற்றுக்கு விடுகிறார், அது கையெழுத்து பிரதியாக மற்ற மாணவர்களுக்கு சுற்றுக்கு விடப்படுகிறது.

பஹிஸ்கிரித் ஹித்காரணி சபா ஏப்.1, 1926-ல் பதிவு செய்யப்பட்டது.

சபா சம்பந்தமாக பதிவு செய்யப்பட்டுள்ள P.P-கள் தெரிவிக்கப்பட்டுள்ளன.

D.C.P, S.B
(கையொப்பமிடப்பட்டது)[1]

ஆகஸ்ட். 9, 1926

''நானும் உங்களுக்கு எனது வாழ்த்துக்களை தெரிவிக்கிறேன்''

2) இந்தச் சபாவானது பெருமதிப்பிற்குரிய கவர்னரின் தனிச் செயலாளருக்கு மார்ச்.9, 1926-ல் எண்.H.3447 கொண்ட எனது கடிதத்தின் விஷயமாகும். சபா, லார்டு இர்வினின் வருகையின் போது அவரிடம் பேசுவதற்கு அனுமதி கேட்டு விண்ணப்பம் செய்த போது அந்தக் கடிதம் எழுதப்பட்டது.

1. ஆதாரம், தொகுப்பு 1, பக்கம் 10-11

3) சபாவின் "அமைப்பு விதிகளின் பிரதி ஒன்று இணைக்கப் பட்டுள்ளது. சபாவின் உறுப்பினர் எண்ணிக்கை சுமார் 200 ஆகும், அவர்களில் 10 பேர் களைத்தவிர E பிரிவைச் சேர்ந்தவர்கள். நூலகம் என்றழைக்கப்படும் ஒரு அறை, கிளேர்கே சாலையில் உள்ள பம்பாய் மேம்பாட்டு அறக்கட்டளையின் வீட்டில் உள்ளது. அதில் உள்ள புத்தகங்களில் பெரும்பாலானவை சமூக சேவை லீகால் வழங்கப்பட்டவையாகும். ஒரு சில பத்திரிக்கைகளும் சப்ளை செய்யப்படுகின்றன, நூலகத்திற்கு தினசரி வருவோர். சராசரி 10 முதல் 12 வரையாகும். இந்த நூலகம் எல்லோருக்கும் பொதுவானதுதான், ஆனால் பெரும்பாலும் விசேஷமாக ஒடுக்கப் பட்ட வர்க்கங்களைச் சேர்ந்தவர்களே இந்நூலகத்தை பயன் படுத்துகிறார்கள். சபாவானது அதற்கு பெருமைக்குரியதாக நடை முறையில் வேறு எந்த நடவடிக்கையையும் கொண்டிருக்கவில்லை.

4) இவ்வாறு, ஆட்சேபணை எதுவும் இல்லையென்றால், அது (சபா) ஒரு பிரதிநிதித்துவ அமைப்பாக உரிமை கோர முடியாது. அதே சமயத்தில், ஒடுக்கப்பட்ட வர்க்கங்களை பிரதிநிதித் துவப்படுத்த சிறப்பான தகுதி படைத்த சில விஷயங்கள் பற்றி வேறு எந்த அமைப்பும் இருக்கவில்லை; ஒடுக்கப்பட்ட வர்க்கங் களின் கண்ணோட்டம் தேவைப்பட்டால் சபாவை சந்திப்பதில் எந்த ஆட்சேபணையும் இருக்காது.

5) அலுவலக நிர்வாகிகளில், நிர்வாகக் குழுவில் இருப் போர் அனைவரும் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் உறுப்பினர்களே ஆவர்.

(கையொப்பம்)
போலீஸ் கமிஷனர்"[1]

● ● ●

---

1. ஆகஸ்ட் 11, 1926 தேதியிட்ட யு.ஓ.ஆர்.எண். ஹெச். 3447

## இணைப்பு - XII

# பம்பாய், நியூ பம்பாய், அவுரங்கபாத், மஹத், பந்தார்பூர், தாபோலி, நாந்தெத், புனே, பெங்களூர் ஆகிய நகரங்களில் மக்கள் கல்வி சொசைட்டியின் நிறுவனங்கள்

### கல்லூரிகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | சித்தார்த்த கலை, விஞ்ஞானம் மற்றும் வர்த்தகக் கல்லூரி, பம்பாய் | : | 1946 |
| 2. | மிலின்ட் கலைக் கல்லூரி, அவுரங்கபாத் | : | 1950 |
| 3. | மிலின்ட் விஞ்ஞானக் கல்லூரி, அவுரங்கபாத் | : | 1950 |
| 4. | சித்தார்த்த கலை, விஞ்ஞான மற்றும் வர்த்தகக் கல்லூரி, பம்பாய் | : | 1953 |
| 5. | சித்தார்த்த சட்டக் கல்லூரி, பம்பாய் | : | 1956 |
| 6. | டாக்டர் பாபா சாஹேப் அம்பேத்கார் கலை, விஞ்ஞான மற்றும் வர்த்தக கல்லூரி மஹத், ரியாகாத் மாவட்டம் | : | 1963 |
| 7. | டாக்டர் பாபா சாஹேப் அம்பேத்கர் கலை மற்றும் வர்த்தகக் கல்லூரி, அவுரங்கபாத் | : | 1963 |
| 8. | டாக்டர் அம்பேத்கர் சட்டக் கல்லூரி, அவுரங்கபாத் | : | 1968 |
| 9. | டாக்டர் அம்பேத்கர் வர்த்தக மற்றும் பொருளாதாரக் கல்லூரி, வதாலா, பம்பாய் | : | 1971 |
| 10. | டாக்டர் அம்பேத்கர் சட்டக் கல்லூரி, வதாலா, பம்பாய் | : | 1978 |
| 11. | P E S உடற்பயிற்சி கல்வி, அவுரங்காபாத் | : | 1984 |
| 12. | டாக்டர் அம்பேத்கர் கலை மற்றும் வர்த்தகக் கல்லூரி, திச்வாடா, புனே | : | 1985 |
| 13. | PES ஆங்கில வழிப் பள்ளி, யெர்வாடா, புனே | : | 1985 |
| 14. | PES பொறியியல் கல்லூரி, அவுரங்காபாத் | : | 19 |

### டிப்ளமா மையம்

| | | | |
|---|---|---|---|
| 15. | சித்தார்த்தா தொழில் மற்றும் நிர்வாக பயிற்சி மையம், மும்பை | : | 1967 |

### உயர்நிலைப் பள்ளிகள்

| | | | |
|---|---|---|---|
| 16. | சித்தார்த்தா இரவு உயர்நிலைப் பள்ளி, மும்பை | : | 1947 |
| 17. | மிலின்ட் பல்நோக்கு உயர்நிலைப் பள்ளி, அவுரங்காபாத் | : | 1955 |
| 18. | மாதோஷ்ரி ராமாபாய் அம்பேத்கார் உயர்நிலைப் பள்ளி, அவுரங்கபாத் | : | 1965 |
| 19. | PES மேல்நிலைப் பள்ளி மற்றும் ஜுனியர் கல்லூரி, நாந்தெத் | : | 1981 |
| 20. | நாக்ஸென் உயர்நிலைப் பள்ளி மற்றும் ஜுனியர் கல்லூரி, நாந்தெத் | : | 1981 |
| 21. | நாக்ஸென் வித்யாலாயா பிரத்மிக்ஷாலா நாந்தெத் | : | 1984 |
| 22. | மக்கள் கல்வி சொசைட்டியின் ஆங்கில வழி மழலையர் பள்ளி பெங்களூர் | : | 1984 |
| 23. | PES தொடக்க மராத்திப் பள்ளி, நவி மும்பை | : | 19 |
| 24. | மிலின்ட் பல்நோக்கு சிறார் மற்றும் தொடக்கப்பள்ளி, அவுரங்கபாத் | : | 19 |
| 25. | கவுதம் வித்யாலாயா, பஞ்தார்பூர், சோலாப்பூர் மாவட்டம் | : | 19 |

### மாணவர் விடுதிகள்

| | | | |
|---|---|---|---|
| 26. | சாந்த் கேட்ஜே மகராஜ் சொகர்மேளா வித்யார்தி வசதி கிரிஹா, அவுரங்காபாத் | : | 1949 |
| 27. | சித்தார்த்தா விஹார் விடுதி , வாதாலா, மும்பை | : | 1964 |
| 28. | சுபேதார் சவேத்கார் விதியார்தி ஆசிரமம், மஹாத், ரெய்கேத் மாவட்டம் | : | 1978. |

# இணைப்பு - XIII

## ஹெச்.ஹெச். சாயாஜிராவ் கெய்க்வாத்துக்கு ஒரு கடிதம்

புதுடெல்லி

மே. 21, 1946

மேன்மைமிகு மன்னர் அவர்களே,

நான், பொதுவாக ஒரு தனிப்பட்ட விவகாரத்தில் மேன்மை மிகு மன்னராகிய உங்களை தொல்லைப் படுத்துவதற்கு துணிந் திருக்கக் கூடாது, ஆனால் பிரச்னையின் சூழ்நிலைமைகள் அசாதாரணமான சிக்கல்களாக உள்ளன. டாக்டர் அம்பேத்கர், ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் அனுகூலத்திற்காக பம்பாயில் ஒரு கல்லூரியை நிறுவுவதற்கான திட்டம் ஒன்றை வகுத்துள்ளார்; அத் திட்டத்திற்கான நிதி உதவிக்காக வேண்டுகோள் கடிதம் ஒன்றை என்னிடம் ஒப்படைத்தார். மேன்மை மிகு மன்னராகிய உங்களுக்குத் தெரியும், நீங்கள் தெரிந்ததைப் போலவே ஒடுக்கப்பட்ட வர்க்கத் தினர் அவர்களுடைய மிக மோசமான நிலைமையில் உயர்ஜாதி இந்துக்களிடம் தவிர வேறு எங்கும் உதவிக்காக செல்லவும் முடிவ தில்லை; அவர்களுடைய தற்போதைய நிலைமைக்கான பொறுப்பு அனைத்தையும் நாம் நிராகரிக்கவும் முடியாது. இந்தப் பிரச்னை நியாயமான ஒன்றாகும்; ஏனென்றால் கல்வி ஒன்று மட்டுமே ஒடுக்கப்பட்ட வர்க்கங்களை தார்மீக ரீதியாகவும் பொருளாதாரா ரீதியாகவும் மேலே உயர்த்துவதற்கான வலுவான வழியாகும். டாக்டர் அம்பேத்காரைப் பொறுத்த வரையில் அவர், மேன்மை தங்கிய மன்னராகிய உங்களுடைய தாத்தாவின் தாராள மனப்பான் மைக்கு தாம் பெரிதும் கடமைப்பட்டு இருப்பதாக என்றெல்லாம் அவர் நன்றியுடன் நினைவு கூர்கிறார்; இந்தக் காரணத்திற்காக அவர், தாம் நன்றிக் கடன் உறவால் மேன்மை தாங்கிய மன்னர் குடும்பத்துக்கு இப்போதும் கடமைப்பட்டுள்ளதாக கருதுகிறார். உதவிக்கான வேண்டுகோளுடன் மேன்மைமிகு மன்னராகிய உங்களை நேரடியாகச் சந்தித்துப் பேச தன்னால் முடியும் என்று அவர் கருதவில்லை, ஆனால், மேன்மைமிகு மன்னராகிய உங்களை தனிப்பட்ட முறையில் அறிந்திருக்கும் கவுரவத்தை நான்

கொண்டிருப்பதால், இதனை உங்களுடைய கவனத்திற்கு கொண்டு வருவதை மேற்கொண்டிருக்கிறேன். கல்லூரிக்கு அரசாங்கம் மானியம் அளித்துக் கொண்டிருக்கிறது; பல சிற்றசர்களும் நன்கொடைகள் அளிக்க உறுதி அளித்துள்ளனர். ஆனால் கல்லூரி நிறுவும் திட்டத்தினை முறையான அடித்தளத்தில் இருத்துவதற்கு நிதிகள் இன்னும் அதிகமாக தேவைப்படுகின்றன. இந்தத் திட்டத்திற்கு மேன்மை மிகு மன்னராகிய நீங்கள், தக்க நன்கொடை மூலம் மிக தாராளமாக உதவி செய்தால் டாக்டர் அம்பேத்கரும் அவருடைய துரதிருஷ்டவசமான சமுதாயமும் உங்களுக்கு எப்போதும் நன்றிக் கடன்பட்டவர்களாக இருப்பார்கள்.

தங்கள் கீழ்ப்படிந்துள்ள
கே.ஏ. கெலஸ்கர்.



